உ

ஓம் : நாராயணயநமஹா.

# அத்யாத்ம ராமாயணம்.



## பாலகாண்டம்.



### முதலாவது சருக்கம்.



# INTRODUCTION.

The Hindus as a class are familiar with Ramayanam in several forms and languages. Valmiki's Ramayanam, however, is the only work in Sanskrit which is read fervently by the people at large. All along there have been other Ramayanams in Sanskrit, though not so well known.

More than a thousand years ago, the great poet Kamban placed the beauties of Valmiki's Sanskrit Original before the Tamil reading public. Kamban evidently took Valmiki's epic as the model as regards the substance and the size of his poem; and even excelled Valmiki in some respects. Says he,

வாங்கரும் பாதநான்கும் வகுத்தவான் மீகியென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச்செய்தான்
ஆங்கவன் புகழ்ந்தநாட்டை யன்பெனு நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்றா னென்னயான் மொழியலுற்றேன்.

In recent years attempts were made by Messrs. Pandit Natesa Sastri B.A., (now dead), and C. R. Srinivasa Iyengar B.A., of S. P. G. College Trichinopoly, to popularise Ramayanam with the better classes of the people not versed in Sanskrit but conversant only with Tamil. Along with these publications there are any number of Ramayanams in prose, *Viruthams*, *Venbas*, *Kummies*, *Natakams* and *Kathas*.

The Ramayanam to which this notice is prefixed is the Advatma Ramayanam, the Sanskrit Original of which is ...ly believed to have been written by sage Viswamitra. ...cholars hold that it was written by sage Vyasa. ... credit one Ramananda with its authorship. The ... held by some that it is contained in the Brahmanda ...m has not received sufficient corroboration

It is in the form of a private conversation between Uma and Maheswara, and the conversation has been faithfully recorded and versified for the benefit of humanity. The Adyatma Ramayanam is the story of Sree Rama, the supreme soul, and impresses on the minds of its readers the idea that Sree Rama was Paramathma himself who came into the world in human shape to protect the good, to destory the wicked and to establish *dharma*, as declared by Lord Sree Krishna in Chapter iv. 8, of the Bhagavad Gita. The general thread of the story as narrated by the two eminent sages agrees in the main but they differ much in the description which each gives of the hero. While Valmiki describes Sree Rama as an ideal man with superhuman prowess and virtues of the highest order, sage Viswamitra pictures his hero both as an ideal man, as depicted by sage Valmiki, and as the supreme soul. As for the credentials of these sages to write on such a grand subject, it may be stated that Valmiki is supposed to have received his initiation from his preceptor and Brahmarishi Sree Narada whose Sankshaparamayanam formed the frame work on which the great Epic was written. Viswamitra had more to do with Rama in his life than Valmiki. The old Gadhaiya, subsequently called Viswamitra, was a Kshatriya by birth, and had by his selfless and austere penance attained the rank of Brahmarishi. His royal birth gave him the rare privilege of educating Sree Rama in archery and other martial equipments; and his subsequent transformation as a Brahmarishi brought him face to face with the reality that Sree Rama was no ordinary man, but the supreme Lord of the Universe, and Seetha the *Mulaprakrithi.* Valmiki represents Ravana as a learned Daithiya of felonish propensities, while Viswamitra depicts him as the tyrant King of Rakshasas, who had intuition enough to perceive the object of Rama's incarnation, and who only pretended to be Rama's enemy with the ultimate object of being slain by him in view to his completing the second of the three lives he had to spend in this world as

the sworn enemy of God Vishnu. This is also the view taken by Theertheiya - the famous advaitic commentator of Valmiki Ramayanam.

In the first chapter of the book, Rama and Sita are represented as sitting crowned in the midst of sages, ministers and others when Rama signs to Sita to instruct Hanuman in the eternal truths. Sita tells Hanuman "Know that Rama is the Supreme Brahman. He is the abode of all existence, knowledge and bliss. I am the Mulaprakrithi, the creator, the preserver and the destroyer of all things. All the incidents in our lives, from the destruction of Thataka to the final overthrow of Ravana, have been only my sport. Rama is not affected by them, because he cannot be affected being Himself the Supreme Lord." Then Rama himself repeats the same truth by declaring to Hanuman and concludes that He is the end of all the Vedas and that devotion to Him means salvation. Valmiki Ramayanam is believed to be a composition, a study of which improves a man's worldly happiness of every kind, while the study of Adyatma Ramayanam is said to give the reader relief from the cycle of births and deaths, in addition to the three temporal gratifications of *Dharma*, *Artha* and *Kama*. Although *moksha* is the goal of every one on earth, people in general long to enjoy the happiness pertaining to the material world, and this accounts for the fact that Valmiki's work is more freely read than any other Ramayanam. The sixty first Chapter of the Utthara Kanda of the Brahmananda Purana is devoted to a detailed description of the merits which men acquire by learning the Adyatma Ramayana. Briefly, no sin is so great that it cannot be washed away by it, and no happiness so high as to be beyond the reach of the man who reads the book.

To render such a book as the Adyatma Ramayanam into Tamil and bring it within easy reach of the Tamilians is a commendable piece of service. Messrs. S. G. Aiyer & Co., of Madras have undertaken it and have successfully

completed their task. They have brought out the translation in two Volumes which I have much pleasure in commending to the notice of the public. I feel confident that the book will be welcomed in every home and that the publishers will receive that encouragement and reward which all such good endeavours rightly deserve.

Woriyur,
Trichinopoly.
16th Feb. 14.

A. KRISTNASAMI IYENGAR.*

17105



* Dewan Bahadur A. Kristnasami Iyenger, B. A. I. S O.
Retired Dy. Com. Salt, Abkari & Customs Dept.

# முகவுரை.

பகவத் பக்தியில் சிறந்தவர்களும் ஆஸ்திகோத்தமர்களு மான புண்ணியவான்களே!

ஸ்ரீ அகண்டாகார சச்சிதானந்த நித்திய ஸாந்த ஸர்வபரிபூரண வியாபக வியாப்ய அரூப மூலாதார ஸர்வ பஞ்சகிருத்ய நடன திவ்ய தேஜோமய இன்பாதீதராய் விளங்கும் பரப்பிரம்ம ஸ்வரூபமாகிய ஈஸ்வரன் இப்பூமண்டலத்தில் வாழும் ஆன்மகோடிகளாகிய நாம் கடைத்தேறும் வண்ணம், பதினான்கு லோகங்களையும் உண்டாக்கி, அதற்கேற்ப போகங்களையும் சிருஷ்டித்து அவரவர்களுக்குத் தனு கரணாதிகளைக் கொடுத்து, புவனங்களிலுற்ற போகங்களை யனுபவித்து இறுதியில் தமது திருவடி நிழலாகிய மோக்ஷத்தை யடைந்து வாழும்படி கிருபை கூர்ந்தனர். அத்தனுகரணாதிகளைப் பெற்ற நாம் பெறுதற்கரிய இம்மானிட தேகத்தில் அடையக்கூடியது சதுர்வித புருஷார்த்தங்கள் (தர்மார்த்த காமமோக்ஷம்-அறம், பொருள், இன்பம், வீடு) என்னும் நான்கேயாம். இந்நான்கினை அடையும் மார்க்கங்களையே இந்த அத்யாத்மராமாயணத்தில் விளக்கப்பட் டிருக்கின்றன.

ஸ்ரீராமன் மாயா மானிடனாக வவதரித்து இகலோக பரலோக சாதகமாயுள்ள சத்கர்மங்களை யனுஷ்டித்து மோக்ஷத்தை யடைவதற்குசாதகமாகிய ஞானமார்க்கத்தையும் யப்பியசிக்கும் விதத்தை இக்கலியுக ஜனங்களுக்குத் தாமே செய்து எடுத்துக் காட்டியிருக்கிறார் என்பதே இந்த அத்யாத்ம ராமாயணத்தின் உண்மைப் பொருள்.

இவ்வித மகிமைவாய்ந்த இந்த அத்யாத்ம ராமாயணம் என்னும் கிரந்தம் விசுவாமித்திர மஹரிஷியால் ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட் டுள்ளது. அதனை ஸம்ஸ்கிருதத்திற்கு சிறிதும் மாறுபடாமல் தமிழில் மொழிபெயர்த்து அச்சிடப்பட்டிருக்கிறது. வேதாந்தத்தை விளக்கும் கடின பதங்களுக்கு எலலாரும் நன்கறி வண்ணம் ஆங்காங்கே குறிப்புரை (Foot notes) களும் சேர்க்கப்பட் டிருக்கின்றன.

தவிரவும், பிரம்மாண்ட புராணத்தில் உத்தரகாண்டத்தில் சிவாசிவரகசியத்தில் ப்ரம்ம ரகஸ்யானுவாதம் அறுபத்தோராவது அத்யாயத்தில், கலியுகத்தில் கொடும்பாவம் செய்தவர்களுக்குப் பரகதிகிடைக்கும் மார்க்கம் எந்த நூலில் கூறப்பட்டிருக்கிறதென்று வினவிய நாரத மஹாமுனிவருக்கு பிரம்மதேவரால் உபதேசிக்கப் பட்ட, ‘‘அத்யாத்ம ராமாயண’’ப் பிரபாவத்தையும் இத்துடன் மேற்கோளாக ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில்மொழிபெயர்த்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதனால் இந்த அத்யாத்ம ராமாயணத் தின் பெருமை நமது ஆஸ்திகோத்தமர்களுக்கு நன்கு விளங்கும்.

இவ்வரிய கிரந்தத்தை வெளியிட முன்வந்து பெரும் முயற்சியை யெடுத்துக்கொண்ட **மேஸர்ஸ் எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனியாருக்கு** இதைப் போன்ற உயர்ந்த கிரந்தங்களை மென்மேலும் அச்சிட்டு வெளியிடுவதற்கு ஸர்வ வல்லமையுள்ள கடவுள் கிருபை புரிவாராக.

திருச்சி
16—2—14.

இப்படி,
**நடேச சாஸ்திரி.**

## பிரம்மாண்ட புராணத்தில்
## பிரம்மதேவர் கூறிய

# அத்யாத்ம ராமாயணப் பிரபாவம்.



1-3. முன்பு ஓர்காலத்தில் நாரதமுனிவர் பூலோக சஞ்சாரஞ் செய்துகொண்டு பிரம்மலோகஞ்சென்றார். அங்கு இளஞாயிறு போன்று ஒப்பற்ற ஒளியை வீசாநின்ற, ஓர் திவ்ய சபையில் ஆரணமேயுருவெடுத்து வந்திருப்பது போன்று வேதவித்துக்கள் சூழவும், மார்க்கண்டேயர் முதலிய முனீஸ்வரர்கள் மாறி மாறி ஸ்தோத்தரிக்கவும், எல்லா உலகங்களிலுமுள்ள ஸத்விஷயங்களையுந் திருவுளத்தடக்கி, ஞான ஸ்வரூபியாயும், சரஸ்வதி சமேதராயும், ஜகத்துக்கு நாதராயும், அடியார்களின் மனோபீஷ்டத்தை யளிப்பவராயும் வீற்றிருந்த சதுர்முகக்கடவுளைக்கண்டு அம்முனிவர் பக்தியுடன் வணங்கிப் போற்றினார்.

4. பிரம்மதேவர் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பக்தரான அம்முனிவராருக்குக் காட்சி கொடுத்து, அவரை நோக்கி, "ஓ! மஹரிஷியே! நீர் வேண்டுவது யாது? அதனைப்புகலக் கடவீர்" என்றார்.

5-8. அவ்வுரையை மேற்கொண்ட முனிவரரும் பிரம்மதேவரை நோக்கி "ஓ ஸ்வாமின்! இன்பதுன்பங்களான யாவற்றும் தாங்கள் முன்னம் கூறக்கேட்டிருக்கிறேன். ஆயினும் ஓ தேவதேவனே! தற்காலம் யான் கேட்கவேண்டுவ தொன்றுளது. எளியேன்மீது தாங்கள் திருவுளங்கூர்ந்து, கோபமாறுமின் அதைக் கூறியருளல் வேண்டும், அதி கொடுமையான கலியுகம் தோன்றும்போது ஜனங்கள் புண்ணியத்தைக் கைவிட்டு, துராசாரத்தை மேற்கொண்டு, சத்தியத்தையிழந்து பிறர் அபவாத துரந்தராய், அன்னியர் பொருளை யிச்சிப்பவராய், பரஸ்திரீகமனராய், இதரர்களை ஹிம்சிப்பவராய்,—

9-13. தேகமே 'தான்' என்று பாவிப்பவராய், நிமூடராய், அனீஸ்வர வாதிகளாய், டம்பபிராயராய், தாய் தந்தைகளுக்குச் சத்துருக்களாய், ஸ்திரீகளையே குலதெய்வமாகக் கொண்டாடுபவராய், மன்மதனுக் கேவல்புரிவோரா யிருப்பார்களன்றோ? பிராம்மணர்களும், ஆசையெனும் பேய் வசப்பட்டவர்களாயும், வேதங்களை விற்றுண்பவர்களாயும், பொருள் தேடுவதினிமித்தம் தாங்கள் கற்றிருக்கும் கல்வியினால் கர்வமுடையவர்களாயும், மற்றவர்

களுக்குச் சதாவஞ்சனை புரிவோர்களாயும், இவ்வாறே க்ஷத்திரியரும், வைசியரும், தங்கள் தங்கள் குலாசாரதருமங்களை விடுத்து நிற்பவர்களாயும், சூத்திரரில், புருஷர்கள் பிராமணராசாரங்களையுடையவராயும், மேற்படி ஸ்திரீகள் அனேகமாய்ப் புருஷர்களையவமதிப்பதில் அச்சமற்றவர்களாயும்,—மாமன், மாமியிவர்களுக்குத் துரோகஞ்செய்பவர்களாயு மாவார்களன்றோ! விபரீத புத்தியுடைய இவர்களுக்குப் பரலோகப் பிராப்தி யுண்டாவதெப்படி ?

14. இவைகளைப்பற்றிய சிந்தனை யென்மனத்தில் எப்போதும் குடிகொண்டிருக்கிறது. இவர்கள் முக்தியடைவதற்குச் சுலபமான மார்க்கம் யாது ?

15-16. அம்மார்க்கத்தை அடியேனுக்கு அருளிச்செய்யக் கோருகிறேன். தாங்கள் யாவற்றையும் அறிந்தவர்களன்றோ ?" என்று கேட்டார். நாரதருடைய வார்த்தைகளைக் கேட்ட பிரம்மதேவர் அவரை நோக்கி "ஓ நாரதரே! நன்று வினவினீர். நாம் கூறுவதை ஆர்வத்துடன் கேட்கக்கடவீர்.

17-19. பூர்வம் பார்வதிதேவி, பக்தவத்ஸலரான பரமசிவத்தை வணங்கி, ஸ்ரீராமதத்வமுரைக்கும்படி வேண்ட, அப்பரமர், தமது தேவிக்கு ரகசியமாக 'அத்யாத்ம ராமாயணமென்னும்' உத்கிருஷ்டமான இதிகாச கிரந்தமொன்றை யுபதேசித்தருளினார். அதை உமாதேவி, அஹோராத்ரம் தியானித்து ஆத்மானந்தத்தி லழுந்தி யிருக்கின்றார்.—

20. அந்த உத்தமமான அத்யாத்ம ராமாயணமானது அதிர்ஷ்ட வசத்தால் எப்போது பிரசுரிக்கப்படுமோ அப்போதுதான் பிரஜைகள் அதைப்படித்துப் பரந்த பயனையு மோக்ஷத்தையு மடைவார்கள்.

21. எதுவரையில் உலகத்தில அத்யாத்ம ராமாயணம் பிரசுரிக்கப் படவில்லையோ, அதுவரையில் பிரமஹத்தியாதி பாதகங்கள் பரவி வரும். கலிபுருஷனும உற்சாகத்துடன் கவலையற்றுச் சஞ்சரிப்பான். அதி க்ரூரரான எமதூதர்களும பயமின்றி யுலாவுவார்கள், சகல சாஸ்திரங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டே நிற்கும், மஹான்களுக்கும் ஸ்ரீராமபிரானுடைய ஸ்வரூபத்தை யறிவது அருமையாயிருக்கும்.

22-25. அத்யாத்ம ராமாயணத்தைப் பாராயணம் செய்வதினாலும், சிரவணம் செய்வதினாலுமுண்டாகும் பயனைப் பூரணமாய்

வர்ணிக்க வொண்ணாதது. ஓ பாபரகிதரே! ஆயினும் அதன் பெருமையைச் சிறிது புகல்வோம். அதைப் பரமசிவன் பூர்வம் எமக்குரைத்தருளினர். மனதை யொருமைப்படுத்திக் கேட்கக்கடவீர்.

26-27. அத்யாத்ம ராமாயணத்தில் ஒரு சுலோகத்தையாவது, அல்லது பாதி சுலோகத்தையாவது, ஒருவன் பக்தியுடன் வாசிப்பானாகில், அவன் அந்த க்ஷணத்திற்றானே பாவங்களிலிருந்து விடுவிக்கப்படுவான். ஒருவன், நியமத்துடன் பிரதிதினமும் மனதைக்கூடிய வரையிற் படிப்பானாகில் அவன் ஜீவன் முக்தனேயாவான்.

28. ஒருவன், கவலையற்றுப் பக்தியுடன் அத்யாத்ம ராமாயணத்தை பூஜிப்பானாகில், அவன் அஸ்வமேதாதி யாகங்களை யனுதினமும் பண்ணிய பலனையடைவான்.

29. சக்தியற்றவனாயினும் ஒருவன், அத்யாத்ம ராமாயணத்தை, தற்செயலாய், பரிகாசமாயாவது சிரவணஞ் செய்வானாகில், அவனும் பந்தத்தினின்று விடுபடுவான்.

30. எவனாகிலும், அத்யாத்ம ராமாயண கிரந்தத்தை, தூரத்திலே கண்டு நமஸ்கரித்தால், அவன் சமஸ்த தேவர்களையும் பூஜித்த பலனை யடைவதில் ஐயமில்லை.

31. எவன் அத்யாத்ம ராமாயண கிரந்தத்தை சம்பூர்ணமாக வெழுதி ஓர் ராமபக்தனுக்குக் கொடுக்கிறானோ அவனுடைய புண்ணியத்தை [illegible].

32. எல்லா வேத சாஸ்திரங்களையும், கற்றுணர்ந்தா லெந்தப் பலனை யடைவானோ, அந்தப் பலனை யவனடைவான்.

33. ஏகாதசி தினத்தில், உபவாசமிருந்து அத்யாத்ம ராமாயணத்தை வாசித்தாலும், அன்றிக்கேட்டாலும், இராமபிரானை ஸ்மரித்தாலும், அவன் காயத்திரி மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்துக்கும் புரச்சரியை பண்ணின பயனையடைவான்.

34-35. ஸ்ரீராம நவமிதினத்தில், உபவாசத்தோடு இரவில் ஆகாரத்தையும் நீக்கி, அநந்நிய மனத்துடன் அத்யாத்ம ராமாயணத்தை வாசிப்பவனும், அல்லது சிரத்தையுடன் கேட்பவனும், குருக்ஷேத்ர முதலிய க்ஷேத்ரங்களில், சூரிய கிரஹணகாலத்தில் சகல கலைகளையுங்கற்று, வியாச பகவானுக்குச் சமமாகவிளங்கும் விப்பிரர்களுக்கு, தன் எடைக்குச்சரியான பொன்னைத் தானம் செய்கிறவன் பெறக்கூடிய பலனைப்பெறுவான்.

36–38. எவனொருவன், இரவும் பகலும் அத்யாத்ம ராமாயணத்தைச் சந்தோஷ சித்தனாய், கானஞ்செய்கிறானோ அவனுடைய வரவுக்கு இந்திரன் முதலிய தேவர்கள் எதிர்பார்த்திருப்பார்கள்.

39. பிரதிதினமும், அத்யாத்ம ராமாயணத்தைப் படிப்பதே விருதமாகப் பெற்றவன், தன்னால் செய்யப்படும் சத்கருமங்களுக்கெல்லாம் இரட்டைப்பலனை யடைவான்.

40. அதிலுள்ள ஸ்ரீராம ஹிருதயத்தை ஒருவன் பக்தியுடன் படிப்பானாகில், அவன் பிரமஹத்தி பாதகஞ் செய்தவனாயினும், மூன்று நாட்களுக்குள் புனிதனாவான்.

41. அனுமாருடைய அர்ச்சனையுடைய ராம விக்கிரகத்தின் முன்னே, பிரதிதினமும், ஸ்ரீராம ஹிருதயத்தை (அத்யாத்ம ராமாயணத்தை) பாராயணம் பண்ணுவானாகில் அவன் எல்லாராலும் பூஜிக்கப்படுவான்.

42. யாவனொருவன், ஸ்ரீராம ஹிருதயத்தைப் படித்துக்கொண்டு, துளசிச்செடியையும், அசுவத்த விருக்ஷத்தையும், பிரதக்ஷணம் வருகிறானோ அவனுக்குப் பிரமஹத்யாதி தோஷங்கள் நிவர்த்தியாகும்.

43. ஸ்ரீராமகீதையின் பிரபாவத்தைச் சாம்பமூர்த்தியே பூரணமாக அறிவார். அதிற்பாதி பார்வதிதேவி யறிவாள். அதிற்பாதி நாமறிவோம்.

44. அதைப் பலமாக யுமக்குப் பூரணமாகச் சொல்ல எம்மாலாகாது. சுருக்கமாகச் சொல்வோம். அதையறிந்தால் நொடிப்பொழுதில் சித்த சுத்தியுண்டாகும்.

45. ஸ்ரீராம கீதாமிருத சாரமான து க்ஷண நேரத்தில் எல்லாப் பாபங்களையும் நாசமாக்கும். தங்கள் பாபங்களைப் போக்கிக்கொள்ள விரும்புவோர்க்கு அதைவிட வேறுமார்க்கம் எமக்குத் தோற்றவில்லை.

46. உபநிஷத்தென்னும் க்ஷீராப்தியைக்கடைந்து ஸ்ரீ ராமர் இலக்ஷ்மணருக்குப் பிரீதியுடனீய்ந்ததே இராமகீதையென்னும் அமுதமாம். அதை யுட்கொண்டவன் உடனே யமரனாவான்.

47. பூர்வம் ஜமதக்னியின் புதல்வரான பரசுராமர், கார்த்தவீரியார்ச்சுனனை ஸம்ஹாரம் செய்யவேண்டி, பரமேஸ்வரரிடம் வில்வித்தையைக் கற்றுக்கொண்டு வந்தபோது, ஸ்ரீ உமாதேவி

ராமகீதையைப் பாராயணம் பண்ணக் கேட்டு, அதைத்தானும் படி
த்து நாராயணன் அமிசத்தையடைந்தனர்.

48–49. ஒருவன் பிரமஹத்தியாதி மகா பாதகங்களிலிருந்து விடுபட விரும்புவானாகில், அவன் ஒருமாதம்வரை இராமகீதையைப்பாராயணம்செய்தால் அந்தப்பாவங்களிலிருந்து விடுபடுவான்.

50. துர்ச்சனனுடைய பொருளாலும், போஜனத்தாலும், அவர்களுடைய சேர்க்கையாலும் ஏற்படுகின்ற பாவங்கள் எல்லாம் இராமகீதா கீர்த்தனத்தால் நாசமாய்விடும்.

51. சாலக்கிராம மூர்த்திகளின் முன்னும், துளசி, அரச முதலிய விருக்ஷங்களுக்கு முன்னும், யதீஸ்வரர் முதலியோர் முன்னும் இராமகீதையை வாசிப்பவர்கள், அதி மேன்மையான பலத்தை யடைவார்கள். பிதுர் சிரார்த்த தினத்தன்று, பிராமணர்கள் போஜன முடிந்தபிறகு பக்தியுடன் ஸ்ரீ ராமகீதையைப் படிப்பார்களானால் அவர்களுடைய பிதிர்க்கள் வைகுண்டத்தை யடைவார்கள்.

52. ஏகாதசி தினத்தன்று, ஆகாரமின்றியிருந்து மறுநாள் துவாதசியன்று, பக்தியுடன் அகத்தி பரத்துவாரத்திலிருந்து இராமகீதையை வாசிப்பவன், சாக்ஷாத் ஸ்ரீராகவன் அமிசத்தை யடைவதுடன், சகல தேவர்களாலும் பூஜிக்கப்படுவான்.

53–55. தீர்த்த யாத்திரையின்றி, தியானமின்றி, தான முதலியன வின்றி ஸ்ரீராம கீதை யொன்றையே அத்தியயனஞ் செய்பவன், அனந்த பலன்களை யடைவான்.

56. ஓ நாரதரே! விசேஷமாகக் கூறவேண்டிய தென்ன? வேதங்களும், ஸ்மிருதிகளும், புராணங்களும், அனந்தங்களான இதிகாசங்களும், அத்யாத்ம ராமாயணத்தின் முன் அற்பமாகும்.

57–58. இவ்வாறு ஸ்ரீ ராமசரித்திரத்தின் மஹிமையை, நாரதமுனிவரை முன்னிட்டு பிரமதேவரால் வெளியிடப்பட்டது. இதை யாவராயினும், சிரத்தையுடன் வாசித்தாலும், வாசிப்பதைக் கேட்டாலும், அவர்கள் தேவர்களால் பூஜிக்கப்பெற்று, விஷ்ணு பதத்தையே யடைவார்கள்.

**இவ்விதம் பிரம்மாண்ட புராணம், உத்தரகாண்டத்தில் கூறும் சிவா சில ரகசியத்தில் பிரம்மரகசியானுவாதத்தில், அறுபத்தொன்றாவது அத்தியாயம் கூறுகின்றது.**

# விக்ஞாபனம்.

ஸ்ரீ அகண்டாகார சச்சிதானந்த ஸ்வரூபியாகிய பிரம்ம தேவர் தவச்சிரேஷ்டரான நாரத முனிவருக்கு இப் பூமண்டலத்தில் அனேககோடிகள் கலியுகத்தில் தங்கள் பாபத்தைப் போக்கி நற்கதியை யடைவதற்குத் தெப்பமாயுள்ளது "அத்யாத்மராமாயணம்" ஒன்றே என்றும், அதை அச்சிட்டு வெளிப்படுத்தின காலமே ஜனங்களுக்கு க்ஷேமகால மென்றும் பிரம்மாண்ட புராணத்தில் உத்தரகாண்டம் 61-வது அத்யாயத்தில் கூறியிருக்கிறார். இதனை மேற்கொண்டு இந்த மகிமை பொருந்திய அத்யாத்ம ராமாயணத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் ஜனங்கள் நன்கறியும் வண்ணம் மொழி பெயர்த்து அச்சிடவேண்டு மென்று கொஞ்சகாலமாக அதிக முயற்சி யெடுத்து இப்பொழுது மேற்சொல்லிய கிரந்தத்தை வெளியிட்டிருக்கிறோம்.

இந்த கிரந்தத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்துக் கொடுத்த சிறுகாம்பூர். இராமாயணம் பிரம்மஸ்ரீ நடேசசாஸ்திரியார் அவர்களுக்கும், இதிலுள்ள வேதாந்த கருத்துக்களை விரித்துரைத்து, ஸம்ஸ்கிருதத்திற்கு மாறுபடாமல் தமிழ் பாஷைக்கிணங்க எழுதிக்கொடுத்த திரிசிராபுரம் தமிழ் வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை மாணாக்கராகிய வேதகிரிக் தொண்டரவர்களுக்கும், இந்த அத்யாத்ம ராமாயணத்திற்கு இங்கிலீஷில் முகவுரை எழுதிக் கனபடுத்திய ஸ்ரீமான். திவான் பகதூர். எ. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (பி. எஸ். ஓ. சால்ட், ஆப்காரி அண்டு கஸ்டம்ஸ் ரிடையர்ட் டிப்டி கமிஷனர்) அவர்களுக்கும், இப் புஸ்தகம் இரண்டு பாகமாக வெளி வந்த பொழுது ஒவ்வொரு பாகமாக வாங்கி பொருளுதவி செய்த ஆஸ்திகோத்தமர்களுக்கும், நாம் மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

| | |
|---|---|
| திருவல்லிக்கேணி,<br>சென்னை 19-2-14. | இப்படிக்கு,<br>எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனி. |

# அத்யாத்ம ராமாயண

## விஷய அட்டவணை.

### பாலகாண்டம்.



### அயோத்தியா காண்டம்.

## ஆரண்ய காண்டம்.

## கிஷ்கிந்தா காண்டம்.



## சுந்தர காண்டம்.

## யுத்த காண்டம்.

ஓம் : நாராயணாயநமஹா.

# அத்யாத்ம ராமாயணம்.

## பாலகாண்டம்.

### முதலாவது சருக்கம்.

அகண்ட பரிபூரணமாயும், பரப்பிரமமாயும், நித்தியமாயும், சச்சிதானந்த ரூபமாயும், நிஷ்களமாயும், நிராமயமாயும், சோதிமய மாயும், பிரணவ சொரூபமாயும், பிரபஞ்சவுற்பத்தி, ஸ்திதி, லயம் இவைகளுக்கு மூலகாரணமாயு முள்ள ஆதிமூலப்பொருளை யான் வணங்குகிறேன்.

நித்தியரும், சின்மயரும், ஏகரும், மூவரும், மாயையில்லாத வரும், மாயையை ஆசிரயித்தவரும், தற்போதவடிவமானவரும், ஆனந்தமயமானவரும், வித்தியாதத்துவமானவரும், பிரபஞ்சத் தின் உற்பத்தி, பரிபாலனம், சங்காரம் இவைகளுக்கு ஆதியானவரும், பூபாரத்தை நீக்கும்படிப பிரமன் முதலிய தேவர்களால் பிரார்த்திக்கப் பட்டு, பூமியின்கண் இரகுவம்சத்தில் மாயாமானிடனாக அவதாரம் செய்து, அரக்கர் முதலிய துஷ்டர்களைக் கொன்று, உலகத்திலுள்ள ஆன்மகோடிகளின் பாபத்தைத் போக்கி, நித்தியமாகிய மோக்ஷத்தை யடையும்படியான மார்க்கத்தை யேற்படுத்திய பிறகு, தானும் அநா தியாயுள்ள பிரமத்தின் [ஆதிமூலப்பொருளின்] தன்மையை யடைந்த வரும், ஸீதாபதியுமாகிய ஸ்ரீராமனை நான் பஜிக்கிறேன்.

சுபத்தைக் கொடுக்கக்கூடியதும், புராணம் எல்லாவற்றிலும் சிறப்புற்றதும், பூலோகவாசிகளாகிய ரிஷி முதலானோர், தேவலோக வாசிகளாகிய இந்திரன் முதலானோர் இவர்களுக்கு உண்டான ஆதி யாத்மீக (சரீரத்தை யதிஷ்டித்துக்கொண்டு ஏற்பட்ட க்ஷய ரோகம்

முதலிய வியாதிகளும், மிருகங்கள், திருடர்கள், பேய்கள், இராக்ஷசர்கள் முதலானவர்களாலுண்டாகும் துக்கங்களும் ஆதியாத்மீகம் எனப்படும்) தாபத்தை நீக்கினதும் ஆகிய அத்யாத்மம் என்னும் பெயரையுடைய இந்த இராமாயணத்தை எவர்கள் மனதை மற்ற விஷயத்திற் போகவிடாமல் தடுத்து, ஏகாக்கிரச் சித்தரா யிருந்து பாராயணம் செய்கிறார்களோ அவர்கள் தங்களுடைய பாபங்களனைத்தையும் உதறிவிட்டு, வைகுண்டம் சென்று விஷ்ணு ஸாரூபத்தையே அடைகிறார்கள்.

ஓர் மானிடன் தன் சம்சார பந்தத்தில் நின்று விடுபடவேண்டுமென்று விரும்புவானேயாகில், எப்போதும் சிரத்தையுடன் இந்த அத்யாத்ம ராமாயணத்தையே சிரவணம் செய்யவேண்டும். இதை எப்போதாயினும் ஒரு சமயம் சிரவணம் செய்பவன் பதினாயிரம் கோடி கோதானம் செய்த பலனை யடைகிறான்.

இரகு வம்சத்தி லுதித்த பகீரதனால் கொண்டுவரப்பட்ட பகீரத கங்கையானது, பரமசிவத்தின் சடாமகுடத்தி லிருந்து புறப்பட்டு ஹிமோத்கிரி பருவதத்தில் தங்கி, பூலோகத்தில் பரதகண்டத்தின் வடபாகத்திலுள்ளவர்களுக்கு இகலோக சாதகத்தைமட்டும் செய்து கிழக்குச் சமுத்திரத்தில் கலக்கிறது.

அதே வம்சத்திலுதித்த இராமனால் கொண்டுவரப்பட்ட இராம கங்கையான இந்த அத்யாத்ம இராமாயண கங்கையானது, அப்பரமசிவத்தின் திருவாக்கிலிருந்து புறப்பட்டு சுவர்க்க மத்திய பாதாளமென்னும் மூவுலகங்களிலுமுள்ள சர்வாத்மாக்களின் இருதய பருவதத்தில் தங்கி, அவர்களுக்கு இகலோக பரலோக சாதகங்களையும் செய்து, அவர்களுடைய பக்திக்கடலில் கலக்கிறது.

தேவலோகத்தில் தேவர்களுடைய நன்மைக்காக ஏற்பட்டிருக்கும் கற்பக விருக்ஷமானது, இந்திர பட்டத்துக்கு உரியதென்றும், அதை யணுகினவர்களுக்கு அது கர்மானுசாரத்தை யொட்டிப்பலன் கொடுக்கக்கூடிய தென்றும்,(கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக காஞ்சிரங்காயீந்ததேன் முற்பவத்திற் செய்தீவினை) பரலோக சாதகத்தைக் கொடுக்கக்கூடிய தல்லவென்றும், வியக்தமாக விளங்குகிறது. அப்பேர்க்கொத்த கற்பக விருக்ஷத்தைப் போலல்லாது பரமசிவமாகிய பாற்கடலிற் றோன்றி, வைராக்கியம் என்ற வேரூன்றி, சன்மார்க்கம்

என்ற கிளைகிளைத்து, பத்தியென்ற தளிர் தளிர்த்து, சரியை யென்ற அரும்பு அரும்பி, கிரியை யென்ற மலர் பூத்து, யோகம் என்ற காய் காய்த்து, ஞானம் என்ற கனிபழுத்து, தன்னையடுத்த விண்ணவருக்கும், மண்ணவருக்கும், இகலோக பரலோக சாதகங்களைக் கொடுக்கக்கூடியதுமாக ஏற்பட்டிருக்கும், இந்த அத்யாத்ம இராமாயணமாகிய கற்பகவிருக்ஷத்தை யடுத்து, ஓ மானிடர்களா ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதி பௌதிகம், என்ற உங்கள் தாபத்திரயங்கள் நீங்க வழி தேடிக் கொள்ளுங்கள்.

ஒரு சமயம் கைலையங்கிரியின் சிகரத்திலுள்ள சூரியனைப் போல் நிர்மலமான பிரகாசத்தையுடைய மண்டபத்தில் ஓர் இரத்தின ஸிம்மாசனத்தில் எழுந்தருளியிருக்கும் தியானத்திலிருப்பவரும், முக்கண்ணுடையவரும், சம்ஸார பந்த மில்லாதவரும், சிவகணங்களாற் சேவிக்கப்படுகிறவரும், எல்லோருக்கும் நன்மையைச் செய்பவரும், மஹா தேவரும், சர்வேசருமாகிய பரமசிவனைப் பார்த்து, அவருடைய இடது மடியில் வீற்றிருக்கும், பர்வத சிரேஷ்டனுக்குப் புத்திரியாகிய பார்வதிதேவி, பக்தியோடு வணங்கி எல்லோருக்கும் நன்மையைச் செய்யக்கூடியதும், ஆனந்தத்திற்கு ஆதாரமுமான வார்த்தையைச் சொன்னாள். அதாவது:—

உலகங்களுக்கு வாசஸ்தானமாகிய தேவ! தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் சொரூபம் யாவற்றையும் பார்க்கிற பரமேஸ்வரர். ஸனார்த்தனராகவும் ஆகிறீர்கள். புருஷோத்தமனுடைய சனாதனமாகிய சனாந்திகம் (இரகசியம்) ஆகிய தத்துவத்தை நான் வினவுகிறேன்.

மிகுதியான மகிமையுடைய பெரியோர்கள், மிகவும் இரகசியமாயினும், மற்றவர்களுக்குச் சொல்லக்கூடாததாயினும், தன்னையண்டின பக்தர்களுக்குச் சொல்லுவார்கள். ஓ தேவ! நான் தங்களுக்குப் பிரியமுள்ள பக்தையாகிறேன். தாங்கள் எனக்கு மிகப் பிரியர் ஆகிறீர்கள். ஆகையால் நான் கேட்டதை யெனக்குச் சொல்ல வேண்டும்.

வைராக்கியத்தால் சித்தி பெறுவதும், விஞ்ஞானத்தால் விளங்குவதும், பக்தியை யநுசரித்ததும் ஆகிய மோக்ஷ ஞானத்தை நான் அறிந்து கொள்ளும் விதமாகக் கூறவேண்டும், நான் ஸ்திரீயாயிருக்கிறேன் அல்லவா. மேலும் மற்ற எல்லோருக்கும் தங்கள் உபதேச

மானது முக்தி நெறியை யளிக்கக்கூடியதாகவும் இருக்கவேண்டும்.

ஏ நீலகண்ட! மற்றொரு இரகசியத்தையும் கேட்கிறேன். அதை முன்னதாகக் கூறவேண்டும்.

இராமச்சந்திரனைச் சாந்தகுணமுடைய யோகிகள், பரன், ஏகன், ஆத்யன், மாயாகுணங்களின் விகாரமில்லாதவன் என்று சதாகால மும் பஜிக்கிறார்கள். அவ்விதமே சித்திபெற்றுப் பரமபதமும் அடை கிறார்கள். சிலர், இராமன் சிரேஷ்டனாயினும், அவித்தை (அஞ் ஞானம்) யால் சூழப்பட்ட மனத்துடன், தன்னைத்தான் தெரிந்து கொள்கிறதில்லை என்றும், யாராவது நன்று போதனை செய்தால் மட் டும் பரமாத்ம தத்துவத்தை யறிந்து கொள்ளுகிறான் என்றும் கூறுகி றார்கள்.

ஆனால் அந்த இராமச்சந்திரன் முன்னர் கூறியபடி பரம புரு ஷனாயிருந்தால், ஸீதையின் நிமித்தமாக ஏன் பிரலாபிக்கவேண்டும்?

அவர் தன்னை யின்னான் என்று தெரிந்து கொள்ளாவிடில், ஜீவர் கள் எல்லோருக்கும் சமமானவர்தானே, அவரை எதற்கு ஜீவர்கள் சேவிக்கவேண்டும்?

பரமாத்மாவிடத்தில் ஜீவர்களுக்குத் தீவிரபக்தி யுண்டாவது முக்கிய காரியம், சம்சாரபந்தத்தில் நின்று விடுபடப் பக்தியே கார ணம், அதைத் தவிர வேறு சாதனமும் கிடையாது.

ஆகையால் இந்த இராமச்சந்திரனிடம் எனக்குண்டாகிய சந் தேகத்தை, தங்கள் நிர்மலமான வாக்கால் தாங்கள் நிவிருத்தி செய்ய வேண்டு மென்று வணங்கிக்கேட்டுக் கொண்டாள்.

பரமசிவன், “ஓ பார்வதி! நீ தனியையாகிறாய், பக்தியுள்ளளுவ ளாகிறாய், ஏனெனில் பரமாத்மாவாகிய இராமனுடைய தத்துவத் தைத் தெரிந்து கொள்ள உனக்கு விருப்பமுண்டா யிருக்கிறதல்லவா? முக்கியமும், மிக்க இரகசியமுமான அந்தத் தத்துவத்தைச் சொல்ல வேண்டுமென்று இதுவரையில் என்னை யாரும் கேட்டதில்லை. நீ என்னைப் பக்தியுடன் கேட்டதால் அதை மிகவும் தெளிவாக உனக்கு நான் கூறுகிறேன்.

இராமன் பரமாத்ம சொரூபமுடையவர், அனாதியானவர், ஏகர், புருஷோத்தமர், தன் மாயையால் இந்தப் பிரபஞ்சம் யாவற்றையும் சிருஷ்டிசெய்து, ஆகாசம்போல் உள்ளிலும் வெளியிலும் இருக்

கிறார். மாயையால் மறைக்கப்பட்டிருக்கும் பரமாத்மாவின் சந்நிதானத்தில், காந்தத்தின் முன்புள்ள இரும்புபோல உலகங்கள் அவரை ஆசிரயித்திருக்கின்றன.

மானிடர்கள், அவித்தையால் மாயை யற்றதும், சுத்தபோத சொரூபமுமாகிய ஆத்மாவினிடம் அஞ்ஞானத்தை ஆரோபணம் (நாட்டுதல்) செய்கிறார்கள். அவர்கள் ஆத்மாவை யறிகிறதில்லை.

சம்சார பந்தத்தில் மூழ்கிய மானிடர்கள், தங்களிருதயத்திலிருக்கும் அந்த பரமாத்மாவைக் கழுத்தில் அணிந்திருக்கும் ஆபரணத்தைப் போலத் தெரிந்து கொள்கிற தில்லை.

பரமாத்மாவின் சொரூப ஜோதியைத் தவிர சூரியனுக்கும் பிரகாசமில்லை. ஆகையால் பரத்துக்கும் பரமாத்மாவாகிய இராமனிடம் அவித்தை எவ்விதம் ஏற்படும்.

கண் கிறுகிறுப்புடைய ஒருவனுக்கு நிலைப் பொருளாயுள்ள தன் கிரகம் முதலியவைகள் சுற்றுகிறதாகக் காணப்படும். அது போல ஜீவர்கள் தேகத்தையும், இந்திரியங்களையும் உண்டு பண்ணின பரமாத்மாவின் காரியத்தைப் பற்றிச் சந்தேகிக்கிறார்கள்.

சூரியப் பிரகாசம், பூமி முதலிய இடங்களிற் பிரகாசிப்பதால், பகலும், அது மறைவதால் இரவும் உண்டாகின்றன. அந்த சூரியப் பிரகாசம் இல்லாவிட்டால் பகலுமில்லை, இரவு மில்லை. பிரகாசத்துக்கு இரவாவது பகலாவது கிடையாது. அது போல பரமாத்மாவாகிய இராமனிடம் ஞானமும் அஞ்ஞானமும் கிடையா. மாயை அவரை யாசிரயிப்பதால் ஞானமும், அஞ்ஞானமும் ஏற்படுகின்றன.

பரமானந்த மயனும், விஞ்ஞான ரூபனும், அஞ்ஞானத்துக்குச் சாக்ஷியானவனும், ஆகிய இராமனிடம் மோகத்திற்குக் காரணமாகிய தாமதகுணம் இல்லவே யில்லை.

ஓ பார்வதி! இரகசியமாயும், மோக்ஷத்துக்குச் சாதன மாயுமுள்ள அனுமான், ஸீதை, இராமன் இவர்களின் சம்வாதத்தை இப்போது உனக்குக் கூறுகிறேன்.

முன் கல்பத்தில் நடந்த இராமாயணத்தில் எல்லோரையும் பிரமிக்கச் செய்யும் இராமன், யுத்தம் செய்வதில் சிறந்தவனும், தேவர்களுக்குக் கண்டகனுமாகிய இராவணனைப் புத்திர மித்திர களத்திரர்களோடும் இரத கெஜ துரக பதாதிகளோடும் யுத்தத்தில் கொன்று

ஸீதை, இலக்ஷ்மணன், விபீஷணன், ஸுக்ரீவன் இவர்கள் சகிதம், அனுமான் முதலியவர்கள் புடை சூழ அயோத்திமாநகரம் வந்து சேர்ந்தார்.

கோடி சூரியனுக்குச் சமானமான காந்தியுடைய தசரத நந்தனன் இராஜ்ய பட்டாபிஷேகம் செய்துகொண்டு மகாத்மாக்களாகிய வசிஷ்டர் முதலியவர்கள் சூழ ஸிம்மாசனத்தில் வீற்றிருந்தார்.

அப்பொழுது காகுத்தன், அஞ்சலிசெய்து கொண்டு தன் முனனிற்பவனும், காரியங்களை முடித்தவனும், விஷயத்தில் விருப்பமில்லாதவனும், ஞானத்தை மட்டும் அபேக்ஷித்தவனும், புத்தியில் சிறந்தவனுமாகிய அனுமானைப்பார்த்து விட்டு, ஸீதையை நோக்கி "ஓ ஸீதே! இந்த மாருதி கல்மஷமில்லாதவன், நம்மிருவரிடம் பக்தியுள்ளவன், ஞானத்திற்குப் பாத்திரமானவன். ஆகையால் இவனுக்குத் தத்துவோபதேசம் செய்யென்றார்.

ஜனக குமாரியாகிய ஸீதை "அவ்விதமே செய்கிறேன், சரணம்," என்றுரைத்து, அனுமானுக்கு நிச்சயிக்கப்பட்ட இராம தத்துவத்தைக் கூறுகிறாள்.

"ஓ—அனுமானே, இராமன், பரப்பிரமம், சச்சிதானந்தன், இரண்டற்றவன், உபாதிகள் அற்றவன், ஸத்தாமாத்திரன், அகோசரன், ஆனந்தன், நிர்மலன், சாந்தன், நிர்விகாரன், நிரஞ்சனன், எங்கும் வியாபித்தவன், ஆத்மா, ஸ்வப்பிரகாசன், கல்மஷமற்றவன் என்று தெரிந்து கொள். "

நானே சிருஷ்டி, பரிபாலனம், பிரளயம், இவைகளைச் செய்யும் மூலப்பிரகிருதி என்று அறிந்து கொள்ளும்.

பரப்பிர்மமாகிய இராமனுடைய சந்நிதிமாத்திரத்தில் நான் சாவதானமாக இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்கிறேன். இவருடைய சந்நிதி மாத்திரத்தில் நான் சிருஷ்டி செய்திருந்தாலும், ஜீவர்கள் அதை இவரிடம் ஆரோபணம் செய்கிறார்கள்.

அயோத்தி நகரின்கண், மிகக் கீர்த்திபெற்ற இரகு வம்சத்தில் இராமர் அவதாரம் செய்தது, விஸ்வாமித்திர மகா முனிவருக்கு ஸகாயமாக இருந்தது, அவருடைய யாகத்தைக் காத்தது, அகலிகையின் சாபத்தை விடுவித்தது, மகேஸ்வரன் வில்லை முறித்தது, என்னுடைய பாணிக்கிரகணம், பரசுராமன் கருவத்தை பபகரித்தது, என்னுடன் பன்னிரண்டு வருடம் அயோத்தியில் வாசம் செய்

தது, தண்டகாரணியம் சென்றது, விராதனை வதைத்தது, மாரீசனைத் தொலைத்தது, மாயா ஸீதையை ஏற்படுத்தியது, ஜடாயுவுக்கு மோக்ஷமளித்தது, கபந்தனுக்கு நல்ல ஸ்தானமளித்தது, சபரிபூஜித்தது, ஸுக்ரீவனுடைய சேர்க்கை, வாலிவதம், ஸீதையைத் தேடியது, கடலில் திருவணை கட்டியது, இலங்கையை யடுத்தது, துராத்மாவாகிய இராவணனை அவன் புத்திரர்களுடன் யுத்தத்தில் வதம் செய்தது, விபீஷணருக்கு இராஜ்யம் கொடுத்தது, என்னுடன் புஷ்பகவிமான மேறி அயோத்தி வந்தது, பிறகு இராமருக்கு முடிசூட்டியது இக் காரியங்களைச் செய்தவள் நான்தான். இவைகளை ஜீவர்கள் விகாரமற்ற வரும், யாவற்றின் சொரூபமாகிய இராமரிடம் ஆரோபிக்கிறார்கள்.

ஆனால் இராமர் செல்லுவதில்லை, இருப்பதில்லை, துக்கிப்பதில்லை, விரும்புவதில்லை, வெறுப்பதில்லை, ஒன்றும் செய்வதில்லை. அவர் ஆனந்த சொரூபர், பரிணாமமில்லாதவர். மாயையின் குணங்களை அநுசரிக்கும்போது அவ்விதம் (செல்பவர், இருப்பவர் முதலியவை) தோன்றுகிறார்" என்று கூறினாள்.

அப்போது இராமச் சந்திரன், சமீபத்திலிருக்கும் அனுமானை நோக்கி ஓ ஆஞ்சனேய! பிர்மம், ஜீவன், பிரபஞ்ச முதலிய ஜடங்கள் இவைகளின் தத்துவத்தைக் கூறுகிறேன் கேள். அதாவது:—

ஆகாசத்தில் மூன்று விதமான பேதம் காணப்படுகிறது. அதாவது ஒரு தடாகத்தை வியாபித்திருக்கிற ஆகாசம் (1) மஹா காசம். அதற்குள் அடங்கி யிருக்கிற ஆகாசம் (2) அவிச்சின்ன ஆகாசம். அதில் பிரதிபலித்திருக்கிற ஆகாசம் (3) பிரதிபிம்ப ஆகாசம் என்னும் இம்மூன்று வித பேதங்களும் ஆகாயத்திற் காணப்படுகின்றன. அது போல,

பிரமத்திலும், ஆபாஸம், அவிச்சின்ன சைதன்னியம், பூரண சைதன்னியம் என்னும் மூன்றுவித பேதங்கள் ஏற்படுகின்றன.

ஆபாஸ மென்பது பொய்யான புத்தி, அது அவித்தை (அஞ்ஞானம்)யின் காரியம். அது - விச்சின்னம் (வேறுபட்டது) இல்லாதது. அஞ்ஞானத்தால் விச்சின்னம் ஏற்படுகிறது.

ஞானம் ஏற்பட்டால், அவிச்சின்ன சைதன்னியம், பூரண சைதன்னியம், இவை இரண்டும் ஒன்றென்றும், ஆபாஸமாகிய அவித்தை தன் காரியங்களுடன் நசிக்கும் என்றும் அறியக்கூடும்,

ஆபாஸத்துடன் கூடிய புத்திகர்த்தா என்ற தன்மையையும் ஜீவன் என்ற தன்மையையும், விச்சேத மில்லாததும், விகாரமில்லாததும், சாக்ஷியுமாகிய பிரமத்தினிடம் மயக்கத்தால் கற்பிக்கப்படுகின்றன.

ரிக் வேதத்தில் அபாத்திரிய உபநிஷத்தில்—பிரக்கியானம் பிரமம் என்னும் வாக்கியமும், யஜுர் வேதத்தில் தைத்தரிய உபநிஷத்தில் அகம் பிரமாஸ்மி என்னும் வாக்கியமும், சாமவேதத்தில் சாந்தோக்கிய உபநிஷத்தில் தத்துவமஸி என்னும் வாக்கியமும், அதர்வண வேதத்தில் மாண்டோக்கிய உபநிஷத்தில் அயமான்மா பிரமம் என்னும் வாக்கியமும் ஏற்பட்டிருக்கின்றன.

சாமவேதத்தில் கூறிய தத்துவமஸி என்ற வாக்கியம் (தத்—தொம்—அஸி) பிர்மம்—நீ—ஆகிறாய் என்றுகூறும்.

ஆகையால், அவிச்சின்ன சைதன்னியம், பூரண சைதன்னியம் என்னும் இவ்விரண்டும் ஒன்றென்றே ஏற்படுகிறது. இதுவே ஞானம்.

தமோகுண சம்பந்தமுள்ள ஆபாஸம் ஒன்றுபடாது. ஆனால் அவிச்சின்ன சைதன்னியம், பூரண சைதன்னியம் என்னும் இரண்டும், ஒன்று என்ற ஞானம் ஏற்பட்டால், ஆபாஸமானது தன்னுடைய காரியங்களுடன் சவம சுடுதடிபோல் நசித்துவிடும்.

என் பக்தன் இதைத் தெரிந்து கொண்டால், அவன் நானாக (பிரமமாக) ஆவதற்குரியவனாகிறான்.

என்னிடம் பக்தியில்லாதவர்கள் வெகு ஜன்மம் எடுத்தாலும் அவர்களுக்கு ஞானமும் இல்லை, மோக்ஷமுமில்லை.

ஏ குற்றமற்ற மாருதி! மகாத்மாக்களாகிய எங்களுடைய (ஸீதா இராமர்கள்) இருதயமாகிய இந்த இரகசியத்தைப் பிரத்தியக்ஷமாக நான் உனக்குக் கூறினேன். என்னிடம் பக்தியில்லாதவனுக்கும், இரகசியமாகக் கெடுதி செய்பவனுக்கும் நீ யிதை உபதேசிக்கக்கூடாது. "இது சுவர்க்க இராஜ்பத்துக்கும் மேலானது" என்று ஸ்ரீராமன் அனுமாருக்கு உபதேசித்தார்.

ஏ பார்வதி! ஸ்ரீராம இருதயமாகிய இந்த விஷயத்தை உனக்கு நான் கூறினேன். மிகவும் இரகசியமானது, மனதிற்கு இன்பந்தாக் கூடியது. பரிசுத்தமானது, பாபங்களைப் போக்கக்கூடியது. பிரத்

தியக்ஷமாக இராமன் கூறியது. வேதாந்தம் யாவற்றும் சுருக்க மாகத் தன்னிடம் அடக்கியுள்ளது. 56

இதைப் பக்தியுடன் எப்போதும் பாராயணம் செய்பவன் முக்த ஞவான், இதில் சம்சயமில்லை. இராகவன் கூறிய அத்யாத்ம ராமா யணத்தைப் படித்தால், பிர்மஹத்தி முதலிய பாபங்கள் வெகு ஜன் மங்களில் செய்ததாயினும் நாசமடையும், சந்தேகமில்லை.

ஜாதிப்பிரஷ்டன், மிகுந்த பாபஞ்செய்தவன், பிறருடைய பொருள், மனைவி இவைகளை அபகரிக்க முயற்சியுள்ளவன், சோரன், பிராமணஹத்தி செய்தவன், தந்தையை வதம் செய்வதில் ஆதரவுள்ள வன், யோகிகளுக்கு அபகாரம் செய்தவன் இத்தியாதி பாதகங்களைச் செய்தவனுகிலும், ஸ்ரீராமனைப் பூசித்து பக்தியுடன், இராமச்சந்திர ஹிருதயத் (அத்யாத்ம இராமாயணம்) தைப் பாராயணம் செய்தால் சகல பாபங்களும் விடுபட்டு, சிறந்த யோகிகளுக்கும் கிடைக்காத ஸ்தானத்தை அடைவான். அவன் தேவர்கள் எல்லோராலும் பூசிக் கத் தகுதியுள்ளவனுகிருன்.

இவ்விதம் பார்வதி தேவிக்குப் பரமசிவன் திருவாய் மலர்ந் தருளினுர்.

---

## இரண்டாவது சருக்கம்.

---

பார்வதிதேவி பரமசிவத்தைப் பார்த்து "ஓ ஸ்வாமி! நான் தங்க ளிடம் ஸ்ரீராம இருதயத்தைச் சுருக்கமாகக் கேட்டேன். இப்போது அவருடைய உற்பத்தியை விரிவாகக் கேட்க விரும்புகிறேன்" என்று வணங்கிக் கேட்டாள்.

மஹாதேவர் பார்வதி தேவியைப் பார்த்து "ஏ தேவி! மிகச்சிறந் ததும், இரகசியமாகிய அத்யாத்ம ராம சரித்திரத்தை விரிவாகக் கூறு கிறேன் கேள். இதைக் கேட்டவர்கள் உடனே அஞ்ஞானத்தாலுண் டாகிய மோகத்தில் நின்று விடுபடுகிறுர்கள். மிகுதியான ஐஸ்வரி யத்தையும், தீர்க்கமான ஆயுளையும், புத்திர பாம்பரைகளையும் அடை கிருர்கள். 3½

அதாவது முற்காலத்தில் பூதேவியானவள், தசமுக இரா வணன் முதலிய இராக்ஷசர்களுடைய துர்க்கிருத்தியத்தால் ஏற்படும்

பாபத்தைத் தாங்கமாட்டாது தாபமடைந்து, காமதேனுவின் உருவந் தரித்து, தேவர்களுடனும், முனிவர்களுடனும் முதலில் கமலாசனராகிய பிரமதேவருலகஞ் சென்று, தனக்குள்ள துக்கம் யாவற்றையும் பிரம தேவரிடம் தெரிவித்தாள். பிரம தேவர் கொஞ்ச நேரம் ஆலோசித்து எல்லாவற்றையும் ஞானதிருஷ்டியால் அறிந்தார்.

பூமி தேவியின் பாரத்தை நீக்க வேண்டியதற்குள்ள காரியத்தை முடிக்க எண்ணங் கொண்டு பிரமதேவர் சத்தியலோகத்தி னின்று புறப்பட்டு தேவர்கள் புடை சூழத் திருப்பாற் கடற்கரை சென்றார். அங்கு சென்று சகல ஆத்மாக்களின் இருதயத்திலிருப்பவரும், ஸர்வஞ்ஞரும், ஈசரும், இலக்ஷ்மி தேவியுடன் கூடியவரும் ஆகிய நாராயண மூர்த்தியை மனதில் தியானித்து, தனதிருகண்களும் நிர்மலமான ஆனந்த பாஷ்பம் பொழிய, வாயால் பக்தியை வெளிக் காட்டும் வசனத்தாலும், வேதங்களின் சித்தமான பதங்களாலும், புராணங்களிற் கூறிய ஸ்தோத்திரங்களாலும்

ஸாந்தாஹாரம் புஜக ஸயனம் பத்மநாபம் ஸுரேஸம்
விஸ்வாதாரம் ககன ஸதூர்ஸம் மேகவர்ணம் ஸுபாங்கம்
இலக்ஷ்மீ காந்தம் கமலநயனம் யோகி இருத்யான கம்மியம்
விஷ்ணும் வந்தே பவபயஹாரம் ஸர்வலோகைகநாதம்.

என்றும் ஸ்தோத்திரம் செய்தார்.

அப்போது மனதைச் சீர்திருத்த முடியாதவர்கள் தரிசிக்க முடியாதவரும், இந்திர நீலரத்தினம் போன்றவரும், புன்னகை கொண்ட முகமுடையவரும், செந்தாமரை போன்ற கண்களையுடையவரும், கிரீடம், ஹாரம், தோள்வளை, குண்டலம், கங்கணம், முதலிய ஆபரணங்களுடன் பிரகாசிப்பவரும், ஸ்ரீவற்சம், கௌஸ்துபம் இவைகளின் காந்தி சூழ்ந்தவரும், வனமாலை முதலிய மாலைகள் பிரகாசிப்பவரும், சுவர்ணமயமான யக்ஞோபவீதம், சுவர்ண வர்ணமான வஸ்திரம் தரித்தவரும், ஸ்ரீபூமிதேவி சகிதரும், ஸ்ரீலக்ஷ்மி சமேதரும், கருடன் மீதிருப்பவரும், நான்கு புறத்திலும் ஸனகர் முதலிய பாரிஷதர்கள் ஸ்தோத்திரம் செய்பவருமாகிய மஹா விஷ்ணு பிரமதேவருக்குப் பிரசன்னமானார்.

பிரமதேவர் பிரசன்னமான வைகுண்ட நாதனைப் பார்த்து "ஓ தேவ! கர்மபாசத்தில் நின்று விடுபட விரும்பியவர்கள், அவர்களிரு

தயத்தில் எப்போதும் தியானம் செய்யும் தங்களுடைய பாதாரவிந்தத்தில் திரிகரண சுத்தியோடு நான் நமஸ்கரிக்கிறேன்.

தாங்கள் ஸத்துவம், இரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் சொரூபமுடைய மாயையால் உலகத்தை யுண்டுபண்ணி, இரக்ஷித்து, நாசம் செய்கிறீர்கள். ஆனந்தானுபவ சொரூபராகிய தங்களுக்கு அந்த வுலகத்துடன் யாதொரு சம்பந்தமுமில்லை.

தங்களுடைய கீர்த்தியில் பக்தியுடையவர்களாகி, பரிசுத்தமான மனமுடையவர்களுக் குண்டாகும் சித்த சுத்திபோல, அத்தியயனம், தானம், சத்கர்மம் இவைகளைச் செய்தவர்களுக்குச் சித்த சுத்தியுண்டாகாது. ஆகையால் என்னுடைய மனதிலிருக்கும் கல்மஷம் நீங்குவதற்குத் தங்களுடைய சரணாரவிந்தத்தை நான் கண்டேன். இந்த பாதபத்மத்தைப் பக்தியுடைய முனிவர்கள் எப்போதும் தங்கள் இருதயத்தில் தாரணை செய்கிறார்கள். ஞானிகள் பிரத்தியக்ஷாநுபவம் சித்திப்பதற்குத் தங்கள் மனதில் இதைத் தியானம் செய்கிறார்கள். தங்களுடைய பாதங்களில் பக்தியுடையவர்களிடம் தங்களுக்கு மிகுதியான விசுவாசம் ஏற்படுகிறது. இதை யறிந்து பக்தர்கள் பக்தியையே எப்போதும் விரும்புகிறார்கள். ஆகையால் தங்களுடைய பாதகமலங்களில் பக்தியே எனக்கு உண்டாகட்டும். சம்ஸாரமாகிய ரோகத்துக்குத் தங்களிடம் பக்திசெய்வதே ஔஷதமாகிறது" என்று ஸ்தோத்திரம் செய்தார்.

இவ்வாறு ஸ்தோத்தரித்த பிரமதேவரைப் பார்த்து மகிமை வாய்ந்த மகாவிஷ்ணு உமக்கு என்ன செய்யவேண்டுமென்று கேட்டார். பிரமதேவர் மிகுந்த சந்துஷ்டி யடைந்து விஷ்ணுவை நோக்கி, ஓ-பகவானே! புலஸ்தியர் வம்சத்திலுதித்த விச்ரவசுவின் குமாரனாகிய இராவணன் என்ற இராக்ஷசன் என்னிடம் பெற்றவரத்தால் கர்வங்கொண்டு அரக்கர்களுக்கு அரசனாகி எல்லோருக்கும் சத்துருவாகி மூவுலகிலுள்ளவர்களையும், லோகபாலர்களாகிய இந்திரன் முதலியவர்களையும் உபத்திரவப்படுத்துகிறான்.

ஓ—மங்கள சொரூபமுடையவரே ! அவனுக்கு மானிடனால் மரணம் என்று நான் கூறியிருக்கிறேன். ஆகையால் தாங்கள் மானிடனாகி, தேவர்களுக்குச் சத்துருவாகிய இராவணனை வதம் செய்ய வேண்டும்" என்று கோரினார்.

ஸ்ரீபகவான் "குற்றமற்ற நான்முகனே! காசிபப்பிரஜாபதி முன்னம் என்னை நோக்கித் தவம் செய்து, தனக்குப் புத்திரனாக நான் வரவேண்டுமென்று வரம் பெற்றிருக்கிறார்.

அந்தக் காசிபர் இப்போது பூமியில் தசரத மகா ராஜனாயிருக்கிறார். அவர் பெற்ற வரத்தின்படி நான் அவருக்குப் புத்திரனாகிறேன். நான் என் சொரூபத்தை நான்கு விதமாகப் பிரித்து, தசரதரின் மனைவி கௌசலையிடத்திலும், மற்ற இரண்டு மனைவிகளாகிய சுமித்திரை, கைகேசியினிடத்திலும் நல்ல சுபமுகூர்த்தத்தில் தனித் தனியாக நான்கு புத்திரர்களாக உண்டாக்கப் போகிறேன். யோக மாயையும் ஸீதை என்ற பெயருடன் ஜனகமகா ராஜன் கிரகத்திலுண்டாகப் போகிறாள். நான் அந்த ஸீதையைக் கொண்டு எல்லாவற்றையும் சீர்திருத்தப் போகிறேன்" என்று உரைத்து மகா விஷ்ணு அந்தர்த்தான மடைந்தார்.

பிறகு பிரமதேவர் தேவர்களைப் பார்த்து "ஓ தேவர்களே! மகா விஷ்ணுவானவர் மானிட வடிவத்துடன் இரகுவம்சத்தி லுதிக்கப் போகிறார். நீங்கள் யாவரும் பூலோகத்தில் வானரங்களாக அவதாரம் செய்யுங்கள். நாராயண மூர்த்தி பூமியில் இராமனாக வரும்போது அவருக்கு வேண்டிய சகாயத்தை நீங்கள் அங்கிருந்து செய்து விட்டுப் பிறகு இவ்விடம் வாருங்கள் என்று கூறினார்.

ஓ-பூமி தேவி! "மகாவிஷ்ணு பூமியில் இராமனாகவும், தேவர்கள் வானரங்களாகவும் அவதரித்து துஷ்டர்களாகிய இராவணன் முதலினோரை வதம் செய்யப்போகிறார்கள். அதனால் உன் மனக்கவலையுந் தீரும்," என்று சொல்லிவிட்டு பிரமதேவர் தன்னிருப்பிடம் சென்றார்.

தேவர்கள் பிரமன் கொடுத்த உத்தரவுப்படி வானரர்களாகி விஷ்ணுவின் சகாயத்திற்காக, மிக்க பலம் பொருந்தி, மலைகளாலும், மரங்களாலும் யுத்தம் செய்யக்கூடியவர்களாகி மகிமை பொருந்திய மகா விஷ்ணுவின் வரவை யெதிர் பார்த்துக்கொண்டு பூமியில் வாசம் செய்து கொண்டிருந்தார்கள்.

# மூன்றாவது சருக்கம்.

---

பிறகு மேன்மை பொருந்தியவரும், ஸத்தியமுள்ளவரும், பராக்கிரமமுள்ளவரும், அயோத்திக் கதிபதியானவரும், உலகம் எங்கும் பிரசித்தியுள்ளவருமாகிய தசரதமகாராஜன் பிள்ளையில்லாத காரணத்தால் துன்பமடைந்து முனிவர்களுக்குள் சிறந்தவரும், தமக்குக் குருவுமாகிய வசிஷ்ட முனிவரை நமஸ்கரித்துக் கூறுகிறார்.

ஓ! ஸ்வாமி! சகல இலக்ஷணமும் பொருந்திய பிள்ளைகள் எனக்கு எவ்வித முயற்சியாலுண்டாவார்கள். பிள்ளையில்லாத எனக்கு இராஜ்யம் துக்கத்துக்கு இடமாக இருக்கிறதே யல்லது வேறல்ல, இதற்கென்ன செய்யலாம் என்றார்.

வசிஷ்ட முனிவர் தசரத மகாராஜனைப் பார்த்து "ஓ! அரசனே! உமக்குப் பலம் நிறைந்த நான்கு குமாரர்கள், லோகபாலகர்களைப் போல உண்டாகப் போகிறார்கள். ஸாந்தைக்குப் பர்த்தாவும் தவத்தையே பொருளாகவுமுடைய ரிசிய சிருங்க முனிவரை வரவழைத்து, புத்திரகாமேஷ்டி யாகத்தை விரைவாகச் செய்யும்" என்றார்.

சக்கரவர்த்தி யவ்விதமே யென்று கூறி மந்திரிகளுடன் சென்று ரிசிய சிருங்கமுனிவரை யழைத்து வந்து பரிசுத்தராக விருந்து கல்மஷமில்லாத வசிஷ்டர் முதலிய முனிவர்களுடன் யாகம் செய்வதற்கு எத்தனித்தார்.

ரித்விக்குகள் அக்கினியில் சிரத்தையுடன் ஹோமம் செய்யும் போது உருக்கின தங்கத்துக்குச் சமானமான காந்தியுடைய அக்கினிபகவான் சுவர்ண பாத்திரத்திலிருக்கும் பாயஸத்தைக் கையில் எடுத்துக்கொண்டு "ஓ அரசனே! தேவராகிய விஷ்ணுவால் உண்டு பண்ணப்பட்டதும் தேவார்கமானதும் புத்திரனைக் கொடுக்கத்தகுதியுள்ளதுமான இந்தப் பாயஸத்தைப் பெற்றுக்கொள்ளும். உமக்கு சர்ப்புத்திரர் உண்டாகப் போகிறார். பரமாத்மாவையே புத்திரனாக அடையப் போகிறீர் சந்தேகமில்லை" என்று கூறி அரசனிடம் பாயஸத்தைக் கொடுத்துவிட்டு அந்தர்த்தானம் அடைந்தார்.

தசரத சக்கரவர்த்தி மனோரதம் நிறைவேறினவராகி ரிஷிசிரேஷ்டர்களாகிய வசிஷ்டர், ரிசிய சிருங்க முனிவர் இவர்களுக்கு

நமஸ்காரம் செய்து, அவர்களிடத்தில் உத்தரவு பெற்று அவிஸ்ஸாகிய பாயஸத்தைத் தன் பத்தினிகளாகிய கௌஸலையிடம் பாதியும், கைகேசியிடம் பாதியுமாகக் கொடுத்தார். பிறகு சுமித்திரை, புத்திரனைக் கொடுக்கும் சரு (அவிஸ்) வைத் தானும் புசிக்க விரும்பி வந்தாள். கௌஸல்யாதேவி தன்னுடைய பாகத்தில் கொஞ்சமும், கைகேசி தன்னுடைய பாகத்தில் கொஞ்சமும் எடுத்து மிக்க சந்தோஷத்துடன் கொடுத்தார்கள் கௌஸலை முதலிய மூன்று இராஜஸ்திரீகளும் பாயஸத்தைச் சாப்பிட்டு கர்ப்பந் தரித்தார்கள். அவர்கள் அரண்மனையில் தங்கள் தேக காந்தியால் தேவதைகள் போல் விளங்கினார்கள்.

கௌஸலாதேவி பத்தாவது மாஸத்தில் இரண்டற்ற பரம்பொருளைப் பிள்ளையாகப் பெற்றாள். உலகங்களுக்கு நாதரும், பரமாத்மாவும், ஸநாதனரும், கருநெய்தல் தளம் போன்ற சியாமளரும், மஞ்சள் பட்டாடை யுடுத்தவரும், நான்கு புஜமுடையவரும், செந்தாமரை போன்ற கண்களின் கடையில் பிரகாசிக்கும் குண்டலங்களின் அலங்காரமுள்ளவரும், ஆயிரம் சூரியனுக்குச் சமமானவரும், கிரீட சம்பந்தமுள்ள வக்ரகேசம நிறைந்தவரும், சங்கு, சக்கரம், கதை, பத்மம், வனமாலை இவைகள் பிரகாசிக்கப் பெற்றவரும், அநுக்கிரகம் செய்யக் கருதிய இருதய முடையவரும், நன்று பிரகாசமுள்ள புன்னகையான சந்திரிகை யுடையவரும், கருணாரஸம் நிறைந்து விஸ்தாரமான கருநெய்தல் போன்ற கண்ணுடையவரும், ஸ்ரீவற்சம், ஹாரம், கேயூரம், தண்டை முதலிய ஆபரண மணிந்தவருமாகிய பகவான், சித்திரை மாஸம், சுக்லபட்சம், நவமி திதி, புனர்வசு நட்சத்திரம் கூடியதுமான கடக லக்னத்தில், சூரியன், அங்காரகன், குரு, சுக்கிரன், சனி இவ்வைந்து கிரகங்களும் உச்சமாக இருக்கும் போது, தேவர்கள் புஷ்பமாரி பொழியத் திருவவதாரம் செய்தார்.

கௌசலை அந்த பரமாத்மாவைப் பார்த்து ஆச்சரியமடைந்து ஆனந்தபாஷ்பம் நிறைந்த கண்களுடன் நமஸ்காரம் செய்து கையைக் கூப்பிக்கொண்டு "ஓ! புருஷோத்தம! நீர் பரமாத்மா, அச்சுதர், முடிவற்றவர், பூரணர், உம்மை வேதம் அறிந்த பெரியோர்கள் வேதங்களுக்கும் விஷயமாகாதவன், புத்தி முதலியவைகளுக்கும் விஷயமாகாதவன், இந்திரியங்களுக்குக் காணப்படாதவன், ஸத்தாமாத்ரன், ஞானைக்ய சொரூபன் என்று கூறுகிறார்கள். நீரோ சத்துவம்

முதலிய குணங்களுடன் கூடிய மாயையால் பிரபஞ்சத்தை ஸிருஷ்டி செய்கிறவர், பரிபாலிக்கிறவர், சம்ஹரிக்கிறவர், எப்போதும் தேவர்களால் ஸ்தோத்திரம் செய்யத் தகுதியானவர். நீர் செய்கிறவர்போலிருக்கிறீர் செய்கிறவரல்ல; நடக்கிறவர்போல் காணப்படுகிறீர், நடக்கிற வரல்ல; கேட்கிறவர்போல் இருக்கிறீர், கேட்கிறவரல்ல; பார்க்கிறவர் போலிருக்கிறீர், பார்க்கிறவரல்ல; பிராணனில்லாதவர், மனமில்லாதவர், வெண்மை வடிவமானவர், என்பவைகளைப்பற்றி வேதம் கூறுகிறது. பூதங்கள் எல்லாவற்றிலும் சமமாக இருப்பவராயினும் அஞ்ஞானமாகிய இருள் நிறைந்த மனமுடையவர்களுக்குக் காணப்படமாட்டீர். நல்ல அறிவுடையவர்களுக்கு வியக்தமாகத் தெரியப்படுபவர். உம்முடைய வயிற்றில் வைகும் பிரும்மாண்டங்கள் பரமாணுக்களாகக் காணப்படுகின்றன. இவ்விதமிருக்க என் வயிற்றிலிருந்துண்டானவரென்று உலகத்துக்கு வேடிக்கை காண்பிக்கிறீர். ஓ புருஷோத்தம! நீர் பக்தர்களுக்குப் பரவசமாக இருப்பவர் என்ற தன்மையைக் காண்பிவித்தீர். அந்த விஷயத்தை யிப்போது நான் தம்மிடத்தில் கண்டேன். நான் உம்முடைய மாயையால் சம்சார சமுத்திரத்தில் மூழ்கி, கணவன், புத்திரன், பொருள் முதலியவைகளில் பந்தப்பட்டிருக்கிறேன். இப்பொழுது உம்முடைய பாதங்களின் சமீபத்தை யடைந்தேன். ஓ தேவ! உம்முடைய ரூபமானது என மனதில் எப்போது மிருக்கட்டும். உலகங்களில் எல்லோரையும் மோகிக்கச் செய்யும் உம்முடைய மாயை என்னைப் பற்றாமலிருக்கட்டும். பிரபஞ்ச சொரூபராகிய பகவானே இந்த! ரூபமானது உலகத்தாருக்கு விரோதமானது. இதை அடக்கிக்கொள்ளவேண்டும். மிகவும் மனோஞ்ஞமும், அதிக ஆனந்தமுடையதுமான குழந்தைத் தன்மையைக காண்பிவியும். நான் உம்மை ஆலிங்கனம் செய்வதாலும், பேசுவதாலும், மிகுதியான அஞ்ஞானத்தினின்று கரையேறுகிறேன்,'' என்று இவ்விதமாகக் கேட்டுக்கொண்டாள்.

அப்போது ஸ்ரீபகவான், "அம்மா! உமக்கு எது இஷ்டமோ அது அவ்விதமே யாகட்டும், பூமிபாரம் போக்குவதற்குப் பிரமதேவரால் முன்னம் பிரார்த்திகைப்பட்டு, நான் இராவணனைக் கொல்லுவதற்கு மானிடத்தன்மையை யடைந்திருக்கிறேன். தாமும் தசரதரும் என்னைப் புத்திரனாக அடையவேண்டித் தவம்புரிந்தீர்கள். எல்லோராலும் பூஜிக்கத் தகுதியான தேவீ! அவ்விதமே நான் செய்

தேன். என் சுயரூபத்தை யிப்போது பார்த்தது முன் செய்த தவத்தின் பயன். என்னுடைய தரிசனம் மற்றவர்களுக்குக் கிடைக்காது. மோக்ஷத்துக்குத் தகுதியானது. நம்மிருவருக்கும் நடந்த சம்பாஷணையைப் படிப்பவன், கேட்பவன் என்னுடைய சாரூப்பிய முக்தி பெறுவான். அவனுக்கு மரண காலத்தில் என்னுடைய ஸ்மரணம் ஏற்படும்" என்று கௌசலையிடம் கூறி, பகவான் பாலனாகி அழ ஆரம்பித்தார்.

அப்பாலன் அக்குழந்தைப் பருவத்திலும், இந்திர நீலம் போன்ற காந்தியுடையவர். விஸ்தாரமான கண்களுடையவர். மிகவும் சுந்தரமான வடிவமுள்ளவர் அருணனுக்குச் சமமானவர். லோக பாலர்கள் யாவரையும் கெஞ்சும்படி செய்வதற்குரியவர். இவர் இவ்விதம் காணப்பட்டார்.

பிறகு கைகேசியும் தாமரைக் கண்ணனாகிய ஓர் புத்திரனைப் பெற்றாள். சுமித்திரா தேவியும் பூரணச்சந்திரன் போன்ற முகமுடைய இரண்டு குழந்தைகளைப் பெற்றாள்.

பிறகு தசரத மகாராஜன் புத்திரன் பிறந்த சங்கதி தெரிந்து ஆனந்தக் கடலில் மூழ்கி, தமது குருவாகிய வசிஷ்ட முனிவருடன் கௌசலை அரண்மனைக்கு வந்தார். செந்தாமரைத்தளம்போன்ற அப்பாலகனைப் பார்த்து, சந்தோஷ மிகுதியால் அப்போது செய்யவேண்டிய ஜாதகருமம் முதலியவைகளைத் தனது குருவாகிய வசிஷ்டரைக் கொண்டு செய்வித்தார்.

அப்பொழுது அரசன் பிராமணர்களுக்கு ஆயிரக் கணக்கான கிராமங்களையும், சுவர்ணங்களையும், இரத்தினங்களையும், வஸ்திரங்களையும் சந்தோஷத்துடன் வழங்கினார்.

வசிஷ்டர், முனிவர்கள் ஞானப்பிரவாக முடைய இந்த கௌசலை குமாரனிடத்தில் இரமிக்கிறபடியாலும், எல்லோரையும் இவர் சந்தோஷப்படுத்துகிற படியாலும், இவருக்கு இராமர் என்றும், கைகேசியின் குமாரன் எல்லோரையும் ஆளப்போகிறபடியால் பரதன் என்றும், சுமித்திரையின் குமாரன் இலக்ஷணங்களுடன் கூடியிருப்பதால் இலக்ஷ்மணன் என்றும், மற்றொரு குமாரன் சத்துருக்களைச் சங்கரிக்கப் போகிறபடியால் சத்துருக்கன் என்றும் நாமகரணம் இட்டார்.

இலக்ஷ்மணன் இராமச்சந்திரருடனும், சத்துருக்கன் பாதனுடனும் பாயச பட்சணத்தை அநுசரித்து இவர்கள் இருவாகச் சேர்ந்து சஞ்சரித்தார்கள். இராமரும் இலக்ஷ்மணனுடன் சேர்ந்து குழந்தை விளையாட்டாலும், நடத்தைகளாலும், மழலைச் சொற்களாலும் தாய் தந்தையர்களைச் சந்தோஷப்படுத்தினர்.

நெற்றியில் சுவர்ணமயமான பொன் அரசிலையுடையதும், முத்துகள் தொங்கவிட்டதுமாகிய சுட்டி தரித்தவனும், கழுத்தில் சிறந்த மணிக்கூட்டங்களின் மத்தியில் புலி நகத்துடன் வயிரமிட்டிழைத்த பதக்க மணிந்தவனும், காதில் மருதமரத்தின் பழுக்காத பச்சைக்காய் போன்ற நிறமுடைய இரத்தினம் இழைத்த ஆபரணங்களைப் பூண்டவனும், ஒலியைச் செய்யாநின்ற இரத்தினமிட்ட தண்டை, பொன் அரைஞாண், தோள்வளை இவைகளுடன் கூடினவனும், புன்னகை கொண்ட முகமுடையவனும், முத்துப்போன்று சிறுத்த தந்த பந்தியுடையவனும், இந்திர நீலம் போன்ற தேக காந்தியுடையவனும், சுவற்றின் மேற்பூச்சினுல் பாற்கடல் போல விளங்கும் கூடங்களில் விளையாடுகிறவனுமாகிய இராமனைப் பார்த்து, தசரதரும் கௌசலையும் சந்தோஷமடைந்தார்கள்.

தசரதர் சாப்பிடப்போகும்போது மிகுதியான அன்புடன் அடிக்கடி இராமனை அழைப்பார். இராமன் விளையாட்டால் வருகிறதில்லை; அரசன் அபிமானத்தால் குழந்தையை அழைத்துவரும்படி கௌசலையை யனுப்புவார். கௌசலை யோடியழைத்தும் யோகிகள் மனதுக்குச் சமீபத்திலிருக்கக் கூடிய அந்த இராமன் வருகிறதில்லை. பிறகு இராமன் தானகவே சிரித்துக்கொண்டு மண்தூசி சம்பந்தப் பட்ட கையுடன் வந்து அற்பமான அன்னகவளத்தை யெடுத்துக் கொண்டு மறுபடியும் ஓடுவான்.

இவ்விதமாக, ஆனந்தமயனும், உலகத்துக்கு ஆனந்தத்தைச் செய்பவனுமாகிய பரமபுருஷன், மாயையால் குழந்தை வடிவம் எடுத்து, தம்பதிகளாகிய தசரத கௌசலை யிவர்களைச் சந்தோஷப்படுத்தினர்.

இப்படி கொஞ்சகாலம் சென்றபின் அந்த நான்கு குமாரர்களும் கௌமார பருவத்தை யடைந்தார்கள். அந்நால்வருக்கும் வசிஷ்ட முனிவர் உபநயனச் சடங்கு செய்தார். பிறகு அக்ஷராப்பியாச

மும் செய்து வைத்தார். அந்த நான்கு குமாரர்களும் எல்லாவித்தைகளிலும் சாமார்த்திய மடைந்தார்கள். தனுர் வேதத்திலும் பயிற்சியடைந்தார்கள். அஸ்திரங்கள் யாவற்றையும் தெரிந்து கொண்டார்கள், சகல சாஸ்திரங்களையும், உபநிஷத் முதலிய வேதார்த்தங்களையும் கற்றுணர்ந்தார்கள். உலக நாதர்களாகிய இவர்கள் லீலையாக மானிடவடிவமெடுத்து இவ்விதம் விளையாடினார்கள்.

இலக்ஷ்மணரும் தமயனாகிய இராமன் தான் சேவிப்பதற்கு உரியவர் என்றே கருதி இராமரை வணங்கி வந்தார். சத்துருக்கனும் அவ்வாறே சேவித்தான்.

பிரபுவாகிய இராமன், வில், அம்புறாத்தூணி, பாணம் இவைகள் சகிதம் குதிரையின் மீதேறி இலக்ஷ்மணருடன் தினந்தோறும் வேட்டையாட வனம் செல்லுவார். அங்குள்ள துஷ்டமிருகங்களைக் கொன்று தந்தையாகிய தசரத மகாராஜாவிடம் தெரிவிப்பார்.

ஸ்ரீராமச்சந்திரன் அதிகாலையில் எழுந்து நன்று ஸ்நானம் செய்து, வந்தனம், ஜெபம் முதலிய நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு பிறகு தாய் தந்தையர்களை நமஸ்கரித்து, பொறுமையுடன் நகரிலுள்ள ஜனங்களின் காரியங்களைச் செய்வார். பந்து ஜனங்களுடனும், முனிவர்களுடனும், தினந்தோறும் போஜனம் செய்து, பிறகு எப்போதும் தர்ம சாஸ்திரங்களின் இரகசியங்களைச் சிரவணம் செய்வார்; தானும் வியாக்கியானம் செய்வார்.

[இவ்வாறு பரமாத்மாவானவர் மனுஷ்யாவதாரம் செய்து, மானிட ஜனங்களை யநுசரித்து யாவற்றையும் செய்கிறார். விசாரிக்குமளவில் அவர் விகாரமடையாதவர், பரிணாமமில்லாதவர், ஆகையால் அவர் ஒன்றும் செய்தவரல்ல]



## நான்காவது சருக்கம்.

தசரதமகாராஜன், இராமன், இலக்ஷ்மணன், பரதன், சத்துருக்கன முதலிய தனயர்களுடன் செங்கோல் கோணாது, இராஜ்ய பரிபாலனம் செய்துவரும் காலத்தில், ஒரு தினம் அக்கினிக்குச் சமானமான காந்தியுடைய விஸ்வாமித்திர முனிவர் பரமாத்மா தன் மாயையால் இராமனாக அவதாரம் செய்திருக்கிறார் என்பதை யறிந்து அவரைப் பார்க்க அயோத்திக்குத் தசரத மகாராஜனிடம் வந்தார்.

தசரத மகாராஜன் கௌசிக முனிவர் வருவதைப்பார்த்து சீக்கிரம் எழுந்து அம்முனிவரிடம் சென்று விதிப்படிப் பூஜித்து பக்தியோடு வணக்கஞ்செய்து அஞ்சலிசெய்துகொண்டு "ஓ முனிசிரேஷ்டரே! தாங்கள் என் கிரகம் நோக்கிவந்த காரணத்தால் நான் கிருதார்த்தனுகி விட்டேன். தங்களைப்போன்ற பெரியோர்கள், எந்தக் கிரகம் செல்கின்றுர்களோ அங்குதான் சகல சம்பத்தும் உண்டாகின்றன" என்று வியந்துகூறி, அவரை அழைத்துவந்து ஓர் திவ்வியாசனத்தின்மீது வீற்றிருக்கச்செய்து வசிஷ்டர் முதலிய பெரியோர்களுடன் தானும் ஓராஸனத்தி லமர்ந்தார்.

மிகச் சிறந்த தபோபலத்தையுடைய விஸ்வாமித்திர முனிவர் பிரீதியுடன்தசரதமகாராஜனை நோக்கி "என்னைப்போன்ற ரிஷிகளும் தேவர்களும் இடையூறு உடையவர்களானுல் கயிலையங்கிரியும், திருப்பாற்கடலும், சத்தியலோகமும், தேவலோகமும், அயோத்தியெனும் பொன்னகரமு மல்லாது புகலிடம் வேறுளதோ? ஓ ராஜனே! நான் பருவகாலம் வந்தவுடன் தேவர்களையும், பிதிர்க்களையும் உத்தேசித்து யாகத்தால் பூஜிக்க எத்தனம் செய்யும்போது, மாரீசன், சுவாகு என்ற இரண்டு அரக்கர்களும் அவ்விருவருடன் சஞ்சரிக்கும் அநேக இராக்ஷசர்களும் அந்தயாகத்துக்கு விக்கினம் செய்து வருகிறுர்கள். ஆகையால் அவர்களை வதம் செய்யப் பிராதாவாகிய, இலக்ஷ்மணனுடன் மூத்த குமாரனுகிய இராமனைக் கொடுத்து அனுப்பும். அதனுல் உமக்கு நன்மையுண்டாகும். உமக்கு சந்தேக முண்டாகுமானுல் உமது குருவாகிய வசிஷ்டரிடம் ஆலோசனை செய்துகொண்டு அனுப்பும்" என்றுர்.

கணக்கற்ற தவத்தையுடைய முனிவர் வார்த்தையானது மார்பின் மீது எறியப்பட்ட வேலாயுதத்திஞல் உண்டாகும் புண்ணில் கனல் நுழைந்தாலெனச் செவியிற் புகுதலோடும், உண்ணிலாவிய துயரம் பிடித்துத்தள்ள ஆருயிர் நின்றுங் கூசலாடக் கண்ணிலாதவன் தவம் பண்ணிக் கண்ணடைய வரம் பெற்று, அக்கண் பெற்றவுடன் இழந்தவன் படுந்துயரத்தை யொப்ப மனங்கலங்கி, தசரதன் குருவாகிய வசிஷ்டரைப்பணிந்து, "ஓ முனி சிரேஷ்டரே! நானிதற்கென் செய்வேன், இராமனை விடுவதற்கு என் மனம் உற்சாகம் அடையவில்லை. அநேகமாயிரம் வருடம் புத்திரனில்லாமல் வெகு கஷ்டப்பட்டுப் பின்பு புத்திர காமேஷ்டியாகம் பண்ணி, தேவர்களுக்கு

சமானமான நான்கு புத்திரர்களையடைந்தேன். அந்நால்வருள், இராமன் எனக்கு மிகப்பிரிய முள்ளவன். அவன் முனிவர் பின் சென்றானுகில் எந்த விதத்திலும் நான் ஜீவித்திருக்க மாட்டேன். இந்த கௌசிக முனிவரைத் திரஸ்காரம் செய்வோமானுல் அவர் சாபம் கொடுப்பதிற் சந்தேகமில்லை. எனக்கு எவ்விதம் நன்மை யுண்டாகப் போகிறது. அசத்தியமானது என்னை எவ்விதம் அண்டாமலிருக்கப்போகிறது. இதற்கு ஓர் மார்க்கம் தாங்கள் தேடவேண்டும்," என்று கேட்டார்.

இவ்வார்த்தையைக் கேட்ட வசிஷ்டர், "ஓ அரசனே! முன் நடந்த ஓர் தேவரகசியத்தைக் கேளும், இந்த இரகசியத்தை மிக்க பிரயத்தனத்துடன் காக்கவேண்டும்.

அதாவது இராமன் இப்போது உமக்குப் புத்திரனுயிருந்த போதிலும் அவன் மானிடனல்ல, ஸனுதனராகிய பரமாத்மா இராமனுக அவதாரம் செய்திருக்கிறுர். பிரமதேவர் முன் பூமிபாரத்தை நீக்குவதற்காக மகா விஷ்ணுவைப் பிரார்த்தித்தார். அதற்கு இணங்கி அந்த பகவான் உம்முடைய கிருகத்தில் கௌசலையிடம் புத்திரனுக வந்தவதரித்திருக்கிறுர். மேலும், நீர் முன் ஜன்மத்தில் பிரமதேவர் புத்திரராகிய காசிபப்பிரஜாபதியாக இருந்தவர். இந்தக் கௌசலையோ முன்ஜன்மத்தில் யசஸுை பொருந்திய தேவர்களுக்குத் தாயாகிய அதிதி தேவியாக இருந்தவள். அந்த ஜன்மத்தில் நீங்களிருவரும், துச்சமான விஷயப்பற்றுத லற்றவர்களாய் மகாவிஷ்ணுவை நோக்கி ஏகாக்கிரச் சிந்தையர்களாகி வெகு காலம் வரை கடுமையான தவம் செய்தீர்கள். அப்பொழுது பக்தவற்சலரும், விரும்பின வரத்தைக் கொடுப்பவருமாகிய பகவான் பிரஸன்னராக வந்து உமது கோரிக்கை யென்னவென்று கேட்டார். அப்போது நீர் ஓ தாமோதர! நீங்கள் எங்களுக்குப் புத்திரனுக வரவேண்டுமென்று வேண்டினீர். ஸர்வ லோகத்தையும் தமது குக்ஷியிலடக்கி அவைகளைப் பரிபாலிக்கும் பகவான் அவ்விதமே யாகட்டுமென்று வரங்கொடுத்து அவ்வரத்தை நிறைவேற்ற இப்போது உம்மிடம் புத்திரனுகப் பிறந்திருக்கிறுர். அந்த பகவான் தான் இராமன். ஆதிசேஷன் இலக்ஷ்மணனுக வந்திருக்கிறுர். அந்த இலக்ஷ்மணன் இராமனையே அநுசரித்திருக்கிறுன். கதாயுதத்தை தரித்த [illegible]னுடைய சங்கு சக்கரங்களிரண்டும், பரத, சத்துருக்கர்க

ளாக அவதாரம் செய்திருக்கின்றன. யோகமாயையானது ஜனக மகாராஜனின் குமாரியாகிய ஸீதா தேவியாக அவதாரம் செய்திருக்கிறது. விஸ்வாமித்திர முனிவரும் அந்த ஜானகியை இராமனிடம் சேர்க்க வந்திருக்கிறார். ஓ அரசனே! இவ்விஷயம் மிகவும் இரகசியம், எப்போதும் யாவரிடமும் சொல்லக்கூடாது. ஆகையால் பிரீதியுள்ள மனதுடன் கௌசிக முனிவரைப் பூஜித்து, இலக்ஷ்மி நாதனாகிய இராமனை இளைஞனாகிய இலக்ஷ்மணனுடன் அனுப்பும்," என்றார்.

இவ்வாறு வசிஷ்ட முனிவர் சொன்னவுடன் தசரத மகாராஜன் ஐயம் நீங்கிச் சந்தோஷமடைந்து தன்னைக் கிருதகிருத்தியனாக நினைத்து, ஓ இராம இராம இலக்ஷ்மண என்று அவர்களை ஆதரவோடழைத்து ஆலிங்கனம் செய்து, உச்சிமோந்து கையைப்பிடித்து விஸ்வாமித்திரமுனிவரிடம் கொடுத்தார்

பிரதாபம் நிறைந்தவரும் மகிமை பொருந்தியவருமாகிய கௌசிக முனிவர் மிகுதியான சந்தோஷத்துடன் அரசனை ஆசீர்வதித்துச் சந்தோஷப்படுத்தி, வில், அம்புறுத்தூணி, பாணம், உடைவாள் இவைகளைத் தரித்த இராமர், இலக்ஷ்மணர் இவர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

கௌசிகர் கொஞ்சதூரம் சென்றவுடன் இராமனை அழைத்து, தேவர்களைப் பிரதிபாதிக்கும் பலை அதிபலை, என்ற இரண்டு மந்திரங்களையும் உபதேசம் செய்தார். அந்த மந்திர உபதேச பலத்தால். பசி, சிரமம் முதலிய தாபங்கள் அவர்களுக்கு உண்டாகிறதில்லை.

அந்த பலத்தை யடைந்து கௌசிகன், இராமன், இலக்ஷ்மணன் மூவரும் கங்காநதியைத்தாண்டி, தாடகையின் வனம் வந்தார்கள்.

அப்போது விஸ்வாமித்திரர் சத்தியமான சௌரியமுடைய இராமனைப் பார்த்து, "ஓ இராம! இங்கு தாடகை என்ற ஓர் இராக்ஷஸியிருக்கிறாள். அவள் தன்னிஷ்டப்படியான ரூபங்களை யெடுக்கக் கூடியவள். உலகம் யாவற்றையும் உபத்திரம் செய்கிறவள். அவளை விசாரிக்காமலே வதம் செய்ய வேண்டும்" என்றார்.

இரகுநந்தனன் அவ்விதமே செய்கிறேன் என்று கூறி, தன் வில்லை யெடுத்து நாணேற்றி டம் என்ற ஓங்காரம் செய்தார். அந்த ஓங்காரமானது அந்த வனம் முழுதும் பரவியது. அதைச் செவியுற்ற

தாடகை மனம் பொறுக்காமல் பயங்கரமான ரூபத்துடன் கோபா வேசமாகி, சூரியனைப் பற்றும் இராகுபோல் இராமனிடம் எதிர்த் தோடி வந்தாள்.

தசரத குமாரனாகிய இராமர் தன்னை யெதிர்த்து வந்த அத்தாடகையின் மார்பில் விரைவாக ஓர் பாணப்பிரயோகம் பண்ணினார். அப் பாணம் அத்தாடகையின் மார்பைப் பிளக்க, மார்பிலிருந்து வரும் உதிரமானது அவ்வனம் எங்கும் நதியாய் ஓட அத்தாடகை கோர மான ரூபத்துடன் பூமியில் விழுந்தாள்.

பிறகு அத்தாடகை தான் செய்திருந்த தபோபலத்தால் வெகு ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட சுந்தரியான ஓர் யக்ஷஸ்திரீ யானாள். இவள் சாபத்தால் பிசாசத் தன்மையடைந்தவள். இராமா நுக்கிரகத்தால் இப்போது அச்சாபத்தினின்று விடுபட்டவளானாள்.

யக்ஷஸ்திரீயாகிய இவள் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பிரதக்ஷணம் செய்து நமஸ்கரித்து அவருடைய அனுஞ்ஞை பெற்று சுவர்க்க லோகம் சென்றாள்.

இதைப் பார்த்த கௌசிக முனிவர் மிகவும் சந்தோஷமடைந்து, இராமனை ஆலிங்கனம் செய்து, உச்சிமோந்து, சற்று ஆலோசித்து, தன்னிடத்துள்ள இரகசிய மந்திரங்களுடன் கூடிய அஸ்திரங்கள் யாவற்றையும் பிரீதியுடனும், சந்தோஷத்துடனும், இராமனுக்கு மந்திர வுபதேசத்துடனீந்தார்.



## ஐந்தாவது சருக்கம்.

விஸ்வாமித்திரர், இராமர், இலக்ஷ்மணர் இம்மூவரும், முனிவர்கள் நிறைந்ததும், இரம்மிய மடைந்ததும், காமாச்சிரமமென்னும் நாமம் பூண்டதுமாகிய அரணியத்தில் ஓர் இரவு வாசம் செய்து, காலையில் எழுந்து புறப்பட்டு, சித்தாச்சிரமம் வந்து சேர்ந்தார்கள்.

அந்த ஆச்சிரமத்தில் வாசஞ்செய்யும் ரிஷிகள் விஸ்வாமித்திரருடைய ஆஞ்ஞைப்படி யாவரும் ஒருங்கு கூடி விரைவாக வந்து, இராம இலக்ஷ்மணர்களுக்கு விதிப்படிப் பூஜை செய்தார்கள். அவ் விடத்தில் ரிஷீஸ்வரர்கள் புடை சூழ வீற்றிருக்கும் சமயத்தில் ஸ்ரீ ராமன் விஸ்வாமித்திர ரிஷியைப் பார்த்து "ஓ முனிவரே! தாங்கள்

யாகதீக்ஷையை அடையலாம். அதர்மர்களாகிய அந்த இராக்ஷசர்க ளெங்கே யிருக்கிறார்கள், காண்பியுங்கள். அவர்கள் இப்போது எதிர்ப்படமுடியாதவர்களா யிருந்தால் நீங்கள் யாகத்தைச் செய்ய ஆரம்பியுங்கள். அக்காலம் அவர்கள் வரின் அவ்விடையூற்றுக் கிடையூறாய் நாங்கள் இருக்கிறோம்" என்றார்.

கௌசிகர் அவ்விதமே அவ்விதமே என்று, முனிவர்களுடன் யாகம் செய்ய யத்தனித்தார்.

அப்போது இஷ்டப்படி யுருவம் எடுக்கக் கூடியவர்களும், இரத்தம், எலும்பு இவைகளை யாகமத்தியில் வருஷிக்கிறவர்களுமாகிய, சுபாகு, மாரீசன் என்ற இரண்டு அரக்கர்களும் மத்தியானத்தில் காணப்பட்டார்கள்.

அவர்களைக்கண்ட ஸ்ரீராமரும் வில்லை வளைத்து இரண்டு திவ்விய அஸ்திரங்களைத் தொடுத்து, மந்திர உச்சாடனம் செய்து அவ்விரு அரக்கர்களுக்கும் தனித்தனியாக இலக்ஷியம் வைத்து, காது வரையினு மிழுத்துப் பிரயோகம் செய்தார்.

அவ்விரு பாணங்களில் ஒரு பாணமாகிய வாயுவாஸ்திரம் மாரீசனை யெடுத்துச் சுழற்றி சமுத்திரத்தில் நூறு யோஜனை தூரத்துக்கப்பால் விழும்படிச் செய்தது. மற்றொரு பாணமாகிய அக்கினியாஸ்திரம், சுபாகுவைக்கொளுத்தி நிர்மூலமாக்கிற்று.

அவ்விரு அரக்கர்களை யநுசரித்துவந்த யாவற்று இராக்ஷசர்களையும் இலக்ஷ்மணருடைய பாணங்கள் யமபுரத்துக் கனுப்பின.

தேவர்கள் இராமர் இலக்ஷ்மணர்கள் மீது புஷ்பமாரி பொழிந்தனர்கள். சித்தர்களும், சாரணர்களும் ஸ்தோத்திரம் செய்தார்கள். தேவதுந்துபி வாத்தியங்கள் முழங்கிற்று.

விஸ்வாமித்திர முனிவரும் பூஜை பெற்றுக்கொள்வதற்குரிய இரகுநந்தனரைப் பூஜித்து, பக்தியுடன் ஆலிங்கனம் செய்து மடியில் வைத்து ஆனந்த பாஷ்பந் ததும்பும் கண்களுடன் இலக்ஷ்மணரையும் அருகழைத்து அவ்விருவருக்கும் உபசாரம் சொல்லிய பின் பழம் முதலியவற்றால் போஜனம் செய்வித்தும் புராணத்திற்கூறிய இனிமையான கதைகளைச் சம்பாஷித்துக்கொண்டு மூன்றுநாள் வரையிலும் அங்கு மூவரும் வசித்தார்கள்.

ஈன்காவது நாளில் கௌசிக முனிவர் இராமனைப் பார்த்து "ஓ இராம்! விதேக வம்சத்தர்களால் ஆளப்பட்டுவரும் மிதிலைப்பட்டணத்தில், மகாத்மாவாகிய ஜனகமகாராஜன் செய்யும் யாகத்தைத் தரிசிக்க நாங்கள் போகிறோம். அந்த மிதிலையில் பினாகபாணியாகிய பரமசிவனால் கொடுக்கப்பட்ட வில் இருக்கிறது. அந்த சிவசாபம் ஜனகமகாராஜனால் பூசிக்கப்பட்டது. மிகுதியான வலுவுடையது. அந்த வில்லை நீர் பார்க்கவேண்டும்," என்றார்.

ஸ்ரீராமர் அவ்விதமே யென்று கூற, விஸ்வாமித்திரர், இராம இலக்ஷ்மணர்களுடனும், முனிவர்களுடனும், அகலியை தவம்புரியும் ஸ்தானமும், ஓர் புண்ணியஸ்தலமும், கங்கா நதிக்குச் சமீபத்திருப்பதுமாகிய கௌதம முனிவராச்சிரமம் சென்றார்.

தேவர்களுக்குரிய புஷ்பங்கள், பலன்கள், நிறைந்த மரங்களுடன் கூடியதும், துஷ்டமிருகக் கூட்டங்கள் இல்லாததும், பக்ஷிக் கூட்டங்களில்லாததுமாகிய அந்த ஆச்சிரமத்தைக் கண்ணோக்கி வரும்போது, தாமரைக் கண்ணனும், அழகு வாய்ந்தவருமாகிய ஸ்ரீராமன் விஸ்வாமித்திர முனிவரைநோக்கி, "ஓ மகிமை பொருந்திய முனிவரே! இந்த ஆச்சிரமம் யாருடையது. இது நெருங்கிய விருக்ஷங்கள் வியாபித்ததாயிருக்கின்றது. இலைகள், புஷ்பங்கள், பழங்களுடன் கூடியதாக இருக்கின்றது. இதைப்பார்க்க என் மனம் ஆனந்தமடைகிறது. இதன் உண்மையைக் கூறவேண்டும்" என்று கேட்டார்

விஸ்வாமித்திர முனிவர், "ஓ-இராம! முன் நடந்த வரலாற்றைக் கேள். தருமங்களியாவற்றையும் அறிந்தவர்களுக்குள் சிறந்தவரும், உலகத்தில் பிரசித்திபெற்ற வருமாகிய கௌதம முனிவர் தவம் புரிந்து விஷ்ணுவினிடத்தில் வரப்பிரசாதம் பெற்றவர். அவர் அநுஷ்டித்த பிருமசரியம் (ஸ்திரீகளின் சங்கமமில்லாமை) என்ற விருதத்தால் சந்தோஷம் அடைந்த பிரமதேவர் அவருக்குத் தன்னிடம் சிச்ருஷைசெய்து கொண்டிருந்தவளும், உலகத்தில் சுந்தரியான பஞ்ச கன்னிகையுள் ஒருவளுமாகிய அகலியை என்ற கன்னியைக் கொடுத்தார். தவம் செய்பவர்களுக்குள் சிறந்த கௌதம முனிவர் அந்த அகலியையுடன் இங்கு வாசஞ்செய்தார்.

தேவேந்திரன் இந்த அகலியை அடைவதற்குத் தினந்தோறும் சமயம் பார்த்துக்கொண் டிருக்கும்போது ஒரு சமயம் கௌதமர்

கிருகத்தினின்று வெளியில் சென்றிருக்க, அப்போது தேவேந்திரன் கௌதமரைப்போல் வடிவங்கொண்டு அகலியைப் புணர்ந்து விரைவாக வெளிப்புறப்பட்டான். அச்சமயம் கௌதம முனிவரும் வந்தார். தன்னுருவத்துடன் எதிரில் வரும் இந்திரனைப் பார்த்து முனிவர் மிகுதியான கோபங்கொண்டு, "தோஷமுள்ள மனமுடையவனே! நீ யார்? என்னுருவத்தைத் தரித்திருக்கிறாய்? உண்மையைச் சொல், இல்லாவிடில் உன்னைச் சாம்பலாகச் செய்து விடுவேன், சந்தேகம் இல்லை," என்றார்.

இதைக்கேட்ட இந்திரன் "ஓ முனிவரே! நான் தேவராஜன், காமனுக்குக் கிங்கரன் (ஏவல்காரன்) ஆகிய என்னைக்காக்க வேண்டும். குற்சிதம் (அருவருப்பு) ஆன மனமுடைய நான் கெட்ட காரியத்தைச் செய்தேன்," என்று கூறினான்.

கௌதம முனிவர் கோபத்தால் கண்சிவந்து தேவராஜனாகிய இந்திரனைப் பார்த்து, "பெண் குறியிற் பேராசை கொண்டதனால், கெட்ட மனமுடையவனே! ஓர் பெண் குறிக்கு ஆசைப்பட்டதால், உன் சரீரத்தில் ஆயிரம் பெண்குறி யுண்டாகக்கடவது என்று சாபங் கொடுத்துவிட்டு விரைவாகத் தன்னாச்சிரமம் சென்றார்.

ஆச்சிரமத்தில் நடுக்கத்துடன் அஞ்சலி செய்துகொண்டு நிற்கும் அகலியைப் பார்த்து, கௌதமர், "ஓ துஷ்டே! கெட்ட செய்கையுடையவளே! நீ என்னாச்சிரமத்தில் கல்லாகச் சமையக் கடவது," என்று சாபமிட்டார். அகலியை கௌதமர் திருவடியில் வணங்கி, ஸ்வாமி அடியேனுக்குச் சாபவிமோசனம் செய்தருள வேண்டுமென்று வணங்க, காருண்யம் பொருந்திய கௌதமர் அவளை நோக்கி "நீ ஆகாரம் இல்லாமல் இரவும் பகலும், மிகுதியான தவம் புரிந்து, வெய்யில், காற்று, மழை இவைகளைப் பொறுத்து, இருதயத்திலிருக்கும் பரமேச்வரனாகிய இராமனை மனதில் தியானம்செய்து கொண்டிரு. என்னுடைய இந்த ஆச்சிரமம் பலவகையான பிராணிகளில்லாமலிருக்கட்டும். இப்படி அநேகமாயிரம் வருஷங்கள் சென்ற பின்பு, மேன்மை பொருந்திய தசரதகுமாரராகிய இராமர், தம்பி இலக்ஷ்மணனுடன் இங்கு வரப்போகிறார்; அப்பொழுது அவர் கால் துகள்பட நீ கல்லுருவம் நீங்கிப் பெண்ணுருவம் பெற்று, பக்தியுடன் இராகவனைப் பூசித்து, பிரதக்ஷண நமஸ்காரங்களைச் செய்து ஸ்தோத்திரம் பண்ணி சாபத்தினின்று விடுபடப்போகிறாய்; பிறகு முன் போல் எனக்கு

சுகங்குறையாமல் சிச்ருஷை செய்யப் போகிறாய்" என்றுரைத்து பரு வதங்களுக்குள் சிரேஷ்டமான இமயமலைக்குச் சென்றார்.

அது முதல் அகலியை சுகமான இந்த ஆச்சிரமத்தில் கல்லுரு வாகி வசித்து உம்முடைய சரண துகளின் ஸ்பரிசத்தை எதிர்பார்த் துக் கொண்டு உலகத்திலுள்ள மற்றவர்களால் செய்யக் கூடாத தவத்தைச் செய்து கொண்டிருக்கிறாள்.

பிறகு ஓ-இரகு சிரேஷ்டனே! பிரமதேவருக்குக் குமாரியும், கௌதமருக்குப் பத்தினியுமாகிய அகலியையைப் பரிசுத்தையாகச் செய்யவேண்டும்" என்று முனிசிரேஷ்டராகிய கௌசிகன் உரைத்து ஸ்ரீராகவனைக் கையைப்பிடித் தழைத்துக்கொண்டுபோய், கல்லுரு வாய்க் கடுந்தவம் செய்துகொண்டிருக்கும் அகலியைக் காண்பிவித் தார்.

ஸ்ரீராமச்சந்திரப் பிரபு கற்சிலை யருகிற் சென்று அவர் கால் துகள் அச்சிலையின் மீது படவே அகலியை, கற்சிலை யுருவம் நீங்கி, தன்சொரூபமடைந்து வெளிப்பட்டாள். அவளிடம் நான் இராமன் என்று தெரிவித்தார் இரகு குலசிரேஷ்டர்.

அகலியை இரகு குலசிரேஷ்டரும், மஞ்சள பட்டாடை யுடுத்த வரும், வில், அம்பறாத் தூணி இவைகளைத் தரித்தவரும், இலக்ஷ்மண ருடன் கூடினவரும், புன்னகைகொண்ட முகமுடையவரும், பத்மம் போன்ற நேத்திரமுடையவரும், ஸ்ரீவற்சம் என்ற மருவுடையாள முள்ள மார்புடையவரும், இந்திரநீல இரத்தினத்துக்குச் சமான மானவரும், பத்துத் திசைகளையும் பிரகாசப்படுத்துகிறவரும் ஆகிய இராமரைப் பார்த்து, கௌதம முனிவரின் கட்டளையை நினைத்து, ஸ்ரீராமரைப் பரம்பொருளாகிய நாராயணனென் றறிந்து, சுறுசுறுப் புடன் அர்க்கியம் முதலியவற்றால் விதிப்படிப் பூசித்து, ஆனந்த பாஷ் பம் நிறைந்த கண்ணுடன் தண்டம்போல் கீழே விழுந்து நமஸ்காரம் செய்தெழுந்து, சரீரம் யாவற்றும் மயிர்க்கூச்சலிட்டு, இருகையும் கூப்பிக்கொண்டு நின்று,

"ஓ உலகங்களுக்கு வாசஸ்தானமாகிய பிரபுவே! தங்களுடைய பாதாரவிந்தத்தில் பற்றிய தூளின் லேசத்தால் நான் கிருதார்த்தை யானேன்.

ஓ இராம! உம்முடைய செய்கை விசித்திரமானது. உம்மை மானிடன் என உலகம் மோகம் அடைந்தது ஆச்சரியம். எப் போதும் சலனம் முதலியவை யில்லாதவரும், சம்பூரணரும், ஆனந் மயரும், மாயையை அதிக்கிரமித்த வருமாகிய நீர் சலனமடைகிறீர்.

உலகத்தை யெல்லாம் பரிசுத்தம் செய்யும் கங்காதேவி, எவரு டைய பாதபங்கயத்தால் பரிசுத்த முடையு சரீர முடையவளாகி பிரமன் முதலிய தேவர்களைப் பரி சுத்தி செய்கிறுளோ, அந்த ஈசனே என் கண்ணுக்குமுன் இதோ வந்திருக்கிறீர். நான் (மன் செய்த பாக்கியத்தை யெவ்விதம் வர்ணிக்க முடியும்.

எந்த பகவானுடைய பாதாரவிந்தங்கள் வேதங்களால் தேடக் கூடியதோ, எவருடைய நாபிக்கமலத்தில் உண்டானவர் பிரமதேவ ரோ, எவருடைய வலப்பாகத்தில் அமையப் பெற்றவர் பரமசிவனோ அந்த மகாத்மாவே இராமனுகிய உம்மை நான் மனதில் எப்போதும் தியானம் செய்கிறேன்.

பிரமலோகத்தில் வசிக்கும் ஸரஸ்வதி, எந்த பகவானுடைய அவதார சரித்திரங்களைக் கானம் செய்கிறுளோ, அந்த பகவானுகிய ஸ்ரீராமா! உம்மை நான் சரணமாக அடைகிறேன்.

பரமாத்மாவும், புராணரும், புருஷோத்தமருமாகிய பகவான் நீர் தான். நீரே சுயம் ஜோதியும், முடிவில்லாதவரும், ஆதியி லிருப்பவருமாகியவர். நீர் பிறருக்கு அநுக்கிரகம் செய்வதற்காக உலகத்தார் மோகிக்கக் கூடிய மாயா மானிட வடிவத்தைத் தரித்து வந்திருக்கிறீர்

சுவதந்திரனும், பரிபூரணனும், ஆத்மாவும் ஆகிய பகவான் நீர் ஒருவரே. நீர் மாயையின் குணங்களாகிய சத்வம், இராஜஸ், தமஸ் இம்மூன்று குணங்களையும் தனித்தனி யடையும் போது, பிர பஞ்சத்தையுண்டு பண்ணுவதற்கும், பரிபாலனத்திற்கும், சம்ஹாரத் திற்கும், பிரமன், விஷ்ணு, அரன் என்ற நாம தேயங்களைத் தரிக்

ஓ இராம! உம்முடைய பாதகமலம் முந்தி இலக்ஷ்மி தேவியால் மார்பிலிட்டுக் கொண்டாடப் பட்டது. மூவுலகும் இதனுல் ஆக்கிர மிக்கப்பட்டது. காமாதி அபிமானமில்லாத முனிசிரேஷ்டர்கள் தியானம் செய்யத் தகுதியானது. இத்தகைய பாதகமலமுடைய உமக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

ஜகங்களுக்கு நீர் ஆதியாக இருப்பவர். நீர் தான் பிரபஞ்சமே. பிரபஞ்சம் நீரே. உலகங்களுக்கு ஆசிரயமாக இருப்பவரும் நீர் தான். பூதங்களெல்லா வற்றிலும் பற்றுதல் இல்லாமல் பரம புருஷனாக நீர் ஒருவரே விளங்குகிறீர்.

ஓ இராம! ஓங்கார சப்தார்த்தம் நீர் தான். வேதங்களுக்கும் விஷயமாகாத புருஷனும் நீர் தான். வாச்சியம் (சொல்லத்தக்கது) வாசகம் (சொல்லுவது) என்ற பேதத்தால் நீர் உலகரூபராக விளங்குகிறீர்.

ஓ இராம! ஒருவராகிய நீர், மாயையால் பல விதமான ரூபங்களுடைய காரியம், காரணம், கர்த்தா, பலன், சாதனம் என்ற பேதங்களுடன் தோன்றுகிறீர்.

உம்முடைய மாயையால் மோகமடைந்த புத்தியுடையவர்கள் உண்மையில் உம்மை இன்னதென்று தெரிந்து கொள்ளவில்லை. மாயையைச் சுவாதீனப்படுத்திய உம்மை மானிடன் என நினைக்கிறார்கள்.

நீர் ஆகாயம்போல் உள்ளிலும் வெளியிலும் எங்கும் இருப்பவர், நிர்மலர், பற்றுதலற்றவர், சலனமில்லாதவர், அனந்தர் (முடிவில்லாதவர்) சுத்தர், புத்தர், (திருமாலவதாரம் பதினொன்றில் ஒன்று) சமமானவர், இரண்டில்லாதவர்.

நான் ஸ்திரீயாகியவள், மூடத்தனமுள்ளவள், ஞானமில்லாதவள். பிரபுவே! உம்மை யெவ்விதம் அறிவேன். என்னால் தெரிந்து கொள்ளமுடியாது. ஆகையால் ஓ! இராம மற்றவைகளில் புத்தியைச் செலுத்தாமல் உமக்கே பலதடவை நமஸ்காரம் செய்கிறேன்.

ஓ தேவ! நான் எந்த விடத்திலிருந்தாலும், எப்போதும் எனக்கு உமது சரணாரவிந்தத்தைச சார்ந்த பக்தியே ஏற்படட்டும்.

ஓ புருஷ சிரேஷ்ட! உமக்கு நமஸ்காரம், ஏ பக்தவற்சல! உமக்கு நமஸ்காரம், ஏ இருஷிகேச! உமக்கு நமஸ்காரம், ஓ நாராயண! உமக்கு நமஸ்காரம்.

சம்ஸார பயத்தைப் போக்குகிறவரும், முக்கியரும், கோடி சூரியனுக்குச் சமமானவரும், கையில் பிடித்த வில்லையும், பாணங்களையும் உடையவரும், காளமேகம் போல் பிரகாசிப்பவரும், சுவர்ணம்போல் மனோஞ்ஞமான வஸ்திரமுடையவரும், இரத்தினங்க

ளமைந்த குண்டலங்கள் அணிந்தவரும், செந்தாமரை போன்ற நேத்திரங்களுடையவரும், தம்பி இலக்ஷ்மணருடன் கூடியவருமாகிய ஸ்ரீராமனை நான் ஸ்தோத்திரம் செய்கிறேன்.

இவ்விதமாக அகலிகை ஸ்தோத்திரம் செய்து பிரத்தியக்ஷமாக வந்த புருஷோத்தமனும், தனக்கு முன்னால் நிற்பவனுமாகிய இராகவனைப் பிரதக்ஷணம் செய்து, நமஸ்கரித்து இராகவனிடம் உத்தரவு பெற்று, தன் பதியாகிய கௌதம முனிவரிருப்பிடம் சென்றாள்.

அகலிகை செய்த ஸ்தோத்திரத்தைப் பக்தியுடன் படிப்பவன் பாவங்கள் எல்லாவற்றிலுமிருந்து விடுபடுகிறான். பரப்பிரம சொரூபத்தையும் அடைகிறான். புத்திரர் முதலியவைகளை அபேக்ஷிப்பவன், இராமனை மனதில் தியானம் செய்து இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்தால், ஓர் வருஷத்துக்குள் மனைவி மலடியாயினும், அவளிடமிருந்து புத்திரனையடைகிறான். ஸ்ரீராமச் சந்திரன் அநுக்கிரகத்தால் மனோபீஷ்டம் யாவற்றையும் அடைகிறான்.

மானிடன் பிரமஹத்தி செய்தவனாயினும், குருவின் மனைவியிடம் சங்கமம் செய்தவனாயினும், சுவர்ணம் திருடினவனாயினும், மதுபானம் செய்தவனாயினும், தாய், தந்தை, பிராதாக்கள், இவர்களை இம்சிப்பவனாயினும், எப்போதும், சுகம் அநுபவிப்பதிலேயே கருத்துள்ளவனாயினும், இரகுபதியை மனதில் ஸ்மரித்துத் தினந்தோறும் பக்தியுடன் இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்தால் அவன் மோக்ஷம் அடைகிறான்.

நல்ல குலத்துதித்தவனும், நன்னடத்தை யுடையவனும், நல்ல ஆசாரமுடையவனும், நற்குணமுடையவனும், மாதுர் பிதுர் வாக்கிய பரிபாலகனும், மோக்ஷத்தில் சதா இச்சையுள்ளவனுமாகிய மானிடன் பாராயணம் செய்வானாகில் மோக்ஷமடைவதற்குக் கேட்கவும் வேண்டுமோ ?

# ஆறாவது சருக்கம்.

---

பிறகு விஸ்வாமித்திர முனிவர் இலக்ஷ்மணனுடன் கூடிய இரா மனைப்பார்த்து, "ஓ குழந்தாய்! ஜனகமகாராஜனால் பரிபாலிக்கப்படு கிற மிதிலை நகரம் செல்லுவோம். அங்கு நடக்கும் சிரேஷ்டமான யாகத்தைத்பார்த்த பிறகு அயோத்திக்குச் செல்லலாம் என்றுரை த்து அவ்விருவர்களையும் அழைத்துக்கொண்டு கங்காநதியைத் தா ண்டி விதேக தேசத்தரசன் நகரமாகிய மிதிலைக் கருகாமையிலுள்ள ரிஷிகளின் பரணசாலையில் பிரவேசித்தார்.

ஜனக மகாராஜன் கௌசிகமுனிவர் வரவைக் கேட்டு மிகுதி யான சந்தோஷத்தோடு, பூஜிக்கத்தக்க வஸ்துக்களை யெடுத்துக் கொண்டு உபாத்தியாயருடன் வந்து முனிவரைக் கண்டு தண்டம் போல் பூமியில் விழுந்து நமஸ்காரம் செய்து விதிப்படி பூஜித்து உப சரித்தார்.

பிறகு ஜனக மகாராஜன் விஸ்வாமித்திர முனிவருடன் இருக் கும், உதயமான சந்திர சூரியர்களைப் போல் திசைகள் யாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவர்களும், சர்வ இலக்ஷணமும் பொருந்தினவர் களுமாகிய இராம இலக்ஷ்மணர்களைப் பார்த்து ஆச்சரிய மடைந்து, முனிவரைப் பார்த்து, "ஓ முனிசிரேஷ்டரே! மானிடர்களுக்குள் சிரேஷ்டரான இவ்விரு குமாரரும் யாருடைய புத்திரர்கள்? தேவ குமாரர்களைப்போன்று இருக்கிறார்கள். எனக்கு மிகப்பிரீதியை யுண்டு பண்ணுகிறார்கள். பார்வைக்கு நர நாராயணரைப் போலத் தோன்றுகிறார்கள்; இவர்களின் வரலாற்றை யெனக்குத் தெரிவிக்க வேண்டும்," என்று கேட்டார்.

இதைக் கேட்ட கௌசிக முனிவர் ஆனந்த மடைந்து, ஜனக மகாராஜனைப்பார்த்து, "ஓ மகாராஜனே! இவ்விரு குழந்தைகளும், தசரதமகாராஜரின் குமாரர்கள்; சகோதரர்கள். இவர்களில் மூத்த வர் பெயர் இராமர். இளையவர் பெயர் இலக்ஷ்மணர்.

இவர்களின் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தியின் அநுமதி யின் பேரில் அயோத்தியி லிருந்து, யான் செய்த யாகத்தின் பாது

காப்புக்காக இவ்விரு குமாரர்களையும் அழைத்து வந்தேன். வரும் போது சொல்லற்கரிய பராக்கிரமமுள்ள இந்த இராகவன் என் அபிப் பிராயப்படி, உலகத்தில் மன்னுயிர்யாவற்றையும் இம்சிக்கும் கொடிய செய்கையுடையவளும், மகா பராக்கிரமசாலியுமாகிய தாடகை என்னும் இராக்ஷசியை க்ஷணப் பொழுதில் ஒரே பாணத்தால் உயிர் மாளச் செய்தார். அது அவருக்கு ஒரு விளையாட்டாகவும் எனக்கு மிகப் பார காரியமாகவு மிருந்தது. பிறகு என தாச் சிரமம் வந்து சேர்ந்தார். அங்கு என்னால் செய்யப்பட்ட யாகத்து க்கு விக்கினம் செய்யவந்த மகா பலசாலியாகிய சுபாகு என்னும் இராக்ஷசனை ஒருகணையால் எம லோகத்துக்கு ஏற்றினார். மற் றொரு கணையால் அவனுக்குப் பின்னுதவியாக வந்த மாரீசனைக் கடலில் வீழ்த்தினார். அப்போது தேவர்கள் வாழ்த்தினார்கள். மற்ற இராக்ஷசர்க ளனைவரையும் இவர் தம்பி இலக்ஷ்மணர் வதம் செய்து தொலைத்தார். இவர்களுடைய உதவியினால் என் யாகம் நிறை வேறியது. பிறகு தம்பியுடன் புண்ணிய தீர்த்தமான கங்கைக் கரை வந்தார். அக்கங்கைக்கரையி னருகிலுள்ள கௌதமாச்சிரமத் தில் வெகு நாளாய்க் கல்லுருவாயிருந்த, மங்கை கௌதம பத்தினி யாகிய அகலியை, இந்த மகானுபாவனாகிய இராமன் தன்னுடைய பாதாரவிந்தத்தின் தூசி மகத்துவத்தால் தன்னுடைய சாபத்தில் நின்று விடுபட்டுக் கல்லுருவை விட்டுத் தன்னுருவைப் பெற்று, ஆன ந்தமுற்று தன்னைப்பூஜித்து விடைபெற்றுத் தன் புருஷனிடம் செல்ல விடுத்தார். இப்போது உம்முடைய கிரகத்திலிருக்கும் பரமசிவன் வில்லை மற்ற தேசத்தரசர்கள் யாவரும் வந்து பார்த்து அசைக்கமுடி யாது பூஜித்துப்போயின ரென்று கேள்விப்பட்டு, அப்போர்க்கோதண்ட வில்லைப்பார்க்க மிக்க விருப்பத்துடன் இவ்விடம் வந்திருக்கிறார்.

ஆகையால் ஓ! இராஜ சிரேஷ்டனே! மிகச் சிறந்த அந்தப் பரம சிவன் பினாகத்தை இந்த இராமருக்குக் கொண்டுவந்து காண்பிக்க வேண்டும். அந்தத் தனுசைப் பார்த்துவிட்டுப் பிறகு தன் தந்தை யாகிய தசரத மகாராஜனைப் பார்க்க அயோத்திக்குப் போகக் கருது கிறார்” என்று கூறினார்.

இவ்விதம் விஸ்வாமித்திர முனிவ ருரைத்தவுடன், மிகுதியான மகௌரவத்துடன் பூஜிக்கத்தகுதியான அவ்விருவரையும், சர்வதரு மங்களையும் அறிந்த ஜனகமகாராஜன் விதிப்படி பூஜித்தார்.

பிறகு மிதிலை மன்னன் தன்னுடைய அறிவிற்சிறந்த மந்திரியை அழைத்து ஸாக்ஷாத் பரமசிவன் கார்முகத்தை விரைவில் கொண்டு வந்து மேகவண்ணனாகிய இராமருக்குக் காட்டும் என்று உத்தரவளித்தார். அதைக் கேட்ட சிரேஷ்ட மந்திரி அவ்விதமே என்று கூறிச் சென்றார்.

அச்சமயம் ஜனக மகாராஜன், கௌசிக முனிவரைப்பார்த்து "ஓ முனிவரரே! இவ்விராஜ குமாரனாகிய இராமன், அவ்வில்லைக் கையில் எடுத்து வளைத்து நாணேற்றுவானாகில், என்னருமைப் புதல்வியாகிய ஜானகியை இந்த இராகவனுக்குக் கொடுக்க விரும்புகிறேன்" என்றான்.

அந்த மங்களகரமான சொல்லைக் கேட்ட விஸ்வாமித்திர முனிவரும், புன்னகையுடனிருந்தும் ஸ்ரீராமனைக் கடைக் கண்ணாற் பார்த்துவிட்டு, "ஓ மகாராஜனே! உம்முடைய சிறந்த அறிவிற்குத் தகுந்த வார்த்தை கூறினீர். அது சரியே, வில்லை யெடுக்கச் சென்ற அமைச்சர் தனுசைக் கொண்டு வரட்டும்" என்றார்.

மௌனநியமம் (பஞ்சேந்திரியங்களையு மடக்கி மனதை யிலட்சியத்தினிறுத்தி வாளா விருத்தல்) உடைய பெரியோர்களுக்குட் சிறந்தவராகிய கௌசிக முனிவர் இவ்வித முரைக்க, அச்சமயம் ஐயாயிரம் பலசாலிகள் ஒருங்கு கூடி அந்த வில்லைக் கொண்டுவந்து சேர்த்தார்கள்.

சாம, பேத, தண்ட, உபாயம், என்னும் சதுர்வித தந்திரங்களும் கற்ற மந்திராலோசனைத் தலைவர்களுக்குள் சிரேஷ்டனாகிய மந்திரி, வீரமணிகள் கட்டியதும், இரத்னங்கள், வஸ்திரங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய வில்லை ஸ்ரீஇராமருக்குக் காண்பித்தார்.

இராமன் வில்லைப்பார்த்து மனதில் சந்தோஷமடைந்து, தரித்திருந்த வுடையை யிறுகும்படிக் கெட்டியாக அணிந்து வில்லினிடம் சென்று விளையாட்டாக இடது கையால் கோதண்டத்தை பசைத்தார். தேவர்களும், அரசர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே அந்த வில்லைக் கையில் எடுத்து வளைத்து நாணேற்றும் போது, பரமசிவத்தின் "பினாகம்" என்ற அந்த வில் இரண்டு துண்டாய் முறிந்தது, அந்தச் சப்தம் எட்டுத்திசைகளும் நிறைந்தது,

சுவர்க்கம் நிறைந்தது, பாதாளம் நிறைந்தது, பூமியெங்கும் நிறைந்தது, பார்த்துக்கொண் டிருந்த தேவர்களும், பூமியிலுள்ள அரசர்களும், மனிதர்களும் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்தார்கள்; ஸ்தோத்திரம் செய்தார்கள். தேவதுந்துபி வாத்தியம் முழங்கிற்று. அப்சர ஸ்திரீகள் நிருத்தனம் செய்தார்கள்.

ஜனகமகாராஜன் பரமசிவத்தினாற் கொடுக்கப்பட்ட வில் இரண்டு துண்டாக முறிந்ததைப் பார்த்து இரகுநந்தனனை யணைத்து ஜனக்கூட்டத்தில் ஆச்சரியமடைந்தார். அந்தப்புரத்தில் ஸீதையின் தாய் முதலியவர்கள் அதிசயமடைந்தார்கள்.

ஸீதை சுவர்ணமாலையை வலதுகையில் எடுத்துக்கொண்டு புன்னகையோடு கூடிய முகத்துடனும், சுவர்ணம் போன்ற வர்ணமுடைய திருமேனியுடனும், சர்வாபரணங்களாலும் அலங்காரம் செய்து கொண்டும், பொற்சரிகை வேய்ந்த வஸ்திரங்களுடனும், கணகண என்று ஒலிக்கும் தண்டைகளுடனும், வெண்பட்டாடை போர்த்திக் கொண்டும், மேகலைக்குள அடையாளமாகவுடைய ஸ்தனங்களுடனும், வந்து சந்தோஷத்துடன் இராமன் மீது தன் கையிலெடுத்து வந்த சுவர்ணமாலையைப் போட்டுச் சென்றாள்.

இராஜ ஸ்திரீகள் உப்பரிகையின் மேலுள்ள சாளரங் (ஜன்னல்) களின் வழியாய் நன்று அலங்காரம் செய்து கொண்டவரும், உலகங்களை யெல்லாம் மோகிக்கச் செய்யும் சௌந்தரிய முடையவருமாகிய ஸ்ரீ ராமனைப் பார்த்து சந்தோஷமடைந்தார்கள்.

பிறகு ஜனகராஜன் விஸ்வாமித்திர முனிவரை நோக்கி, "முனிவரே! தசரதமகாராஜரின் குமாரர்களுக்கு மிதிலையில் நடக்கப்போகிற கலியாண மகோற்சவத்துக்காகத் தசரத மகாராஜர் மனைவிகளுடனும், மற்றுமுள்ள மைந்தர்களுடனும் மந்திரிகளுடனும் வரும்படி அயோத்திக்கு இப்போதே பத்திரிகை யனுப்ப வேண்டும்" என்றார்.

விஸ்வாமித்திரர் அவ்விதமே யென்று வேகமாகச் செல்லும் தூதர்களை அயோத்திக் கனுப்பினார். அந்தத் தூதர்கள் இராஜ சிரேஷ்டரான தசரதரிடம் சென்று இராமருடைய பராக்கிரமத்தையும் அதன் பேரிலேற்பட்ட சுபகாரியத்தையுந் தெரிவித்தார்கள்.

அரசன் இராமன் செய்த வீரச் செயல்களைச் செவியுற்று மிகுதியான சந்தோஷத்துடன் மந்திரிகளை அழைத்து மிதிலையிலிருந்து வந்த கலியாண சுப சந்தோஷத்தைக் கூறி விரைவாக அதற்காக வேண்டிய காரியத்தைச் செய்யும்படி ஆக்ஞாபித்தார்.

இரதம் கஜம் துரகம் பதாதிகளும் மற்றுமுள்ளவரும் மிதிலைக்குச் செல்லவேண்டும். நான் புறப்பட இரதம் கொண்டு வரவேண்டும். நமது குருவாகிய வசிஷ்டர் அவர் மனைவியுடனும் மூன்று அக்கினியுடனும் முந்திப் பிரயாணமாக வேண்டும். என்னுசிரியரும் மகிமை தங்கியவருமாகிய அந்த வசிஷ்டமுனிவரே இராமனுடைய தாயாரையும் சுமித்திரை, கைகேசியையும், பரத சத்துருக்கர்களையும் அழைத்துக் கொண்டு செல்லட்டும்; இவ்வாறு எல்லோரையும் பயணப் படுத்தி யனுப்பிவிட்டுத் தசரதமகாராஜனும் இரதத்தின் மீதேறிக் கொண்டு பரிவாரங்களுடன் மிதிலைக்குச் சென்றார்.

ஜனகமகாராஜன் தசரத மகாராஜர் வரவைக்கேட்டு சந்தோஷ முடையவராகி சதாநந்தர் என்ற உபாத்தியாயருடன் எதிர்கொண்டு வந்து எல்லோராலும் விதிப்படி பூஜிக்கத் தகுதியான தசரதரை விதிப்படிப் பூஜித்துபசரித்தார்.

ஸ்ரீராமன் இலக்ஷ்மணனுடன் வந்து தந்தையின் பாதங்களில் நமஸ்காரம் செய்தார். தசரதர், மிகுதியான சந்தோஷமடைந்து ஸ்ரீராமனைப் பார்த்து, "ஓ இராம! சந்தோஷம், மலர்ந்த செந்தாமரை மலர்போன்ற உன்முகத்தைப் பார்த்து ஆனந்திக்கிறேன். விஸ்வாமித்திர முனிவரின் அநுக்கிரகத்தால் எனக்கு யாவும் மங்களமாகவே முடிவுபெற்றது" என்றுரைத்து,இராமனை அருகிலழைத்து அணைத்து அடிக்கடி யுச்சிமோந்து மிகுதியான சந்தோஷத்துடன் பிரமானந்த மடைந்தார்.

ஜனகமகாராஜன் தசரதச் சக்கரவர்த்தியைச் சுகம் அமைந்துள்ள சோபனமான கிருகத்தில் வசிக்கச் செய்தார். தசரதரும் தம் மனைவி புத்திரர்களுடன் குதூகலமாக அங்கு வசித்தார்.

பிறகு தருமசீலனுகிய ஜனகமகாராஜன் சுபதினத்தில் நல்ல முகூர்த்தத்தில் இரகு சிரேஷ்டனை ஸ்ரீராமனை, பிராதாக்களுடனும் தந்தை முதலியவர்களுடனும் தனது கிருகத்துக்கு வரவழைத்தார்.

இரத்தின ஸ்தம்பங்கள் நிறைந்ததும், சோபனமான மகுட தோரணங்க ளுடையதும், மிகுதியான காந்தி நிறைந்ததும், முத்துக்களால் கட்டியமாலைகள் தொங்கவிடப்பட்டதும், அழகான மேல் விரிப்புகளுடையதும், நான்கு வேதங் களறிந்தவர்களும், ஆறு சாஸ்திரந் தெரிந்தவர்களுமாகிய பிராமணர்கள் கூடியதும், சுவர்ணமயமான ஆபரணங்களணிந்து களங்கமற்ற முகமுடைய சுமங்கலிகள் சூழ்ந்ததும், பேரிவாத்தியம், துந்துபிவாத்தியம், நிருத்தனம், கீதம் இவைகள் முழங்குவனவுமாகிய கலியாண மண்டபத்தில் தேவாகமான இரத்தினங்களமைத்த சுவர்ண பீடத்தில் ஸ்ரீராமனை ஜனகமகாராஜன் வீற்றிருக்கச் செய்தார்.

பிறகு ஸ்ரீராமனுக்கு இருபக்கத்திலும் வசிஷ்டரையும் விஸ்வாமித்திரரையும் அருகில் சதானந்தரையும் இருக்கச் செய்து அந்த இடத்தில் அக்கினியை ஸ்தாபனம் செய்து விதிப்படி பூஜித்து ஜ்வாலையை யுண்டு பண்ணி, கிரமப்படி பாணிக் கிரஹண முகூர்த்த காரியங்களை, விக்னேஸ்வர பூஜாதி ஆரம்பிக்கச் செய்த பின்பு, ஜனக மகாராஜன் தன் பத்னியுடன், நவரத்னங்களிட்டிழைத்த பலவித ஆபரணங்களை யணிந்தவளும், ஜோதியே சொரூபமாக விளங்கு பவளுமாகிய ஸீதா தேவியை யழைத்துக் கொண்டு, கலியாண மண்டபத்தில் வீற்றிருக்கும் செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீராமனிடம் வந்தார்.

வசிஷ்டர், சதானந்தர் இவர்களால் வேத விதிப்படி வளர்த்திய அக்கினி முன்பாக, ஸீதா தேவியின் கையில் அக்ஷதை ஜலத்தோடு விதிப்படி குரு முனிவர் செய்யும் கலியாணச் சடங்கை அநுசரித்து, துந்துபி முதலிய மேளவாத்தியம் முழங்க, தேவர்கள் புஷ்பமாரி பொழிய ஸ்ரீராமன் கரத்தில் ஜனகமகாராஜர் தன் பத்தினியோடு இட்ட நீர் வார்த்து, கன்னிகாதானம் செய்து, "ஓ இராம! திருப் பாற் கடல் இலக்ஷ்மி தேவியை விஷ்ணுவுக்குக் கொடுத்தது போல என் புத்திரியாகிய ஸீதாதேவியை உமக்கு கொடுக்கிறேன்; நீர் பிரீதியடைய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டு ஸீதா தேவியை ஸ்ரீராமன் வலது பாகத்தில் வீற்றிருக்கச் செய்தார்.

பின்பு ஸ்ரீராமன் தனது வலது பாகத்தி லமர்ந்திருக்கும் ஸ்ரீ ஸீதா தேவிக்கு முனி சிரேஷ்டர்களால் ஆசீர்வதிக்கப்பட்ட மங்கள காமான மாங்கலிய தாரணம் செய்தார். தேவர்கள் புஷ்பமாரி

பொழிந்தார்கள். துந்துபி வாத்தியம் முழங்கிற்று, முனிவர்கள் ஆசீர்வாதம் செய்தார்கள். வேதப் பிராமணர்கள் 'ததாஸ்து' என வாழ்த்தினார்கள். கட்டியக்காரர்கள் ஜெயா விஜீபவாவெனக் கட்டியங்கூறினார்கள். தசரதர், ஜனகர் மற்றுமுள்ள அரசர்கள் யாவரும் சந்தோஷித்தார்கள்.

அதே காலத்தில் ஜனகமகாராஜா தன் குமாரியாகிய ஊர்மிளையை இலக்ஷ்மணருக்கும், தன் பிராதாவாகிய குஜத்துவஜன் புத்திரிகளிருவரில், மாண்டவி என்னும் கன்னிகையைப் பரதனுக்கும், ஸ்ருதகீர்த்தி என்னும் கன்னிகையைச் சத்துருக்கனுக்கும் பாணிக் கிரகணம் செய்து கொடுத்தார்.

மிகுந்த இலக்ஷணம் அமைந்த நான்கு பிராதாக்களும் பத்தினிகளுடன் கூடியவர்களாகி, குதூகலமாகப் பிரகாசிக்கும் காந்தியால் வேறு லோக பாலர்களோ வெனப் பிரகாசித்தார்கள்.

இந்தச் சமையத்தில், ஜனகமகாராஜன் நாரத முனிவர் கூறிய, தன் பெண்ணின் வரலாற்றை வசிஷ்ட முனிவரிடத்திலும், விஸ்வாமித்திர முனிவரிடத்திலும் கூறுகிறார்.

"ஓ முனிவர்களே! நான் யாகபூமியைச் சோதிப்பதற்கு கலப்பையால் பூமியை யுழுதேன். கலப்பை நுனியினின்று இலக்ஷணமுள்ள ஸீதையுண்டானாள். அந்த ஸீதையை நான் பார்த்து அன்புடன் என் பெண்ணென்ற பாவனை செய்து, சரத்காலச் சந்திரன் போன்ற முகமுடைய அப்பெண்ணை என் பத்தினியிடம் கொடுத்தேன்.

அப்பெண்ணை நாளொரு வண்ணமும், பொழு தொருமேனியுமாக வளர்த்து வரும் நாளில், நாரத முனிவர் மகதி என்ற வீணையை வாசித்து, நாராயண மூர்த்தியைப் பற்றி கானம் செய்து கொண்டு என்னிடம் வந்தார்.

அந்த நாரதர் என்னால் பூஜிக்கப்பட்டு சுகமாக வீற்றிருக்குங் காலத்தில், என்னைப் பார்த்து "ஓ ஜனக! உமக்கு மங்களத்தைக் கொடுப்பதற்குக் காரணமாகிய இரகசிய வார்த்தையைக் கேளும், பரமாத்மாவாகிய வாசுதேவன் பக்தர்களுக்கு அநுக்கிரகம் செய்ய விரும்பியும், தேவர்களின் குறையை நிவர்த்திக்கும் பொருட்டு இராவணனை வதம் செய்யவும், தசரத மகாராஜனுக்குப் புத்திரனாக இராமன் என்ற பெய

ருடன் அவதாரம் செய்திருக்கிறார். அவர் மாயா மானிடவடிவங் கொண்டவர், பரமேஸ்வரர், நான்குவிதமாக அவதாரம செய்திருக்கிறார். பகவானுடைய யோகமாயையும் உம்முடைய கிருகத்தில் ஸீதை யென்னும் நாமத்துடன் வந்திருக்கிறாள். ஆகையால் இந்த ஸீதையை எவ்வித முயற்சி செய்தாவது இராமனுக்கே கொடும், மற்றவர்களுக்குக் கொடுக்கக்கூடாது. இராமனாகிய பரமாத்மாவுக்கு ஸீதை முந்தி பத்தினியாக இருந்தவள்" என்று தேவமுனியாகிய நாரதர் சொல்லிவிட்டு சுவர்க்கலோகம் சென்றார்.

அது முதல் நான் ஸீதாதேவியை விஷ்ணுவைச் சார்ந்த இலக்ஷ்மிதேவி என்றே நினைத்தேன். இந்த மங்களகரமான ஜானகியை எவ்விதம் இராமனுக்குக் கொடுக்கிறதென்று விசாரங்கொண்டு, ஓர் காரியத்தை ஆலோசனை செய்தேன். அதாவது—பரமசிவன் திரிபுரதகனம் செய்தவுடன் தன்னுடைய வில்லை என் முன்னோர்களாகிய அரசர்களிடம் வைத்திருந்தார். அதை என் முன்னோர்கள் பூஜித்து வந்தார்கள். நானுமப்படியே பூஜித்து வந்தேன். அந்த வில் பூலோகத் தரசர்களால் நாணேற்றக் கூடியதல்ல. ஆகையால் நான் பூசையுடன் வைத்திருக்கும் இந்த வில்லை யார் வளைத்து நாணேற்றுகிறாரோ அவரே ஸீதைக்கு நாயகன் என்று பிரதிஞ்ஞை செய்தேன். அதானது உலகத்திலுள்ள அரசர்களது வலிமையைக் குறைக்க ஏதுவாயிற்று. ரிஷிகளுக்குள் சிறந்த விஸ்வாமித்திரர் அநுக்கிரகத்தால், இராஜீவ (இராஜீவம்-தாமரை, உலோசனம்-கண்.) லோசனனாகிய இராமன் இந்த வில்லை வளைப்பதற்கு இங்குவந்தார். என் மனக் கோரிக்கை நிறைவேறிற்று" என்று வசிஷ்டரையும், விஸ்வாமித்திரரையும் நோக்கி ஜனகர் கூறி, இராமனைப் பார்த்து,

ஓ! இராம இப்போது தான் என் ஜன்மம் சாபல்லியமாயிற்று. ஏனெனில், ஸீதா தேவியுடன் ஒரே ஆசனத்தில் சூரியனைப் போல் பிரகாசமுள்ள உம்மைப் பார்க்கிற பாக்கியம் பெற்றேன்.

இராம! உம்முடைய பாததீர்த்தத்தை ஆஜமணித்த பிரமதேவர் அதன் பலத்தால் சிருஷ்டி காரியத்தை நடத்துகிறார். மகா பலிச்சக்கரவர்த்தி யுமது பாதாரவிந்த ஜலத்தையுட் கொண்டதால் தேவராஜனாகி இந்திரபதவி யடைந்தார். உம்முடைய பாததூள் பட்டவுடன் அகலியை சாபவிமோசன மடைந்து கணவனிடம் சேர்ந்தாள். பூமியில் உம்மைவிடப் பெருமை பெற்றவர் யார்? உம்முடைய பாதார

விந்தத்தை யடைந்த யோகிகள், கால சக்கரத்தை ஜெயித்து சம்சார பந்தத்தைப் போக்கிக் கொண்டார்கள். உம்முடைய நாமத்தைக் கீர்த்தனம் செய்ததால் தேவர்கள் தங்கள் துக்கத்தில் நின்று விடு தலையானார்கள். இவ்வளவு மகிமை வாய்ந்த உம்மையே இப்போது சரண மென்றடைகிறேன்" என்று இராமனை நோக்கி ஜனகமகா ராஜன் ஸ்தோத்திரஞ் செய்தார்.

பிறகு, நூறு கோடி சுவர்ண நாணயங்கள், பதினாயிரம் இரதங்களை, இலக்ஷம் குதிரைகள், அறு நூறு யானைகள், இலக்ஷம் பதாதிகள், முன்னூறு தாசிகள், தேவார்கமான வஸ்திரங்கள், முத்துக்கள், இரத்னங்களிட்டிழைத்த ஹாரங்கள் இவைகளை ஸ்ரீதனமாக ஸீதா தேவிக்கு ஜனக மகாராஜர் கொடுத்தார்.

அதன் பின், ஜனகராஜர், வசிஷ்டர் முதலிய முனிவர்களை, நன்று பூஜித்து, விதிப்படி தசரத மகா ராஜனையும், இராமன், பரதன், இலக்ஷ்மணன், சத்துருக்கன் இவர்களையும் பூஜித்து, தசரத சக்கரவர்த்தியை இராமன் முதலினோருடன் பிரயாணப் படுத்தினர்.

ஜனகராஜன பத்தினி முதலிய தாய்மார்கள் ஸ்ரீராமன் மனைவி யாகிய ஸீதா தேவியையும், லக்ஷ்மணர் மனைவியாகிய ஊர்மிளையையும், பரதன் மனைவியாகிய மாண்டவியையும், சத்துருக்கன் மனைவி யாகிய ஸுருத்கீர்த்தியையும் பிரயாணப்படுத்தி, ஸீதா தேவியைக் கட்டி முத்தமிட்டு "குழந்தாய்! மாமனார் மாமியார்களை சிச்ருஷை செய்துகொண்டும், எப்போதும் இராமரை யநுசரித்துக்கொண்டும், பதிவிருதா தர்மத்தை ஆசிரயித்துக்கொண்டும், உன் தங்கைமார்களையும் அவ்விதமிருக்கும்படி செய்துகொண்டும் சுகமாக இரு" என்று புத்தி சொல்லிக் கொடுத்தார்கள்.

இரகுபுங்கவன் பிரயாணமாகும்போது, எங்கு பார்த்தாலும் பேரி, மிருதங்கம், எக்காளம், சின்னம், சங்கம் இவைகள் சமுத்திர கோஷம் போலும், மேகக குமுறல் போலும் ஆரவாரித்தன. நகரத்து ஜனங்களெல்லாம் சந்தோஷமாய்க் குதூகலித்தனர்கள். மங்களம் பாடினார்கள்.

# ஏழாவது சருக்கம்.

---

தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமன் முதலியவர்களுடன் மிதிலையி னின்று புறப்பட்டு மூன்று யோஜனை தூரம் சென்றவுடன் மிகவும் பயங்கரமான அபசகுனங்களைக் கண்டார். உடனே வசிஷ்ட முனி வரை நமஸ்கரித்து, "ஓ முனி சிரேஷ்டரே! இது என்ன நான்கு பக் கத்திலும் விரோதமான அபசகுனங்கள் காணப் படுகின்றனவே," என்றார்.

வசிஷ்டர் தசரத சக்கரவர்த்தியைப் பார்த்து, "ஓ அரசனே ஏதோ மனக்கிலேசம் உண்டாகும் போல் தோன்றுகிறது. ஆனால் உடனே அக்கிலேசம் நிவர்த்தியாகும் என்றும் தெரிகிறது. சுபக் குறிகளைக் காட்டும் மிருகங்கள் வலஞ்சுற்றுகிறதைப் பாரும்" என் றார். இவ்விதம் இருவரும் சம்பாஷணை செய்து கொண்டிருக்கும் போது பயங்கரமான காற்று வீசிற்று. அக்காற்றினால் எழும் புழுதி யெல்லாருடைய கண்ணோஜாதியை மழுங்கச செய்து துன்ப முறச் செய்தது.

அச்சமயம மங்கைமவாய்ந்த வரும, பிரதாபமுளளவரும், கார் மேகம் போன்ற நீல நிறமுள்ளவரும், உயர்ந்தவரும், ஜடை மர வுரி இவைகள் அணிந்த வரும், வில், பரசு இவைகளைக் கையில் தரித்த வரும், பிரத்தியக்ஷமாக வந்த மற்றொரு காலன் போன்றவரும், கார்த்த வீரியார்ச்சுனனுக்கு யமனாகியவரும், கருவங்கொண்ட க்ஷத் திரியர்களைச் சங்கரிப்பவரும், ஜமதக்கினி முனிவர் குமாரரு மாகிய பரசுராமர் அவ்விடத்துக்கு வந்தார்.

தசரதர் பரசுராமர் வருகிறதைப் பார்த்து பயந்து மிகவும் நடுக்கமுற்று அவரிடம் சென்று அர்க்கியம் முதலியவற்றால் பூஜிப் பதை மறந்து, "ஓ பிரபுவே! காப்பாற்றவேண்டும், காப்பாற்ற வேண் டும்," என்று வேண்டி தண்டம் போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்து, என் குமாரர்களின் பிராணனைக் கொடுக்கவேணும் என்று பிரார்த் தித்தார்.

இவ்வாறு இரக்கத்தோடு கூறும் தசரதரை அநாதரவு செய்து, இரகு சிரேஷ்டனாகிய இராமனைப் பார்த்து, கோபத்தினால் கண் சிவந்

தவராகிய பரசுராமர், "ஓ க்ஷத்திரியர்களுக்குள் அதர்மனுகியவனே! நீ இராமன் என்று என்பெயரை வைத்துக்கொண்டு சஞ்சரிக்கிறாய், நீ க்ஷத்திரியனுகில் விரைவாக என்னேடு 'துவந்துவ' யுத்தம் செய். பழமையானதும், ஜீரணித்துப்போனதுமான வில்லை முறித்துவிட்டோமென்ற அகங்காரமுற்று வீணுகச் சிலாகித்துப் பேசிக்கொள்கிறாய்! நீ இரகு வம்சத்தில் பிறந்தவனுனல், விஷ்ணுவைச் சார்ந்த இந்த வில்லை நாணேற்று; இதை நாணேற்றுவாயானுல் அப்போது உன்னுடன் துவந்துவ யுத்தம் நான் செய்கிறேன். இவ்விதம் நீ செய்யாவிடில் உங்கள் எல்லோரையும இப்போதே நாசம் செய்வேன். நான் க்ஷத்திரியர்களை வேரறுக்கவே வந்திருக்கிறவன்" என்று கடுமையாகக் கூறினுர்.

இவ்விதம் பரசுராமர் பேசும்போது பூமி முழுமையும் நடுங்கிற்று, எல்லோருடைய கண்களும் இருண்டது.

வீரனும் தசரத குமாரனுமாகிய இராமன், பிருகு வம்சத்தில் தோன்றின பரசுராமரைக் கோபத்துடன் பார்த்து, அவர் கையிலிருந்த வில்லைப் பலாத்காரமாகக் கிரகித்து, விரைவாக நாணேற்றி, அம்புறுத்தூணியிலிருந்த பாணத்தை யெடுத்துத் தொடுத்து, காது வரையிலிழுத்து, "ஓ பிராமண! என் வார்த்தையைக் கேளும், இந்த இராம பாணம் வியர்த்தமாகக் கூடியதல்ல. ஆகையால், இதற்கு ஒரு வழியைக் காட்டும். இல்லாதவரை நீர் புண்ணியம் செய்து சம்பாதித்த உலகங்களையாவது, அல்லது உம்முடைய பாதங்களையாவது நாசம் செய்யட்டுமா? என் ஆஞ்ஞையை யநுசரித்து இதற்கு விரைவாகப் பதில் கூறும்" என்றுர்.

இவ்வார்த்தை கேட்ட பரசுராமர் விகார மடைந்த முகத்துடன் முன்னடந்த வரலாற்றை நினைத்துக் கூறுகிறுர். "ஓ இராம! ஓ இராம! ஓ மகானுபாகுவே! உம்மை நான அறிந்தேன். நீர பரமேஸ்வரன், புராண புருஷர், மகாவிஷ்ணு, சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் இவைகளைச் செய்பவர், யோகமாயையுடன் கூடினவர், மாயாமானிட வடிவங்கொண்டவர், அப்பிரமேயர், ஆதியுமந்தமு மில்லாதவர், விகாரமற்றவர், நிராமயர், கல்மஷமில்லாதவர், நித்தியானந்தர், ஜன்மமில்லாதவர், விபுவாகியவர்.

நான் பாலியனுயிருக்கும்போது தவம் செய்து விஷ்ணுவைச் சந்தோஷிப்பிக்க சககாதீர்த்தம் சென்று, தினந்தோறும் தவம்

செய்து, மகாத்மாவும், வியாபகருமாகிய ஸ்ரீமன் நாராயண மூர்த்தியைச் சந்தோஷப்படுத்தினேன்.

அப்போது தேவர்களுக்கு ஈசனும், சங்கு, சக்கரம், கதை இவைகளைத் தரித்தவரும், பிரஸன்னமான முகாரவிந்தமுடையவருமான பகவான் பிரசன்னராகி, என்னை நோக்கி, "ஓ பிராம்மணோத்தமரே! தவம் செய்வதை விட்டு எழுந்திரும், உம்முடைய தவமானது பிரயோஜனமுள்ளதாயிற்று, நீர் தவஞ்செய்து சிரமமடைந்தபடியால், உம்முடைய தந்தையைக் கொன்ற ஹேகயதேசத்தரசனாகிய கார்த்தவீரியனை என்னமிசத்துடன் சென்று வதம்செய்யும் என்றும், பிறகு இருபத்தொரு தடவை க்ஷத்திரியர்களைக் கருவறுத்து, பூமி யாவற்றையும் ஜயித்து ஜயித்ததைக் காசியபருக்குத் தானம் செய்து ஒழிவையடையக் கடவா யென்றும், திரேதாயுகத்தில் அழிவற்ற நான் தசரத குமாரனாக அவதாரம் செய்யப்போகிறதாகவும், அப்போது நான் மறுபடியும் அவரைப் பார்க்கப் போகிறதாகவும், அப்போது என்னிடம் முந்திக்கொடுத்த தேஜஸ்ஸை மறுபடியும் கிரகிக்கப் போகிறதாகவும், பிறகு நான் தவம்செய்து பிரமலோகத்திலும், சுவர்க்கத்திலும் இருக்கப் போகிறதாகவும் என்னிடம் சொல்லி விஷ்ணு பகவான் அந்தர்த்தான மடைந்தார்.

அப்பால் நான் எல்லாவற்றையும் அவர் கட்டளையிட்டபடியே செய்துவந்தேன். அந்த மகாவிஷ்ணுதான் நீர், ஓ இராம! நீர் பிரம தேவரால் பிரார்த்திக்கப்பட்டு மாயா மானிடனாகி வந்திருக்கிறீர்

ஆகையால் என்னிடமிருந்த உம்முடைய தேஜஸ்ஸை நீர் வாங்கிக்கொண்டீர், இப்போது என் ஜன்மம் பிரயோஜனமுள்ளதாயிற்று. பிரபுவே! நீர் எனக்கு அநுக்கிரகம் பண்ணவேண்டும்.

நீர் பிரமன் முதலானவர்களால் காணமுடியாதவர். பிரகிருதியின் கரை கண்டவர். நிர்மலமானவர், அஞ்ஞானத் தாலுண்டாகும் அகப்பகை (காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மார்ச்சரியம்.) ஆறும் உம்மிடம் இல்லை.

நீர், விகாரமடையாதவர், பூரணர், கமனம் முதலியவைகளில்லாதவர். ஜலத்தில் நுரை போலும், அக்கினியிற் புகை போலும், உம்மிடம் வெகு கோடி பிரும்மாண்டங்கள் இருக்கின்றன. மாயை உம்மை ஆதாரமாகவும், விஷயமாகவுங் கொண்டு காரியத்தைக் கற்

பிக்கிறது. ஜனங்கள் மாயையால் சூழப்பட்டிருக்கும் வரையில் உம்மைத் தெரிந்து கொள்ளுகிறதில்லே. இந்த மாயை வித்தையை மறைக்கும் சக்தியுடையது. அவித்தை யென்னும் பெயருடையது. சொரூப விசாரணை யில்லாதவர்களிடம் இருக்கக் கூடியது. இந்த அவித்தையால் உண்டான தேகங்களில் பிரதி பலித்த சிற்சக்தியை ஜீவன் என்று விவகரிக்கப்படுகிறது. இந்த ஜீவன் எது வரையிலும் தேகாபிமானம் அடைகிறதோ அது வரையில், கர்த்தா, போக்தா, என்ற பேர் படைத்து, சுகதுக்கங்களே யடைகிறது, ஆத்மாவுக்கு எப்போதும் சம்சார பந்தமில்லே. ஜீவனானவன் அவிவேகத்தால் பந்தம் அடைந்து நான் சம்சாரி யென்று பிரவிருத்திக்கிறன். ஜடத்துக்கு சித்துடைய சேர்க்கையால், சித் தென்ற தன்மையும், சித்துக்கு ஜடத்தின் செர்க்கையால் ஜீவன் என்ற சமிஞ்ஞையும் ஏற்படுகிறது. ஜலமும் அக்கினியும் கலந்தது போல ஜடத்தன்மையின் சுபாவமாகிறது.

உம்முடைய பாதங்களில் பக்தியுடைய சாதுக்களின் சேர்க்கையால் உண்டாகும் சௌக்கியம் மானிடனுக்கேற் படாதவரையில், சம்சாரகஷ்டத்தினின்று அவன் விடுபடப்போகிறதில்லே. மானிடன் சாதுக்களின் சேர்க்கையாலுண்டான பக்தியால் உம்மை உபாசிக்கிறன். அப்பொழுது மாயை யவனே விட்டு நீங்குகிறது. உம்மை உபாசிக்கிறவனிடம் அந்த மாயை தங்குகிறதில்லே. பிறகு அந்த மானிடனுக்கு ஞானம் நிறைந்த சற்குரு கிடைக்கிறர். அந்தக் குருவினிடம் ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்குமுள்ள ஐக்கிய ஞானத்தைப் பெற்று, உம்முடைய அநுக்கிரகத்தால் அஞ்ஞானத்தில் நின்று விடுபடுகிறன்.

அவ்விதப் பேறு பெற்றவன் விஞ்ஞான மடைந்து மோக்ஷமடைகிறன்.

ஆகையால் எனக்கு ஒவ்வொரு ஜன்மத்திலும், உம்முடைய சரணாரவிந்தங்களில் பக்தியுண்டாக வேண்டும், உம்மிடம் பக்தியுள்ள சாதுக்களின் சேர்க்கையும் உண்டாக வேண்டும்.

உலகத்தில் உம்முடைய பக்தியில் விருப்பமுடையவர்கள் உம்முடைய தருமமாகிய அமிர்தத்தை வருஷித்துக் கொண்டு உலகிலுள்ள ஜனங்களேப் பரிசுத்தம் செய்கிறர்கள்.

ஓ லோகநாத! உமக்கு நமஸ்காரம், பக்த ரக்ஷக! நமஸ்காரம், கருணையுள்ளவரும், அனந்தருமாகிய பிரபுவே! நமஸ்காரம், இராமச்சந்திர! நமஸ்காரம்.

ஓ தேவ! நான் சுவர்க்க முதலிய உலகங்களை ஜயிக்க விருப்பங்கொண்டு செய்த புண்ணியம் யாவற்றையும் உம்முடைய பாணத்துக்கு அர்ப்பணம் செய்தேன். ஓ இராம! நமஸ்காரம்" என்று கூறி முடித்தார்

கருணை வடிவமாகிய ஸ்ரீராமன் "ஓ பிராமணோத்தம! உமது கோரிக்கை எதுவோ அதைச் செய்கிறேன்" என்றார்

பார்க்கவன் (பரசுராமன்) பிரீதியுள்ள மனதுடன் ஸ்ரீராமரைப் பார்த்து "ஓ இராம! ஓ மதுசூதன! உமக்கு என்னிடம் அன்பிருக்குமானால், உம்மிடம் எனக்குப் பக்தியும், உம்முடைய சரணாரவிந்தங்களில் பற்றுதலும் எப்போதும் எனக்கேற்படட்டும். பக்தியில்லாத மானிடனாயினும், இந்த ஸ்தோத்திரத்தையெப்போதும் பாராயணம் செய்வானாகில் உம்முடைய பக்தனாகவே அவன் ஆக வேண்டும். அவனுக்கு விஞ்ஞானமும் கடைசியில் உம்முடைய ஸ்மரணமும் உண்டாகவேண்டும்" என்று வேண்டினார்.

ஸ்ரீராமனும் அவ்விதமே யாகட்டும் என்றுரைத்தார். பரசுராமர் அவ்விதங் கூறிய தசரதராமனை வலம் வந்து நமஸ்கரித்து அந்த இராமனால் பூஜிக்கப்பட்டு உத்தரவையும் பெற்று மகேந்திரமலைக்குச் சென்றார்.

இவைகளைக் கண்ணுற்ற தசரத மகாராஜன் சந்தோஷமடைந்து மரண மடைந்தவன் பிழைத்து வந்தது போல இராமனை நினைத்து அடிக்கடி அவனைக் கட்டிக் கொண்டு கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழிய விட்டு, பிறகு பிரீதியுள்ள மனதுடன் எல்லோருடனும் அயோத்தி சென்றார்.

தேவர்களுக் கொப்பான இராமன், இலக்ஷ்மணன், பரதன், சத்துருக்னன் இந்நால்வரும் தங்கள் தங்கள் மனைவிகளுடன் அவரவர்கள் அரண்மனையில் சுகமாகக் கிரீடித்துக் கொண்டு வந்தார்கள்.

இராமச் சந்திரன் ஸீதையுடனும், தாய் தந்தையுடனும், வைகுண்டத்தில் இலக்ஷ்மியுடன் கூடிய நாராயணன் போல் சந்தோஷமாக வாசம் செய்து வந்தார்.

கைகேயிக்குப் பிராதாவும், பரதருக்கு மாதுலனுமாகிய யுதாஜித் என்பவர் பரதரைத் தன் இராஜ்யத்துக் கழைத்துச் செல்லப் பிரீதியுடன் வந்தார்.

சத்துருக்களைச் சம்ஹரிக்கும் சாமர்த்தியமுள்ள தசரத மகாராஜன், யுதாஜித்தை அபிமானத்துடன் பூஜித்து பரதனையும், சத்துருக்னனையும் அவருடன் அனுப்பினார்.

தேவலோகத்தில் இந்திரனுடனும் இந்திராணியுடனும் கூடி வசிக்கும் தேவமாதாவாகிய அதிதி தேவியைப்போல், பூலோகத்தில் சக்கரவர்த்தி தேவியாகிய கௌசலை, இராமனுடனும், ஸீதையுடனும் விளங்கினாள்.

லோகநாதரும், பிரசித்தியுள்ள குணசமூகமுடையவரும், வெகு முனிவர்களின் ஆனந்த சமூகத்தின் வடிவமானவரும், ஜனங்களால் கானம் செய்யப்படும் கீர்த்தியுடைய வருமான ஸ்ரீராமன் ஸீதையுடன் அயோத்தியில் வீற்றிருந்தார். நித்தியமான ஸ்ரீ * உடையவரும், விகாரமற்றவரும், மாயைக்கு இருப்பிடமானவரும், எல்லையில்லாத மகிமையுடையவரும், மாயையின் காரியத்தை அநுசரித்தவரும், எல்லாவற்றிற்கும் ஈஸ்வரருமாகிய தேவன் இங்கு மானிடன் போலவே பிரகாசிக்கிறார்.

(பாலகாண்டம் முற்றிற்று.)

---

* ஸ்ரீ = இலக்ஷ்மி, பாக்கியம்.

# அயோத்தியா காண்டம்.

## முதலாவது சருக்கம்.

ஸ்ரீபார்வதி தேவி மறுபடியும், அகண்டாகார சச்சிதானந்த ஸ்வரூபராகிய பரமசிவத்தைப் பார்த்து, "ஓ தேவ தேவ, ஜகந்நாத, கருணாகர, சங்கர! அயோத்தியில் பிறகு இராமர் என்ன செய்தார்? யாவற்றையும் விரிவாகக் கூற வேண்டும்" என்று வணக்கமாகக் கேட்டாள்.

ஸ்ரீநீலகண்டர் உமாதேவியைப் பார்த்து, "ஓ பெண்ணே! ஸ்ரீ ராமன் மிதிலையில் ஜானகியை மணந்து அயோத்திக்கு வந்து அந்தப் புரத்தில் ஏகாந்தமாக வசித்துக் கொண்டிருக்குங் காலத்தில், ஓர் தினம் காசாம்பூப் போன்ற சியாமளவர்ணரும், கௌஸ்துவாபரண மணிந்தவரும், ஸீதா தேவியால் உபசரிக்கப்பெற்றவருமாகிய ஸ்ரீராம னைப் பார்ப்பதற்கு, தேவலோகத்திலிருந்து ஆகாயமார்க்கமாக நாரத முனிவர் அயோத்திக்கு வந்தார்.

அந்த நாரத முனிவர் சுத்தமான ஸ்படிகம்போன்ற மனமுடைய வர், சரத்காலச்சந்திரன் போன்ற நிர்மலனானவர், நினைத்ததும் தேவர் களுக்குப் பிரசன்னமாகக்கூடியவர். அயோத்தியில் ஒருவரும் நினை யாமலிருக்கும்போது அவர் தானாகவே ஸ்ரீராமபிரான் வசிக்கும் அரண்மனை வாயிலில் வந்தார்.

இரகு நந்தனன், நாரத முனிவர் வந்த சங்கதி தெரிந்து, ஆச னத்தை விட்டெழுந்து ஸீதா தேவியோடுவந்து அவரைக்கண்டு, அஞ்சலிசெய்து பக்தியோடு வணங்கிப் பூஜித்துபசரித்து அழைத் துக்கொண்டுபோய், ஓர் திவ்வியாசனத்தில் வீற்றிருக்கச் செய்து, அவரைப்பார்த்து, "ஓ முனி சிரேஷ்டரே! ஸம்ஸாரிகளுக்கு உம் முடைய தரிசனங்கிடைப்பதரிது. ஆயினும் நான் முன்ஜன்மத்தில் செய்த புண்ணிய பலத்தால் ஸம்ஸாரியாயினும், ஸாதுக்களாகிய தம் முடைய தரிசனம் எனக்குக் கிடைத்தது. ஓ முனீஸ்வர! நான் உம்மைத் தரிசனம் செய்ததால் கிருதார்த்தனாகி விட்டேன். நானிப்

போது செய்யவேண்டிய காரியம் யாது? அதைப் பணித்தால் நான் அவ்வண்ணமே நடத்துகிறேன்" என்று கூறினார்.

இதைக்கேட்ட நாரத முனிவர், பக்தவச்ஸலனாகிய இராகவனைப் பார்த்து, "ஓ இராம! உலக சம்பந்தமான வார்த்தை பேசி ஏன் என்னை மோகிக்கச் செய்கிறீர்? நீர் ஸம்ஸாரியென்று கூறியது மெய்யே. உலகத்துக்கு ஆதியாகிய மாயை உமக்கு மனைவியாகிறாள். அந்த மாயை உம்முடைய சந்நிதானத்தில் பிரமன் முதலிய பிரஜைகளை யுண்டுபண்ணுகிறாள். அந்த மாயை உம்மை ஆசிரயித்தவள். முக்குண வடிவமானவள். எப்போதும், வெண்மை, கறுப்பு, சிவப்பு என்ற மூன்று வர்ணமுடையவள், மூவுலகமாகிய அகண்ட கிருகத்தில் நீர் மாயையோடுகூடி கிருகஸ்தராக வசிக்கிறீர். மகாவிஷ்ணு நீர், மகா இலக்ஷுமி ஸீதை; பரமசிவன் நீர், பார்வதி ஜானகி; பிரமன் நீர், ஸரஸ்வதி ஜனககுமாரி; சூரியன் நீர், உஷாதேவி ஜானகி; வாயு நீர், ஸதாகதி ஸீதை; குபேரன் நீர், சகல சம்பத்து ஜானகி. உலகத்தில் ஸ்திரீ வாசகமான வஸ்து எதுவோ அவையாயும் மங்கள சொரூபமுடைய ஜானகியாகிறாள். புருஷ வாசகமான வஸ்து எதுவோ அவையாவும் நீர் ஆகிறீர். ஆகையால் மூவுலகும் உம்மைத் தவிர வேறில்லை.

சர்வேஸ்வரனாகிய நீர் சத்துவ குண மாயையுடன்கூடி, தமோ குண மாயையை யதிஷ்டித்தபோது, அந்த மாயா சம்பந்த சைதன்னியத்தில், திரிகுணாத்மகமான சப்த தன்மாத்திரையான ஆகாசமும், அதில் நின்று பரிச தன்மாத்திரையான வாயுவும், அதில் நின்று ரூப தன்மாத்திரையான தேயுவும், அதில் நின்று ரச தன்மாத்திரையான அப்புவும், அதில் நின்று கந்த தன்மாத்திரையான பிருதிவியுமுண்டாயின. இவை அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷ்மபூதங்களென்றும், தன்மாத்திரைகளென்றும் சொல்லப்படும். இந்தப் பூதங்களினால் சமஷ்டி, வியஷ்டி ஆத்மகமாகிற லிங்க சரீரமுண்டாகிறது. இந்த லிங்கசரீரம் 24 தத்துவங்களுடனே கூடி யிருக்கும். அதாவது:—ஞானேந்திரியம் 5. (சுரோத்திரம்-துவக்கு, சக்ஷு, ஜிங்ஙவை-கிராணம்) கன்மேந்திரியம் 5. (வாக்கு, பாதம்-பாணி-பாயுரு, உபத்தம்) வாயுக்கள் 10. [பிராணன்-அபானன்-உதானன்-வியானன். சமானன் ஆக 5. நாகன்-கூர்மன்-கிரிகரன்—தேவதத்தன்-தனஞ்சயன் ஆக உபவாயுக்கள் 5. ஆக வாயுக்கள் 10.] அந்தக்கரணம் 4,

மனம்-புத்தி அகங்காரம்-சித்தம் ஆக லிங்கசரீரதத்துவங்கள் 24. (இதையே-உபவாயுக்கள் 5-ம், பிராணன் முதலிய வாயுக்கள் ஐந்தில் அந்தர்ப்பூதம் என்றும், அந்தக்கரணம் நான்கில், அகங்காரம், மனத்திலும், சித்தம் புத்தியிலும் அடங்கினதென்றும் இவை யேழும் போக லிங்கசரீர தத்துவங்கள் 17-என்று கூறுவது முண்டு.)

பஞ்சபூத சாத்வீகாமிசங்களிலிருந்து வியஷ்டியான ஞானேந்திரியம் ஐந்தும் பிறந்தன. பஞ்சபூத சாத்வீக சமஷ்டியினால் அந்தக்கரணங்கள் நான்கும் பிறந்தன. பஞ்சபூத ராஜதாமிசங்களிலிருந்து வியஷ்டியான கருமேந்திரியங்கள் பிறந்தன. பஞ்சபூத இராஜத சமஷ்டியினால், வாயுக்கள் பத்தும் பிறந்தன. இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் கூடியது சமஷ்டி வியஷ்டியாகிற லிங்கசரீர மென்று சொல்லப்படும். இதை அபிமானித்த உமக்கு இரணியகர்ப்பர் என்றும், சூத்ராத்மா வென்றும், பிராணன் என்றும் பெயர். இதுவே சூக்ஷ்ம சரீர சிருஷ்டி.

மேற்கூறிய அபஞ்சீகிருத பஞ்ச பூதங்களில் ஆகாச முதலிய ஸ்தூல பூதங்களு முண்டாயின. அவை ஒவ்வொன்றும் இரண்டு பாகமாயின. அதில் ஒரு பாகம் நிற்க மற்றைய ஒரு பாகம் ஒவ்வொன்றும் நன் ஞன்காகி அந்தப் பாகங்களின் நிசாமிசத்தை விட்டு இதர பூதங்களுடனே கூடுகிறபோது அதற்கு பஞ்சீகிருத ஸ்தூல பூதங்களென்று சொல்லப்படும். இவைகளிலிருந்து ஸ்தூலப் பிரபஞ்ச முண்டாயிற்று.

பஞ்சீகிருத ஸ்தூல பூதங்களினால் அண்டமும், அண்டத்தில் கீழுலகமேழும், மேலுலகமேழும, அவைகளுக்குசிதமான அண்டசம்-உப்பீசம்-சுவேதசம்-சராயுசம் என்ற நால்வகை யோனிகளும் பிறந்தன. இவற்றுள் அண்டத்திற் பிறந்தவை பட்சி, பன்னக முதலியன. பையிற் பிறந்தவை தேவர், நரகர், மிருகம் முதலியன. வேர்வையிற் பிறந்தவை ஈ, பேன் முதலியன. நிலத்திற் பிறந்தவை மலை, விருக்ஷம் முதலியன. இவைகள் ஸ்தூலப் பிரபஞ்சம் எனப்படும். இதனிடத்தபிமானித்த உமக்கு விராட்டென்றும் வைஸ்வாநரன், வைராஜன் என்றும் பெயர். இதுவே சமஷ்டி.

வியஷ்டியானது, சமஷ்டியில் அந்தர்ப் பூதமானாலும், சாக்கிராவஸ்தையில் ஸ்தூல சரீரத்தை யபிமானித்த ஜீவனுக்கு, விசுவன், வியுவகாரிகன், சிதாபாசன் என்று பெயர்,

சொற்பனவஸ்தையில் சூக்ஷ்ம சரீரத்தை அபிமானித்த ஜீவனுக்கு தைசதன், பிராதிபாகன், சொற்பன கற்பிதன் என்று பெயர்.

சுழுத்திபவஸ்தையில் காரண சரீரத்தை அபிமானித்த ஜீவனுக்கு பிராக்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்னன் என்று பெயர். இதுவே வியஷ்டி.

(சமஷ்டி என்பது வனம், வியஷ்டி என்பது மரம்.)

இப்பிரபஞ்சத்தின் அவாந்தர சிருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்காகவே நீர் திரிமூர்த்தி சொரூபமாகிறீர். சத்துவ குணத்துடன் கூடி விஷ்ணுவாகவும், இராஜத குணத்துடன் கூடி பிரமனாகவும், தமோகுணத்துடன் கூடி ருத்திரனாகவுமாகிறீர்.

இவ்வண்டபிண்ட சராசரங்களனைத்தையும் ஒடுக்கும்போது உமது குக்ஷியிலடக்கி, விரிக்கும்போது அதனதன் கருமாநுசாரத்தை யொட்டி அததற்கேற்ற சரீரத்தோடு வெளிப்படுத்துகிறீர். இரக்ஷிக்கிறீர். லயப்படுத்துகிறீர். உம்முடைய சொரூப இலக்ஷணங்களை யறிந்து உம்மிடம் பக்தி செய்த ஜீவர்களுக்கு உமது சாயுச்சிய பதவியையும் கொடுத்து, திரும்பவும் ஜனனமெடுத்து, தாபத்திரயங்களில் உழலாதிருக்கும் வண்ணம் கிருபை செய்கிறீர். இத்தியாதி காரியங்களைச்செய்தும் இவைகளில் நீர் சம்பந்தமில்லாதவர். சாக்ஷியாக இருப்பவர். சின்மாத்திரர். ஓ இரகூத்தம! நீர் இவ்விதமாகிறீர். உம்மிடமே இவ்வுலகம் யாவும் உண்டாயின. உம்மிடமே அமைந்திருக்கின்றன. உம்மிடமே லயமாகின்றன. ஆகையால் நீர் எல்லாவற்றிற்கும் காரணமாகிறீர். ஆகையால் நீர் ஸம்ஸாரிதான்.

ஜீவன் பழுதையைப் பாம்பு என்று அபிமானித்தது போல, தன்னைக் காரிய கர்த்தா வென்று அபிமானித்துத் துயரத்தை வகிக்கிறான். அந்த ஜீவன் தன்னைப் பரமாத்மா வென்று அறிவானாகில் துக்கத்தினின்று விடுபடுகிறான். நீர் யாவற்று சரீரங்களிலும், சின்மாத்திரமான ஆன்மாவின் சுய தன்மையான ஜோதி சொரூபமாகி அந்தரியாமியாக வசித்து, புத்தி முதலியவைகளைப் பிரகாசிக்கச் செய்கிறீர். ஆகையால் நீர் யாவற்றுக்கும் ஆத்மாவாகிறீர். சுத்திகாரசிதம் (கிளிஞ்சிலினிடத்து வெள்ளி) போல உம்மிடம் பிரபஞ்சம் அஞ்ஞானத்தால் தோன்றுகிறது. அந்த அஞ்ஞானமானது ஞானத்தால் நசிக்கிறது. ஆகையால் நான் எப்போதும் ஞானத்தையே அப்பியாசம் செய்ய வேண்டும்.

உம்முடைய சரணங்களிற் பக்தியுடையவர்களுக்கு, கிரமமாக அந்த ஞான மேற்படுகிறது. ஆகையால் உம்மிடம் பக்தியுள்ளவர்கள் தான் மோக்ஷமடையக் கூடியவர்கள். நான் உம்முடைய பக்தர்களுக்குப் பக்தர் ஆனவர்களுக்கு ஊழியனுகிறேன். எனக்கு அநுக்கிரகம் செய்ய வேண்டும்.

ஓ பிரபுவே! என்னை மோகப்படுத்தக்கூடாது. என் தந்தையாகிய பிரம தேவர் உம்முடைய நாபிக்கமலத்தில் உண்டானவர். ஆகையால் நான் உமக்குப் பௌத்திரனுகிறேன். மேலும் நான் உம்முடைய பக்தன் நீர் என்னைக் காப்பாற்ற வேண்டும் என்றுரைத்து நமஸ்காரஞ் செய்து கண்களில் ஆனந்த பாஷ்பம் ததும்ப ஸ்ரீ ராமனைப் பார்த்து ஓ இராம! என்னைப் பிரமதேவர் அனுப்பினுர். நான் அவர் ஆஞ்ஞைப்படி இவ்விடம் வந்தேன். ஓ இரகு சிரேஷ்ட! நீர் இராவணனை வதம் செய்வதற்காக வந்தவர். இப்போது உம்முடைய தந்தையாகிய தசரத மகாராஜன் இராஜ்ய பரிபாலனம் செய்யும்படி உமக்குப் பட்டாபிஷேகம் பண்ணப்போகிறுர். நீர் இராஜ்ய காரியங்களில் பிரவேசித்தால் இராவணனை வதம் செய்யமாட்டீர், நீர் முன்னம் பூபாரத்தை நிவர்த்திப்பதாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறீர். ஓ இராஜ சிரேஷ்டரே! அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றவேண்டும். நீர் சத்தியந் தவறுதவர். பிரமதேவர் இதைக் ஞாபகப்படுத்தும்படியென்னை அனுப்பினுர்," என்று கூறினுர்.

இவ்வாறு நாரத முனிவர் கூறியதைக் கேட்ட ஸ்ரீராகவன் புன்னகையுடன் "ஓ நாரதரே! நான் முந்திச்செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுகிறேன், அதில் சந்தேகமில்லை. ஆயினும் அவரவர்களின் பிராரப்த கருமம் க்ஷயமாகும் காலத்தை யெதிர் பார்க்கிறேன். பூமிக்குப் பாரமான அசுரர் கூட்டத்தை யொழிக்கிறேன். இராவணனை வதை செய்வதற்காக நான் நாளையதினம் தண்டகாரண்யம் செல்கிறேன். அந்த அரண்யத்தில் ஜடைமுடி மரவுரிதரித்து, ரிஷி கோலத்துடன் பதினுன்கு வருஷம் வனவாசம் செய்கிறேன். ஸீதையைக் காரணமாக வைத்துக்கொண்டு அந்த இராவணன் முதலிய துஷ்டர்களை, புத்திரமித்திரர்களுடன் நாசம் செய்கிறேன்" என்று பிரதிக்ஞை செய்தார்.

இதைத் தெரிந்த நாரத முனிவர் சந்தோஷமடைந்து இராமனை மூன்று பிரதக்ஷிணம் செய்து, தண்டாகாரமாகப் பூமியில் விழுந்து

நமஸ்கரித்து, இராமரிடம் விடைபெற்றுக்கொண்டு, ஆகாய மார்க்க மாகப் பிரமலோகஞ் சென்றார்.

ஸ்ரீராகவருக்கும், நாரத முனிவருக்கும் நடந்த ஸம்ஸார வியாக் கியானத்தை, யாதாம் ஒருவன் பக்தியுடன் படித்தாலும், சிரவணம் பண்ணினாலும், ஸ்மரணம் செய்தாலும், அவன் கிரமமாக வைராக் கியமடைந்து சம்சார பந்தத்தில் நின்று விடுபட்டு, தேவர்களுக்கும் கிட்டாத கைவல்லியத்தை யடைகிறான்.

## இரண்டாவது சருக்கம்.

தசரதச் சக்கரவர்த்தி அயோத்தியில் ஸ்ரீ ராமன் முதலிய யுவ ராஜதனயர்களுடன் சுகமாக இராஜ்ய பரிபாலனம் செய்து கொண் டிருக்கும்போது, ஒரு தினம் எல்லாவற்றையும் அறிந்தவரும், நற் குணங்களுக்கு இருப்பிடமானவரும், ரிஷிகளுக்குட் சிறந்தவரும், தன் குலத்திற்குக் குருவுமாகிய வசிஷ்ட முனிவரைச் சபைக்கு வர வழைத்து, அர்க்கிய பாத்தியாதியுபசாரணை செய்து பூஜித்து வணங்கி ஓர் திவ்வியாசனத்தில் வீற்றிருக்கச் செய்து கூறுகிறார்.

"ஓ முனிசிரேஷ்டராகிய எனது குருவே! நான் அறுபதினாயிரம் வருடம் இராஜ்ய பரிபாலனஞ் செய்து அதனால் மிகக்களைத்து விட் டேன். உலகத்தில் புகழுக்குரிய காரியத்தைச் செய்தேனே யல்லாது ஆத்மலாபமான காரியத்தை நான் செய்ய வில்லை. நானோ மிகுந்த விருத்தாப்பியனாக இருக்கிறேன். ஆகையால் ஸ்ரீராமனுக்கு இரா ஜ்ய பட்டாபிஷேகம் செய்து இராஜாங்க காரியத்தை யவனிடம் ஒப்பு வித்து விட்டு நான் இனி மேலாவது ஆத்மார்த்தமான புண்ணிய கரு மங்களைச் செய்ய விரும்புகிறேன்.

இராமன் சதுர்வேத தனுர்வேத சாஸ்திரங்களை முழுமையுங் கற்றுணர்ந்ததோடு, துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலன குணம் அமைந் தவனாக இருப்பது மல்லாமல் பொதுவாகப் பிரஜைகளிடத்தில் காரு ண்யனாகவே யிருக்கிறான். நம் பிரஜைகளும், பிரபல வியாபாரிகளும், மிகுந்த கனதனவான்களும், கல்விமான்களும், உத்தியோகஸ்தர் களும் அவனைப்பற்றி மிகப் புகழ்ந்து வருகிறார்களென்பது தங்களு க்கும் தெரிந்த விஷயம்,

ஆகையால் தாங்கள் இன்றைக்கே இராம பட்டாபிஷேகத்துக்குரிய காரியங்களை ஆரம்பித்து நாளையத் தினமே இராமனுக்கு முடி சூட்டிவைக்கவேண்டும். ஆனால் இப்போது பரதன் சத்துருக்னனோடு தன் மாமன் வீட்டுக்குப் போயிருக்கிறான். அவனில்லாதிருந்தபோதிலும் மகுடாபிஷேக காரியத்தை நிறுத்தாமல் செய்து வைக்கவேண்டியது அவசியமான காரியம். தாங்கள் பட்டாபிஷேகத்திற்குறிய வஸ்துக்களை மந்திரி மூலமாய்ச் சேகரிக்கவேண்டும். இராமனிடத்திலும் சொல்லி ஏற்பாடு செய்யவேண்டும்" என்று கூறினார்.

பிறகு சக்கரவர்த்தி தன் சிரேஷ்ட மந்திரியாகிய சுமந்திரனை யழைத்து "ஓ சுமந்திர! நாளையதினம் ஸ்ரீராமனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வதாக உத்தேசித் திருப்பதால் நீர் நமது குல குருவாகிய வசிஷ்டர் முனிவர் சொல்லுகிறபடி மகுடாபிஷேக மகோற்சவத்துக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிப்பதோடு, அயோத்திமா நகரத்தை மிகச் சிறப்பாக அலங்காரம் செய்து, நகரத்திலுள்ள பிரஜைகளுக்கும் தனவந்தர்களுக்கும், நம்மைச் சார்ந்த சகல தேச அரசர்களுக்கும் ஸ்ரீராம பட்டாபிஷேகத்தைத் தெரிவிக்க வேண்டும்." என்றும் ஆக்ஞாபித்தார்.

வந்தபின் காப்போன், வருங்கால் காப்போன், வருமுன் காப்போன் என்ற யுக்தியில் சிறந்ததாகிய வருமுன் காப்போன் என்ற குணத்தையுடைய மந்திரி சுமந்திரன் அரசன் கட்டளையைக் கேட்டு அவ்வாறே செய்கிறேன் என்று அரசன் சமுகத்தில் கூறி, மிகுந்த சந்தோஷத்துடன் வசிஷ்ட முனிவரை நோக்கி, ஸ்வாமின் அடியேன் செய்ய வேண்டியதென்னவென்று கேட்டார்.

பிரம்ம தேஜஸுடன் விளங்கிய வசிஷ்டமுனிவர் சுமந்திரனை நோக்கி, அரண்மனை நடுவிலுள்ள அத்தாணி மண்டபத்தை மெழுகிக் கோலமிட்டு, சந்தனம், பனிநீர், குங்கும முதலியவையிட்டு, நான்கு புறத்திலுமுள்ள தூண்களுக்கெல்லாம் பலவித வர்ணமுள்ள மாலைகள், முத்துமாலைகள், சூரியக் கண்ணாடிகள் முதலியன தொங்க விட்டும், இரத்ன கசிதமான மேல்கட்டிகள் மேலே கட்டியும், கண்ணைக் கவரும்படியான விசித்திர வேலையோடுகூடிய இரத்னக் கம்பளங்கள் கீழே விரித்தும், நடுவில் சுவர்ணங்களாலும், இரத்னங்களாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்ட சிம்மாஸனத்தை அமைத்

தும், பலவித வாசனையுள்ள புஷ்பப் பந்தல்களிட்டும், வாழை கமுகு, மருடதோரணம், மாவிலை முதலியவைகள் கட்டியும் அரண்மனை முகப்பில் ஒலிமுகப் பந்தலிட்டு, வாசமாலைகள், தொம்பைக்கூடுகள், மேல் கட்டிகள், மருடதோரணங்கள், வாழைகள், கமுகு, தென்னங்குலைகள் முதலியவைகளைக்கொண்டு பார்த்தவர் கண்களுக்கு ஆச்சரியமுண்டாகும்படி அலங்காரம் செய்துவைக்கவேண்டும். எங்கு பார்த்தாலும் அரச சின்னமாகிய கொடிகள் ஏற்றவேண்டும்.

கங்கை முதலிய சப்த தீர்த்தங்கள் கொண்டுவர சர்வாபரண பூஷிதர்களாகிய சுமங்கிலிகளும், பிரதான கும்பம், அஷ்டதிக்குப் பாலகர்கள் கும்பம் ஸ்தாபிக்கச் சுவர்ண கும்பங்களும், மகுடாபிஷேகத்துக்காக இரத்னங்க ளிட்டிழைத்த அபிஷேக கலசமும், இரத்ன கிரீடமும், பட்டு பீதாம்பரங்களும், தேவார்கமான பூமாலைகளும், மஞ்சள், சந்தனம், புஷ்பம், அத்தர், புனுகு, சவ்வாது, முதலிய வாசனைத் திரவியங்களும், ஓமத்துக்கு வேண்டிய நெய், சமித்து, தர்ப்பை, பொரி, அக்ஷதை, நவதான்யம, சூடம், சாம்பிராணி, முதலியவைகளும், பஞ்ச கௌவியத்துக்கு வேண்டிய பால், தயிர், நெய், கோசல கோமியம் முதலியவைகளும், கதலி, மா, பலா, முதலிய கனிவர்க்கங்களும், பாக்கு வெற்றிலை ஏலம் கிராம்பு முதலியனவும், புலித்தோல், வெண்குடை, சாமரை, கண்ணுடி முதலிய சாமான்களும், நான்கு வேதங்களு முணர்ந்த முனிவர்களும், பிராமணர்களும், ஐராவத குலத்திலுதித்த நான்கு தந்தங்களுடைய பட்ட வர்த்தன யானையும் ஆஜர் செய்யவேண்டும்.

பேரிகை, நாகசுரம், மத்தளம், முரசு, சங்கம், எக்காளம், நபரி முதலிய வாத்திய மேளங்களும், சுதி, தண்ணுமை, தாளம், இம்மூன்றும் ஒத்து அபிநயத்துடன் 64 கலைஞானத்துள் ஒன்றுகிய நிருத்தனம் என்ற நடனத்தைச் செய்யக் கூடிய ஸ்திரீகளும், வீணை, புல்லாங்குழல், சாரங்கம் முதலிய வாத்திய நிபுணர்களும், தயாராயிருக்கவேண்டும். யானை, குதிரை, தேர், பதாதிகள், யாவரும் ஆயுதபாணியாய் அரண்மனை முற்றத்தில் பாரா கொடுத்து அணி வகுத்து நிற்கவேண்டும்.

அயோத்தி நகரத்திலுள்ள சகல தேவாலயங்களுக்கும் வாத்திய கோஷத்துடன், ஆதிசைவர், பட்டாசாரியிவர்களைக்கொண்டு வேதாகம விதிப்படிக்குள்ள அபிஷேகம், அலங்காரம், நைவேத்தியம்

பூஜை முதலியன ஆசாரத்துடனும், பக்தியுடனும் நடப்பிக்க வேண்டும்.

ரிக்வித்துகளாகிய பிராமணர்களுக்கு அறுசுவையோடு கூடிய போஜனம் நடத்த வேண்டும்.

அன்னசத்திரம், சாவடி முதலிய இடங்களில் வரப்பட்டவர்களுக்குச் சாப்பாடும், ஏழைகளுக்குத் திருப்திகரமாக அன்ன தானமும் செய்ய வேண்டும்.

இக்காரியங்களை ஆங்காங்கு தக்க மனுஷர்களை யேற்படுத்தி சரிவர நடத்தும்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்று வசிஷ்டர் சுமந்திரனுக்குக் கட்டளை யிட்டார்.

சமயோசித புத்திமானாகிய சுமந்திரன் அவ்விதமே என்று கூறி வசிஷ்டரிடம் நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்து, முதலில் அதிவேகமாகச் செல்லும் சுகசாரணர்களை யழைத்து, தேசமன்னர்களுக்கும், குறுநில மன்னர்களுக்கும் ஸ்ரீராம பட்டாபிஷேக மஹோற்சவத்தைப் பத்திரிகை மூலமாகத் தெரிவிக்க அனுப்பிவிட்டு, யானையின் பேரில் முரசேற்றி வள்ளுவரைக்கொண்டு நாளையதினம் ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறபடியால், நகரவாசிகள் பட்டணமுழுமையும் அலங்காரம் செய்து பூரண கும்பம் முதலியவைகள் வைத்த குதூகலத்துடன் கொண்டாட வேண்டு மென்று பறையறையச் செய்து, தேவாலய பூஜை முதலியவைகளுக்கும், பிராமண போஜனம் முதலியவைகளுக்கும், அன்னசத்திர முதலியவைகளுக்கும் அரண்மனைக்குள் பட்டாபிஷேகத்துக்காக வேண்டிய சாமக்கிரிகள் சேகரிப்பதற்கும், தக்க காரியஸ்தர்களை நியமித்துத் தானும் மேற்பார்வையிட்டு சக்கரவர்த்தி ஆசாரியர் இவர்களால் ஆக்ஞாபிக்கப்பட்ட சகல காரியங்களையும் வெகு ஜாக்கிரதையுடன் செய்து முடித்தார்.

வசிஷ்ட மகாரிஷி சக்கரவர்த்தி கேட்டுக் கொண்டபடி மகுடாபிஷேக விஷயத்தைப் பற்றி ஸ்ரீராமனிடம் தெரிவிக்கத் தேரின் மீதேறிக் கொண்டு இராமன் அரண்மனையில் மூன்றுகட்டு வரையில் சென்று தேரில் நின்று கீழிறங்கினர். ஆசாரியராகையால் தடங்கலின்றி அரண்மனைக்குட் பிரவேசித்தார.

ஸ்ரீராமன் வசிஷ்ட முனிவர் வந்ததையறிந்து அஞ்சலிபந்தனுய், விரைவாக எதிர் கொண்டு ஸீதையுடன் வந்து பக்தியுடன் நமஸ்கரித்தார். ஸீதை சுவர்ண பாத்திரத்தில் தீர்த்தங்கொண்டு வந்தாள். குருவாகிய வசிஷ்டரை இரத்தின மயமான ஆசனத்திலெழுந்தருளச்செய்து பக்தியுடன் அவர் பாதங்களை அலம்பி அந்த ஜலத்தைத் தலையில் புரோக்ஷித்துக்கொண்டு "ஓ வசிஷ்ட முனிவரே! உம்முடைய பாததீர்த்தத்தைத் தரித்ததால் நான்கிருதார்த்தனுனேன்" என்று இராகவன் வசிஷ்டரை நோக்கிச் சொன்னுர்.

ஸ்ரீராமன் இவ்வித முரைத்தபோது வசிஷ்டர் மந்த காஸம செய்து, "ஓ இராம! ஆதிமூலப் பொருளாகிய உம்முடைய பாததீர்த்தத்தால் என் தந்தையாகிய பிரமதேவர் கல்மஷ மற்றவரானுர். உலகங்களுக்கு ஆதியாகிய நீர் இப்போது இவ்விதம் பேசுகிறீர். நான் உம்மை மாயா மானிடனுக அவதாரம் செய்த பரமாத்மாவென்றறிவேன். தேவர்களின் இடுக்கண் தொலையவேண்டி இராவணனை வதம் செய்யவும், பக்தர்களுக்குப் பக்தி ஏற்படவேண்டுமென்றும் நீர் வந்திருக்கிறீர் என்பதையும் நானறிவேன். தேவர்களின் சௌகரியத்தை யுத்தேசித்து இந்த இரகசியத்தை வெளியிடுகிறேன்.

ஓ இரகுநந்தன! நீர் மாயா சம்பந்தத்திஞல் யாவற்றையும் செய்வதுபோல, நானும் நீர் சிஷன் நான் ஆசிரியன் என்பதை யநுசரித்திருக்கிறேன். ஓ தேவ! நீர் குருக்களுக்கும் குருக்களாகிறீர். பிதுர்க்களுக்கும் பிதாமகனுகிறீர். நீர் யாவற்றுள்ளுமிருப்பவர். உலகமாகிய இயந்திரத்தைச் செலுத்துகிறவர், புத்திக்கு விஷயமாகாதவர், நீர் ஸத்துவகுண மாயையுடன் கலந்து இந்த சரீரத்தையடைந்து இவ்வுலகில் மானிடன்போல் தோன்றுகிறீர்.

ஓ இராம! புரோகிதனுக இருப்பது இழிவான ஜீவனம். நிந்திக்கத் தகுதியானது என்பதை நானறிவேன். ஆனுல் பிரமதேவர் எனக்கு முன்னம் இக்ஷ்வாகு வம்சத்தில் பரமாத்மாவாகிய மகாவிஷ்ணு இராமனுக அவதாரஞ் செய்யப் போகிறுர் என்று கூறினுர். அதை நானறிந்து உம்முடை சேர்க்கை வேணு மென்ற அவாவினுலும், உமக்கு ஆசிரியனுக இருக்கும் பாக்கியத்தைப பெறவேண்டுமென்ற விருப்பத்தாலும், நிந்தனைக்குட்பட்டதாக விருந்தாலும், இந்தப் புரோகித வேலையை நடத்தி வருகிறேன். ஓ இரகுநந்தன! என்மனோரத மானது இப்போது நிறைவேறிற்று.

உலகம் யாவையும் மோகிக்கச் செய்யும் மகா மாயை உமக்குச் சுவாதீனமானது. ஓ இரகு சிரேஷ்டனே! அந்த மாயை என்னை மோகப்படுத்தாம லிருக்கும்படி நீர் செய்யவேண்டும். ஆசிரியனுக்கு உபகாரம் செய்ய விருப்ப மிருந்தால் நான் கேட்டுக்கொண்ட இப் பேருதவியைச் செய்ய வேண்டும். நான் மேற் கூறிய இந்த இரகசி யத்தை ஒருவரிடமும் சொல்லுகிறதில்லை உம்மிடம் கூறினால் குற்ற மில்லை யென்று சொன்னேன்.

ஓ இராம! என்னை இப்போது தசரத மகாராஜர் நாளையதினம் உமக்குப் பட்டாபிஷேகம் செய்யப்போகிறதாக அறிவிக்கும்படி உம்மிடம் அனுப்பினார்.

ஆகையால் நீர் ஸீதையுடன் விதிப்படி உபவாசமாக இருந்து பரிசுத்தனாகவும், ஜிதேந்திரியனாகவும் பூமியில் சயனித்தும் இருக்க வேண்டும். நான் இராஜனிடம் செல்கிறேன் (ஓர் இரகசியம் அதா வது நீர் நாளைக்குத் தண்டகாரண்யம் செல்லப்போகிறீர். இதை வெளிவிடவேண்டாம்) என்றுரைத்து தேரின்மீதேறி வசிஷ்டர் அரச னிடம் சென்றார்.

பிறகு சர்வஞ்ஞரும், மாயையில்லாதவரும், ஈஸ்வரருமாகிய இராமச்சந்திரர் இலக்ஷ்மணரைப் பார்த்து மந்த காஸஞ்செய்து, ஓ தம்பி "இலக்ஷ்மண! நாளையதினம் காலை எனக்கு இராஜ்ய பட்டாபி ஷேகம் நடக்கப்போகிறதாம், நான் காரணமாக மட்டிலுமிருப்பவன் அநுபவிக்கிறவன் நீ தான். ஏனெனில் நீ எனக்கு வெளியில் சஞ்சரிக் கும் பிராணன்" என்றுகூறி, குருவின் வாக்கியப்படி விரதாதிகளை அநுஷ்டித்து வந்தார்.

வசிஷ்ட முனிவரும் அரசனிடம் சென்று தான் இராமனிடம் சென்று செப்பியதை யறிவித்தார்.

இங்கு இவ்வாறு நடக்க அந்தப்புரத்தில் வசிக்கும் இராமருக் குத் தாயாகிய கௌசலைக்கும், இலக்ஷ்மணருக்குத் தாயாகிய ஸுமித் திரைக்கும் ஓர் தாதியானவள் நாளையதினம் இராமருக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் நடக்கப்போவதை அறிவித்தாள். அவ்விருவரும் கேட்டு ஆனந்தமடைந்து இந்த சுபகரமான விஷயத்தைத் தங்க ளிடம் தெரிவித்த தாதிக்குச் சிறந்த ஹாரத்தை வெகுமதியாகக் கொடுத்தார்கள்,

கௌசலை தன் புத்திரனிடத்தில் மிக்க வாஸ்சல்லியமுடையவளாகையால் பிரீதியுள்ள மனதுடன் இராமருக்கு இராஜ்யம் சித்தி பெறுவதற்கு இலக்ஷ்மிதேவியைப் பூஜித்தாள். பின்பு தனது நாயகனாகிய தசரத மகாராஜன் சத்தியந் தவறாதவர், தான் செய்த பிரதிக்ஞைப்படி நடப்பவர், ஆனாலும் கைகேயியின் ஸ்வாதீனத்திலிருப்பவர், காமமுடையவர், என்ன செய்வாரோ வென்று சந்தேகித்து, துர்க்கா தேவியையும் பூஜித்து, அநேக தான தருமங்களையும் செய்தாள்.

அயோத்தியில் இவ்வாறிருக்க, தேவலோகத்தில் தேவர்கள் பிரமலோகஞ் சென்று, சரஸ்வதி சமேதரான பிரமதேவரைக்கண்டு, "ஓ தேவரே! நாளைய தினம் அயோத்தியில் ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறது. அதை நடக்காமல் தடுக்கவேண்டும். இராமன் இராஜ்யத்தில் நாட்டம் வைத்தால் இராவண சம்ஹாரம் எப்படி நடத்தப்போகிறார்? ஆகையால் எல்லாம் தெரிந்த தாங்கள் இதற்கு ஓர் சூட்சி செய்யவேண்டும். அதாவது சரஸ்வதி தேவியல்லாது மற்றவர்களால் நடத்தக் கூடியதல்ல, சரஸ்வதி தேவி யிப்போதே அயோத்திக்குச் சென்று, மஹாபலிசக்ரவர்த்தியின் தந்தையாகிய விரோசனன் மகள் மந்தரை, தன் சரீரத்தில் திரிகோணமுடைய காரணத்தைக்கொண்டு கூனி யென்று காரணப் பெயர் பெற்று சுமித்திரை அரண்மனையில் வசிக்கிறாள். அவள் மனதிற் பிரவேசித்து அவளைக் கொண்டு சுமித்திரை தேவிக்குப் போதிக்கச் செய்து, சுமித்திரை யிடத்திலும் அந்தரியாமியாக வசித்து, இராமனைப் பதினான்குவருடம் காட்டுக்குச் செல்லும்படிக்கும், பரதன் பதினான்கு வருடம் நாடாளும்படிக்கும் செய்விக்க வேண்டும் என்று கூறி கலைவாணியை நோக்கி, தாயே தற்காலம் எங்களைக் காப்பாற்றி யிரக்ஷிக்க வேண்டு மென்று கதறி யிவ்விருவர்களுடைய பாதங்களில் நமஸ்கரித்தார்கள்.

பிரமதேவன் தேவர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி உலக மாதா (சரஸ்வதி) வை நோக்கி நீ பூலோகம் சென்று அவ்விதம் செய் யென்று கூறினர். சரஸ்வதிதேவி அவ்விதமே யென்றுரைத்து அயோத்திக்கு வந்து மந்தரை யென்ற கூனியிடம் பிரவேசித்தாள். அக்கூனியானவள் உப்பரிகையின் மீதேறி யெங்கு பார்த்தாலும் அலங்காரம் செய்யப்பட்டுள்ள அயோத்தியைப் பார்த்து ஆச்சரியமடைந்து கீழே வந்து, தாத்ரி (இராமனை வளர்த்தவள்) யைக்கண்டு,

"ஏ அம்மா! ஏன் நகரத்திலுள்ள பிரஜைகள் எங்கு பார்த்தாலும் அலங்காரம் செய்து குதூகலம் கொண்டாடுகிறார்கள்? கௌசலா தேவி மிகுதியான சந்தோஷமடைந்து, அந்தணர்களுக்குச் சொர்ண தானம், வஸ்திரதானம் முதலியவைகள் செய்கிறது எதற்காக?" என்று கேட்டாள்.

அந்த இராமகைங்கரியத்தில் ஈடுபட்ட அந்த தாத்ரி, "ஏ தாயே! நாளையதினம் ஸ்ரீராமருக்கு இராஜ்ய பட்டாபிஷேக மகோற்சவம் நடக்கப் போகிறது. அதனால் இந்நகரிலுள்ள யாவரும் தத்தம் மனத்தோற்றத்தின் படிக்குள்ள காரியங்களைச் செய்து சந்தோஷமடைகிறார்கள்" என்று கூறினாள்.

அதைக் கேட்ட மந்தரை யென்ற கூனி, சப்பிரகூட மஞ்சத்தின் மீது அம்ஸதூளிகா மெத்தையில் சர்வாலங்கார பூஷிதையாய், காதளவு நீண்டகண்களையுடையவளாய், தனிமையில் சயனித்துக் கொண்டிருக்கும் கைகேயினிடம் வந்து கூறுகிறாள்.

"ஓ நிர்ப்பாக்கியவதியாகக்கூடியவளே! ஏன் சயனித்துக் கொண்டிருக்கிறாய்? இப்போதுனக்கு அரிதான மனக்கிலேசம் வரக் கூடியகாலம் நேர்ந்திருக்கிறது. நீ மிகுதியான சௌந்தரிய முள்ளவளென்றும், அதனால் மகாராஜன் உன்னிடத்தில் மிக்க பிரியமுள்ளவனென்றும் நினைத்து மதத்துடன் நடக்கிறவள். அந்த ராஜன் நாளைய தினம் உன் சக்களத்தி புத்திரனாகிய இராமனுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் நடத்தப் போகிறார்," என்று கூறினாள்.

ஸ்ரீராமனிடத்தில் மிக்க அன்பு வாய்ந்த அக்கைகேயி இதைக் கேட்டு விரைவாக எழுந்திருந்து இரத்தின கசிதமானதும், தேவஸ்திரீகளுக் குரியதுமான தண்டையை அவளுக்கு வெகுமதியாகக் கொடுத்தாள். அவளும் அதைப் பெற்று அதிர்ப்தியோடு வாடின முகமுடையவளாய் நின்றாள்.

உடனே கைகேயி கூனியைப் பார்த்து "நான் சந்தோஷமடைய வேண்டிய காலத்தில், மனக்கிலேசமடையக் காலம் வந்திருக்கிற தென்று கூறினாயே? இராமன் பரதனைக்காட்டிலும் பதின் மடங்கு அதிகமான பிரியத்தை யென்னிடம் வைத்திருக்கிறானே. கௌசலையையும், என்னையும் சமமாக எண்ணி சிசுருஷை செய்கிறானே. அவனால் எனக்கென்ன தீங்கு ஏற்படப்போகிறது. ஏன் அவ்விதம் கூறினாய்" என்று கேட்டாள்.

இச்சமயம் சரஸ்வதியும் கைகேயியின் நாவில் பிரவேசித்தாள்.

கூனி கைகேகியைப் பார்த்து, "ஏ தேவி! இராமனால் எனக்கென்ன தீங்கென்றாயே யதுவுனக்குத் தெரியவில்லையா? ஆனால் நான் சொல்வதைக் கவனத்துடன் கேள். தசரத மகாராஜன் எப்போதும் நீ மோகிக்கும் படியான பிரிய வார்த்தைகளை மட்டும் உன்னிடம் பேசுகிறான். அவன் காமுகன், பொய் பேசுகிறவன். உன்னைப் பேச்சால் சந்தோஷப்படுத்தி விட்டு, அந்தரங்க விசுவாசத்தைக் கௌசலையினிடம் வைத்திருக்கிறான். அது உனக்குத் தெரியவில்லை. இப்போது அந்தக் கௌசலைக்கு நன்மை செய்யவேண்டியதை யுத்தேசித்து, உன்னுடைய பிள்ளை பரதனை அம்மான் கிருகத்துக்கு அனுப்பிவிட்டு அவன் ஊரிலில்லாத சமையத்தில் இராமனுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறான். கௌசலை யதனால் மிகச் சௌகரியத்தை யநுபவிககப் போகிறாள். இன்றைய தினமே தானதர்மங்களெல்லாம் செய்ய ஆரம்பித்துவிட்டாள். சுமித்திரைக்கும் இதனால் நன்மை யேற்படும். ஏனெனில் அவள் குமாரன் இலக்ஷ்மணன் இராமனை அநுசரித்திருக்கிறான். இராமனுக்கு இராஜ்ய அதிகாரம வந்தபோதிலும் அதை நடத்தி சுகத்தை யநுபவிக்கிறவன் இலக்ஷ்மணனே. ஆகையாலவளும் சுகத்தை யநுபவிக்கப் போகிறாள். பரதனோ இராமனுக்குள் அடங்கிய வேலைக்காரனாக இருக்கவேண்டும், அல்லது அயோத்தியை விட்டுப் பரதேசம் செல்லவேண்டும். ஒரு சமையம் இராமன் பரதனைப் பிராணவதை செய்தாலும் செய்வான். இத்தியாதி கஷ்டங்களை யவன் அநுபவிப்பதற்கு நீ தான் காரணமாக இருக்கிறாய். இதிருக்கட்டும்; நானிப்போது உன்னைப்பற்றி நினைச்கில் என் மனம் புழுப்போல் துடிக்கிறது. அதாவது, ஏ கைகேயி! நீ தாதிபோல் கௌசலைக்கும், சுமித்திரைக்கும் ஊழியம் செய்யப்போகிறாய். சக்களத்திமார்களிடம் சிக்கிக்கொண்டு அவமானம் அடைவதைவிட நீ மரணம் அடைவதே நன்மையாகும்.

நான் சொல்வதை யுறுதியாக நம்பு. ஆனால் புத்தி சாலித்தனமிருந்தால் இதில் நின்று தப்பித்துக் கொள்ள நீ முன் செய்த புண்ணிய வசத்தால் ஓர் மார்க்கம் ஏறபட்டிருக்கிறது. நீ இராமனிடம் மிகப் பிரமை கொண்டவளாக இருப்பதால் அம்மார்க்கத்தை யிப்போ துனக்குக் கூறினால், அது புண்ணிற் கோலிட்டது போலாகும்" என்று மிக்கதுக்க மடைந்தவள் போல் விசனிக்கலானாள்.

கைகேயி கூனியிட்ட வலையிலகப்பட்ட மானாகி மனந்திகைத்து அவளை நோக்கி, "நீ சொல்லும் வண்ணம் நான் நடக்கிறேன். ஏதோ மார்க்கம் இருக்கிறதென்று கூறினாயே அதை யெனக்குச் சொல்" என்றாள்.

இதைக்கேட்ட கூனி அகத்தில் களிகூர்ந்து, "ஓ தேவி! நீ மறந்திருக்கலாம். ஆனால் எனக்கு மட்டும் ஞாபகத்திலிருக்கிறது. அதாவது முன்னம் தேவலோகத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பலத்த யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் தேவர்கள் களைத்ததைக்கண்டு தேவேந்திரன் தசரத மகாராஜனை யிச்சமையம் ஒத்தாசை செய்யவேண்டும் மென்று கேட்டுக் கொண்டான். மகாராஜரும், வில்லாளியுமாகிய அரசனுக்கு சாரத்தியம் செய்யத் தக்க தேர்ப்பாகன் அப்போது கிடைக்கவில்லை. ஆயினும் மனந்தளராமல் உன்னைச் சாரத்தியம் செய்யும்படி நியமித்துக் கொண்டு மற்ற தளங்களுடன் தேவலோகத்தில் நடந்த யுத்தத்துக்குச் சென்றார். அங்கு சென்று, தேவர்களுக்குச் சகாயமாக அரக்கர்களுடன் போர்புரியும் போது, சத்துருக்கள் மகா ரதராகிய சக்கரவர்த்தியின் ரதத்தினுள்ள கடையாணி யிற்று விழும்படிச் செய்ததை அரசன் அறியவில்லை, போர் முகத்தில் கவனமாக இருந்தார்.

கூர்மையான புத்தியுடைய நீ மிக்க தைரியத்துடன் ஆணிக்குப் பதிலாக உன்னுடைய இடது கையை மாட்டி வலது கையால் சாரதித் தொழிலையும் செய்து எதிரிகளுக்கு இடங் கொடுக்காமல் அரக்கர்களைச் ஜெயித்து வெற்றி பெறும்படித் தேரை நடத்தினாய்.'

எதிர்த்தோரைச் சம்ஹாரம் செய்யும் சக்தியுடைய தசரதன் அசுரர்கள் யாவரையும் வதம் செய்து வெற்றிபெற்று ஜெயபேரிகை முழங்கின பிறகு இரதத்தை நோக்கி கடையாணி யற்றிருப்பதையும், நீ யிடது கையைக்கொண்டு அச்சமயம் சமாளித்து யுத்தத்தை முடிக்கச் செய்த உன்னுடைய தைரியத்தையும் புத்தி கூர்மையையும் கவனித்து ஆச்சரியமடைந்து, மட்டற்ற சந்தோஷத்துடன் உன்னை ஆலிங்கனம் செய்துகொண்டு, 'ஓ பெண்ணே! நீ யென்னுயிரைக் காப்பாற்றினாய், ஆகையால் உனக்கிஷ்டமான வரத்தைக் கேள். ஸ்திரிகள் இரண்டு வரம் வரையில் கேட்கலாம். ஆகையினால் நானிப்போ துனக்கு இரண்டு வரங் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்' என்று களிப்புடன் கூறினார்.

அதைக்கேட்ட நீ 'ஓ மகாராஜனே! தாங்கள் எனக்கு இரண்டு வரங் கொடுப்பதற்கு மனமிசைந்தால், அவ்விரண்டு வரமும் இப்போது எனக்கு வேண்டாம், எனக்கு அவகாசமுள்ள காலத்தில் நான் பெற்றுக் கொள்கிறேன்,' என்று வணங்கிக் கேட்டுக் கொண்டாய். அதற்கு மனமுவந்து சக்கரவர்த்தி அவ்விதமே யாகட்டுமென்று வாக்களித்து உன்னைச் சந்தோஷப்படுத்தி யழைத்துக் கொண்டு அயோத்தி வந்து சேர்ந்தார்.

இந்த வரலாற்றை நீயே என்னிடம் கூறக்கேட்டிருக்கிறேன். அந்த இரண்டு வரத்தையும் இப்போது பெறவேண்டும். ஒரு வரத்தால், ஸ்ரீராமனைப் பதினான்கு வருடம் வனவாசம் செய்யத் தண்டகாரணியத்துக் கனுப்பவேண்டும். மற்றொரு வரத்தால் பரதனை நாடாளப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்தால் பரதனும் மேன்மை யடைவான். நீயும் உன் கஷ்ட நிலையிலிருந்து விடுபடுவாய். ஆகையால் காலதாமதம் செய்யாமல் சீக்கிரமாகக் கோபங் கொண்டவள் போலக் கோபக்கிருகத்துக்குப் போய், அங்கு உன்னுபரணங்களை யெல்லாம் கழட்டி நான்கு புறத்திலும் இறைத்து விட்டுத் தரையில் படுத்துக் கொள். அரசன் வந்து உன்னிஷ்டப்படி அவ்விரண்டு வரத்தையும் கொடுத்து அதின்படி நடத்தும் வரையில் பிடிவாதமாகவேயிரு. வேறே ஒரு காரியமும் செய்யாதே" என்று கைகேயிக்கு மந்தரை யென்ற கூனி யுபதேசித்தாள்.

திரிகோணமுடைய கூனி கூறியதைக் கேட்ட கைகேயி அவள் வார்த்தையில் பிரமை கொண்டு அவையாவும் தனக்கு நன்மையைத் தரும் என்று நம்பி அவளைப் பார்த்து, "ஓ பிரியமுள்ளவளே! நீ இவ்வளவு சிறந்த புத்தியுடையவள் என்று இதுவரையில் நான் அறியேன். பரதனுக்கு இராஜ்யம் கிடைக்கும் பக்ஷத்தில் உனக்கு நூறுகிராமம் ஸர்வமானியம் செய்கிறேன். நீ எனக்கு எப்போதும் பிராண சிநேகித முள்ளவளாயிருக்க வேண்டும். நீ கூறியபடியே யிப்போதே கோபக் கிருகம் செல்கிறேன். அரசன் என் வார்த்தைக் கிணங்கி இராமனை வனத்துக்கனுப்பாவிடில் என் பிராணனை விடுகிறேன்" என்று பிரதிக்ஞை பண்ணினாள்.

அப்போது கூனி (மந்தரை) "ஓ கல்யாணி! நீ யிதை வைராக்கியத்துடன் நடத்தினால், உனக்கு மங்கள முண்டாகும்" என்று சொல்லித் தன்னிருப்பிடம் சென்றாள். பிறகு கைகேயி, ஆங்காரத்

துடன் விரைவாகக் கோபக் கிருகம் சென்று, ஆபரணங்களையெல்லாம் கழட்டி நான்கு பக்கத்திலும் இறைத்து, அழுக்கு ஆடையையுடுத்தி, மிகவும் மெலிந்தவளாகிப் பூமியில் தலையை விரித்துப் போட்டுக்கொண்டு அலங்கோலமாகப் படுத்திருந்தாள்.

ஓர் மானிடன் தீரனாயினும், மிக்கதயையுள்ளவனாயினும், நற்குணங்களுடைய வனாயினும், நீதிகள் அறிந்தவனாயினும், சாஸ்திரங்கள் கற்றுப் பிறருக்குப் போதிக்கும் குருவாயினும், பாபாநுஷ்டானம் நிறைந்த துஷ்டர்களுடைய சேர்க்கை யடைவானாகில், அத்துஷ்டர்களின் துர்ப்போதனையால் தன்னுடைய நற்குணங்களை யிழந்து கொடிய துர்க்கிருத்தியங்களைச் செய்யத் தயாராகிறான். துர்ச்சனசகவாசம் அவ்விதம் செய்யும் என்பது நிச்சயம்.



## மூன்றாவது சருக்கம்.

தசரதர் ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதற்காக வேண்டிய காரியங்கள் செய்ய மந்திரிக்குக் கட்டளையிட்டபின் சந்தோஷமாய் அரண்மனை சென்றனர். ஆங்கு கைகேயியைக் காணாமல் தசரதர் தான் அரண்மனை வந்ததும், சந்தோஷமாய் வெகு ஆவலோடு பாதச் சிலம்பு கலீரென அன்னமன்ன நடையுடன் வந்து காணும் தன தாருயிர்க்காதலி கைகேயி வாராமைக்குக் காரணம் யாதோ வெனச் சிந்தித்தனர். இயற்கையிலேயே கெட்ட எண்ண முடைய வளாகிய மந்தரை ஒரு வேளை கைகேயியிடம் சென்று ஏதேனும் சொன்னளோ வென்றெண்ணினர். இப்படிப் பலவாறு சிந்தித்தும் தம் மனத்தில் யொரு காரணமும் புலப்படாமையால் அங்கிருக்கும் பணிப்பெண்களைக்கூப்பிட்டு, எனதன்புக்கினிய கைகேயி இன்னும் என்னிடம் வாராமைக்குக் காரணம் யாது, எங்கு சென்றுளென, பணிப்பெண்கள், கைகேயி அம்மை கோபக்கிருகம் போயிருக்கிறார் என்றும் காரணம் இன்னதெனத் தங்களுக்குத் தெரியாதென்றும் சொல்லி தாங்களே அவ்விடம் சென்று தெரிந்து கொள்ள வேணு மென்று வணங்கிச் சொன்னார்கள்.

போர்முனையில் சிறிதும் அஞ்சா நெஞ்சுபடைத்த, அரசசிங்கமான தசரதர்,தாசிகள் சொற்படி கோபக்கிருகம் சென்று,தளர்

வுற்ற மனத்தினராய்க் கைகேயியினிடம் போய் அருகில் உட்கார்ந்து இனிய வசன மொழிந்து, மெதுவாய் முதுகைத் தடவிக் கூறுகிறார், "என தன்புக்கினியாளே! படுக்கை முதலிய ஒன்று மின்றித் தரையில் படுத்திருக்கும் காரணம்யாது? என்னிடம் பேசாமலும் ஆடையாபரணுதிகள் அணியாமலும் அழுக்கு வஸ்திர முடுத்திக் கொண்டிருக்கும் எண்ணம்யாது, என்மேல் உனக்கு உண்டாகிய மனவருத்த மென்ன? சொல்வையாயின் உன்னுடைய மனோரதம் எதுவாயினும் நிறை வேற்றச் சித்தமாயிருக்கிறேன். உனக்கு யாரேனும் இடையூறு விளைத்தனரா? உனக்குத் துன்பம் உண்டு பண்ணினவர் ஆடவரே யாயினும், ஸ்திரியே யாயினும் அவர்களை யிப்போது சிக்ஷிக்கிறேன். வேண்டுமானால் அவர்களை வதம் செய்தாலும் செய்கிறேன். என் கருத்துக் கினியாளே! உன் மணிவாய் திறந்து விஷயம் இன்ன தெனச் சொல்வாய். நான் உனக்குச் செய்யவேண்டிய காரியம் யாதுளது? அது எத்தகையதாயினும் செய்து முடிக்கவும் கூடாத துர்ப்பலமானதாயினும் உன்னிமித்தம் ஓர் க்ஷணத்தில் முடிக்கிறேன். எனது புஜபல பராக்கிரமத்தை நீ யறிந்தவளாயிருந்தும் அறியாதவள் போல் நீ யிப்படி என்னை வருத்தப் படுத்தலாமா? கண்மணீ! உன் பிரியந்தானென்ன? உனக்கு ஹிதஞ் செய்தவன் பரமதரித்திரனே யாயினும் அவனை க்ஷணத்தில் குபேரனுக்குவேன். உனக்கு விரோதம் செய்தவன் சகல சம்பத்துடையவனே யாயினும் அவனைக் கேவலம் பஞதியாக்கி விடுவேன். கொலைக் குற்றம் சாட்டப்பட்டுத் தண்டனை விதிக்கப்பட்டவனையும் விடுதலை செய்யவேண்டுமானாலும் செய்கிறேன். உன் உள்ளக் கருத்தை ஒளியாது வெளியிடுவாய், என்னைக்கேட்டாலும் தரச்சித்தமாயிருக்கிறேன், அஞ்ச வேண்டாம். எனது பிரிய நாயகீ! இன்னுமொன்றும் சொல்கிறேன். எனது ஆவிக்குமாரனும், சத்திய சீலனும், பாராக்கிரம முள்ளவனுமாகிய இராமன் மீது ஆணை யிட்டுக்கூறுகிறேன்; உனக்கு ஆகவேண்டிய காரியத்தைச் சொல்," எனக் கேட்டனர்.

இவ்வாறு இராமன் மீது ஆணையிட்டுக் கூறிய தசரதரின் சொற்களைக் கேட்ட கைகேயி சிறிது வருத்தம் நீங்கினவளாய்க் கண்களைத் துடைத்துக்கொண்டு அரசனைப்பார்த்துக் கூறுகிறாள். "ஓ ராஜ சிங்கமே! நீர் அருளியவாக்கும் செய்த பிரதிக்ஞையும் உண்மை

யானால் நான் கேட்டுக் கொள்வதைச் சிறிது தாமசமின்றிச் செய்தருளவேண்டும். முந்தி தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் யுத்தம் நடந்த காலத்தில் நான் தங்களைக் காப்பாற்றியதற்காக நீங்கள் சந்தோஷப்பட்டு எனக்கு இரண்டு வரம் கொடுக்கிறதாக வாக்களித்தீர்கள். அவ்விரண்டு வரங்களையும் நான் இது வரையில் கேளாமலே விட்டுவைத்திருந்தேன். தங்கள் வாக்குப்படி இப்போது அவ்விரண்டு வரத்தையும் கொடுக்கவேண்டும். அந்த இரண்டு வரங்களில் ஒன்றுக்குத் தங்களால் தயாரிக்கப்பட்டிருக்கும் சகல வஸ்துக்களையும் கொண்டே எனது அன்புள்ள குமாரன் பரதனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைக்கவேண்டும். மற்றோர் வரத்திற்கு ஸ்ரீ பொருந்திய ராமன் மரவுரி தரித்து தண்டகாரண்யம் செல்லவேண்டும். அந்த தண்டகாரண்யத்தில் காய்கனிகளைப் புசித்துக்கொண்டு பதினான்கு வருஷம் வனவாசம் செய்யவேண்டும். அப்பதினான்கு வருஷங்களையும் கழித்து விட்டு இங்கு வரட்டும். இராமன் காலையில் வனம் செல்லவேண்டும். இதுதான் என்னுடைய கோரிக்கை. இந்த இரண்டு வரங்களை, தாங்கள் முன் வாக்களித்தபடியும், இப்போது இராமன் மீது சபதம் செய்தபடியும் நிறைவேற்றா விட்டால் தங்களுடைய திருவடியிலேயே உயிரை விடுவேன். தங்களுடைய சத்தியமான வாக்குத்தத்தத்தை நிறை வேற்ற வேண்டும்," என்றனள்.

இவ்வாறு கைகேயி சொல்லக் கேட்ட தசரதர் மத்தால் உடைபட்ட தண்தயிர் போல மனமுடைந்து, வஜ்ஜிரத்தால் அடியுற்ற மரம் போலத் தரையில் விழுந்து மூர்ச்சையானார். சிறிது மூர்ச்சை தெளி எழுந்து, பெண் புலி போல் எதிரில் நிற்கும் கைகேயியைப் து, "மங்களசொரூப முடையவளே, மனதுக் கினிய கைகேயி! ஏன் இவ்விதம் கேட்டாய்? நீ கேட்ட வரம் என் பிராணனை வாங்கக் கூடியதாயிருக்கின்றதே; நீ செவி நுழைவித்த சொற்கள், உலைக்களத்தில் காய்ச்சிய வேலைக் காதிலிட்டது போலுமிருக்கின்றனவே! செந்தாமரைக் கண்ணனாகிய இராமன் உன்விஷயத்தில் என்ன அபராதம் செய்தான். நீ எப்போதும் இராமனுடைய மங்கள குணங்களையே என் முன் வந்து வர்ணிப்பாயே. பெற்றோர்களைச் சிசுருஷை செய்வதில் இராமன் கௌசலையையும், என்னையும் சமமாகவே பாவிக்கிறான் என்று சொல்வாயே! இப்போது அவன் மீது உனக்கு வந்த

வருத்த மென்ன? நீ இப்போது ராஜ்யத்தை உன்மகன் பரதனுக்கே கொடுத்து விடு, இராமன் இவ்விடத்திலேயே இருக்கட்டும், அவன் விஷயத்தில் எப்படியாயினும் நீ அனுக்கிரகம் செய்ய வேண்டும். இராமனைத் தவிர எனக்குப் பிரியமுள்ள பொருள் உலகில் வேறில்லை. எனது உடல் பொருள் ஆவி யிம்மூன்றும் இராமனாகவே யிருக்கிற படியால் நீ அது விஷயத்தில் மன்னித்தருள வேண்டும்," என்றிரந்து கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகக் கைகேயியின் பாதங்களில் வீழ்ந்தார். கைகேயி தன்னிருகண்களும் சிவந்து கோபாக்கினியோடு அரசனைப் பார்த்து "நீர் எனக்களித்த வரத்தைக் கேட்டேனே தவிர நூதனமாக ஒன்றும் கேட்கவில்லை. நீர் அளித்த வாக்கு பொய்த்துப்போகுமானால் நீர் நரகத்தை யடைவீர். இராமன் நாளைய தினம் காலை மரவுரிதரித்து ஆரண்யம் போகாவிட்டால் சுருக்கிட்டுக் கொண்டாவது அல்லது விஷத்தை யுண்டாவது உமக்கு முன்னிலையிலேயே உயிரை விடுகிறேன் நான் சத்திய வந்தன், பிரதிக்ஞை யுடையவன் என்று பறை சாற்றுகிறீரே, இப்பொழுது இராமன் மீது செய்த சபதத்தைச் சிறிது நேரத்தில் பொய்ப்படுத்தி விட்டீரே" என்றாள். பிரியநாயகியாகிய கைகேயி இவ்வாறு மொழியக் கேட்ட தசரதர் பின்னும் துக்கசாகரத்திலழுந்தினவராய்ப் பிரக்ஞை யற்றுப் பிணம் போல் பூமியில் விழுந்தார். அன்றிரவானது அவருக்கு ஒரு வருஷம் போலிருந்தது.

இஃதிப்படி யிருக்க அருணோதய சமயத்தில் வந்திகள், காயகர்கள், பாடகர்கள் இவர்கள் யாவரையும் கைகேயி கோபித்துத் தடுத்தாள். பிறகு விடியற்காலையில் அரண்மனைக்கு பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், ரிஷிகள், கன்னிகைகள் யாவரும் வந்[illegible]கள். குடை, சாமரம், யானை, குதிரை முதலியவைகள் வந்[illegible] தாசிகள் முதலிய யாவரும் நகரிலுள்ளோரும் வந்து குவிந்தார்கள். வசிஷ்ட முனிவர் ஆக்ஞைசெய்த வண்ணம் யாவும் சித்தமாயிருந்தன. வந்த கூட்டத்தினருள் ஒரு சாரார், மஞ்சள் பட்டாடை யணிந்தவனும், ஆபரணாலங்கிருதனும், தேஜோன்மயமானவனும் சாமளவர்ணனும் மன்மதனைவிடச் சுந்தரனும் புன்னகைகொண்டு விளங்குபவனுமாகிய ஸ்ரீராமன் எப்போது பட்டாபிஷேகம் செய்துகொண்டு வரக்காண்போம் என்றார்கள். வேறுசிலர், சகல லக்ஷணங்களும் அமைந்தவனும் வெண்குடை நிழற்றுபவனுமாகிய இலக்ஷ

மணனை எப்போது காண்போமென்றனர். ஊரிலுள்ளார் சீலத்தை யுடையவனும் சத்திய சங்கற்பனும், ஈசுவரனும், பரிபூரண குணங் களுடையவனும், பண்டிதர்களாலும், வேதங்கள் வேதாங்கங்கள் புராண இதிகாசங்கள், சாஸ்திரங்கள் முதலியவைகளை யறிந்தோரா லும் தவசிகளாலும் வேதப் பிராமணர்கள் முதலியவர்களாலும் சேவி க்கப் படுகிறவனும், ரத கஜ துரக பதாதிகள் சூழப்பெற்றவனுமாகிய இராமனை எப்போது காண்போம், பொழுது எப்போது விடியும் என்று சொல்லிக்கொண்டிருந்தனர்.

இவ்வாறு இவர்கள் பலவாறு இராமனுடைய கல்யாண குணங் களைப்பற்றிப் புகழ்ந்துரையாடிக்கொண்டு அவனுடைய திருவாவைக் காணவேண்டி ஆவலுள்ளவர்களா யிருக்குஞ் சமயத்தில், மந்திரி களுக்குள் சிறந்த சுமந்திரன், அரசன் ஏன் இன்னும் எழுந்திருக்க வில்லை யென்று ஆலோசனை செய்து, அரசனிருக்கு மிடம் சென்று, அரசனுக்கு ஜெயமுண்டாக வேண்டு மெனக் கூறினன். சாஷ்டாங் கமாக மகாராஜனை வணங்கினன். விசாலமான கண்களில் நீர் ததும்ப, மனவிசாரங் கொண்டிருக்கும் தசரதரின் நிலைமையை நோக்கி, அர சன் இவ்வாறு மன வேறுபட்டிருக்கக் காரணம் யாதோ வென்று அருகிருக்கும் கைகேயியைக் கேட்க, கைகேயி, சுமந்திரனைப் பார் த்துச் சொல்லுகிறாள்.

சுமந்திர! அரசன் இரவுமுழுதும் தூங்கவில்லை. இராம, இராம வென்று சொல்லிகொண்டு இராமனையே நினைத்துக் கொண்டிருந் தார். தூங்காமலேயே இருந்து விட்டதால் சுவஸ்த மில்லாதவர் போல் காணப்படுகிறார். அவர் இராமனைப் பார்க்க விரும்பியதால் விரைவிற் சென்று அவனை அழைத்துக் கொண்டுவா என்றனள். அது கேட்ட சுமந்திரன், அரசன் அனுமதியின்றி எப்படி அழைத்து வரக்கூடுமெனத் தேவியிடம் கூற, தசரதர் அவருக்கு இராமனைப் போய் அழைத்து வரும்படி ஆக்ஞாபித்தார். சுமந்திரன் அதிவிரை -வில் இராமன் அரண்மனை சென்றார். அங்கு கருணாநிதியாகிய இராமனைப் பார்த்து, நமஸ்கரித்து எழுந்து அஞ்சலி செய்து ஓ பிரபு வே! தங்களை அரசன் பார்க்க ஆவலுள்ளவராய் இருக்கிறார் என்று அறிவித்துத் தன்னுடன் வரும்படி வேண்ட, அதற்கு இராமனும் இசைந்து பரபரப்புடன் இரதத்தின் மேலேறிக்கொண்டு சுமந்திரன்

சாரத்தியஞ்செய்ய அதிவிரைவாக லக்ஷ்மணனுடன் சென்று தந்தை யாகிய தசரதர் திருவடியில் வணங்கினார்.

மிக்க ஆவலுடன் இராமனுடைய வரவை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் தசரதர், அவன் வருவது கண்டு எழுந்திருந்து, தமது தடம் பொருந்திய கைகளை நீட்டி இராமனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு இராமா வெனச்சொல்லி துக்கம்மேலிட்டுத் தரையில் வீழ்ந்தார். அது கண்ட இராமன் திடுக்கிட்டெழுந்து தந்தையைத் தூக்கி மார்போடணைத்து மடியுறவிருத்தி வைத்துக் கொண்டார். அரசன் ஒன்றுந் தோன்றாதவராய் மூர்ச்சையாகினர். அதைக்கண்ட ஸ்திரீகள் எல்லோரும் மிக நடுங்கி அலறினார்கள். அச்சமயம், அங்கு விஜயஞ் செய்த வசிஷ்டமுனிவர் அரசன் இவ்வாறு துக்க மடைவதற்குக் காரணம் யாதெனக் கேட்டதும், இராமன் காரணம் இன்னதெனத் தெரியாதவனாய்ப் பிரமித்து நிற்க, கைகேயி இராம னைப்பார்த்துக் கூறுகிறாள்.

"உனது பிதா துக்கம் மேலிட்டுத் தரையில் விழுந்ததற்கு நீ தான் காரணஸ்தன். மகாராஜாவுக்கு உண்டான துக்கத்தை மாற்ற ஓர் நன்மையான காரியத்தைச் செய்யவேண்டும். ஓ இராம! நீ தந்தை சொல் வழுவாத சத்தியவந்தனாகையால் அவருக்கு உண்டா யிருக்கும் துக்கத்தை மாற்றி, அவர் எனக்குக் கொடுத்த வாக்குச் சிறி தும் பிசகாவண்ணம் செய்வித்து அவரைச் சத்தியவானாக்கவேண்டும். மகாராஜாவாகிய உன் தந்தை எனக்கு அன்போடும் முழுமனதோ டும் ஆதியில் இரண்டு வரம் தந்திருக்கிறார். அது உன் நிமித்தமா கவே ஆகவேண்டிய காரியமாயிருக்கிறது. அக்காரியம் உன் ஆதீன மாகவும் இருக்கிறது. அரசன் அதை உன்னிடம் வெளியிட கூடாதபடி வருத்தத்தை யடைந்திருக்கிறார். சத்தியமாகிய பாசக் கயிற்றால் நன்கு பிணிப்புண்ட தந்தையை நீ காக்கவேண்டும். புத்திர னானவன் தந்தையைப் புத்தென்னும் நரகத்திலிருந்து காப்பதா லன்றோ அவன் புத்திரனென்று சொல்லப்படுகிறான். அதுபோலவே தந்தையின் வாக்கை மெய்ப்படுத்தி அவரைச் சத்தியவானாக்குபவனே சத்தியவந்தனாவான்" என்றனள்

இவ்வாறு கைகேயி கூறியது கேட்டு, இராமன் அவள் பாதசர விந்தங்களில் விழுந்து நமஸ்கரித்து, "அம்மணி! நீர் ஏன் இவ்விதம் பேசவேண்டும்? ஏனெனில் என் பிதாவுக்குற்ற வருத்தமு யாதோ?

என் தந்தைக்காக உயிரைத் திரணமாகமதித்து விஷத்தையும் பானம் செய்வேன்; சீதையையும் கைவிடுவேன். என்னைப்பெற்ற அன்னை கௌசலையையும் தியாகம் செய்வேன். இந்த இராஜ்யத்தையும் துறப்பேன். எந்த புத்திரன் தந்தையின் ஆக்ஞையில்லாமலே அவருக்கு நன்மையான காரியத்தைச் செய்கிறானோ அவன் உத்தமனாகிறான். தந்தை கட்டளையிட்டபின் செய்பவன் மத்தியதரமுடையவனாகிறான். தந்தையுத்தரவிட்ட பின்னும் செய்யாதவன் அதமனாகிறான். ஆகையால், எனக்கு என் தந்தை எவ்விதமான ஆக்ஞையிட்டாலும் சிறிதும் குறைவின்றிச் செய்கிறேன். இது சத்தியம் சத்தியம்" என்றான்.

இதைக் கேட்டதும் கைகேயி ஒருவாறு திருப்தி யடைந்து, "இராமா! நீ உத்தமகுணம் வாய்ந்தவனே, தந்தைக்கு வந்த மனக்குறையைத் தீர்க்கவல்லவனே எனக்கும் இது தெரியும். உன் தந்தை எனக்கு ஆதியில் இரண்டு வரம் அருளியிருக்கிறார். அவ்வரங்களிரண்டையும் இது வரையில் யான் அவரிடமே அடைக்கலமாக வைத்து இப்போது அவைகளைப் பூர்த்தி பண்ணும்படி கேட்டேன். அவற்றில் ஒன்று, உனக்கு இப்போது செய்யவிருக்கும் பட்டாபிஷேகத்திற்குச் சேகரித்திருக்கும் சாமக்கிரிகைகளைக்கொண்டு என் பிரிய புத்திரன் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும், மற்றொன்று, நீ தந்தையின் ஆக்ஞைப்படி, மரவுரி தரித்து ஜடைகளணிந்து இக்கணமே விரைவாக வனம் செல்லவேண்டும். அங்கு நீ இப்படி பதினான்கு வருஷம் வரையில் வாசம் செய்யவேண்டும். அவ்விடத்தில் முனிவர்கள் புசிப்பதை நீ புசித்திருக்க வேண்டும். பிதா வளித்த வாக்கைச் சத்தியப்படுத்துவதற்கு அவரின் பொருட்டு நீ செய்யவேண்டிய காரிய மிதுவேயாகும். இவ்விரண்டு வரங்களையும் நான் அவர் ஆதியில் கொடுத்த வாக்கின் படி நிறைவேற்றக் கேட்டுக்கொண்டதால் அவர் உன்னிடம் அதை எப்படிச் சொல்வதென மனவருத்த மடைந்து விழுந்து விட்டார். தந்தையைத் தேற்றி அவர் வாக்கை மெய்ப்பிப்பதே யுனது கடமையாகும்" என்றாள்

இரகுநந்தனன் கைகேயியைப்பார்த்து "அம்மணீ! பரதனுக்கே இந்த ராஜ்ய மிருக்கட்டும், நான் தண்டகாரண்யம் செல்கிறேன், தந்தை என்னிடம் இதைச் சொல்லி யிருப்பாரானால் நான் இதுவரையிலும் தாமதித்திருப்பேனா? அவர் வாக்குக்குப் பங்கம் வரும்படி செய்விப்பேனா? உங்களுக்கு மனவருத்த முண்டுபண்ணுவேனா?

தந்தை என்னிடம் இதைச் சொல்லாத காரணம் யாதோ அறி கிலேன்,” என்றார்.

தசரதர் இராமரின் கம்பீரமும் கருணையும் வாய்ந்த சொற்களைக் கேட்டு, துக்கத்தால் பின்னும் துன்பமடைந்து, “இரகுநந்தனா! நான் ஸ்திரீயால் ஜெயிக்கப்பட்டவன், பிரமமுள்ள மனதுடையவன், கெட்ட வழியில் இருப்பவன். என்னை நிக்கிரகம் செய்து இந்த ராஜ்யத்தை நீ கிரகித்துக் கொள், உனக்கு அதனால் பாவமில்லை. இவ்விதம் செய் தால் அசத்தியம் என்னைத் தொடருமே” என்று பிரலாபித்தார்.

ஏ இராமா! உலகங்களுக்கு நாதனே! என் பிராண பிரியனே, நீண்டகண்களை யுடையவனே, ராஜ சிரேஷ்டனே, சூரியவம்சத் தைப் பரிசுத்தம் செய்தவனே, பூரணசந்திர முகமுடையவனே மானிடர்களுட் சிறந்தவனே! என்னைவிட்டு எவ்விதம் பயங்கரமான ஆரண்யம் செல்ல விரும்புகிறாய்” என்று இராமனைக் கட்டிக்கொண்டு வாய்விட்டுக் கதறினார்.

நீதி மார்க்கம் அறிந்தவருட் சிறந்தவனாகிய ஸ்ரீராமன் கையில் ஜலமெடுத்து தன் தந்தையின் கண்களைத் துடைத்து, “பிதாவே! நீர் இந்த விஷயத்தில் ஏன் வருத்தமடைய வேண்டும்? என் தம்பி பரதன் ராஜ்யத்தைப் பரிபாலிக்கட்டும். நான் உமது பிரதிக்ஞையை நிறை வேற்றி விட்டு மறுபடியும் இந்நகருக்கு வருகிறேன். நான் வனத் தில் வாசம் செய்தால், ராஜ்யத்தை அடைந்துண்டாகும் சுகத்தைக் காட்டிலும் கோடி மடங்கு சுகம் அங்குண்டாகும். தங்களுடைய சத்தியத்தையும் காப்பாற்றுவதாகும். என் சிற்றன்னை கைகேயி அம்மைக்கும் திருப்தியாகும். என் தாயார் கௌசல்யா தேவிக்குச் சமாதானம் சொல்லி, ஜானகியுடன் மறுபடியும் இங்கு வந்து தங் களை நமஸ்கரித்து வனம் செல்லுகிறேன்” என்று சொல்லி தந்தை யை வணங்கி, தாயாகிய கௌசல்யா தேவியைப் போய்க் காண இலக்ஷ்மணனுடன் சென்றனன்.

அப்போது கௌசல்யா தேவி இராமனின் நலத்தைக் கோரி விஷ்ணுவை பஜித்துக்கொண்டு, பிராமணர்களைக் கொண்டு ஓமம் செய்தும், அவர்களுக்கு அளவிறந்த பொருட்களைத் தானம் செய் தும், ஒருமைப்பட்ட மனத்துடன் விஷ்ணுவைத் தியானித்துக் கொண்டிருந்தாள். இராமன் வந்ததை அவள் காணவில்லை.

---

## நான்காவது சருக்கம்.

---

இவ்வித நிலைமையிலிருக்கும் ராஜ பட்டமகிஷியாகிய கௌசல்யாதேவியைச் சுமித்திரை பார்த்து, இதோ ராமச்சந்திரன் வந்திருக்கிறான் எனவும், கௌசல்யாதேவி விழிமலர்ந்து இராமனை யணைத்து உச்சிமோந்து மடி மீது வைத்துக்கொண்டு, கருநெய்தல் போன்ற காந்தியை யுடைய சரீரத்தைத் தடவிக்கொடுத்து, அடா கண்மணீ அறுசுவை யுணவை யுண்பாயெனக்கூற, இரகுநந்தனன், "அம்மணீ! நான் போஜனம் செய்யும் சமயம் இது வன்று, நான் இப்போதே தண்டகாரண்யம் செல்லவேண்டும். சத்தியநெறி தவறாத என் பிதா, எனது சிற்றன்னையாகிய கைகேயி யம்மைக்குக் கொடுத்த வரத்தின் படி, பரதன் ராஜ்யபாரம் செய்யவும், நான் தண்டகாரண்யம் செல்லவும் வேண்டும். அவர், கைகேயிக்கு அருளிய வாக்கு பொய்த்துப் போகா வண்ணம் 14 வருஷம் அவ்வனத்தில் முனிவருடன் வாசம் செய்து விட்டு மறுபடியும் வந்து சேருகிறேன் தாங்கள் விசாரமடைய வேண்டாம்," என்றனர்.

அது கேட்ட கௌசல்யை உடனே மூர்ச்சை யடைந்து, பிறகு எழுந்து துக்கக்கடலில் முழுகினவளாய் இராமனைப் பார்த்து, "ஏ இராமா! நீ வனம் செல்வதாயிருந்தால் என்னையும் அழைத்துச் செல்; நான் உன்னை அரைக்ஷணமும் பிரிந்து உயிர் வாழேன். பசுவானது கன்றைவிட்டு எப்போதும் பிரிந்திராதது போல், என் பிராணனை டப்பிரியமுள்ள குமாரனாகிய உன்னைவிட்டுப் பிரிந்திருக்க நான் மனம் சகிப்பேனோ? அரசன் பரதனிடம் அன்பு வைத்திருந்தால் அவனுக்கே இராஜ்யத்தைக் கொடுக்கட்டும், பணிவும் பக்தியும் கொண்ட உன்னை யேன் வனத்திற் கனுப்பவேண்டும்? வரங்கொடுத்த அரசன் கைகேயிக்குப் பொருள் யாவற்றையும் கொடுக்கட்டும்; நீ கைகேயிக்காவது உனது பிதாவுக்காவது என்ன அபராதம் செய்தாய். உனக்குப் பிதா எவ்விதம் பெருந் தன்மையுள்ளவரோ அதைவிட நான் பெருந் தன்மையுள்ளவள். அவர் உன்னை வனம் செல்ல உத்தரவு கொடுத்தால், நான் இப்போது செல்ல வேண்டாமென்த் தடை செய்கிறேன். நீ என்னுத்தரவைக் கடந்து அரசன் உத்தரவுப்படி சென்

றால் என் பிராணனை அப்பொழுதே விட்டு எமனுலகடைவேன்" என்றாள்.

அச்சமயம் இலக்ஷ்மணன் கோபங்கொண்டு, வீரரும், சத்தியமான பிரதிக்ஞையுடையவரும், இந்திரியங்களை ஜெயித்தவரும், விசாலமான கண்களை யுடையவரும், கார்முகில் வண்ணரும், சங்கம் நிகர்த்த கழுத்துடையவரும், விரிந்த மார்புடையவரும், நீண்ட கைகளுடையவரும், சிவந்த குண்டல மணிந்தவரும் அங்கலக்ஷணமுடையவரும், மிகத்தீரருமான இராகவனைப்பார்த்துக் கூறுகிறார்:

"அண்ணா! பைத்தியமும் பிரமமும் கொண்டவரும் கைகேயியின் ஸ்வாதீனத்தில் இருப்பவருமாகிய தந்தையைக் கட்டி விட்டுப் பரதனையும் அவன் அம்மாளையும் கொல்லுகிறேன். நான் உலகங்களைக் கொளுத்தி விடுகிறேன். என் சௌரியத்தை இப்போது தேவர்களும் காணட்டும். சத்துருக்களைச் சங்கரிக்கும் திறமை வாய்ந்த நீர் இப்போது பட்டாபிஷேகம் செய்து கொள்ள முயற்சி செய்யலாம். அந்த மகோற்சவத்திற்கு விக்கினம் செய்பவர்களை நான் வில்லும் கையுமாயிருந்து ஹதம் செய்கிறேன்" என்றார்.

தன்னை என்றும் பிரியாதவனும், மகாதீரனும் பிறர் ஒத்தாசை தேடாத வீரத்தன்மையுள்ளவனும், சுமித்திரையின் அருந்தவப் புதல்வனுமாகிய இலக்ஷ்மணன் இவ்வாறு சொல்வதைக் கேட்ட இரகுநந்தனன், அவனை அன்புடன் ஆலிங்கனம் செய்து, "ஓ ரவிகுலச் சிரேஷ்டனே! நீ பராக்கிரமசாலி தான், உன் பலம் யாவற்றையும் நான் அறிவேன்; என் விஷயத்தில் நன்றி செலுத்திப் பாடுபடுபவனே! இருந்தாலும் சமயமில்லையா, யோசிக்க வேண்டாமா? இதோ காணப்படுகிற பிரபஞ்சமும், இந்த ராச்சியமும், தேகம் முதலியவைகளும் உண்மையானால் இவைகளில் நீ பிரயாசைப்படுவது பிரயோஜனமுள்ளதாகும். கேவலம் அநித்யமான இவைகளில் வீண்பிரயாசைப்படுவதில் என்னபலன்? போகங்கள், மேகக்கூட்டங்களி லிருக்கும் மின்னல்கள் போன்ற சஞ்சலங்கள்; ஆயுளும், அக்னியால் நன்று தாபமடைந்த லோகத்திலிருக்கும் ஜல பிந்து போன்றது. சர்ப்பத்தின் வாயிலகப்பட்ட தவளையானது, காட்டு ஈக்களை விழுங்குவது போல், காலாக்னியால் விழுங்கப்பட்ட மானிடன் அநித்தியமான போகங்களை விரும்புகிறான். சரீர சுகத்திற்காக இரவும் பகலும் மானிடன்

கருமங்களை வெகு பிரயாசத்துடன் செய்கிறான். சரீரமோ புருஷனைத் தவிர வேறாகக் காணப்படுகிறது. தந்தை, தாய், புத்திரன், தாரம், பிராதா, பந்து ஜனங்கள் இவைகளின் சேர்க்கையானது பிராணிகளுக்குத் தண்ணீர்ப் பந்தல் நிழல் போலும், நதியில் கட்டைகள் போலும் உள்ளது. பொருளானது மரத்தின் நிழல் போன்றது, சபலத்தன்மை யுள்ளதெனப் பிரசித்திபெற்றது. யௌவனமானது கடலிலெழும் அலைகளைப்போல் அநித்யமானது. ஸ்திரீகளின் சுகமானது சொப்பனத்திற் கொப்பானது. ஆயுளோ அற்பமானது. ஆயினும் பிராணிகளுக்கு இந்த அபிமானம் ஏற்படுவது ஆச்சரியம். சம்சார வாழ்க்கையும் சொப்பனத்திற் கொப்பானது தான். எப்போதும் இராகம் முதலியவைகளால் நிறைந்தது. * கந்தருவ நகரம் போன்ற தன்மையுடையது. மூடன் அந்த சம்ஸாரத்தை அநுசரிக்கிறான்; சூரியன் உதயமாவதாலும், அஸ்தமனமாவதாலும் ஆயுளானது நாட்கணக்கிடப் படுகின்றது. தம்பி இலக்ஷ்மணா! மற்றவர்களுக்குண்டாகும் மூப்பையும், மரணத்தையும் நேரிற் பார்த்தும் ஏன் அறியாமலிருக்கிறாய்! மூடத்தன்மையுள்ளவன் இரவு பகல் கூடிய ஓர் நாள் வாழ் நாளை விழுங்குகிறதென்று நினையாது சுகத்தை அநுபவித்துக் கொண்டிருக்கிறான். காலத்தின் வேகத்தைக் கவனிப்பதேயில்லை. இந்த ஆயுளானது பக்குவமாகாத தோண்டியிலுள்ள ஜலம் போல், ஒவ்வொரு க்ஷணத்திலும் சிதறுகிறது. வியாதிகள் சத்துருக்கள் போலச் சரீரத்தைத் துன்பப்படுத்துகின்றன. மூப்பும், மரணமும் புலி போல் துரத்திக் கொண்டிருக்கின்றன. மரணமானது அவன் கூடவே இருக்கிறது. சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கிறது. மானிடன், தேகமே தான் என்று பாவித்து நான் அரசன், நான் உலகத்தில் பிரசித்தி யடைந்தவன், என்றெண்ணுகிறான் துவக்கு, அஸ்தி, மாம்ஸம், விஷ்டை, மூத்திரம், ரேதஸ், இரத்தம் ஆகிய இவைகளுடன் கூடினதும், விகாரமுள்ளதும, பரிணமமடைவதுமாகிய இந்த சரீரமானது எவ்விதம் ஆத்மாவாகும்

தம்பி இலக்ஷ்மணா! இந்த சரீரத்தை ஆசிரயித்தல்லவா உலகத்தைக் கொளுத்திவிடுகிறேன் என்கிறாய், தேகத்தில் அபிமானமுள்ளயாவும் தோஷங்களெனவே கூறப்படுகின்றன. 'சரீரமே நான்'

---

* கந்தருவநகரம் = ஆகாயத்தில் மேகங்களில் தோன்றும் விசித்திரமான அமைப்புள்ள நகரம்.

என்ற புத்தியை அவித்தை யென்று கூறப்படுகின்றது. 'சரீரம் நானல்ல, நான் சிற்சொரூபனாகியவன்' என்ற புத்தியை வித்தை யென்று கூறப்படுகின்றது. அவித்தையானது சம்ஸாரத்திற்குக் காரணமாகின்றது. வித்தையானது சம்ஸாரத்தைப் போக்குகின்றது. ஆகையால், மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்கள் வித்தையை அப்பியாசம்செய்வதில் எப்போதும் முயலவேண்டும். சத்துருக்களைச் சங்கரிக்கும் சக்தி பெற்றவனே! அவித்தையை அப்பியாசம் செய்யாதே. மோட்சத்துக்குச் சத்துருவாகியவை காமம், வெகுளி, மயக்கம் இவைகளே. இவைகளிலும் மோக்ஷமார்க்கத்திற்கு இடையூறுண்டு பண்ணக்கூடியது கோபம். அந்தக் கோபத்தை ஒருவன் கொள்வானாகில், தந்தை, தமயன் தம்பிகள், பிள்ளைகள் இவர்களைக் கொன்று விடுவான். மனதிற்குத் தாபமுண்டாவதற்குக் கோபமே காரணம், தருமங்களுக்கு நாசத்தை யுண்டு பண்ணவும் கோபமே காரணம். ஆகையால், தம்பி இலக்ஷ்மணா! கோபத்தை விட்டுவிடு. கோபமே பிரத்தியக்ஷ யமனாகிறது. ஆசை வைதரணி (எமபுரத்திலுள்ள ஆறு) என்னும் நதியாகிறது. சந்தோஷமோ நந்தனம் என்ற உத்தியானமாகிறது. சாந்தமோ காமதேனுவாகிறது. அன்ப! நீ சாந்தத்தையே கைக்கொள்; உனக்குச் சத்துருவே ஏற்படான்.

பிரிய இலக்ஷ்மணா! தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், புத்தி இவைகளுக்கு வேறுபட்டது ஆத்மா. அந்த ஆத்மாவே சுத்தன், சுயஞ்சோதி, ஸ்வரூபன், விகாரமடையாதவன், ஆற்றுதியற்றவன்; ஆத்மாவானது தேகம், இந்திரியங்கள், பிராணன் இவைகளுக்கு வேறாக ஏற்பட்டதென்று அறியாதவர்கள் சம்ஸார துக்கங்களால் துன்பமுறுகிறார்கள். ஆகையால் தம்பி இலக்ஷ்மணா! நீ ஆத்மாவை, தேகம் முதலியவற்றைவிட வேறு பட்டதென்று இருதயத்தில் பாவனைசெய்து கொண்டு, புத்தி முதலியவைகளுக்கு வெளியிலிருக்கும் யாவற்றையும் நீ அநுசரித்திருக்கவேண்டும். நீ வருந்த வேண்டாம். பிராரப்தமான சுகத்தையோ துக்கத்தையோ அநுபவித்துக்கொண்டே, சிருஷ்டிப் பிரவாகத்திலுள்ள காரியங்களை நீ செய்து கொண்டிருந்தால், உலகத்தில் பற்றுதலடையமாட்டாய், வெளிக் காரியங்கள் யாவற்றிலும் நான் கர்த்தாவென்பதை வகித்தவனாயினும், மனதில் சுத்தமான சுபாவமுடையவனாகில் கருமங்களால் பற்றுதலடையமாட்டான். நான் கூறிய யாவற்றையும் இருதயத்தில்

எப்போதும் பதிடச்செய்து கொள், சம்ஸார துக்கம் எவற்றாலும் எப்போதும் நீங்கடையமாட்டாய்," என்றார்.

பிறகு கௌசல்யா தேவியை நோக்கி இராமர் "அன்னையே! நான் இப்போது கூறிய யாவற்றையும் தாங்களும் எப்போதும் இருதய கமலத்தில் பதிபச்செய்து கொள்ளுங்கள். என் வரவை எதிர்பார்த்திருங்கள்; வெகு காலம் வரையில் துக்கமடைய மாட்டீர்கள். கர்ம மார்க்கத்தை அனுசரித்திருப்பவர்களுக்கு எப்போதும் ஒரே இடத்தில் வாசம் செய்யமுடியாது; நதியின் பிரவாகத்தில் விழுந்த தெப்பம் போலல்லவா கர்ம மார்க்கமாகிறது; அம்மணீ! 14 வருஷங்களும் எனக்கு அரைக்ஷணமாகும், எனக்கு உத்தரவு கொடுங்கள்; துக்கத்தைத் தூரத்தில் தள்ளிவிடுங்கள்; நீங்களிவ்விதமாக இருந்தால் நான் வனத்தில் சுகமாக வாசம் செய்வேன்," என்று உரைத்துத் தாயின் பாத கமலத்தில் விழுந்து வணங்கினார்.

இப்படி வணங்கின இராமனை, அவன் தாயாகிய கௌசல்யாதேவி வாரியணைத்து மடி மீதிருத்தி ஆசீர்வதித்து, நீ செல்லும் போதும், இருக்கும்போதும், தூங்கும் போதும், உன்னைத் திருமூர்த்திகளும் கந்தர்வர்களும், தேவர்களுங்கூட இருந்து ரக்ஷிக்கவேண்டுமென்று கூறி, ஆலிங்கனம் செய்து பிரயாணப்படுத்தினாள். அப்போது இலக்ஷ்மணர் ஸ்ரீராமனை நமஸ்கரித்து "அண்ணா! தங்கள் வாக்கால் என் மனதிலுள்ள சந்தேகம் நீங்கிற்று. தங்களுக்கு எப்போதும் ஊழியம் செய்வதற்காகக் கூட வருகிறேன். அடியேனுக்கு அநுக்கிரகிக்கவேண்டும், இல்லாவிட்டால் இப்போதே என் பிராணனைவிட்டு விடுகிறேன்" என, இராமன் "நீயும் வா தாமதம் செய்யாதே" என்றார்.

பிறகு ஸீதைக்குச் சமாதானம் சொல்ல சீதாபதியாகிய இராமச்சந்திரன் அவள் அரண்மனை வரவும், சீதா பிராட்டி சந்தோஷமுகத்துடன் அவரை வரவேற்று உபசரித்து, பாதகமலங்களை அலம்பி, பணிந்து நிற்க இராமன் ஆசனத்தில் அமர்ந்தனர்.

சீதா பிராட்டி அவரை வணங்கி, "தேவா! தாங்கள் கிரீடமின்றி, ரத கஜ துரக பதாதிகளாகிய சேனையின்றி, வெண்குடையின்றி, வாத்திய முழக்கமுமின்றி விரைவாக வந்த காரணம் யாதோ தெரியச் சொல்லவேண்டும்," என்று கேட்க இராகவன் புன்னகையுடன் கூறுகிறார்.

'மங்கள வடிவமானவளே! எனது பிதாவாகிய தசரத மகா ராஜன் தண்ட காரண்யம் முழுவதையும் எனக்கு ராஜ்யமாகக் கொடுத்தார். ஆகையால் அதைப் பரிபாலனம் செய்ய நான் விரைவாகச் செல்லவேண்டும். நான் வனம் சென்ற பின்பு நீ மாமிமார்களின் சம்மதப்படி நடந்து கொள்ள வேண்டும். என் தாய் கௌசல்யா தேவிக்குச் சிசுருஷை செய்வதில் மிக்க கவனமாயிரு' என்று சொல்லவும், சீதா பிராட்டி வாடிய முகத்துடன் இராமனை வணங்கிக் கூறுகிறாள்.

"ஓ பிராணநாயக! மகாத்மாவாகிய தங்கள் தந்தை எதற்காகத் தங்களுக்கு வனராஜ்யம் கொடுத்தார்" என்று கேட்க, "என் பிதா என் சிற்றன்னை கைகேயி யம்மைக்குப் பிரீதியுடன் ஆதியில் இரண்டு வரம் கொடுத்திருந்தார். கைகேயி அவ்விரண்டு வரங்களையும் பூர்த்தி செய்விக்கும் நிமித்தமாக, பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து அவன் ராஜ்ய பரிபாலனம் செய்யவேண்டுமென்றும், நான் வனம் சென்று அவ்விடத்தில் 14 வருஷமிருந்துவிட்டு வரவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ள, சத்யவாதியாகிய என் தந்தை, கொடுத்த வாக்கை மறுக்காது அவ்விதம் உத்தரவு செய்துவிட்டபடியால் நான் விரைவில் வனம் செல்லவேண்டும்" என்றனர்.

இவ்வாறு இராகவன் உரைக்க, ஜானகி, "பிராணபதீ! நான் தங்களைவிட்டு அரைக்ஷணம் பிரிந்திருப்பேனோ? என்னைவிட்டுத் தாங்கள் மட்டும் போவது உசிதமாகுமா, தங்களுடைய நிழலான என்னை விடுத்து எவ்வண்ணம் செல்வீர். உயிரும் உடம்புபோல் இருந்த யானும் தங்களுடன் வருவேனேயன்றி, தனித்திருந்து உயிர்வாழேன்" என்று பிரலாபித்துக்கூற, இராகவன் பத்தினியைப் பார்த்து "ஸீதா! உன்னை எவ்விதம் ஆரண்யம் கூட்டிச்செல்வது? அந்த ஆரண்யமோ துஷ்ட மிருகங்கள் நிறைந்தது, மானிட மாமிசத்தைப் புசிக்கும் ராக்ஷசர்கள் வசிப்பது, அங்கு சென்றால் துவர்ப்பும் புளிப்புமான பழ வர்க்கங்களையும் கிழங்குகளையும் சாப்பிட்டு வாழவேண்டும். அவைகளும் ஒவ்வொரு காலத்திற்றான் கிடைக்குமே யன்றி எக்காலத்திலும் கிடைக்கா. எங்கும் முட்களும் கற்களும் நிறைந்த வழியாகத்தானிருக்கும். அப்பேர்ப்பட்ட வழியில் கால்நடையாகத்தான் செல்லவேண்டும். குகைகளும் புதர்களுமுண்டு, அவ்வாரண்யம் மிகவும் குளிர்ச்சி பொருந்தியது, அந்த ஆரண்யத்தில வாழும் ராக்ஷசர்

களைப் பார்த்தால் உடனே நீ உயிர் விடுவாய், ஆகையால் நீ வீட்டிலேயே யிரு, சீக்கிரமாகவே என்னைப் பார்ப்பாய்" என்றார்.

ஜானகி பயமும் பக்தியும் கொண்டவளாய், "பிராணநாயக! தாங்கள் தர்மமறிந்தவரா யிருந்தும், தயையுள்ளவரா யிருந்தும், பதிவிரதையும் தங்களைப் பிரியாதவளுமாகிய என்னை ஏன் விட்டுப்போக விரும்புகிறீர். நான் வனத்தில் தங்களுடன் வாசம் செய்யும்போது என்னை எவன் ஆக்ரமிப்பான்? தாங்கள் புசித்து மிகுந்த மூலமோ பழமோ எதாயினும் அதுவே எனக்கு அமிர்தத்திற்கு ஒப்பாகும். நான் தங்களுடன் சந்தோஷமாய்ச் சஞ்சரிப்பேன், தங்களுடன் சஞ்சரிக்கும்போது, எனக்கு அவ்வாரண்யத்திலிருக்கும் முட்களும் நாணல்களும் கற்களும் புஷ்பமயமான விரிப்புக்குச் சமமாகும் சந்தேகமில்லை. நான் தங்களை வருத்தாமல் தங்களுடைய காரியத்தைச் சாதிப்பவளாகவே யிருப்பேன். நான் குழந்தையா யிருக்கும் பொழுதே, ஜோதிட சாஸ்திரியொருவர், என்னைப் பார்த்து நீயுன் கணவனுடன் சிலகாலம் காட்டில் வசிப்பா யென்று கூறியுள்ளார். அவ்வந்தணன் சத்தியவாதி யாகட்டும். நான் தங்களுடன் வருகிறேன். தடுத்தால் இப்போதே என் பிராணனை விடுவேன்." என்றாள், ஸ்ரீராமபிரான் ஸீதையைப் பார்த்து, நீ விரைவில் என்னுடன் வரலா மென்றாக்ஞாபித்து வசிஷ்டர் பத்தினி அருந்ததி தேவிக்கு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கொடுத்துப் பிராமணர்களுக்கு வேண்டும் திரவியமீந்து வனம் செல்வோ மென்றுரைத்து, அந்தணர்களை யழைத்து வரும்படி இலக்ஷ்மணனுக் கறிவித்து, அவரால் தருவிக்கப்பட்டவர்களுக்கு நல்ல பசுக்களையும், சிறந்த ஆடையாபரணங்களையும், அநேகம் பொருள்களையும் தானம் செய்து, குடும்பிகளுக்கும் சாஸ்திர ஆராய்ச்சியுடையவர்களுக்கும் மற்றவர்களுக்குமாகப் பல விதமான பொருள்களையுந் தானம் செய்தார்.

ஸீதா தேவி முக்கியமான ஆபரணங்களை அருந்ததி தேவிக்குக் கொடுத்தபின், இராமரின் தாயார் அரண்மனைச் சேவகர்களுக்கும், தன் அரண்மனையில் வசிப்பவர்களுக்கும், நகரத்திலுள்ளவர்களுக்கும் மற்றும் யாவருக்கும் ஆயிரக்கணக்காகப் பொருளைத் தானம் செய்தனள்.

இலக்ஷ்மணனோ தன் தாயாகிய சுமித்திரையைக் கௌசல்யா தேவியிடம் ஒப்புவித்து, வில்லுங்கையுமாய் இராமர் முன்னிலையில்

வந்து நிற்க, இராமபிரான், இலக்ஷ்மணனை யழைத்துக் கொண்டு, ஸீதையுடன் புறப்பட்டு, நகரத்திலுள்ளோரைச் சந்தோஷ முகத்துடன் பார்த்துக் கொண்டு இராஜ வீதி வழியே சென்று தன் தந்தையின் அரண்மனை சென்றனர்.

## ஐந்தாவது சருக்கம்.

ஸ்ரீராமபிரான் தம் தேவியுடனும், தம்பி இலக்ஷ்மணனுடனும் ராஜவீதி மார்க்கமாய்ச் செல்வதைக்கண்ட நகரிலுள்ள ஜனங்கள் யாவரும், தசரதர் கைகேயிக்குக் கொடுத்த வரம் முதலியவைகளைக் கேட்டுத் துக்கமுடையவர்களாகி, "ஆச்சரியம்! ஆச்சரியம்! சத்திய வந்தராகிய தசரத மகாராஜர் ஸ்திரீயின் நிமித்தமாகக் காமவெறி கொண்டு, தமது மைந்தனாகிய இராமன் மீது அன்புடையவரா யிருந்தும் அவரைக் கைவிடுகிறாரல்லவா? குரூரமான செய்கையுள்ளவளும், மிகவும் மூடத்தனமுள்ள புத்தியுள்ளவளும், மகாதுஷ்டையுமாகிய கைகேயினிடத்தில் ஸ்ரீராமன் எவ்வளவோ அன்பும் பக்தியும் செலுத்திவந்தும் அவரைவனம் அனுப்பத் துணிந்தாளல்லவா?" என்று ஒருவர்க் கொருவர் பேசிக்கொண்டு, நாமும் இங்கு இனி இருக்கவேண்டியதில்லை, இராமன் தன் பத்தினியுடன் எங்கு செல்கின்றானோ அங்கு இப்போதே செல்வோம் என்று பேசிக்கொண்டார்கள். அவர்களிற் சிலர், ஸ்ரீராமன் நிராயுதபாணியாய் ரத கஜ துரக பதாதிகளின்றி நடந்து செல்கின்றார், அவர் வழியைப் பின்பற்றி லோகமாதாவாகிய ஸீதாதேவியும் அனிச்சமலரினும் மிருதுவாகிய தன் பாதங்கள் நோவச் செல்கின்றாள், யாராவது எக்காலத்திலாவது இந்த அதிசயத்தைக் கண்டதுண்டா கேட்டதுண்டா என்றார்கள். மற்றுஞ் சிலர், கைகேயி என்னும் நாமத்தோடு உற்பவித்திருக்கும் ராக்ஷஸியால் அல்லவா ஸீதை இவ்விதக்கோலமாய்த் தெருவழியே நடக்க நேரிட்டது, இதனால் ராமனுக்கும் எவ்வளவோ துக்கமிருக்குமே என்றார்கள். விதியைவெல்ல யாரால் முடியும் என்றார் வேறு சிலர். இவ்வாறு ஜனங்கள் பலவாறு பேசி வருந்தினார்கள்.

இப்படி நகரிலுள்ள ஜனங்கள் வருத்தத்தால் மனம்போனபடி சொல்லிக்கொள்வதைக் கண்ட முனிசிரேஷ்டராகிய வாமதேவர்,

ஜனங்களி னிடையேவந்து, "ஓ ஜனங்களே! நீங்கள் இராமனைப் பற்றியாவது ஸீதையைப் பற்றியாவது வருத்தமடையாதேயுங்கள்! நான் உண்மையைக் கூறுகிறேன். இந்த இராமன் பரன், விஷ்ணு; இந்த ஜானகியே இலக்ஷ்மிதேவி, யோகமாயை யென்று பிரசித்தி யுடையவள். அந்த இலக்ஷ்மணனே ஆதிசேஷன்.

இந்த ஸ்ரீராமன் மாயையின் குணங்களுடன் கூடியவராகி அந்த அந்த சொரூபமுடையவர் ஆகிறார். இவர் ரஜோ குணத்தை யடைந்த போது உலகங்களைச் சிருஷ்டி செய்யும் பிரம்ம தேவனாகிறார். இவர் சத்துவகுணத்தை யடைந்தபோது மூன்று உலகத்தையும் பரிபாலிக்கும் விஷ்ணுவாகிறார். இவர் தமோ குணத்தை யடைந்த போது யாவற்றையும் சம்ஹரிக்கும் உருத்திரனாகிறார். இந்த ஸ்ரீ ராமனே முந்தி மச்சாவதாரம் செய்து, பக்தனாகிய வைவஸ்சுதமனுவை ஓடத்தின் மீது ஏற்றிக் காப்பாற்றினவர். இந்த இரகோத்தமரே முந்தி பாற்கடலைக் கடைந்த போது, மந்தரமலையானது பாதாள உலகம் செல்ல, கூர்மாவதாரம் செய்து தாங்கினவர். இவரே பிரளய காலத்தில், பூதேவி பாதாளம் சென்றபோது வராஹாவதாரம் செய்து தன்னுடைய கோரப் பல்லின் நுனியில் அந்தப் பூமியை வைத்துக்காத்தவர். இவர் முந்தி பிரஹ்லாதனுக்கு அருள்செய்யும் நிமித்தம் நரஸிம்மவடிவமெடுத்து, மூவுலகுக்கும் சத்துருவாகிய இரண்யகசிபுவைத் தனது நகங்களால் பிளந்தவர். முன்னம் அதிதிதேவியானவள் தனது புத்திரர்களின் ராஜ்யத்தை அசுரர்கள் அபகரித்தமைகண்டு பிரார்த்திக்க, வாமனாவதாரங் கொண்டு யாசகத்தொழில் புரிந்து அவர்களுக்கு அந்த ராஜ்யத்தைத் திருப்பினவர் இவரே. இவையன்றியும் இவர் துஷ்டர்களான க்ஷத்திரியர்களால் உண்டான பூபாரத்தைப் போக்குவதற்காகப் பரசுராம அவதாரம் செய்தவர்.

உலக நாயகனாகிய பரம புருஷனே இப்போது ஸ்ரீராமனாக அவதாரம் செய்திருக்கிறார். இராவணன் முதலிய அரக்கர்களைக் கோடிக் கணக்காய் வதம் செய்யப்போகிறார். துராத்மாவாகிய அந்த ராவணனுக்கு, மானிடனால்தான் மரணமென்று ஏற்பட்டிருக்கிறது. மேலும் தசரதமகாராஜன் விஷ்ணுவைப் பூஜித்துத் தவம்செய்து நாராயணனே தமக்குப் புத்திரனாக உற்பவிக்க வேண்டுமென்று வேண்டினார். அவ்விதமே மகா விஷ்ணு இப்போது அவருக்கு மைந்தனாக வந்து உற்பவித்திருக்கிறார். கொடிய அரக்கர்களாகிய இராவணாதிகளை வதம்

செய்வதற்கே இப்போது இவர் இலக்ஷ்மணனுடன் வனம் செல்லப் போகிறார். இந்த ஸீதையே விஷ்ணுவின் மாயையானவள். ஸிருஷ்டி, பரிபாலனம், நாசம் இவைகளைச் செய்பவள்; இராமன் வனம் செல்வதற்குத் தசரத மகாராஜனாவது, கைகேயியாவது காரணஸ்தர்களாக மாட்டார்கள். நேற்றையதினம் நாரதமுனிவர் ஸ்ரீ இராமனிடத்தில் வந்து பூமி பாரத்தைத் தீர்க்க வேண்டுமென்று கேட்டதற்கு, இராமபிரான் நாளையதினம் அவசியம் வனம் செல்வதாக அவருக்குக் கூறியுள்ளார்.

ஆகையால், ஜனங்களே! இராமனை உத்தேசித்து நீங்கள் விசாரமடைய வேண்டாம். பூமியில் யார், யார் "இராமா, இராமா," என்று கூறுகிறார்களோ, அவர்களுக்கு மரணபயம் எப்போதும் உண்டாகிறதில்லை. கலியுகத்தில், இராம நாமத்தாலேயே முக்தியையடைய வேண்டுமே யல்லது வேறு உபாயத்தால் அடையமுடியாது. உலகங்களை யுண்டுபண்ணின இந்த இராமன் மாயையால் மானிட வடிவங்கொண்டு உற்பவித்துத் திருவிளையாடல் செய்து வருகிறார். பக்தர்கள் தன்னைப் பஜிப்பதற்கும், இராவணனை வதம் செய்வதற்கும், தசரதரின் மனோபீஷ்டம் நிறைவேறுவதற்குமே இவர் மானிட தேகமெடுத்திருக்கிறார்" என்றனர்.

இவ்வாறு வாமதேவமுனிவர் ஊரிலுள்ள ஜனங்களைப் பார்த்துக் கூறியது கேட்டு, அது முதல் அவர்கள் இராமனை லோகரக்ஷகனாகிய ஹரி யென்றுணர்ந்து, மனதிலுண்டாகிய சந்தேகத்தை விட்டார்கள். பின்னும் வாமதேவ முனிவர், "ஓ ஜனங்களே! இராமன், ஸீதை இவர்களின் விஷயத்தை எப்போதும் ஸ்மரிப்பவர்களுக்கு இராமனிடம் விஞ்ஞானத்தை முன்னிட்ட ஸ்திரமான பக்தியுண்டாகும். இது ரகசியமானது, ரக்ஷிக்கத்தக்கது. நீங்கள் ராகவனுக்குப் பிரியமானவர்கள். நீங்கள் அவரிடம் சிந்தை செலுத்துங்கள்" எனக் கூறினார். அவர்களும் ஸ்ரீராமனைப் பரனென்றறிந்து சிந்தனை செய்திருந்தார்கள்.

இங்கு இவ்வாறிருக்க, தந்தையினிடத்தில் விடைபெற்றுச் செல்லும் நிமித்தமாகப் புறப்பட்ட ஸ்ரீராமன், தம்பி இலக்ஷ்மணனுடனும் சீதா தேவியுடனும் அரண்மனையிற் பிரவேசித்து கைகேயியைக் கண்டு வணங்கி, "அம்மா! நாங்கள் மூவரும் தமக்குச் சம்மதமான வனஞ் செல்லத் தயாராய் வந்திருக்கிறோம். தந்தை யுத்தர

வளிக்கவேண்டும்," என்றார். கைகேயி மிகவுந் திருப்தி யடைந்த வளாய், விரைவாக எழுந்து மரவுரிகளை யெடுத்து, இராமன், இலக்ஷ்மணன், ஸீதை இவர்களுக்குத் தன் கையாலேயே கொடுத்தாள்.

இராமபிரான் தான் உடுத்தியிருந்த பீதாம்பரங்களைக் களைந்து, வனவாசிகளுக்குரிய மாவுரிகளை யுடுத்துக்கொண்டனர். இலக்ஷ்மணரும் அவ்விதமே செய்தனர். ஸீதை அவைகளை யணியத் தெரியாமல், கையில் எடுத்துக்கொண்டு இராமன் முகத்தைபார்க்க, இராமன் அவைகளை வாங்கி ஸீதையின் வஸ்திரத்தின் மீது உடுத்தினார். இதைக் கண்ட ராஜஸ்திரிகள் யாவரும் நடுங்கினார்கள்.

இதைக் கேள்வியுற்ற வசிஷ்டமா முனிவர் மிகுந்த வருத்தத்தை யடைந்தவராய்க் கைகேயியினிடம் வந்து கோபித்து, "கெடுமதியுடையவளே! இராமன் வனத்தில் வாசம் செய்யவேண்டு மென்றல்லவா வரங்கேட்டனை, ஸீதைக்கும் மரவுரி ஏன் கொடுத்தனை; நீ துஷ்டை; ஸீதை பதிவிருதையாகையால் இராமனுக்கு வனத்திலுள்ள துக்கங்களைப் போக்கிக்கொண்டு, இராமனைச் சந்தோஷப்படுத்திக் கொண்டிருக்கட்டும்" என்றார்.

தசரத மகாராஜன் சுமந்திரனை யழைத்து, இம்மூவரும் வனம் செல்ல ரதத்தைக் கொண்டுவாவென ஆக்ஞாபித்து, இராமன், ஸீதை, இலக்ஷ்மணன் இம்மூவரையும் பார்த்து, துக்கம் மேலிட்டுப் பூமியில் விழுந்தார். தரையிற் புரண்டார். விம்மி விம்மிக் கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கதறினார். ரதம் கொண்டுவரப்பட்டது. இராமன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே ஸீதை விரைவாகத் தேரின் மீதேறினாள். இராமமூர்த்தி, தந்தையைப் பிரதக்ஷணம் செய்து, வணங்கி இரதத்திலேறினார். இவ்விருவரும் ஏறினவுடன் இலக்ஷ்மணன், இரண்டு கத்தி, இரண்டு வில், அம்புறாத்தூணி இவைகளை யெடுத்துக்கொண்டு, இரதத்திலேறி, இனி நீர் தேரைச் சீக்கிரம் செலுத்தலாமென்று சுமந்திரனுக்கு உத்தரவிட்டனர். அப்பொழுது தசரத மகாராஜன் எழுந்து சுமந்திரனைப் பார்த்து "நில் நில்" எனவும், ஸ்ரீராமர் அவனைப் பார்த்து "செல் செல்" என்றனர். சுமந்திரனும் தேரை விரைவிற் செலுத்தினன்.

தசரத மகாராஜன் இராமனின் பிரிவாற்றாமையால், கத்திக் கதறி, பரிசாரகர்களைக் கூப்பிட்டு "நீங்கள் என்னைக் கௌசல்யையின் அரண்மனைக்குக் கொண்டுபோய்ச் சேருங்கள், துக்கமடைந்த என

க்கு அங்கு கொஞ்சகாலம் ஜீவிக்க மார்க்கம் ஏற்படும், அதற்கு மேல் நான் உயிரோ டிருக்கமாட்டேன்" என்றார். என்றவுடன், பரிசாரகர் கள், அவரைக் கௌசல்யா தேவியின் அரண்மனைக்குக் கொண்டு போய்ச் சேர்க்க, அங்கும் அவர் விழுந்து மூர்ச்சை யடைந்தார். பிறகு ஒருவாறு தேறித்தெளிந்து எழுந்து மௌனமுற்றிருந்தனர்.

ஸ்ரீராமன் ஸீதை இலக்ஷ்மணனுடன் தேர் ஏறிச் செல்வதைக் கண்ட ஜனங்கள் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றனர்.

இங்ஙனமிவ்வாறிருக்க வனம் சென்ற இராமன், தமசாநதிக் கரை சென்று ஆகாரம் செய்யாமல், ஜலத்தைமட்டிலும் பானம் செய்துவிட்டு சுகமாக ஓர் மரத்தடியில் ஸீதையுடன் படுத்தார். தரும நூல்களை நன்குணர்ந்த இலக்ஷ்மணன், வில்லைக் கரத்திற்கொண்டு சுமந்திரனுடன் காத்துக்கொண் டிருந்தான். இரதத்தைப் பின்பற்றி ஓடோடியும் வந்த ஜனங்கள், இராமனுக்குச் சமீபத்தில் வந்துவிட் டார்கள். நாம் இராமனை மறுபடியும் அழைத்துச் செல்லச் சக்தி யில்லாமற்போனால் நாமும் வனம்போக வேண்டியதே என நிச்சயங் கொண்டார்கள். இவர்களின் இரக்கமான எண்ணத்தை யறிந்த ஸ்ரீராமன், மிகுதியும் சந்தோஷமுற்று நானோ இனி அயோத்தி செல்லப்போகிறதில்லை, இவர்கள் வீணான மனக்கிலேசங்கொண்டு வருகிறார்களே என்றுரைத்து தான் புறப்பட்டுப்போகத் தேரைத் தயார் செய்யும்படி சுமந்திரனுக் குத்தரவளித்தனர். சுமந்திரனும் தேரிற் குதிரைகளைப் பூட்டினான்; இராமன் ஸீதை இலக்ஷ்மணன் மூவரும் ஏறினார்கள். இரதம் கொஞ்ச தூரம் அயோத்திக்குச் செல் வதுபோலச் சென்று திரும்பி வனத்தை நோக்கிச் சென்றது.

ஸ்ரீராமனைப் பின்பற்றி, அவனை எவ்விதத்திலும் அழைத்துவர வேண்டுமென்று சென்ற ஜனங்கள், அவனைக் காணாது வருந்தி, அவன் சென்ற தேரின் சகடைகள் சென்ற வழியைப்பற்றி அயோத்தி வந்து சேர்ந்தார்கள். இராமபிரானின் சிந்தனையையே யுட்கொண்டு, ஸீதையுடன் இராமனைத் தியானம் செய்துகொண் டிருந்தார்கள்

சுமந்திரன் இரதத்தை விரைவிற் செலுத்திக் கொண்டு போக ஸ்ரீராமச் சந்திரன், ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும், எல்லா வளங்களும் நிறைந்த தேசங்களைப் பார்த்துக்கொண்டு, சிருங்கிபேர் பட்டணத்தின் அருகாமையிலுள்ள கங்கா நதிக்கரை வந்து கங்கை

யைத் தரிசித்து நமஸ்கரித்து ஆனந்தத்துடன் ஸிம்ஸுபா விருக்ஷத்தின் அடியில் வீற்றிருந்தார்.

ஸ்ரீராமபிரானின் வருகையை அறிந்த குகன் மிக்க சந்தோஷத்துடனும் பக்தியுடனும் பழங்களையும், மூலங்களையும் சேகரித்துக் கொண்டு வந்து, இராமன் முன்னிலையில் வைத்து அவரது திருவடிகளில் விழுந்து வணங்கினான். நமஸ்கரித்த குகனை இராமன் விரைவிலெழுப்பி, கட்டியணைத்து குசலப்பிரச்சனம் செய்தார். குகன் கைகூப்பி நின்று, "ஓ இரவிகுல சிரேஷ்டனே! வேடர்குலத்திலுதித்த என் ஜன்மமானது புனிதமாயிற்று. நான் கிருதார்த்தனாயினேன். தங்களுடைய தரிசனமும், சரீரஸ்பரிசமும் எனக்குக் கிடைத்ததால் அளவிலா மகிழ்ச்சியடைந்தேன். தங்களுக்காகக் கொண்டுவந்த பழங்களையும் கிழங்கு வகைகளையும் புசிக்கவேண்டும்; நான் தங்களுக்குத் தாசனாகிறேன்; எனக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும்; தங்களுக்குச் சுவாதீனமான என் நகரத்திற்கு வந்து எங்களைக் காத்து இரக்ஷிக்கவேண்டும்" என்று வேண்டினான்.

இதைக் கேட்ட இராமன், "ஓ நண்பனே! நான் பதினான்கு வருஷம் வரையில் கிராமத்தையும் கிருகங்களையும் பார்க்கமாட்டேன். பிறர் கொடுத்த பழம் கிழங்குகளையும் புசிக்கமாட்டேன். உன்னுடைய ராஜ்யம் யாவற்றும் என்னைச் சேர்ந்தது தான்; உனக்கு நான் பிரியனுமானேன்" எனக்கூறிவிட்டு, இலக்ஷ்மணனைக் கொண்டு ஆலம்பால் தருவித்து, சடைகளாகிய மகுடமணிந்தார். பிறகு ஜலத்தை மட்டிலும் அருந்தி, தர்ப்பை முதலியவற்றால் அமைக்கப்பட்ட ஸயனத்தில் ஸீதையுடன் படுத்தார். இப்படியிருப்பது முந்திதான் அயோத்தியிலுள்ள உப்பரிகையில் வாசம் செய்ததற்கொப்பாயிருக்கிறதென நினைத்து ஆனந்தித்தார். இப்படி இராமன் ஸீதையுடன் தர்ப்பசயனத்தில் நித்திரை செய்ய, இலக்ஷ்மணன் வில்லை யூன்றி காத்துடன் அவர்களைக் காத்து நின்றார்.

---

## ஆறாவது சருக்கம்.

---

குகன், ஸ்ரீ ராமச்சந்திரன் தர்ப்பசயனத்தில் படுத்துக் கண்ணுறங்குவதைப்பார்த்து, மிக்க வருத்த மடைந்து, தன்னிரு கண்களிலும் கண்ணீர் சோர இலக்ஷ்மணரைப் பார்த்து, "ஓ என்னருமையான பிராதாவே! எந்தப் பிரபு க்ஷீராப்பதியில் ஆதிசேஷன் பாயலாகப்படுத்துக் கண் வளர்வதை நீத்து அயோத்தி வந்து சக்கரவர்த்தி திருமாளிகையில் அமைந்த பள்ளியறையில் தங்கக்கட்டிலின் மீது புஷ்பப் பாயலில் ஸீதையுடன் படுத்து நித்திரை போனரோ அந்தப் பிரபுவே இந்தக் கானகத்தில் இலை தருப்பை முதலியவைகளால் வேய்ந்த படுக்கையில் ஸீதையுடன் படுத்துறங்குகிறார். இதைப்பாரும்! இவர் இவ்வளவு அசுகத்தை யநுபவிக்கக் காரணமாகத் தெய்வம் (ஊழ்) கைகேயியை ஏற்படுத்தியது. கைகேயியோ கூனியின் புத்தியைக் கேட்டு இக்கொடிய பாபச் செய்கையைச் செய்தாள்." என்று கூறினன்.

இதைக்கேட்ட இலக்ஷ்மணர் குகனைப் பார்த்து "ஓ நண்ப! நான் சொல்வதைக் கேள். யாதாம் ஒருவருக்கு மற்றொருவர் சுகத்தையாவது துக்கத்தையாவது உண்டு பண்ணக்கூடுமா? ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் முன்செய்த நல்வினை தீவினையே அவரவர்களுக்கு இன்பத்தையுந் துன்பத்தையு முண்டுபண்ணுகின்றன. ஒருவருக்காவது சுபத்தையாவது அசுபத்தையாவது கொடுப்பவன்வேறு யாரு மில்லை. ஒருவனுக்கு மற்றொருவன் சுகதுக்கங்களைக் கொடுக்கிறான் என்பது அஞ்ஞானத்தாலுண்டானது. "அவன் செய்தான், அவள் செய்தாள்" என்பது வீணை அபவாதம். உலகம் யாவும் கருமங்களாகிய கயிற்றில் கோக்கப் பட்டிருக்கிறது. மித்திரன், சத்துரு, பூஷிக்கத் தகுந்தவன், துவேஷிக்கத் தகுந்தவன், மத்தியஸ்தன், பந்துவாகியவன் யாவரும் அவரவர்கள் தாங்கள் முன் செய்த கருமத்தை யநுசரித்துக் காரியம் செய்கிறார்களென்று எவனும் பாவிக்கவேண்டும்.

ஒவ்வொருவனும் தனக்கு சுகமோ துக்கமோ எது நேரிட்டாலும் அவைகளைச் சமமாக அநுபவித்து நடு நிலைமையோடு கூடிய

சுகமான நிலைமையில் இருக்கவேண்டும். சுகம் வரவேண்டுமென்ற விருப்பமாவது துக்கம் வரக்கூடாதென்ற விருப்பமாவது ஒருவனுக்கும் இருக்கக்கூடாது. சுகமோ துக்கமோ எது வந்தாலும் அவைகளுக்குத் தான் ஸ்வாதீனனாகவாவது, அஸ்வாதீனனாகவாவது இருக்கக்கூடாது. எந்த தேசத்திலாயினும், எந்தக் காலத்திலாயினும், எவனாகினும், எக்காரணத்தைக் கொண்டாயினும், எது செய்தானாகிலும் அது நன்மையோ அல்லது தீமையோ எதுவானாலும், அதை எவனும் அநுபவித்தே தீரவேண்டும். ஒருவனுக்குத் தான் செய்த கருமத்தைவிட வேறொன்று தானாக வந்து நேராது. ஓ நண்ப! சந்தோஷமடைவதாலும், துக்கப் படுவதாலும், ஆகிற காரியம் ஒன்றுமில்லை. ஆதியில் பிரமதேவரால் எதெது அமைக்கப்பட்டதோ அதைத் தேவர்களாயினும், அசுரர்களாயினும், மானிடர்களாயினும், அதிக்கிரமிக்கமுடியாது. மானிடன் எப்போதும் சுக துக்கங்களால் தகையப்பட்டிருக்கிறான். மானிட சரீரமானது புண்ணிய பாபங்களினால் சுக துக்கங்களை யநுபவிக்க ஏற்பட்டிருக்கிறது. சுகத்திற்கடுத்த க்ஷணத்தில் துக்கமும், துக்கத்திற் கடுத்த க்ஷணத்தில் சுகமும் பகல் இரவுபோலப் பிராணிகளுக்கேற்பட்டிருக்கின்றன. இவைகளைக் கடக்கமுடியா.

சுகத்தின் மத்தியில் துக்கமும், துக்கத்தின் மத்தியில் சுகமும் இருக்கிறது. இவ்விரண்டும் நீரும் சேறும் போல் ஒன்றுக் கொன்று சேர்க்கையுள்ளதென்றே சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகையால் அறிஞர்கள் இஷ்டமானது நேர்ந்தாலும், அனிஷ்டமானது நேர்ந்தாலும் தைரியத்துடனிருந்து சந்தோஷிப்பது மில்லை துக்கப்படுவதுமில்லை. ஏனெனில் அவர்கள் யாவும் மாயை யென்ற பாவனையுடையவர்கள். எதிலும் சமமாக இருப்பவர்கள்" என்று உபதேசித்தான். இவ்விதம் இலக்ஷ்மணரும் குகனும் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்போது ஆகாயம் நிர்மலமாகி விடியற்காலம் நேர்ந்தது.

ஸ்ரீ ராமன் எழுந்து பிராதக்கால ஸ்நானம் செய்து ஏகாக்ர சித்தனாக இருந்து நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு குகனைப் பார்த்து, "ஓ நண்ப! நான் கங்கையைக் கடப்பதற்காகத் தகுதியுள்ள தோணியை வரவழி" என்றனர்.

வேட ராஜனாகிய குகன் இராகவனது பணியைச் சிரசின் மேல் வகித்து தக்ஷணமே இலக்ஷணமுள்ள தோணியைத் தானே கொண

ர்ந்து, "ஸ்வாமின்! ஸீதா தேவியுடனும் இலக்ஷ்மணப் பெருமாளுட னும் தோணியி லேறலாம், ஸாவதானமாக நானே ஓடத்தைச் செலு த்துகிறேன்" என்று வணங்கித் தெரிவித்தான்.

இரகுநந்தனன் அவ்விதமே யென்று கூறி சுந்தர முள்ள தேவி ஸீதையைத் தானே தோணியின் மீதேற்றி, விந்தையாகத்தானும் வந்தனங்கூறிய குகன் கைலாகு கொடுக்க ஓடத்தின் மீதேறினார்.

ஸ்ரீ ராமனுக்குச் சமமான லக்ஷணமுள்ள இலக்ஷ்மணன் ஆயுத பாணியாகித் தோணி மீதேறினன். உடனே குகன் நாவாய் செலுத் தும் திறமைவாய்ந்த பாகர்களுடன் ஏறி அன்னப் பக்ஷி சிறையில தாகச் செல்லுந் தன்மை யொப்பத் தோணியைத் தன்கையாற் கோலைப் பற்றித் தள்ளினன். நாவாய் மெல்லச் செல்லக் கங்கையின் வேகத்தைத் தடுத்துக் குறுக்கே தென் திசை நோக்கிச் செல்லும் ஓடத்தின் மீதிருந்த ஜானகி அக்கங்கையை நோக்கி, "ஓ மந்தாகினி! உனக்கு நமஸ்காரம். ஏ பாகீரதி! யுனக்கு நமஸ்காரம்" என்று வணங்கி ஸ்தோத்தரித்து "நான் ஸ்ரீராமனுடனும், இலக்ஷ்மணனுட னும் அடவி சென்று பதினன்கு வருடமிருந்து சுகமாகத் திரும்பி வந்து உன்னைத் தரிசிக்கும்படி நீ கிருபை புரிவாயாகில் அக்காலம் நான் உன்னைப் பலவிதமான பூஜா திரவியங்களுடனும் உன் மனத் திருப்திக்கிசைந்த நிவேதனப் பொருள்களுடனும் பூஜித்து நிவே தித்து வணங்குகிறேன்" என்று பிரதிக்ஞைபண்ணி வேண்டிக்கொண் டாள். ஸ்ரீராமச்சந்திரன் முதலிய யாவரும் கங்கையைக் கடந்து தென்கரை வந்து சேர்ந்தார்கள்.

ஓடத்தின் மீதிருந்து கீழிறங்கி ஸ்ரீராமபிரான் ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடம் தென்திசை நோக்கிக் கானகம் செல்லப் பிரயாண மாகும்போது, ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவைப் பார்த்து குகன் "ஓ பிர புவே! நான் தங்களைப் பிரிந்திருக்கமாட்டேன். தங்களுடன் நானும் தங்களுக்கூழியவனுகவே வருகிறேன். மேலும் வனமானது துஷ்ட மிருகங்கள் வாழுமிடம், இராக்ஷசர் முதலிய கொடியோர் வாழுந் ஸ்தானம், ஆகையால் அடியேனும் தங்களுடன் கூடவரக் கிருபை புரியவேண்டும்; மறுக்கின் இவ்விடமே பிராணனை யிழப்பேன்." என்று உறுதியாகக் கூறினன்.

இதைக்கேட்ட ஸ்ரீராமன், தன்னிடம் அன்புடன் கூறிய குக னைப்பார்த்து "ஏ தோழனே! நான் தண்டகாரண்யத்தில் பதினன்கு

வருஷம் வாசம் செய்து மறுபடியும் இங்கு வருகிறேன், நீ வருத்த மடையவேண்டாம்" என்றுரைத்து, அவனை ஆலிங்கனஞ்செய்து நீ சென்று உன் நகரத்தில் சுகமாக இருவென்று சொல்ல, குகனும் ஸ்ரீராமபிரானைப் பலதடவை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தன் னிருப்பிடம் சென்றான்.

பிறகு இரகுவீரன் வைதேகியுடனும், சுமித்திரா புத்திரனுட னும் பரத்துவாச முனிவர் ஆச்சிரமம் சென்று அதன் வெளிப்புறத்தி லிருந்து கொண்டு, அங்குவந்த பிரமசாரியைப் பார்த்து "ஓ வடுவே (பிரமசாரியே) நீர் பரத்துவாச முனிவரிடம் சென்று தசரத குமாரனு கிய இராமன் ஸீதா இலக்ஷ்மண சகிதம் ஆச்சிரமத்தின் முன் புறத்தில் வந்திருக்கிறான்" என்று தெரியப்படுத்தும் என்று சொன்னார். இதைக் கேட்ட பிரமசாரிப் பிராமணன் விரைவாகச் சென்று முனிவரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து "ஓ சுவாமியே! தசரதர் குமார ராகிய ஸ்ரீராமர் மனைவியுடனும் தம்பியுடனும் வந்து வாசற்புறத்தில் காத்திருக்கிறார்" என்று தெரியப் படுத்தினார்.

இதை யறிந்த முனீஸ்வரராகிய பரத்துவாசமுனிவர் விரைவாக எழுந்து அருக்கிய பாத்தியாதி வகைகளை யெடுத்துக் கொண்டு இலக்ஷ்மணன் கூடிய இராமனிடம் வந்து அவ்விருவரையும் விதிப் படி பூஜித்து ஓ இராம! ஓ புண்டரீகக் கண்ண! தாங்கள் பிராதாவுட னும் ஸீதையுடனும் என் பர்ணசாலைக் கெழுந்தருள வேண்டும், ஓ இரகுநந்தன! உம்முடைய பாத தூளியால் என்கிருகம் பரிசுத்தி யாக வேண்டும் என்று அன்புடனுரைத்து ஸ்ரீராமன் இலக்ஷ்மணன் ஸீதாதேவி யிவர்களைத் தன் பர்ணசாலைக் கழைத்துச் சென்று ஆசனத் தின் மீதிருக்கச் செய்து மறுபடியும் பூஜித்துபசாரஞ் செய்தார். பிறகு தாமும் ஓரிடத்தமர்ந்து ஓ இராம உம்முடைய சேர்க்கையால் நானிப்போது என் தவத்தின் கரைகண்டேன். நான் செய்த தபோபலத்தாலும் தம்முடைய கிருபையாலும் திரிகால வர்த்த மானத்தையும் அறிவேன்.

ஓ இராமப் பிரபுவே! நீர் பரமாத்மா, மாயையால் மானிட ரூப மெடுத்தவர் என்று நான் அறிவேன். நீர் பிரமதேவரால் முன்னம் பிரார்த்திக்கப்பட்டு தசரத சக்கரவர்த்தியின் குமாரனாக அவதரித்த தும், வனவாசம் செய்ய வந்ததும் இனி நீர் நடத்தப் போகிற காரி யம் யாவையும் உம்மை யுபாசித்ததா லுண்டாகிய ஞான திருஷ்டி

யால் நான் அறிந்தேன். இதற்கு மேல் நான் என்ன சொல்லப் போகிறேன். ஓ இரகுநந்தன! நான் கிருதார்த்தனுகி விட்டேன். ஓ காகுத்த! பிரகிருதிக்குப் பானுகும் புருஷோத்தமனுகிய உம்மை யிப்போது என்னிருகண்ணும் களிகூரத் தெரிசித்து ஆனந்த பரவச மடைந்தேன். இதைவிட எனக்கு லபிக்கக்கூடியது ஒன்றுமில்லை என்று ஸ்தோத்திரம் பண்ணினுர்.

ஸ்ரீராமன் ஸீதை இலக்ஷ்மணன் இவர்களுடன் பரம சிரேஷ்டராகிய பரத்துவாச முனிவர் பாதத்தில் நமஸ்காரம் செய்து முனிவரை நோக்கி "ஓ பிரும்மக்ஞான முனீஸ்வரரே! தாங்கள் எங்களுக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். பிறகு முனீஸ்வரரும் ஸ்ரீராமரும் ஒருவருக்கொருவர் சிலநேரம் சம்பாஷித்துக்கொண்டிருந்து முனிவர் ஆச்சிரமத்தில் அன்றிரவு வசித்து, மறுநாட் காலையிலெழுந்து ஸ்நானம் பண்ணி நித்திய கருமானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு முனிவர் வைத்திருந்த தெப்பத்தைக் கொண்டு யமுனை நதியைக் கடந்து அவர் காட்டிய வழியே சென்று ஸ்ரீராமர் ஸீதை இலக்ஷ்மணரோடு சித்திரகூட பருவதம் சென்றுர்.

அப்பருவதத்தில் பல வர்ணமுள்ள பக்ஷிகளும் புஷ்பங்களும், பலன்களும் நிறைந்துள்ளதும் தவமுனிவர்கள் சூழ்ந்ததுமாகிய வான்மீகி முனிவர் ஆச்சிரமம் சென்று இராமச்சந்திரன் ஸீதை இலக்ஷ்மணன் இவர்களுடன் அங்கு வசிக்கும் முனிவர்கள் நாயகமாகிய வான்மீகி ரிஷியைக் கண்டு நமஸ்கரித்தார்.

முனி சிரேஷ்டராகிய வான்மீகி ரிஷி, தன்னை வணங்கிய, சூரிய வம்சத்தைப் பரிசுத்தி செய்தவனும், சம்சார பந்தத்தில் நின்று விடுபட்டவனும், அப்பிரமேயனும், நித்தியாநந்தனும், சாந்தனும், மாயா மானிட வடிவங் கொண்டவனும், ஜடா மகுட மணிந்தவனும், மன்மதனுக்குச் சமானமான அழகு பொருந்திடவனும், சத்திய சந்தனும், ஜானகி இலக்ஷ்மணன் இவர்களுடன் கூடியவனுமாகிய ஸ்ரீராமனைப் பார்த்து விசுவாசத்துடன் எடுத்தணைத்து ஆசனத்திருத்தி பத்தியோடு விதிப்படி பூஜித்து சர்வோபசாரமுஞ் செய்து இனிமையான கந்த மூலபலவர்க்கங்களைக் கொண்டு ஸீதை இலக்ஷ்மணருடன் அவருக்குப் போஜனமும் செய்வித்து அவர்கள் வரவை மிகவும் ஆனந்தமாகக் கொண்டாடினுர்.

இராகவன் அஞ்சலி செய்து கொண்டு வணக்கத்துடன் வான் மீகிமுனிவரைப் பார்த்து, "ஓ முனீஸ்வரரே! நாங்கள் என் தந்தை உத்தரவை முன்னிட்டு வனவாசம் செய்ய வந்திருக்கிறோம். நாங்கள் வந்த காரணம் தாங்கள் அறிந்திருப்பீர்கள்; ஆகையால் அதைச் சொல்ல வேண்டிய அவசிய மில்லை. நான் ஸீதையுடன் இங்கு கொஞ்சகாலம் வசிக்கிறேன். நான் வாசம் செய்வதற்கு சௌகரிய முள்ள ஸ்தானம் எது? அதைக் கூற வேண்டும்" என்றார்.

இவ்விதம் ஸ்ரீராமன் கேட்க, வான்மீகி முனிவர் புன்னகை கொண்டு, "ஓ இராம! நீர் எல்லாவுலகங்களுக்கும் உத்த மமான வாச ஸ்தானமாகிறீர். இத்தன்மைய்புடைய பெருமைவாய்ந்த ஸீதையுடன் கூடிய நீர் எனக்கு எது வாசஸ்தானம் என்று கேட்டபடியால், அந்த ஸ்தானத்தை விவரித்துச் சொல்லுகிறேன்.

(1) சாந்த குணமுள்ளவர்களும், எதையும சமமாகப் பாவிப் பவர்களும், பிராணிகளிடம் த்வேஷமில்லாதவர்களும், எப்போதும் உம்மையே தியானம் செய்பவர்களுமாகிய யோகிகளுடைய இருதய மானது நீர் வசிக்கச் சிறந்த கிருகமாகிறது. (2) எவன் ஒருவன் தருமமென்றும், அதர்மமென்றும் கவனியாமல் ஸீதையுடன் கூடிய உம்மையே பஜிக்கிறானே அவனுடைய இருதயமானது நீர் வசிக்கும் ஸ்தானமாகிறது. (3) எவன் ஒருவன் உம்முடைய மந்திரத்தை ஜெபிக்கிறவனோ, எவன் உம்மையே சரணமென் றடைந்தவனோ, எவன் ஆசையற்றவனோ, அவனுடைய இருதயமானது உமக்குச் சௌகரியமான கிருகமாகிறது. (4) எவர்கள் ராகாதி குணங்கள் [16 பதினாறில், ராகம், த்வேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மர்ச்சரம், ஈரிஷை, அசூயை, டம்பம், தர்ப்பம், அகங்காரம், இப்பதின் மூன்றும் தள்ளத்தக்க தெனவும், இச்சை, பக்தி, சிரத்தை இம்மூன்றும் (அன்னபானாதி கிராக்யமும், மலமூத்தி ராதி விசர்ச்சனமும் பண்ணவேண்டுமென்று வருகிற சித்த விருத் திக்கு இச்சை யென்று பெயர். உம்மிடத்தில் பிரியம் வருகிற சித்த விருத்திக்குப் பக்தி யென்று பெயர். குரு, வேதாந்த சாஸ்திரம் இவைகளில் விசுவாசம் வைக்கிற சித்த விருத்திக்குச் சிரத்தை யென்று பெயர்.) கொள்ளத்தக்க தெனவுங் கண்டு உம்மிடத்தி லேயே பக்திபண்ணி ஓடும், பொன்னும் ஒத்ததெனக்கொண்டு வசிக் கிறார்களோ அவர்களின் இருதயங்கள் உமக்குக் கிருகமாகின்றன.

(5) எவன் ஒருவன் சத்கருமங்களைச் செய்து அவைகளை உமக்குத் தியாகம் பண்ணுகிறானோ அவனுடைய மனமானது உமக்கு சுகமான கிருகமாகிறது. (6) எவன் ஒருவன் அப்பிரியத்தை யடைந்து துவேஷிக்காமலும், பிரியத்தை யடைந்து சந்தோஷிக்காமலும் யாவும் மாயை யென்று நிச்சயித்து உம்மைப் பஜிக்கிறானோ அவனுடைய மனம் உமக்கு மேன்மையான கிருகமாகிறது. (7) எவர்கள் சம்சார துக்கத்தினின்று விடுபட்டு, எல்லோருடைய இருதயத்தில் வசிப்பவனும், எங்கு மிருப்பவனும், அனந்தனும், ஒன்றாகியவனுமாகிய உம்மைத் தெரிசிக்கிறார்களோ அவர்கள் உள்ளம் உமக்கு வாசஸ்தலமாகிறது. (8) இடைவிடாமல் சதாகாலமும் பிரம்மவித்தையை அப்பியாசிப்பதில் ஸ்திரமான அந்தக்கரணமுடையவர்கள் எவர்களோ, உம்முடைய பாதாரவிந்தங்களைச் சேவிப்பதில் இச்சையுற்ற மனமுடையவர்கள் எவர்களோ, உம்முடைய நாமகீர்த்தனத்தில் சிரத்தையுடைய மனமுடையவர்கள் எவர்களோ, அவர்களின் இருதய கமலங்களாகிய கிருகங்களில் நீர் ஸீதையுடன் சுகமாக வாசம் செய்யும். இத்தியாதி ஸ்தானங்களே உமக்கு ஸீதையுடன் மனோரம்மியமாக வசிக்கக்கூடிய ஸ்தானங்களாகும் என்று ஸ்ரீராமனைப் பார்த்து வான்மீகி ரிஷி கூறினார்.

மேலும், ஓ இராமப் பிரபுவே! உம்முடைய நாமத்தின் மகிமையை யாவரால் வர்ணிக்கமுடியும்? உம்முடைய நாமப் பிரபாவத்தாலன்றோ நான் பிர்ம்மரிஷித் தன்மையைப் பெற்றேன். அந்த வரலாற்றை யிப்போது தெரிவிக்கிறேன். அதாவது:—நான் முன்னம் பூமியில் பிராமணனாகப் பிறந்தும், வேடர்களால் வளர்க்கப்பட்டு, அவர்களுக்குரிய ஆசாரத்தை யநுஷ்டித்து அந்த மரபின் ஸ்திரீகளைக் கூடி யவர்களிடம் அநேகம் புதல்வர்களைப் பெற்றேன். அதனால் நான் அந்தக்கரணசுத்த மில்லாதவனாகித் திருடர்களினுடைய கூட்டுறவை யடைந்து திருட்டுத் தொழிலில் வல்லவனாகி எப்போதும் வில்லையும் பாணத்தையுந் தரித்து ஜீவர்களை யிம்சிக்குந் தொழிலையும் மேற்கொண்டு, என்னைக் கண்டவர்களெல்லாம் யமனைக்கண்டது போல நடுக்கமுறக் கானகத்தில் வசித்து வந்தேன்.

ஓ இராம! நான் அந்த ஆரண்யத்தில் வாழுங்காலத்தில் ஓர் தினம் அக்கினிக்குச் சமானமான காந்தியுடைய ஏழு ரிஷிகளைக் கண்டு அவர்களிடமுள்ள பொருளைக் கிரகிக்கக் கருதி அவர்களைப்

பின் தொடர்ந்து ஓடி நில்லுங்கள் நில்லுங்கள் என்று அதட்டினேன். அம்முனிவர்கள் என்னைப் பார்த்து "ஏ பிராமண குலோத்தமனே! ஏன் எங்களை விரட்டிக்கொண்டுவருகிறாய்?," என்றார்கள். நான் அந்தரிஷிகளைப் பார்த்து "ஓ ரிஷிகளே! உங்களுடைய பொருளைக் கவர எண்ணங் கொண்டு தொடர்ந்தேன்" என்று கூறினேன். அவர்கள் "நீ பிராமணனாயிருந்தும் தபோதனர்களுடைய பொருளுக்கிச்சைப் படலாமா?" என்றார்கள். நான் "ஓ தபசீலர்களே! எனக்கு மனைவி மக்கள் முதலியவர்கள் அநேகரிருக்கிறார்கள், யாவரும் பசியால் வருந்துகிறார்கள், அவர்களை இரட்சிக்க எனக்கு வேறு வரும்படியுள்ள தொழில் கிடையாது. நானோ இந்தக் காட்டில் வசிக்கிறேன், ஆகையால் திருட்டுத் தொழிலைக் கொண்டு அவர்களைக் காப்பாற்றி நானும் ஜீவித்து வருகிறேன்" என்றேன்.

இதைக் கேட்ட அம்முனிவர்கள் சாந்த குணத்தோடு என்னைப் பார்த்து, "ஏ பிராமணகுலத்திற் பிறந்தவனே! பஞ்சமா பாதகங் (கொலை, களவு, பொய், கள்ளருந்தல், குருநிந்தை) களில் ஒன்றாகிய திருட்டுத் தொழிலைக் கொண்டு அவர்களை இரட்சிக்கிறேன் என்று கூறினாயே, இத்தீயசெயலால் நீயடையப் போகிற கொடிய நரகத்தில் அவர்களுக்கும் பங்குண்டா இல்லையே" என்று சொன்னார்கள். நான் அவர்களை நோக்கி "அதெப்படி! அவர்களும் என்னுடன் கூட விருந்து தானே அப்பொருளைக் கொண்டு ஜீவிக்கிறார்கள், அவர்களுக்குமட்டும் இல்லாமற் போவதுண்டா? இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது" என்று பதில் கூறினேன். அவர்கள் "அப்படியா! நீ இப்போது அவர்களிடம் சென்று அவர்களைக்கண்டு நான் தினந்தோறும் பாதகத் தொழிலைச்செய்து பாபத்தைச் சம்பாதிக்கிறேனே, அதில் உங்களுக்குப் பாகமுண்டாவென்று கேட்டு அவர்கள் சொல்லும் பதிலைத் தெரிந்து அதைக்கொண்டு உன் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொண்டு இவ்விடம் வா. அது வரையில் நாங்கள் இங்கேயேயிருக்கிறோம்" என்றார்கள்.

நான் அவ்விதமே யாகட்டுமென்று கிருகம் சென்று, மனைவி மக்கள்களைக்கண்டு முனிவர்கள் கூறியபடி யவர்களைக் கேட்டேன். அவர்கள் "பாபம் உங்களுடையது தான், நாங்கள் புசிக்கமட்டுங் கொடுத்து வைத்தவர்கள்" என்றார்கள். அதைக் கேட்டுவருத்தமடைந்து மறுபடியுங் கருணை நிறைந்த அம்முனிவர்களிடம் வந்து

அவர்களைத் தரிசித்தேன். அவர்களுடைய தரிசனபலத்தால் நான் பரிசுத்தமான அந்தக்கரணமுள்ளவனாகி, வில் அம்பு முதலியவைகளை யொழித்து வேரற்ற மரம்போல் பூமியில் விழுந்து அவர்கள் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, ஓ முனிசிரேஷ்டர்களே! சம்சாரமாகிய சமுத்திரத்தில் மூழ்கிக்கரையேற வழிதெரியாமல் மீளா நரகத்தை யடையப் பிரயாசைப்படும் என்னைக் காப்பாற்றவேண்டும் என்று பிரார்த்தித்தேன்.

இப்படி அவர்களுடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்த என்னை அவர்கள் பார்த்து "ஓ பிராம்மண! எழுந்திரு; உனக்கு மங்கள முண்டாகட்டும். அதற்காக உனக்கு நாங்கள் ஏதேனும் ஒன்றை உபதேசம் செய்கிறோம். அதனால் சம்சார பந்தத்தில் நின்று விடுபடுவாய்," என்றார்கள். பிறகு அவர்கள் ஒருவருக்கு ஒருவர் யோசித்து, "இந்தப் பிராமணன் துர்நடத்தை யுள்ளவனென்று உபேக்ஷிக்கத் தக்கவனாயினும் சரணமென வந்திருக்கிறான். ஆகையால் மோக்ஷமார்க்கத்தை யுபதேசித்து இவனைக் காப்பாற்ற வேண்டியது நம்முடைய கடமை" என்று தீர்மானித்து, என்னைக் கிருபையுடன் பார்த்து, மகிமை பொருந்திய உம்முடைய நாமமாகிய இரண்டு அட்சரத்தையும் முன் பின்னாகமாற்றி 'மரா' என்றுபதேசித்து, "நீ யிங்கே யேயிருந்து எப்போதும் ஒருமைப்பட்ட மனத்துடன் நாங்களுபதேசம் செய்த மந்திரத்தை இடைவிடாமல் ஜெபித்துக் கொண்டு நாங்கள் மறுபடியுந் திரும்பி வரும்வரையிலிரு" என்றுரைத்து அம் முனிவர்கள் யாவரும் சென்றார்கள்.

நான் அவ்விதமே புருஷோத்தமனாகிய உம்முடைய நாம மந்திரத்தை ஏகாக்ரசித்தனாக விருந்து பஞ்சேந்திரியங்களையும் ஜெயித்து சிரத்தையுடனும் பக்தியுடனும் ஜெபம் செய்தேன். வெளி வியாபாரங்களை மறந்தேன். அசையாமலிருந்தேன். இவ்வாறு வெகு காலஞ் சென்றமையால் என்மீதில் புற்று உற்பத்தியாயிற்று. ஆயிரம் யுகமான பின்பு மேற்படி ரிஷிகள் என்னிடம் வந்து என் மேல் புற்றடர்ந்திருப்பதை நோக்கி என்னை வெளியில் புறப்பட்டு வா என்று கூப்பிட்டார்கள். நான் புற்றிலிருந்து வெளிப்பட்டேன். அந்த ரிஷிகள் என்னை நோக்கி "நீர் புற்றிலிருந்து வெளிப்பட்ட படியால் உமக்கு மறு ஜன்மமுண்டாயிற்று; நாமமும் வன்மீகி (வன்மீகம்—புற்று) என்றழைக்கப்படும்" என்று கூறிச் சென்றார்கள். ஓ இராம! நான் உம்முடைய நாமத்தின் மகிமையால் இவ்விதமானேன்.

இப்பொழுது இலக்ஷ்மணனுடன் கூடிய உம்மைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறேன். நீர் ஆதியும் அந்தமுமில்லாதவர், நிர்மலர், நித்தியர், பந்தமில்லாதவர், சுத்தர், ஆகாரமில்லாதவர், அனுமயர், சித்கனர், அவ்வியக்தர், அச்சுதர், ஸதாசிவர், சித்தம்சர், மாயா மானிடரூப முள்ளவர். இவ்வளவு மகிமை வாய்ந்த உம்மை நான் தரிசனம் செய்தேன். நான் முக்தி பெற்றவனாகவே யாகிறேன். சந்தேகமில்லை யென்றுகூறி, ஓ இராமச்சந்திர! வாரும் உமக்கு ஸ்தானம் காட்டுகிறேன் என்றார்.

பிறகு வான்மீகி முனிவர், ஸ்ரீராமன் ஸீதை இலக்ஷ்மணன் இவர்களுடன் தானும் தன் சிஷர்கள் சூழப் புறப்பட்டு சித்திரகூட பருவதத்திற்கும் நதிக்கும் மத்தியிலுள்ள ஸ்தானம் சென்று அங்கு கிழமேல் வீதியாகவும் தெற்கு வாசலாகவுமுள்ள சோபனமான இரண்டு பர்ணகசாலை ஏற்படுத்த, அதில் ஸ்ரீராமன் ஜானகியுடனும் இலக்ஷ்மணனுடனும் பிரவேசித்தார். அந்த ஆச்சிரமத்தில் இம் மூவரும் தேவர்களுக்கொப்பாக வசித்தார்கள். இவர்கள் வான்மீக முனிவரால் எப்போதும் பூஜிக்கப்பட்டு அநேக ரிஷீஸ்வரர்கள் புடைசூழ, சுவர்க்கலோகத்தில் இந்திரன் இந்திராணியுடனும் தேவர்களுடனுமிருப்பதுபோல் சந்தோஷமாக வாசஞ்செய்தார்கள்.



## ஏழாவது சருக்கம்.

---

ஸ்ரீராமனைக் கங்கைக் கரையில் விடுத்து, சுமந்திரன் அவ்விடமிருந்து புறப்பட்டு அயோத்திமாநகரத்துக்குச் சாயங்காலத்தில் வந்து தனது வஸ்திரத்தால் முகத்தை மூடிக்கொண்டு, தாரை தாரையாக முகத்தில் கண்ணீர் வடிய, இரதத்தை வெளியில் நிறுத்தி விட்டு அரண்மனைக்குட் சென்று, தசரத மகா ராஜனைக் கண்டு, ஜெயா விஜீபவா என்று ஸ்தோத்திரம் செய்து நமஸ்கரித்தான்.

தசரத மகாராஜன், தன்னடியில் வணங்கிய சுமந்திரனைப் பார்த்து, ஈன சுரத்துடன் "ஏ சுமந்திர! எனது கண்மணியாகிய ஸ்ரீராமன் எங்கே? ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் எங்கு வசிக்கிறான். அவர்களை எந்தக் காட்டில் விட்டுவந்தாய். மகா பாவியாகிய எனக்கு ஸ்ரீராமன் என்ன சொன்னான்? பதிவிருதா சிரோமணியா

கிய ஸீதை, இரக்கமற்ற எனக்கு என்ன கூறினாள்? பொறுமை யிற் சிறந்த இலக்ஷ்மணன் என்னைப்பற்றி யென்ன நினைத்தானோ? கொடிய சிந்தையுடைய எனக்கு அவன் பகர்ந்த தென்னவோ! புகல்வாய். "ஓ இராம! ஆ குணநிதியே, என் தவநிதியே, ஓ சுபுத்திரனே, என் குலமித்திரனே, ஓ இராஜ சிரேஷ்டனே! என் அபிப்பிராயம் அறிந்தவனே!! நானுனைப் பிரிந்து அதனாலுண்டான துக்க சாகரத்தில் மூழ்கி மரணமடைவதை நீ என்னருகிருந்து பார்க்க வில்லையே. நீ யென் நிரியாண காலத்தில் என்னுடனிருந்து என் சிரசை யுன்மடி மீதிருத்தி, கர்ணமிர்தஸ்லோகம் கூறி என்னை மோக்ஷ சாம்பிராஜ்யமடையும்படிச் செய்ய நான் பெற்றிலனே. ஓ ஸீதே! என்னந்தியகாலத்தில் ஸ்ரீராமனால் எனக்குச் செய்யும் கிருத்தியங்களுக்கு நீ கூட இருந்து செய்யும் பாக்கியத்தை நான் பெறாது ஒழிந்தேனே. ஓ இலக்ஷ்மண! நீயும் அவ்வாறே" என்று இவ்வாறு புலம்பிக் கதறி மூர்ச்சை யுற்றார். சற்றுப் பொறுத்துத் தேறி, கண்விழித்துச் சுமந்திரனைப் பார்த்தார்.

இவ்விதம் கன்றிழந்த பசுப்போற் கதறும், தசரத மகாராஜனைப் பார்த்து, சுமந்திரன் தன்னிரு கையையுங் கூப்பி, "ஓ புரவல! ஸ்ரீராமன், ஸீதை, இலக்ஷ்மணன் இவர்கள் மூவரும் என்னால் செலுத்தப்பட்ட தேரின் மீதேறிச் சென்று, சிருங்கபேர நகருக்கருகாமையிலுற்ற கங்கா நதிக்கரையில் வீற்றிருந்தார்கள். அச்சமயம் குறுநிலமன்னனாகிய குகன் மிகுதியான பிரீதியுடன் கனிவர்க்கங்களையும், கந்த மூலங்களையும் சேகரித் தெடுத்துக் கொண்டு ஸ்ரீராமனிடம் வந்து அவரைக் கண்டு நமஸ்கரித்து ஸ்தோத்தரித்து அன்பு பாராட்டி யுரையாடினான். கந்த மூல பலன்களைப் புசிக்கும்படி வேண்டினான். அவைகளைக் கையால் தொட்டாரே யல்லாது அவைகளைப் புசிக்க வில்லை.

பிறகு இரகு நந்தனன் ஆலம்பால் வரவழைத்துத் தன் திருமுடியைச் சடை முடியாக்கிக் கொண்ட பின்பு முகமலர்ந்து என்னை யழைத்துத் திருவாய் மலர்ந்து, "ஓ சுமந்திர! நீ எனது தந்தையினிடம் சென்று எனக்காகத் தாங்கள் துயாமுறவேண்டாம். அயோத்தியிலுள்ள சுகத்தைவிட அதிகமாகவே இந்த ஆரண்யத்திலும் எனக்கு இன்பமுண்டாகும். ஐயமுறவேண்டா மென்று கூறினதாகவும், என தன்னைக்கும் நான் நமஸ்கரித்ததாகச் சொல்வதுடன் என்னைப்பற்றி

கவலை அடைய வேண்டாம், அவ்விடத்தில் மூப்படைந்த காலத்தில் புத்திர சோகத்தால் வருத்தப்படும் எனது தந்தையும் தங்கள் கணவருமாகிய மகாராஜனைத் தேற்றி ஆறுதலடையச் செய்து காப்பாற்றுங்கள் என்று நான் கேட்டுக் கொண்டதாகவும் சொல்லெனப் பணித்தார்," என்றும், ஸீதா தேவியின் கண்ணுனது நீர் சொரியவும், நாவுதடுமாறவும், சரீரம் படபடக்கவும், ஸ்ரீராமனைக் கடைக் கண்ணுல் பார்த்துக் கொண்டும், என்னைப் பார்த்து "நான் மாமியின் பாதாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டேன்," என்று சொல்லெனக் கூறியதாகவும், இலக்ஷ்மணன் ஒன்றும் உரையாடாமலே யிருந்தாரென்றும், பிறகு குகனுல் கொண்டுவரப்பட்ட ஓடத்தின் மீது இராமன், ஸீதை இலக்ஷ்மணன் மூவரும் ஏறிக் கங்கையைத் தாண்டி யக்கரை சென்றார்களென்றும், அது வரையில் நான் அங்கு தங்கியிருந்து பிறகு இவ்விடம் வந்தேன்" என்றும் கலங்கினமனத்துடன் வணக்கமாகத் தெரிவித்தான்.

இச்சமயம் கௌசல்யை கண்ணீர் வடித்துக் கொண்டே அரசனைப் பார்த்து, "ஓ பிராணநாதரே! உமது பிரியமுள்ள மனைவி கைகேயிக்கு அளித்த வரத்தின்படி இராஜ்யத்தை அவள் பிள்ளை பரதனுக்குக் கொடுத்தது நியாயமே. என் பிள்ளை இராமனைப் பதினன்கு வருஷம் வனவாசம் செய்ய அனுப்பினதற்கு என்ன நியாய மிருக்கிறது. பாரபட்சமாகச் செய்வதெல்லாம் செய்து விட்டு இப்போது வருத்தப் படுவது எதற்காக?" என்று கேட்டாள்.

கௌசல்யை சொல்லிய இவ்வார்த்தை அரசனுக்குப் புண்ணில் தீயிட்டது போலாயிற்று. ஆயினுந் தசரதர் தாங்குதற்கரிய துயரத்துடன் கௌசல்யையைப் பார்த்து, "ஓ கௌசல்யே! புத்தியுடையவளே! புத்திர சோகத்தால் மரணமடையப் போகிற என்னை ஏன் வருத்தப்படுத்துகிருய்? போதும், உன் வாயைமூடு. இப்போதே என்னுத்மா பரலோகஞ் சேரப்போகிறது. இது நிச்சயம். இதன் பிறகாவது உன் மனச்சந்தேகம் நிவர்த்தியாகட்டும்.

ஓ மங்கள சொரூபமுள்ளவளே! ஆழ்ந்த புத்திகூர்மையுடையவளே! முன்னடந்த ஓர் ஆச்சரியமான விஷயத்தைக்கேள். அது இப்போது என் ஞாபகத்துக்கு வந்தது. அதாவது, "நான் யுவராஜனுக இருக்கும்போது, யௌவனபருவத்தால் மூர்க்கத்தை யடைந்து, வேட்டையாடுவதில் விருப்பமுடையவனுகி, வில், அம்புறாத்

தூணி யிவைகளைத் தரித்து இரவில் வெளிப்பட்டு நதிக்கரை யருகி லுள்ள பெரும் வனத்திற் சஞ்சரித்தேன். அங்கு நள்ளிருளில் ஓர் முனிவர் அவருடைய தாய் தந்தையிருவரும் தாகவாட்சிகொண்டு நீர் அபேட்சிக்க, அதை நிவர்த்திக்கும் பொருட்டு ஜலமெடுத்துக் கொண்டு போக ஆற்றங்கரைக்கு வந்து நீரோட்டத்தில் குடத்தை அமுக்கி ஜலத்தை மொண்டார். அப்போது மொடமொடெனும் ஓர் ஒலிக் குறிப்புண்டாயிற்று. அக்குடத்தின் ஒலியை நான் யானை நீர் குடிக்கிறதென மதித்து வில்லை வளைத்து நாணேற்றி சப்தவேதி என் னும் பாணத்தை யெடுத்து அதில் தொடுத்து அத்திசையிற் குறி வைத்துப் பிரயோகித்தேன். அப்பாணம் ஜலம் திரட்டின அம்முனிவர் மேற்பாய அவர் பிராணபைத்துடையவராகிக் களைத்து "ஆ! ஹதமாயி னேனே" என்றுரைத்து, "ஆ! இதென்ன ஆச்சரியம்! நான் யாதா மொரு கெடுதியும் யாருக்கும் செய்ததில்லையே; என் விதிப்பயன் இவ்விதம் நேர்ந்தது. யாரோ ஒருவன் என்னைப் பாணத்தாலடித்து விட்டானே. தாகத்துக்கு ஜலம் விரும்பிய என் தாய் தந்தையர்கள் என் வரவை எதிர்பார்த்திருப்பார்களே என் செய்வேன்" என்று அம்முனிவர் கதறினார்.

நான் அவ்வார்த்தைகளைக் கேட்டு மதிமயங்கி அவரருகிற் சென் றேன். அவர் என்னை நோக்கி நீர் யாரெனக்கேட்டார். "ஓ ஸ்வாமி! நான் தசரத மகாராஜன், ஜலத்திலுண்டான வொலியைக் கொண்டு துஷ்டமிருக மெனக் கருதிப் பாணப் பிரயோகம் செய்து விட் டேன். ஓ முனிவரே! அறியாது செய்த செயலை மன்னித்து என்னைக் காக்கவேண்டும்," என்று, இரந்து அவர் பாதங்களில் நமஸ் கரித்தேன்.

அந்த முனிவரர் என்னை நோக்கி "ஓ இராஜ சிரேஷ்டரே! நீர் பயப்படவேண்டாம். உம்மைப் பிரமஹத்தி தோஷம் தொடாது. ஏனெனில் நான் வைசியன்; தவஞ் செய்து கொண்டிருப்பவன்; என் தாய் தந்தையர்கள் மிக்க வயோதிகர்கள். அவர்கள் தாக சோக மடைந்து என்னைப் பானத்துக்கு ஜலம் கொண்டு வரும்படி யனுப் பினார்கள். அவர்கள் என்னை நோக்கி வழிபார்த்துக் கொண்டிருப் பார்கள். ஆகையால் நீர் யோஜனை பண்ணுமல் சீக்கிரமாக அவர் களுக்கு ஜலம் கொண்டு போய்க் கொடும். கொடுத்தபின் அவர் களுக்கு இங்கு நடந்த காரியத்தைத் தெரியப் படுத்தும். நான்

இப்போது உம்முடைய சரத்தால் துன்பமடைகிறேன்; முதலில் அதை யெடும்" என்றுரைத்தார்.

அதைக்கேட்ட நான் அவர் சரீரத்திற் பொருந்திய பாணத்தை வெளிப்படுத்தினேன்; கூற்றுவனும் அவர் சரீரத்திற் பொருந்திய பிராணனை வெளிப்படுத்தினன்.

பிறகு நான் அம்முனிவர் கூறியபடி யவர் தாய் தந்தையர்களிருக்கு மிடத்துக்கு அக்குடத்தில் ஜலத்தை நிரப்பிக் கொண்டு சென்றேன்.

அவர்கள் மிக்க வயோதிகர்கள், குருடர்கள். இரவில் பசியாலுந் தாகத்தாலும் வருந்தினவர்கள். அவர்கள் "தங்களுக்குற்ற தாகந்தீர, ஜலம் கொண்டு வரப்போன குமாரன் இன்னம் வரக்காணோமே காரண மின்னதென்று தெரியவுமில்லையே. நம் மிருவருடைய நிலைமை யறிந்திருந்தும் அவன் நம்மை உபேக்ஷித்து விட்டானே; நம்மிடம் நிறைந்த பக்தியுள்ளவனுச்சே. ஆ தெய்வமே! நாமென்ன செய்வோம்." என்றிவ்வாறு கலக்கமுற்று ஏங்கியிருந்தார்கள்.

நான் விரைவுடன் அவர்கள் பக்கம் சென்றதும் என் காலடிச் சத்தத்தைக் கேட்டு அம்முனிவர் தன் குமாரனென மதித்து, "ஏ புத்திரசிகாமணியே! ஏன் இவ்வளவு காலதாமதம் செய்தாய். சீக்கிரம் எங்களுக்கு அருந்த ஜலம் கொடு, நீயும் பானம் செய்" என்றார்கள்.

இதைக்கேட்ட நான் மெல்ல அவர்களிடம் சென்று அவ்விருவர் பாதங்களிலும் பணிந்து, "ஓ முனிவரே! நான் தங்கள் புத்திரனல்ல, அயோத்திக்கரசனாகிய தசரதன், மிகப் பாவியானவன். மிருக வேட்டை யாடுவதற்கு இரவில் வனத்துக்கு வந்திருந்தேன். சத்த முண்டாகும் இடத்தைக் குறிப்பிட்டு அடிக்கும் மந்திரந் தெரிந்தவன். நான் தண்ணீர்த் துறைக்கு வெகுதூரத்திலிருந்து ஜலத்திலுண்டான ஒலியைக்கொண்டு, மிருகமென நினைத்து, சப்தம் புறப்பட்ட திசையிற் குறிவைத்து, ஓர் பாணத்தைப் பிரயோகம் செய்தேன். 'ஆ! ஹதமாயினேன்' என்ற சத்தமுண்டாயிற்று. அதைக்கொண்டு அங்கு போய்ப் பார்க்க, சடையைவிரித்துப் பூமியில் கிடக்கும் உமது குமாரனைக் கண்டேன். நான் அறியாமற் செய்த குற்

றத்தை மன்னித்துக் காப்பாற்றவேண்டுமென்று அவரை வணங்கிக் கேட்டுக்கொண்டேன்.

அம்முனிவர் "ஓ அரசனே! நீ பயப்படாதே. என் தாய் தந்தைகளுக்கு ஜலம் கொண்டுபோய்க் கொடுத்து, இங்கு நடந்த காரியத்தைத் தெரியப்படுத்தும்" என்று கூறி யென்னை யனுப்ப நானிவ்விடம் வந்தேன். உங்களைச் சரணமென்றடைந்தேன். உங்கள் குமாரன் விஷயமாக, நான் அறியாது தெய்வச் செயலாய் நடந்த தீங்கைப் பொறுத்து என்னை இரக்ஷிக்கவேண்டும்," என்று கேட்டுக் கொண்டேன்.

இதைக் கேட்ட அவ்விரண்டு வயோதிகரும், துக்கமடைந்தார்கள். வெகு நேரம் கதறினார்கள். பிறகு என்னைப்பார்த்து, 'ஓ அரசனே! நீர் தாமதியாமல் எங்கள் குமாரன் பாணத்தாலடிபட்டு கிடக்கும் இடத்துக்கு எங்களை யழைத்துச் செல்லும்' என்றார்கள்.

உடனே அவர்களை நான் அந்த இடத்துக்கு அழைத்துச் சென்றேன். அவ்விருவரும் தங்கள் மைந்தனைப் பார்த்து ஆறுத்துயரத் தழுந்திக் கதறி ஒருவாறு தேறி, என்னைப்பார்த்து விரைவாகச் சிதை யடுக்கும்படிச் சொன்னார்கள். நானுமவ்விதமே சிதையைச் சேகரம் செய்தடுக்கினேன்.

அப்போது அப்பெரியவர் என்னைப்பார்த்து 'ஓ பூபதியே! நாங்களிருவரும் புத்திரசோகத்தால் மரணமடையப் போகிறோம். நீயும் அவ்வாறு புத்திரசோகத்தால் மரணமடையக்கடவாய்' என்று சபித்து, "எங்கள் மூவரையும் இச்சிதையிலேயே தகனம் செய்துவிட்டுப்போம்," என்று கூறி மரணமடைந்தார்கள்.

நான் அப்படியே அந்தச் சிதையின் மீது மூவரையும் தகனம் செய்து விட்டு, பிறகு ஸ்நானம் பண்ணி அயோத்திக்கு வந்தேன்.

அந்தச்சாபம் இப்போது என்னைச் சூழ்ந்தது. நானும் இதோ மரணமடையப் போகிறேன்" என்றுரைத்தார்.

பிறகு தசரதச் சக்கரவர்த்தி, "பகவானே புத்திரனாக வந்த ஓ இராமா! ஆ ஸீதே! அறிவிற்சிறந்த ஓ இலக்ஷ்மணா! நான் கைகேயியின் மூலமாக உண்டான உங்களுடைய வியோக (பிரிவு) த்தால் மரணமடைகிறேன்" என்று சொல்லிக் கொண்டே மண்ணாட்டினுடைகையை யொழித்து, விண்ணாட்டை யாளச் சென்றார்.

(வைகுண்டபதவி யடைந்தார்.) கௌசல்யை, ஸுமித்திரை, மற்றுமுள்ள இராஜ ஸ்திரீகள் முதலிய யாவரும் மார்பிலடித்துக்கொண்டு ஓ நாதா! வென்று கதறினார்கள். அலறினார்கள், துக்க சமுத்திரத்தில் முழ்கினார்கள்.

சூரியன் தன் குலத்துதித்த தசரதச் சக்கரவர்த்தி தேகவியோகமான விஷயத்தைப்பற்றி யுபசார விசாரணைக்கு வருவது போலக் கீழத்திசையிலுதயமானான். அதிபால்ய திசையில் தானடைய வேண்டிய இராஜ்ய பரிபாலன முதலிய சிற்றின்பத்தை வெறுத்து, தந்தை சத்தியந் தவறாதிருக்கப் பேரின்பத்தை யளிக்கக் கூடிய வானப்பிரஸ்தாச்சிரமத்தை யடைந்ததனா லுண்டாகிய ஸ்ரீராமபிரான் புகழான்து உலக மெங்கும் பரவியது போல, புலரி (விடியற் காலம்) யானது அயோத்தி மாநகரம் முற்றிலும் பரவியது. சக்கரவர்த்தி விண்ணுலக கடைந்த விஷயம் அயோத்திமாநகர மெங்கும் எட்டியது. அரண்மனை முகட்டில் ஏற்றியிருந்த கொடியானது ஐயோபாவம்! சக்கரவர்த்தி காலஞ் சென்றாரே அடுத்தபடிக்கு வரக்கூடிய ஸ்ரீராமனும் வனஞ் சென்றாரே, அவரை நாமாவது போய் அழைத்து வருவோமெனக் கருதி யழைக்கச் சென்றவன் போல உப்பரிகையின் மேலிருந்து கீழே யிறங்கியது. ஓர் ஜீவனுக்குத் தராசிலிட்ட நிறை போல அவன் இருவினையும் ஒத்த காலத்தில் ஈஸ்வரசக்தி யச்சீவனை முன்னம் நல்வினை யநுபவிக்கச் செய்கிறதா, அல்லது தீவினை யநுபவிக்கச் செய்கிறதா வென்று மயங்குவது போல குலகுருவாகிய வசிஷ்டரும், சக்கரவர்த்தியோ வான நாடாளச் சென்றார், ஸ்ரீராமனோ வன நாடாளச் சென்றார் இராஜ்ய பரிபாலனத்தைப்பற்றி யென்ன செய்கிறதென்று மதிமயங்கி அரண்மனை வாசலில் வந்தார். ஒரு பசுங்கொடியானது தனது கொழுகொம்பற்றவிடத்து, மற்றோரிடத்தைத் தாவத் தன் நுனியை நீட்டுவதுபோல, இராஜ தந்திரத்தில் புகழ்பெற்ற மந்திரியாகிய சுமந்திரரும் அரண்மனை வாசலில் வந்திருந்த முனிசிரேஷ்டராகிய வசிஷ்ட முனிவரிடம் வந்து அவர் பாதாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து கைகட்டி நின்றார். முனிவரும் மந்திரியை நோக்கி சுமந்திரரே மேல் நடக்க வேண்டிய காரியமென்ன வென்று வினவினார். சுமந்திரரும் சுவாமி! தங்கள் திருவுளத்துக் கேற்றவாறு செய்யவேண்டு மெனப் பிரார்த்தித்தார்.

வசிஷ்டர் தசரத மகாராஜனை யெண்ணெய்க் கொப்பரையிலிடும்படிச் செய்வித்து பரதன் வந்த பிறகு தான் மற்ற காரியம் செய்யவேண்டும். ஆகையால் பரதனைச் சீக்கிரம் வரவழைக்கவேண்டும் என்று கூறி, தூதர்களை வரவழைத்து "ஏ தூதர்களே! நீங்கள் அம்பினும் விரைவாகத் துரகாரூடர்களாகிக் கேகய நாட்டிற்குச் சென்று, அங்குள்ள பரதன் மாமனாகிய யுதாஜித்து மகாராஜனையும் சத்துருக்னனுடன் கூடிய பரதனையுங் கண்டு, வேறொன்றும் பகராமல், இந்த க்ஷணமே அயோத்தி வந்து, சக்கரவர்த்தியையும், கைகேயியையும் பார்ப்பதற்காகச் சத்துருக்னனுடன் பரதனையும் அழைத்துவரும்படி, வசிஷ்டர் கூறினதாகத் தெரிவித்து, அவர்களிருவரையும் இவ்விடம் அழைத்து வருவீர்களாக," என்று கட்டளையிட்டார்.

இவ்விதம் ஏவப்பட்ட தூதர்கள், காற்றினும் கடுமையாகக் கேகய நாடு சென்று, அங்கு மாமனாகிய யுதாஜித்து மகாராஜனையும், அவருடன் வீற்றிருக்கும், சத்துருக்னனுடன் கூடிய பரதனையுங்கண்டு அவர்கள் திருவடியில் விழுந்து நமஸ்கரித்து, "ஓ யுவராஜர்களே! சக்கரவர்த்தியையும், கைகேயியையும் பார்ப்பதற்கு, உங்களிருவர்களையும் ஓர் க்ஷணப்பொழுதில் அயோத்திக்கு அழைத்துவரும்படி வசிஷ்டமகாரிஷி கட்டளையிட்டார்," எனத் தெரிவித்தார்கள்.

இதைக்கேட்ட பரதன் அனலில் இட்ட மெழுகுபோல மனமுருகி, அம்புபட்ட மான்போல் சரீரம் வாடி யுதாஜித்து மகாராஜனிடத்தில் விடை பெற்று, அக்கணமே தம்பி சத்துருக்னனுடனும், தூதர்களுடனும் புறப்பட்டு வரும்போது, வழியில் இதென்ன விபரீத காலமாயிருக்கிறது, தசரத மகாராஜருக்கோ, ஸ்ரீராமருக்கோ ஏதோ கெடுதி நேர்ந்திருக்கிறது, தூதர்கள் சொல்வதைக்கொண்டு ஒன்றுந் தெரிந்துகொள்ளக் கூடவில்லையே யென்று விசாரப்பட்டுக்கொண்டே அயோத்திக்கு வந்தான்.

அயோத்தியானது திருவிழந்தும், ஜனங்கள் ஆரவாரமற்றுமிருப்பதைப் பார்த்துக்கொண்டே, அரச சின்னமற்ற இராஜன் அரண்மனைக்குட் சென்று, அங்கு தனிமையில் ஆசனத்தில் இருக்கும் கைகேயியைக் கண்டான், பக்தியுடன் தாயின் பாதத்தில் பணிந்தான்.

கைகேயி சடுதியிலெழுந்து தன்னிடம் வந்து வணங்கின பரதனைக் கட்டிக்கொண்டு முத்தமிட்டு மடிமீதிருத்தி தன் தாயகத்தில்

தந்தை, தாய், பிராதா முதலானவர்கள் க்ஷேமமா யிருக்கிறார்களா வென்று விசாரித்தாள்.

பரதன், அரண்மனையிருக்கும் ஸ்திதியை நோக்கி ஒன்றும் புலப் படாதவனாகித் தாயைப்பார்த்து, "ஓ அம்மையே! என் தகப்பனார் எங்கிருக்கிறார். அவர் உம்மைப்பிரிந்து தனித்திருக்கமாட்டாரே. அவரை யிங்கு காணக்கிடைக்கவில்லையே. என் தகப்பனாரில்லா ததைக் கண்டு என் மனம் வாடுகிறது, துக்கம் மேலிடுகிறது, பயமுண் டாகிறது. அவர் எங்கு சென்றார். அவரைப் பார்ப்பதற்கழைத்து வரத் தூதன் வந்தானே, அவரை நான் எங்கு காணலாம்," என்று கேட்டான்.

அப்போது கைகேயி, "மைந்தா! உன் தந்தையை யிப்போது காணமுடியாது, அவரிங்கில்லை. அன்னதானம் முதலிய தானங் களைப் பிரதிதினமும் செய்தவர்களும், அஸ்வமேதம் முதலிய யாகங் களைச் செய்தவர்களும் அடையக்கூடிய கதி எதுவோ அக்கதியைப் புத்திர வாஞ்சையுடைய உன் பிதா அடைந்து விட்டார். நீ துக்க மடைவதில் என்ன பயன். துக்கப்படாதே" என்று பரதனிடம் கூறி னாள்.

இதைக்கேட்ட பரதன் "ஆ நான் நினைத்தபடி சரியாய்விட்டதே. ஓ பிதாவே! என்னைத் துக்கக்கடலில் மூழ்கவிட்டு எங்கு சென்றீர் கள். என்னை இராஜனாகிய இராமனிடத்தில் ஒப்புவிக்காமல் எங் கொளித்தீர்கள்" என்று பலவாறு கதறிப் பூமியில் விழுந்து தலைவிரி கோலமாய்ப் புரண்டழுதான்.

கைகேயி, இவ்விதம் பிரலாபிக்குந் தன் புத்திரனாகிய பரதனை வாரியெடுத்து மடிமீதிருத்திக் கண்களைத் துடைத்து "ஓ என் கண் மணியே! நீ விசனப்படாதே. உனக்கு மங்களமுண்டாகும்படியாக யாவற்றையும் சம்பாதித்து வைத்திருக்கிறேன்" என்று பகர்ந்தாள்.

பரதன் "அம்மா! தந்தை மரணமடையும்போது என்ன சொன் னார்" என்றான்.

கைகேயி "ஏ பரத! உனது தந்தை ஆ இராமா! ஆ இராமா! ஓ ஸீதே! ஓ இலக்ஷ்மணவென்று கதறிப் பிராணனை விட்டுச் சொர்க்கம் சென்றார்" என்றாள்.

பரதன், "ஏ தாயே! என் தகப்பனர் உயிர் விடுக்கும்போது இராமன் அருகிலிருக்கவில்லையா ? ஆனல் அப்போது இராமன், இலக்ஷ்மணன் ஸீதை இம்மூவரும் எங்கு சென்றிருந்தார்கள்?" என்ருன்.

கைகேயி, "ஓ பரதனே! உன்னுடைய பிதாவாகிய தசரதர் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய முயற்சி செய்தார், அந்த சமயத்தில், அவர் எனக்கு முந்திக் கொடுத்திருந்த இரண்டு வரத்தையும் கேட்டு வாங்கினேன். அதில் ஒரு வரத்துக்கு இராஜ்ய முழுமையும் நீ யாளவேண்டுமென்றும், மற்றொரு வரத்துக்கு இராமன் பதினன்கு வருஷம் வனவாசம் செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டேன். சத்தியமே பிரதானமாகக் கொண்ட சக்கரவர்த்தி நான் கேட்டுக்கொண்டபடி இராஜ்ய முழுதும் உனக்கே கொடுத்துவிட்டு, இராமனைப் பதினன்கு வருடம் வனவாசம் செய்ய அனுப்பினர், ஸீதை பதிவிரதையின் தருமத்தை ஆசிரயித்து இராமனுடன் சென்ருள், இலக்ஷ்மணன், சாதுவான பிராதாத்தன்மையை அனுஷ்டித்துத் தானும் வனத்துக்கேகினன். இவ்வாறு இவர்கள் மூவரும் வனம் செல்லத் தசரதர் அவர்களையே நினைத்து, "இராம இராம ஸீதை இலக்ஷ்மண" "என்று கதறி மரணமடைந்தார்" என்று பரதனைப் பார்த்துக் கூறினள்.

இவ்வாறு கூறிய தாயின் சொல்லைக்கேட்ட பரதன் அடியற்ற மரம்போல் பிரக்ஞையற்றுப் பூமியில் விழுந்தான். அப்படி விழுந்தவனைக் கைகேயி, தூக்கி யெடுத்து மார்போடணைத்துக் களையாற்றி மடிமீதிருத்தி, மறுபடியும் அவனைப்பார்த்து "ஏ குழந்தாய்! ஏன் வருத்தப்படுகிருய்? இந்த இராஜ்ய முழுதும் செங்கோல் செலுத்தும் பாக்கியம் உனக்குக் கிடைத்திருக்கும்போது, துக்கப்படும் சமயம் இதுதானே" என்று கேட்டாள்.

இவ்வாறுரைத்த தாயைப்பார்த்துக் கோபம் மிகுந்து கண்களில் நெருப்புப் பொறிபறக்க, "ஏ பாபகிருத்தியம் செய்தவளே! உன்னுடன் சம்பாஷிப்பதுவும் பாபச் செயலாகும். ஓ கொடுமையான சிந்தையுடையவளே! புருடனைக் கொன்றவளே!! நான் உன்னுடைய கர்ப்பத்திலுதித்த காரணத்தால் பாபம் செய்தவனுகி விட்டேன். நான் அக்கினிப் பிரவேசஞ் செய்தாவது, அல்லது விஷத்தைப் பானஞ்செய்தாவது, வாளால் சிரச்சேதம் செய்துகொண்டாவது என்

னுயிரைப் போக்கிக்கொண்டு யமனுலகு செல்லவேண்டும். இதைத் தவிர வேறு கதி எனக்கில்லை. பதியைக் கொன்ற நீயோ கும்பிபாக நரகத்தை யடையப்போகிறாய். ஆகையாலுன்னை விட்டு நீங்குவதே தற்கால சாந்தியாகும்" என்று கூறி கைகேயியின் அரண்மனையை விட்டு, கௌசல்யையின் அரண்மனை வந்து சேர்ந்தான்.

அங்கு அழுதுகொண்டு படுத்திருந்த கௌசல்யை,பரதன் வந்திருக்கும் செய்தி கேட்டெழுந்து வந்து பரதனைப்பார்த்து ஆ மகனே! யென்று ஓலமிட்டலறினாள். பரதனும் அக்கௌசல்யையின் பாதங்களில் விழுந்து ஏ தாயே யென்று வாய்விட்டழுதான்.

பதிவிருதையிற் சிறந்தவளும், மகிமை மிகுந்தவளும், மூன்று உலகத்தையு மீன்றவனைப்பெற்ற மகாத்மாவைப் புத்திரனாக அடைந்தவளுமாகிய கௌசல்யை, பரதனை வாரித் தழுவிக் கட்டிக்கொண்டு, கண்ணைத் துடைத்து "ஏ என்னருமை மகனே! என்னிருகண்மணியே! நீ வெகுதூரத்திலிருக்கும் போது இங்கு இவ்வலங்கோலமான காரியம் நடந்தது. உன் தாயார் சொல்ல நடந்த காரியம் தெரிந்து கொண்டாயா? எனது நாயகன் வானகம் சென்றார். எனது குமாரன் பத்தினியுடனும் பிராதாவுடனும் கானகம் சென்றான். நான் என் விதியை நினைத்து இம்மனையிற் புலம்பி நின்றேன். என்னருமை மைந்தன் இராமச்சந்திரன் மரவுரி யுடுத்துச் சடைமுடி தரித்து மூலையிற் படுக்கும், என்னையும் விடுத்து அடவியை யடுத்துச் சென்றான். ஆ இராமச்சந்திரனே! இரகு குலத்துதித்த சுந்தரனே!! பரத்துக்கும் பரமான நீ யெனக்குப் புத்திரனாக வந்தும், துக்கமானது என்னை விட்டகலவில்லையே "விதியை வெல்ல மதியில்லை" என்னும் பழமொழி யெனக்கே யுண்டாயது. நான் என் செய்வேன் ஏ இராமா" என்று ஓலமிட்டுப் பரதனிடம் கதறினாள்.

பரதன், இவ்வாறு துக்கத்தோடு பிரலாபிக்கும் கௌசல்யையின் திருவடியைத்தொட்டுப் பிரதிக்ஞை பண்ணிக்கூறுகிறான். "ஓ தாயே! நான் சொல்வதைக் கேட்கவேண்டும். அதாவது எனது அன்புவாய்ந்த பிராதாவாகிய ஸ்ரீராமனுடைய இராஜ்ய பட்டாபிஷேக விஷயமாகக் கைகேயி செய்த விஷயத்தையாவது மற்றெதையாவது நான் அறிவேனாகில், பிரமஹத்தி தோஷப்பலனை நான் அடைவேன். மேலும் அருந்ததியோடுகூடிய வசிஷ்ட குருவை வாளால் வதம் செய்வதாலுண்டாகும் தோஷபலனை நான் அடைவேன்" என்று சபதம் செய்தான்.

கௌசல்யை இவ்விதம் சபதஞ் செய்த பரதனை யெடுத்தணைத்து, "சற்புத்திரனே! உன் குணத்தை நான் அறிவேன். நீ துயரமடையாதே" என்றாள்.

இந்தச் சமயத்தில் வசிஷ்டமகாமுனிவர், பரதன் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு மந்திரிகளுடன் அவ்விடம் வந்தார். அவரைக் கண்டு பரதன் ஆறுத்துயரத்தோடு ரோதனம் செய்தான். தன்னைக் கண்டு துக்கித்த பரதனைப் பார்த்து வசிஷ்டர் "ஓ பரத! தசரத மகாராஜர் மூப்புள்ளவர், ஞானமுடையவர், சத்திய முடையவர், பராக்கிரமமுடையவர், மானிடர்களுக்குரிய எல்லா சுகங்களையும் அனுபவித்தவர், மேன்மை தங்கிய அஸ்வமேதம் முதலிய யாகங்களைச்செய்தவர், ஸ்ரீமன் நாராயணமூர்த்தியைப் புத்திரனாக அடைந்தவர். அவர் சரீராந்தியத்தில் சுவர்க்கலோகஞ் சென்றார். இந்திரனோடு ஆசனத்திலமர்ந்திருக்கிறார், இவ்வளவு மகிமை வாய்ந்தவரைப் பற்றி நீ ஏன் வீணாகக் கவலைப்படுகிறாய்?

ஆத்மாவானது நித்தியமானது, அழிவற்றது, ஜனன மரணமில்லாதது, விகாரமற்றது, ஆகிருதியற்றது. பிரகாசமற்றது, நிரஞ்சனமானது. ஸ்தூல சரீரமோ ஜடம். மிகவும் அருசிதமானது, நாசமடையக்கூடியது. விசாரிக்குமளவில் இதைப்பற்றி துக்கமடையக் காரணமே யில்லை.

தந்தையோ, தனயனோ, மற்றும் யாவரோ மரணமடைந்தால் அவர்களைப்பற்றி மூடர்கள் தங்களுடைய சரீரத்தில் அறைந்துகொண்டு துக்கப்படுகிறார்கள். இதனால் பிரயோஜனமில்லை. இந்த சம்ஸாரம் ஸாரமில்லாதது.

அறிவுடையோர்களுக்கு இந்த சம்ஸாரத்தை வெறுக்கச் செய்வது விசாரம். விசாரத்தாலுண்டாவது பற்று விடுதல், அல்லது ஒழிவு. அந்த ஒழிவானது நன்மையை யுண்டுபண்ணுகிறது.

எவன் ஒருவன் உலகத்தில் ஜன்மம் எடுக்கிறானோ அப்போதே யவனுடன் மிருத்தியுவும் கூட வருகிறது. அதை யெப்போதும் பரிகரிக்கமுடியாது. ஜீவர்களுக்கு அவரவர்கள் செய்த கருமத்தை யொட்டி உற்பத்தி, நாசம் இவைகளுண்டாகின்றன. இதை யறிந்திருந்தும், அறிவுள்ள வித்வான்கள்கூட இறந்தவர்களைப்பற்றி ஏன் துக்கமடைகிறார்கள்.

எத்தனையோ கோடி பிரும்மாண்டங்கள் லயமாயின. எத்தனையோ ஸிருஷ்டிகள் நடந்தேறின. இவைகளில் க்ஷணப்போதுதான் ஜீவன் தேகத்தோடுகூடி வசிக்கின்றது, புல்நுனியிலுள்ள ஜலத்துளிபோல் ஆயுள்ளானது க்ஷணத்தில் நாசமடைகிறது. இத்தகைய தேகத்தினிடத்தும் அதை யொட்டிய பிராணனிடத்தும் ஏன் பற்றுதலுண்டாகிறது. இதில் உனக்குள்ள அபிப்பிராயம் என்ன?

ஜனனம் எடுப்பவன் முன் ஜன்மத்தில் செய்த கருமத்துக்குத் தக்கபடி மறுபடியும் சரீரமடைகிறான். நடைமுதல் சரீரத்தை யொட்டிச் செய்த கருமத்தை அநுசரித்து மறுபடியும் சரீரம் எடுக்கிறான். பழைய வஸ்திரத்தை விட்டுப் புதிய வஸ்திரத்தையடைவது போல ஜீரணித்த சரீரத்தை விட்டு ஜீவன் புதிதான சரீரத்தையடைகிறான். இவ்வித மிருக்கத் துக்கப்படுவதற் கென்ன காரணமிருக்கிறது.

ஆத்மாவானது எப்போதும் மரணமடைகிறதில்லை. உண்டாகிறத மில்லை. விருத்தி யடைகிறது மில்லை. அழிவற்றது. ஞான வடிவமானது. ஒன்றானது. எப்போதும் இருப்பது. ஆத்மா இத்தகைய தென்பதையறிந்து நீ துக்கத்தை விட்டு கருமங்களைச் செய் யென்றுபதேசித்து, இரகுவம்சத்தைப் பெருமைப் படுத்துகிற குமாரனே! உன் பிதாவின் சரீரத்தை எண்ணெய்க் கொப்பரையில் நின்று நீ மந்திரிகளுடன் சென்று வெளியிலெடுத்து அவருக்குச் செய்ய வேண்டிய கிருத்தியங்களைச் செய்" என்று வசிஷ்டர் பரதனுக்குக் கூறினார்.

ஆசிரியராகிய வசிஷ்ட முனிவர் இவ்வாறு பரதனுக் குபதேசிக்கப் பரதன் அஞ்ஞானத்தாலுண்டாகிய துக்கத்தை விட்டுத் தகப்பனுக்குரிய அபரகிரியையைச் செய்ய ஆரம்பித்தான்.

பரதன் தன் பிராதா சத்துருக்னனுடன் குருவாகிய வசிஷ்டர் செய்து வைக்க, பிதாவின் சரீரத்தை எண்ணெய்க் கொப்பரையில் நின்றெடுத்து அந்தியேஷ்டி முதலிய கிருத்தியங்களோடு தகனம் செய்து, மறுநாள் சஞ்சயனமும் 11-ம் நாள் ஏகோதிஷ்ட தானமும் 12-ம் நாள் சபிண்டி காணமும் நடத்தி, பிதுர், பிதாமக, பிரபிதாமகர்களாகிய பிதுர்க்களை, வசு, ருத்திர ஆதித்த, ரூபமாகப் பாவித்து பிண்ட சையோகமும் செய்து, பிராமணர்களுக்குப் பூதானம், கோதானம் முதலிய தசதானங்களும் கிரமமாக வழங்கி கிரஹைக்கியமும்

செய்து குருவுக்குக் குருதக்ஷிணையும் கொடுத்து, தன்னுடைய கிரு கத்தில் இராமனையே நினைந்துகொண்டு வாசம் செய்தான்.

ஸ்ரீராமச்சந்திரன், ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் மிக வும் பயங்கரமான ஆரண்யம் சென்றிருப்பதாலும், என்னுடைய தாய் கைகேயி என்னும் இராக்ஷஸியைப் பார்க்குந்தோறும் என்னிருதயம் வேகிறபடியாலும், இந்த இராஜ்யத்தை யடுத்த ஆரண்யத்தின் மத்தி யில் சென்று இலக்ஷ்மணருடனும்,ஸீதையுடனும் கூடி வனம் சென்ற ஸ்ரீராமபிரானையே ஸ்மரித்துக்கொண்டு அவ்விடம் வசிப்பது உசித மென நினைத்துப் பரதன் அதற்காக வேண்டிய விஷய ஆலோசனை யுடனிருந்தான்.



## எட்டாவது சருக்கம்.

பரதன் தந்தைக்குரிய அபரகிரியா கருமங்களைச் செய்து முடி த்தபிறகு நகரத்தை விட்டு விலகிக் கொஞ்சதூரம் சென்று வசித்து வருவதையறிந்த வசிஷ்டமகா முனிவர், சிலரிஷிகளுடனும், மந்திரி களுடனும், நகரத்திலுள்ள பலபிரமுகர்களுடனும் தேவசபைக்குச் சமமான மந்திராலோசனைச் சபைக்கெழுந்தருளி ஓர் திவ்வியாசனத் தில் மற்றொரு நான்முகப் பிரமனைப்போலமர்ந்து கொண்டு, தயா நிதியாகிய பரதனைச் சத்துருக்னனுடன் அச்சபைக்கு வரவழைத்து அரியாசனத்தில் வீற்றிருக்கச் செய்து தேசத்துக்கும் தற்காலத் துக்கும் ஏற்றவாறு மேல் நடக்கவேண்டிய காரியத்தை மனதிலுத் தேசித்து சகல நற்குணங்களும் வாய்ந்த தீரனும்,சத்துருக்களை ஜெயி க்கும் திறமைவாய்ந்த போர்வீரனும், காசாம்பூ நிறம் பொருந்திய திருமேனிப் பிரகாசனும், கெம்பீரனுமாகிய பரதனைப் பார்த்து, "ஏ குழந்தாய்! உன் தாய் கைகேயி தான் பெற்றவரத்தை முன்னிட்டு இராஜ்ய சம்பத்து உனக்கே யுரித்தாகவேண்டுமென்று அபேட்சித்த தின் பேரில் சத்தியவந்தரான உனது தந்தையாகிய தசரத சக்ர வர்த்தியும் அவ்வாறே வாக்களித்திருக்கிறார். அவர் அநுமதிப்படி யிப்போது நானும் மந்திரி பிரதானிகளும் மற்றுமுள்ள பிரபுக்களும் கூடி விதிப்படி யுனக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைக்கி றோம். நீ இராஜ்யத்தை யொப்புக்கொண்டு அதற்குரிய காரியங் களைக் கவனித்து நடத்தி வரவேண்டும்," என்று சொன்னார்.

இந்த வார்த்தை குணநிதியாகிய பரதன் செவியுற் புகுதலும் தாங்குதற் கரிதாகிய துயரம் மேலிட்டு, அச்சொல் குருவின் மொழி யென்றுகூடப் பாராட்டாது அதைத் தவிர்த்து தனது குலகுருவா கும் முனிசிரேஷ்டரான வசிஷ்ட முனிவரரைப் பார்த்து, சேவித்து, "ஓ மகாநுபாவரே! இவ்வுலகம் எனக்கேதுக்கு, இராஜாதி இராஜனு கிய ஸ்ரீராமருக்கே யுரியது. நானும் என்னருமைப் பிராதாக்களும் அவருக்கு ஊழியக்காரர்களாக இருக்கக் கடமைப்பட்டவர்கள். மகாபாதகியாகிய கைகேயி நீங்கலாக, நான், என் பிராதா, தாங் கள், மற்றுமுள்ள என் தாய்மார்கள், மந்திரி முதலியவர்கள், இந்நகர வாசிகளாகிய பிரஜைகள் யாவரும் ஒருங்குகூடி யிப்போதே சென்று இரகுநந்தனனை அயோத்திக் கழைத்து வருவதே சத்கரு மம். இதுவே என்னுடைய முடிவான தீர்மானம். தாங்களும் மற்று முள்ளோர்களும் என்னுடைய அபிப்பிராயத்துக் கிணங்கி அவ்விதமே செய்வீர்களென்று நம்புகிறேன். தன் கணவனைக் கொன்ற பாவியாகிய கைகேயியை நானிப்போதே வதை செய்வேன். இரகு சிரேஷ்டர் என்னை ஸ்திரி ஹத்தி செய்தவனென்று புறக்கணிப்பாரே யென்று சற்று பின்தாங்குகிறேன். நான் மேலே கோரின வண்ணம் தாங் கள் மற்றவர்களுடன் என்னுடன் வந்தாலும் சரி வரா விட்டாலும் சரி, நான் சத்துருக்னனுடன் நாளையதினம் காலையில் என் பிராதா போயிருக்கும் தண்டகாரண்யம் செல்லப்போகிறேன். நான் பிரயாணப் படுவது நிச்சயம்! நிச்சயம்! அதிலும், இரகுவீரர் எப்படி மரவுரி யணிந்து வனஞ் சென்றாரோ அவ்விதமே நானும் மரவுரியுடுத்து, சடைமுடி தரித்து, கந்த மூலபலாதிகளைப் புசித்து, தரையிற் படு த்து செல்லப் போகிறேன். அந்தப் பிரபு இந்நாட்டுக்குத் திரும்பி வருகிற வரையிலும் நான் அவ்விதமே யிருக்கப் போகிறேன்" என்று மொழிந்தான்.

தசரதகுமாரனாகிய பரதன் கூறிய அமுதினுமினிய வார்த்தை களைச் செவிக்கேற்ற வசிஷ்ட மகா முனிவர் முதலிய அயோத்தி நகர வாசிகள் யாவரும் ஆனந்தக் கடலிலாழ்ந்து, அவன் புத்தியின்கூர்மை யையும், பக்தியின் சீர்மையையும் மெச்சிப் பரவசமானார்கள். பரதன் ஆலோசனையை மறுக்க மார்க்கமின்றி அதுவே சரியென மகிழ்ச்சி யுடன் ஆமோதித்தார்கள்.

பரதன் மறு நாட்காலையில் தம்பி சத்துருக்னனுடன் ஆரண்யம் செல்லப் பிரயாணமானான். அவனுடன் கூட, கௌசல்யை, சுமித்

திரையும் பிரயாணமானார்கள். அச்சமயம் மந்தரையிடத்திலும் கைகேயி யினிடத்திலும் வசித்த சரஸ்வதியும் பிரமலோகஞ்சென்றாள். இராஜஸ்திரீக ளிருவரும் புறப்பட்ட சங்கதியறிந்த கைகேயியும் கூடப் புறப்பட்டாள். வசிஷ்டரும் கூடச் செல்லத் தயாரானார், சுமந்திரன் முதலிய மந்திரிகளும், பரிவாரங்களும், நகரமாக்களும் இரத கஜ துரக பதாதிகளோடு கூடிய சைனியங்களும் புறப்பட்டு, பூமியை மறைத்துக்கொண்டு பரதனுக்கிருபக்கங்களிலும் பின்புறத்திலும் சென்றார்கள். கொடிகளும், ஆலவட்டங்களும் ஸ்வேதவர்ணப் பூச்சக்கரக்குடைகளும், ஆகாயத்தை மறைத்துப் பரதனுக்கு முன்னுகச் சென்றன.

பரதன் சத்துருக்னனுடனும், தாய்மார்களுடனும், குருவோடும், மந்திரியுடனும் சைனியங்களுடனும், மற்றுமுள்ள ஜனங்களுடனும் கங்கைக் கருகிலுள்ள சிருங்கிபேர நகரத்துக்குச் சென்றான்.

ஆங்குள்ள குகன், பரத மகாராஜன் சைனியங்களுடன் புறப்பட்டு வனத்தை நோக்கி வருவதைக் கண்ணுற்று, தன் தோழர்களாகிய போர்வீரர்களைக் கூவி, "ஓ மித்திரர்களே! பரதன் மிகுதியான சைனியத்துடன் வந்திருப்பது எனக்கு சந்தேகத்தை யுண்டு பண்ணுகிறது. நமது பிராதாவும் நம்முயிரினும் பிரியமுள்ள சிநேகிதரும் நம தாண்டவருமாகிய ஸ்ரீராமச்சந்திரருக்கு ஏதாவது கெடுதி செய்ய உத்தேசித்து வந்திருக்கிறானு; அல்லது அவரிடத்தில் அன்பு பாராட்டி அவரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறானு! இவ்விரண்டில் ஒன்றை நானே நேரில் போய்த் தெரிந்து வருகிறேன். பரதன் பரிசுத்தமான மனத்துடன் வந்திருந்தால் கங்கையைக் கடந்து செல்லட்டும், இல்லாவிடில் நீங்கள் தோணியை யிழுத்துக் கரையிலேற்றி விட்டு ஆயுதபாணிகளாகி யுத்தத்துக்குத் தயாரா யிருங்கள் "என்று கட்டளையிட்டு அருகில் நின்ற சிலரை யழைத்து, காணிக்கைக்காகச் சிலபொருளைக் கொண்டு வரச் சொல்லி யெடுத்துக்கொண்டு தன் தோழர்களுடன் பரதனைக்காணப் புறப்பட்டு, நான்கு புறத்திலும் மந்திரிகள் சூழ, சத்துருக்னனுடன் கார்மேகம் போன்ற சரீரத்துடனும், மரவுரி ஜடைமுடி யிவைகளுடைய பிரகாசத்துடனும், இராமனையே நினைந்துருகி வாடும் முகத்துடனும், ஓ இராம! ஓ இராம! என்று புலம்பும் நாவுடனும், தென்றிசை நோக்கிச் சேவிக்கும் கரங்களுடனும் விளங்காநின்ற பரத மகாராஜனிடம் வந்து,

தான் வந்திருக்கும் செய்தியை யறிவித்து, உத்தரவு பெற்று, அரச னருகிற் சென்று அவர் பாதாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ் கரித்து, தான் ஓர் வேடராஜனென்றும் குகன் என்னும் நாம முடையவனென்றும், ஸ்ரீராமபிரானின் ஊழிய னென்றும் தெரிவித் துக்கொண்டான்.

பரதன் தன்னடியில் வந்து வணங்கித் தான் இரகு சிரேஷ்ட னுடைய சேவகனென்று கூறிய குகனைப்பார்த்து, இவன் ஸ்ரீராம பிரான் தோழனானபடியால், தனக்கு இவனும் ஓர் பிராதாதான் என்று மதித்து, விரைவாக எழுந்து அவனை வாரியெடுத்து, அன் போடு ஆலிங்கனம் செய்து தன்னருகில் வீற்றிருக்கச் செய்து, குகனை நோக்கி "ஓ பிராதாவே! ஸ்ரீராமன் இவடம் வந்தபோது நீர் அவரைக் கண்டு தரிசிக்கவும், நிர்மலமான மனமுடைய அவரும் தன் கண்கள் ஆனந்த பாஷ்யம் பொழிய உம்மைக் கட்டித் தழுவவும் நேர்ந்த பாக்கியம் பெற்றவரானபடியால் நீரே கிருதார்த்தனானவர்; தன்னியனானவர்; என்னைப் போன்றவரல்லர், நீர் ஸ்ரீராமனுக்கு மிகப்பிரியமுள்ளவர், பக்தியுள்ளவர், புண்டரீகக் கண்ணராகிய கோதண்ட மூர்த்தியை நீர் எந்த இடத்தில் பார்த்தீர்? ஸீதையுட னும் இலக்ஷ்மணனுடம் எங்கு வசித்திருந்தார்? ஸீதையுடன் எங்கு பள்ளிக்கொண்டார்? அந்த இடத்துக்கு என்னை அழைத்துக் கொண்டுபோய்க் காட்டும், அந்தப் பிரதேசத்தை நான் பார்க்க வேண்டும்" என்று பிரலாபித்தார். குகன் இரகுகுல சிரேஷ்டர் வாசஞ் செய்து கண்வளர்ந்த இடத்தைப் பரதனை யழைத்துக் கொண்டு போய் காட்டினான்.

சிறியகற்கள் நிறைந்த இடத்தில் தருப்பைகளைப் பரப்பி அதின் பேரில் ஸீதையுடன் ஸ்ரீராமன் படுத்திருந்த இடத்தைப் பரதன் பார்த்தான்; ஆச்சரிய மடைந்தான்; ஜனகமகாராஜன் தவத்தால் பெற்று வளர்த்த ஜானகி மிகமிருதுவாகிய சரீரமுடையவள், உப் பரிகையின் மீது இரத்ன மயமான மஞ்சத்தில் விரிக்கப்பட்ட புஷ்பம் நிறைந்த மெத்தையின்மீது ஸ்ரீராமனுடன் சயனம் செய்ய வேண்டி யவள், இந்தக்கல் நிறைந்த தரையில் புல்லால் வேய்ந்த படுக்கையில் மாரனை யொத்த இரகு வீரனுடன் எவ்விதம் சயனித்தாளோ? என்ன நினைத்தாளோ? இத்தகைய சம்பவம் கொடியது! கொடியது! விந் தையினும் விந்தை! க்ஷத்திரிய குலதர்மத்தை யடுத்தது மல்ல;

மநு நீதியைப் பின்பற்றிய இராஜ நீதியைத் தழுவியதுமல்ல, நீலோற்பல மலர் போன்ற நேத்திரமுடைய உலக நாயகனுகிய இரகு குலதிலகனும் அலக்கணுற்று துன்பத்தை யநுபவிக்க நேர்ந்ததுவும் ஆச்சரியம்! மஹாத்மாவாகிய இராமனுக்கு இவ்விதத் துன்பமுண்டானதற்குக் காரணம் நானே. இத்தகைய கொடிய செயல்கள் என்னுலேயே ஏற்பட்டது. நான் மிக்க பாபத்தைப் பண்ணினதால், துர்த்தையாகிய கைகேயிக்குப் புத்திரனுகப் பிறந்தேன்.

குணசீலனுகிய இலக்ஷ்மணனுடைய ஜன்மம் பிரயோஜன முள்ளது. மஹாத்மாவாகிய ஸ்ரீராமன் வனத்தில் வாசஞ் செய்தாலும் இலக்ஷ்மணன் அசந்துஷ்டியடையாமல் இரகுநந்தனனுடனே சஞ்சரிக்கிருன். "தம்பின்னுள்ளான் படைக்கஞ்சான்" என்னும் பழமொழியை யுலகத்தில் நிலை நிறுத்தினுன். "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்பது போல நான் அவதரித்தேன். நான் ஸ்ரீராமனுடைய 'தாசாதிதாசன்' ஆவேனுகில் ஜன்மசாபல்ய மடைவேன், இவ்விதம் குகனிடம் பிரஸ்தாபித்துப் பரதன் வேதனை யடைந்தான்.

பிறகு பரதன் தனக்குள் தானே யொருவாறு மனந்தேறி, குகனைப் பார்த்து "ஓ பிராதாவே! இப்போது ஸ்ரீராமன் எங்கிருக்கிருர். உமக்குத் தெரிந்தால் அந்த இடத்தை யெனக்குத் தெரியப்படுத்தும், நான் அவரை யழைத்து வரச் செல்ல வேண்டும்" என்றுன்.

அப்போது குகன் அவ்விதம் கூறிய பரதனைப்பற்றி, தான் கொண்ட சந்தேகம் நிவர்த்தியாகினவனுகி, "ஓ தேவ! நீரே தன்யர். ஏனெனில், ஸ்ரீராமச்சந்திரனிடத்திலும் ஸீதையிடத்திலும் இலக்ஷ்மணனிடத்திலும் மனங்கனிந்த அன்பு பாராட்டிப் பக்தி செலுத்தினீர், இப்போது யாவருக்கும் பிரபுவாகிய ஸ்ரீராமன் ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடனும், சித்திரகூட மலைக்கருகிலுள்ள மந்தாகினி நதிக்குச் சமீபித்த முனிவர்களின் ஆச்சிரமங்களிருக்கும் ஸ்தானத்தில் வசிக்கிருர், மிகுதியான சுகத்தை யநுபவித்துக் கொண்டிருக்கிருர். அங்கு யாவரும் சீக்கிரமாகச் செல்வோம்" என்று தெரிவித்தான்.

பரதன் அப்படியானுல் நாமெல்லோரும் இப்போதே அங்கு செல்லவேண்டுமென்று கூற, குகன் ஆங்கு செல்வதற்கு மஹாநதியாகிய கங்கையைக் கடந்து போகவேண்டியிருப்பதால், தோணியைக்

கொண்டுவருகிறேன் என்று சொல்லி விடைபெற்றுச்சென்று பரதன், சேனைகளோடு கங்கையைக் கடப்பதற்காக ஐந்நூறு ஓடங்களைக் கொண்டு வந்தான். அவைகளில் சைனியமுள்பட யாவரும் ஏறினார்கள். பரதனுக் கேற்பட்ட தோணியைக் குகன் தானே செலுத்தினான். அதில் பரதன், சத்துருக்னன், கௌசல்யை, சுமித்திரை வசிஷ்டர் இவர்கள் ஏறினார்கள். மற்றோர் ஓடத்தில் கைகேயி மற்றுமுள்ள ஸ்திரீகளுடன் ஏறினாள். யாவரும் கங்கையைத் தாண்டி அக்கரை சேர்ந்தார்கள்.

பரதன் சேனைகளை யோரிடத்தில் நிறுத்தி விட்டு சத்துருக்னனுடன் பரத்துவாசமுனிவர் ஆச்சிரமத்துக்குச் சென்று ஜ்வலிக்கும் அக்னி போன்ற சரீரதேஜஸுடைய ரிஷிசிரேஷ்டரான பரத்துவாச முனிவரைக் கண்டு மிகுந்த பக்தியோடு அவர் பாதாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான். அம்முனிவருந் தன்னடியில் வந்து வணங்கினவன் தசரதர் திருக்குமாரனை பரதனென்றறிந்து, மட்டற்ற காதலுடையவராய்த் தழுவியெடுத்து ஆசனத்திருத்தி க்ஷத்திரியருக்குற்ற விதிப்படிப் பூஜித்தார். பிறகு மாவுரியையும் சடைமுடியையும் தரித்திருந்த பரதனைப் பார்த்து "ஓ குழந்தாய்! கைகேயி பெற்ற வரத்தால் அயோத்தி நாட்டின் அரசாட்சிக் குரிய நீ மாவுரி தரித்தல் முதலிய ரிஷி வேடச் சின்னம் தாங்கித் தவமுனிவர் வாசஞ்செய்யுந் தண்டகாரண்யத்துக்குட் பிரவேசித்த காரணம் என்ன?" என்று கேட்டார்.

பரதன் பரத்துவாச முனிவரின் வார்த்தையைக்கேட்டுக் கண்ணீர் பெருகவிட்டு, "ஓ பகவானே! தாங்கள் எல்லோருடைய இருதயங்களிலும் வசிக்கக் கூடியவர்கள். ஆகையால் யாவற்றையும் அறியக் கூடியவர்கள். அப்படியிருந்தும் என்னைக் கேட்டது தங்களுக்கென்பேரிலிருக்கும் அன்பை வெளிப்படுத்துகிறது.

ஓ மஹாநுபாவரே! என் தாயாகிய கைகேயி, ஸ்ரீராமனுக்கேற்பட்ட இராஜ்ய பட்டாபிஷேகத்துக்கு விக்கினமுண்டாகும்படிச் செய்த செய்கையையும், அதன் பேரில் எனதன்புள்ள இரகுநந்தனன் வனவாசஞ் செய்யச் சென்றதையும் நான் கொஞ்சமேனும் அறியேன். ஓ முனிசிரேஷ்டரே! தங்களுடைய பாதபத்மங்களிரண்டும் பிரமாணம்," என்று அவர் பாதம் இரண்டையுந் தொட்டு ஆறுத்

துக்கங் கொண்டமனத்துடன் "ஓ தேவரான முனிவரே! நான் சுத்தனோ அசுத்தனோ அதைத்தாங்களே அறியவேண்டும். ஏ ஸ்வாமின்! இராஜ்யத்துக்கு இராஜாதிராஜனாகவும் உலகத்தில் மன்னுயிரெல்லாந் தன்னுயிராகக் காப்பவனுமாகிய ஸ்ரீராமனை விட்டு விட்டு நான் இராஜ்யத்தை யடைவதால் எனக்கென்ன பிரயோஜனம் ஏற்படும். ஓ முனிசிரேஷ்டரே! ஸ்ரீராமச் சந்திரனுக்கு நான் எப்போதும் * ஊழியக்காரனானவன். ஆகையால் ஸ்ரீராம னிருக்குமிடஞ்சென்று அவருடைய ஸ்ரீபாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, இராஜ்ய பட்டாபிஷேகத்துக்குரிய சாமக்கிரிகைகளை அவருக் கர்ப்பணஞ்செய்து, கானகத்தில் தானே வசிஷ்டர் முதலிய முனிவர்கள், மந்திரிகள், நகரிலுள்ளோர், தேசங்களிலுள்ளோர், இவர்களுடன் ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து ஸீதா நாயகனாகிய ஸ்ரீராமனை அயோத்திக்கு அழைத்துச் செல்ல இவ்விடம் வந்திருக்கிறேன். அயோத்தி சென்று அவருக்குத் தாஸனாகி ஊழியஞ் செய்யப்போகிறேன்" என்று பாரத்துவாசமுனியைப்பார்த்து பரதன் கூறினான்.

இவ்விதம் இரக்கத்துடனும் ஆதரவுடனும் கூறிய பரதன் வார்த்தையைக்கேட்ட பாரத்துவாச முனிவர் ஆச்சரிய மடைந்து பரதனையெடுத்துக் கட்டியணைத்து மிகவுங் கொண்டாடிப் பரதனைப்பார்த்து "ஏ குழந்தாய்! நான் ஞானதிருஷ்டியால் நடக்கப்போகிற விஷயம் தெரிந்து கொண்டேன். நீ ஒன்றுக்குந் துக்கமடையாதே; இலக்ஷ்மணனைவிட ஆயிரம் மடங்கு சிறந்த பக்தனாகிறாய். குற்றமற்றவனே! சேனைகளுடன் கூடிய உனக்கு ஆதித்தியம்(விருந்து)செய்ய விரும்புகிறேன். நீ இப்போது வசிஷ்டமுனிவருடனும் சத்துருக்னனுடனும் தாய்மார்களுடனும் உன்னுடன் வந்த சேனைகளுடனும் போஜனம் செய்து விட்டு நாளையதினம் இராமனிருக்குமிடம் செல்லலாம்' என்றார்.

அன்புடன் பகர்ந்த பாரத்துவாசமுனிவர் வார்த்தையைக் கேட்ட பரதன், அம்முனிவரைநோக்கி "முனிவரே! தங்கள் உத்தரவின்படி நடக்கிறேன்" என்றான்.

பாரத்துவாசமுனிவர் சரீரசுத்தி செய்துகொண்டு ஓமக்கிருகம், சென்று பத்மாசனத்தமர்ந்து ஆசமனம் செய்து அங்கநியாச,

* எப்போதும் = இஜ்ஜன்மத்திலும், முற்ஜனமத்திலும்.

காநியாச, பிராணுயாமங்கள் செய்து ஊனக்கண்ணை மூடி ஞானக் கண்ணை நாடி, ஏகாக்ரசித்தராயிருந்து சிதாகாயம்பற்றி மௌன நிலை யடைந்தார். தன்னிடம் தொண்டு புரிந்து, இகத்தையாவது பரத்தையாவது குறித்துத் தங்களுக்கிஷ்டமானதை யபேக்ஷித்தவர் களுக்கு, அவர்கள் அபேக்ஷையைப் பூர்த்தி செய்யும் வல்லமை யுடைய பரத்துவாசமுனிவர், சற்று நேரம் மௌன நிலையிலிருந்து. அபேக்ஷித்த பொருளைக் கொடுக்கும் காமதேனுவை நினைத்தார்.

உடனே காமதேனு அவ்விடம் வந்து பரதன் முதலியவர்களுக் கும், சைனியங்களுக்கும், ஆகாராதிகளுக்கு வேண்டிய அறுசுவை களோடுகூடிய பஞ்ச பக்ஷண பரமான்னங்களுடன் யாவற்றையு முண்டு பண்ணிற்று.

யோகீந்திரனாகிய பரத்துவாசமுனிவர், சாஸ்திர விதிப்படி யேற்பட்ட வரிசைக்கிரமப்படி, முதலில் வசிஷ்ட முனிவரைப் பூஜி த்துப் புசிக்கச் செய்த பிறகு பரதனாதி சைனியங்கள்வரை யாவ ருக்கும் திருப்தி யுண்டாகப் போஜனம் செய்வித்தார். யாவரும் அங்கு ஓர் தினம் வாசஞ் செய்தார்கள்.

மறுநாட் காலையில் பரதன் சத்துருக்னனுடன் எழுந்து பரத் துவாச முனிவரைக் கண்டு பணிந்து அவரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு மற்றவர்களுடனும் ஸ்ரீராமன் வசிக்கும் இடம் செல்லப் புறப்பட்டு, சித்திரகூட மலைக்குச் சென்று, அதனருகிலுள்ள ஓரிட த்தில் சேனைகளை நிறுத்திவிட்டு, ஸ்ரீராமச் சந்திரனைத் தரிசிக்க விரும்பி, சத்துருக்னன், குகன், சுமந்திரன் இவர்களுடன் பரதன் முன் சென்றான். அங்குள்ள ரிஷி ஆச்சிரமத்தில் சென்று அங்கு இராமனைக்காணுமல் அவ்விடம் வசிக்கும் ரிஷிகளைக் கண்டு இரகு சிரேஷ்டரான ஸ்ரீராமர் ஸீதையுடனும், இலக்ஷ்மணருடனும் எங்கு வசிக்கிறார் என்று கேட்டான்.

அவர்கள் இவர்களையழைத்துக் கொண்டு போய், சித்திரகூட மலைக்குச் சமீபத்தில் மந்தாகினி நதியின் வடகரையிலுள்ள பரிசுத்த மான இடத்தில், மனதுக்கு இரம்மியமான வனங்கள் சூழ்ந்ததும், மா, பலா, வாழை, இவைகள் நிறைந்ததும், சண்பகம், புன்னகம், வகுளம், முதலியன அடர்ந்ததுமாகிய ஸ்ரீராமர் ஆச்சிரமத்தைக் காண்பித்தார்கள்.

பரதன், சத்ருக்னன், குகன், மந்திரி யிவர்களுடன் சந்தோஷத்துடன் சென்று, மிகப்பிரகாச முள்ளதும், சுபகாமானதும் முனிக் கூட்டங்களால் சூழப்பட்டதும், ஸ்ரீராமருடைய மனதுக் கினிமையுள்ளதுமான இராமாச்சிரமத்தைத் தூரத்திலேயே கண்டு தரிசித்தான்.

## ஒன்பதாவது சருக்கம்.

---

பரதன் ஸ்ரீராமச்சந்திரன் வசிக்கும் ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் சென்று, அப்பிரதேசங்களில் ஸ்ரீராமமூர்த்தியினுடைய உபய பாதங்களிலுள்ள வஜ்ரம், பராங்குசம், பத்மம், துவஜம் முதலிய ரேகைகள் பதிந்த அடிச்சுவடுகளைக்கண்டு, பிரமானந்தங்கொண்டு அவைகளைச் சேவித்து, தம்பி சத்ருக்னனுடன் அடிச்சுவட்டிலுள்ள தூளிகளை யெடுத்துப் பூசிக்கொண்டு தான் கிருதார்த்தனாயினேன். இப்பாதத் தூள்களைப் பிரமன் முதலிய தேவர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். வேதங்களும் அவைகளையே நாடுகின்றன. நான் அவைகளிருக்கும் இடத்தைத் தரிசித்தேன். அவைகளைத் தரித்துங்கொண்டேன். ஆகையால் என் ஜன்மம் பிரபாவமடைந்தது என்றிவ்வாறு தனக்குள் அன்பின் பெருக்கால் மகிழ்ச்சி யடைந்து உளம் நெகிழ்ந்து கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிய, அவை மார்பின் மீது பெருகி யோடத் தேகம் மயிர்க்கூச்ச லெடுக்க, ஸ்ரீராமன் சந்நிதிக்கு வந்து, ஆச்சிரமத்தில் ஏகாந்தத்தில் ஸீதையுடனும் அருகில் இலக்ஷ்மணனுடனும், வீற்றிருக்கும், ஸ்ரீராமமூர்த்தியின் தூர்வாதளசியாமள (அறுகம்பில்லைப் போன்ற பசுமை நிறம்) ரூபத்தையும், செவ்வரி படர்ந்து கடைசிவந்து கர்ண பரியந்தம் நீண்டு நீலோற்பலம் போன்று விளங்கும் கிருபா வீட்சண்ணியத்தையும், அந்திவண்ணச் சடைமுடியாகிய கிரீடத்தையும், சிறந்த மரவுரியாகிய வஸ்திராபரணத்தையும், இளஞ்சூரியனுக்கொப்பாகிய சரீர காந்தியையும், அலர்ந்த செந்தாமரை போன்ற திருமுக மண்டலத்தையும், ஜனக நந்தினியாகிய ஸீதையை விநோதப்படுத்தும் திருவாக்கையும், எப்போதும் இலக்ஷ்மணப் பெருமாளினால் சேவிக்கப்படும் உபய சரணாரவிந்தங்களையும் பார்த்து, தன் வியாகூலத்தை ஒருவாறு தீர்த்து, அங்கம் பூரித்து, ஒரு விதத்தில் சந்தோஷமும் ஒரு விதத்

தில் துக்கமும் உள்ளவனுகி, விரைவில் அவரை நாடிபோடி அவருடைய பாதபத்மங்களிரண்டையும் பற்றிப் பிடித்துக் கொண்டு சாஷ்டாங்கமாகத் திருவடிகளில் வீழ்ந்து வீழ்ந்து பல தடவை நமஸ்கரித்தான்.

ஸ்ரீராமச்சந்திரன் தன்னடியில் வந்து வீழ்ந்து வணங்கின பரதனை, ஐங்கரத்தான் துதிக்கைபோல் நீண்ட தன்னிருகரங்களாலும் எடுத்தணைத்துக் கண்களில் நின்று தாரை தாரையாக வெளிப்படும் அன்பென்னும் நீரால், திருமஞ்சனஞ் செய்து நீலகண்டனை யொத்து அடிக்கடி ஆலிங்கனம் செய்து மடிமீதிருத்திக் கொண்டான்.

பின்பு கௌசல்யாதேவி, சுமித்திரை, கைகேயி முதலிய தாய்மார்கள் இராகவனைப் பார்ப்பதில் விருப்பங்கொண்டு கானகத்தில் தாகமடைந்த பசுக்கூட்டங்கள் உதகங் கண்டோடுவதுபோல அதிவேகத்துடன் வந்தார்கள். தானீன்ற கன்றைப் பிரிந்த காராம் பசுவானது தன்னுடைய சொந்தக் கன்றைப் பார்த்து, எக்களிப்பதைப்போல் கௌசல்யாதேவி ஸ்ரீராமனைக்கண்டு அகங் குளிர்ந்தாள். ஆனந்தித்தாள். தாயைக்கண்ட இராகவன் சீக்கிரம் எழுந்து அவள் பாதத்தில் அஷ்டாங்க நமஸ்காரம் பண்ணினுர். (அஷ்டாங்க நமஸ்காரம் இருகால், இருதோள், இருகை, நெற்றி, மார்பு இந்த எட்டு உறுப்புகளும் நிலந்தோய வணங்குதல்) கௌசல்யாதேவியும் தன்னிரு கண்ணிலும் நீர் பெருகத் தன் குமாரனைக் கட்டியணைத்தாள். பிறகு இரகுநந்தனன் சுமித்திரை, கைகேயி இவர்களையும் அவ்விதமே வணங்கினுர். அவர்களும் அவ்விதமே இராமனைக் கட்டித் தழுவினுர்கள்.

அச்சமயம் அவ்விடம் வந்த வசிஷ்ட முனிவரைப்பார்த்து இரகுநாதன் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து முனிவரை நோக்கி ஸ்வாமி நான் கிருதார்த்தனுயினேன் என்று கூறினுர். பிறகு குகன் சுமந்திரன் முதலினேர் வந்து தன்னடியில் வணங்க இரகு நந்தனன் அவரவர்களுக் கேற்ற மரியாதை செய்து எல்லோரையும் உட்காரும்படி செய்தார்.

ஸ்ரீராமர் தானும் ஓரிடத்தில் அமர்ந்து, திவ்வியாசனத்தில் வீற்றிருக்கும் குலகுருவாகிய வசிஷ்ட மகா முனிவரைப் பார்த்து, "ஓ ஸ்வாமி! என் தந்தையாகிய சக்கரவர்த்தி க்ஷேமமாக இருக்கிருரா?

வெகு துக்கமடைந்த அவர் எனக்குச் சொல்லியனுப்பினது என்ன" என்று கேட்டார். வசிஷ்டர் ஸ்ரீராமனைப் பார்த்து "ஓ இரகுநந்தன! உனது தந்தையாகிய தசரத மகாராஜன் புத்திர சோகத்தால் தாபமடைந்த மனமுடையவராகி யுன்னையே நினைந்து இராம இராம என்றும், ஸீதே ஸீதே என்றும், இலக்ஷ்மண இலக்ஷ்மண என்றும், க[illegible] கொண்டே மரணமடைந்தார்" என்று கூறினார்.

ஸ்ரீராமன், வசிஷ்டமுனிவர் கூறிய சூலாயுதத்துக்குச் சமமான அந்தவார்த்தையைக் கேட்டதும், இடிவிழுந்தது போலத் தியங்கி மனமருண்டு ஆ ஹதமாயினேன் என்று கூறி, தம்பி இலக்ஷ்மணனுடன் பூமியில் விழுந்து புரண்டு அழுதார். கூட இருந்த கௌசல்யா தேவி முதலிய தாய்மார்களும் மற்றுமுள்ள யாவரும் அவருடன் கூடக் கதறினார்கள். "ஓ பிதாவே! என்னை விட்டு எங்கு சென்றீர்கள். தயைக்கிருப்பிடமாகியவரே! நான் அனாதையாகி விட்டேனே, ஓ மகானுபாவரே! இனி எவர் என்னை ஆதரிப்பவர்கள்" என்று இவ்விதம் இராமன் பிரலாபித்தார். ஸீதையும், இலக்ஷ்மணரும் ஸ்ரீராமனைவிட மிகுதியாகவே வாய்விட்டலறினார்கள்.

வசிஷ்டமாமுனிவர் அவர்களுக்குத் தைரியமடைதற்குரிய மொழிகளைக் கூறியெல்லோரையும் துக்க நிவிர்த்தியடையச்செய்தார்.

ஸ்ரீராமன் முதலிய யாவரும் குருவின் வார்த்தையால் மனந்தேறி மந்தாகினி நதிக்குச் சென்று ஸ்நானம் செய்தார்கள். ஸ்ரீராமன் இலக்ஷ்மணன் இருவரும் தசரத பூபாலருக்குப் பழங்களாலமைந்த பிண்டம்போட்டுத் திலதர்ப்பணம் செய்து பிதுர்க்குரிய கடமையை முடித்து நாம் எதைப் புசிக்கிறோமோ அதுவே பிதுர்க்களுக்கும் பிரீதியாகட்டும் என்று பிதுர்த்தேவதைகளுக்கு உபசாரம் கூறி, மறுபடியும் யாவரும் ஸ்நானம் பண்ணி ஆச்சிரமம் வந்து சேர்ந்தார்கள். அன்றையதினம் யாவரும் உபவாசமிருந்தார்கள்.

மறுநாட் காலையில் பரதன் மந்தாகினி நதியில் ஸ்நானம் செய்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு வசிஷ்டருடன் ஸ்ரீராமரிடம் வந்து வணங்கி "ஓ இராமா! மகாபாக்கியஞ்செய்த பிரபுவே! தாங்கள் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு தந்தை பரிபாலித்துவந்த இராஜ்யத்தைப் பரிபாலனம் செய்துவரவேண்டும். எனக்குத் தாங்கள் சிரேஷ்ட பிராதாவானபடியால் தந்தையாகின்றீர்கள். பிரஜைகள் எதிரிகளாலாவது, அறிவில்லாத மூடர்களாலாவது, திருடர்களா

லாவது, தன்னாலாவது, தன் பரிசனத்தாலாவது ஏற்படும் ஐந்துவிதத் துன்பங்களால் வருத்தமடையாமற் காப்பது க்ஷத்திரியருக்குரிய தருமம். இப்போது அயோத்தியிலுள்ள பிரஜைகள் அரசனை யிழந்து தவிக்கிறார்கள். ஆகையினாலே தாங்கள் அரசாக்ஷியை ஒப்புக்கொண்டு அயோத்திமா நகரத்திலுள்ள ஜனங்களையும் எங்களையும் காப்பது தங்கள் கடமை. மேலும் க்ஷத்திரியனானவன் தனது நாட்டில் செங்கோல் தவறாது இராஜ்ய பரிபாலனம் பண்ணி குடிகளிடத்தில் ஆறிலோர் கடமைபெற்று, தேவர், பிதுர், துறந்தார், சுற்றத்தார், முதலியவர்களுக்குரிய கடமையைச் செய்து தான் தர்ம வழியில் நின்று சேகரிக்கும் பொருள் அற நிலைப்பொருள். பருவமுங் குலமுங் குணமும் ஒத்தகன்னியை அக்கினி சாட்சியாக மணம்புரிந்து இல்லத் திருத்தல் அற நிலை யின்பம். ஆகையினாலே க்ஷத்திரியனாகிய தாங்கள் அரசனாகி அற நிலைப்பொருளைச் சேகரித்து இகலோக பரலோக சாதகத்துக்குரிய யாகங்களைச் செய்து இல்லறத்திலிருந்து அறநிலையின்பத்தை யநுபவித்து வமிசம் விருத்தியடைவதற்காகப் புத்திரனை யடைந்து அவன் பருவமடைந்த காலத்து அவனிடத்தில் இராஜ்யத்தை ஒப்புவித்து பிறகு (வானப்பிரஸ்தம்) வனஞ்செல்ல வேண்டும். ஓ பிரபுவே! தாங்கள் இப்போது வனசஞ்சாரம் செய்வது க்ஷத்திரிய குலதருமமல்ல. ஆகையால் தாங்கள் அயோத்திக்கு வந்து அரசாக்ஷியை ஒப்புக்கொண்டு என்னை இரக்ஷிக்கவேண்டும். இதுவே நீதிமார்க்கம், நம்முடைய குலதர்மம். என் தாயார் செய்த கெட்ட செய்கையைக் கொஞ்சமேனுங் கவனிக்கக்கூடாது. இவ்வாறு பரதனுரைத்து ஸ்ரீராமன் பாதங்களில் நமஸ்காரம் செய்தான்.

ஸ்ரீராமச்சந்திரன் தன்னைவணங்கின பரதனை யெடுத்துக் கட்டியணைத்து முத்தமிட்டு மடிமீதிருத்தி அன்பால் பெருகும் கண்ணீரை முத்து முத்தாக விடுத்துத் தாழ்ந்த குரலோடும், தன்னிடம் மிகுந்த பிரியமுற்ற பரதனைப்பார்த்து "ஓ பால! நான் சொல்வதைக் கவனித்துக்கேள். நீ கூறியதனைத்தும் நீதி மார்க்கமே, நானும் அவ்விதம் நடக்கக்கூடியதே. ஆயினும் நமது பிதா தசரத மகாராஜர் என்னை யீரேழு வருடம் வனவாசம் செய்யவும், உன்னை இராஜ்ய பரிபாலனஞ் செய்யவுங் கட்டளையிட்டார். ஆகையால் தந்தையின் வார்த்தையை யநுசரிப்பதைவிட மேன்மையான நீதி மார்க்கமில்லை. எவன் ஒருவன் பிதுர் வாக்கியத்தை யதிக்கிரமித்துச் சுவதந்திரனாகிறானோ

அவன் உயிருடனிருக்கினும் பிரேதமெனப்படுவான். மேலும் சரீராந்தியத்தில் நரகத்தை யடைவான். ஆகையால் நாமிருவரும் பிதுர் வாக்கிய பரிபாலன தர்மத்தை யுத்தேசித்து நம்மில் நீ பட்டாபிஷேகம் செய்துகொண்டு முடிதரித்துத் தரணியாள வேண்டியது. நான் ஜடைமுடி தரித்து மரவுரியுடுத்து ஆரண்யவாசம் செய்யவேண்டியது. இவையே க்ஷத்தியருக்குற்ற நீதிமார்க்கங்கள்" என்று பரதனைப் பார்த்து ஸ்ரீராமன் புகன்றார்.

இதைக் கேட்ட பரதன், "ஓ இராம! ஏ அண்ணா! நமது பிதா ஸ்திரீயால் ஜெயிக்கப்பட்டவர். * பிரமங்கொண்ட மனமுடையவர். பிராந்தியுடையவன் வாக்கை ஸ்திரபுத்தியுடையவன் எப்படி கிரகிக்க மாட்டானோ அதுபோல மயக்கங்கொண்ட பிதாவின் வாக்கியத்தைத் தாங்கள் அநுசரிக்கக் கூடாது. இதுவும் நீதியே" என்று இராமனைப் பார்த்துக் கூறினான்.

ஸ்ரீராமன், இவ்விதங் கூறிய பரதனை நோக்கி, "ஓ பரத! ஏ தம்பி! நமது தந்தையாகிய தசரதர் ஸ்திரீயால் ஜெயிக்கப் பட்டவரு மல்ல, மயக்கங் கொண்டவருமல்ல, பிராந்தியடைந்து அவர் கூறவுமில்லை. அவர் சத்தியவந்தர். பெரியோரானவர்கள் நரகத்தை விட அசத்தியம் கெட்டதென மதிப்பார்கள். முன்னம் கைகேயிக்கு இரண்டுவரங் கொடுப்பதாக வாக்களித்திருந்தார் அந்த வரத்தை அவளிப்போது அபேக்ஷித்தாள். நமது தந்தை அசத்தியம் தமக்கு வந்து நேருமோ வென்று பயந்து அந்த வாக்கையுறுதிப் படுத்தக் கைகேயி கோரியபடி இராஜ்யம் உன்னுடைய தென்றும், நான் 14 வருஷம் வனம் செல்லவேண்டு மென்றுங் கட்டளையிட்டார். நானும் கைகேயியினிடம் அந்த வாக்கின்படி நடப்பதாகப் பிரதிக்ஞை செய்தேன். இருவழியிலும் நான் வனவாசம் செய்வதற்குரியவனாகிறேன். நான் இரகுவம்சத்திற் பிறந்தவனாக இருந்தும் எவ்விதம் அதை நிக்கிரகிக்கக் கூடும். தருமசங்கடமாக இருக்கிறதே யிக்கருமம்" என்று கூறினார்.

இவ்விதங் கூறிய ஸ்ரீராமன் சொற்களைக் கேட்ட பரதன், "ஓ இராம! அப்படியானால் நான் தங்களுக்குப் பதிலாக மரவுரியுடுத்துப் பதினான்கு வருஷம்வரை வனத்தில் வாசஞ்செய்கிறேன். தாங்கள்

* பிரமம் = மயக்கம்.

எனக்குப் பதிலாக முடிதரித்து இராஜ்யத்தில் வசியுங்கள்" என்று மொழிந்தான். ஸ்ரீராமன் "குழந்தாய்! நமது பிதா உனக்குத்தான் இராஜ்யம் கொடுத்தார். எனக்கு வனவாசத்தைத் தான் கொடுத்தார். நாம் அதற்கு மாறுதலாக நடந்தால் அதுவும் அவர்வாக்கைப் பொய்ப் படுத்தினதாகவே முடியும், இதுவும் ஒழுங்கல்ல" என்று மறுத்தார்.

பரதன், இவ்விதம் தான் கோரிய விஷயம் யாவற்றையுந் தடுத்துக்கூறிய ஸ்ரீராமன் வார்த்தையைக் கேட்டு வியாகூலமடைந்தவனுய்த் தமையனை நோக்கி, "ஓ இரகுகுலதிலக! நானுந் தங்களுடன் கூடவேயிருக்கிறேன். இலக்ஷ்மணனைப்போல் சிசுருஷை செய்கிறேன். இல்லாவிடில் பிராயோபவேசனம் (உபவாசம்) செய்து பிராணனை விடுகிறேன்" என்று நிச்சயமாகச் சொல்லி பூமியில் தருப்பைகளைப் பரப்பி யதின்மீது கிழக்கு முகமாக உட்கார்ந்திருந்தான்.

ஸ்ரீராமன் பரதனுடைய பிடிவாதத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்து தன்னருகிருந்த குருவாகிய வசிஷ்டமுனிவரைக் கடைக் கண்ணால் பார்த்தார்.

திரிகால வர்த்தமான முணர்ந்த வசிஷ்டர் இராமனுடைய ஜாடையை யறிந்து, பரதனைத் தனிமையில் அழைத்துக்கொண்டு போய், பரதனைப்பார்த்து 'ஓ குழந்தாய்! நான் சொல்லும் தேவர்களுக்கும் அறிதற்கரிதாகிய இரகசியத்தைக்கேள். அதாவது முன்பு, பிரமதேவர் மகாவிஷ்ணுவிடத்தில் சென்று இராவணனை வதை செய்யும்படிக் கேட்டுக்கொண்டார். அவர் அதற்காகத் தசரத குமாரனுக அவதாரஞ்செய்திருக்கிறுர். விஷ்ணுமாயை அவருக்கு உதவியாக ஸீதை யென்ற பெயருடன் ஜனக மகாராஜன் குமாரியாக அவதாரம் செய்திருக்கிறது. ஆதிசேஷன் இலக்ஷ்மணனுக அவதாரம் செய்திருக்கிறுன். இந்த மூவரும் இராவணனை வதம் செய்யக் கானகம் வந்திருக்கிறுர்கள், கைகேயிக்கு வரங்கொடுத்ததும், அவள் வரம் பெற்றதும் இராமன் பட்டாபிஷேகத்தைத் தடுத்ததும் மாயையின் காரியம் என்று நீ அறியவேண்டியது. கைகேயி தான் சுயமாகப் பேசியதல்ல. அவள் இவ்வளவு இரக்கமற்ற வார்த்தையைப் பேசமாட்டாள், அவள் பேரிலுங் குற்றமில்லை. ஆகையால் நீ கொண்ட ஆத்திரத்தை விட்டுவிடு. இராமனை யழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று கனவிலும் நினைக்காதே, இப்போது உன்னுடன் கூட வந்திருக்கும் இராஜஸ்திரீகளுடனும், சேனைகளுடனும் நீ அயோத்திக்

குத் திரும்பிச் செல்லுவதே முடிவான யோஜனை. நீ வேறுவிதம் யோஜிக்கவேண்டாம். ஸ்ரீராமன் இராவணன் முதலிய கொடியதுஷ்டர்களை வதம் செய்து பிறகு அயோத்திக்கு வந்து சேருவார். இந்தத் தேவ இரகசியத்தை வெளிப்படையாக யாவருக்கும் தெரிவிக்கக் கூடாது. இந்த சூட்சியறியாமல் நீ விரதம் செய்வது கூடாதகாரியம்" என்று பரதனுக்கு உபதேசித்தார்.

இவ்விதம் ஆசிரியராகிய வசிஷ்ட முனிவருரைத்த தேவ இரகசியத்தைக் கேட்ட பரதன் ஆச்சரியமடைந்து ஸ்ரீராமன் அருகில் சென்று "ஓ என்னருமையான சிரேஷ்ட பிராதாவே! தாங்கள் பிதுர் வாக்கிய பரிபாலனம் செய்வது கடமையே, ஆனால் பிதாவாகிய தசரதர் தங்களைப் பதினன்கு வருஷம் வனவாசம் சென்று திரும்பி அயோத்திக்கு வந்துசேர் என்று சொன்னாரேதவிர வனத்திலிருக்கச் சொல்லவில்லை, மேலும் இராஜ்ய பரிபாலனம் பண்ணக்கூடாது என்று கூறவுமில்லை. என்னுடைய தாய் கைகேயி என்னுடைய அநுமதியைப்பெற்று இராஜ்யத்தை எனக்காகக் கேட்கவுமில்லை. நான் நாடாளச் சம்மதிக்கவுமில்லை. தசரதர் 14 வருஷம் கழிந்த பின் அயோத்திக்கு வரச்சொன்னதின் கருத்து பிறகு நாட்டைத் தாங்கள் ஆளவேண்டுமென்பதே. கைகேயி அந்த இராஜ்யத்தை தங்களிடம் ஒப்புவிக்கத் தயாராயிருக்கிறாள். நானும் அதற்குச் சம்மதமுள்ளவனாக இருக்கிறேன். இராஜ்யம் தங்களுடையதே இதுவே நீதி. ஆகையால் இராஜ்யத்தைத் தாங்களே ஆளவேண்டும். அந்தப் பதினன்கு வருஷமும், தங்களுக்குப் பதிலாகத் தங்கள் பாதுகையை அயோத்தியில் கொண்டுபோய் வைத்து, அப்பாதுகையைத் தாங்களெனவே பாவித்து இராஜ்ய சம்பந்தமான காரியத்தைத் தங்களுக்குப் பதிலாக நான் நடத்தி வருகிறேன். பதினன்காவது வருஷக் கடைசி நாள் தாண்டின மறுதேதியில் தாங்கள் ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் அயோத்திக்கு வந்து சேரவேண்டும். அவ்விதம் தாங்கள் வந்து சேராத பட்சத்தில் நான் அக்கினிப் பிரவேசம் செய்வேன். இது கடைசியாகக் கூறுகிறேன்" என்று சொல்லி ஸ்ரீராமன் பாதங்களில் பரதன் இரத்னங்கள் அமைக்கப்பெற்றனவும், தேவர்களுக்குரியனவுமான இரண்டு பாதுகைகளை அவர் திருவடியில் சேர்ப்பித்து, சந்தோஷமுடையவனாகி ஸ்ரீராமனைப் பிரதக்ஷணம் செய்து நமஸ்கரித்தான்.

ஸ்ரீராமமூர்த்தி, தன்னுடைய தம்பியாகிய பரதனுடைய உள்ளக் கருத்தையும், ஆழ்ந்த யோஜனையையும், அவன் புத்தி கூர்மையையும் அவன் தன்னிடம் வைத்திருக்கும் அன்பையும், கவனித்து பரம சந்தோஷமடைந்து அடியருக் கௌியனாகிய பரமதயாளு, "ஓ பரத! உன்னிஷ்டப்படி நடக்கிறேன்" என்று வாக்களித்து, பாதுகைகள் இரண்டையும் எடுத்து அவன் கையிற் கொடுத்தார்.

ஸ்ரீராமனிடத்தில் வைத்த பக்தியிற் சிறந்த பரதன் அப்பாதுகைகளைப்பெற்று ஆனந்த மடைந்து மும்முறை வலம் வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி அவரிடம் விடைபெற்று, வசிஷ்ட முனிவருடனும், சத்துருக்னனுடனும், தாய்மார்களுடனும், குகன், மந்திரிகளுடனும், சைனியங்களுடனும் அயோத்திக்குச் செல்லப் புறப்பட்டான்.

அப்பொழுது கைகேயி (ஒருத்தி தான் கோபக்கிரகம் சென்றது முதல் இதுவரையில் நடந்த விருத்தாந்தங்களை நித்திரையில் கனுக் கண்டு விழித்து ஆலோசிப்பவள்போலச் சிந்தித்து) இது என்ன சொற்பனந்தானு அல்லது *சாக்கிரமா! ஒன்றும் புரியவில்லையே யென்று நினைத்து, பிராரத்த கருமம் முன் செல்லத் தன்னறிவு பின் செல்ல, மெல்ல எழுந்து வியாகூலமடைந்து கண்ணீர் விட்டுக்கொண்டு, ஸ்ரீராமன் தனித்திருக்கும் சமயம் பார்த்துச் சென்று அஞ்சலிசெய்து நின்று, "ஓ இராம! உம்முடைய மாயையால் மோகமடைந்து உமக்கு இராஜ்ய பங்கமாகும்படி கெட்ட செய்கை செய்யத் தலைப்பட்டேன். அந்த மாயா சம்பந்தமான செய்கையை நீர் பொறுக்கவேண்டும். ஸாதுக்கள் பொறுமையே கருமமாகக் கொண்டவர்கள். நீரோ ஸாக்ஷாத் மகாவிஷ்ணு, அவ்வியக்தர், பரமாத்மா, ஸனாதனர், மாயாமானிட வடிவங்கொண்டவர், உலகம் யாவற்றையும் மோகமடையும்படிச் செய்பவர். உலகத்திலுள்ள ஜீவர்கள் உம்முடைய பிரேரணையைக் கொண்டுதான் நன்மை தீமைகளைச் செய்கிறார்கள். இப்பிரபஞ்சமானது உம்முடைய சுவாதீனத்தில் தானிருக்கிறது. தற்சுதந்திரம் இல்லாதது, தானொன்றையுஞ் செய்கிறதில்லை. இப்பிரபஞ்சத்துக்கு ஆதாரமாகிய மாயை உம்முடைய சுவாதீன மாகியவள். அனந்த ரூபமுடையவள். நீர்

---

* சாக்கிரம் = பிரத்தியக்ஷத்தில் நடப்பது.

அந்த மாயையைத் தேவர்களின் சகாயத்தை யுத்தேசித்து என்னிடம் ஏவியிருக்கலாம். ஆகையால் உம்முடைய விஷயமாகச் செய்த துரோக சிந்தை யென்னுடையதல்ல. அண்டின பேரை யாதரிக்கும் கிருபாமூர்த்தியான இராம! நீர் தேவர்களாலும் தரிசிக்க முடியாதவர். மஹாபாவியாகிய நான் ஏதோ புண்ணியவசத்தால் பிரத்தியக்ஷமாகத் தரிசித்தேன். ஓ விஸ்வேஸ்வரா! ஓ அனந்த! ஓ ஜெகன்னாத!! உமக்கு நமஸ்காரம். நான் உம்மை மெய்யன்போடு வந்து சார்ந்தேன். உம்மைச் சார்ந்ததனால் உண்டாகும் ஞானமென்னும் வாளானது, புத்திராசை, பொருளாசை, மண்ணாசை முதலிய காமத்தாலுண்டாகும் பாபத்தை அடியோடு சேதிக்கவேண்டும். நான் உம்மை யுள்ளபடியே பக்தியோடும், திரிகரண சுத்தியோடும், முத்திவைநாடும் புத்தியோடும் சரணம் புகுந்தேன்" என்று கூறினாள்.

மஹாத்மாவாகிய ஸ்ரீராமன், கைகேயி அன்போடும், பகுத்தறிவோடும், மெய்ஞ்ஞானத்தோடும் உரைத்த மொழிகளைக் கேட்டு மந்தகாசம் செய்து, ஓ பாக்கிய சாலியாகிய கைகேயி அம்மையே! நீ யென்னுடைய உண்மையான ஞான சொரூப நிலையை யறிந்தாய், மெய்யே. தேவர்களின் காரியசித்திக்காக சரஸ்வதியுன்னுவில் வந்தமர்ந்தாள். அதனால் என்னிடம் வைத்த பிரியம் மாறி நடந்தாய், இது விஷயமாக உனக்கென்ன தோஷம் சொல்லம்மா? இனி நீ அல்லும் பகலும் இருதயத்தில் என்னையே தியானம் செய்து அகப்பற்று, புறப்பற்று முதலியவைகளை யொழித்து என்னிடம் வைக்கும் பக்தியென்னும் கதி (மார்க்கம்) யால் மோக்ஷமடைவாய். நான் யாரிடத்திலும் சமதிருஷ்டி வைக்கக் கூடியவன்; எனக்குச் சத்துருவுமில்லை; மித்துருவு மில்லை. எவன் என்னைப் பஜிக்கிறானோ அவனை நான் அபேக்ஷிக்கிறேன்; மாயா விகாரத்தில் மோக மடைந்தவர்கள் என்னை மானிடன் என்று நினைக்கிறார்கள். மேலும், சுகதுக்கங்களை அநுசரித்தவன் என்றும் நினைக்கிறார்கள். உண்மையைத் தெரிந்து கொள்கிறதில்லை. ஏ தாயே! உமக்கு சம்சார பந்தத்தில் நின்று விடுபடுவதற்கு நேரான வழியாகிய என்னிடம் வைக்கும் பக்தி ஞானமுண்டாயிருக்கிறது. அது எனக்கு மிக்க சந்தோஷமா யிருக்கிறது. நீர் என் சுயரூபத்தையே தியானஞ் செய்துகொண்டு கிரகத்தில் இருந்தால் கரும வேதனையால் பாதிக்கப்படமாட்டீர்," என்று கூறினார்.

இவ்விதம் ஸ்ரீராமன் கூறினதைக்கேட்டு, கைகேயி ஆனந்தத்துடனும், ஆச்சரியத்துடனும் இராமனைப் பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம் செய்து தானும் அயோத்திக்குப் பிரயாணமானாள்.

அயோத்திக்குப் புறப்பட்ட மஹாபுத்திமானான பரதன் இராமனையே மனதில் நினைத்துக்கொண்டு, தன்னுடன் வந்தவர்களுடன் அயோத்திமா நகரம் வந்து சேர்ந்து, தாய் மார்கள், நகரத்தார்கள் முதலினோரை அவரவர்கள் வசிக்கும் ஸ்தானத்தில் அமரச்செய்து தான் நந்திக்கிராமம் சென்றான்.

அங்கு சென்று பரதன் மங்களகரமான ஓரிடத்தில் ஸ்ரீராமபிரானுடைய பாதுகைகளை ஓர் திவ்விய சிம்மாசனத்தில் ஸ்தாபித்து, இராமச்சந்திரன் எனவே பாவித்து, நாள் தோறும் பக்தியுடன் சந்தனம் புஷ்பம் அக்ஷதை முதலியன கொண்டு பூஜித்து, தூபதீப நைவேத்தியாதியோடு இராஜ உபசாரங்கள் செய்து வந்தான். இரகுகுலதிலகனான பரதன் இந்திரிய நிக்ரகம் செய்து, சடைமுடி மரவுரி தரித்து, பழம் கிழங்குகளைப் புசித்துத் தரையில் படுத்து பிரமசரிய நியமம் அடுத்தான்; சதாகாலமும் தம்பி சத்துருக்னனுடன் பிரியாது வசித்து வந்தான்; அரசன் செய்யக்கூடிய இராஜ்ய சம்பந்தமான எல்லாத்தீர்மானங்களையும், ஸ்ரீராமன் பாத பாதுகை முன்னிலையில் தெரிவித்து நடத்தினான்; தன் முன்னோனும் இராஜ்யாதிபதியுமாகிய ஸ்ரீராமன் வனத்தில் வசிக்கும் காலமான 14 வருஷங்களையும் தினந்தோறும் கணக்கிட்டுக் கொண்டே வந்தான்; கணந்தோறும் ஸ்ரீராமனையே தியானம் செய்துகொண்டு இடைவிடாத அன்புள்ளவனாய் பிரமரிஷிபோன்று நந்திக் கிராமத்தில் பரதன், இராமன் என்றைக்கு வந்து சேருவானோ என்ற விசாரத்தைத் தவிர, வேறு மனக்கிலேசமின்றிச் சுகஜீவியாய் ஜீவித்து வந்தான்.

அயோத்தியில் இவ்விதம் இராஜ்ய பரிபாலனம் நடக்க, ஆரண்ணியத்தில் ஸ்ரீராமன் சித்திர கூடத்தை யடுத்த ஆச்சிரமத்தில் ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடனும், நக்ஷத்திரங்களால் சூழப்பெற்ற பூரணச் சந்திரனைப்போல, தவத்திற் சிறந்த பலமுனிவர் கூட்டம் சூழச் சிலகாலம்வரை யவர்கள் நேசத்துடனே வாசம் செய்தார்.

அயோத்தி மாநகரத்தார்கள் அனைவரும் ஸ்ரீராமனிடத்தில் வைத்த பக்தியின் பெருக்கால், சித்திரகூடபருவதத்தில் ஸ்திரமாக இராமச்சந்திரன் ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் இருப்பதை

யறிந்து, அடிக்கடி யவ்விடம் வந்து தரிசித்துப் போகத் தொடங்கினார்கள். இவ்விதம் வரும் ஜனங்களின் நெருக்கத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்து இராமச்சந்திரன் அந்தப் பருவதத்தை விட்டு நீங்கி, ஆரணியத்தில் யாத்திரையாகச் செல்லுவதில் அநேக காரிய சாதகமிருப்பதைக் கருதி, ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் புறப்பட்டு, தவத்திற் சிறந்த அத்திரி முனிவரின் ஆச்சிரமம் சென்றார். அந்த ஆச்சிரமம் ஆறு ருதுக்களிலும் உண்டாகக் கூடிய வஸ்துக்கள் எல்லாம் எந்த ருதுவானாலும், கால வேற்றுமையில்லாமல் கொடுக்கக் கூடிய வனத்திலுள்ளது. ஜன நெருக்க மில்லாதது. அத்தகைய வனத்தில் சுகமாகவசிக்கும் அத்திரி மகாமுனிவரைக் கண்டு வணங்கி "ஓ முனிவரே! நான் தசரத சக்கரவர்த்தியின் குமாரன் இராமன், தந்தையின் உத்தரவுப்படி வனவாசம் செய்ய நேர்ந்ததால் தங்களுடைய தரிசனம் கிடைத்தது, நான் கிருதார்த்தனாயினேன்," என்று கூறினார்.

அத்திரி மகாரிஷி, இராகவன் சொல்லைக் கேட்டு இவரைப் பரமாத்மாவாகிய மகா விஷ்ணு சொரூப மென்று அறிந்தவரானபடியினால், மிகுந்த பக்தியுடன் சிறந்த பூஜா விதிப்படிப் பூஜை செய்து அந்த வனத்தில் கிடைக்கும் இனிமையான பழ வர்க்கங்களைக் கொண்டு அவர்களுக்கு விருந்து செய்வித்து அவர்களைச் சிறந்த ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்தார்.

அப்பொழுது அத்திரி மஹாரிஷி, சத்துருக்களை நாசம் செய்யுந் திறமையுடைய ஸ்ரீராமனைப் பார்த்து, "ஓ இரகுநந்தன! என் மனைவி அனஸூயை விருத்தாப்பியமானவள், மிகுந்த வயது சென்றவள், வெகுகாலந் தவம் இயற்றியவள், தர்மங்களெல்லாம் தெரிந்தவள், அவைகளின் பேரில் வாஞ்சையுமுள்ளவள், மூப்பின் தன்மையால் உள்ளே வசிக்கிறாள். அத்தகையவளை ஸீதையுள்ளே போய்ப் பார்க்கட்டும்" என்று சொன்னார்.

செந்தாமரைக் கண்ணனாகிய இராமச் சந்திரன் அவ்விதமே யென்றுரைத்து, ஜானகியை நோக்கி "ஓ ஸீதே! அந்த இடம் சென்று அனஸூயையைப் பார்த்து சேவித்து விட்டு சீக்கிரம் வா" என்று கூறினார். ஸீதையும் அவ்விதமே யென்று, உள்ளே போய் அத்தேவியைக் கண்டு நமஸ்கரித்தாள். தன்னிடம் வந்து வணங்கின ஸீதையைக் கண்ட அனஸூயை மிகவும் சந்துஷ்டியடைந்து,

ஜானகியைக் கடிதில் எடுத்தணைத்து, ஏ குழந்தாய்! என்று ஆதரவுடன் பேசி, விஸ்வகர்மாவால் செய்த திவ்விய மங்களமான இரண்டு குண்டலங்களையும், ஸுவர்ணமயமான ஒருஜதை பட்டாடைகளையும் கொடுத்தாள். மேலும், தேகத்தில் அணிந்து கொள்ளும் சிலாக்கியமான வாசனை வீசும் அங்கராகத்தை (பரிமளவஸ்து)யும் கொடுத்து பக்தியோடு கூடிய பிரியவசனத்தால் ஸீதையைக் கௌரவப்படுத்தி, "ஓ கமலம்போன்ற முகமுடைய ஜானகி! நான் கொடுத்த அங்கராகம் மிகவும் உயர்ந்தது, அதன் பரிமளம் உன்னை விட்டுப் பிரியாது. ஏ ஜனககுமாரியே! பதிவிருதா தருமத்தையநுசரித்து இராமனுடன் வனவாசஞ் செய்." என்று கூறி, ஈஸ்வர கிருபையால் ஸ்ரீராமன் உன்னுடன் க்ஷேமகரமாக மறுபடியும் அயோத்திமாநகரம் போய்ச் சேரவேணும் என்று ஆசீர்வாதமும் செய்தாள். அவைகளைப் பெற்றுக்கொண்டு விரைவில் ஸீதை இராமனிடம் வந்து சேர்ந்தாள்.

பிறகு முனிவர், ஸீதை இலக்ஷ்மணருடன் ஸ்ரீராமருக்கு நியமப்படி போஜனம் செய்வித்து, ஆசனத்திருத்தி, கைகூப்பி நின்றுகொண்டு பரந்தாமனைப் பார்த்து, "ஓ இராம! நீர் உலகம் யாவையும் உண்டு பண்ணி யவைகளில் வசிக்கும், தேவர், மானிடர், திர்யக்குகள் முதலிய ஸ்தாவர சங்கமங்களையு மேற்படுத்தி யவைகளினுள் அந்தரியாமியாக வசித்தும் வருகிறீர். அவைகளின் திரிகுணாத்மகமான குணவிசேடங்களில் மட்டும் நீர் சம்பந்தப் படுகிறதில்லை. எல்லோரையும் மோகிக்கச் செய்யும் மாயை கூட இதனால் உம்மிடம் பயப்படுகிறாள்" என்று ஸ்தோத்திரம் பண்ணினார்.

அயோத்தியா காண்டம் முற்றிற்று.

# ஆரண்ய காண்டம்.

## முதலாவது சருக்கம்.

பிறகு, இரகுநந்தனன் அந்த ஆச்சிரமத்தில் ஒருநாள் தங்கி மறுநாட் காலையிலெழுந்து ஸ்நானம் பண்ணி நித்ய கருமாநுஷ்டானங்கள் செய்து முடிந்ததும், முனிவரிடஞ் சொல்லிக்கொண்டு அவ்விடம் விட்டுப் பிரயாணமாவதற்கு எத்தனித்து, "ஓ அத்திரி முனிவரே! நாங்கள், முனிவர்களால் நிறைந்து விளங்கும் ரமணீகரமான தண்டகாரண்ய மெங்குஞ் செல்லுகிறோம். தாங்கள் உத்தரவு கொடுக்க வேண்டும். மேலும் வழி காண்பிவிப்பதற்குச் சிஷர்களையும் அனுப்ப வேண்டும்," என்று கேட்டுக்கொண்டார்.

ஸ்ரீராமன் கூறியதைக்கேட்டு, மிகவுங் கீர்த்திபெற்ற அத்திரி முனிவர் மந்தகாசத்தோடு இராமனை நோக்கி, (பிருதிவி முதல் மாயை வரையுள்ள முப்பத்தாறு தத்வங்கட்கும், அதிபதியாகிய) மாயா தத்வாதிபதே! உமது மாயா வல்லபம் அறிபவர் யார்? "நீர் எல்லாவற்றிற்கும் வழி காண்பிவிப்பவர்; உமக்கு வழிகாட்டுகிறவர் யார்? ஆயினும், உலகக்ஷேமத்தை யநுசரித்து நடக்கும் உமக்கு சிஷர்கள் வழிகாட்டுவார்கள்," என்றுரைத்து, சிஷர்களைக் கூவி யவ்வாறு செய்யுங்களென்று கட்டளையிட்டார். சக்கரவர்த்தி திருமகன், ஸீதாபிராட்டி, இலக்ஷ்மணனுடன் புறப்பட, முனிசிரேஷ்டரும் சிஷர்களுடன் பின் தொடர்ந்தார். கொஞ்ச தூரம் சென்றதும், ஸ்ரீராமன், முனிவரை நோக்கித் தாங்கள் பன்னகசாலை செல்லுங்களென்று அன்புடன் கூற, முனிசிரேஷ்டர் ஆச்சிரமஞ் சென்றார்.

பின்பு இராஜீயலோசனனாகிய ஸ்ரீராமன் ஓர் குரோச (கூப்பிடு தூரம் அல்லது 800 கையளவு வழி) தூரம் சென்றதும் ஓர் அகண்ட நதியைக் கண்ணுற்று, இந்த நதியைத் தாண்டுவதற்கு, உபாயமுண்டா இல்லையாவென்று ரிஷி மாணவர்களைப் பார்த்து வினவினார். அந்தச் சிஷர்கள், "ஓ இரகு நந்தன! மிகவும் உறுதியான ஓடமிருக்கிறது; நாங்களே உங்களை ஓர் க்ஷணத்தில் இந்த நதியைத் தரணம் (கடக்க) செய்விக்கிறோம்," என்று கூறி, இராமன், சீதை, இலக்ஷ்

மணன் இவர்களை ஓடத்திலேற்றி க்ஷணநேரத்தில் அந்த நதிக்கு அக்கரையில் கொண்டுவந்து சேர்த்தார்கள். இராகவன், இதை நோக்கி மகிழ்ச்சிகொள்ள அவர்கள் யாவரும் வணங்கி விடைபெற்று முனிவர் ஆச்சிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

பிறகு இராமன் பயங்கரமானதும், சுவர்க்கோழிகளின் ரீங்காரச் சத்தமுடையதும், எங்கும் காட்டு மிருகங்கள் நிறைந்ததும், சிங்கம், புலி, கரடி முதலியவைகளின் உபத்திரவம் மிகுந்ததும், கோரரூப முடைய அரக்கர்கள் திகழ்ந்ததும், அந்தகாரம் சூழ்ந்ததும், பார்த்ததும் மயிர்க் கூச்சலுண்டாகக் கூடியதுமாகிய ஆரண்யத்தில் பிரவேசித்து இலக்ஷ்மணனைப் பார்த்துக் கூறுகிறார். "இலக்ஷ்மண! இனிமேல் பலத்துடன் பிரயாசைப் பட்டே செல்ல வேண்டும். கோதண்டத்தில் நாணேற்றிப் பாணங்களைக் கையிலெடுத்துக்கொண்டு நான்முன் செல்கிறேன், நீ வில்லுடன் பின் வா, நம்மிருவருக்கும் மத்தியில் ஸீதை, பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் இடையி லுள்ள மாயையைப்போல் வரட்டும். எல்லாவிடங்களிலும் கண்ணோக்கம் இருக்கவேண்டும், இராக்ஷஸர்களின் பயம் அதிகமாக வுண்டாகக் கூடும். சத்துருக்களைச் சங்கரிக்கும் திறமையுடைய இலக்ஷ்மண! தண்டகாரண்யத்தில் இராக்ஷஸ பயமுண்டென்று கேள்வி. இவ்விதம் பேசிக்கொண்டு ஒன்றரை யோஜனைதூரம் சென்றார்கள். அங்கு ஓர் தாமரைத் தடாகம் காணப்பட்டது. அது, பங்கஜம், ஆம்பல், கருநெய்தல் முதலிய புஷ்பங்களாலும், அன்னம் முதலிய பட்சிகளாலும், குளிர்ச்சி பொருந்திய ஜலத்தாலும் நிறைந்திருந்தது. இப்போதும் மிகப் பிரகாசமுள்ளதாகக் காணப்படுகின்றது. இம்மூவரும் அத்தடாகத்தினருகிற் சென்று, அதிலுள்ள குளிர்ந்த ஜலத்தைப் பானம் செய்து, அதற்கருகாமையில் ஓர் நிழற் பாகத்தை ஆச்ரயித்து க்ஷணப்பொழுது அங்கு வீற்றிருந்தார்கள்.

அப்பொழுது, இம்மூவரும் ஓர் அரக்கன் எதிரில் வரக்கண்டார்கள். அவன் மிகுந்த பலமுடையவன், எல்லோரையும் பயந்து ஓடும்படி செய்பவன், பயங்கரமான வக்கிரதந்தங்கள் நிறைந்த முகமுடையவன், யாரையுந் தன்னுடைய கர்ச்சனையால் பயப்படுத்துகிறவன். இடது பக்கத்திலிருக்கும் சூலாயுதத்தின் நுனியில் கோர்க்கப்பட்ட வெகு மானிடர்களை யுடையவன். காட்டில் சஞ்சரிக்கும் யானை, புலி, எருமை இவைகளைப் பக்ஷிப்பவன். இவ்வரக்கனைக் கண்ட

வுடன், இராமன் கோதண்டத்தில் நாணேற்றி நின்று இலக்ஷ்மணனைப் பார்த்துக் கூறுகிறார்.

"ஓ தம்பி இலக்ஷ்மணா! பார்த்தாயா பெருத்த சரீரமுடைய இராக்ஷஸன் இதோ நமக்கெதிராகவே வருகிறான். இவன் பயந்தவர்களுக்குப் பயத்தை விளைவிப்பவன், வில்லைத் தயாராகச் செய்துவை, ஓ ஸீதே! பயப்படாதே," என்றுரைத்து, நாணேற்றின வில்லுடன் பாணத்தைக் கையில் எடுத்துக்கொண்டு இராமன் மலைபோல் தைரியமாக நின்றார்.

வந்த அரக்கன், இலக்ஷ்மிகாந்தனையும், ஜானகியையும், இலக்ஷ்மணனையும் பார்த்து அட்டகாசஞ்செய்து, இம்மூவருக்கும் பயத்தையுண்டு பண்ணிக்கொண்டே அவர்களைப் பார்த்து "நீங்கள் யார்? வில், அம்பு, இவைகளுடன் மரவுரி, சடைமுடிகளுந் தரித்திருக்கிறீர்கள், ரிஷிவேடம் பூண்டிருக்கிறீர்கள், பாலியப் பருவமுடையவர்கள், ஸ்திரீயுடன் கூடியவர்கள், மிகுதியான கெர்வமுடையவர்கள், சுந்தரர்கள், எனக்கு அன்னகவளம் போல் என் வாயிற் பிரவேசித்து விட்டீர்கள், துஷ்ட ஜந்துக்கள் நிறைந்த கோரமான இவ்வாரண்யத்தில் ஏன் பிரவேசித்தீர்கள்?" என்று வினவினான். இராகவன், இராக்ஷஸன் சொல்லைக்கேட்டு புன்னகை கொண்டு, "நான் இராமன்; இவன் இலக்ஷ்மணன், எனக்குப் பிராதா, மிகவும் வாஞ்சையுடையவன்; இவளோ என் பிராணநாயகி, ஸீதை யென்ற நாமமுடையவள், நாங்கள் பிதுர் வாக்கிய பரிபாலனத்தை முன்னிட்டு, உன்னைப் போன்றவர்களைச் சிக்ஷிப்பதற்காகவே இங்கு வந்தோம்," என்றார்.

இவ்விதம் இராமன் சொல்லைக்கேட்ட அரக்கன் அட்டகாசம் செய்து, வாயைத் திறந்துகொண்டு, விரைவாக சாலவிருட்சத்தைக் கைகளால் கிரகித்து நின்று, "ஏ இராமா! என்னை நீ யறியமாட்டாயா? நான் விராதன் என்ற பெயருடையவன், உலகப் பிரசித்தியுள்ளவன். என்னிடம் வைத்த பயத்தால் முனிவர்கள் யாவரும் இந்த வனத்தைவிட்டு ஓடிவிட்டார்கள். உங்களுக்கு உயிர் வேண்டுமானால், ஸீதையை யிழந்து ஆயுதத்தையும் துறந்து நீங்கள் இருவருந்தப்பி ஓடுங்கள், இல்லாவிடில், நான் விரைவாக உங்களைப் பக்ஷிப்பேன்," என்றுரைத்து, ஸீதையைக் கிரகிக்க முயன்றான். இராமர் மந்தஹாசம் செய்து ஓர் பாணத்தால் விராதனுடைய கைகளை வெட்டினார். விராதன் கோபங்கொண்டு விகாரமான முகங்கடுத்து

இராமனை எதிர்த்தோடிவந்தான். இவ்விதம் ஓடி வந்த விராதனுடைய இரண்டு பாதங்களையும் இரகு வீரர் நறுக்கினர். இலைதாச் சரியமாயிற்று. பின்னும் விராதன் இராமனை விழுங்குவதற் கெண்ணி வக்ரதந்தத்தோடு கூடிய வாயைத்திறந்து கொண்டு சர்ப்பம்போல் எதிர்த்து வந்தான். இராமன் ஓர் அர்த்த சந்திர பாணத்தால் விராதனுடைய மலை போன்ற சிரசைச் சேதித்தார். இரத்த வெள்ளப் பெருக்குடன் விராதன் பூமியில் விழுந்தான். அப்பொழுது ஸீதை இரகு சிரேஷ்டனை யணைத்துக் கொண்டாடினள். ஆகாயமார்க்கத்தில் தேவர்கள் துந்துபி வாத்தியத்தை முழக்கினர்கள். அப்சர ஸ்திரீகள் ஆடினர்கள். கந்தருவர், கின்னரர்கள் சந்தோஷத்துடன் பாடினர்கள்.

தலை துணிக்கப்பட்ட விராதனுடைய சரீரத்தினின்று, மிகுந்த பிரகாசத்தோடு கூடிய அதிசுந்தரமான சரீரத்துடன், நிர்மலமான வஸ்திர மணிந்து, உருக்கின சுவர்ணத்தாலமைந்த ஆபாணம் பூண்டு, ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற சூரியனைப் போல் ஓர் திவ்விய புருஷன் தோன்றி, இராமன் முன் வந்து நின்றான். பிரசன்னமாகிய அதி புத்தியுடைய அப்புருஷன், நமஸ்காரம் செய்பவர்களின் துக்கத்தைப் போக்குகிறவரும், சம்சாரப் பிரவாகத்திற்கு ஒழிவைத் தருகிறவரும், கருணைக்கிருப்பிட மாகியவரும், சரணம்புகுந்தவர்கள் உபத்திரவத்தைப் போக்குகிறவருமாகிய ஸ்ரீராமமூர்த்தியின் பாதாரவிந்தத்தி அடிக்கடி நமஸ்காரஞ் செய்து, ஓ ஸ்ரீராமா! இராஜீவதளம் போ தீர்க்கமான நேத்திரமுடையவரே! நான் அதிகப்பிரகாசமுள்ள வி .தியாதரன். கோபமே உருவமாகக்கொண்ட துர்வாச முனிவரா முந்திவிடப்பட்ட சாபத்தைப் பெற்றேன், அச்சாபம் இப்பொழு தங்களால் நிவர்த்தி யடையக்கண்டு சுகமுற்றேன். இனிமேல் என் சம்சாரபந்தம் ஒழிவதற்காகத் தங்களுடைய சரணாரவிந்தங்களில் எப்போதும் எனக்கு மனஸ்மரணம் இருக்கவேண்டும்; என்னுடைய வாக்கு, தங்களுடைய நாமங்களையே கீர்த்தனஞ் செய்ய வேண்டும்; என் செவிகளிரண்டும் தங்கள் கதாமிர்தத்தையே பானஞ் செய்யவேண்டும்; என் கைகளிரண்டும், தங்கள் பாதாரவிந்தங்களையே பூசிக்கவேண்டும்; என் சிரம், தங்கள் திருவடிகளையே வணங்கவேண்டும்

ஓ இரகுசிரேஷ்ட! ஞான சொரூபரும், ஆத்மாராமரும், ஸீதாபதியும், வேதஸாரமான பகவானுமாகிய உமக்கு நமஸ்காரம்.

சரணம் புகுந்த என்னைக் காக்கவேண்டும். தங்களுடைய உத்தர வால் நான் தேவலோகம் போகவேண்டும், உம்முடையமாயை என் னைப் பற்றுதிருக்கட்டும்

இவ்வாறு, விராதன் வேண்ட, இரகுநந்தனன் கிருபை கூர்ந்து, "ஓ வித்யாதர சிரேஷ்டனே! நீ செல்லலாம், மாயையின் குணங் களை ஜெயித்துவிட்டாய், அப்படி ஜெயித்தது என்னுடைய தெரி சன பலத்தாலுண்டாகியது. ஞானமுடையோர்களுக்குள் என்னை விட சிரேஷ்டனுகிறுய், உலகத்தில் ஆன்மாக்கள் என்னிடம் பக்தி செலுத்துவது துர்லபம். அஃதுண்டானுல் மோக்ஷமடையலாம். நீ என்னிடம் வைத்த பக்தியால், என் ஆஞ்ஞைப்படி தேவலோகம் செல்லலாம். மானிடர்கள், பயங்கரனுகிய நீ என்னுல் வதையுண்ட தையும், சாபத்திலிருந்து விமோசன மடைந்ததையும், வரம் பெற்ற தையும், வித்தியாதரத்தன்மை பூண்டதையும் கீர்த்தனஞ் செய்தால், சதுர்வித புருஷார்த்தங் (அறம் பொருள் இன்பம் வீடு) களையும் அடைவார்கள்," என்று விராதனுக்கு வரமளித்தார்.

## இரண்டாவது சருக்கம்.

விராதன் சுவர்க்கலோகஞ் சென்ற பின்பு, இராமன் இலக்ஷ்மண னுடனும், ஸீதையுடனும், யாவத்சுகத்தையும் வெறுத்த சரபங்க முனிவர் ஆச்சிரமம் வந்தார். சரபங்க முனிவர் இலக்ஷ்மணர் ஸீதை சகிதம் வரும் இராமச்சந்திர மூர்த்தியைப் பார்த்து, பரபரப்புடன் எழுந்து ஓடி வந்து அவரது பாதார விந்தங்களில் பூசித்து உபசரித்து விஷ்டராசனங்களில் (தவத்தோர் பீடம்) எழுந்தருளச் செய்தார். பிறகு அம்மூவரையும் கந்தமூல பலாதிகளருந்தச் செய்து சிரமபரி காரம் புரிந்தார். பின்பு பக்தர்களிடம் *பாரபத்தியமுடைய இரா மனைப் பார்த்து முனிவர் அன்புடன் உரைக்கிறுர். "ஓ இராமப் பிரபு! நான் நீண்டகாலமாக இந்த தவம் செய்து கொண்டு உம்முடைய தரிசனத்தை யெதிர் பார்த்திருட்பவன். நீர் பரமேஸ்வரன். ஆயி னும், என் தபோபலத்தின் புண்ணியம் யாவற்றையும் இப்பொழுது தங்களுக்குக் கொடுத்து, பின்பு முக்தியை யடைகிறேன்" என்றுர்.

---

* பாரபத்தியம் = மேல்விஜாரணை.

பிறகு வைராக்ய தீராகிய சரபங்க யோகீஸ்வரர், தான் செய்த எல்லாப் புண்ணியத்தின் பலனையும் ஸ்ரீராமனுக்குக் கொடுத்து, அப் பிரமேயரும், ஸீதை சமேதருமாகிய அவரை நமஸ்கரித்து, விரைவாகச் சிதையின் மீதேறினார்.

பின்னர் அச்சிதையின் மீது பத்மாசனத்திலமர்ந்து, எல்லாருடைய இருதயத்திலிருப்பவரும், தூர்வாதள சியாமளரும், அம்புஜாக்ஷரும், மரவுரியுடுத்தவரும், மனோஞ்ஞமான சடையுடையவரும், ஸீதா சமேதரும், தன்னையே ஆசிரயித்த இலக்ஷ்மணரை யுடையவருமாகிய இராமரைத் தியானம்செய்கிறார்; பூமியில் நினைத்த மாத்திரத்தில், காமதேனுவைப் போல் வேண்டினதைக் கொடுக்குந்தயையுடையவர், இரகு நாயகனைத் தவிர வேறு யாருளர்; மற்றவர்களையடையாமல் நான் எப்போதும் அவரையே என்னுள்ளத்தில் ஸ்மரணம் செய்ததையறிந்து என்முன் தானே வந்தவரல்லவா? அவர் முன்னே இப்போதே என்தேகத்தைத் தகித்து, கல்மஷமின்றி, மேலுலகம் செல்வதை, தசரத குமாரராகிய இராமப் பிரபு பார்க்க வேண்டும். மேகத்திலுள்ள மின்னற் கொடிபோல், எவருடைய இடது பாகத்தில் ஸீதை வசிக்கின்றனளோ, அந்த அயோத்தி யதிபதியாகிய இராகவன் என்னிருதயத்தில் எப்போதும் இருக்கட்டும். இவ்வாறு, பரப்பிரம சொரூபியாகிய இராமரைத் தியானம் செய்து அவரைப் பார்த்து வணங்கி விரைவாக அக்கினியை மூட்டி, பஞ்ச பூதங்களா லமைந்த ஸ்தூல சரீரத்தைத் தகித்து, திவ்விய தேகத்தைப் பெற்று பிரத்யக்ஷமாக இராமன் முன்னிலையிலே, சர்வலோக பதியாகிய நாராயணனுடைய வைகுண்ட பதவியை யடைந்தார்.

பிறகு, தண்டகாரண்யத்தில் வசிக்கும் முனிவர்கள் யாவரும், இராகவனைப் பார்ப்பதற்குச் சரபங்க முனிவரின் ஆச்சிரமம் வந்தார்கள். வந்த முனிவர்களை ஸ்ரீராமர் வரவேற்று நமஸ்கரித்து ஆசனத்தமர்த்தி, தாமும் வீற்றிருந்தார். அந்த ரிஷிகள் யாவரும் கை கூப்பிக்கொண்டு, வில்லையும் பாணங்களையும் தரித்தவரும், ஹரியே தானாக அவதாரமானவரும் எல்லோருடைய இருதயத்திலும் இருப்பவருமாகிய ஸ்ரீராமருக்கு ஆசீர்வாதங்களைச் செய்து, அவரைச் சந்தோஷப்படுத்திக் கூறுகிறார்கள்.

"பிரமதேவர் பிரார்த்தனையால் பூமி பாரத்தை யொழிப்பதற்காகத் தாங்கள் உண்டானவர்கள், நாங்கள் தங்களை ஹரி என்றும்,

ஜானகியை இலக்ஷ்மியென்றும், இலக்ஷ்மணனை ஆதிசேஷன் என்றும், பரதனைச் சங்கம் என்றும், சத்ருக்கனைச் சக்கரம் என்றும் அறிவோம். ஆகையால், ஆதியில் அருளிய வாக்கின்படி ரிஷிகளின் கஷ்டங்களை நிவர்த்திக்கவேண்டும். ஓ இரகூத்தம! இந்த ஆரண்யத்தில் முனிவர்கள் வசிக்கும் இடம் எங்கும், சுமித்திரை குமாரனாகிய இலக்ஷ்மணருடனும், ஜனக நந்தினியாகிய ஸீதையுடனும், வந்து பார்த்து எங்களுடைய கஷ்டங்களை நிவர்த்திக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்,

இவ்வாறு, முனிவர்கள் கைகூப்பிப் பிரார்த்தனை செய்ய, பிரபுவாகிய இரகுவீரர் முனிவர்களின் வனங்களைப் பார்ப்பதற்காக அவர்களுடன் அவ்வனம் சென்றார். செல்லும்போது, ஆங்காங்கு சிதறுண்டு கிடக்கும் மண்டை ஓடுகள், எலும்புகள் இவைகளைப் பார்த்து இரகு நந்தனர் கேட்கிறார்.

"ஓ முனிவர்காள்! இந்த எலும்புகள் எவர்களுடையது ? ஏன் இவ்விதம் விழுந்து கிடக்கின்றன" என்றார். இதைக்கேட்ட முனி சிரேஷ்டர்கள், "ஓ ஸீதாகாந்த! இவைகள் ரிஷிகளின் மஸ்தகங்கள், ரிஷிகள் சமாதியி லிருக்கும்போது அரக்கர்கள் அவர்களை மிகவும் எளிதில் சிற்றுண்டிபோல மாம்சங்களைப் பக்ஷித்துப்போட்டுவிட்டு எறிந்தவைகள்" என்று பயத்துடனும், நடுக்கத்துடனும் கூறினார்கள். இதைக்கேட்ட ஸ்ரீராமர் கொடிய செய்கையுடைய அரக்கர்கள் யாவரையும் வதம் செய்வதாகப் பிரதிஞ்ஞை செய்தார்.

பிறகு வனத்தில் வசிக்கும் முனிவர்களால், பூசிக்கப்பெற்று, ஜானகியுடனும், இலக்ஷ்மணனுடனும் சில வருஷம் அந்தவனத்தில் தங்கினர்

அப்போது தாசரதியானவர், ரிஷிகளின் ஆச்சிரமங்களைக் கிரமமாகப்பார்த்துக்கொண்டே பிரசித்தி பெற்ற முனிவர்களிற் சிறந்த ஸுதீக்ஷண முனிவரின் ஆச்சிரமம் சென்றார். அந்த ஆச்சிரமமானது ருதுக்கள் எல்லாவற்றிலுமுள்ள குணங்கள் நிறைந்தது, காலம் யாவற்றிலுமுள்ள சுகங்களுடன் கூடியது. அவ்விடம் சென்றவுடன், இராம மந்திரத்தை உபாசிப்பதில் ஜாகரூகரும், அகஸ்திய முனிவருக்கு மாணவருமாகிய சுதீக்ஷணமுனிவர், பக்தியால் மலர்ந்த கண்களால் ஸ்ரீராமன் வருவதைக் கண்டு, எதிர்கொண்டு வந்தழைத்து விதிப்படி பூஜித்து, திவ்வியாசனத்தில் வீற்றிருக்கச்செய்து, "ஓ

அனந்தமான குணமுடையவரே! அப்பிரமேயரே, ஸீதாபதியே, இந்திரன், பிரமன் இவர்களால் பூசிக்கப்படும் பாதங்களையுடையவரே, சம்சாரக்கடலைத் தாணம் செய்விக்கும் நிர்மலமான பாதங்களாகிய ஓடமுடையவரே, அபிராம ராமாாகிய இராம!! தங்களுடைய நாம மந்திரத்தை சதா ஜெபம் செய்யும் நான் தங்களுடைய தாஸர்களுக்குந் தாஸர் ஆகிறேன். மாயாசம்பந்தத்தினுல் புத்திரன், களத்திரம், கிரகம் என்னும் பாழுங் கிணற்றில் விழுந்தவனும், மலம் நிறைந்த பிண்டத்திலுண்டான தேசாபிமானத்தால் கட்டுண்ட இருதயமுடையவனுமாகிய என்னை ஓர் பொருட்படுத்தி, உலகம் யாவற்றுக்கும் விஷயமாகிய தாங்கள் இப்போது நேரே வந்தீர்கள். தாங்கள் சகல ஜீவர்கள் இருதயத்திலும் வாசம் செய்பவரா யிருந்தபோதிலும், உம்முடைய மந்திர ஜெபம் செய்வதில் சிரத்தையில்லாதவர்களிடம் மாயையைக் கற்பிக்கிறீர்; உம்முடைய மந்திரத்தைச் சதா ஜெபிக்கும் சாதனம் செய்பவர்களிடம் மாயையை நிவர்த்திக்கிறீர். அவரவர்கள் *அநுராகத்தை யநுசரித்து, சேவிப்பதற்கு அநுகுணமாகப் பலனை யளிக்கிறீர். பிரபஞ்சத்தின் சிருஷ்டி, பரிபாலனம், ஸம்ஹாரம் இவைகளுக்கு முக்கிய காரணர் நீரேயாகிறீர். சத்வம், இரஜஸ், தமஸ் என்ற முக்குண பேதத்தால், விஷ்ணு, பிரமன், அரன் என்ற மும்மூர்த்திகளுமாய் நீரே தோன்றுகிறீர். சூரியன் ஒருவனாயினும் ஜலமிருக்கும் பாத்திரங்களில் பலவாகக் காணப்படுவதுபோல், மோக புத்தியுள்ளவர்களுக்குப் பலவித ஆகிருதி யுடையவராகிறீர்.

ஓ, இராம! முக்குணங்களுக்கும் அப்பாலிருக்கும் தங்கள் பாதாரவிந்தத்தை யிப்பொழுது பிரத்தியக்ஷமாகத் தரிசித்தேன். நீர், உம்முடைய சித்ரூபத்தால் அசத்துக்களுக்கும் விஷயமாகி, மித்திரர்களாகியவர்களின் பரிசுத்தமான இருதயத்தில் எப்பொழுதும் பிரசன்னராகிறீர்.

ஓ இராகவ! உமக்கு ரூபமில்லையாயினும், மாயையால் விளையாடுவதற்கு ஏற்படுத்திக் கொண்ட அழகான மானிட வேடத்தைக் கண்டேன். கோடி மன்மதனுக்குச் சமமான ரூபமுடையவரும், மனோஞ்ஞமான வில்லையும் பாணத்தையுந் தரித்தவரும், புன்னகையோடுகூடிய அழகான முகமுடையவரும், ஸீதா சமேதரும், மரவுரி யுடுத்தவரும், எவராலும் ஆக்கிரமிக்க முடியாதவரும், சுமித்திரா

* அநுராகம் = ஆசை.

நந்தனராகிய இலக்ஷ்மணரால் எப்போதும் சேவிக்கப்படும் பாதபத்மங்களுடையவரும், கருநெய்தல் போன்ற காந்தியுடையவரும், முடிவற்ற குணங்களுடையவரும், அப்பிரமேயரும், என் பாக்கியமே வடிவமானவரு மாகிய உம்மை நான் எப்போதும் நமஸ்கரிக்கிறேன்.

ஓ இராமச்சந்திர! தேசம், காலம், முதலிய உபாதிகள் யாவற்று மற்றதும், கனகசித் பிரகாசமானதும் ஆகிய உம்முடைய ரூபத்தை யாவரும் அறியட்டும். இப்பொழுது எனக்கு விஷயமாகிய இந்த ரூபமே என்மனதில் ஸ்திரமாகவிருக்க வேண்டுகிறேன்; மற்ற எதையும் நான் விரும்பவில்லை" என்று இவ்வாறு ஸ்தோத்திரம் செய்தார்.

இதைக்கேட்ட இராமன் புன்னகைகொண்டு ஸுதீக்ஷண முனிவரைப் பார்த்து, "ஓ முனிவரே! உம்முடைய மனம் என்னை யுபாசித்ததால் நிர்மலமாயிற்றென்று நானறிவேன், ஆகையால் நான் உம்மைப் பார்க்கவந்தேன். என்னை யுபாசிப்பதைத் தவிர வேறொரு சாதனம் எதுவுமில்லை. என் மந்திரத்தை ஜெபம் செய்கிறவர்களும், என்னையே சரணமாக அடைந்தவர்களும், உலகப் பற்றில்லாதவர்களாகவும், என்னைத் தவிர மற்றொன்றை யடையாதவர்களுமாக இருப்பார்கள். அவர்களுக்கு நான் எப்போதும் பார்ப்பதற் குரியவனுவேன்.

நீர் செய்ததும், எனக்குப் பிரியமுமான இந்த ஸ்தோத்திரத்தை எப்போதும் எவன் பாராயணம் செய்கிறானோ அவனுக்கு என்னிடம் சிறந்த பக்தியுண்டாகும். நிர்மலமான ஞானமுண்டாகும். நீர் என்னை உபாசித்தத்தால் எல்லாவற்றினுமிருந்து விடுபட்டீர். சரீராந்தத்தில் என்னுடைய சாயுஜ்ய பதவியைபடைவீர். இதில் சந்தேகமில்லை" என்றார்.

பின்பு, முனிவர்களுக்குப் பிரபுவும், உமக்கு ஆசிரியருமாகிய அகஸ்திய முனிவரைப் பார்ப்பதற்கு விரும்புகிறேன். அங்கு சில காலம் வாசஞ்செய்ய என்மனம் நாடுகிறது என்றும் சொன்னார்.

இதைக்கேட்ட ஸுதீக்ஷண முனிவர், அவ்விதமே செய்யலாம். யாதொரு தடையுமில்லை. அகஸ்தியமகா முனிவரை நான் பார்த்து வெகு காலமாயிற்று, நானும் கூட வருகிறேன், நாளையதினம் போகலாம் என்று வணக்கத்துடன் சொன்னார்.

பிறகு காலையில், இராமர் ஸுதீக்ஷண முனிவருடன் ஸீதை இலக்ஷ்மண சகிதராய், அகஸ்திய முனிவரிடம் சம்பாஷணை செய்வ

தில் ஆசைகொண்ட மனமுடையவராகி, அகஸ்திய முனிவர் ஆச்சிரமம் செல்லப் புறப்பட்டார்.



## மூன்றாவது சருக்கம்.

ஸ்ரீராமர், ஸுதீக்ஷண முனிவர், ஸீதை, இலக்ஷ்மணர் இவர்களுடன், அகஸ்தியமுனிவர் ஆச்சிரமம் செல்லப் புறப்பட்டு வரும் மார்க்கத்தில் அவர் தம்பியாகிய ஸுதர்சனமுனிவர் வனத்திற்கு மத்தியானத்தில் வந்து சேர்ந்தார்.

அந்த ஸுதர்சன முனிவர் இவர்கள் வருவதைக் கண்ணுற்று, எதிர்கொண்டு வந்து அழைத்து உபசரித்து, இராமன் முதலிய நால்வருக்கும், கந்தமூல பலவர்க்கங்களைச் சமர்ப்பிக்க, அவைகளைப் புசித்து, சிரமபரிகார மடைந்து அன்றிரவு அங்கு தங்கி, மறுநாட் காலையில் எழுந்து அகஸ்திய முனிவர் ஆசசிரமம வந்து சேர்ந்தார்கள்.

அந்த ஆச்சிரமம், ருதுக்களெல்லா வற்றிலுமுள்ள பலன்கள் நிறைந்து, பலவிதமான மான் முதலிய மிருகக்கூட்டங்கள் சூழ்ந்து, தத்தை முதலிய பட்சிகள் மிகுந்து விளங்குவதால், இந்திரன் பூங்காவனமாகிய நந்தனம் என்ற தோட்டத்திற்கு மேலானது, பிரம்மரிஷிகள், தேவரிஷிகள், முனிவர்கள் இவர்களால் சேவிக்கப் பெற்றது, மிகுந்த அலங்காரமுள்ளது, காணப் பெற்ற யாவரும் பிரம்மலோகமோ வென மயங்கக் கூடியது. அவ்வாச்சிரமத்தின் வெளிப் பக்கத்திலேயே இராமன் இருந்து கொண்டு, "ஓ ஸுதீக்ஷண முனிவரே! நீர் அகஸ்திய முனிவரிடம் சென்று, நான் ஸீதை, இலக்ஷ்மணனுடன் வந்திருப்பதைத தெரியப்படுத்த வேணும்" என்றார். அம்முனிவர் தேவாநுக்கிரகம் என்றுரைத்து, விரைவாகச் சென்று குருவின் ஆச்சிரமத்தினுட் பிரவேசித்தார்.

அவ்வாச்சிரமத்தில் ரிஷிகள் கூட்டத்தால் சூழப்பட்ட வரும், மிகுந்த இராம பக்தர்களால் நிறையப்பெற்றவரும், முனிவருக்குள் சிரேஷ்டருமாகிய அகஸ்திய முனிவரைக் கண்டு ஸுபுத்தியுடைய ஸுதீக்ஷணர் அவர் பாதார விந்தங்களில் தண்டம் போல் விழுந்து நமஸ்கரித் தெழுந்து கைகூப்பி நின்று, "ஓ பிரும்மரிஷியே! தசாத

குமாரராகிய இராமர், ஸீதா இலக்ஷ்மண சகிதராய், தங்களுடைய தரிசனத்துக்காக வந்து, கைகூப்பிக் கொண்டு தங்கள் ஆச்சிரமத்திற்கு வெளியில் நிற்கிறார்" என்று கூறினர்.

அதைக்கேட்ட அகஸ்தியமுனிவர், "ஓ ஸுதீக்ஷணரே! சதா காலமும் என்னுடைய இருதயத்திலிருக்கும் ஸ்ரீராமபிரானைச் சீக்கிரத்தில் வரவழியும், உமக்கு மங்களம் உண்டாகக்கடவது" என்றுரைத்து, தானே எழுந்து முனிவர்களுடன் விரைவாக இராமரிடம் சென்று," ஓ இராம! வரவேணும்; உமக்கு மங்கள முண்டாகட்டும்; உம்முடைய வரவு எனக்கு மிகுந்த சந்தோஷத்தை யுண்டாக்கியது; உம்மை எனக்குப் பிரியரான அதிதியாக்கிய இந்ததினம் சபலமாயிற்று" என்று கூறினர்.

ஸ்ரீராமபிரானும், தன் முன் வந்த அகஸ்திய முனிவரைக்கண்டு சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவராய், ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் பூமியில் சாஷ்டாங்கமாகப் பணிந்து நமஸ்கரித்தார். முனிராஜனான அகஸ்தியர், தண்டம் பண்ணின இராமரை யிறுகத் தழுவி அவருடைய சரீரத்தைத் தீண்டப் பெற்றதாலுண்டான சந்தோஷத்தால், ஆனந்த பாஷ்பம் பெருகத் தன்னொரு கரத்தால் இராமருடைய ஒரு கையைப்பிடித் தழைத்துக்கொண்டு ஜானகி, இலக்ஷ்மணர், ஸுதீக்ஷண முனிவருடன் தனதாச்சிரமம் சென்று திவ்விபாசனங்களில் வீற்றிருக்கச் செய்து பூஜித்து, சர்வோபசாரங்களும் புரிந்து வெகுவாகப் புகழ்ந்து, இனியவுரைகூறி, கந்தமூல பல வாக்கங்களைக் கொண்டு, விருந்தமுதூட்டி, அகமகிழ்வுடன் அவரவர்களும் தத்தம் ஆசனங்களில் எழுந்தருளிய பின்னர், மகிமை பொருந்திய அகஸ்திய முனிவர், சுகமாக வீற்றிருக்கும் சந்திரனை வென்ற திருமுகத்தை யுடைய ஸ்ரீராமரைப் பார்த்து, கைகூப்பிக் கூறுகிறார்.

"ஓ இராம! முன்னம் பிரமதேவர் பாற்கடல் மத்தியில் மகா விஷ்ணுவை பூமி பாரத்தைக் குறைப்பதற்காகவும், இராவணனை வதஞ் செய்வதற்காகவும், பிரார்த்தனை செய்ய, அவ்வாறே இலக்ஷ்மி நாயகனாகிய விஷ்ணு, இலக்ஷ்மி, ஆதிசேஷன், சக்கரம், சங்கு, இவர்கள் முறையே ஸீதை, இலக்ஷ்மணன், பரதன், சத்துருக்னன் இவர்களாகவும், நீயும் ஸ்ரீராமனாகவும் பூமியில்வந்தவதரித்து, உம்முடைய கோரிக்கையை நிறைவேற்றுவோம் என்று வாக்களித்தார். அது முதல் இதுகாறும் இவ்விடம் தவம் செய்து கொண்டு, முனிவர்களுடன் உம்

முடையவரவை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நீர் தான் சிருஷ்டிக்கு முன்னுள்ளவர், விகற்பமற்றவர், உபாதிகளில்லாதவர், மாயை [illegible]மை ஆசிரயித்தவள், உமக்கு விஷயமானவள், அந்த மாயையை [illegible]முடைய சக்தியென்று கூறுவார்கள். அந்த சக்தியானது நிர்க்குணனாகிய உம்மையே சூழ்ந்திருக்கிறது, வேதத்தின், முடிவை யுணர்ந்தோர்கள் உம்மை *அப்பிராகிருதன் எனக் கூறுவார்கள். மாயையை மூலப்பிரகிருதியென்றும், மாயையென்றும், அவித்தையென்றும், சம்ஸார பந்தமென்றும் கூறுவார்கள். உம்மை ஆசிரயித்த அந்த மாயை மஹத்தத்வத்தை யுண்டுபண்ணுகிறாள். உம்முடைய பிரேரணையால், மஹத்தத்வத்தில் நின்று அகங்கார தத்வமுண்டாயிற்று. அவ்வகங்காரம், ஸாத்விகம், இராஜஸம், தாமஸம் என மூன்று விதமாகிறது. அந்த தாமஸாகங்காரத்தி னின்று சூக்ஷ்ம தன்மாத்திரைகளும் ஸ்தூல பூதங்களுமுண்டாயின, இராஜஸாகங்காரத்தினின்று தேவர்கள் ஞானநிஷ்டாபரர், கர்மநிஷ்டாபரர், சோம்பல் நித்திரா மயக்கமுடையவர்களென்ற ஜீவர்களுண்டானார்கள். சாத்விகாகங்காரத்தி னின்று ஈஸ்வராதிகளுண்டானார்கள். இம் முக்குணங்களி னின்றும் சூக்ஷ்ம ரூபமுடைய லிங்க சரீரமுண்டாயிற்று. ஸ்தூலமான பூத சமூகத்தினின்று விராட்புருடன் உண்டானார். அவரிடமிருந்து ஸ்தாவர ஜங்கம சொரூபமான பிரபஞ்ச முண்டாயிற்று.

நீர், முற்கூறிய முக்குண தத்வங்களுள், சத்வ குணத்தில், இராஜஸம் பிரதானமாகும்போது உலககாரணரான பிரமனாகவும், தாமஸம் பிரதானமாகும்போது சம்ஹாரகர்த்தரான உருத்திரனாகவும், ஸாத்விகம் பிரதானமாகும்போது ஸ்திதிகர்த்தரான விஷ்ணுவாகவும் ஆகிறீர். உம்முடைய மாயாகுண பேதங்களைக்கொண்டு வேதங்கள் இவ்வாறு கூறுகின்றன.

இம் முக்குணங்களால், ஜாக்கிரம், ஸ்வப்பனம், சுஷுப்தி என்ற விருத்திகள் ஏற்படுகின்றன.

ஓ இராம! நீர் அவைகளுக்கு விலக்ஷணரானவர், சாக்ஷியாக இருப்பவர், சின்மயர், அழிவற்றவர்.

ஓ இரகுநந்தன! நீர் எப்போது, சிருஷ்டி செய்யும் லீலையை விரும்புகிறீரோ அப்போது குணமுடையவர் போல், மாயை அங்கீகரிக்கிறீர்.

---

* பிரதானமானவர்.

ஓ இரகுபதே! மாயையென்பது, வித்தை யென்றும், அவித்தை யென்றும் இரண்டு விதமாகும். பிரவிருத்தி மார்க்கத்தில் இருப்பவர்கள் அவித்தையை அநுசரித்தவர்கள். வேதாந்தத்தை விசாரிப்பவர்களும், நிவிருத்தி மார்க்கத்தில் இருப்பவர்களும், உம்மிடம் பக்தி செய்வதில் ஆவலுடையவர்களும் வித்தையை அநுசரித்தவர்கள். அவித்தையின் வசமானவர்கள் எப்போதும் சம்சாரபந்தமுடையவர்கள், வித்தையின் வசமானவர்கள் நித்தியமுக்தர்கள். உலகத்தில் எவர்கள் உம்மிடம் பக்தி செய்கிறார்களோ, எவர்கள் உம்முடைய மந்திரத்தை ஜெபிக்கிறார்களோ, அவர்களுக்கு, வித்தையானது பிரகாசமாகிறது. மற்றவர்களுக்கு வித்தையின் பிரகாசம் உண்டாகிறதில்லை. வித்தையுண்டானால் ஞானமுண்டாகும், ஞானமுண்டானால் முக்தர்களாவதில் சந்தேகமில்லை. உம்மிடம் வைத்த பக்தி ஞானம் ஏற்படாதவர்களுக்கு மோக்ஷமென்பது ஸ்வப்பனத்திலு முண்டாகாது.

ஓ ஸ்ரீராம! விரிவாகச் சொல்வதில் பயன் என்ன? சுருக்கமாகப் பிரயோஜனமுள்ள ஓர் விஷயம் சொல்லுகிறேன்:—அதாவது, சாதுக்களின் சேர்க்கையே மோக்ஷத்திற்குக் காரணமாகிறது. சாதுக்களும், சமமான மனமுடையவர்களும், ஆசையற்றவர்களும், இந்திரிய நிக்கிரஹமுள்ளவர்களும், மனச்சேஷ்டை யற்றவர்களும், சுகம் கிடைத்தாலும், துக்கம் நேர்ந்தாலும் சமபாவனையுள்ளவர்களும், கருமங்கள் யாவற்றையும் தியாகஞ்செய்தவர்களும், இயமம் முதலிய குணமுடையவர்களும் சதா பிரும்ம சொரூபத்தில் உபாசனையுடையவர்களுமாகிய பெரியோர்களின் சேர்க்கை ஏற்பட்டால், உம்முடைய கதைகளைச் சிரவணம் செய்வதில் பிரியமுண்டாகிறது.

ஓ இராகவ! சிரவணமுண்டானால், நித்தியனாகிய உம்மிடம் பக்தியுண்டாகிறது, அப்பக்தியினால் விசதமான ஞானம் வியக்தமாகிறது. இது தான் முக்தியடைய ஆதியில் ஏற்பட்ட மார்க்கம், தபோநிதிகள் அநுஷ்டித்து வந்தது. ஆகையால், உம்மிடம் சிறந்த பக்தி எனக்கு உண்டாகவேண்டும்.

ஓ விஷ்ணு சொரூபராகிய இராமமூர்த்தே! இப்போது உம்மைத் தரிசித்ததினாலேயே என்னுடைய ஜென்மம் பிரயோஜனமுள்ளதாயிற்று. நான் செய்த யாகங்கள்யாவும் பலன் பெற்றதாயிற்று. என் மனம் மற்றொன்றைப் பற்றாமல் உம்மையே ஸ்மரித்துச்

செய்த தவத்துக்கு இப்போது உம்முடைய பாதார விந்தங்களைப் பூஜிக்கவே பெறும் பலன். ஓ இராகவ! நீர் எப்போதும் ஸீதை யுடன் என்னிருதயத்தில் வாசஞ்செய்யவேண்டும். நடக்கும்போதும், இருக்கும் போதும் என் மனம் உம்மையே நாடவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்.

பிறகு முனிசிரேஷ்டரான அகஸ்தியர், ஸீதாகாந்தனாகிய இராக வனைப்பார்த்து ஸ்தோத்திரஞ்செய்து, இந்திரன் தன்னிடம் வைத் திருந்த வில்லையும், அழிவற்ற பாணங்கள் நிறைந்த அம்புறைகளையும் இரத்னங்கள் அமைத்த கைப்பிடியோடுகூடிய கத்தியையும் அவரிடம் ஒப்புவித்து, ''ஓ இராகவ! இவைகள் இராக்ஷஸவதம் செய்ய உதவக் கூடும். அதற்காகவே பூமியின்கண் மாயா மானிட அவதாரம் செய்திருக்கிறீர். இதோ இரண்டு யோஜனை தூரத்துக்கப்பாலுள்ள கௌதமீ நதிக்கரையில் மிகுந்த புண்ணிய ஸ்தலமானதும், அலங்கார மானதும், பஞ்சவடி யென்ற நாமமுள்ளதுமான ஓர் ஆச்சிரமம் இருக்கிறது.

ஓ இரகுகுல சிரேஷ்டரே! வனவாசம் செய்யவேண்டிய காலத் தின் சேஷத்தை அங்கு கழிக்கலாம். தேவர்களின் இடையூறு நீங் கச் செய்யவேண்டிய காரியங்களை ஆங்கிருந்தே செய்யவேணும்'' என்று வணக்கமாய்க் கூறினார்.

சாதுக்களுக்குப் பதியாகிய தசரதநந்தனரும், பிரபுவும், யாவற் றிலுங் கண்ணுடையவரும், வியாபகருமாகிய ஸ்ரீராகவன், அகஸ்திய முனிவர் கூறிய ஸ்தோத்திரங்களைக் கேட்டுப் புன்சிரிப்போடு மன மகிழ்ந்து, அவருக்கு உபசாரவார்த்தை கூறி யவரிடம் விடைபெற்று, அவர் காட்டிய வழிமேற்கொண்டு பஞ்சவடிதீரம் செல்ல ஸீதை, இலக்ஷ்மணருடன் புறப்பட்டார்.



## நான்காவது சருக்கம்.

---

இராமச்சந்திரர், ஸீதை, இலக்ஷ்மணர் சகிதம் அம்மார்க்கம் செல்லும் போது, பருவதம் போல் முன்னால் இருக்கும் ஜடாயுவைப் பார்த்தார். இது என்ன வென்று ஆச்சரிய மடைந்து, ''ஓ இலக்ஷ் மண! வில்லைக் கொண்டுவா, இதோ ஓர் இராக்ஷசன் இருக்கிறான்.

ரிஷிகளுக்குச் சத்துருவாகிய இவனை வதம் செய்கிறேன்" என்று கூறினார்.

இந்த வார்த்தையைக் கேட்ட கழுகரசனாகிய ஜடாயு திகிலடைந்து "ஓ இராமப் பிரபுவே! நான் வதைக்குரியவனல்லன்; உம் தந்தைக்குப் பிரியமுள்ள நண்பன், ஜடாயு வென்ற நாமமுடையவன், கழுகு ஜாதியைச் சார்ந்தவன், உமக்கு நன்மை செய்பவன், உமக்கு மங்கள முண்டாகுக, உமக்கு ஹிதம் செய்ய விரும்பியே இப்பஞ்சவடியில் வாசஞ் செய்கிறேன். தாமும் இலக்ஷ்மணரும் ஒரு சமயம் வெளியில் சென்றால் ஜனக ராஜகுமாரியாகிய ஸீதையைக் காப்பாற்றுவேன்" என்றார்.

ஜடாயு கூறிய வசனங்களைக் கேட்ட காகுஸ்தன் "ஓ கழுகரசனே! நல்லது நீ யென் தந்தைக்கு நண்பனாகில் அவ்விதமே எனக்குப் பிரியத்தைச் செய்ய வேணும். என் சமீபத்திலேயே இந்த வனத்தில் வாசஞ் செய்து கொண்டிரும்" என்று கூறி, அவரை யவ்விடம் இருக்கச் செய்து பஞ்சவடி சென்றார்.

இரகுநந்தனன், ஸீதை இலக்ஷ்மணன் இம்மூவரும், கௌதமீ நதிக்கரையிலுள்ள பஞ்சவடி தீரம் வந்து சேர்ந்ததும், கங்கையின் வடபாகத்தில் வாழை, பலா, மா முதலிய பல விருக்ஷங்கள் நிறைந்ததும், பரிசுத்த முள்ளதுமாகிய அவ்விடத்தில் இலக்ஷ்மணனைக் கொண்டு, ஓர் விசித்திரமான பர்ணசாலையைச் செய்வித்து, அதில் வசித்து வந்தார்கள்.

அந்த ஆச்சிரமம் மறமொரு தேவலோகம் போல் காணப்பட்டது. அவ்விடத்தில், இராகவன் ஸீதைக்கு வனத்திலுள்ள விநோதங்களைக் காட்டியும், இலக்ஷ்மணருடன், வசிஷ்டோபதேச வேதாந்தங்களைச் சம்பாஷித்தும் சுகமாக வசித்து வந்தார்.

இராமரைச் சேவிப்பதில் ஒருமைப்பட்ட மனமுடைய இலக்ஷ்மணன் தினந்தோறும், ஸீதை, இராமன் இவர்களுக்கு, வனத்திலுள்ள கந்தமூல பலன்களைக் கொண்டுவந்து கொடுத்து, புசிக்கும்படி செய்து தான் புசியாமல் பகல் முழுதும் அவர்களைச் சர்வ ஜாக்கிரதையோடு காத்து, இரவில் ஜானகி, இராமன் இருவரையும் பர்ணசாலையில் படுத்துறங்கச் செய்து தான் பக்கத்தில் வில்லை யூன்றிக் கொண்டு கண்ணுறங்காது நின்று பாதுகாத்து வந்தார். அதிகாலையில் அவர்கள் எழுந்தவுடன் ஸ்ரீராமன் முன்னும் தான் பின்னும்,

சீதை மத்தியிலுமாக, கௌதமீநதிக்குச் சென்று ஸ்நானம் பண்ணி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு மீண்டும் அவ்வாறே திரும்பி பர்ணசாலைவந்து சேர்வார். தினந்தோறும் பர்ணசாலைக்கு வேண்டிய ஜலத்தைத்தானே திரட்டிக்கொண்டு வந்து சேர்ப்பார். இவ்வாறு இலக்ஷ்மணன்காத்துவர மூவரும் சுகமாக அவ்விடம் வசித்து வந்தார்கள்.

ஓர் சமயம் இலக்ஷ்மணர் வைகுண்டநாத சொரூபியாகிய இராமன் திருவடிகளில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "ஓ பகவானே! தங்களிடம் மோக்ஷத்திற்கு முக்கியமான உபாயத்தைக் கேட்க விரும்புகிறேன், தாங்கள் சுருக்கமாகச் சொல்லவேண்டும். மேலும், விஞ்ஞானத்துடன் கூடியதும், பக்தியாலும், வைராக்கியத்தாலும் நிறைந்ததுமாகிய ஞானமார்க்கத்தை எனக்குபதேசிக்க வேண்டும். ஓ இரகு சிரேஷ்ட! இப்புவியின் கண் தங்களைத் தவிர யார் சொல்லப் போகிறார்கள்" என்று கேட்டுக்கொண்டார்.

இராகவன் இவ்வாறு கேட்டுக்கொண்ட இலக்ஷ்மணரைப் பார்த்து அன்புடன் கூறுகிறார்:—ஓ குழந்தாய்! இரகசியத்திலும் இரகசியமானதும், சிறந்ததுமாகிய மாயையின் சொரூபத்தையும், ஞானத்தையும் பரமாத்மாவையும் தெரிவிக்கிறேன் கேள்; மானிடன் இதைத் தெரிந்துகொண்டவுடன், கற்பிதமான பிரபஞ்சத்தை விட்டுவிடுவான், பயத்தில் நின்றும் விடுபடுவான். மாயையின் சொரூபமாவது:—ஆத்மா அல்லாத சரீர முதலியவற்றில் ஆத்மபுத்தி யுண்டாவது மாயை எனப்படும். அம்மாயையால் தான் ஜனன மரண முண்டாகின்றன. மாயைக்கு, விக்ஷேபம், ஆவரணம் என்ற இரண்டு சக்திகள் உண்டு. விக்ஷேபசக்தி, லிங்க சரீரமுதல் பிரும்மாவரையி லுள்ள ஜகத்தை, ஸ்தூல, சூக்ஷ்ம காரண முதலியவைகளால் உண்டு பண்ணுகிறது. ஆவரணசக்தி, ஈஸ்வரனையும், ஞானிகளையுந் தவிர, மற்றச் ஜீவராசிகள் அனைத்தையும் * திரிபதார்த்த நிச்சயந் தெரியவொட்டாமல் நாஸ்தி நபாதி யென்னு மிருமுகத்தினால் மழைக் காலத்து அமாவாசை நிசியின் குமரியிருளைப்போல மறைத்து நிற்கும். இதுவே மாயையின் சொரூபம்.

விஞ்ஞானத்துடன் கூடிய ஞானமும அறியததகக பரமாதமாவும்:—இப்பிரபஞ்சமானது—பரமாத்மாவிடம், மாயையால் கற்பித

* பதி, பசு, பாசம்.

மானது, "பழுதையில் பாம்பு" என்ற கற்பிதம் எப்படியோ அப்படியே பரமாத்மாவிடம் கற்பிதமானது பிரபஞ்சம். விசாரிக்கின் ஒன்றுமில்லை. மானிடர்கள், கேட்பது, பார்ப்பது, நினைப்பது யாவும் எப்போதும் பொய்யாகவே ஆகின்றன. சுவப்னத்தில் கண்ட மனோரதம் போலாம். சம்சாரமாகிய விருக்ஷத்திற்குத் தேகமே திடமான ஆணிவேர் போலாகிறது. தேகமானது, பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய ஐந்து ஸ்தூல பூதங்களி னின்றும், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகிய ஐந்து தன்மாத்திரைகளி னின்றும் உண்டாகின்றது, மனம்,புத்தி, சித்தம், அகங்காரம், ஆகிய அந்தக்கரணம் நான்கும், சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, ஆக்கிராணம் ஆகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஆகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும், இவைகளை அதிஷ்டித்த சிதாபாசன், மூலப்பிரகிருதி இவைகளே க்ஷேத்திரம் எனப்படும். (க்ஷேத்திரம் என்பது சரீரமாம்) இவைகளுக்கு விலக்ஷணனாகிய ஜீவன் பரமாத்மா. (நிராமயன்) அந்த பரமாத்மாவாகிய ஜீவனை யறியவேண்டியதற்கு ஸாதனங்களைக் கேள். அபிமானமில்லாமை, டம்பமில்லாமை; பிறஹிம்ஸையில்லாமை; பிறர் நிந்தனையைப் பொறுத்தல், எங்கும் வக்ரத்தன்மையில்லாமை, மனம், வாக்கு, சரீரம், இவைகளைக்கொண்டு நல்ல பக்தியோடு சற்குருவைச் சிசுருஷித்தல்; புறவிந்திரியங்களின் பரிசுத்தி, மனதின் சுத்தி, நல்ல காரியங்களில் ஸ்திரபுத்தி இவைகள் ஏற்படுதல், மனம், வாக்கு, காயம், இவைகளையடக்குதல், விஷயங்களில் பிரவிருத்தியில்லாமை, அகங்காரமில்லாமை, ஜன்மம், மூப்பு இவைகளைப் பற்றியாலோசித்தல், ஆசையில்லாமை அதாவது, புத்திரர், தாரம், பொருள் இவைகளில் விருப்பில்லாமை, இஷ்டமாயினும், அனிஷ்டமாயினும் இவைகளில் எது நேர்த்தாலும் மனதில் சமபாவனை பண்ணுதல், சர்வசொரூபனும், யோகிகள் ரமிக்க வுரியவனுமாகிய என்னைத் தவிர மற்றவைகளில் பிரவிருத்தியில்லாத ஞானமடைதல், ஜனங்கள் நெருக்கமில்லாததும், அசுத்த மில்லாததுமான இடத்தில் இருத்தல், எப்போதும் பிராகிருத ஜனங்களுடன் வசிப்பதில் பிரியமில்லாமை, சதா ஆத்மஞானத்தில் முயற்சி செய்தல், வேதாந்தத்தின் அர்த்தங்களைச் சிந்தித்தல் இவைகளே பரமாத்மாவை யறியும் சாதனங்கள்; இவைகளால் ஞானமுண்டாகும்; இவைகள் இல்லாவிடில் அஞ்ஞானமே உண்டாகும். தேகம், பிராணன், அகங்காரம், புத்தி, மனம் இவைகளுக்கு

நான் விலக்ஷணன், * சிதாத்மா என்று எவன் ஞானத்தால் அறிகிறுனே அவனுக்கு அந்த ஞானந்தான் நிச்சயஞானம். விஞ்ஞான (அறிவு) மென்பது இந்த ஞானத்தைப் பிரத்தியக்ஷமாக அநுபவிப்பது. ஆத்மா எங்கும் நிறைந்தவன், சிதானந்த சொரூபன், அவ்வியக்தன், புத்தி முதலிய உபாதிக ளில்லாதவன், பரிணாம முதலியவைக ளற்றவன், தன்னுடைய பிரகாசத்தால் பிரகாசப்படுத்துகிறவன், ஆவரணமில்லாதவன், ஒருவன், இரண்டற்றவன், ஞான இலக்ஷணமுடையவன், பற்றுதலற்றவன், தனக்குப் பிரபுவாகியவன், பார்க்கிறவன். இவ்வித இலக்ஷணமுடைய பரமாத்வை விஞ்ஞானத்தால் அறிய வேண்டும். சற்குருவினிடம் சாஸ்திர உபதேசம் பெறுதலால், ஜீவாத்மா, பரமாத்மா இவைகள், அயம் ஆன்மா பிரமம் என்ற மஹாவாக்கியப்படி ஏகீபாவத்தில் ஒன்று என்ற ஞானம் உண்டாகும்.

ஜீவனுக்கும், பரமாத்மாவுக்கும் மூலமாகிய அவித்தையானது காரியங்களுடனும், காரணங்களுடனும் பரமாத்மாவிடம் லயமாகும்; அவஸ்தை தான் முக்தி யெனப்படும்.

ஏ இலக்ஷ்மண! பரமாத்மாவாகிய என்னுடைய ஞானத்துடனும், விஞ்ஞானத்துடனும், வைராக்கியத்துடனும் கூடிய மோக்ஷ சொரூபத்தைக் கூறினேன். ஆயினும் என்னிடம் பக்தியில்லாதவர்களுக்கு இவ்விஷயம் துர்லபம் என்றே எண்ணுகிறேன். நேத்திரமுடையவர்களாயினும் இரவில் வஸ்துவானது காணக்கூடாததுபோல் என்னிடம் பக்தியில்லாதவர்களுக்குக் காண்பது துர்லபமாகும்; அந்த வஸ்து பகலில் பார்க்கப்படுகிறதுபோல், என்னிடம் பக்தி யுடையவர்களுக்கு ஆத்மசொரூபம் நன்கு விளங்கும்.

என்னிடம் பக்தி யுண்டாவதற்குச் சாதனங் கூறுகிறேன் கேள். எப்போதும் என் பக்தர்களிடம் சேர்தல், இடைவிடாது என்னுடைய சேவை செய்தல், ஏகாதசியில் உபவாசமிருத்தல், என்னுடைய உற்சவங்களை அநுமோதித்தல், என்னுடைய கதையைச் சிரவணஞ்செய்தல், பாராயணம் செய்தல், வியாக்கியானம் செய்தல் இவைகளில் எப்போதும் அன்புவைத்தல், என்னுடைய பூஜையில் விருப்பம்வைத்தல், என்னுடைய நாமங்களைக் கீர்த்தனஞ் செய்தல் இவ்வித சாதனங்களைச் செய்து வருபவர்களுக்கு என்னிடம் பக்தி யுண்டாகும். அப் பக்தி யுண்டானால் ஞானம் உண்டாகும்,

* சிதாத்மா = சுத்தன்.

ஞானத்தினால் முக்தி யடைவார்கள். உன்னுடைய கேள்வியை யநுசரித்து எல்லாவற்றையும் கூறினேன். என்னிடம் பக்தி யில்லாதவர்களுக்கு இதைச் சொல்லக்கூடாது, என்னுடைய பக்தரானால் அவர்களுக்கு உபதேசிக்கலாம். என்னிடம் பக்தியுடையவர்கள், யோகாப்பியாசம் செய்பவர்கள், நிர்மலமான அந்தக்கரணமுடையவர்கள், நிர்மல ஞான சொரூப முடையவர்கள், என்னைச் சேவிப்பதைத் தவிர மற்றவைகளில் மனதைச் செலுத்தாமலிருக்கிறவர்கள் இவர்களுக்கு மோக்ஷம் சமீபத்திலிருக்கிறது; அவர்கள் பார்ப்பதற்கு நான் உரியவனாவேன். இல்லாவிடில் என் தரிசனம் அவர்களுக்குத் துர்லபமாகும் என்று கூறி முடித்தார்.



## ஐந்தாவது சருக்கம்.



பஞ்சவடி தீரத்தில் இராமன் ஸீதை இலக்ஷ்மணன் இம்மூவரும், வாசம் செய்துகொண் டிருக்கும்போது அந்தப் பெரும் ஆரண்யத்தில், தன்னிஷ்டப்படி வடிவம் எடுக்குந் திறமை யுடையவளும், மிகுந்த பலமுடையவளும், ஜனஸ்தானத்தில் வசிப்பவளுமாகிய ஓர் இராக்ஷசி சஞ்சரித்துக் கொண்டிருந்தனள். அவள் ஒரு சமயம் கௌதமீ நதிக்கரையில், உலகநாதனாகிய ஸ்ரீராமனுடைய பாதங்களின் அடிச்சுவடுகளைக் கண்டாள்; அச்சுவடுகளில் வஜ்ரம், துவஜம் முதலிய அடையாளங்க ளிருந்தன. அவ்வித பாதங்களின் சௌந்தரியத்தைக் கண்டவுடன் மோகமடைந்து, காமம் நிறைந்த மனமுடையவளாகி அதிசுந்தரமான ஓர் பெண்வடிவ மெடுத்து அந்த அடிச்சுவடுகளைப் பார்த்துக்கொண்டே மெதுவாக இராமனிருக்கும் ஆச்சிரமம் வந்து, அங்கு ஸீதா சமேதனாக வீற்றிருக்கும் இரகு நாதனைப் பார்த்தாள்; இரகு நாதனோ—இலக்ஷ்மீகாந்தன், மன்மதனுடைய பிதுர் ஸ்தானம் வகித்தவன், களங்கமற்ற பூரணச்சந்திரன் போன்ற வதனமுடையவன், மங்களவடிவமானவன்; நீலோற்பலம் போன்ற நேத்திர முடையவன்; சங்குபோன்ற கழுத்துடையவன்; நிகரற்றவன்; ஸ்ரீவச்சம் என்ற அடையாளமுள்ள சிறந்த மார்புடையவன்; சமுத்திரம் போன்ற கம்பீரமுள்ளவன்; அழிவற்றவன்; சுவர்ணம்போன்ற வர்ணமுடைய சடையையும், விபூதியைத் தூளனயாகத் தரிக்கப்பெற்ற சரீரத்தையு முடையவனானதால், பிரத்தியக்ஷமான

மற்றொரு ருத்திரனைப் போன்று விளங்கினான். இத்தகைய மகிமை தங்கிய இராமச்சந்திரனைப்பார்த்து மிகுந்த அழகுள்ள பெண் ரூபத்தை யெடுத்துவந்த இராக்ஷசி காம வெறியுடன் கூறுகிறாள்

"நீர் யார், யாரைச்சார்ந்தவர், உமக்கு இந்த ஆச்சிரமத்தில் என்ன வேலை, சடையையும், மரவுரியையுந் தரித்திருப்பதேன்? உமக்கு ஆகவேண்டிய காரியம் என்ன? பாரகாரியமானாலும் முடிக்கிறேன், அதை யெனக்குச் சொல்லவேண்டும்; மேலும் உம்மை இன்னாரென நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். உம்முடைய வரலாற்றை எனக்குக் கூறவேண்டும்" என்றாள்.

அந்த சுந்தர நங்கையைப் பார்த்து பரமதயாளு வேடிக்கையாக "நான் அயோத்திக்கதிபதியாகிய தசரதர் புத்திரன், என் பெயர் இராமன், இவள் ஜனக மகாராஜன் குமாரி, ஸீதை யென்னும் பெயருடையவள், என்னுடைய மனைவி; அவனோ என்னிளைய பிராதா இலக்ஷணங்களமைந்தவன், இலக்ஷ்மணன் என்னும் நாமமுடையவன்; ஏ புவனசுந்தரி! நீ யார்? உனக்கு நான் செய்ய வேண்டிய காரியம் என்ன?" என்று கேட்டார். அந்த சுந்தரி, "நான் காமரூப முள்ளவள், மஹாத்மாவும், இராக்ஷச சிரேஷ்டருமாகிய இராவணனுடைய சகோதரி, என் பெயர் சூர்ப்பனகை, மஹா பலிஷ்டரான கரன் என்ற பிராதாவின் போஷணையின் கீழ் இந்த வனத்தில் வசிக்கிறேன், அவர் எனக்கு எல்லாவற்றையும் கொடுத்திருக்கிறார். ஆனாலும் இப்போது மன்மத பாணத்தால் துன்பமடைகிறேன். ஏ இராம! என்னுடன் தயவுசெய்து வாரும், மலைகளைச் சார்ந்த இவ்வாரண்யத்தில் நாமிருவரும் விளையாடுவோம்; ஏ கமலலோசனா! காம வேதனையுள்ள நான் உம்மை பிரியச் சக்தி பெறவில்லையே" என்றாள்.

இவ்வசனத்தைக் கேட்ட ஸ்ரீராமர் ஸீதையைப் பார்த்துக் கொண்டே புன்னகையுடன் கூறுகிறார் :—"ஏ சுந்தரீ! சூர்ப்பனகீ! நீ சக்களத்திதோஷத்தில் எவ்விதமிருப்பாய், வெளியில் என்னுடைய பிரதா இலக்ஷ்மணன் இருக்கிறான், மிகுந்த அழகுள்ளவன், அவன் உனக்குச் சரியான கணவனாவான். நீ அவனுடன் சஞ்சரிக்கலாம்" என்றார்.

இவ்வாறு கூறியதைக் கேட்ட சூர்ப்பனகை, இலக்ஷ்மணரிடம் வந்து, "ஓ சுந்தரரூபனே! நீர் எனக்குப் பதியாக வேண்டும், உம்மிடத்

தில் காமத்தால் மோகங் கொண்ட நான் உம் ஆஞ்ஞைப்படி நடக்கிறேன், நாமிருவரும் வனஞ் செல்லுவோம், உம்முடைய ஜேஷ்டருடைய கட்டளையுமிதுவே" என்றாள்.

இக்கொடிய வார்த்தையைக் கேட்ட இலக்ஷ்மணர், "ஓ சூர்ப்பனகியே, பதிவிரதே! மஹா புத்திசாலியாகிய இராமருக்கு நான் தாஸன், எனக்கு நீ மனைவியானால், நீயும் இராமருக்குத் தாசியாவாய், ஆகையால் உனக்கு இதைவிட மிகுதியான துக்கம் என்ன விருக்கிறது, ஆதலால் நீ அந்த இராமரையே அடையலாம் அவரிடம் செல், அவர் தான் அரசன், எல்லாவற்றிற்கும் ஈச்வரன்" என்றார்.

இதைக் கேட்ட சூர்ப்பனகை தாழ்ந்த மனதுடன் மறுபடியும் இராகவனிடம் வந்து, "ஓ இராகவ! நீர் நிலைபெறாமல் என் பேரில் கோபங்கொண்டு என்னை யேன் பிரமிக்கச்செய்கிறீர், இந்த ஸீதை உம்மிடத்திலிருக்கிறதினாலல்லவா என்னை யிகழ்ந்தீர்? உம்முன்னிலையிலேயே அந்த ஸீதையைப் பக்ஷிக்கிறேன் பாரும் என்றுரைத்து, சுந்தரரூபம் நீங்கி, கோரமான ஆகிருதியுடன் ஸீதையிடம் ஓடினாள். இதைக் கண்ட இராமர் இலக்ஷ்மணருக்கு ஆஞ்ஞாபிக்க, அவர் கத்தியை யெடுத்து சூர்ப்பனகையின் காதிரண்டையும், மூக்கையும் சேதித்தார். அவ்வரக்கி இரத்தந் தோய்ந்த சரீரத்தோடு பயங்கரமான சத்தமிட்டுக் கதறிக்கொண்டு, கொடிய சொற்களைப் பேசி அவ்விடம் விட்டகன்று, கரன் முன்னால் வந்தலறி வீழ்ந்தாள்.

மிகக் கடுமையுள்ள சொற்களையுடைய கரன், அவளைப்பார்த்து, "என்ன இது? எமன் உலகையணுகப்பெறும் எவனால் இவ்வாறு செய்யப்பட்டாய் சொல்? அவன் காலனுக் கொப்பானவனாயினும் கொல்லுகிறேன்," என்றான்.

சூர்ப்பனகை யப்பொழுது, "ஓ அண்ணா! இராமன், ஸீதை, இலக்ஷ்மண சகிதம், கோதாவரி நதிக்கரையிலுள்ள தண்டகாரண்யத்தில் யாதொரு பயமின்றியே வசிக்கிறான். அவனுடைய உத்தரவுபெற்ற அவன் பிராதாவாகிய இலக்ஷ்மணன் என்னை யிவ்வலங்கோலம் செய்தான், நீ யென் குலத்திற் பிறந்த வீரனானால், அந்த சத்துருக்களை ஜெயிக்கவேண்டும்; அவர்களுடைய இரத்தத்தை நான் பானம் செய்யவேண்டும்; மிகவும் கொழுப்புள்ள அவ்விருவர் தசையையும் நான் பக்ஷிக்கவேண்டும்; இல்லாவிடில் நான் பிராணனை யிழந்து யமனுடைய இல்லம் செல்கிறேன்," என்றாள்.

இதைக்கேட்ட கரனுனவன், தூஷணன், திரிசிரசு இவர்களுக் கறிவிக்க, மூவரும் கோபாவேசங்கொண்டு, இராமர், இலக்ஷ்மணர் இவர்களை வதம் செய்ய, பயங்கரமான செய்கையுடைய பதினன் காயிரம் இராக்ஷச சைனியங்களுடன், ஆயுத பாணிகளாய் விரைவாக இராமனிடம் சென்றார்கள்.

அக்கொடிய இராக்ஷசர்களின் கோலாகலச் சத்தத்தைச் செவி யுற்ற இராமன், இலக்ஷ்மணரை நோக்கி, "ஏ இலக்ஷ்மணா! மிகுதி யான சத்தம் கேட்கிறது, அரக்கர்கள் வருகிறார்களென்பது நிச்சயம், இப்போது பெரும் சண்டையுண்டாகப் போகிறது, நீ ஸீதையை யழைத்துக்கொண்டு குகையிற் போயிரு, கோரரூபமுடைய இரா க்ஷசர் எல்லோரையும் நான் கொல்ல விரும்புகிறேன், இது விஷயத் தில் நீ ஒன்றும் பதில் சொல்லக்கூடாது" என்றார்.

இலக்ஷ்மணர் அவ்விதமே செய்கிறேன் என்று சேவித்து ஸீதை யை யழைத்துக்கொண்டு மலையிலுள்ள ஓர் குகைக்குச் சென்றார்.

பிறகு பிரபுவாகிய இரகுவீரர் கவசம்பூண்டு குறைவற்ற பாணங் களுடைய அம்புறாத் தூணியையும், கெட்டியான வில்லையுந் தரித்து யுத்த சன்னதரா யிருந்தார்.

அச்சமயம் இராக்ஷச சைனியம் வந்து இராமர் மீது விசித்திர மான ஆயுதங்களையும், கற்களையும், மரங்களையும் பிரயோகித்தார்கள். இராகவன் அவைகளை ஓர் கணப்பொழுதில் வீணாகச் செய்தார்.

பிறகு எதிர்த்து வந்த கரன், தூஷணன், திரிசிரசு இம்மூவர் களையும், மற்ற அரக்கர்களையும் இரகு குல சிரேஷ்டர் அநேக பாணங்களால், மூன்றே முக்கால் நாழிகைக்குள் நாசம் செய்தார். இலக்ஷ்மணரும் குகையினின்று ஸீதையுடன் புறப்பட்டு வந்து ஸீதையை இராமரிடம் ஒப்புவித்து நமஸ்கரித்தார். இராக்ஷசர் யாவரும் மாண்டு போனதைப் பார்த்து ஆச்சரிய மடைந்தார். ஸீதா தேவியும் தமது பர்த்தாவுக்கேற்பட்ட களையை யாற்றினள். அவர் சரீரத்தில் ஆயுதங்களாலுண்டான புண்ணைத் தடவிக் கொடுத்தாள். மூவரும் சுகமாய் பன்னசாலையில் வீற்றிருந்தார்கள்.

பின்பு, கர, தூஷணாதி இராக்ஷசர்கள்யாவரும் மரணமடைந்த சங்கதியைக் கேட்ட சூர்ப்பணகி, அலறிக் கொண்டு இலங்கை சென்று, இரத்னகசிக சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் இராவணன் காலில்

விழுந்து கதறினாள். இப்படிப் பயத்தால் தளர்ந்து வந்து தன்னடியில் விழுந்த தங்கையாகிய சூர்ப்பனகியைப் பார்த்து, "குழந்தாய்! எழுந்திரு! எழுந்திரு! மங்களவடிவமாகியவளே! உன்னை ரூப பங்கம் படுத்தியவன்யாவன்? இந்திரனா, யமனா, வருணனா, குபேரனா, மற்றும் எவன் சொல் சீக்கிரம் அவனை நான் ஓர் கணத்தில் சாம்பலாகச் செய்கிறேன்" என்றான்.

சூர்ப்பனகி யெழுந்து, "ஓ அண்ணா! நீ மிகுதியான மதங்கொண்டவன், மூட புத்தியுடையவன், குடியில் ஆவலுடையவன், ஸ்திரியால் ஜெயிக்கப்பட்டவன், யாரிடத்திலுங் கபடமாவே யிருந்து கெடுதி செய்பவன், சாரர்களாகிய கண்ணில்லாதவன், நீ இவ்விதங்காணப் பட்டால், எவ்விதம் அரசனாகுவாய். அதிக்ரூரனாகிய கரனும்,என்னிமித்தம் மாண்டான், தூஷணனும், திரிசிரசும், பதினாலாயிரம் அரக்கர்களும் காலஞ் சென்றார்கள். அசுரருக்குச் சத்துருவாகிய இராமன் ஓர் கணநேரத்தில் இவ்வாறு செய்து விட்டான், முனிவர்கள்யாவரும் பயமின்றி யிருக்க ஜனஸ்தானத்தை ஸ்தாபித்தான். நிர்மூடனாகிய நீ இதை யறியவில்லை" என்றாள்.

இவ்வாறு சூர்ப்பனகி தெரிவிக்கக்கேட்ட மிகுந்த பராக்கிரமமுடைய இராவணன், கோபத்தாற் சிவந்த கண்களையுடையவனாகிச் சற்று ஆலோசித்துக் கூறுகிறான்.

"ஓ தங்கையே! இராமன் என்பவன் யார்? பிறரின் பிராணனை அபகரிக்கும் திறமையுடைய கரதூஷணாதி யரக்கர்களை எதற்காக வதை செய்தான், இவைகளை நன்கு விளங்க எனக்குச் சொல். இராமனையும் அவனைச் சேர்ந்த யாவரையும் நிர்மூலஞ் செய்கிறேன்" என்றான்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட சூர்ப்பனகி "ஓ அண்ணா! நான் ஒரு சமயம், ஜனஸ்தானத்தினின்று, கௌதமீ நதிக்கரை சென்றேன். அங்கு முனிவர்களுடைய ஆச்சிரமமாகிய பஞ்சவடி யென்று பேர் பெற்ற ஓர் ஸ்தான் மிருக்கின்றது. அங்கோர் ஆச்சிரமத்தில் இராமனைக் கண்டேன், அவ்விராமன் தாமரை மலர்போன்ற நேத்திரமுடையவன், வில்லையும் பாணங்களையுந் தரித்தவன், அழகுள்ளவன், சடை, மரவுரிகளால் அலங்காரஞ்செய்து கொண்டவன், அந்த இராமனுக்குத் தம்பியாகிய இலக்ஷ்மணனும் அவ்வளவு மகிமையுள்ளவன், இராம பத்தினியாகிய ஸீதையோ விஸ்தாரமான நேத்திரம்

படைத்தவள், ரூபத்தால் மற்றொரு இலக்ஷ்மி தேவியே இவளென நிரூபிப்பதற்குரியவள், தேவஸ்திரீகள், கந்தருவ ஸ்திரீகள், மானிட ஸ்திரீகள் முதலினோர்களுக்குள் அவ்வளவு மகிமைதங்கிய ஸ்திரீயை நான் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. ஏ அண்ணா! அந்த அழகான வனத்தைப் பிரகாசப்படுத்திக்கொண் டிருக்கிறாள். ஏ குற்றமற்ற பிராதாவே! நான் அந்த சுந்தரியை யுனக்குப் பத்தினியாக்க முயன்றேன். அவளைக்கிரகிக்க யத்தனித்தேன். அவள் பர்த்தாவாகிய இராமனுடைய தம்பி இலக்ஷ்மணன் என்னுடைய மூக்கைச் சேதித்த தோடு கூட, செவிகளையுஞ் சேதித்தான். பிறகு நான் மிகுந்த வருத்தமுற்று கரனிடம் சென்றேன். அக்கரன் இராக்ஷச சிரேஷ்டர்களுடன் இராமனிடம் யுத்தம் செய்ய வந்தான், கரன் முதலினோர் இராமனாலேயே மரணமடைந்தார்கள். ஓ பிரபுவே! இராமன் மனம் வைப்பானாகில் அரை நிமிஷத்தில் மூவுலகையும் நாசம் செய்வான், சந்தேகமில்லை யென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனாலும் அந்த ஸீதையுனக்கு மனைவியாகி விடுவாளாகில், உன்னுடைய ஜீவன் பிரயோஜனமுள்ளதாகும். ஓ இலங்காதிபனே! அவள் உனக்கு எவ்விதத்தில் பத்தினியாவாளோ அவ்விதத்தில் நீ முயற்சிசெய். அந்த ஸீதை, செந்தாமரைத் தளம் போன்ற கண்ணுடையவள், உலகம் யாவற்றிலும் இவள் ஒருவளே சுந்தரியானவள். அவளை யடைவதற்காக, இராமனுடன் யுத்தம்பண்ணி, யவனை ஜெயிக்க அவன்முன் பிரத்தியக்ஷமாக நின்று போர் புரிவதற்கு நீ சக்தியில்லாதவன். ஆகையால் அந்த வீரனைக் கபடமாக அவளைவிட்டுப் பிரித்து அப்புறப்படுத்தி பிறகு ஸீதையை யடையவேண்டும். இதுவே சூட்சி" என்றுகூறினாள்.

தசக்கிரீவன், சூர்ப்பனகை சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு, காமசாகரத்தில் மூழ்கி, தங்கையை இனிய மொழி கூறித்தேறுதலடையச் செய்து, அநேக வெகுமதிகளைக் கொடுத்தனுப்பி விட்டு. தான் அரண்மனையிற் பிரவேசித்தான். அங்கு தானிருக்கும் பள்ளியறையிற் புகுந்து ஆகாரம் நித்திரையற்று, அனலிலிட்ட மெழுகு போலுருகித் திகைத்து பின்பு தனக்குள்தானே ஒருவாறு தேறி, பூர்வகன்ம விசேஷத்தால் தெளிந்த மனதுடையவனாகிச் சிந்திக்கலாயினன்.

ஆ! இதென்ன விந்தை! இதென்ன ஆச்சரியம்! மானிடனாகிய இராமன் ஒருவனால், கரன் எவ்விதம் நாசம் அடைந்தான். அந்த

கான் எனக்குப் பிராதாவாகியவன். வலுவாலும் வீரியத்தாலும் கருவத்தாலும் நிறைந்தவன். அவனே அந்த இரகுவீரனால் மாண்டு போனானே யாமாகில் அந்த மானிடனாகிய இராகவன் பரனும், ஈசனுமாகிய விஷ்ணுவே. சேனைக்கூட்டத்தோடு கூடிய என்னைக் கொல்ல விருப்பங்கொண்டு மானிட உருவெடுத்து வந்தவராவார். பிரமதேவர் முந்தி பகவானிடம் சென்று, பிரார்த்தித்துக் கொண்டாரல்லவா, அதற்காக இரகு வம்சத்தில் மாதவனே ஸ்ரீராமனாக வந்து அவதரித்தனரோ அறிகிலேன். ஆகினும் சமீபத்தில் நடந்த அரிய பெரிய காரியத்தை யுற்றுநோக்கில், இராமன் மானிடனல்லன். எப்படியிருந்தாலும் இருக்கட்டும், பரமாத்வாகிய ஸ்ரீராமனால் யுத்தத்தில் வதம் அடைவேனாகில், ஸ்ரீவைகுண்டத்தை யடைந்து முக்கிய தாசனாகப் பிரகாசிப்பேன். இல்லாவிடில் நீண்டகாலம், இந்த இலங்காபுரி ராஜ்யத்தைப் பரிபாலிப்பேன். தபோபலத்தினால் திக்கு விஜயம் செய்து திரிலோகாதிபத்தியம் பெற்று, இராக்ஷசர் அனைவருக்கும் தலைவனாய் விளங்கும் இராவணன் இவ்வாறு ஆலோசித்து, ஸ்ரீராமனைப் பரமாத்மாவாகிய ஹரியென்று தீர்மானித்து அவரிடம் செல்லத் துணிந்தான். ஆனால் பகவான் பக்தி செய்தால் சீக்கிரம் பிரஸன்னமாக மாட்டார், சத்துருவாகியே அவரை யடைகிறேன், இதுவே கிரமம் என நிச்சயித்தான்.

---

## ஆறாவது சருக்கம்.

மஹா மேதாவியாகிய இராவணன் இரவில் இவ்விதம் ஆலோசனை செய்து, காலையில் எழுந்து தான் கவலைகொண்ட விஷயத்தை முடிக்க ஓர்விதமான சூட்சியை மனதில் நிச்சயித்து, தனிமையாக ஓர் தேரின் மீதேறி சமுத்திரக்கரையிலுள்ள மாமனாகிய மாரீசன் ஆச்சிரமம் சென்றான்.

அச்சமயம் மாரீசன் தன் ஆச்சிரமத்தில் முனிவர்களைப்போல் சடைமுடியும், மரவுரியுந் தரித்து, பத்மாசனத் தமர்ந்து, ஆத்ம சந்நிதானத்தில், நிர்க்குணனும் குணங்களுக்குச் சூரியனுமாகிய பரமாத்மாவைத் தியானஞ்செய்து கொண்டு சமாதியிலிருந்தான். இரதம் வந்த ஆரவாரத்தினால் மாரீசன் சமாதியினின்று விழித்து, தேரை ...ங்கித் தன் கிருகத்துக்கு வந்த மருமகனாகிய தசக்கிரீவனைக்

கண்ணுற்றான். உடனே விரைவாக எழுந்து மருமகனை அணைத்து உபசரித்துப் பூசித்து விதிப்படி * ஆதித்தியம் செய்து, ஓர் ஆசனத்தில் அமர்த்தினான். பிரமமுற்ற மனத்தினனாய் ஆசனத் தமர்ந்திருந்த இராக்ஷசநிருபனைப் பார்த்து மாரீசன் கூறுகிறான்:—

"ஓ இராவணா! நீர் ஒரே இரதத்துடன் தனியாக இங்குவரவேண்டிய காரியம் என்ன? ஏதோ மனதில் ஒரு காரியத்தை நினைத்துக் கொண்டு அதில் அதிகக் கவலையுள்ளவன் போல் காணப்படுகிறாய். இரகசியம் இல்லாவிடில் எனக்குச் சொல்லவேண்டும் நான் உமக்குப் பிரியமான காரியத்தைச் செய்கிறேன். மேலும், ஓ இராஜ சிரேஷ்டனே! நீர் சொல்வது நியாயமாயும், என்னைத் தோஷம் அணுகாமல் இருக்கும்படிக்குள்ள காரியமாயும் இருக்கவேண்டும்" என்று கூறினான்.

இராவணன், தன்னிடம் விஸ்வாசத்துடன் கூறிய மாரீசன் வார்த்தைகளைக் கேட்டு மனந்தெளிந்து கூறுகிறான்.

"ஓ மாதுல! அயோத்திமா நகரில் பிரஸித்தியுடன் அரசாட்சி புரிந்து வரும் தசரதன் என்ற நாமம் வகித்த ஓர் பிரபல அரசனிருந்தான். அவ்வரசனுக்கு அதிபராக்கிரமமும், சத்தியமுமுள்ள மூத்த குமாரன் ஒருவன் இராமன் என்னும் நாம முடையவன். வனத்தில் வசிக்கும் ரிஷிகளிடத்தில் பிரீதியுள்ளவன். தவத்தில் இச்சையுள்ளவன். இக்குணங்கள் பொருந்திய தன் மூத்தகுமாரனாகிய இராமனை அவன் மனைவி ஸீதையுடனும் அவன் பிராதா இலக்ஷ்மணனுடனும், வனவாசம் செய்யும்படி, தசரத மஹாராஜன் காட்டுக்கனுப்பினான். அந்த இராமன் பயங்கரமான ஆரண்யத்தில் கோதாவரி நதிக்கரையிலுள்ள பஞ்சவடி தீரத்திலிருக்கும் ஆச்சிரமத்தில் பத்தினி ஸீதையுடனும், தம்பி இலக்ஷ்மணனுடனும் வசித்து வருகிறான்

அந்த இரகுவீரன் எனக்குச் சகோதரியும் உமக்கு மருமகளும் யாதொரு தோஷமுமில்லாதவளுமாகிய சூர்ப்பனகையின் மூக்கையும் செவிகளையும் சேதித்ததுமன்றி, அவளிடம் பட்சம் காட்டிவந்த மிகுந்த பராக்கிரமமுள்ளவர்களும், அபராத மில்லாதவர்களுமாகிய, கரதூஷணாதிகளையும் அளவற்ற இராக்ஷசர்களையும் நிர்நிமித்தமாக வதை செய்தும், இன்னும் அந்த ஆரண்யத்தில் பயமன்னியி லிருந்து வருகிறான். அந்த இராமன் பத்தினியான ஸீதை யென்பவள்,

* ஆதத்தியம் = அதிதி பூசைக்குரிய பொருள் உபசாரணை.

காதளவும் நீண்ட கண்களை யுடையவள், உலகத்திலுள்ளவர்களை மோகிக்கச் செய்யும் அழகுவாய்ந்தவள். ஆகையால் பழிக்குப் பழியாக, இராமன் மனந்திடுக்கிட அவன் பத்தினியாகிய ஸீதையை அபகரிக்க எண்ணங்கொண் டிருக்கிறேன். அதற்கு உம்முடைய ஒத்தாசையைக் கொண்டு, ஸ்ரீராமனைப் பர்ணசாலையைவிட்டு விலகச் செய்து அவனுக்குப் பிராணனைவிட அன்புள்ள ஸீதையை அவள் தனித்திருக்கும் சமயம் பார்த்துக்கொண்டு வரவேணும், நீர் மாயா வல்லபத்தினால் ஓர் பொன்மா னுருவமாகி ஜானகியை மோகிக்கச் செய்து, அவள் *அருத்தி நிவர்த்தியின் பொருட்டு, இராமன் இலக்ஷ்மணன் இவர்க ளிருவரையும் ஆச்சிரமத்தைவிட்டு அப்புறப்படுத்த வேண்டும். அச்சமயம் ஸீதா தேவியை நான் அபகரித்து வருகிறேன். தற்காலம் இந்தஉபகாரம் எனக்கு நீர் செய்யவேண்டும்" என்றான்.

இவ்வாறு கூறிய இலங்கேஸ்வரனைப் பார்த்து மாரீசன் ஆச்சரியமடைந்து, "ஓ இராவண! அடியோடு உன்குலத்தை நாசமடையச் செய்யும் இந்த வார்த்தையைக் கூறினவன் எவன்? எவனோ உன்னுடைய நாசத்தை யெதிர் பார்த்துக்கொண் டிருக்கிறான். அவனே உன் குலசத்துரு. முதலில் அவனை வதம் செய்யவேண்டும். ஓ நிசாசரபதீ! ஸ்ரீராமனுடைய வீரத்தை நினைத்தால் இன்னமும் பயமடைகிறேன். கௌசல்யையின் குமாரனாகிய அவன், இளமைப் பருவத்திலே கௌசிகன் யாகத்தைக் காக்கவந்தான். அப்போது சுமாலிக்கு ஒத்தாசையாக நானும் போயிருந்தேன். என்னை ஒரே பாணத்தால் நூறு யோஜனைக்கப்பாலிருக்கும் சமுத்திரத்தில் தள்ளினான். அது முதல் தளர்ச்சியடைந்து அச்சங்கடத்தையே நினைந்து நினைந்து பார்த்தவிட மெல்லாம் இராமனைக் பார்க்கிறேன்.

பின்பு ராகவன், ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனுந் தண்டகாரண்யத்தில் வசிக்கும் போதும், முன்னடந்த விரோதத்தை மனதில் எண்ணி தீக்ஷ்ணமான கொம்புடைய மிருகத்தின் உருவமெடுத்துக் கொண்டு, என்னைப் போன்ற சிலர் எனக்குப் பின்னுதவியாகச் சூழ்ந்துவர அவனிடம் சென்றேன். அப்போதும் என்னைப் பார்த்த காகுஸ்தன், என்னைக் கொல்லுவதற்கு எண்ணங்கொள்ளாமல் ஓர் பாணத்தை யென்மீதிற் பிரயோகித்தான். அந்த அஸ்திரத்தி

* அருத்தி = ஆசை.

ஞால் மனங்களித்து, தப்பித்துக் கொண்டு, ஓடோடி வந்து இந்த சமுத்திரத்தில் விழுந்தேன், அதுமுதல் இந்த ஸ்தானத்தை யடைந்திருக்கிறேன்.

இந்த ஆச்சிரமத்தி லிருந்து கொண்டு சுகத்தில் வெறுப்புற்றவன்போல் இராமனையே தியானம் செய்துகொண் டிருக்கிறேன். இராஜா, ரத்தினம், ஸ்திரீ, ரதம் இவை முதலிய பதங்கள் என் செவிக்கெட்டினால் மிகுந்த பயமுண்டாகிறது. இரகுவீரன் வந்தது போல் நினைத்து வெளிக்காரியங்கள் யாவற்றையும் விட்டு விடுகிறேன். எப்பொழுதும் இராமனை நினைத்துக்கொண்டு நித்திரை செய்கிறேன். சொப்பனத்தில் அவனைக் கண்டு விழித்து நித்திரையை யொழித்திருக்கிறேன். ஆகையால் நீர் இராகவன்மீது வைத்த ஆத்திரத்தை முற்றிலும் விட்டொழித்து, இருப்பிடம் போய்ச் சேரும். முன்னால் வெகுகாலங் கஷ்டப்பட்டு தற்காலம் ஒன்று சேர்ந்து சுகஜீவியாயிருக்கும் அரக்கர் கூட்டத்தைப் பரிபாலிக்கும் நீர் மரணமடைந்தால், அவர்கள் யாவரும் மாண்டுபோவார்கள். உமக்கு நன்மையை நாடும் என் மொழியை நன்று கிரகிக்கவேண்டும்.

பரமாத்மாவாகிய ஸ்ரீராமனிடம் வைத்த கெட்ட எண்ணத்தை முழுதிலும் விட்டுவிடும். சிறந்த பக்தியுடனே அவரைப் பஜியும், இரகுநந்தனன் பரமகருணையுள்ளவர், அவர் வரலாறு யாவற்றும் ஓர் முனிவர்பால் தெரிந்துகொண்டேன், அதைச் சற்று கவனத்துடன் கேளும் கூறுகிறேன்:—

சிருஷ்டி கர்த்தனாகிய பிரமதேவன் சென்ற கிருதயுகத்தில் தனக்குத் தந்தையும் சர்வலோக நாயகனுமாகிய மஹாவிஷ்ணுவிடத்திற் சென்று நமஸ்கரித்து ஸ்தோத்திரம் புரிந்து, ஓ பரந்தாம! பூவுலகத்திலே அரக்கர் குலத்தில், பத்து சிரசும், இருபது கரங்களும், அந்தகாரமான சரீரத்துடனும் தோன்றி, இராவணன் என்னும் நாமம் வகித்து, சாட்சாத் பரமசிவனிடத்துத் தவம் புரிந்து தேவர்களாலும், மற்ற யாவர்களாலும் ஜெயிக்கக் கூடாத வரத்தைப் பெற்று, திரிலோகத்தையும் ஜெயித்து, தேவலோகததிலுள்ள இந்திரன் முதலிய யாவர்களையும், பிரமலோகத்திலுள்ள என்னையும், பூலோகத்திலுள்ள சகல ரிஷிகள் முனிவர்களையும் துக்க சாகரத்தில் மூழ்கும்படி செய்து இராக்ஷசர்களுக் கெல்லாந் தலைவனாய் இலங்காபுரியில் திக்குப் பாலர்களெல்லாம் தன்னை வணங்கும்படியாக அர

சாக்ஷி செய்து வருகிறான். அவனும், அவனைச் சார்ந்த அரக்கர் கூட்டங்களும், செய்துவரும் கொடிய செய்கைகளுக்குக் கணக்கில்லை. ஆகையினால் அக்கொடியோராகிய தசக்கிரீவன் முதலான இராக்ஷசர்களை வதம் செய்ய வேண்டியது தங்கள் கடமையாயிருக்கிறது. அவ்விராவணன் வரம் பெறுங்காலத்து மானிடர்களை அற்பமாக நினைத்து அவர்களொழிய மற்ற யாவராலும் அழிபடக்கூடாத வரத்தைப் பெற்றிருக்கிறான். ஆனதுபற்றி இப்போது தாங்கள் தயவு செய்து பூலோகத்தில் அயோத்திமா நகரத்தை யாண்டு வரும் தசரத சக்கரவர்த்தியின் திருமகனாக உற்பவங் கொண்டு, ஸ்ரீராமன் என்னும் நாமம் பூண்டு சாதுக்களுக்குச் சத்துருவாகிய அந்த தசக்கிரீவன் முதலிய இராக்ஷசர்களை நாசம் செய்யவேண்டு மென்று வணக்கமாய்க் கேட்டுக்கொண்டார் அதற்கிணங்கி நாராயணன் பூவுலகின்கண், ஸ்ரீராமனாக வந்தவதரித்திருக்கிறார் என்றும் அரக்கர் குலமே நாசம் அடையப்போகிற தென்றும் ஓர் முனிவர் கூறியிருக்கின்றனர். அதற்கேற்பத் தாம் கொண்ட கோலத்தை யுற்று நோக்கில் காலம் குறுகிவிட்ட தென்று யூகிக்க வேண்டியதா யிருக்கிறது.

ஆயினும் ஓ இராவணா! இப்போது தண்ட காரண்யத்துக்கு வந்திருக்கும், கோதண்ட இராமன், மானிடனல்ல, நாராயணன், அவர் அழிவற்றவர், மாயா மானிடவடிவங் கொண்டவர், பூமி பாரத்தைக் குறைக்க வந்தவர். ஆகையால் அவர் துவேஷத்தை நாம் தேடிக் கொள்வது ஸமயோஜித காரியமல்ல நீர் சுகமாக ஜீவிக்க வேண்டின் பேசாது உம்முடைய ஊருக்குச் செல்லும் என்று மாரீசன் கூறினான்.

இவ்வாறு மாரீசன் கூறியதைக் கேட்ட இராவணன், "ஓ மாரீச! பிரத்யட்ச இராமன் பிரமதேவரால் பிரார்த்தனை செய்யப்பட்ட பரமாத்மாவே, மானிடனாக அவதாரஞ்செய்து என்னை வதம் செய்ய வந்தவராகில், வந்த காரியத்தை அவர் செய்துமுடிப்பார். ஏனெனில், ஈஸ்வரன் சத்தியமான சங்கற்பமுடையவர், அது நடந்தே தீரும், அதிருக்கட்டும்.

இப்போது நான் முன் சொல்லியபடி முயற்சித்து, ஸீதையை இராமனிடமிருந்து கொண்டுவருகிறேன். மகா வீரனாகிய நான், தசரத ராமனாகிய அரியிடம் யுத்தம் செய்து ரணகளத்தில் மாள்வேனாகில், பரமபதம் செல்லுவேன், அல்லது இராமனைக் கொன்று

ஸீதையைப் பெறுவேன், ஆகையால் மஹாபாக்கியம் செய்த ஏ மாரீசா! நீ விசித்திரமான ஓர் மான்வேடம் எடுத்துப்போய், பஞ்ச வடியிலுள்ள இராமனையும், இலக்ஷ்மணனையும் ஆச்சிரமத்தைவிட்டு வெகு தூரம் அழைத்து செல்லும். நான் அக்காலம் ஸீதையை யெடுத்து வருகிறேன். நீர் முன்போலவே சுகமாயிருக்கலாம். காலதாமசம் செய்யவேண்டாம், எழுந்திரும், இதற்கிசையாவிடில் இப்பொழுதே யும்மை 'சிக்கத்திக் கிரையாக்குவேன், சந்தேகமில்லை" என்றான்.

இதைக்கேட்ட மாரீசன் தனக்குள் ஆலோசிக்கிறான். தற்காலம் இந்த துஷ்டபுத்தி யுடைய இராவணன் கத்திக்கிரையாகி மரணமடைந்தால், நமக்கு நரகம் கிடைப்பது நிச்சயம், மானுருவெடுத்துக் கானகம் சென்று, ஸ்ரீராமனால் விடப்பட்ட பாணம் வந்து நம்மைக் கொன்றால், சம்சாரக் கடலில் நின்று கரையேறி மோக்ஷ வீட்டடைவது சத்தியம். ஆனதால் இராமனிடம் செல்வதே தகுதியென்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு விரைவாக எழுந்து நின்று, இராவணனைப் பார்த்து, "ஓ பிரபுவே! ஏ இராஜனே!! உம்முடைய ஆஞ்ஞைப்படி நான் செய்கிறேன்" என்றுரைத்து, ஓர் தேரின்மீதேறிப் பஞ்சவடியிலுள்ள ஸ்ரீராமன் ஆச்சிரமம் சென்றான்.

அவ்விடம் சென்று, சுத்தமான சுவர்ணம் போன்ற காந்தியையும், அழகான வெள்ளிமயமுள்ள புள்ளிகளையும், இரத்னமயமான கொம்புகளையும் மணிமயமான குளம்புகளையும், இந்திர நீலம்போன்ற கண்களையும், மின்னல் போன்ற ஒளியையும், மிகச் சுந்தரமான முகத்தையும் பார்த்தவர்கள் மனதை யபகரிக்கத்தக்க யௌவனமும் ரூபத்தையு முடைய ஓர் மானுருவம் எடுத்து ஸீதையின் கண்ணிற்படும்படி, கணநேரம் ஓடுவான், கணப்பொழுது நிற்பான், ஸீதையருகில் வருவான், திரும்பிப் பயத்துடன் ஓடுவான். மாயாமிருக வேடம் பூண்ட மாரீசன் என்ற துஷ்டன் இவ்வாறு ஸீதை மோகப்படும்படி அந்தவனத்தில் சஞ்சாரம் செய்தான்.

---

# ஏழாவது சருக்கம்.

---

பஞ்சவடி தீரத்தில் மாரீசன் மாயமானுகி வசித்து வர, ஆச்சிரமத்தில் ஸீதையுடனும், இலக்ஷ்மணனுடனும் ஸ்ரீராமன் வசித்து வரும் போது, இராவணனுடைய பிரபாவம் அனைத்தையு மறிந்து, ஸீதையைத் தனிமையில் பார்த்து கூறுகிறுர். "ஓ ஜானகி! என் வார்த்தையைக்கேள். இராவணன் துறவிவேடம் பூண்டு உன்னருகில் வரப் போகிறுன். நீ உன்னுடைய சாயையை (நிழலை) ஆச்சிரமத்தில் வைத்து விட்டு அக்கினியில் பிரவேசம் செய். என்னுத்தரவுப்படி யாருமறியாத உருவத்துடன் ஓர் வருஷம் வரையில் அக்கினியிலேயே இரு. இராவணவதமான பிறகு முன் போல் என்னை வந்தடையலாம்" என்று உத்தரவளித்தார். ஸீதாதேவி இராமச்சந்திரன் உத்தரவுப்படி, தன் சாயையிலமைந்த மாயா ஸீதையை ஆச்சிரமத்தில் வைத்து விட்டு, தான் அக்கினியில் மறைந்திருந்தாள். ஆச்சிரமத்திலிருந்த மாயா ஸீதை வனத்தில் வந்த மாயமானைப் பார்த்து அதனிடத்தில் பிரியம்வைத்து மந்தகாசத்துடன் இராமனிடம் வந்து வணங்கி, "ஓ இராம! விசித்திரமான வெள்ளைப் புள்ளிகளால் நிறைந்து, சுவர்ணச் சாயலோடு கூடிய சரீரம் வாய்ந்து, எங்கும் பயமில்லாமல் விளையாடித்திரியும் இந்த மானை நான் விளையாடுவதற்காகப் பிடித்துத் தர வேண்டு மென்று கெஞ்சினுள். இதைச் செவியுற்ற, இரகு நந்தனன் ஸீதையின் வேண்டுகோளுக் கிணங்கி, அவ்விதமே பிடித்துத் தருகிறேன் என்று கூறி, வில்லை யெடுத்துக் கொண்டு செல்லும் போது, இலக்ஷ்மணனைப் பார்த்து "ஓ வீரசிரேஷ்டனே! என் பிராணனைவிடப் பிரீதியுடைய ஸீதையை மிகு பிரயத்தனத்துடன் காப்பாற்று, இவ்வாரண்யத்தில் பயங்கரமான ரூபமுடைய மாயாவிகளாகிய இராக்ஷசர்கள் அநேகருண்டு. ஆகையால் நீ யிங்கு சாவதானமாகவே யிரு" என்று சொன்னுர்.

அப்போது இலக்ஷ்மணர் இராமனைப் பார்த்து "ஓ இராகவ! இது மானல்ல, இம்மாதிரியான மிருகம் ஏது? மாரீசனே மாயமானுகி வந்திருக்கிறுன், சந்தேகமே யில்லை" என்றுர்.

இராகவர், இவன் மாரீசனுகிற் கொல்லுகிறேன், ஆட்சேப மில்லை. மிருகமாகவே யிருந்தால் ஸீதை விளையாடுவதற்குக்கொண்டு வருகிறேன் என்றுரைத்து மானை நோக்கிச் சென்றார்.

(உலகங்களை மோகிக்கச் செய்வதும் உலகவடிவமானதும் ஆகிய மாயை யாசிரயித்திருக்கிற பகவான் எவனே அப்பகவான், விகார மில்லாதவன், சித் சொரூபன், பூரணன், அவனே ஸ்ரீராமனுக வந்த வனுயினும், ஸீதையின் விருப்பத்தைப் பூர்த்திபண்ண நினைத்து, மானை நோக்கிச் சென்றதும், ஆங்கவனை மடித்து முக்தி யளித்ததும், பகவான் பக்தர்களிடம் தயையுள்ளவன் என்ற விசிஷ்ட வாக்கியத்தைச் சத்தியமாக்குவதற் கென்றே புலப்படுகிறது. எப்படியென்றால், ஆத்ம ஸ்வரூபம் அறிந்தவனும், பரமாத்மாவுமாகிய இராமனுக்கு, ஸ்திரீயாலாவது, மிருகத்தாலாவது ஆகவேண்டிய காரியம் என்ன? ஒன்றுமில்லை, மற்றெதற் கெனில், (1) தனக்கு மித்துருவாகிய பத்தினி ஸீதை, தன்னைக் கொழுநனுகவும் தெய்வமாகவும் பாவித்துப் பூசித்ததற்காக அவளிஷ்டப்படி மானைப் பின்தொடர்ந்தது, (2) சத்துருவாகிய மாரீசன் அந்தரங்கத்தில் தன்னுமத்தை ஸ்மரித்ததற்காக அவனைச் சம்கரித்து மோக்ஷமடையச் செய்தது, இவ்விரண்டு காரியங்களால் பகவான் பக்தர்களிடம் தயையுள்ளவன் என்பது விளங்குகிறது.)

இராகவன் மானைச் சமீபித்ததும், அந்த மாயமானுன மாரீசன், ஒரு சமயம் சமீபத்தில் காணப்பட்டான், க்ஷணநேரம் ஓடினுன், கணநேரம் மறைந்தான், பிறகு வெகு தூரத்தில் காணப்பட்டான். இவ்வாறு ஸ்ரீராமனை வெகுதூரம் இழுத்துச் சென்றுன். பிறகு இரகு வீரர் அவனை இராக்ஷசன் என்றே வியக்தமாக அறிந்து பாணத்தை யெடுத்து மிருக ரூபமுள்ள மாரீசனை அடித்தார். அடிபட்டதும், அவன் சுயரூபத்தோடு இரத்தத்தால் சிவந்த முகத்துடன் 'ஓ மஹாநுபாவரே ஓ இலக்ஷ்மணு ஹா நான் ஹதமாகிவிட்டேன், என்னை விரைவாக வந்து காக்க வேண்டும் "என்று இராமன் கூவியது போற் கூவி, பூமியில் விழுந்தான்.

இராமனுடைய நாமத்தின் மகிமையை அறியாதவனுயினுங் கூட மரணகாலத்தில் ஸ்மரணம் செய்தால், இராமனுடன் சமமான தன்மையை யடைவான். இராமனை நேரில் சேவித்தும், அவன் கையாலேயே அடிபட்டவனைப் பற்றிக் கேட்க வேண்டுமா

பூமியில் விழுந்த அந்த மாரீசனுடைய சரீரத்திலிருந்து ஓர் தேஜஸ் உண்டாயிற்று. தேவர் முதல்யாவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த தேஜஸ் ஸ்ரீராமனிடமே வந்தடைந்தது. அப்பொழுது தேவர்கள் ஆச்சரியமடைந்தார்கள் முனிவர்களை யிம்சித்த இந்தப் பாதகன் எந்தக்காரியத்தைச் செய்து இந்த ஸ்தானத்தை யடைந்தான். இது ராகவனுடைய மகிமையே யல்லாது வேறல்ல. அதற்குஓர் காரணமு மிருக்கிறது. அதாவது முந்தித் தாடகை வதத்தின்போது இராமபாணத்தால் அடிபட்டு, பயத்தால் வீடு பொருள் யாவற்றையும் விட்டு இருதயத்தில் எப்போதும் இராமனுருத்தையே தியானம் செய்து, கல்மக்ஷம் யாவற்றையும் போக்கிக் கொண்டதே யிதற்குக் காரணம். மேலும் இவன் மானாக வாராதபட்சத்தில் நம் காரியம் ஆகப்போகிற தில்லை. நமக்கு முதவிபுரிபவனுமன். ஆகையால் கடைசியிலும் இராமப் பிரபுவால் வதையடைந்து அவனையே யடைந்தான். அந்தணனாயினும், இராக்ஷசனாயினும், பாபம் செய்தவனாயினும், புண்ணியம் செய்தவனாயினும் சரீரத்தை விடும்போது எவன் இராமனை ஸ்மரணம் செய்கிறானோ அவன் நற்கதியை யடைவான். இவ்வாறு ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு தேவர்கள் சொர்க்கம் சென்றார்கள்.

இரகு வீரன், தான் நாடிவந்த மான் இராக்ஷசனாகித் தன்னால் கொல்லப்பட்ட பிறகு. இவ்விராக்ஷசன், மரணம் அடையும் போது ஓ இலக்ஷ்மணா வென்று நான் கூப்பிட்டது போல் கூவி உயிர்விட்டானே. அந்த ஆபத்து வார்த்தையானதைக் கேட்ட ஸீதை யெவ்விதமாயினளோ வென்று மனதிற் கவலைகொண்டு, நாமிவ்வளவு தூரம் வந்து விட்டோமே என்ன செய்கிறது என்று ஆலோசித்து உடனே அவ்விடம் விட்டுத் திரும்பினார். இங்கிவ்வாறிருக்க,

ஆச்சிரமத்திலிருந்த ஸீதை, மாரீசன் கூவிய ஆபத்து வார்த்தையைக்கேட்டுப் பயமடைந்து துக்கத்தால் தளர்ந்து இலக்ஷ்மணரைப் பார்த்து நீர் வேகமாகச் செல்லவேணும், உம்முடைய பிராதாவாகிய இராமர் இராக்ஷசனால் துன்பமுறுகிறார், ஓ இலக்ஷ்மணா! வென்று ஓலமிட்ட சப்தம் உம்முடைய காதிற்படவில்லையா வென்று கேட்டாள்.

இதைக்கேட்ட இலக்ஷ்மணர் ஸீதாதேவியைப் பார்த்து" அம்மா! இது இராமருடைய வாக்கியமல்ல. அம்மானான மாரீசன் மரண

மடையும்போது இந்த வார்த்தையைச் சொல்லி யிருக்கிறன். இராக வர் கோபங்கொண்டால் ஓர் கணப்பொழுதில் திரிலோகங்களையும் நாசம் செய்ய வல்லவர். தேவர்களால் பூஜிக்கப்படும் ஸ்ரீராமர் தீன மான சொல்லைப் பேசுவாரா" என்றார்.

இச்சொல் செவியிற் பட்டதும், ஸீதை தண்ணீர் வடியுங் கண்ணினளாய் இலக்ஷ்மணனைப் பார்த்துக் கோபங்கொண்டு, "ஓ இலக்ஷ்மண! நீ பிராதாவாகிய இராமருக்கு ஆபத்துண்டாக விரும்புகிறாய், பரதன் இரகுவீரருடைய நாசத்தை விரும்பி யுன்னை யனுப்பினனே, இராமர் நாசமடைந்தபின், என்னை யழைத்துச் செல்ல வந்தவனே? என்னை நீ யடையமாட்டாய், பார்க்கலாம், இப்போது நான் பிராணனை விடுகிறேன். இராமர் உன்னைத் தன் பத்தினியை அபகரிக்க முயற்சி யுடையவன் என்று தெரிந்துகொள்ளவில்லை. நான் இராமரைத் தவிர உன்னையாவது பரதனையாவது தொடமாட்டேன் என்றிவ் விதமுரைத்துக் கைகளால் தலையில் அடித்துக் கொண்டு கதறினள்.

இக்கொடிய வார்த்தைகளைக் கேட்டுச் சகியாத இலக்ஷ்மணன், இராம! இராம!! என்று கூறித் தன்னிரு கரங்களாற் செவிகளைப் பொத்திக் கொண்டு மிகவுந் துக்கமடைந்து ஸீதையிருந்த திசையைப்பார்த்து" ஏ மாது சிரோமணி! நீர் கோபாவேசங்கொண்டு அடாத வார்த்தைகளைப் பேசுவதுதகாது. அதன் பலன் பின்னால் தெரியும்" என்று கூறி ஜனககுமாரியை வன தேவதைகளிடம் ஒப்பு வித்துத் தான் துக்கத்தால் மிக்கவருத்த முற்றுத் தமயனாகிய கமலக் கண்ணனிடம் சென்றார்.

இலக்ஷ்மணர் ஸ்ரீராமனிடம் சென்றபின், ஸீதை தான் தனியாக ஆச்சிரமத்திலிருந்து வந்தாள்.

இராவணன் இது தான் சமய மெனக் கருதி, ஓர் துறவி வேடம் பூண்டு, பிரகாசிக்கின்ற தண்ட கமண்டல தாரியாய் ஸீதை பக்கம் வந்தான். ஆச்சிரமத்துக் கெழுந்தருளிய இராவண சன்னியாசியைச் ஸீதை பார்த்து ஓர் முனிவார் என்றெண்ணி ஓடிவந்து நமஸ்காரஞ் செய்து பக்தியுடன் பூஜித்து, தங்கள் வரவு நல்வரவாகுக எனக்கூறி, கந்தமூல பலாதிகளைக் கொணர்ந்து வைத்து "ஏ முனிவர்காள்! புசிக்கலாம், சிரமபரிகாரம் செய்து கொள்ளலாம், எனது பர்த்தா வெளியிலிருந்து வந்துவிடுவார், உமக்கு வேண்டியதைச் செய்வார். இஷ்டமிருந்தால் இருக்கலாம்" என்று வணக்கமாய்க் கூறினள்.

சன்னியாசி, ஸீதையைப் பார்த்து செந்தாமரை மலர்போன்ற கண்ணுடையவளே நீ யார்? உன் கணவன் யார்? தோஷமில்லாதவளே இராக்ஷசர் சூழ்ந்த இந்த வனத்தில் ஏன் வாசஞ்செய்கிறாய்? இவை யாவற்றையும் எனக்குத் தெரிவிக்கவேண்டும். உனக்கு மங்கள முண்டாகுகவென்று கேட்டான்.

ஸீதை, சன்னியாசியைப் பார்த்து, "ஓ ஸ்வாமின்! அயோத்தி நாட்டில் பெருந்தன்மையும், அழகும் வாய்ந்து, நீதியுடன் அரசாட்சி புரிந்துவரும் தசரத சக்கரவர்த்தியின் மூத்த குமாரனாகிய ஸ்ரீராமரின் பத்தினி யான், என்பெயர் ஸீதை, ஜனகமகாராஜன் புத்திரி. எனது பர்த்தாவாகிய இரகுவீரரின் இளைய பிராதா இலக்ஷ்மணர். எனது நாயகராகிய இராமர், தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி பதினன்கு வருஷம் வனவாசம் செய்யும்படி தனக்கிட்ட கட்டளையை வகித்து, பிதுர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு, தம்பி இலக்ஷ்மணனுடனும், பத்தினி யென்னுடனும் தண்டகாரண்யம் வந்து இந்த ஆச்சிரமத்தில் வாசஞ்செய்து வருகிறார்" என்று கூறி, தாங்கள் இன்னாரென்று தெரிவிக்கவேண்டு மென்றும் கேட்டுக்கொண்டாள்.

சன்னியாசி ஸீதையை உற்று நோக்கி "பெண்ணே, நான் புலஸ்த்ய புத்திரனாகிய விச்ரவஸ் என்பவரின் புத்திரன், என் பெயர் இராவணன், இராக்ஷசர்களுக்கு அரசன், திரிலோகாதிபத்திய முடையவன். நான் உன்னிடம் எனக்குண்டாகிய காமத்தால் தாபமடைந்து உன்னையழைத்துச் செல்ல இங்கு வந்தேன். முனிவேடம் பூண்ட உன் கணவன் இராமனால் உனக்கென்ன பிரயோஜனம். நீ என்னுடன் வந்து சேர். சகல போகங்களையும் அநுபவிக்கலாம். வனத்திலுண்டாகும் துக்கத்தை நிவர்த்திக்கலாம்" என்று மிகவும் விநயத்துடன் கேட்டுக் கொண்டான்.

இந்த அகங்கார வார்த்தைகளைக் கேட்ட மாயா ஸீதை, பயந்து அந்த அரக்கனை நோக்கி "ஏ துஷ்டா! நீ விஷ்ணுமனைவியாகிய இலக்ஷ்மியை நாய் எடுக்க எண்ணங் கொண்டது போல் நச்சி அபகரிக்கவந்தாய், இராம இலக்ஷ்மணுள் இருவரும் வந்தால் அவர்கள் பாணங்களால் நாசமடைவாய் ஓர் கணப்பொழுது இங்கேயே யிரு" என்று கடிந்து சொன்னாள்.

வேகத்துடன் சொன்ன ஸீதையின் வார்த்தையைக் கேட்ட இராவணன் கோபம் மீறித் தன் சுவரூபத்தைக் காண்பித்தான்

பெருத்த பர்வதத்துக் கொத்த தேகமும், பத்துமுகமும், இருபது கரங்களும், கார்மேகம் போன்ற காந்தியுமுடைய இராவணனைக் கண்டு காத்திருந்த வனதேவதைகளும் நடுங்கினார்கள். ஸீதையும் மூர்ச்சித்துப் பூமியில் விழுந்தாள். இராவணன் தன் நகங்களால் பூமியைக் கீண்டு மண்ணோடு ஸீதையை யெடுத்துத் தன் தேரின் மீது வைத்துக் கொண்டு ஆகாயம் மார்க்கமாகச் சென்றான்.

ஆகாயத்தில் செல்லும் ஸீதை ஓ இராமா! ஓ இலக்ஷ்மணா!! என்று கதறிக்கொண்டே பயத்தால் வருத்தமடைந்து இராமன் சென்ற வனத்தையே பார்த்துக்கொண்டு சென்றாள்.

அப்பொழுது பக்ஷி அரசனாகிய ஜடாயு ஸீதையின் தீனமான சப்தத்தைக்கேட்டு, ஆலால விருட்சத்தின் நுனியான பிரதேசத்திலிருந்து எழுந்து சென்று, நில்லு, நில்லு, மந்திர பூர்வமாகச் செய்யும் யாகத்திலுண்டான அவிர்ப்பாகத்தை நாயானது இச்சித்துக் கவ்வினதுபோல லோகநாதனாகிய இராகவனுடைய மனைவியைச் சூன்யமான ஆச்சிரமத்திலிருந்து, அபகரித்தா செல்லுகிறாய்? என்றுரைத்து, கூர்மையான மூக்கமைந்த தன் முகத்தால், அந்தரத்தில் செல்லும் அவ்வரக்கன் ரதத்தைப் பொடிப் பொடியாகச் செய்து, தன்னிரண்டு பாதங்களால் அவன் வில்லை முறித்து, இருபது கரங்களையும் சேதித்தார்.

பிறகு கொடிய துஷ்டனாகிய இராவணன் கோபங்கொண்டு ஜடாயுவினால் அழிக்கப்பட்ட தேரில் ஸீதையிருக்கக் கீழே குதித்து வேறு கரங்கள் அமையப்பெற்று, கத்தியைக் கையிலெடுத்து புத்திசாலியான ஜடாயுவின் இறக்கைகளைக் கொய்தான், பக்ஷிராஜன் மூர்ச்சாக்கிராந்தனாகிப் பூமியில் விழுந்தார்.

இராவணன் மறுபடியும் ஸீதையை வேறு ரதத்தின்மீது வைத்துக்கொண்டு ஆகாயம் மார்க்கமாகச் சென்றான்.

ஸீதை, இராம இராம என்று கதறினாள். இரக்ஷிப்பவர்கள் யாரையும் அடையவில்லை. ஓ இராம! ஓ ஜகன்னாத. நீர் என்னைப் பார்க்கவில்லையா! ஓ இராகவ! இராக்ஷசனால் அபகரிக்கப் பட்டு துக்கமடைந்த, உம்மனைவியாகிய என்னை விடுவிக்க வேண்டும். ஓ இலக்ஷ்மணா! ஓ மஹா பாக்கியவானே. உம்மிடம் அபராதஞ் செய்த என்னைக் காக்கவேண்டும். ஏ கொழுந்தனாகியவரே! உம்மை

வார்த்தையாகிய பாணத்தால் அடித்து விட்டேன். அதை நீர் மன்னிக்க வேண்டும். என்று இவ்வாறு கதறிக் கொண்டே சென்றாள்.

இராவணன் இவ்வாறு கதறும் ஸீதையை யெடுத்துக் கொண்டு, இராமர் வந்து விடுவாரோ வென்ற சந்தேகத்தால், விரைவாக வாயு வேகமாய்ச் சென்றான்.

வாடின தாமரை மலர் போன்ற முகமுடைய ஜானகி ஆகாய மார்க்கமாய்ப் போகும்போது ஓர் மலையின் சிகரத்தில் கீழ்நோக்கிய முகத்துடன் ஐந்து வானரங்களைக் கண்டாள், அவர்களைக் கண்டதும், தன் உத்தரீயத்தின் முந்தியில், தன்னுபரணங்களைக் கழற்றி ஓர் முடிச்சுக்கட்டி, இராகவனுக்கு இவர்கள் கொடுக்கட்டு மென்று நினைத்து அந்த மலையிலுள்ள அவர்கள் முன் போட்டாள்.

பிறகு தசக்கிரீவன், கடலைக் கடந்து, இலங்கை சென்று இரகசியமாக அசோகவனத்திற் கொண்டு போய் ஸீதையை வைத்து, சில இராக்ஷச ஸ்திரீகளைக் காவலுக்கு நியமித்து, தாயினும் அன்புடையவனாய்க் காப்பாற்றி வந்தான்.

ஸீதை அசோகவனத்தில் மிகுந்த இளைப்பும், தீனத்தன்மையும், அலங்காரமின்மையும், துக்கத்தால் உலர்ந்த முகமும், அதிகத் தளர்ச்சியும் உள்ளவளா யிருந்தபோதிலும், சதா இராமஸ்மரணையே பண்ணிக்கொண்டு இராக்ஷச ஸ்திரீகள் மத்தியில் வாசஞ்செய்து கொண்டிருந்தாள்.

## எட்டாவது சருக்கம்.

அசோக வனத்தில் ஸீதை யிவ்வாறிருக்க, தண்டகாரண்யத்தில் மாரீசனைவதம் பண்ணி ஆச்சிரமத்தை நோக்கித் திரும்பி வரும் ஸ்ரீராம மூர்த்தி, வெகு தூரத்தில் வாடிய முகத்தினனும், தீனனுமாகிய இலக்ஷ்மணன் வருவதைக் கண்டார். கண்டவுடன் மஹாத்மாவாகிய ஸ்ரீரகுநாதன் தனக்குள் ஆலோசிக்க லாயினர்.

நான் ஆச்சிரமத்தில் மாயாஸீதை தயார் செய்து வைத்திருப்பதை இலக்ஷ்மணன் தெரிந்து கொள்ளவில்லை. நான் சமாசாரத்தை யறிந்தவனாயினும், இந்த அறுஜனை வஞ்சித்து, பிராகிருதன் போலத் துக்கமடைகிறேன், நான் வைராக்கியத்துடன் இருகத்தில் மௌன

மாக இருப்பேனேயானால், கோடிக்கணக்கான இராக்ஷசர்கள் மாண்டு போவதற்கு உபாயம் எவ்விதம் ஏற்படும்.

ஆகையால், நான் காமமுடையவன்போலத் துக்கத்தால் மிகுதியான தாபமடைவேனாகில், ஸீதையைத் தேடிக்கொண்டு, இராக்ஷசர்களுடைய இருப்பிடமாகிய இலங்கை செல்லக்கூடும். அங்கு இராவணனை அவன் கூட்டத்தாருடன் கொன்று, என்னால் அக்கினியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் ஸீதையை மறுபடியும் அடைந்து சாவதானமாகவே அயோத்திக் கேகுவேன்.

நான் பிரமதேவரால் பிரார்த்திக்கப்பட்டு மானிடபாவத்துடன் ஜனித்திருக்கிறேன். மானிடத் தன்மையுடன் கொஞ்சகாலம் வாசஞ் செய்கிறேன். பிறகு மாயா மானிடனாகிய என் சரித்திரத்தைக் கேட்பவர்களுக்கு சிரமமின்றியே மோக்ஷமுண்டாகட்டும் என்று தனக்குள் ஆலோசித்து நிச்சயம் செய்து கொண்டு நின்றார்.

அப்போது இலக்ஷ்மணர் அவரிடம் வந்து சாஷ்டாங்கமாகத் தண்டம் ஸமர்ப்பித்துக் கைகூப்பி நிற்க, அவரைப் பார்த்து, இரகுநாதன் "ஓ இலக்ஷ்மணா! என் பிரிய முள்ள ஸீதையைத் தனித்திருக்கச் செய்து, எதற்காக இவ்விடம் வந்தாய்? அல்லது ஜனக குமாரியாகிய ஸீதையை இராக்ஷசர்கள் பக்ஷித்து விட்டார்களா" என்று வினவினர்.

இவ்விதம் பரமாத்மா வாகிய இராமன் கூறிய வார்த்தையைக் கேட்ட இலக்ஷ்மணன் பக்தியுடனே அன்பு நீர் உகுக்கும் கண்ணினனாய், "ஓ அண்ணாவே! ஸீதா தேவியானவர், மாயமானாகிய மாரீசன் ஓ இலக்ஷ்மணா வென்று கூப்பிட்ட சப்தம் தங்களுடைய தொனியென நினைந்து பயமடைந்து, என்னை விரைவாகத் தங்களிடம் வரக் கட்டளை யிட்டார். அவருக்கு நான், இந்த வார்த்தை இராக்ஷசன் சொன்னது, இராமர் கூறியதல்ல, நீர் சலனமில்லாத மனதுடனிருமென்று சமாதானஞ் சொன்னேன்.

அப்போது பதிவிரதையாகிய அந்த ஜானகியம்மன்பேசிய வார்த்தைகளை யிப்போது தங்கள் சமுகத்தில் பேசுவது உசிதமல்ல, உடனே நான் செவிகளை மூடிக்கொண்டு இவ்விடம் வந்தேன்," என்று வணங்கிக் கூறினர்.

இதைக் கேட்ட இராகவன், "ஓ இலக்ஷ்மணா! ஆயினும் நீ செய்தது தகுதியல்ல, ஸ்திரி ஜாதியின் சொல்லைக் கேட்டு, மங்களமான

முகமுடைய ஸீதையைத் தியாகம் செய்தாய்; இதுகாறும் அரக்கர்கள் ஸீதையை விழுங்கியிருப்பார்கள். சந்தேகமில்லை" யென்று கூறி, விசாரமுடையவராகி இலக்ஷ்மணருடன் ஆச்சிரமத்துக்கு வந்தார். ஆச்சிரமத்தில் ஜனக நந்தினியைக் காணாது மிகவும் துக்கமடைந்து அடியில் கண்டவாறு பிரலாபிக்கலானார்:—

"ஆ பிரியமுள்ளவளே! நீ யெங்கு சென்றாய், இந்த ஆச்சிரமத்தில் இல்லையே. என்னை மோகப்படுத்துவதற்காக எங்கேயாவது மறைந்திருக்கிறாயா?" என்று கூறி, வனம் எங்கும் தேடியும் ஜானகியைப் பார்க்கவில்லை. அவர் சர்வஞ்ஞனாயினும், எல்லாவற்றையும் பார்க்கிறவ ராயினும், ஸீதையை யெங்கும் காணவில்லை. ஓ வனதேவதைகளே! என்னிஷ்ட தேவியாகிய ஸீதை,யெங்கே சொல்லுங்கள். ஓ மிருகங்களே, ஓ விருக்ஷங்களே! என் பிரியையைக் காண்பியுங்கள். ஆ ஸீதே சந்திரமுகி, ஆ பிராணநாயகி, ஆ கறுத்தகேசமுடையவளே, ஆ பத்மதளம் போன்ற நேத்திரமுடையவளே, ஆ முல்லை அரும்பையொத்த தந்தபந்தியுடையவளே, கோவைப் பழம் போன்ற அதரமுடையவளே, மின்னற் கொடிபோன்ற இடையுடையவளே, ஆ சுவர்ணவர்ணமான சரீரமுடையவளே, ஆ இரத்னமயமானகுண்டல மணிந்தவளே! என்று இவ்விதம் ரோதனம் செய்தார். அவர் ஆனந்த சொரூபராயினும், அந்த ஸீதையைப்பற்றித் துக்கித்தார். அவர் அசையாதவராயினும் எங்கும் ஓடினார். அவர் நிர்மலராயினும், அஹங்காரமில்லாதவராயினும், அகண்டாநந்த சொரூபமுடைய வராயினும், என்னுடைய மனைவி யென்றும், என்னுடைய ஸீதை யென்றும், மிகவுந் துக்கமடைந்து இவ்விதம் பிரலாபித்தார். இவ்வாறு இரகு சிரேஷ்டன், பற்றுதலற்றவராயினும், மாயையை அநுசரித்தே, மூடர்களுக்குப் பற்றுதலுடையவர் போல் தோன்றினார். தத்வம் அறிந்த ஞானிகளுக்கு இவ்வாறு தோன்றமாட்டார்.

இத்தகைய ஸ்ரீராமன், இலக்ஷ்மணனுடன் வனம் யாவுந் தேடி வருகையில், ஓரிடத்தில் சிதறுண்டு கிடக்குந்தேரையும், குடையையும், வில்லையும் கண்டார். உடனே அவர் சுமித்திரை புத்திரனைப் பார்த்து "ஓ சௌமித்திரியே! பார், யாரோ ஸீதையைக் கொண்டு போயிருக்கிறான், அவனை மற்றொருவன் ஜெயித்து, ஜனக குமாரியை அபகரித்திருக்கிறான்," என்று சொல்லிக்கொண்டு கொஞ்ச தூரம் சென்றார். அங்கு அவர் இரத்தத்தால் நனைந்த பர்வதம் போன்ற

சரீரத்துடன் ஒருவன் கிடக்கக்கண்டு, இலக்ஷ்மணனைப் பார்த்து, "ஓ தம்பி! இவன் மங்களரூபமுடைய ஜானகியை விழுங்கிவிட்டு, யாருமில்லாத விடத்தில் வெகு திருப்தியுடன் படுத்திருக்கிறான். இவன் அரக்கன்தானு பார், இவனைக் கொல்கிறேன். விரைவாக, வில்லையும் பாணத்தையும் என்னிடம் கொண்டுவா" என்றார்.

இவ்வார்த்தையைக் கேட்ட ஜடாயுவானவர் பயமடைந்து கூறுகிறார்:—ஓ இராகவ! என்னைக் கொல்ல வேண்டாம், உமக்கு மங்களமுண்டாகுக, என்னுடைய கருமத்தால் நானே மரணமடையப் போகிறவன், ஜடாயு, உம்முடைய பத்தினியை அபகரித்துப்போன இராவணனை வெரட்டியவன். சத்துருக்களை நாசம் செய்யும் திறமை பெற்ற ஓ தசரதநந்தன! எனக்கும் இராவணனுக்கும் யுத்தம் நடந்தது, அவனுடைய கைகளையும், இரதத்தையும், வில்லையும் அழித்தேன். அவ்வரக்கன் என்னை இம்சித்தான். ஓ லோகநாத! நானிங்கு விழுந்து கிடக்கிறேன், பிராணனைவிடப் போகிறேன், என்னருகில் வந்து எனக்குத் தரிசனம் கொடு என்று கேட்டுக்கொண்டார்.

அதைக்கேட்ட இரகுவீரன் நெஞ்சில் துடிக்கும் பிராணனையுடைய ஜடாயுவை வந்து பார்த்து, தன் கரத்தால் அவரைத் தடவிக்கொடுத்து அடங்காத் துக்கத்திலாழ்ந்து, தன்னிரு கண்களிலும் நீர் பெருகியோட நின்று, "ஓ ஜடாயுவே! நீர் என்னுடைய காரியத்தை யுத்தேசித்துப் பிராண ஹானியை யடைந்தீர், ஆகையால் எனக்குப் பிரியமுள்ள பந்துவாகிறீர். என்னுடைய பத்தினியையெடுத்துச் சென்ற இராவணன் எத்திசை நோக்கிச் சென்றான்" என்று கேட்டார்.

அப்பொழுது, ஜடாயு மெலிந்த குரலோடு கூடிய வாக்கால் வாயிலிருந்து இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, "ஓ இராம! அஞ்சத்தக்க பராக்கிரம முடைய இராக்ஷசனுகிய இராவணன் ஸீதையையெடுத்துக் கொண்டு தென்றிசை நோக்கிச் சென்றான், இதற்கு மேற்பேச எனக்குச் சக்தியில்லை, உம்முடைய தரிசனத்துக்காகவே இதுவரை பிராணனை வைத்திருந்தேன், இப்போது உம்முன்னிலையில் என் பிராணனை விடுகிறேன். மேலும்,

ஓ இரகு குலசிரேஷ்டரே, தோஷமில்லாத பிரபுவே! மாயா மானிட வேடம் பூண்ட பரமாத்மாவாகிய மஹா விஷ்ணுவே! நான் மரணுந்த காலத்தில் தெய்வ வசத்தால் தம்மைத் தெரிசித்தேன்;

அதனால் முக்தி பெற்றேன்; ஓ இராம! நீர் என்னைக் கையால் தொட வேண்டும்; உம்மிட பரிசத்தால் உம்மிடமாகிய வைகுண்டம் நான் செல்ல வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

இராகவன் அவ்விதமே மனமிரங்கி ஜடாயுவின் சரீரத்தைத் தடவினார். பிறகு ஜடாயு பிராணனையிழந்து பூமியில் விழுந்தார்.

இராமன் அந்த ஜடாயுவைப் பந்துவாகப் பாவித்து வருத்தமடைந்து, இலக்ஷ்மணனைக் கொண்டு கட்டைகளைக் கொணர்ந்து வந் தடுக்கி யந்தப் பக்ஷிராஜனைத் தகனம் செய்தார்

பிறகு துக்கங் கொண்டாடி இலக்ஷ்மணனுடன் ஸ்நானம் செய்து, அந்த ஆரண்யத்தில் ஓர் மானைக் கொன்று அதின் மாம்ச கண்டங்களை நான்கு திசைகளிலும் புல்லுள்ள பிரதேசங்களில் தனித் தனியாகப் போட்டு, ஏ பக்ஷிகளா இந்த மாம்ச கண்டங்களைப் புசியுங்கள், பக்ஷி ராஜனாகிய ஜடாயு திருப்தியடையட்டும் என்றுரைத்து, இராகவன் "ஓ ஜடாயுவே! யாவரும் பார்க்க என்னுடைய ஸ்தானம் சென்று என் ஸாரூப்பியத்தையடையும்" என்றார்.

பிறகு ஜடாயு ஓர் மங்கள வடிவமுள்ள திவ்விய ரூபத்தைப் பெற்று, சங்கு, சக்கரம், கதை, பத்மம், முதலியவைகளும், கிரீடம் முதலிய பூஷணங்களும் அணிந்து, மஞ்சள் பட்டாடையுடுத்து, நிர்மலராகி, தாஸ இலக்ஷணமமைந்த நான்கு விஷ்ணு பரிவாரர்களால் பூசிக்கப் பெற்று, முனிவர்கள் ஸ்தோத்திரம் செய்ய சூரியனுக் கொப்பான பிரகாசமுள்ள விமானத்தின் மீதேறி, இராமனை நோக்கி அஞ்சலி செய்து ஸ்தோத்திரம் பண்ணுகிறார்.

"எண்ணுதற்கரிய குணமுடைய வரும், அப்பிரமேயரும், ஆதியானவரும், யாவற்று பிரபஞ்சத்தினுடைய உற்பத்தி, பரிபாலனம், பிரளய முதலியவைகளுக்குக் காரணமாகியவரும், யாவரினும் சிறந்தவரென வர்ணிக்கத் தக்க மகிமையுடையவருமாகிய ஸ்ரீராமச் சந்திரனை நான் எப்போதும் வணங்குகிறேன்.

எல்லையற்ற சுகமுடையவரும், இலக்ஷ்மி தேவியின் கடாக்ஷத்தினின்று விடுபட்ட இந்திரன், பிரம்மா முதலியவர்களின் துக்கத்தை அநுசரித்தவரும், புருஷஸிரேஷ்டரும், வரம் கொடுப்பவரும், சிறந்த வில்லையும், பாணங்களையும், கையிலுடையவருமாகிய இராமனை நான் வணங்குகிறேன்.

மூவுலகுக்கும் மனோரம்மியமான ரூபமுடையவரும், ஆதியி லுண்டானவரும், அனந்தம் சூரியர்களைப்போல் பிரகாசிப்பவரும், வேண்டியதைக் கொடுப்பவரும், நன்கு இரக்ஷிப்பவரும், தேவதரு வாகிய கற்பகத்துக் கொப்பானவருமாகிய இரகுநந்தனரை நான் சரணமடைகிறேன்.

ஒழிவற்ற சம்சாரத்தின் பாவனைக்கு வெகு தூரத்திலிருப்ப வரும், சம்சார பந்தத்தில் அகப்படாத முனீஸ்வரர்களால் எப்போ தும் தரிசிக்கத் தக்கவரும், சம்சாரக்கடலைச் சுகமாகத் தாண்டச் செய்விக்கும் பாதமாகிய தோணியை யுடையவருமாகிய ஸ்ரீராம பிரானை நான் சரணமடைகிறேன்.

சம்சாரமாகிய அரண்யத்துக்கு ஓர் காட்டுத் தீயாகியவரும் இந்திரன் முதலிய தேவர்களுக்குத் தெய்வமும்,சர்வாத்மாக்களிடத்தி லுந் தயையுடையவரும், பல்லாயிரம் கோடி அசுரசிரேஷ்டர்களை நாசம் செய்கிறவரும் யமுனாநதிக் கொப்பான வர்ணமுடையவரு மாகிய ஹரியை நான் சரணமடைகிறேன். பரமசிவன் வலது பாகத் தில் வாசம் செய்பவரும், பர்வத சிரேஷ்டமாகிய மந்தரகிரியைத் தாங்கியவரும், இலக்ஷ்மி தேவியின் மனோஞ்ஞராகியவரும், தேவ சிரேஷ்டர்களாலும், அசுர சிரேஷ்டர்களாலும், சேவிக்கப்பட்ட பாதகமலமுடையவரும், தேவர் முதலிய யாவருக்கும் வரம்கொடுப் பவருமான ஸ்ரீமன்நாராயண சொரூபியாகிய இரகுவீரரை நான் சரண மடைகிறேன்.

பிறர் பொருள், தாரம் இவைகளில் இச்சையில்லாதவர்களும், பிறர் சுகம், ஐஸ்வரியம் இவைகளிலும் சந்தோஷமுள்ள மனமுடை யவர்களும், பிறருடைய நன்மையையே நாடுகிற குணமுடையவர் களுமாகியவர்களால் எப்போதும் சேவிக்கத்தக்கவரும், தாமரைக் கண்ணனுமாகிய இரகுகுலவீர இராமரை நான் சரண மென்றடை கிறேன்.

புன்னகையால் மனோஞ்ஞமானதும், அலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருமுகமுடையவரும் ஸ்மரணம் செய்வதற்கு சுலப ராகியவரும், இந்திர நீலரத்னம்போன்ற நீலவர்ண முடையவரும், செந்தாமரை போன்ற அழகுள்ள நேத்திர காந்தியுடையவரும், குருவுக்குக் குருவாகியவரும், இரகுபதியுமாகிய உம்மை ஓ ஈசா! நான் சரணமடைகிறேன்.

ஸத்வம், இராஜஸ், தமஸ் என்ற முக்குணத்தையும் அநுசரித்த வராகிய நீர், விஷ்ணு, பிரமன், சிவன் என்ற பேதத்துடன், ஜலம் நிறைந்த பாத்திரத்தில் தோன்றும் சூரியனைப்போல் இப்பிரபஞ்சத்தில் தோன்றுகிறீர், இவ்வளவு மகிமைவாய்ந்தவரும், தேவேந்திரனால் ஸ்தோத்திரம் செய்யப் பாத்திரமாகியவரும், ஸர்வேஸ்வரனுமாகிய உம்மை ஸ்தோத்திரம் செய்கிறேன்.'

அநேக கோடி மன்மதன் போன்ற சுந்தரமான சரீரமுடையவரும், வேதமார்க்கத்தின் விஷயமான பாவனையிலிருப்பவர்களுக்குச் சமீபமாகியவரும், சிறந்த துறவிகளின் மனதில் எப்போதும் பிரகாசிப்பவரும், இரகுபதியென்ற சொரூபத்தை யெடுத்தவருமாகிய பிரபுவைச் சரணமடைகிறேன்."

இவ்விதம் ஜடாயு துதிசெய்ய ஸ்ரீராமர் அவர் முன் பிரசன்னமாகி, "ஓ ஜடாயுவே! உமக்கு நன்மையுண்டாகுக. விஷ்ணுவாகிய என்னுடைய ஸ்தானம் செல்லுக, என்று அநுக்கிரகம் செய்தார்

மேலும் இந்த ஸ்தோத்திரத்தை எவன் எழுதிப் பாராயணஞ் செய்கிறானோ அவன் என்னைச் சரணமடைந்த உம்மைப்போல் என் சாரூப்பிய மடைவான்" என்று வரமுமளித்தார்.

இவ்வாறு இராகவன் கடாக்ஷ வீக்ஷண்ணியத்துடன் கிருபை கூர்ந்த வரத்தைப் பெற்று பக்ஷி அரசனாகிய ஜடாயு ஆநந்தாதீதனாகி இரகு நந்தனனுடைய சாரூப்பியத்தை யடைந்து, பிரம்மதேவரால் நன்று பூசிக்கப்படும் ஸ்தானத்தை (வைகுண்டத்தை) அடைந்தார்.



## ஒன்பதாவது சருக்கம்.

ஜடாயு வைகுண்டம் அடைந்த பின், இரகு நந்தனன் ஸீதையைத் தேடுவதில் முயற்சி யடைந்தவராய் இலக்ஷ்மணனுடன் மற்றொரு வனஞ்சென்றார்.

அந்த வனத்தில் ஓர் விந்தையும், மலையை யொத்த ஆகிருதியையுமுடைய ஓர் அரக்கனைக் கண்டார். அவ்வரக்கன், (மாதாபிலேயே) பெருத்த முகமுடையவன்; கண்முதலியவைகள் இல்லாதவன்; ஒரு யோஜனை தூரம் நீண்டகைகளையுடையவன்; கவந்தன் என்ற பெயருடையவன்; அசுரர்களுக்குள் சிரேஷ்டனாகியவன். பிராணிகள்யாவற்

றையும் ஹிம்சிக்கிறவன். அவ்வரக்கன் அந்த ஆரண்யத்தில் மிகவும் நீண்ட தன்னிரு கரங்களையும் எட்டின வரையில் நீட்டி, கைகளுக்குள் ளகப்பட்ட யாவற்று ஜீவஜந்துக்களையும் ஒருமிக்கத்திரட்டித் தன் வாய்க்கு நேராகக் கொண்டு வந்து விழுங்கித் தன் பசியாறுகிறவன். இவ்வாறு ஜீவித்துவரும் அவ்வரக்கனுகிய கவந்தன், அன்றைய தின மும் தன்னிருகரங்களையும் நீட்டியவைகளில் அகப்பட்டவைகளைப் புசிக்க, கைகளை மடக்கிச் சேர்த்துக் கொண்டுவருந் தருணத்தில், இராம, இலக்ஷ்மணுளிருவரும் அவன் கைக்குள் அகப்பட்டுக் கொண்டார்கள்.

அப்பொழுது ஸ்ரீராமர், தம்பியைப் பார்த்து மந்தகாசத்துடன் "ஓ தம்பி இலக்ஷ்மணு! இந்த இராக்ஷசனைப் பார். இவன் தலையும், பாதமும் இல்லாதவன்; மார்பில் முகமுடையவன்; தன்னிருகை களிலும் அகப்பட்டவைகளைப் புசித்துக் கொண்டே நிற்கிருன். இப்போது நாமிருவரும் அவன்கைகளுக்குள் அகப்பட்டுக் கொண் டோம், நம்மிருவரையும் விழுங்கி விடுவான்போல் தோனுகிறது. இதென்ன விந்தையாயிருக்கிறது; வேறு இடம் செல்லவும் வழி யைக் காணும்; இனி நாம் என்ன செய்யலாம்" என்று கேட்டார்.

தமயன் வார்த்தையைக் கேட்டு இலக்ஷ்மணர் "ஓ அண்ணு! யோசனை செய்வதில் என்ன பயனிருக்கிறது. நாமிருவரும் சாவ தானமாக இருந்துகொண்டே இந்த இராக்ஷசனுடைய புஜங்களிரண் டையும், ஒவ்வொன்றுகச் சீக்கிரத்தில் சேதிப்போம்" என்றுர்.

இராமர், தம்பீ! அதுவே சரியென்றுரைத்து, கவந்தனுடைய வலது புஜத்தைச் சேதித்தார்; இலக்ஷ்மணரும் விரைவாக அவ னிடது புஜத்தை வெட்டினுர்.

கைகளிரண்டும் வெட்டுப்பட்ட கவந்தன், மிகுந்த ஆச்சரிய மடைந்து, "ஓ! மானிட சிரேஷ்டர்களே! நீங்கள் யார்? இவ்வுலகத்தி லுள்ள மானிடர்களிலும், சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களிலும், என்வாகுகளை வெட்டுகிறவர்கள் யார் இருக்கிருர்கள்?" என்று கேட் டான்.

இராமச்சந்திரர், கவந்தனை நோக்கிப் புன்சிரிப்போடு சொல்லு கிருர்:—ஏ கவந்தா! நான் அயோத்திமா நகருக் காசனுகியவரும், கீர்த்தியிற் சிறந்தவரும், புஜபலபராக்கிரமத்தில் மிகுந்தவருமாகிய தசரத மஹாராஜாவின் மூத்த குமாரனுகிய இராமன்; இவன் என்

னுடைய பிராதாவாகிய இலக்ஷ்மணன்; நல்ல புத்திசாலி; என்னுடைய மனைவியோ ஸீதை யென்னும் நாமமுடையவள், மூவுலகிலும் காண்டற்கரிய அழகுள்ளவள், ஜனக மஹாராஜன் குமாரத்தி; நாங்கள் மூவரும் பிதுர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு வனவாசம் செய்து வந்தோம். ஒருநாள் நாங்களிருவரும் வேட்டையாடப் போயிருந்த சமயத்தில் அரக்கனாகிய இராவணன் ஸீதையை அபகரித்துக்கொண்டுபோய் விட்டான். அந்த ஸீதையைத் தேடிக்கொண்டு பயங்கரமான இந்தக் காட்டுக்கு வந்தோம், உன்னுடைய கரங்களிற் சிக்கிக்கொண்டோம், எங்கள் பிராணனைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டி உன் கைகளை வெட்டினோம். விகாரமான ரூபத்தோடு கூடிய நீ யார் சொல் என்று கேட்டார்.

இந்த வார்த்தையைக்கேட்ட கவந்தன், "என் சமீபமாக வந்த நீர் இராமனாகில், நான் கிருதார்த்தனாகி விட்டேன், என்னுடைய வரலாற்றைத் தாங்கள் கேட்கும்படி கூறுகிறேன். அதாவது, நான் முந்தின ஜென்மத்தில் கந்தருவராஜன்; ரூபத்தாலும், யௌவனத்தாலும் மதத்தவன்; பிறர் மனைவிகளின் மனதைக்கொள்ளை கொள்ளுகிறவன்; உலகமெங்கும் சஞ்சரிப்பவன், ஓ! இரகு சிரேஷ்டனே! நான் தவம்பண்ணி, பிரமதேவரிடத்தில் சிரஞ்சீவி (சாவில்லாமை) பட்டம் அடைந்திருந்தேன்.

நான் ஒரு சமயத்தில் அஷ்டவக்ர முனிவரைப் பார்த்துப் பரிகாசம் செய்தேன், அந்த முனிவர் கோபங்கொண்டு, என்னைப் பார்த்து, ஏ துஷ்டா, ஏ புத்திகெட்டவனே, நீ இராக்ஷசனாகக் கடவது என்று சாபமிட்டார். நான் அந்த முனிவருக்கு சாஷ்டாங்கமாகத் தண்டம் செய்து சாபவிமோசனம் பண்ணும்படி அவரைக் கேட்டுக்கொண்டேன். தவத்தால் பிரகாசிக்கும் காந்தியுடைய அந்த மஹாமுனிவர் தயைகூர்ந்து சாபவிமோசனம் செய்து, அது நேரும் காலத்தையும் எனக்குத் தெரிவித்தார். அதாவது, ஸ்ரீமன் நாராயணமூர்த்தி திரேதாயுகத்தில் தசரத குமாரனாகப் பூமியில் துஷ்டநிக்கிரகத்தின் பொருட்டு, அவதாரம் எடுத்து ஸ்ரீராமன் என்னும் நாமந்தரித்து, வரப்போகிறார். அவர் திருக்கரத்தால் உன் கரத்தைச் சேதிக்கப்படுங்காலம் உன் சாபவிமோசன காலமாகும். அந்த இராமனுடைய அஸ்தப்பரிச விசேஷத்தால், நீ என் சாபத்தில் நின்று விடுபட்டு முன்போல் கந்தருவனாவா யென்றுரைத்தார். அந்த

சாபம் என்னைப்பற்றினவுடன் நான் இராக்ஷச சரீரத்தைப் பெற்றேன். நான் இராக்ஷசனாகி யுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் காலத்தில் ஓர் சமயம், தேவர்களுக் கரசனாகிய இந்திரனைக் கண்டு கோபமுண்டு அவனைப் பக்ஷிக்க எண்ணங்கொண்டு துரத்தினேன். அவ்விந்திரன் தன்னைக்காக்கும் பொருட்டு, தன்வச்சிராயுதத்தால் என் மண்டையி லடித்தான். அதினால் என் தலையும், பாதமிரண்டும் என் வயிற்றுப் பிரதேசத்திற்குட் சென்றன. பிரமதேவர் கொடுத்த வரப்பிரசாதத்தால், வச்சிராயுதத்தால் அடிபட்டும் எனக்கு மரணம் நேரவில்லை. ஓ இரகு சிரேஷ்ட! முகமில்லாமலும் காலில்லாமலும் முண்டமாக இருக்கும் என்னைப் பார்த்தவர்களிற் சிலர், என் பேரில் கருணைகூர்ந்து, என்னை யழைத்துக் கொண்டு தேவராஜனாகிய இந்திரனிடம் சென்று, ஓ வேள்விவேந்த! இவன் முகமில்லாவிடில் எவ்விதம் ஜீவனம் செய்வான் என்று வேண்டிக் கொண்டார்கள். அப்போது தேவேந்திரன் என்னைப்பார்த்து, "ஓ கந்தருவனாகிய இராக்ஷசனே! உனக்கு வயிற்றில் முகமுண்டாகட்டும், உன்கைகளிரண்டும் ஓர்யோஜனை தூரம் நீளமாகட்டும்" எனவரம் அளித்து உடனேயவ்விடம் விட்டு நீங்கலாம் என்றான்.

அவ்வரத்தைப்பெற்று இந்தவனம் வந்து வாசஞ்செய்து கொண்டு காட்டிலிருக்கும் மிருகாதிகளைக் கையாலிழுத்துப் புசித்து வருகிறேன், என்று தன் வரலாற்றைக் கூறினான்.

இதைக்கேட்ட இரகுநந்தனன் இப்போது உனக்காகவேண்டிய காரியம் என்னவென்று கவந்தனைக் கேட்டார்.

கவந்தன், "ஓ பிரபுவே! இப்போது என் கரங்களைச் கண்டனம் செய்தீர், இனியும் ஓர் குழியைவெட்டி, அக்குழியில் கட்டைகளைப் போட்டு, அதில் என்னைத் தள்ளி தீயையிட்டு, தாங்கள் தகனம் செய்யவேண்டும். அவ்விதம் செய்தால் நான் முன்னுள்ள என் கந்தருவ சொரூபத்தை யடைந்து, தங்களுடைய பத்தினி கிடைக்கவழி சொல்லுவேன்" என்று கூறினான்.

இவ்விதம் கவந்தன் சொன்னதைக்கேட்டு இராகவன், இலக்ஷ்மணனைக் கொண்டு பள்ளம்வெட்டி, அதில் கட்டைகளைச் சேகரித்துப் போட்டுத் தீமூட்டி யதில் கவந்தனைத் தகனம் செய்தார்.

அதிலிருந்து மன்மதனுக்குச் சமானமான அழகும், சகலாபரணங்களும் பூண்டிருப்பதா லுண்டாகிய காந்தியும் பிரகாசிக்க ஓர்

கந்தருவன் எழுந்தான், அவன் ஸ்ரீராமனுடைய பாதாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாகத் தண்டம் செய்து பிரதக்ஷணம் வந்து அஞ்சலி பந்தனாய் நின்று பக்தியோடு கூறுகிறான்.

ஓ இராம! மனதுக்கும், வாக்குக்கும் எட்டாதவரும், ஆதியும் அந்தமும் இல்லாதவரும், அநேகரும், ஏகனுமாகிய தங்களை ஸ்தோத்திரம் செய்ய என் நாவானது பிரவிர்த்திக்கின்றது. உம்முடைய ரூபமானது சூக்ஷ்மம், உமது நிரேக இலக்ஷணமானது அவ்வியக்தம், நீர் ஞான சொரூபமுடையவர், காணப்பட்ட மற்ற யாவும் ஜடமாகியது, அழியக்கூடியது.

ஓ பிரபுவே! உம்மை மேற்கூறியபடி தெரிந்து கொள்ளவேண்டிய திருப்பதால், வேறுபட்ட மனம் எவ்விதம் உம்மைத் தேர்ந்து அறியக்கூடும். புத்திக்கும் ஆத்மப் பிரதிபிம்பத்துக்கும் ஒருமையான தன்மையைச் ஜீவன் என்று வேதங்களில் சொல்லப்படுகிறது. புத்தி முதலியவைகளுக்குச் சாக்ஷியாக இருப்பது பிரமம், எல்லாவற்றின் சொரூபமே தானாகவும், விகாரமற்றதுமாகிய பிரமத்தினிடம், அஞ்ஞானவசத்தால் யாவும் ஆரோபணம் செய்யப்படுகிறது.

உம்முடைய சூக்ஷ்ம சரீரமே இரணிய கருப்ப ரூபம், உம்முடைய ஸ்தூல சரீரமே விராட்டு ரூபம். ஓ இராம! உம்மைப்பாவனை செய்வதற்கு உம்முடைய ஸ்தூல ரூபம் உசிதமாகிறது.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய ஏழு வித்தியாதத்துவங்கள் சூழ்ந்த உம்முடைய ஸ்தூல சரீரமான (விராட்டு) பிரும்மாண்டத்தில், சென்றதும், வரப்போகிறதும், நடக்கிறதுமாகிய இப்பிரபஞ்சம் யாவும் காணப்படுகிறது.

ஏழு தத்வங்களுக்கு மேலான குணங்களால் அமைந்தவன் வைராஜன். அவன் தான் தாரணைக்குக் காரணமாகிறவன்.

ஓ இராம! நீர் தான் அக்காரண சொரூபி; விகற்பித்த யாவும் நீர் தான், உலகம் யாவும் உம்முடைய சரீரமே. அதாவது:—உம்முடைய பாதமூலம் பாதாளம். அப்பாதங்களின் பக்கத்திலுள்ள பிரதேசம் மகாதலம். அவைகளின் பரடுகள், இரசாதலம், தாரதலமுமாம். உம்முடைய முழங்கால் சுதலம். உம்முடைய தொடைகள் விதலம், அதலமுமாம். இவ்விதமாகக் கீழுலகங்கள் ஏழு. உம்முடைய ஜகனப்பிரதேசம் (தொடையினுட் பக்கம்) பூலோகம் (பூமி.) உம்

முடைய நாபியானது புவலோகம் (ஆகாயம்.) உம்முடைய மார்பானது சுவலோகம் (சோதி.) உம்முடைய கழுத்து மகாலோகம். உம்முடைய முகம் சனலோகம். உம்முடைய நெற்றி தபோலோகம். உம்முடைய சிரசு சத்தியலோகம். இவ்விதமாக மேல் உலகங்கள் ஏழு. உம்முடைய கைகள், இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய திக்குப்பாலகர்களாம். உம்முடைய செவிகள் கிழக்கு, தென்-கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வட-மேற்கு, வடக்கு, வட-கிழக்கு, ஆகிய திசைகளாம். உம்முடைய நாசியானது அசுவினி தேவர்கள். உம்முடைய முகம் அக்கினிபகவான். உம்முடைய நேத்திரம் சூரியன். உம்முடையமனம் சந்திரன். உம்முடைய புருவமத்தி காலன். உம்முடைய புத்தியே பிரமதேவர். உம்முடைய அஹங்காரரூபம் உருத்திரன். உம்முடைய வாக்கு வேதங்கள். உம்முடைய கோரப் பற்கள் யமன். மற்றைய பற்கள் நக்ஷத்திரங்கள். உம்முடைய ஹாஸ்யம் (வாய்) மோகத்தைச் செய்யும் மாயை. உம்முடைய கடாக்ஷப் பிரேரணை சிருஷ்டி. உம்முடைய முன்பாகம் தருமம். பின் பாகம் அதருமம். உம்முடைய நிமேஷகம் (மின்மினி) பகலும், இரவுமாம். உம்முடைய வயிற்றுப்பிரதேசம் சப்த சமுத்திரங்களாம். உம்முடைய நாபியானது நதிகள். உம்முடைய ரோமங்கள் விருக்ஷங்கள். உம்முடைய ரேதசு விருஷ்டி (மழை) யாம். உம்முடைய மகிமையே ஞானசக்தியாம். இத்தியாதி இலக்ஷணங்களுடன் கூடியது உம்முடைய ஸ்தூல சரீரமாம். உம்முடைய மங்களமான ஸ்தூல ரூபத்தில் மனமானது நன்று தாரணையடைந்தால் சிரமமின்றி முக்தியுண்டாகும். இந்த சொரூபத்தைத் தவிர வேறு முக்கியமானது ஒன்றுமில்லை, எவன் ஒருவன் உம்முடைய ஸ்தூல ரூபத்தை யெப்போது பாவனை செய்கிறானோ, அவன் அப்போதே மோக்ஷமடைகிறான். ஆகையால் ஓ இராமா! உம்முடைய ஸ்தூல ரூபத்தைத் தியானம் செய்கிறேன். அவ்விதம் தியானம் செய்தவுடன் மயிர்க்கூச்சலுடன் ஆனந்த பாஷ்பமுண்டாகிறதல்லவா? அஃதிருக்கட்டும், உம்முடைய பிரத்தியட்சமாகிய இந்த ரூபத்தையே இப்போது நான் தியானம் செய்கிறேன்.

ஓ இராமா! வில்லையும் பாணங்களையுந் தரித்ததும், சியாமள வர்ணமும், சடைகள் மரவுரிகள் தரித்ததும், பழுதில்லாத சீதையைத் தேடுவதும், இலக்ஷ்மணனுடன் கூடியதுமாகிய இந்த ரூபமே

என்மனதில் எப்போதும் இருக்கட்டும், உம்முடைய நாமமாகிய திரு மந்திரத்தை எப்போதும் என் நாக்கு உச்சரிக்கட்டும்.

ஓ இரகு சிரேஷ்ட! ஸர்வஞ்ஞனும், பார்வதிதேவி ஸமேதனும் கூட அயோத்தியில் வசித்த ரிஷி சிரேஷ்டரான வசிஷ்டருக்கு சம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்குத் தெப்பமும், பரப்பிரம சொரூபத்துக்கு வாசகமும், தசரத குமாரராகிய உமக்கு நாமமும் ஆகிய, அஷ்டாக்ஷரத்தில் ஐந்தாவதாகிய ரா—என்னும் அக்ஷரமும், பிரணவமாகிய ஓம் என்னும் அக்ஷரத்தில் உதித்த அகார உகார மகாரத்தில் உண்டான ஸ்தூல பஞ்சாக்ஷரம், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம், காரண பஞ்சாக்ஷரம், மநுவக்ஷரம், மஹாமநுவக்ஷரம் இவற்றில் சூக்ஷ்மபஞ்சாக்ஷரத்தின் ஐந்தாவதாகிய-ம-எனும் அக்ஷரமும் கூடிய ராம-எனும் மந்திரத்தை உபதேசித்திருக்கிறார். ஆகையால் உம்முடைய நாமமாகிய அந்த மந்திரத்தை யிப்போது ஜெபிக்கிறேன்.

ஓ இராமப் பிரபுவே! நீர் பரமாத்மா வென்பது நிச்சயம், யாவரும் உம்முடைய மாயையால் அறியாதவர்களாகி யும்மை, தத்துவமாகத் தெரிந்து கொள்வதில்லை. இராம பத்திரரும், வேதஸ்ஸும், பரமாத்மாவுமாகிய உமக்கு நமஸ்காரம். அயோத்திக்குப் பதியாகிய பிரபுவே! உமக்கு நமஸ்காரம், இலக்ஷ்மணரால் சேவிக்கப்படும் இராம! நமஸ்காரம்; லோகநாத! நீர் என்னைக் காக்கவேண்டும். காக்கவேண்டும். உம்முடைய மாயை என்னைச் சூழாமலிருக்கக் கிருபை செய்யவேண்டும் என்று துதித்தான்.

ஸ்ரீராமர் அத்துதிக்கு மகிழ்ந்து, "ஓ தோஷமற்ற திவ்விய கந்தருவ! உன்னுடைய பக்தியாலும் துதியாலும் நான் சந்தோஷமடைந்தேன். யோகிகள் அடையக் கூடியதும், நித்தியமுமான என்னுடைய சிறந்த ஸ்தானம் (வைகுண்டம்) இப்போதே நீ யடையலாம்.

எந்த மானிடர்கள் பலவிடத்தில் புத்தியைச் செலுத்தாது பக்தியுடன் வேதங்களிற் கூறியவைகளை அநுசரித்து நீ செய்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம், சிரவணம் செய்கின்றார்களோ அவர்கள் அஞ்ஞானத்தால் உண்டான சம்சாரபந்தத்தை விட்டு நீங்கி நித்தியானந்தத்தின் அநுபவத்தால் அநுமானிக்கத் தக்கவர்களாகி என்னை அடைவார்கள்" என்று வரங்கொடுத்தருளினார்.

# பத்தாவது சருக்கம்.

---

வைகுண்டடம் செல்லும் அந்தக் கந்தருவன், "ஓ இரகுநந்தன! இதோ முன் பிரதேசத்தில் உள்ள ஆச்சிரமத்தில் ஸதா தங்கள் பாதார விந்தங்களிலே அன்பு வாய்ந்தவள், பக்தி மார்க்கத்தில் மிகச் சிறந்தவள், சபரி யெனும் நாமமுடையவள் வசிக்கிறாள்.

ஓ மஹா பிரபுவே! அவளிடம் சென்றால், யாவற்றையும் அவள் தங்களுக்குக் கூறுவாள்" என்று சொல்லி கந்தருவன் சூரியப் பிரகாசம் போன்று காந்தி வீசுகின்ற விமானத்தின் மீதேறி விஷ்ணுவின் ஸ்தானமாகிய வைகுண்டம் சென்றான்.

பிறகு இரகுநந்தனன், சிங்கம், புலி, சரடி முதலிய கொடிய மிருகங்களின் துஷ்டச் செய்கைகளால் வருந்தக்கூடியதும், இருள் சூழ்ந்து வழி தெரியாது மயங்கக்கூடியதும், மிகப் பயங்கரமுள்ளதுமாகிய அந்த ஆரண்யத்தைக் கடந்து இலக்ஷ்மணனுடன் உள்ள சபரியின் ஆச்சிரமத்தை யடைந்தார்.

சபரியானவள் தன் ஆச்சிரமந்தேடி வந்த இராமர், இலக்ஷ்மணர் இவர்களைப் பார்த்து, மிகவும் சந்தோஷத்துடன் எழுந்து வந்து அவர்கள் பாதத்தில் விழுந்து நமஸ்காரம் செய்து எழுந்து, தன் கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிய, வாயால் இனிமையான வார்த்தைகூறி, உபசரித்துத் தங்கள் வரவு நல்வரவாகுக என்று அவர்கள் மனம் சந்தோஷப்படும்படி செய்து திவ்விய ஆசனங்களின் மீது இருவர்களையும் தக்கவாறு வீற்றிருக்கச் செய்தாள்.

பிறகு சபரி, களிப்புடன் ஆசனத் தமர்ந்திருக்கும் ஸ்ரீராமர், இலக்ஷ்மணர் இருவர்களுடைய பாதங்களில் கங்கை கொண்டு வந்து பக்தியுடன் அபிஷேகம் செய்து அந்த ஜலத்தில் தான் ஸ்நானம் பண்ணி ஆசமனம் பண்ணிக் கொண்டு சுத்தியுடன் அவர்களை அர்க்கியபாத்தியாதிகளோடு விதிப்படி நல்லவாசனை பொருந்திய புஷ்பங்களால் அர்ச்சித்துப் பூசித்து ஸ்தோத்தரித்து வந்தனை வழிபாடுகள் செய்து, ஸ்ரீராமபிரானுக்காகச் சேகரித்து வைத்திருக்கும் அமுதத்துக் கொப்பான பலவர்க்கங்களைச் சமர்ப்பித்து அருகில் நின்று உபசாரம் சொல்லியருந்தச்செய்து சிரமபரிகாரம் பண்ணினாள்.

ஸ்ரீராகவன் அதிதி ஸத்காரம் பெற்றுக் கொண்டு தம்பியுடன் வீற்றிருக்க, பக்தி நிறைந்த சபரி தன்னிருகரமுங்கூப்பி நின்று கூறுகிறாள்:—

ஓ இரகுநந்தன! இவ்வாச்சிரமத்தில் அநேக முனிவர்களிருந்தாங்கள். நான் அவர்களைக் குருவாகக் கொண்டு அநேகமாயிரம் வருஷகாலமாகச் சிசுருஷை செய்து வந்தேன், அவர்கள் பரமபதம் சென்றார்கள். அச்சமயம் அவர்கள் திருவடியில் வணங்கி "ஓ சுவாமின்! அடியேனுடைய கதியென்ன" என்று இரக்கத்துடன் கேட்டேன். அவர்கள் அடியேன்மேல் தயை கூர்ந்து "ஏ சபரி, ஸ்ரீமகாவிஷ்ணு அயோத்தியை யாளும் தசரத மகா ராஜாவின் குமாரனாக இராமன் என்னும் நாமத்துடன் அவதாரம் செய்திருக்கிறார். அவர் அரக்கர்களைச் சிக்ஷிப்பதற்கும் ரிஷிகளை இரக்ஷிப்பதற்கும் இவ்விடம் வரப் போகிறார். நீ அந்த மஹாத்மாவாகிய ஸ்ரீராமனை ஒருமைப் பட்ட மனத்துடன் ஸதா சிந்தனைசெய்து கொண்டிருந்து அவர் வந்தவுடன் அவர் சந்நிதானத்தில் உன்னுடைய சரீரத்தைத் தகனம் செய்[illegible] அந்த பரமாத்மாவின் ஸ்தானத்தையடையக் கடவாய், இப் [illegible] அவர் சித்திரகூடத்தி லிருக்கிறார். அந்த மஹாத்மா இவ் [illegible]ரும் வரை அந்த ஸ்ரீராமனையே ஸ்மரித்துக்கொண்டு நீ யிவ் [illegible]த்தில் க்ஷேமமா யிருவென்று கட்டளையிட்டார்கள்.

ஓ இராம! அது முதல் இதுவரை அந்த முனிவர்கள் கூறிய வண்ணம் தங்களைத் தியானம் செய்துகொண்டு தங்கள் வரவை எதிர் பார்த்துக்கொண்டிருந்தேன், இப்போது எனது குருவாகிய அம் முனீஸ்வர்களின் வார்த்தைகள் பிரயோஜனமுள்ளதாயின.

ஓ கோதண்டமூர்த்தி! தங்களுடைய தரிசனம் எனது குருவாகிய முனிவர்களுக்குக்கூடக் கிடைக்கவில்லை. அப்பிரமேயமான சுவபாவமுடைய பிரபுவே! நான் ஸ்திரீ ஜாதி, மூடத்தனமுள்ளவள், தங்களுடைய தாசர்களுக்குத் தாசராகிறவர்களுக்குக்கூட ஊழியஞ்செய்ய அதிகாரமில்லாதவள். இப்போது தங்களுக்குப் பிரத்தியட்சமாக எவ்விதம் ஊழியம் செய்பவள் ஆவேன்.

ஓ இராம! மனதுக்கும், வாக்குக்கும் எட்டாத நீர் எனக்கு எக்காரணத்தால் தெரிசனங் கொடுத்தீர்?

ஓ தேவேஸ்வர! உம்மை நான் ஸ்தோத்திரம் செய்ய அறியேன், எனக்குத் தாங்கள் அநுக்கிரகம் செய்யவேண்டுமென்று பணிந்து கேட்டுக்கொண்டாள்.

இரகுநந்தனன், இவ்வாறு தாழ்ந்து கேட்டுக் கொண்ட சபரியின் வேண்டு கோளுக்கிணங்கி, ஓ சபரீ, என்னைப் பஜிக்கிறதற்கு, புருஷன், ஸ்திரி, ஜாதி, நாமம், வருணாச்சிரமம் முதலியவைகள் காரணமல்ல பக்தியே காரணம். பக்திவலையிற் படுவோன் காண்க என்னும் வாக்கியத்தை அறிவாயாக.

என்னிடம் பக்தி செய்யாதவர்கள், அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உத்தியம், சோடசீ, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினியாதேயம், அக்கினி கோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிரூடபசுபந்தனம், ஆக்கிரயணம், சௌத்திராமணி, அட்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆசுவயுசி, இந்த இருபத்தொருயாகங்களைச் செய்தாலும், அறத்தா லீட்டிய பொருளை, முக்குற்றமற்ற நற்றவத்தோரைக் கொள்ளெனப் பணிந்து, குறையிரந்து, தம்முள்ள முவந்து ஈதலாகிய தலைப்படுதானம்; ஆதுலர், குருடர், மாதர் முதலாகிய பிறருடைய சிறுமையைப் பார்த்து மனமிரங்கி யீவதாகிய கடைப்படுதானம்; புகழ், வார், வங்கை, மாறு, அச்சம்; காரணம், கடைப்பாடு இவற்றைப் பற்றியீவதாகிய கடைப் படுதானம் ; இம்மூன்றினும், முதல் தரமான தலைப்படுதானமாக:—துலாபுருடதானம், இரணியகருப்பதானம், பிரமாண்டதானம், இரணியகற்பதானம், அட்டோத்திர சகஸ்திர கோதானம், இரணிய விடபதானம், இரணியாஸ்வதானம், இரணிய கன்னிகா தானம், திக்குப் பாலகதானம், சுவர்ணரத தானம், பஞ்சலாங்கலதானம், சுவர்ணபூதானம், கற்பகலதாதானம், இரணிய சத்தசாகர தானம், இரத்தின தேனுதானம், சுவர்ண கும்ப தானம், சுவர்ண கணபதி தானம், விஷ்ணுவிம்ப தானம், திலபதுமதானம், திலபருவத தானம், திலதேனுதானம், இலக்குமி தானம், அன்ன தானம், வித்தியா தானம், திலதானம் இந்த இருபத்தைந்து தானங்களைச் செய்தாலும்; வேதம் ஓதுதல் என்னும் பிரமயாகத்தையும், ஓமம் வளர்த்தல் என்னும் தெய்வயாகத்தையும், பலியீதல் என்னும் பூத யாகத்தையும், தர்ப்பண முடித்தல் என்னும் பிதிர்யாகத்தையும், இரப்போர்க் குணவு முதலிய வீதல் என்னும் மானிட யாகத்தையும் செய்தாலும்; இல்லறந் துறந்து துறவறம் பூண்டு, மலை, குகை, வனம், மலைச்சாரல் முதலிய இடங்களிற் சென்று, அறுசுவை யுண்டியையொழித்து கந்தமூலாதி

களைப் புசித்தும், சருகு பட்சணம் பண்ணியும், வாயு பட்சணம் பண்ணியும், வெயிலிலிருந்தும், மழையிலிருந்தும், பஞ்சாக்கினி மத்தியிலிருந்தும், இன்னும் பலவாறாகவுமிருந்து தவங்களைப் பண்ணினாலும் என்னைக் காணமுடியாது.

ஆனாலும் நான் மிகவும் சுருக்கமாகப் பக்தி சாதனத்தைக் கூறுகிறேன்:—அது ஒன்பது விதமாகின்றன. அவையாவன:—1—வது சாதுக்களின் சேர்க்கை. 2—வது என்னை வர்ணித்தல். 3—வது என்னிடம் அன்பு வைத்தல். 4—வது என் மொழிகளாகிய வேதம், ஆகமம் இவைகளுக்கு வியாக்கியானம் செய்தல், மாயையின்றி ஆசிரியனை நான் என்ற புத்தியுடன் உபாசித்தல், புண்ணியம் செய்வதையே சுவபாகமாக உடைத்தாயிருத்தல். 5—வது இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி இவைகளை யநுஷ்டித்தல்; இவற்றுள்.

1. இயமம் 10 வகைப்படும். அவையாவன:—

(1) அஹிம்ஸை, (2) சத்தியம், (3) அஸ்தேயம், (4) பிரம்மசரியம், (5) தயை, (6) ஆர்ஜவம், (7) க்ஷமை, (8) திரிதி, (9) மிதாஹாரம், (10) சௌசம் ஆம்.

---

(1) அஹிம்ஸையாவது=(ஸ்தூலார்த்தம்) திரிகரணத்தாலும் அன்னிய பிராணிகளுக்குத் துக்கத்தைச் செய்யாதிருத்தல், (ஸூக்ஷ்மார்த்தம்) ஆத்மா அறுக்கப்படாதது, தகிக்கப்படாதது, நனைக்கப்படாதது, உலத்தப்படாதது எனத்தேர்தல்.

(2) சத்தியமாவது=(ஸ்—ம்) எதார்த்த கேள்வியினாலும், பிரத்தியக்ஷப் பார்வையினாலும், அறிந்ததைச் சொல்லுதல், (ஸூ—ம்) எவற்றையும் சத்தியப் பிரமமாய்ப் பார்த்தல்.

(3) அஸ்தேயமாவது=(ஸ்—ம்) அன்னியருடைய சொத்தை இச்சியாதிருத்தல். (ஸூ—ம்) ஆத்மாவை அனாத்மாக உச்சரியாதிருத்தல்.

(4) பிரம்மசரியமாவது=(ஸ்—ம்) ருது காலத்தன்றி மற்ற காலத்தில் தனது ஸ்திரியையும் விரும்பாதிருத்தல். (ஸூ—ம்) மனதில் தன்னைப் பிரமசொரூபமாக நினைத்தல்.

(5) தயையாவது=(ஸ்—ம்) தன்னைப் போல்யாவரும் மோக்ஷத்தை யடையவிரும்புதல்.

(6) ஆர்ஜவமாவது=மித்துருமுதல் சத்துருவரை சமமாக நினைத்தல்.

(7) க்ஷமை=சத்துருக்கள் செய்யுந் துன்பங்களை நினையாதிருத்தல்.

(8) திரிதியாவது=(ஸ்—ம்) ஸம்சாரத்தில் நின்று விடுபடுதலே சுகமென்று நிச்சயித்தல், (ஸூ—ம்) நான் பிரமம், தேகமல்ல என்று அறிதல்.

(9) மிதாஹாரமாவது=சமமாகப் புசித்தல்.

(10) சௌசம்=(ஸ்—ம்) சரீரத்தை மண்ணினாலும், ஜலத்தாலும் கழுவுதல். இது பகிஸ் சௌசம், (ஸூ—ம்) சொரூபத்தை மனனஞ் செய்தல், இது அந்தஸ் சௌசம்,

நியமம் 10 வகைப்படும். அவையாவன:—

(1) தபசு, (2) சந்தோஷம், (3) ஆஸ்திக்கியம், (4) தானம், (5) ஈஸ்வரபூசை, (6) வேதாந்த சித்தாந்த சிரவணம், (7) லஜ்ஜை, (8) மதி, (9) ஜெபம், (10) விரதம் ஆம்.

---

(1) தபசு=(ஸ்-ம்) உபவாசத்தால் தேகத்தை சுருங்கப் பண்ணுதல். (ஸு-ம்) ஆத்ம விசாரம் பண்ணுதல்.

(2) சந்தோஷமாவது=(ஸ்-ம்) சொற்ப பிரயாசையாலாவது, பிறரிச்சையாலாவது கிடைக்கும் புசிப்பில் திருப்தி யடைதல், (ஸு-ம்) இகத்திலும் பரத்திலும் உள்ள போகங்களில் உபேக்ஷை பண்ணி ஆத்மாவினிடத்தில் பிரீதி வைத்தல், இதற்கு பரம சந்தோஷமென்று பெயர்.

(3) ஆஸ்திக்கியமாவது=ஸ்ருதி, ஸ்மிருதி, வாக்கியார்த்தத்தில் விசுவாஸம் வைத்தல்.

(4) தானமாவது=நீதியில் நின்று சம்பாதித்த பொருளைப் பிறருக்குக் கொடுத்தல்.

(5) ஈஸ்வர பூசையாவது=திரிமூர்த்திகளையும் சக்திக்குத் தக்கபடி பூசித்தல்.

(6) வேதாந்த சித்தாந்த சிரவணமாவது;—வேதாந்த சித்தாந்தங்களைக் குரு முகத்தில் கேட்டல்.

(7) லஜ்ஜையாவது;—லௌகீகத்திலாவது, வைதீகத்திலாவது, பொல்லாங்கான காரியத்தில் வெட்கமடைதல்.

(8) மதியாவது=வேதாகமங்களின் அர்த்தம் விசாரித்தல்.

(9) ஜெபமாவது=ஆசிரியன் உபதேசித்த மந்திரங்களை உருவேற்றல்.

(10) விரதமாவது=காயத்தால் அன்னியரை யடித்தல், அன்னியருடைய ஸ்திரியைப் பிடித்தல், அன்னியருடைய சொத்தை பலாத்காரமாயெடுத்தல், ஆகிய இம்மூன்றையும் செய்யாதிருத்தல். வாக்கினால் கடோரமாகப் பேசுதல், பொய் சொல்லுதல், கோள் சொல்லுதல், தூஷணம், இவை நான்கையும் விட்டிருத்தல். மனம் அரிட்ஷவர்க்கத்தை விட்டிருத்தல், தேகம் முழுதும் விபூதி தூளிதம் பண்ணுதல்,

ஆதனம் (ஆசனம்) 9 வகைப்படும். அவையாவன:—

(1) ஸ்வஸ்திகம், (2) கோமுகம், (3) பதுமம், (4) வீரம், (5) கேசரி, (6) பத்திரம் (7) முக்தம், (8) மயூரம் (9) சுகம். ஆம்.

---

(1) ஸ்வஸ்திகமாவது—தொடைக்கும் முழங்காற்கும் நடுவே இரண்டுள்ளங் காலையும் செலுத்தி இறுமாந்திருத்தல்.

(2) கோமுகமாவது—ஜகனபக்கத்தில் இருகாற்பரட்டையும் மாறவைத்து அவ்விருகாற் பெருவிரலைக் கைபிடித்திருத்தல்.

(3) பதுமமாவது—இரண்டுள்ளங்காலையும் மாறித்தோன்ற வைத்தல்.

(4) வீரமாவது—வலது தொடையில் இடது கால் பரட்டைச் சேர்த்து இறுமாப் புற்றிருத்தல்.

(5) கேசரியாவது—பீஜத்தின் கீழ் ஜீவனியிடத்துப் பரட்டைவைத்து, முழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலியை விரித்து நாசியைப் பார்த்திருத்தல்.

(6) பத்திரமாவது—பீஜத்தின் கீழ் ஜீவனியிடத்து இருகாற் பரட்டையும் பொருந்த வைத்து, அவ்விருபரட்டையும் இருகையால் பிடித்து அசையாதிருத்தல்.

(7) முக்தமாவது—இடதுகால் பரட்டால் ஜீவனியை யழுத்தி வலதுகால் பரடு அப்பரட்டின் கீழ் உந்த விருத்தல்

(8) மயூரமாவது—முழங்கையிரண்டும் உந்திப்புறத்தில் அழுந்தப் புவியிற்கை யூன்றிக் கால்நீட்டித் தலை நிமிர்ந்திருத்தல்.

(9) சுகமாவது—சுகமுந்திடமும் எவ்வாறிருக்க எய்துமோ அவ்வாறிருத்தல்.

பிராணயாமம்:—

(1) சகர்ப்பம், (2) அகர்ப்பம் என இரண்டு வகைப்படும்.

---

(1) சகர்ப்பமாவது—தியானத்துடன் மூச்சைப் பிடிப்பது.

(2) அகர்ப்பமாவது—தியானமில்லாமல் மூச்சைப் பிடிப்பது.

இந்த இருவகையும், இரேசக, பூரக, கும்பகமா யிருக்கும். இரேசகம் மூச்சை விடுதல், பூரகம் மூச்சை யேற்றுதல், கும்பகம் மூச்சை யடக்கல்.

பிரத்தியாகாரம்:—

---

பிரத்தியாகாரம்—(ஸ-ம்) மனதை இந்திரிய விஷயங்களிற் செல்லவொட்டாமல் லக்ஷியத்தில் நிறுத்தல். (ஸ-ு-ம்) சர்வம் பிரமமயமாய்ப் பார்த்தல்; வேதத்தில் சொல்லிய நித்திய, நைமித்திய, காமிய கர்மங்களைப் பிரமாராதனமென்று செய்தல்; தேகத்தை நான் என்று நினைப்பதைத் தள்ளி ஆத்மாவே நான் என்று நினைத்திருத்தல்.

தாரணை:—

தாரணை=(ஸ-ம்) கண்டம், இருதயம், நெற்றி, கபாலம், நாபி, இவற்றில் ஒன்றில் சந்ததம் சிந்தை வைத்தல். (ஸூ-ம்)தேகாதிப் பிரபஞ்சமாகிய பஞ்ச பூதங்களை மஹா பூதங்களில் ஒடுக்கி, மஹா பூதங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆத்ம சொரூபத்தில் ஒடுக்கி, தான் சின்மாத்திர னென்று மனதில் தரிப்பதும், நான் தேகாதிகளு மன்று அதற்குரிய மாயையு மன்று, சின்மாத்திரனென்று ஒடுங்கி நிற்பது. இது பரமதாரணையாம்.

தியானம்:—

தியானம்=(ஸ-ம்) மனதை மூர்த்திவடிவமாக்கி மற்றொன்றில் பொருந்தாமற் செலுத்தல். (ஸூ-ம்) தேகாதீதமாயும், திருக்கு ரூபமாயும், இருக்கிற சின்மாத்திரத்தை நானென்று தியானிப்பதும். இது பரம தியானமாம்.

சமாதி:—

சமாதி=(ஸ-ம்) இந்திரிய முதலிய தத்துவ சேஷ்டைகட் சேதுவாய், ஆக்கையுள் நின்று, அவற்றோடு கூடினும், அவற்றிற் பற்றின்றி யிருக்கும், ஆன்மாவாகிய தன்னைத் தான் காண்கிறது (ஸூ-ம்) நான் சாக்ஷி சொரூபனுகையினலே, நான் தேகாதிக ளல்லன், நான் பரப்பிரமம் என்ற புத்தியும், பிரமாண்ட பிண்டாண்டங்களை, ஸ்தூல பஞ்சபூதங்களிலொடுக்கி, அப்பூதங்களை அபஞ்சீகிருத பூதங்களி லொடுக்கி, அச் சத்தாகிய தன்மாத்திரைகளை மாயையிலொடுக்கி, அம்மாயையைப் பிரத்தியேகாத்மாவிலொடுக்கி, அவ்வாத்மாவாகிய நானே பிரமம்; நான் சமுசாரியல்லன், என்னைவிட வேறேயில்லை, நானே ஈஸ்வரன், அவனே நான் என்று பாவிப்பது. இது பரமசமாதியாம்.

6—வது என்னைப் பூசிப்பதில் சிரத்தை வைத்தல். 7-வது என்னுடைய மந்திரங்களை விதிப்படி ஜெபித்தல். 8—வது என்னடியார்களை நான் எனப் பாவித்துப் பூசித்தல். 9-வது பூதங்கள் எல்லாவற்றிலும், அந்தரங்கத்தில் நான் என்ற புத்தி பண்ணல்; வெளி விஷயமான இந்திரிய வியாபாரங்களில், (1) சமம், (2) தமம், (3) விடல், (4) சகித்தல், (5) சமாதானம், (6) சிரத்தை முதலிய குணங்களில் வைராக்கியம் வைத்தல்.

(1) சமம்=அகக்கரணதண்டம். அதாவது, தனம், தாரம், புத்திரர் முதலியவாகிய விஷயத்தில் மனதைச் செல்லவொட்டாமல் தடுத்தல்.
(2) தமம்=புறக்கரணதண்டம், அதாவது, ஞானேந்திரிய கர்மேந்திரியங்களை விஷயத்திற் செல்லவொட்டாமற் றடுத்தல்.
(3) விடல்=குடும்ப விவகாரங்களை வரவரச் சுருக்குதல்.
(4) சகித்தல்=பிராரத்துவ கன்மத்தால் வரும் சுகதுக்கங்களை, சமமாகப் பொறுத்து அநுபவித்தல்.
(5) சமாதானம்=சற்குருவினுல் உபதேசிக்கப்பட்ட சிரவணப் பொருளைச் சித்தம் சிந்திக்குமாறு வைத்தல்.
(6) சிரத்தை=சற்குருவினிடத்திலும், வேதாகம சாஸ்திரங்களிலும் அன்பு வைத்தல்.

இவ்விதம் பக்தியின் சாதனங்கள் ஒன்பது விதமாகின்றன.

ஓ ஸ்திரி ரத்தினமே! ஸ்திரியாயினும், புருஷனாயினும், திரியக் ஜெந்து வாகினும் இந்த சாதனங்களை யடையுமாயின் பக்தியுண்டாகும்.

ஓ பக்தி இலக்ஷணமுடைய சபரீ! பக்தியுண்டாகில், என்னுடைய தத்துவத்தின் அநுபவமுண்டாகும், அவ்விதம் என் தத்துவாநுபவத்தில் சித்தி பெற்றால் அதே ஜன்மத்தில் மோக்ஷமுண்டாகும். ஆகையால் மோக்ஷமடையக் காரணம் பக்தி யென்பது நிச்சயம். எவனுக்குப் பக்தியின் முதலாவது சாதனமுண்டாகிறதோ, அவனுக்கு மற்ற சாதனங்களுமுண்டாகிப் பக்தி யேற்பட்டு முக்தி யுண்டாகும். இப்போது நீ என்னிடம் பக்தியுள்ளவள். அதனால் உன்னைத்தேடி நானே வந்தேன். என்னைத் தரிசித்ததால் உனக்கு முக்திகிடைக்கு மென்பதில் சந்தேகமில்லை. நீ முக்தி அடையலாம்.

ஓ சற்குணம் வாய்ந்த சபரீ! என்னுடைய பிரியமுள்ள பத்தினி, தாமரை மலர் போன்ற கண்ணையுடைய சீதை எவனால் கொண்டு போகப்பட்டாள்; எங்கிருக்கிறாள்; உனக்குத் தெரிந்திருந்தால் அதை நீ எனக்குச் சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமர் கேட்டார்.

மோக்ஷ இச்சையுடைய சபரி, இந்த வார்த்தையைக்கேட்டு, எல்லாவற்றையும் அறிந்த ஓ தேவ! எல்லாவற்றையு முண்டுபண்ணின ஓ பிரபுவே! தங்களுக்கு எல்லாந் தெரியும்; ஆயினும் உலக நடையை யநுசரித்து என்னைக் கேட்டபடியால், எனக்குத் தெரிந்ததைத் தெரிவிக்கிறேன். தற்காலம் ஸீதாதேவி இராவணனால் அபகரிக்கப்பட்டு இலங்கையி லிருக்கிறாள்.

ஓ இரகுவீர! இதோ சமீபத்தில் பம்மை யென்ற ஒரு சிறந்த சரஸ் (ஓடை) இருக்கிறது, அதன் சமீபத்தில், ரிசியமுகம் என்னும் ஓர் பர்வதமிருக்கிறது. அந்தப் பர்வதத்தில், வானரங்களுக்கு அதிபனும், அக்கினிபோன்ற பராக்கிரம முடையவனுமாகிய, ஸுக்ரீவன் என்ற வானர வீரன் நான்கு மந்திரிகளுடன் இருக்கிறான். அந்த ஸுக்ரீவன் தன் பிராதாவும் மஹா பலிஷ்டனுமாகிய வாலியினிடமுண்டாகிய பயத்தால் அங்கு வசிக்கிறான். மதங்கமாமுனிவ ரிட்ட சாபத்தால் வாலி அந்த மலையில் பிரவேசிக்கிறதில்லை. அவ்விடம் தாங்கள் செல்லவேண்டும்; அந்த ஸுக்ரீவனைத்தோழனு

கக் கொள்ளவேண்டும்; அவனால் இனி நடக்கவேண்டிய காரியங்களை முடிக்கவேண்டும் என்றுரைத்தாள்.

மேலும், ஓ இரகுநந்தன! தங்களுடைய முன்னிலையில் அக்கினிப் பிரவேசமாகி, விஷ்ணுலோகமாகிய வைகுண்டம் நான் சேரவேண்டும், ஆகையால் தாங்கள் சற்று நேரம் இங்கிருக்கவேண்டுமென்று ஸ்ரீராமனை வணங்கிக் கேட்டுக்கொண்டு சபரி அக்கினியிற் பிரவேசித்தாள். அவித்தையால் ஏற்பட்ட பந்த வாசனையை ஓர் க்ஷணப்போதில் தொலைத்து ஸ்ரீராமனுடைய அநுக்கிரகத்தால் சபரி மோக்ஷத்தை யடைந்தாள்.

ஜகத்துக்கு நாதனும், பக்தர்களிடத்தில் வாற்சல்லிய முடையவனுமாகிய ஸ்ரீராமன் பிரசன்னரானால் எது தான் துர்லபமாகும்! கீழான ஜன்மமுடையவளாயினும் சபரி மோக்ஷத்தை யடைந்தாள். எக்குலத்தாராயினும், ஸ்ரீராமனைத் தியானிப்பவர் மோக்ஷ மடைவதற் கையமில்லை.

ஓ ஜனங்களே! பகவானாகிய ஸ்ரீராமச் சந்திரனிடம் வைக்கும் பக்தியானது முக்தியைக் கொடுக்கக் கூடியது. நீங்கள் மிகுதியான உற்சாகத்துடன் மனோரதங்களைக் கொடுக்கும் இராகவனிடம் பக்தி பண்ணுங்கள்.

ஆரண்ய காண்டம் முற்றிற்று.

# கிஷ்கிந்தா காண்டம்.

## முதலாவது சருக்கம்.

ஸ்ரீராமர் சபரி யாச்சிரமத்தை விட்டுப் புறப்பட்டு இலக்ஷ்மண ருடன் சரஸுகளுக்குள் சிறந்த பம்பை என்னும் சரஸின் கரைக்கு வந்து சேர்ந்தார். அந்த சரஸானது ஓர் குரோசதூர விஸ்தாரமுள் ளது; மிகுந்த ஆழமும், நிர்மலமான ஜலமும் நிறைந்து உள்ளது. அன்று மலர்ந்த தாமரை, செங்குவளை, ஆம்பல், கருநெய்தல் இந்தப் புஷ்பங்கள் நிறைந்து அலங்காரமாயுள்ளது. ஹம்சங்கள், நீர்க்காக் கைகள், முதலியவை அடர்ந்துள்ளது. நீர்க்கோழி, காடை, அன் றில் முதலிய பக்ஷிகளின் கோஷமுடையது. நானாவிதப் புஷ்பங்கள் நிறைந்த கொடிகளையுடையது; பலவித பலனுள்ள மரங்கள் சூழ்ந் தது; தேன் நிறைந்த தாமரை முதலிய புஷ்பங்களின் வாசனையும், அவைகளில் வசிக்கும் பிரமரங்களின் ரீங்கார ஒலியும் உடையது; அதைப் பார்த்து அதிலுள்ள ஸாதுக்களின் மனம் போன்று நிர்மல மான அந்த சரஸின் ஜலத்தை இலக்ஷ்மணருடன் இராகவன் பானம் பண்ணி சிரம பரிகார மடைந்து, குளிர்ச்சியுள்ள அப்பம்பையின் கரை மார்க்கமாகவே வில்லையும், பாணத்தையும், தாங்கினவர்களும், இந்திரிய நிக்கிரகமுள்ளவர்களும், சடையையும், மரவுரியையும் தரித் தவர்களும், அழகான காலடிவைப்புடையவர்களும், பலவித விருக்ஷங் களையும், மலையின் சோபையையும் பார்க்கிறவர்களுமாகிய ஸ்ரீராம இலக்ஷ்மணர்கள் பம்பைக் கரையை யடுத்த ரிசியமூக மலையின் பக்க மாகச் சென்றார்கள்.

அச்சமயம் ஸுக்ரீவன், நான்கு வானரர்களுடன் அப்பருவதத் தின் சிகரத்திலிருந்து, மலைப்பக்கத்தில் வரும் ஸ்ரீராம இலக்ஷ்மணர் களைக் கண்டான். கண்டவுடன் பயங்கொண்டு, அனுமானைப்பார்த்து, "ஓ அஞ்சனேயரே! நீர் சென்று, வீரசிரேஷ்டர்களும், ஒருவருக்கொரு வர் சமமானவர்களும், ஆகிய அவ்விருவரும் யார் என்று விசாரித் தறிந்து வரவேண்டும், உமக்கு நன்மை யுண்டாகவேண்டும், அவ்

விருவரும் வாலியால் அனுப்பப்பட்டு என்னைக் கொல்லுவதற்கு வந்தவர்களா வென்பதை யவர்களுடன் சம்பாஷணை செய்து தெரிந்து கொள்ளும், அவர்கள் தோஷமுள்ள மனமுடையவர்களாயின், எனக்கு உம்முடைய கையால் ஜாடை காட்டும், யோக்கியமான மனமுடையவர்களாயின் அவர்களை யிங்கு அழைத்து வாரும்" என்று சொல்லி யனுப்பினன்.

ஆஞ்சநேயர் அதைக் கேட்டு அவ்விடமிருந்து கீழே வந்து, இராமர், இலக்ஷ்மணர் இவர்களைக்கண்டு, பக்தி வினயத்துடன் வணங்கிக் கூறுகிறார்.

"ஓ புருஷ சிரேஷ்டர்களே! நீங்கள் வீரர்களென்று நிதானிக்கக்கூடியவர்கள், சூரியனைப்போல் காந்தியால் திசைகள் எட்டும் பிரகாசிக்கச் செய்பவர்கள். நீங்கள் மூவுலகங்களையும் சிருஷ்டிப்பவர்களென்று நான் நினைக்கிறேன். நீங்கள் முக்கியபுருஷர்கள், உலகுக்குக் காரணமாகியவர்கள். மாயையால் மானிட வடிவம் எடுத்து விளையாட்டாகச் சஞ்சாரம் செய்பவர்கள் போன்றவர்களாகிறீர்கள். பூபாரத்தை யொழிப்பதற்கும், பக்தர்களைக் காப்பதற்கும் அவதாரம் செய்த பரம புருஷர்கள் போலக் காணப்படுகிறீர்கள். நீங்கள் க்ஷத்திரியவடிவ முடையவர்கள். உலகத்தின் ஸிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் இவைகளை லீலையால் செய்ய எத்தனமுடையவர்கள். சுவதந்திரர்கள் எல்லோரையும் பிரேரணை செய்பவர்கள். எல்லோருடைய இருதயத்திலிருக்கும் ஈஸ்வரனைப் போன்றவர்கள். உலகத்தில் சஞ்சரிக்கும் நர நாராயணர்களென்றே நான் உங்களை ஊகிக்கிறேன். நீங்கள் யார் எனக்கருளவேண்டும்" என்று கூறினு

ஆஞ்சநேயர் கூறிய வார்த்தையைச் செவிக்கேற்ற ஸ்ரீராமர் இலக்ஷ்மணரைப்பார்த்து, "ஓ இலக்ஷ்மணா! பிரமசாரி வேடம் பூண்ட இவரைப்பார். இவர் வியாகரணம் முதலிய சாஸ்திரத்தையும் பூராவாகப்படித்தவர் என்பது நிச்சயம். இவர் பேசும் வார்த்தை யாவற்றிலும் கொஞ்சமேனும் அபசப்த மில்லையே" என்றார்.

இலக்ஷ்மணர் ஓ அண்ணு நானும் அவ்வாறே மதிக்கிறேன் என்றார்.

பிறகு ஞான சொரூபணுகிய ஸ்ரீராமர் அனுமாரைப் பார்த்துக் கூறுகிறார். "ஓ அந்தணர் போன்றவரே! நான் தசரதமகா ராஜா

வினுடைய குமாரன், என் பெயர் இராமன், இவன் என்னுடைய தம்பி, இலக்ஷ்மணன் என்னும் நாமம் உடையவன். நான் பிதுர் வாக்கிய பரிபாலனார்த்தமாக, என் தம்பியுடனும், என் மனைவி ஸீதை யுடனும், தண்டகாரண்யம் வந்திருந்தேன். பஞ்சவடிதீரத்தில் நாங் கள் வசிக்கும்போது என்மனைவி ஸீதையை ஒரு இராக்ஷசன் அபகரி த்துக் கொண்டு போய் விட்டான், அவளைத் தேடிக் கொண்டு வரு கிறோம் என்று கூறி, நீர் யார்? யாரைச் சேர்ந்தவர், எங்கு வந்தீர், உம்வரலாறு என்ன, சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

ஆஞ்சனேயர் ஸ்ரீராமரை நோக்கி, "ஓ வீரசிரேஷ்டரே! நான் வாயு குமாரன். அஞ்சனையின் கர்ப்பத்தில் உதித்தவன். என் பெயர் அனுமான் என்று சொல்வார்கள். ஸுக்ரீவருடைய மந்திரி யாயிருப்பவன். எனது அரசனாகிய ஸுக்ரீவர், வானரர்களுக்கு அரசனாகியும் மிக்க பராக்கிரம சாலியும், மகா வரப்பிரசாதனுமாகிய வாலியின் இளைய சகோதரர், மிகுந்த சக்தியுள்ளவர், ரிசியமூக மலையின் சிகரத்தில் நான்கு மந்திரியுடன் இருக்கிறார். அவர் தமய னாகிய வாலி, அவருடைய பத்தினியை அபகரித்துக் கொண்டு தன் னாட்டை விட்டுத்துரத்தி விட்டான். மதங்க ரிஷியின் சாபம் வாலி இந்த மலைக்கு வருவதற்குத் தடையாயிருக்கிறது. ஆகையினால் உயிர்தப்பித்துக்கொண் டிருக்கிறார். அவருடன் தாங்கள் சிநேகம் செய்துகொள்வது உசிதமாகும், அவர் உங்களுடைய பத்தினியை அபகரித்தவனை வெல்லத் தங்களுக்குத் தகுந்த தோழனாவார். இஷ்டமிருந்தால், இப்போதே போகலாம் வாருங்கள்" என்று மிகு ந்த வணக்கத்துடன் தன் வரலாற்றைக் கூறினார்.

அப்பொழுது ஸ்ரீராமர், ஓ கபி சிரேஷ்டனே! நானும் அந்த ஸுக்ரீவனுடன் சிநேகம் செய்துகொள்ளவே வந்தவன், அந்த மித் திரனுக்கு என்ன காரியம் ஆகவேண்டுமோ அதை நான் செய்கி றேன், சந்தேகமில்லை யென்றார்

பிறகு, அனுமார் விஸ்வரூபத்துடன் தோன்றி நமஸ்கரித்து, ஓ வீர சிரேஷ்டர்களே! நீங்களிருவரும் என் தோள் மீதிலேறிக் கொள்ளுங்கள், மலையின் மீதேறி ஸுக்ரீவர் இருக்கும் இடத்துக்குச் செல்வோம் என்று கேட்டுக்கொண்டார்.

அதற்கிசைந்து, இராமரும், இலக்ஷ்மணரும் அனுமார் தோளி லேறிக்கொண்டார்கள். மஹா கபியாகிய ஆஞ்சனேயர் ஒர் க்ஷணத்

தில் பருவத சிகரத்துக்குக் கிளம்பி, ஸுக்ரீவனிருக்கு மிடத்திற் கருகாமையில் வந்து ஓர் மரத்தின் நிழலில் இருவரையும் இறக்கிவிட, இராம லக்ஷ்மணு ளிருவரும் அம்மரத்தின் நிழலில் வீற்றிருந் தார்கள்.

அனுமார் ஸுக்ரீவனிடம் சென்று, அஞ்சலிபந்தனுய் நின்று, கபி அரசனே தாங்கள் குறிப்பிட்டவர்கள், ஸ்ரீராமர் இலக்ஷ்மணர் என்ற திருநாமம் பூண்ட அரச குமாரர்கள். அதோ அம்மரத்து நிழ லில் இருக்கிறார்கள். அவர்களுடைய சிநேகம் தங்களுக் குண்டா கும்படியான முயற்சி செய்திருக்கிறேன், சீக்கிரம் எழுந்தருளுங் கள், நாம் அங்கு செல்வோம். அவர்களிடம் சென்று அக்கினியைச் சாக்ஷியாக வைத்துக் கொண்டு அந்த இராகவருடன் சிநேகம் பண் ணிக்கொள்ளுங்கள் என்று கூறினுர்.

இதைக்கேட்ட ஸுக்ரீவன், மட்டற்ற சந்தோஷத்துடன் அனு மாருடன் கூட இராமர் இலக்ஷ்மணர் இருக்கும் மரத்தடியில் வந்து, மரத்தின் ஓர் கிளையை ஒடித்து வெகு பிரியத்துடன் ஆசனம் என்று கூறி இரகுவீரர் கையிற் கொடுத்தான். அனுமார் ஓர் கிளையை முறித்து இலக்ஷ்மணர் கையில் கொடுத்தார். இலக்ஷ்மணர் அதை வாங்கி, ஸுக்ரீவனிடம் கொடுத்தார், எல்லாருமாக மனமிசைந்த களிப்புடன் உட்கார்ந்தார்கள்

அந்த சந்தர்ப்பத்தில் இலக்ஷ்மணர் ஸ்ரீராமருடைய விருத்தாந் தத்தை, ஆதியோடந்தமாக ஸுக்ரீவனிடம் கூறி, தாங்கள் வன வாசம் செய்ய வந்ததையும், வந்த இடத்தில் ஸீதையை யிழந்ததை யும் எடுத்துச் செப்பினுர்

ஸுக்ரீவன் இலக்ஷ்மணர் உரைத்த மொழிகளைக் கேட்டுத் திகைத்த மனதுடையவனுய், சற்றுலோசித்து, இராமனை நோக்கி ஓ இராம! நான் ஸீதையைத் தேடும்படி செய்கிறேன், சத்துருக்க ளைச் சங்கரிக்குந் தங்களுக்குத் தகுந்த உதவிபுரியக் கூடியவனுயு மிருக்கிறேன். மேலும், தற்கால சமீபத்தில் நான் ஓர் அற்புதத் தைப் பார்த்தேன் அதையும் இப்போது தங்களிடம் அறிவிக்கி றேன். அதாவது, ஓர் சமயம் மந்திரிகளுடன் இம்மலையின் சிகரத் திலிருந்தேன். அப்போது, யாரோ ஓர் உத்தம ஸ்திரீயானவள் எவனே இராக்ஷசன் ஒருவனல் அபகரிக்கப்பட்டு, ஆகாசமார்க்க மாகச் செல்லும் போது, அவ்வுத்தமி ஓ இராம! ஓ இராம! என்று

அலறிக் கொண்டு சென்றுள. அந்தரத்தில செலலும் அம்மஙகையர்க காசி, இந்தச் சிகரத்தில் வசிக்கும் எங்களைக் கண்டு, தன் ஆபரணங்களைக் கழற்றி, முன்தானைத்துண்டில் முடிச்சுக்கட்டி, கீழ்நோக்கிப் போட்டாள். அந்த இராக்ஷசன் அந்த ஸ்திரியை யபகரித்துக் கொண்டோட அந்தரத்தில் சென்றுன்.

ஓ பிரபுவே! நான் அந்த ஆபரண முடிச்சை யெடுத்து குகைக்குள் கொண்டு போய் வைத்தேன். அந்த முடிச்சு இதோ இருக்கிறது என்று கூறி அதை யெடுத்து வந்து இராமரிடங் கொடுத்து, இது தங்களைச் சார்ந்ததா இல்லையா பாருங்கள் என்றுரைத்தான்

இராமர் ஆபரணமுடிச்சை யவிழ்த்துப் பார்த்து, அதிலிருந்த ஆபரணங்களை யெடுத்து மார்போ டணைத்து, ஆ ஸீதே! ஆ ஸீதே!! என்று அடிக்கடியுரைத்து, பிராகிருத புருடனைப் போல் கதறினர்.

இதைக் கண்ணுற்ற இலக்ஷ்மணர், இரகுவீரரை நோக்கி "ஓ அண்ணு! தாங்கள் இந்த வானர சிரேஷ்டனுகிய ஸுக்ரீவனுடைய தோழமையைக் கொண்டு, யுத்தத்தில் இராவணனை வென்று பதிவிரதையாகிய ஸீதையை விரைவாகவே யடையலாம்; தாங்கள் இவ்வாறு மனக்கிலேசப்படுவது தங்களுக்கு அடாத காரியம்" என்று தடுத்து, ஸ்ரீராமரைச் சமாதானப் படுத்தினர்.

அக்காலம் ஸுக்ரீவனும், ஓ இராமப் பிரபுவே! அநீதியாக ஸீதையை யெடுத்துச் சென்ற இராவணனை யுத்தகளத்தில் தங்களால் மடிவிக்கச் செய்து ஜானகியைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்க்கிறேன் என்று பிரதிஞ்ஞை செய்தான்.

இவ்விருவர் மொழிந்ததைக் கேட்ட ஸீதைபிரான் ஒருவாறு மனந்தெளிந்தவராக வீற்றிருந்தார்.

பிறகு அனுமார் இராம ஸுக்ரீவர்களுக்குச சமபததில அக்கினியை வளர்த்தார். அந்த அக்கினி பகவான் சாக்ஷியாக இராமரும் ஸுக்ரீவனும், கைகளை நீட்டிக் கல்மஷமன்றி ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் செய்து சினேகம் செய்துகொண்டார்கள்.

இரகுநாதர் தன் சமீபத்தில் ஸுக்ரீவன், அனுமார் இருவருமிருக்க, பக்கத்தில் இலக்ஷ்மணருடன் ஓரிடத்தில் அமர்ந்தார்.

அப்போது ஸுக்ரீவனைப் பார்த்து ஓ தோழ! உம்முடைய வரலாறு என்னவென்று கேட்டார். ஸுக்ரீவன் ஓ கோதண்டராம!

என்னிடம் தீதண்டாவாறு காக்க, என் வரலாற்றைக் கேட்கவேண்டும் என்று வணங்கி, ஓ நண்ப ! சில காலத்துக்குமுன் மயன் புத்திரனாகிய மாயாவி யென்ற மிக்க கருவமடைந்த அசுரன் ஒருவன் சிங்க கர்ச்சனை செய்துக்கொண்டு கிஷ்கிந்தைக்குவந்து வாலியைப் போருக்கழைத்தான், வாலி யதைக்கேட்டுப் பொறுக்காமல் அரக்குபோல் சிவந்த கண்களுடையவனாகி, வெளிப்பட்டு வந்து, மாயாவியைத் திடமாக ஓர் குத்துக் குத்தினான். அந்தக் குத்தினால் அவன் துன்பமடைந்து பொறுக்கமாட்டாமல் தன்னிருப்பிடத்தை நாடிச் சென்றான். அவ்வரக்கனைப் பின்பற்றி வாலியும் நானும் தொடர்ந்தோம். அவன் ஓர் குகைக்குள் நுழையக்கண்ட வாலி அதிகோபத்துடன் என்னைப் பார்த்து, நீ இக்குகையின் வெளிப்புறத்திலேயே யிரு, நான் குகைக்குள் செல்லுகிறேன் என்றுகூறி யதனுட் சென்றான்; ஒரு மாதகாலம் வரை வாலி வெளியில் வரவில்லை. அதற்குமேல் பிலத்துவாரத்தின் வழியாக இரத்தப் பிரவாகம் வெளிப்பட்டது, அதைப் பார்த்து நான் வாலி அகஸ்மாத்தா யகப்பட்டுக்கொண்டு மரணமடைந்து விட்டான் என்று மிக்க துயரமடைந்து, மிகுந்த பரிதாபமடைந்தவனாகி குகையின் வாசல்படியில் ஓர் பெரிதான கற்பாறையை யெடுத்து வைதது வழியை மூடிவிட்டு கிஷ்கிந்தைவந்து சேர்ந்தேன். பிறகு அக்குகைக்குட் சென்ற வாலி மாயாவி என்ற அசுரனால் அடிபட்டுப் பிராணனை யிழந்தானென்று வானரர்களுக்கறிவித்தேன். அதைக்கேட்ட வானரர்கள் யாவரும் வருத்தமுற்றார்கள். பிறகு வானரர்களும் வானர மந்திரிகளும், அரசாக்ஷியில் நான் விருப்பமில்லாதவனாயினும் என்னை அரசாளும்படி யெனக்கு முடிசூட்டினார்கள்.

சத்துருக்களைச் சங்கரிக்குந் திறமைவாய்ந்த ஓ இராமப் பிரபு ! கொஞ்சகாலம் சென்று வாலி வந்தான். வந்தவன் எனக்கு முடிசூட்டின விஷயத்தைக்கேட்டு, கோபங்கொண்டு என்னைப் பார்த்துக் கடுமையாகப் பேசியும், என்னை அடித்தும், குத்தியும், இன்னும் பல விதமான ஹிம்சைகளையும் செய்தான். அவன் செய்த கொடுமைச் செயல்களைப் பொறுக்கமுடியாமல் நான் கிஷ்கிந்தையைவிட்டுப் புறப்பட்டு, பயத்தோடு வெளிப்பட்டு உலக முழுமையும் சுற்றிக் கடைசியாக ரிசியமூகமலையடிகரு வந்தேன். அந்த மலைக்கு வாலி வரக்கூடாதென்றும், வந்தால் அவன் தலை சிதறிவிழக் கடவதென்றும்,

மதங்க முனிவரிட்ட சாபம் எனக்கு ஞாபகத்துக்கு வந்தது. ஆனது பற்றி வாலி யிந்த மலைக்கு வரமாட்டானென்று துணிந்து இம்மலையின் மீதேறி வசித்து வந்தேன். பிறகு துர்ப்புத்தியுடைய வாலி என் மனைவியையும் அபகரித்துக் கொண்டான். நான் என் பெண்டையுமிழந்து ஆச்ரயமும் (ஒருவனை யடைப்பது) இல்லாமல் துக்கத்தால் தாபமடைந்து அது முதல் இங்கு வாசஞ் செய்கிறேன். இப்போது தங்களுடைய பாதங்களைத் தரிசித்ததால் சுகமடைவேன் என்று தன் வரலாற்றைக் கூறினன்.

மித்திரனுகிய ஸுக்ரீவனுக்குற்ற துக்கத்தால் வருத்த மடைந்த தாமரைக் கண்ணனுகிய ஸ்ரீ இராமர், ஓ ஸுக்ரீவ! உன் மனைவியை யிச்சித்தவனும், உனக்குச் சத்துருவுமாகிய வாலியை விரைவாக வதம் செய்கிறேன் என்று ஸுக்ரீவனுக்குப் பிரதிஞ்ஞை செய்து கொடுத்தார்

இதை கெட்ட ஸுக்ரீவன், ஓ இராஜ சிரேஷ்டரே! வாலியானவன் மஹாபலசாலிக்குள்ளும் பலமுடையவன்; தேவர்களாலும் வெல்லுதற்கு முடியாதவன்; அவ்வித வாலியைத் தாங்கள் எவ்விதம் வதம் செய்வீர்கள். பலசாலிகட்குள் சிரேஷ்டனுகிய இரகுவீர! அவனுடைய பலத்தைக் கூறுகிறேன் கேளுங்கள்.

ஓ இராம! ஒரு சமயம் பருவதம்போற் பெருத்த சரீரமுடைய துந்துபியென்ற அசுரன், காரைப்போலக் கறுத்த நிறமுடைய மகிட (எருமை) ரூபத்தைப் பெற்றவன்; மஹா பராக்கிரமசாலி; பார்க்கப் பயங்கரமாகிய அவ்வரக்கன் கிஷ்கிந்தைக்கு நள்ளிரவில் வந்து யுத்தம் செய்வதற்காக வாலியை யழைத்தான். அதைக் கேட்ட வாலி வெளியே வந்து கோபம் மூண்டு தனக்கெதிரில் நின்ற துந்துபியாகிய எருமையின் இரண்டு கொம்புகளையும் பிடித்துப்புரட்டித் பூமியிற் றள்ளி, ஒரு பாதத்தால் அதன் சரீரத்தை மிதித்துக் கொண்டு தன்னிரு கரங்களாலும் அதன் சிரசைத்திருகிச் சுழற்றி ஆகாயத்தில் எறிந்தான். அந்தச் சிரமானது மதங்க முனிவரின் ஆச்சிரமத்திற் கருகே ஒரு யோஜனை தூரத்தில் விழுந்தது. அச்சிரத்தினின்று பெருகும் இரத்த வெள்ளப் பெருக்கானது அம்முனிவர் ஆச்சிரமப் பிரதேச மெங்கும் பரவியது. அந்த மகிஷ இரத்தம் புனித முற்ற தம்மாச்சிரமத்திற் புகுதக் கண்ட மதங்க முனிவர் கோபத்தால்

வேறுபட்ட மனத்தினராகித்தமக்குள் ஆலோசித்து இதற்குக் காரணபூதனை வாலியைக் கூவி, இனி நீ என்னுடைய மலைக்கு வருவாயாகில், உன் மண்டை சிதறி மரணமடையக் கடவாய் சந்தேகம் இல்லையென்று சாபம் கொடுத்தார். ஓ இராகவ! துந்துபியின் மலைபோன்ற அம் மண்டையோடு இன்னும் அங்கேயே கிடக்கிறது. அந்த மண்டை ஓட்டைப் பாருங்கள்; அதை யெடுத்து எட்டிப்போடுவீர்களானால் தாங்கள் வாலியை வதை செய்யும் சக்தி பெற்றவராவீர்கள் என்றுரைத்து இரகு நந்தனரை யழைத்துக் கொண்டு போய் பருவதம் போன்ற அந்த மண்டை யோட்டை அவருக்குக் காண்பித்தான்.

ஸ்ரீராமச் சந்திரர் அதைப் பார்த்துப் புன்னகை செய்து தன் கால் கட்டை விரலால் இடறி அநதத்தலை ஓட்டைப் பத்துயோஜனை தூரத்துக்கப்பால் எறிந்தார், அது ஓர் ஆச்சரியமாகக் காணப்பட்டது. அதைக் கண்ட ஸுக்ரீவன் மந்திரிகளுடன் நன்று! நன்று!! என்று பேசினன்

பிறகு ஸுக்ரீவன், பக்தர்களுக்கு முக்கிய கதியாகிய இரகுநந்தனரைப் பார்த்து, ஓ இரகுசிரேஷ்டரே! ஓங்கி வளர்ந்தனவும், மிக்க உறுதியுள்ளனவுமாகிய ஏழு சாலவிருக்ஷங்களையும் தாங்கள் பார்க்க வேண்டும். வாலியானவன் அவைகள் ஒவ்வொன்றையும் தன் கைகளால் பற்றி அசைத்துத் தன் வலுவால் அவைகளின் இலைகளை யுதிர்ப்பான். அவ்விருக்ஷங்கள் ஒரு வரிசையி லிராமல் சர்ப்பகோண வரிசையாக ஒன்றைவிட்டு ஒன்று நிலைபெற்றிருக்கின்றன. தாங்கள் அந்த விருக்ஷங்களை ஒரே பாணத்தால் அவைகளின் நிலையைப் பேதித்து அவ்வேழு விருக்ஷங்களிலும் துவாரங்க ளுண்டாகும்படி செய்வீர்களாகில், தங்களால் வாலி மரணமடைவான் என்று எனக்கு நம்பிக்கை யுண்டாகும் என்றான்.

இராமர் அங்கு சென்று அந்த ஸாலவிருக்ஷங்களைப் பார்த்து, தன் வில்லை வளைத்து நாணேற்றியோர் பாணத்தைப் பூட்டி அவ்விருக்ஷங்களின்மேல் விடுத்தார். அந்தப் பாணமானது வில்லினின்று புறப்பட்டு அவ்விருக்ஷங்கள் ஏழையுந் துளைத்து, சர்ப்பகோணத்திலிருந்த அவற்றின் நிலைகளையும் பேதித்து ஒரு வரிசையில் நிலைக்கச் செய்து மறுபடியும் இராமருடைய அம்புறையில் வந்து புகுந்தது.

இதைக்கண்ட ஸுக்ரீவன் மிகுதியான ஆச்சரியமடைந்து மிக்க சந்தோஷத்துடன் இராமரிடம் கூறுகிறான்.

ஓ தேவ! நீங்கள் உலகங்களுக்கு நாதனாகியவர், பரமாத்மா; சந்தேகமில்லை. நான் முன் செய்த தபோபலத்தால் தங்களுடைய சேர்க்கையை யடைந்தேன். மஹாத்மாக்கள் அவர்களுடைய சம்சார பந்தம் நிவர்த்தியடையத் தங்களைப் பஜனை செய்கிறார்கள், மோக்ஷத்துக்கு ஒத்தாசை செய்யுந்தங்களை நான் அடைந்திருக்க, எவ்விதம் சம்சார சம்பந்தமானவைகளைப் பிரார்த்திப்பேன். மனைவி, மைந்தர், ஐஸ்வரியம், இராஜ்யம் இவைகளி லுண்டாகும் இச்சை மாயையால் ஏற்பட்டது.

ஓ தேவதேவே! இப்போது நான் மற்ற எதையும் விரும்பவில்லை. எனக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும். இப்போது தங்கள் சேர்க்கைப்பாக்கியத்தால் ஆனந்தத்தின் அநுபவத்தையடைந்தேன். ஸாதுக்களுக்குப் பதியாகிய ஓ இராகவ! இப்போது தாங்கள் எனக்காக, என்னைப்போன்ற சமமான உருவத்துடன் வந்தவர். அனாதியான அவித்தையின் பந்தமானது சேதமடைந்தது. இந்த அவித்தையின் பந்தமானது, யாகத்தாலும், தானத்தாலும், கருமத்தாலும், எவ்வித புண்ணியத்தாலும் நாசமடையாது.

ஓ பிரபுவே! தங்களுடைய ஸ்ரீபாதங்களைத் தரிசிப்பதால் உடனே பந்தமானது நாசமடையும், சந்தேகமில்லை. எவனுடைய மனம் அரைக்ஷணநேரமாவது தங்களிடம் அசையாமல் நிற்கிறதோ அவனுடைய அனர்த்தங்களுக்கு, மூலகாரணமான அஞ்ஞானமானது அந்த க்ஷணத்தில் நாசமடையும்.

ஓ இராமச்சந்திர! அந்தமனம் தங்களிடமோ அல்லது மற்ற விடத்திலோ இருந்தபோதிலும், எப்போதும் எவனுடைய வாக்கானது இராம! இராம! என்று இனிமையாகக் கானம்செய்கிறதோ அவ்வாக்குடையவன் பிர்மஹத்தி செய்தவனாயினும், ஸுராபானம் செய்தவனாயினும் பாதகங்கள் யாவற்றிலும் நின்று விடுபடுகிறான். நான் ராஜ்யத்தை விரும்பவில்லை; மனைவி, சுகம் முதலியவற்றையும் விரும்பவில்லை; சம்சாரபந்தத்தை விடுவிக்கும், தங்களிடம் வைக்கும் பக்தியையே விரும்புகிறேன்.

ஓ இரகு சிரேஷ்ட! நான் தங்களுடைய மாயையால் இந்த தேகம் எடுத்தவன், தங்களுடைய அம்சமானவன். தங்களுடைய

சரணபக்தியை ஆசிரயித்திருக்கிறேன். என்னை சம்சார உபத்திரத்தில் நின்று காப்பாற்றவேண்டும், தங்களுடைய மாயை சூழ்ந்த மனமுடைய எனக்குத் தங்களுடைய பாதார விந்தங்களின் தரிசனத்தால், மித்துரு, சத்துரு என்ற விஷயங்களில் வெறுப்புண்டாயிற்று. யாவற்றும் எனக்குப் பிரமமாகவே தோற்றுகிறது. எனக்கு மித்திரன் யார், சத்துரு யார்? எதுவரையில் தங்களுடைய மாயையில் கட்டுண்டார்களோ அதுவரையில் அவர்களுக்குக் குண விசேஷங்களிருக்கின்றன. அந்த மாயை எதுவரையில் இருக்கிறதோ அதுவரையில் பலவிதமான தோற்றமுண்டாகிறது. எதுவரையில் பலவிதமான தோற்றமுண்டாகிறதோ அதுவரையில் காலனால் பயமுண்டாகிறது. ஆகையால் அவித்தையை எவன் உபாசிக்கிறானோ அவன் இருள்போன்ற அஞ்ஞானத்தில் முழுகி விடுகிறான். பெண்டிர், பிள்ளை முதலிய பந்தங்கள்யாவும் மாயையின் காரணம்.

ஓ இரகூத்தம! தாஸனாகிய என்னை விட்டுத் தங்கள் மாயையை விலகும்படி செய்யவேண்டும். என்மனமானது சதா தங்களுடைய பாதபத்மங்களிலும், என் வாக்கானது தங்களுடைய நாமங்களை ஜெபிப்பதிலும், என்னிருகைகளும் தங்களுடைய பக்தர்களைச் சேவிப்பதிலும், என் சரீரமானது தங்களுடைய சரீர ஆலிங்கனத்திலும் உபயோகப்படவேண்டும். என்னுடைய நேத்திரங்கள் தங்களையும், தங்கள் மூர்த்திகளையும் தங்கள் பக்தர்களையும் என் குருவையும் எப்போதும் தரிசிக்கவேண்டும். என் செவியானது தங்கள் அவதாரச் சரிதைகளைக் கேட்கவேண்டும். என்னிரு பாதங்களும் தங்களுடைய ஆலயங்களுக்குச் செல்லவேண்டும். என்னுடைய அவயவங்கள் தங்கள் பாத தூளிகலந்த பரிசுத்த வஸ்துக்களைத் தரித்துக் கொள்ளட்டும். என்னுடைய சிரமானது, பிரமன், இந்திரன் முதலியவர்களால் வணங்கப் பட்ட தங்களுடைய ஸ்ரீபாத கமலங்களையே எப்போதும் வணங்க வேண்டும். இவ்விதம் என் பேரில் கிருபை கூர்ந்து என்னை இரக்ஷித்து ஆளவேண்டும் என்று பிரார்த்தனை செய்து ஸ்தோத்திரம் செய்தான்.

# இரண்டாவது சருக்கம்.

---

இராகவர், தன்னுடைய பரிஸ விசேஷத்தால் மாயையை ஜெயித்து மோக்ஷவிருப்பத்துடன் ஸுக்ரீவன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு புன்னகை கொண்டு, காரியம் நிறைவேறுவதற்காக அந்த ஸுக்ரீவனிடம் மோகத்தை யுண்டுபண்ணும் மாயையைப் பிரவேசிக்கச் செய்தார்.

பிறகு ஸ்ரீராமர் ஸுக்ரீவனைப் பார்த்து, "ஓ நண்ப! நீர் என்னிடம் கூறிய தெல்லாம் உண்மையே, சம்சயமில்லை. ஆயினும் மாயா சம்பந்தத்தினால் ஈஷணாத்திரயத்தில் (மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை) கட்டுப்பட்ட பூலோகவாசிகளாகிய ஜனங்கள், என்னைப் பற்றி இந்த இரகுநந்தனர், அக்கினி சாக்ஷியாகச் சிநேகம் செய்து கொண்டு ஸுக்ரீவனுக்கு என்ன உபகாரத்தைச் செய்தார், எந்த பிரயோஜனத்தை யடைந்தான் ஸுக்ரீவன் என்று கூறுவார்கள், அதனால் லோக அபவாதம் எனக்குண்டாகும். ஆகையால் உமக்கு மங்கள முண்டாகும்படி, வாலியைச் சம்ஹாரித்து, கிஷ்கிந்தையை உமக்கு முடி சூட்டிவைக்கிறேன். நீர் வாலியிடஞ் சென்று யுத்தத்துக்கு வாவென்று அழையும், அப்போது வாலியை ஒரே பாணத்தால் வதம் செய்கிறேன் என்று கூறினார்.

ஸுக்ரீவன் அவ்விதமே செய்கிறேன் என்று வணங்கி விடைபெற்றுக் கொண்டு, விரைவாகக் கிஷ்கிந்தைக்கு அருகிலுள்ள தோட்டத்தில் சென்று, உரத்த சப்தத்துடன் வாலியைச் சண்டைக்கு அழைத்தான். தன்னுடன் பிறந்த ஸுக்ரீவன் தன்னைச் சண்டைக்கு வாவென்றழைத்த சப்தத்தைக் கேட்ட வாலி இதென்ன வாச்சரியமாயிருக்கிறது என்று சற்று ஆலோசித்து, நல்லது! இருக்கட்டும்!! இவன் நம்மை சண்டைக்கு வாவென்று கூப்பிடக்கூடக் காலம் நேர்ந்து விட்டதா, என்று கோபம் பொங்கி அக்கினிப் பொறிபறக்கச் சிவந்த கண்களுடன் தன் கிரகத்தில் நின்று புறப்பட்டு வேகமாகச் ஸுக்ரீவன் இருக்கும் இடம் வந்தான். ஆங்காரத்துடன் வந்த வாலியைப் பார்த்து ஸுக்ரீவன் ரோஷத்துடன் எதிர்த்து அவன் மார்பில்

அறைந்தான். அறைபட்ட வாலி கோபங்கொண்டு ஸுக்ரீவன் மார்பில் இரண்டு குத்துக் குத்தினன்.

ஒரோ ரூபமுடைய அவ்விருவரும் ஒருவருக்கொருவர் வீர ஆவேசமுண்டாகிப் போர் புரிந்தார்கள்.

அச்சமயம் இராமர் ஒரே ரூபத்துடன் யுத்தம் பண்ணும் அவ்விருவரையும் பார்த்து ஆச்சரிய மடைந்து தாம் பாணப்பிரயோகம் பண்ணினால் எங்கு ஸுக்ரீவனுக்கு அபாயம் நேரிடுமோ என்று சந்தேகம் கொண்டு பாணத்தைப் பிரயோகிக்கவில்லை.

வாலி, ஸுக்ரீவன் இருவரும் கடுமையான போர் புரிந்து கடைசியில் ஸுக்ரீவன் வாலியால் குத்துண்டு வாயால் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு போர்க்களத்தை விட்டு ஓடினன். வாலி தன்னில்லம் சென்றான்.

ஓடி வந்து ஸுக்ரீவன், ஸ்ரீராமரைப்பார்த்து, "ஓ இராம! என் தமையனாகிய சத்துருவைக்கொண்டு என்னை ஏன் அடிக்கும்படி செய்தீர். ஓ பிரபுவே! என்னை இம்ஸிக்க விருப்பமிருந்தால், நீரே என்னைத் தண்டிக்கலாமே.

ஓ சத்தியவந்தரே! சரணம் புகுந்தவர்களிடம் தயை யுடையவரே, ஓ இரகு சிரேஷ்டரே! இம்மாதிரி எனக்குப் பிரதிஞ்ஞை செய்து, பிறகு ஏன் என்னை உபேக்ஷை செய்கிறீர்" என்று மனங் கலங்கிக் கேட்டான்.

இத்தகைய ஸுக்ரீவன் சொல்லைக்கேட்டு இராமர், கண்ணீர் பெருகியகண்களுடன், அவனை அணைத்து "ஏ ஸுக்ரீவ! பயப்படாதே, நீங்கள் இருவரும் ஒரே ரூபமுடையவர்களாக இருந்ததால் மித்திரனாகிய உமக்கும் வதை நேருமோ வென்ற சந்தேகத்தால் நான் பாணப் பிரயோகம் பண்ணவில்லை. நீர் யோசிக்கவேண்டாம்" என்று கூறி, "நான் அந்தப் பிரமை நீங்குவதற்காக உமக்கு இப்போதே அடையாளம் ஏற்படுத்தி யனுப்புகிறேன். மறுபடியும் விரைவாகச் சென்று வாலியைக் கூப்பிடும், அப்போதே வாலி மரணம் அடையப் பார்ப்பீர். மேலும் ஓ பிராதாவே! நான் உமக்குச் சபதம் செய்கிறேன். நான் இராமனானால் ஓர் க்ஷணத்தில் உம் சத்துருவை வதம் செய்கிறேன்" என்றுரைத்து, இராமர் ஸுக்ரீவனைச் சமாதானம் செய்து, இலக்ஷ்மணரைப் பார்த்து, "ஓ இலக்ஷ்மண! அடையாளந் தெரிந்து

கொள்வதற்காக, புஷ்பமுள்ள கொடி ஒன்றை யெடுத்து ஸுக்ரீவ னுடைய கழுத்தில் கட்டி, மகா பாக்கியம் செய்த இந்த ஸுக்ரீவனை வாலியிடம் அனுப்பு" என்று கூறினர்.

இலக்ஷ்மணரும் அவ்வாறே ஒரு பூக்கொடியைக் கட்டி ஆதர வுடன் போம், போம் என்று ஸுக்ரீவனை யனுப்பினர்

ஸுக்ரீவனும் அவ்விதமே சென்று ஆச்சரியமான சப்தமிட்டு மறுபடியும் வாலியைச் சண்டைக்குக் கூப்பிட்டான்.

இல்லஞ் சென்ற வாலி மறுபடியும் இக்கூக்குரலைக் கேட்டு, ஆடை ஆபரணங்களை யணிந்து யுத்தத்துக்குச் செல்ல முயன்றான்.

இதைக் கண்ட வாலியின் பத்தினியாகிய தாரை, புருஷனைப் பார்த்து, இப்போது தாங்கள் போகவேண்டாம். எனக்கு மிகுதி யான சந்தேகம் உண்டாகிறது, ஏனெனில், ஸுக்ரீவன் இப்போது தான் அவமான மடைந்து போனன். அப்பேர்ப்பட்டவன் மறு படியும் இவ்வளவு விரைவாக யுத்தத்துக்கு வந்திருக்கிறன். ஆகை யால் அவனுக்கு வலுவுடைய மித்திரன் யாரோ ஒருவன் சகாயஞ் செய்யவந்திருக்கிறன், நிச்சயமாகச் சொல்லுவேன், சந்தேகமில்லை. அதைத் தெரிந்து கொண்டு தாங்கள் போகலாமென்று கூறி, கண வன் இருகரங்களையும் பிடித்துக் கொண்டு தடுத்தாள்

வாலி அவளை நோக்கி, ஓ வில்லைப்போன்ற புருவமுடைய தாரே! இது விஷயமாக உனக்கு யாதொரு சந்தேகமும் வேண்டாம். பிரியமுள்ள பத்தினியே! என்கையை விட்டு விடு; நீ சுகமாக இங் கேயேயிரு. நான் அந்த சத்துருவாகிய ஸுக்ரீவனைக் கொன்று விரை வில் வருகிறேன், அவனுக்கு எவன் சகாயம் செய்யப் போகிறன். ஒரு சமயம் அவனுக்குதவியாக யாரேனும் வந்திருந்தால், அவனுள் பட அவ்விருவரையும் ஓர் க்ஷணத்தில் கொன்று போட்டு இவ்விடம் வருகிறேன், நீ துக்கப்படாதே. மேலும் சூரனாயிருப்பவன் சத்துரு வைத் தெரிந்தும், அவன் சண்டைக்கு அழைத்தும், எவ்விதம் வீட் டில் இருப்பான். அப்பேர்ப்பட்டவன் வீரனே? ஆகையால் நான் அவ னிடம் சென்று அவனை வதை செய்து வருகிறேன் என்றுரைத்தான்.

இவ்வண்ணம் கூறிய வாலியின் பிரியவசனத்தைக்கேட்ட தாரை மறுபடியும், ஓ இராஜ சிரேஷ்டரே! இன்னும் ஓர் விஷயமும் என்னி டம் கேட்க வேண்டும். கேட்டபின் எது உசிதமோ அதைத் தாங் கள் செய்யக் கோருகிறேன். அதாவது:—அங்கதன் தான் வேட்

டையாடப் போயிருந்தபோது, அயோத்தி மன்னராகிய தசரதரின் குமாரர் ஸ்ரீராமர், தன் தம்பி இலக்ஷ்மணருடனும், மனைவி ஸீதையுடனும் தண்டகாரண்யம் வந்திருந்ததாகவும், அவ்வாரண்யத்தில் அவர் பத்தினி ஸீதையை இராவணன் அபகரித்துச் சென்றதாகவும், பிறகு இராமச் சந்திரர் இலக்ஷ்மணருடன் ஸீதையைத் தேடப் புறப்பட்டு வருகையில், அவர்கள் ரிசியமூக மலைக்கு வந்ததாகவும், அப்போது அனுமான் அவர்களை ஸுக்ரீவனுக்குச் சிநேகம் செய்து வைக்க, சிநேக வாஞ்சையால் இரகுவீரன் தான் வாலியைக்கொன்று ஸுக்ரீவனுக்குக்கிஷ்கிந்தா பட்டாபிஷேகம்செய்து அதற்கு அவனை அரசனுக்கி வைக்கிறேன் என்று அக்கினி சாக்ஷியாகப் பிரதிஞ்ஞை செய்து கொடுத்து, அதுமுதல் இராமர் இலக்ஷ்மணர் இருவரும் ஸுக்ரீவனுடன் இருப்பதாகவும் தான் கேள்விப்பட்டதை எனக்குக்கூற நான் கேட்டிருக்கிறேன். அதற்கு நிதரிசனமாக இப்போது ஸுக்ரீவன் சண்டைக் கழைப்பதை யூகித்தால் அந்த இராமர் அவனுக்கு உதவியாகப் பின் வந்திருக்கிறா என்று புலப்படுகிறது. இது நிச்சயம். என் சொல்லைக் கேட்கவேண்டும். சற்று முன் அவமானம் அடைந்துபோன ஸுக்ரீவன் மறுபடியும் வருவானு? ஆகையால் எந்த விதத்திலும் விரோதத்தை விட்டு ஸுக்ரீவனை அழைத்து அவனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்வித்து அவனைச் சமாதானப் படுத்திக்கொண்டு, பின்பு ஸ்ரீராமரை நாம் சரணம் என்றடையவேண்டும். இது தான் என்னுடைய முக்கிய கோருதலான விஷயம். ஓ வானர சிரேஷ்டரே! என்னையும், உம் குமாரன் அங்கதனையும், நம்குலத்தையும், இராஜ்யத்தையும் காக்கவேண்டும் என்றுரைத்து, பயத்தால் தளர்ச்சி அடைந்து, வாடின முகத்தினளாய், வாலியின் பாதங்களில் பணிந்து கைகளால் பாதங்களைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டழுது போகவே கூடா தென்று கதறினுள்.

அப்போது வாலி அந்தத் தாரையைத் தன்னிருகைகளால் அணைத்து ஓ எனது பிரியமுள்ள தாரே! நீ ஸ்திரீயாகையால் பயமடைந்தாய், எனக்குப் பயம் இல்லை. நீ கேள்விப்பட்டபடியே அந்த மஹாபிரபுவாகிய ஸ்ரீராமர் இலக்ஷ்மணருடன் வந்திருந்தால் எனக்கு அவருடைய சிநேகம் உண்டாகும் சந்தேகமில்லை.

மேலும், ஸ்ரீராமர் ஸ்ரீமன் நாராயணனே பிரத்தியக்ஷமாக உருவெடுத்து வந்தவர்; ஆத்ம கோடிகள் யாவருக்கும் பிரபுவானவர்,

அவர் பூபாரத்தைக் குறைக்க அவதாரம் செய்திருக்கிறார் என்று முந்தியே கேள்விப்பட் டிருக்கிறேன். அந்த மஹாத்மாவுக்குத் தன்னைச் சார்ந்தவன் என்றும், பிறனைச் சார்ந்தவன் என்னும் பேதம் கிடையாது. பக்தியால் அடையத்தகுந்த அந்த பரமேச்வரனாகிய இராமர் தன்னைப் பஜிக்கிறவர்களைத் தாமும் ஆசிரயிக்கிறார். ஓ பதி விருதையாகிய தாரே! அவருடைய சரணாரவிந்தங்களில் நமஸ்காரம் செய்து கிரகத்திற்கு அவரை அழைத்து வருகிறேன்.

ஸுக்ரீவன் தானாகவே யுத்தத்திற்கு வருவானாகில் அதே க்ஷணத்தில் அவனை வதம்செய்கிறேன். அவனுக்கு யுவராஜமுடிசூட்ட வேண்டு மென்று நீ கூறினாயே. ஓ பிரியமுள்ள தாரே! ஸுக்ரீவன் என்னைச் சத்துருவாக நினைத்துச் சண்டைக்கு அழைக்கும்போது உலகத்தில் யாவராலும் மதிக்கப்பட்ட அதிவீரனாகிய யான் அவனுக்குப் பயந்தவனாகி இந்த வார்த்தையை எப்படி வெளிவிட்டுப் பேசுவேன்.

திவ்வியமான இலக்ஷணமுடைய சுந்தரீ! நீ துக்கத்தை யொழித்து வீட்டிலேயே யிரு, என்று கண்ணீர் பெருகியோடும் முகத்தை யுடைய தாரையைச் சமாதானப்படுத்தி ஸுக்ரீவனை வதம் செய்வதற்கான முயற்சியுடன் அவனிருக்கும் இடம் சென்றான்.

கழுத்தில் பூமாலை யுடையவனும், பயங்கரமான பராக்கிரம முடையவனுமாகிய ஸுக்ரீவன் தனக் கெதிரில் வரும் வாலியைப் பார்த்து, சூரியனைப்போல் ஆகாயத்தில் கிளம்பி இரண்டு முஷ்டிகளால் வாலியைக் குத்தினான். வாலியும் ஸுக்ரீவனை யவ்வாறே குத்தினான். ஸுக்ரீவன் இராமனைப் பார்த்துக் கொண்டே யுத்தம் செய்தான். இவ்வாறு அவ்விருவரும் சண்டை செய்யும் போது பிரதாபமுடைய இராமர் பார்த்து அம்புறையிலிருந்து இந்திராஸ்திரத்தை யெடுத்து வில்லிற் பூட்டி காது வரையில் இழுத்து, மரக் கூட்டத்தின் மத்தியில் யாருமறியாமல் இருந்துகொண்டு அவ்விருவரில் வாலியை நன்றாகக் கவனித்து அவன் மார்புக்கு இலக்ஷியம் வைத்துப் பாணத்தை விட்டார். அந்தப் பாணமானது பூமியை நடுங்கச் செய்துகொண்டு வில்லில் நின்று புறப்பட்டு யுத்தத்தில் நின்ற வாலியின் மார்பிற் புகுந்தது. அந்த அம்பை ஏற்ற வாலி பெரும் கூச்சலிட்டு உயரக் கிளம்பி பூமியில் விழுந்து கொஞ்சகாலம் வரையில் பிரஞ்ஞை யில்லாமலிருந்து பின்பு பிரஞ்ஞையை யடைந்தான்.

அச்சமயத்தில் ஸ்ரீராமர் இலக்ஷ்மணர், ஸுக்ரீவன் சகிதம் வாலி யிருக்குமிடம் சென்றார். பிறகு வாலி தன்முன்னால் நிற்ப வரும், செந்தாமரைக் கண்ணரும், இடது கையில்வில்லையும், வலது கையில் பாணத்தையும் தரித்தவரும், விஸ்தாரமான மார்புடைய வரும், பிரகாசிக்கின்ற வனமாலை தரித்து விளங்குகிறவரும், பருத்த தும், அழகுள்ளதும், நீண்டதுமாகிய கைகளையுடையவரும், கொழு மையான அறுகம் பில்லைப் போன்ற சியாமளவர்ண முள்ளவரும், ஸுக்ரீவன், இலக்ஷ்மணர், இருவர்களும் தன்னிரு பக்கங்களிலும் நிற்கப் பிரகாசிப்பவருமாகிய ஸ்ரீராமரை மெலிவாகப் பார்த்துக் கேட் கிறான்.

"ஓ இராம! நான் உனக்கு என்ன தீங்கு செய்தேன்? எதற் காக நீ என்னை வதை செய்தாய்? அரசர்களுக்குரிய தருமங்களை யறி யாமல் நிந்திக்கத்தக்க காரியத்தை மேற்கொண்டாயே, மரக் கும் பலில் மறைந்திருந்து என்னிடம் பாணத்தைப் பிரயோகித்தாயே! சத்தியவந்தனான நீ, திருடனைப்போல் இந்தக் காரியத்தை செய்து என்ன கீர்த்தியை யடையப்போகிறாய்? மநுவின் பரம்பரையில் உண் டானவனும், க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்தவனுமாகிய நீ என்னெதி ரில் சண்டை செய்திருந்தாயானால் அந்தப் பலனை யப்போதே யடைந் திருப்பாய். ஸுக்ரீவன் உனக்கு என்ன நன்மையைச் செய்தான், நான் என்ன நன்மையான காரியத்தைச் செய்யாமலிருந்தேன்?

ஓ இராம! உன்னுடைய மனைவியாகிய ஸீதையைத் தண்டகார ண்யத்தில் இராவணன் கொண்டுபோனான் என்றும், அவளை மீட்டுக் கொண்டு வருவதை யுத்தேசித்து நீ ஸுக்ரீவனைச் சரணமடைந்த தாகவும் கேள்விப்பட்டேன். ஹா! கஷ்டம்!! உலகத்தில் பிரசித்தி பெற்ற என் பராக்கிரமத்தை நீ அறிந்துகொள்ள வில்லை.

ஓ இராம! இராவணனை, நான் விரும்பினேனானால், அவனை அவன் கூட்டத்தார்களுடனும் ஸீதையுடனும், இலங்கையிற் போய்க் கட்டி அரை முகூர்த்தத்தில் இங்கு கொண்டுவருவேன்.

ஓ இரகுநந்தன! உலகத்தில் யாவரும் உன்னைத் தருமிஷ்டர் என்று சொல்லுகிறார்கள். வேடனைப் போல் குரங்கைக் கொன்று விட்டு என்ன தருமத்தை யடையப் போகிறாய் சொல்லு? குரங்கு மாம்சம் புசிப்பதற்கும் ஆகாதே. என்னைவதை செய்து என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டான்.

இவ்வாறு வெகுவசனமாகப் பேசும் வாலியைப் பார்த்து இராமர், "ஓ வாலியே! நான் தருமத்தை இரக்ஷித்துக் கொண்டு இவ்வுலகில் வில்லுடன் சஞ்சரிக்கிறேன்; அதருமம் செய்பவனைக் கொன்று தருமத்துடன் இருப்பவனைக் காப்பாற்றுகிறேன். எவன் ஒருவன் உடன் பிறந்தவள், உடன் பிறந்தவன் மனைவி, தன் பெண், தன் நாட்டுப் பெண் இவர்களுக்குள் எவளையேனும் இரமிக்கிறானோ அவன் மூட புத்தியுடையவன்; அவன் மகாபாதக முள்ளவன்; அவன் அரசர்களால் வதை செய்யத் தகுதியானவன். நீ உன்னுடைய இளைய பிராதாவின் மனைவியைப் பலாத்காரமாக அடைந்து இரமிக்கிறாய். ஆகையால் காட்டில் வாழும் வானரமே! தருமங்களை யறிந்த நான் உன்னைக் கொன்றேன்" என்று பதில் சொன்னார்.

இதைக் கேட்ட வாலி நடுநடுங்கி, இராமரை இலக்ஷ்மீகாந்தரென அறிந்து பர பரப்புடன் நமஸ்காரம் செய்து. "ஓ இராம! ஓ இராம!! மஹாபராக்கிரமசாலியே, மஹாபாக்கியசாலியே! இப்போது உம்மை நான் பரமேஸ்வரர் என்று அறிந்தேன். நான் முன்னம் அறியாமற் சொன்னவைகளை மன்னிக்கவேண்டும். பிரத்தியக்ஷமாக உம்முடைய பாணத்தின் ஹிம்சையால் உம்முடைய முன்னிலையில் பிராணனை விடப்போகிறேன். உம்முடைய தரிசனம் பெரிய யோகிகளுக்கும் துர்லபமானது. எவருடைய நாமத்தை, சுவாதீனமில்லாமற் போனபோதும், உரைத்து மரணமடைந்தால் பரமபதம் அடையலாமோ, அந்தப் பரம புருஷனே பிரத்தியக்ஷமாக மோக்ஷமடைய விருப்பமுள்ள என் முன்னிலையில் வந்திருக்கிறீர்.

ஓ தேவ! உம்மைப் பரம புருஷன் என்றும் உம்முடைய பிரியையான ஜானகியை மாயை யென்றும் அறிந்தேன். இராவணனை வதம் செய்யும் பொருட்டு, பிரம தேவரால் பிரார்த்திக்கப்பட்டு அவதாரம் செய்தவர் என்றும் அறிந்தேன்

ஓ இராகவ! உம்முடைய ஸ்தானம் செல்ல எனக்கு ஆஞ்ஞை செய்ய வேண்டும். என் குழந்தையாகிய அங்கதன் எனக்குச் சமமான பல முடையவன். அவன் மீது தயை செய்யவேண்டும். என் மனதைச் சங்கடமின்றிச் செய்ய வேண்டும். தங்களுடைய கையால் என்னைப் பரிசிக்கவேண்டும்" என்று இவ்வாறாக வணங்கிக் கேட்டுக் கொண்டான்.

இராகவர் அவ்விதமே வாலியைக் கையாற்றடவி அவன் மார்பி லுற்ற பாணத்தை எடுத்தார்.

வாலி, வானர சரீரத்தை யொழித்து ஓர் க்ஷணத்தில் சிறந்த தேவனாக ஆனான்.

வாலி, இரகு சிரேஷ்டனுடைய பாணத்தால் அடிபட்டதாலும், சகத்துக்கு இருப்பிடமானதும், மிகுதியான மங்களத்தைக் கொடுக் கக்கூடியதுமாகிய கையால் பரிசிக்கப்பட்டதாலும், உடனே வானர சரீரத்தைவிட்டு, காமாதியர்களுக்குக் கிடைக்காததும், பிருமநிஷ் டர்களுக்கு அடையக்கூடியதுமாகிய உத்தம பதவியை யடைந்தான்.



## மூன்றாவது சருக்கம்

பரமாத்வாகிய இராமனால் வாலி மரணமடைந்தவுடன் வானரர் கள் பயத்தால் தளர்ச்சியடைந்து யாவரும் கிஷ்கிந்தைக்கு யோடினார் கள். தாரையைப் பார்த்து ஓ மகா பாக்கியம் செய்தவளே! யுத் தத்தில் வாலி இராம பாணத்தால் மாண்டுபோனான். அங்கதனைக் காப்பாற்றிக்கொள், மந்திரிகளுக்கு ஆஞ்ஞாபனம் செய், நாங்கள் கோட்டை வாசற் கதவுகளைப் பூட்டிட்டு நகரத்தைக் காப்பாற்றிக் கொள்கிறோம். ஓ ஸ்திரீ ரத்தினமே! அங்கதனை வானர ராஜனாகச் செய் என்று சொன்னார்கள்.

தாரை, வாலி மரணம் அடைந்ததைக்கேட்டவுடன் சோகத் தால் மிகுந்த துக்கமடைந்து, தன்னுடைய கைகளால் தலையிலும் மார்பிலும் அடித்துக்கொண்டு கதறினாள். மேலும் அங்கதனாலும், இராஜ்யத்தாலும், நகரத்தாலும், பொருளாலும், எனக்கென்ன பயன் இருக்கிறது, இப்போதே யென் கணவனுடன் மரணம் அடைகிறேன், என்று சொல்லி விரைவாகத் தலைமயிரை விரித்துப்போட்டு, கதறிக் கொண்டே மிகுந்த துயரமுடையவளாகி, கணவன் இறந்து கிடக் கும் யுத்தகளம் சென்றாள். இரத்தம் தோய்ந்தும், புழுதி படிந் தும், பூமியில் விழுந்து கிடக்கும் தன் கணவனாகிய வாலியைக் கண் ணுற்றாள். ஆ நாதா! ஆ நாதா! என்றே கதறி கணவன் பாதங் களில் விழுந்தாள். எழுந்து அவனைக் கட்டித் தழுவி கோ வென்று அழுதாள்.

அச்சமயம் அங்கு நிற்கும் இரகுநந்தனரைப் பார்த்தாள். அவரைப் பார்த்து தீனத்தன்மையுடன் அழுதுகொண்டே, ஓ இராம! நீர் எந்த பாணத்தால் என் கணவனை வதஞ்செய்தீரோ அதே பாணத்தால் என்னையும் கொன்றுவிடும். நான் என்பதி யிருக்கும் உலகத்துக்குச் செல்லுகிறேன். என் கணவன் என்னை விரும்புவார், சுவர்க்க லோகத்திலும், என்னை யன்றி அவருக்கு சுகம் ஏற்படாது. மேலும், ஓ இரகுராம, தோஷமற்றவரே! மனைவியை விட்டுப் பிரிவதாலுண்டாகும் துக்கத்தை நீர் அனுபவித்தவரல்லவா. என்னை வாலியிடம் சேரும், உமக்கு கன்னிகாதானம் செய்த பலன் உண்டாகும் என்று வேண்டினாள்.

பிறகு இராமரை யடுத்து நிற்கும் ஸுக்ரீவனைக்கண்டு, ஓ ஸுக்ரீவ! இராமர் வாலியைக் கொன்று உமக்கு இராஜ்யத்தைக் கொடுத்தார், நீர் சத்துரு பயமன்னியில் உமது பத்னி ருமையுடன் சுகத்தை அனுபவிக்கலாம் என்று கூறினாள்.

இவ்வாறு பிரலாபிக்கும் தாரையின் பேரில் மகா பலசாலியாகிய இராமர் தயைகூர்ந்து தத்துவ ஞானத்தை உபதேசம் செய்து தாரையைச் சமாதானம் செய்கிறார்.

ஓ துக்கசாகரத்தில் முழுகிப் பயந்தவளே! உனக்கு யாதொரு விதத்திலும் பாத்தியமில்லாத வாலியை யுன் கணவன் என மதித்து துக்கிப்பதில் எவ்விதப் பிரயோஜனமுமில்லை. ஏன் வருத்தப்படுகிறாய்? உன் கணவன் தேகமா, ஜீவனா? உண்மையாகக் கவனித்துச் சொல். இந்த தேகமானது, பஞ்ச பூதங்களின் விகாரத்தாலுண்டானது. எலும்பு, நரம்பு, மாம்சம், இரத்தம், தோல் இவைகளையுடையது. பூர்வ கருமத்தாலுண்டானது.

இந்த தேகத்தை ஜீவனாக நினைப்போமானால், ஜீவன் நிராமயன்; உண்டாவதில்லை; மரிப்பதில்லை; புருஷனுமல்ல; ஸ்திரீ மல்ல; நபுஞ்சகனுமல்ல; ஜீவன் எங்கு மிருப்பவன்; அழிவற்றவன்; ஒன்றாகவே ஆனவன்: இரண்டற்றவன்; ஆகாசம்போல் பற்றுதல் இல்லாதவன்; நித்தியன்; ஞான சொரூபன்; சுத்தன்; இத்தகைய ஜீவனைப்பற்றி ஏன் வருத்தம் அடையவேண்டும் என்றார்

இவ்வுபதேசம் பெற்ற தாரை, ஓ இராம! தேகம் சத்ரூபமில்லாதது. ஜீவனே சத்து, சித்து, சொரூபமுடையது. ஆகை

யால், சுகம், துக்கம் இவைகளின் சம்பந்தம் யாருக்குண்டாகிறது; இதைச் சொல்லவேண்டு மென்று வணங்கினாள்.

ஸ்ரீராமர் தாரையை நோக்கி, "ஓ தாரே! ஆத்மாவுக்கு அவிவேகத்தால், தேகத்திலும், அதை யொட்டிய இந்திரியங்களிலும், அஹங்காரம் முதலியவைகளின் சம்பந்தம் எது வரையில் இருக்கிறதோ அதுவரையில் ஜனன மரண ரூபமான ஸம்ஸார மேற்படுகிறது.

சுவப்னத்தில் பொய்யான விஷயங்களை யடைவதுபோல், விஷயங்களைத் தியானம் செய்யும் மானிடனுக்குப் பொய்யான இந்த ஸம்ஸாரம் சுற்றுகின்றது. ஆதியில் அவித்தையின் சம்பந்தத்தால் அதன் காரியமான அஹங்காரம் உண்டாகிறது. இராகம், துவேஷம், இவைகள் நிறைந்த ஸம்ஸாரமும் பிரயோஜனமுள்ளதாகிறது. ஓ மங்கள ஸ்வபாவமுடைய தாரே! மனம் தான் ஸம்ஸாரம்; மனமே பந்தமாகிறது. ஆத்மாவானது, மனதுக்கு ஒத்த தன்மையை யடைகிறது. நிர்மலமான ஸ்படிகம், செம்பஞ்சின் ரசத்தோடேற்றால், அந்த ஸ்படிகம் சிவப்பு வர்ணமுடையதாகக் காணப்படுகிறது, உண்மையில் ஸ்படிகத்துக்குச் சிவப்பு வர்ணமில்லை. அதுபோல, புத்தி, இந்திரியங்கள் இவைகளின் சேர்க்கையால் ஆத்மாவுக்கு ஸம்ஸாரபந்தமுண்டாகிறது. ஆத்மாவானது தனக்கு லிங்கமான மனதையும், அதில் உண்டாகும் விஷயங்களையும் கிரகித்துக்கொண்டு காமம் முதலிய தோஷகுணங்களில் கட்டுண்டு ஸ்வாதீனமற்று ஸம்ஸாரத்தில் சுழலுகிறது.

ஆதியில் மனமானது குணங்களை அநுசரிக்கிறது. பிறகு ஸத்துவம், இரஜஸ், தமஸ், இவைகளுக்குள்ள கருமங்கள் ஏற்படுகின்றன. அந்தக் குணங்களுக்குத் தக்க கருமத்தாலுண்டாகும் கதிகளும் ஏற்படுகின்றன.

இவ்விதம் ஜீவன் கரும வசத்தால் பூதப்பிரளயம் வரையில் சுற்றுகிறான். கருமவாசனைவசத்தால் ஜீவன் யாவற்றுலும் குறைவடைந்து அவித்தையின் சுவாதீனப்பட்டு வீடடையாது (அபிநிவேசம்) அதாவது மோக்ஷம் அடையாது மெழுகுண்டைபிறபதித்த இரத்தினம் போல் இருக்கிறான்.

பிறகு ஸிருஷ்டி செய்யுங் காலத்தில் அந்தஜீவன் முன்னுள்ள வாஸனையுடனும், மனதுடனும் மறுபடியும் உண்டாகிறான்,

எப்பொழுது புண்ணிய விசேஷத்தால் ஸாதுக்களின் சேர்க்கையை யடைகிறானோ (அதாவது மிக்க ஒழுக்கமுடைய என் பக்தர்களின் சேர்க்கை) அப்போது அவனுக்கு என் விஷயமான ஞானமுண்டாகிறது. அந்த ஞானமுண்டானால், யாரு மடையமுடியாத என் கதையைச் சிரவணம் செய்வதில் சிரத்தை யுண்டாகிறது. அச்சிரத்தையினால் சிரமமின்றி சொரூப விஞ்ஞானம் ஏற்படுகிறது. பிறகு சிரேஷ்டனாகிய ஆசிரியனுடைய அநுக்கிரகத்தால் மஹாவாக்கியத்தின் அர்த்த ஞான முண்டாகிறது. அதனால், தேகம், இந்திரியம், மனம், பிராணன், அஹங்காரம் இவைகளுக்கு வேறுபட்டிருப்பதும், சத்திய சொரூபமும், ஆனந்த மயமும், இரண்டற்றதுமாகிய பிரும சொரூபத்தை தன்னுடைய ஆத்மஞானத்தின் அநுபவத்தால் அறிந்து கொள்கிறான். உடனே முக்தியையும் அடைகிறான். நான் சொல்வது சத்தியமே.

எவன் நான் கூறியவைகளை எப்போதும் ஆலோசனை செய்த அநுஷ்டிக்கிறானோ அவனை ஒருபோதும் ஸம்ஸார துக்கம் தொடராது

ஓ தாரே! நீயும் பரிசுத்தமான புத்தியுடன் நான் கூறிய விஷயத்தை ஆலோசனை செய்து துக்கக் கடலிலிருந்து விடுபடுவதோடு, நித்தியானந்தத்தையும் அடைவாயாக

வில்போன்ற வளைந்த புருவத்தையுடைய ஓ தாரே! நீ முன் ஜென்மத்தில் என்னிடம் பக்தி செய்தாய். ஆகையால் உன்னுடைய மோக்ஷத்தின் பொருட்டு என்னுடைய சுயரூபமான சொரூபத்தைக் காண்பித்தேன். நான் கூறியபடி என் சொரூபத்தைத்தியானம் செய்து கொண்டு எப்போதும் சுகமாயிரு.

ஸம்ஸாரப் பிரவாகத்தில் உள்ள காரியங்களை நீ செய்பவளாயினும், பற்றுதலை யடையமாட்டாய்" என்று உபதேசித்தார்.

தாரை, ஸ்ரீராமர் கூறியதைக் கேட்டு, மிகவும் ஆச்சரியம் அடைந்து தேகத்தின் அபிமானத்தால் உண்டான சோகத்தை விட்டாள். இரகுசிரேஷ்டரை நமஸ்கரித்தாள்.

ஆத்மஞான அநுபவத்தால் சந்தோஷம் அடைந்தாள். தாரை ஸ்திரீ ஜாதியாயினும், பரமாத்வாகிய ஸ்ரீராமருடைய தரிசனத்தை அப்போது அடைந்த மாத்திரத்தில், அநாதியாயுள்ள பந்தத்தைத் தொலைத்து, கல்மஷம் அற்றவளாகி ஜீவன்முக்தையானாள்,

ஸ்ரீராமமூர்த்தி வாக்கில் வந்த ஸத்விஷயங்களை அருகிலிருந்த ஸுக்ரீவனும் கேட்டு அஞ்ஞானம் யாவற்றையும் விட்டு சுத்தமான மனமுடையவனானான்.

பிறகு ஸ்ரீராமர் வானர சிரேஷ்டனான ஸுக்ரீவனைப் பார்த்து, "ஓ ஸுக்ரீவ! உன் தமயனுக்குச் செய்யவேண்டிய பரலோக சாதகமான சம்ஸ்கார முதலிய காரியங்களை விதிப்படி அவன் புத்திரனான அங்கதனைக் கொண்டு என் உத்தரவை அநுசரித்துச் செய்" என்றார்.

ஸுக்ரீவன் அவ்விதமே யென்றுரைத்து பலமுடையவர்களும், முக்கியர்களுமாகிய வானரர்களைக் கொண்டு வாலியைப் புஷ்ப விமானத்தில் வைத்து இராஜோபசாரம யாவற்றுடனும், பேரி, துந்துபி முதலிய வாத்தியங்களின் முழக்கங்களுடனும், பிராமணர்களுடனும், மந்திரிகளுடனும், யூதபர்களாகிய வானரர்களுடனும், பட்டணத்து ஜனங்களுடனும், தாரையுடனும், அங்கதனுடனும், தானும் சென்று மிகுதியான எத்தனத்துடன் சாஸ்திரப்படி கருமங்கள் யாவற்றையும் செய்து முடித்தான்.

பிறகு, சந்தோஷமுள்ள மனமுடைய ஸுக்ரீவன் மந்திரிகளுடன் ஸ்ரீராமருடைய ஸந்நிதானத்துக்கு வந்து, அவருடைய திவ்விய சரணாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, "ஓ இராஜ சிரேஷ்ட! மிகுந்த ஐஸ்வரிய முடைய கிஷ்கிந்தை நாட்டைத் தாங்களே பரிபாலிக்க வேண்டும். நான் தங்களுடைய தாஸனாகி, இலக்ஷ்மணரைப் போல் தங்களுடைய பாதகமலங்களைச் சேவித்துக் கொண்டிருக்கிறேன்" என்று வேண்டினான்.

அந்த மொழியைக் கேட்டவுடன் இராகவர் புன்னகை கொண்டு, "ஓ ஸுக்ரீவ! நீ தான் நான், சந்தேகம் இல்லை, என்னுடைய படி விரைவாகக் கிஷ்கிந்தை சென்று, இராஜ்யத்திற்கு அதிபதியாக இருக்கும் தன்மையில் நீ பட்டாபிஷேகம் செய்து கொள். அங்கதனுக்கு ஆதரவுடன் யுவராஜ்ய முடிசூட்டிவை. ஓ நண்ப! நான் பதினான்குவருஷம் வரையில் நகரத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது; என் இளைய பிராதாவாகிய இலக்ஷ்மணன் உன்னகரம் வருவான். நான் தம்பியுடன் சமீபத்திலுள்ள பருவத சிகரத்தில் வருஷாகாலம் வரையில் வசிக்கிறேன். இப்போது நீ முதலில் இந்த விஷயங்களில் பிரவேசித்து வருஷாகாலம்வரையில் பட்டணத்திலிருந்து விட்டு பிறகு

என்னிடம் வந்து, ஸீதையைத் தேடும்படியான வழியில் முயலுவா யாக" என்று ஆஞ்ஞாபித்தார்.

ஸுக்ரீவன் சாஷ்டாங்கமாக ஸ்ரீராமர் பாதங்களில் வணங்கி, "ஓ தேவ! தாங்கள் எவ்விதம் சொல்கிறீர்களோ அவ்விதமே செய்கி றேன்" என்று கூறி அவரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு இலக்ஷ்மணருடன் நகரம் சென்று இரகுநந்தனருடைய உத்தரவுப்படி இலக்ஷ்மணர் கையால் இராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைக்கப் பெற்றான். அங்கதனுக்கும் யுவராஜ பட்டமளித்தான். பிறகு, ஸுக்ரீவன் இலக்ஷ்மணரை நீதிப்படி பூசித்தான். இலக்ஷ்மணர் அவ்விடமிருந்து விரைவாக வந்து ஸ்ரீராமருக்கு நமஸ்காரம் செய்து அவர் அருகிலிருந்தார்.

அதன் பிறகு இரகுநந்தனர் இலக்ஷ்மணருடன், 'பிரஸ்ரவணம்' என்னும் மலையின் சிகுதியான விஸ்தார முள்ள சிகரத்தின் மீது சென்றார்.

அந்த சிகரத்தில், ஸ்படிகம் போன்ற பிரகாசமுள்ளதும், மங்களகரமானதும், சீதோஷ்ணம் இவைகளுக்குச் சமமானதும், கொண்டற் காற்றுக்கு உசிதமானதும், தேவர்களுக்கு உரியதும், சமீபத்தில் பலன்களையும், மூலங்களையும் உடையதும் ஆகிய ஓர் குகையைக் கண்டு அக்குகையில் இலக்ஷ்மணருடன் வாசஞ் செய்ய மனங் கொண்டார்.

தேவர்களுக் குரிய மூலங்கள், பழங்கள், புஷ்பங்கள் இவைகளுடன் கூடியதும், முத்துக்களுக்குச் சமானமான நீர் நிறைந்த வாபிகள் அமைந்ததும், பலவர்ண முடைய பக்ஷிகள் அலங்காரமாக வசிக்கக் கூடியதுமான பருவதத்தில் இரகுகுலத்திற் பிறந்த இராமச்சந்திரன் தம்பியுடன் வாசம் செய்தார்.

## நான்காவது சருக்கம்.

---

ஸ்ரீராமமூர்த்தி அந்தப் பருவதத்திலுள்ள குகைகளில் வருஷருதுவெல்லாம் லீலையாகச் சஞ்சரித்துக் கொண்டு, பக்குவமான பழங்களாலும், மூலங்களாலும், உண்டான சுகத்தால் சந்துஷ்டியடைந்து இலக்ஷ்மணருடன் சுகமாகவாசம் செய்தார்.

மத்தியில் இடியோடும், மின்னலோடும், காற்றினால் ஒதுக்கப்பட்டதும், ஜலத்தால் நிறைந்ததுமாகிய மேகங்களையும், சோபனமானதும், சுவர்ணமயமான கிம்புரிகளையுடைய தந்தத்தோடு விளங்கும் சிரேஷ்டமான யானைகளையும் பார்த்து ஆச்சரியமடைந்தார்.

புதிதான புஷ்பரசமாகிய மதுவைப் பானம் செய்ததால் சந்தோஷமடைந்த தும்பிகளும், புஷ்டியுள்ள மிருகங்களும், பக்ஷிகளும் நான்கு பக்கங்களிலும் ஓடிக்கொண்டிருக்கும்போது விஸ்தாரமான நேத்திரங்களால் இராமரைப் பார்த்து ஸதா தியானத்திலிருக்கும் முனீஸ்வரர்களைப் போல் அசையாமல் இருந்தன.

பருவதங்களால் சூழப்பட்ட அரண்யப் பிரதேசங்களில் சஞ்சரிக்கும் ஸ்ரீராமரை, பூமியில் அவதரித்த பரமாத்மா வென்று ஸித்தர்கள் எண்ணிக்கொண்டு, மிருகங்களாகவும், பக்ஷிகளாகவும் ஆகி மலையில் வந்து அவரையே சேவித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு சமயம் சுமித்திரையின் குமாரனான இலக்ஷ்மணர், தனிமையிலிருந்து தியானம் பண்ணி முடித்த ஸ்ரீராமரைப் பார்த்து, பக்தியுடனும், விசுவாசத்துடனும், வணக்கத்துடனும் கேட்கிறார்.

"ஓ தேவ! தாங்கள் முன் கூறிய மொழிகளால் அவித்தையாலுண்டான என் மனச்சந்தேகம் நீங்கிற்று. உலகத்தில் யோகிகள் தங்களுடைய பூஜையை எவ்விதம் செய்கிறார்கள்; எதைக் கொண்டு செய்கிறார்கள்; அதின் விபரத்தைக் கேட்க விரும்புகிறேன். யோகிகள் அதைத்தான் முக்திக்குச் சாதனம் என்று கூறுகிறார்கள். விஷ்ணுவின் நாபிக்கமலத்திலிருந்துண்டான பிரமதேவர், நாரதர், வியாசர், முதலியவர்கள் அதையே மோக்ஷத்துக்குச் சாதனம் என்று சொல்லுகிறார்கள். பிராமணன், க்ஷத்திரியன் முதலிய வர்ணாச்சிர

மத்தார்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதும், சூத்திரர்களும் ஸ்திரீகளும் சுலபமாகவே முக்தியடையச் சாதனமும், உலகங்களுக்கு உபகாரமானதுமாகிய அந்த மார்க்கத்தைத் தாங்கள் பிராதாவும் பக்தனுமாகிய எனக்கு சொல்ல வேண்டும்," என்று வணங்கிக் கேட்டார்.

ஸ்ரீராமர், இலக்ஷ்மணரைப் பார்த்து "ஓ தம்பி! என் பூஜையைப்பற்றிச் சொல்வதற்களவில்லை. ஆயினும் கிரமமான விதிப்படி சுருக்கமாகக் கூறுகிறேன். மானிடன் தன்னுடைய கிருத்திய சூத்திரத்தில் கூறியபடி பிராமணத்தன்மையடைந்து சிரேஷ்டனாகிய குருவிடம் சென்று மந்திர உபதேசம் பெற்று என்னிடம் வைத்த பக்தியுடன் அந்த ஆசிரியன் காண்பிவித்த விபரப்படி என்னைப் பூஜிக்க வேண்டும்.

ஒருவன் தன் இருதயத்திலாவது, அக்கினியிலாவது, சூரியனிடமாவது, ஸாளக்கிராமத்திலாவது விக்கிரகம், பிரதிமை முதலிய எவற்றிலாவது என்னைச் சாவதானமான மனத்துடன் பூஜிக்க வேண்டும். முதலில் தேகம் சுத்தியடைய ஸ்நானம் செய்யவேண்டும், பிறகு வேதத்திலும் சாஸ்திரத்திலும் கூறிய மந்திரங்களால் மிருத்தை (திருமண்) அல்லது விபூதி இட்டுக்கொள்ள வேண்டும். சந்தியாவந்தனம் முதலிய நித்திய கருமங்களை விதிப்படிச் செய்ய வேண்டும். தான் சுத்தியடைவதற்குச் சங்கற்பம் செய்தல் வேண்டும். என்னைப் பூஜிக்குமுன் தன் குருவை நான் என்றே யெண்ணி மனதில் ஸ்மரிக்க வேண்டும். பிறகு சிலாவிக்கிரகமா யிருந்தால் அபிஷேகம் செய்விக்கவேண்டும், பிரதிமையாயிருந்தால் சுத்தி செய்யவேண்டும். என்னைப் பூஜித்தால் சித்தியைக் கொடுப்பதற்குரியவைகளும் பிரசித்தி யுள்ளவைகளுமாகிய சந்தனம், புஷ்பம் முதலியவைகளால், நியமமுள்ள இருதயமுடையவனுகி, கபடமின்றி அநுசரணையுடன் என்னைப் பூஜிக்கவேண்டும். இரகு குலத்தைச் சந்தோஷிக்கச் செய்யும் இலக்ஷ்மண பிரதிமை முதலியவைகளை அலங்காரம் செய்வது எனக்கு மிகப்பிரியமுள்ளது. அக்கினியை ஹவிஸால் பூஜிக்கவேண்டும்; சூரியனைப் பூமியில் பூஜிக்கவேண்டும். என்னைப் பூஜிப்பதில் சுத்த ஜலத்தால் பூஜிப்பது எனக்கு மிகப் பிரியமானது. சித்திரான்னம், பக்ஷியம், முதலிய பூஜிக்கத்தக்கவைகள், சந்தனம், புஷ்பம், அக்ஷதை இவைகளால் பூஜிப்பது எனக்குப் பிரீதியை யுண்டாக்கும் என்பதற்

குக் கேட்கவும் வேண்டுமோ. பூஜைசெய்வதற்குரிய பொருளைச் சம்பாதித்துக்கொண்டே பூஜை செய்ய யத்தனிக்கவேண்டும். வஸ்திரம் மான் தோல், தர்ப்பை, இவைகளால் ஆஸனம் கற்பித்துக் கொள்ள வேண்டும். அந்த ஆஸனத்தின்மேல் தேவபிம்பத்துக் கெதிரில் பரிசுத்தமான மனத்துடன் உட்காரவேண்டும், தனக்கு எதிராக வலது பக்கத்தில் கலசத்தையும், இடது பக்கத்தில் புஷ்பம் முதலியவைகளையும் வைத்துக்கொள்ளவேண்டும். அர்க்யம், பாத்யம் ஆசமனம், மதுவர்க்கம், இவைகள் கொடுக்க நான்கு பாத்திரங்கள்வைத்துக் கொள்ள வேண்டும். இருதய கமலத்தில், சூரியனைப் போல் நிர்மலமானதும், ஜீவன் என்று பெயருள்ளதுமான நட்சத்திரவடிவு போன்ற என்னுடைய கலையைத் தியானம் செய்யவேண்டும். தன்னுடைய சரீரம் யாவற்றிலும் என்னுடைய கலை வியாபித்திருப்பதாகக் கருத வேண்டும், விக்கிரகம் முதலியவைகளில் என்னுடைய கலையையே ஆவாகனம் செய்ய வேண்டும். அர்க்யம், பாத்யம், ஆசமனம், அபிஷேகம், வஸ்திரம், ஆபரணம் முதலியவைகள் சக்திக்குரியனவாகியதோடு உபசாரத்துடன் கபடமின்றி என்னைப் பூஜிக்கவேண்டும். ஐஸ்வரியம் இருக்குமாயின் மேற் சொன்னவைகளோடுகூடக் கர்ப்பூரம், குங்குமம். அகில் கட்டை, சந்தனம், வாசனையுள்ள நல்ல புஷ்பங்கள் முதலியவைகளால் எப்போதும் மந்திரம் தவறாமல் பூஜை செய்யவேண்டும். ஆகம சாஸ்திரத்தில் கூறிய ஐந்து ஆவரணங் (பிராகாரம்) களுடன் கூடிய பூஜையைச் செய்யவேண்டும். திருமஞ்சனம், தூபம், தீபம், நைவேத்தியம் முதலியவைகளைச் சிரத்தையுடன் கொடுக்கவேண்டும். நான் எப்போதும் சிரத்தையுடன் கொடுப்பதைப் புஜிக்கும் ஈஸ்வரன். மந்திரங்களை யறிந்து பூஜிப்பவன் அகஸ்தியர் கூறிய மார்க்கத்தாலாவது புருஷ ஸூக்தத்தாலாவது விதிப்படி பிரயத்தனத்துடன் ஹோமமும் செய்யவேண்டும்.

முதலாவது ஔபாஸனக்கினியில், சமித்தினாலாவது ஹவிஸினாலாவது ஹோமம் செய்ய வேண்டும். ஹோமம் செய்பவன், உருக்கின சுவர்ணத்துக்குச் சமமான காந்தியையுடையவனும், தேவர்களுக்குரிய ஆபரணங்களால் அலங்காரம் செய்து கொள்ளப் பட்டவனும், அக்கினியின் மத்தியிலிருப்பவனு மாகிய என்னை ஹோமம்செய்யும் போது. தியானம் செய்ய வேண்டும். பாரிஷதர் (துவாரபாலகர்) களுக்குப் பலிகளைக் கொடுத்துப் பிறகு

ஹோமத்தை முடிக்கவேண்டும். அதன்பின் ஜெபம் செய்ய வேண்டும். என்னை ஸ்மரணம் செய்து கொண்டே பிரீதியுடன் தாம்பூலம் முதலியவைகளைச் சமர்ப்பிக்க வேண்டும். அந்த அக்கினிக்கு முன்னால் நிருத்தம், கீதம், ஸ்தோத்திர பாடம் முதலியவைகளைச் செய்விக்க வேண்டும். தானும் அவைகளைச் செய்யலாம். தண்டம் போல் பூமியில் விழுந்து வணங்க வேண்டும்.

இருதயத்தில் என்னை நினைந்து கொண்டு ஹோமப் பிரஸாதத்தை நான் கொடுத்த பாவனையாகப் பெற்று சிரசில் வைத்து, பக்தியுடன் என்னிருபாதங்களில், தன்னிருகரங்களையுஞ் சிரசின் மேற் கூப்பிக் கொண்டு நல்லபுத்தியுடன், ஓ பரமபுருஷ! என்னை பயங்கரமான ஸம்ஸாரத்தில் நின்று காப்பாற்ற வேண்டுமென்றுரைத்து நமஸ்காரம் செய்யவேண்டும். மனதில் என்னை ஸ்மரித்துக் கொண்டு உத்வாஸனம் செய்ய வேண்டும். இருதயத்தில் என்னை நினைந்து மறுபடியும் பூமியில் வணங்கவேண்டும். இவ்விதம் விதிப்படி பூஜை செய்வானாகில் என்னுடைய அநுக்கிரகத்தால் இந்த உலகத்திலும், பரலோகத்திலும் சித்தி பெறுகிறான். என்னிடம் பக்தியுடன் பிரதினமும் இவ்விதம் பூஜை செய்வானாகில் என்னுடைய சாரூப்யத்தை அடைவான், சந்தேகமில்லை. இந்த விஷயம், இரகசியமானது. சிரேஷ்டம், பரிசுத்தம், நித்தியமானது, நானே பிரத்தியக்ஷமாக இந்த உனக்குக் கூறினேன்.

இதைப் பக்தியுடன் எப்போதும் பாராயணம் செய்தாலும் சிரவணம் செய்தாலும், நித்தியம் பூஜை செய்தபலனை அடைகிறான். சந்தேகமில்லை.

இவ்விதம் பரமாத்மாவாகிய ஸ்ரீராமர் மிகச் சிறந்ததான க்ரியா யோகத்தை, மஹாத்மாவும், ஆதிசேஷன் அம்சமும், தன்பக்தனுமான இலக்ஷ்மணருக்குக் கூறினார்.

ஸ்ரீராமர் மறுபடியும் மாயையை ஆசிரயித்த பிராகிருதனைப் போல் துக்கமடைந்து ஸீதையை நினைந்து ஆ ஸீதையென்று புலம்பி கொஞ்ச மேனும் நித்திரையடையாமலிருந்தார்.

ஸ்ரீராமர் இலக்ஷ்மணர் இருவரும் குகையில் இவ்விதம் இருக்க, கிஷ்கிந்தையில், சுபுத்தியுடைய அனுமார் ஸுக்ரீவரைத் தனிமையில் பார்த்து, ஓ கபி அரசரே! உமக்கு உத்தமமான ஹிதவசனம்

சொல்லுகிறேன் கேளும், ஸ்ரீராமர் உமக்குச் சிறந்த உபகாரம் செய்திருக்கிறார். அவர் பண்ணின உபகாரத்தை நீர் மறந்துவிட்டதாகவே நினைக்கிறேன். மூவுலகத்தாராலும் வெல்லுதற்கரிய வாலியை உம் நிமித்தம் வதை செய்தார். நீரும் இராஜ்யத்தை யடைந்தீர், ஒருக்காலும் அடையக்கூடாத உம்முடைய பத்தினியையும் அடைந்திருக்கிறீர்.

நல்ல புத்திசாலியாகிய அந்த ஸ்ரீராமர், பருவத சிகரத்தில் வாசஞ் செய்துகொண்டு, பெருந்தன்மையான காரியத்தை யுத்தேசித்து உம்முடைய வரவை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறார்.

நீர் குரங்கின மாகையால், ஸ்திரீகளிடம் பற்றுதலை யடைந்து, ஸ்ரீராமரிட்ட கட்டளைப்படி நடக்கவில்லை. ஸீதையைத் தேடும் காரியத்தைச் செய்கிறேன் என்று பிரதிஞ்ஞை செய்தபடி நீர் செய்யாவிட்டால், வாலியைப்போல் நீரும் நிச்சயமாக மரணம் அடைவீர் என்று தெரிவித்தார்.

அனுமார் வார்த்தையைக் கேட்ட ஸுக்ரீவர் பயத்தால் திகிலடைந்து, "ஓ அனுமாரே! நீர் கூறியது உண்மைதான். நான் செய்யும் கட்டளையை விரைவாகச் செய்யும்; பலமுடைய வானரர்களுக்கெல்லாம் கட்டளையிட்டு வரவழைத்து பதினாயிரம் வானரர்களைப் பத்துத் திசைகளிலும் செல்லும்படி அனுப்பவேண்டும்; இன்னும் ஏழுதீவுகளிலுமுள்ள வானரர்களையும் இங்கு வரவழைக்க வேண்டும்; எல்லா வானரர்களும் இவ்விடம் பதினைந்து நாட்களுக்குள் வந்து சேரவேண்டும். அதற்கு மேல் அவர்கள் காலங்கழித்து வந்தால் அவர்கள் என் வதைக்குரியவர்களாகவே ஆவார்கள், இவ்விதம் நீர் செய்ய வேண்டும்" என்று கூறி ஸுக்ரீவர் கிருகம் சென்றார்.

புத்திமானாகிய அனுமார் ஸுக்ரீவர் ஆஞ்ஞைப்படி பத்துத் திசைகளுக்கும் அந்தக்ஷணமே மனத்தினும் வேகமாகச் செல்லும் தாமுடையவர்களும், உன்னுதற்கரிய குணமுடையவர்களும், பன்னுதற்கரிய பலமுடையவர்களும், வாயுவைப்போல் சஞ்சரிக்கிறவர்களும வனத்தில் சஞ்சரிக்கும் வானரக் கூட்டங்களுக்குள் சிரேஷ்டர்களும் பருவதத்திற்குச் சமானமான சரீரமுடையவர்களும், வெகுமானம் [illegible] தாலும் கொடாவிட்டாலும் திருப்தியடையுக் [illegible] [illegible] அனுப்பினார்.

## ஐந்தாவது சருக்கம்.

ஸ்ரீராமர் இரத்தின மயமான தாழ்வாரங்களுள்ள பருவத சிகரத்தில் வாசம் செய்து கொண்டிருக்கும்போது, ஸீதையின் வியோகத் (பிரிவு) தாலுண்டான வருத்தத்தைப் பொறுக்கமுடியாமல் இலக்ஷ்மணரைப் பார்த்து, "ஓ இலக்ஷ்மண! பார். ஸீதையை இராக்ஷசன் கொண்டுபோய் விட்டான். ஒரு சமயம் அவனால் அபகரிக்கப்பட்டனளோ அல்லது அவள் மரண மடைந்தனளோ என்பதை இன்னமும் அறிந்துகொள்ள முடியவில்லை.

யாராகிலும் ஒருவன் ஸீதை ஜீவனுடன் இருக்கிறாள் என்று சொல்லுவானாகில் அவன் எனக்குப் பிரியத்தைச் செய்தவனாவான். அந்த ஜானகி எந்த இடத்திலாவது ஜீவித்திருப்பாளாகில், பாற்கடலிலுதித்த அமுதத்தைப்போல் பலாத்காரமாகவே அடைவேன். ஓ பிராதாவே! என்னுடைய பிரதிஞ்ஞையைக் கேள். எவன் என் மனைவியைக் கொண்டு போனானோ, அவனைப் புத்திர, மித்திர, களத்திரங்களுடனும் சைனியங்களுடனும் வாகனங்களுடனும் சாம்பலாகச் செய்கிறேன்.

ஆ ஸீதே! ஓ சந்திரமுகி! நீ இராக்ஷசன் இல்லத்திலிருந்து கொண்டு துக்கத்தால் துன்பமுற்று, என்னைப் பாராமல் எவ்விதம் பிராணனுடன் இருக்கிறாய்!

சந்திரன் போன்ற திருமுகமுடைய ஸீதையில்லாததால், சந்திரனும் எனக்கு சூரியனைப்போல் காணப்படுகிறான். ஓ சந்திர! நீ ஸீதையை முன்னிட்டு உன் குளிர்ச்சியுள்ள கிரணங்களால் என்னையும் தொடு

ஸுக்ரீவனும் தயவின்றி துக்கப்படும் என்னைப் பார்க்கவில்லை. அவன் சத்துருவற்ற இராஜ்யத்தை அடைந்து, தனிமையில் ஸ்திரீகள் சூழ்ந்தவனாகி மதுவில் ஆவல்கொண்டு வெகு காமமுடையவனாகவுமிருந்து, நான் செய்த உபகாரத்தை மறந்தவனாகவே, வியக்தமாகக் காணப்படுகிறான்

சரத்காலங் கழிந்தும் என் பிரியமுள்ள பத்தினியைத் தேடுவதற்கு வரவில்லை,

கிருதக்னனும், துஷ்டனுமாகிய இந்த ஸுக்ரீவன் முந்தி உபகாரம் செய்த என்னை மறந்திருக்கிறான். நகரத்துடனும், பந்து ஜனங்களுடனும் அவனை இப்போது நாசம் செய்கிறேன். நான் வாலியை யெவ்விதம் சங்கரித்தேனே அவ்விதத்துக்கே இவனும் ஆவான் போல் காண்கிறது" என்று ஸ்ரீராமர் கோபித்துக் கொண்டார்.

இவ்வாறு கோபங் கொண்ட இராகவரைப்பார்த்து இலக்ஷ்மணர், "ஓ தேவ! நான் இப்போதே கிஷ்கிந்தைசென்று அங்குள்ள தோஷ மனமுடைய ஸுக்ரீவனைக் கொன்று தங்களுடைய சமுகம் வருகிறேன். எனக்கு அவ்விதம் செய்ய உத்தரவு கொடுக்கவேண்டும்" என்றுரைத்து, ஜடிதியில் வில், கத்தி, அம்புறை இவைகளை யெடுத்துக் கொண்டு செல்லுவதற்கு முயற்சி யுடையரானார். அவரைத் தடுத்து ஸ்ரீராகவர் கூறுகிறார்.

"ஓ இலக்ஷ்மண! என்னுடைய பிரியமுள்ள மித்திரனாகிய ஸுக்ரீவனை நீ வதை செய்ய வேண்டாம். ஆனால் அவனை நீ வாலியைப் போல மரணம் அடைவா யென்று பயமுறுத்தி அவன் சொல்லும் வார்த்தையைக் கேட்டுக் கொண்டு விரைவாக இவ்விடம் வந்து சேர். பிறகு செய்யவேண்டிய காரியம் எதுவோ அதை நான் செய்கிறேன் சந்தேகமில்லை" என்று கூறினார்.

இலக்ஷ்மணர், அவ்விதமே யென்று புறப்பட்டு பயங்கரமான நடையுடன் கோபத்தால் வானரர்களைத் தகிப்பவர்போலக் கிஷ்கிந்தை சென்றார்.

ஸ்ரீராகவர், ஸர்வஞ்ஞராயினும், எப்போதும் இலக்ஷ்மியை யுடையவராயினும், விஞ்ஞான சொரூபராயினும் துன்பமடைந்து, மாயா சம்பந்தமுடைய ஓர் அற்பன், பிராகிருத ஸ்திரீயைப் பற்றித் துக்கிப்பதுபோல ஸீதையைப் பற்றி வருத்த மடைந்தார்.

புத்தி முதலியவைகளுக்கு, சாக்ஷியானவரும், மாயையின் காரியத்தை அதிக்கிரமித்திருப்பவரும், இராகம் முதலியவைகள் அற்றவருமாகிய இந்த ஸ்ரீராமருக்கு மாயையின் காரியம் எவ்விதம் உண்டாயிற்று என்று ஓர் சங்கை யுண்டாகக் கூடும். ஸ்ரீமகாவிஷ்ணுவானவர், பிரமதேவருக்குக் கொடுத்த வாக்கைப் பூர்த்தி செய்வதற்கும தசரத மகாராஜனுடைய தவத்திற்குப் பலனைக் கொடுப்பதற்கும், உலகத்தில் ஜனங்கள்யாவரும், மாயையால் மோகமடைந்து

அஞ்ஞானத்துடன் கூடியவர்களாயிருக்கிறார்களே இவர்களுக்கு எப்படி மோக்ஷம் உண்டாகும் என்று ஆலோசனை செய்து, மானிடர்களை யுலகத்தில் தருமம் செய்யும்படி செய்விப்பதற்கும், உலகத்திலுள்ள எல்லா மானிடர்களுடைய பாபங்களைப் போக்குவதற்கும், அவர்கள் எல்லோரும் மோக்ஷம் அடைவதற்கும், சாதனமாக 'அத்யாத்ம ராமாயணம்' என்னும் பெயருடைய லீலையை யுலகத்தில் பிரசித்தி செய்வதற்கும் மானிட தேகமெடுத்து பூமியில் ஸ்ரீராமராக அவதாரம் செய்தார்.

அவர் அந்தந்த சமயத்துக்குத் தக்கபடி விவகாரம் என்ற பொருள் சித்திபெறுவதற்காக, கோபம், மோகம், காமம் முதலியவைகளைத் தாமும் ஏற்று நடந்துகாட்டி வருகிறார்.

குண சூனியராகிய பிரபு, குணங்கள் யாவற்றிலும் அன்புடையவர்போல் காணப்படுகிறார். ஆனாலும் அவர் விஞ்ஞானசொரூபர், விஞ்ஞான சக்தியுடையவர், சாக்ஷியாகியவர், சுகசொரூபர். ஆகையால், ஆகாயம் போலக் காமம் முதலியவைகளின் பற்றுதலை யடையாதவர்

ஸனகர் முதலிய முனிவர்கள், அந்த ஈஸ்வரரிடம் பக்திசெய்து நிர்மலமான மனமுடையவர்களாகி எப்போதும் அவரை அறிகிறார்கள்

ஜன்மம் இல்லாத ஈஸ்வரன் பக்தர்களின் மனோபீஷ்டத்தை அநுசரித்து, ஆவிர்ப்பாவ (உற்பவம்) மடைகிறார். ஆகையால் அவருக்கு மாயா சம்பந்தமில்லை யென்று சங்கை நிவர்த்தி பண்ணிக் கொள்ளவேண்டும்.

ஸ்ரீராமர் மலைச்சிகரத்தில் இவ்வாறு வருத்தம் அடைந்து கொண்டிருக்க, இலக்ஷ்மணர் கிஷ்கிந்தைக் கருகாமையிற் சென்று வானரர்கள்யாவரும் நடுங்கும்படி நாணொசை செய்தார்.

அவ்வோசையைக் கேட்டு ஓடிவந்த வானரர்கள் இலக்ஷ்மணரைப் பார்த்து, கற்களையும், மரங்களையும் எடுத்துக்கொண்டு, பிராகாரத் (மதிள்) தின்மீதிருந்து கில—கில—என்று சத்தம் செய்தார்கள்.

அப்பொழுது, மகா பராக்கிரம முடைய இலக்ஷ்மணர் அந்த வானரர்களைப் பார்த்து, கோபமீறிக் கண் சிவந்து அவர்களை யது

யோடு தொலைக்க எண்ணங்கொண்டு வில்லை யெடுத்து நாணேற்ற யத்தனித்தார்.

அந்தச் சமயம் புத்திமான்களுக்குள் சிறந்த அங்கதன் இலக்ஷ்மணர் வந்ததையறிந்து விரைவாக வந்து வானரர்கள்யாவரையுந் தடுத்து இலக்ஷ்மணர் அருகிற் சென்று, தண்டம் போல் பூமியில் படிந்து வணங்கினான்.

அன்பை விருத்தி செய்யும் இலக்ஷ்மணர் கோப சாந்தியடைந்து அங்கதனை யெடுத்தணைத்து குழந்தாய்! உன் சிறிய தந்தையாகிய ஸுக்ரீவரிடம் சென்று, கோபாவேச முற்ற ஸ்ரீராமமூர்த்தியால் ஏவப்பட்ட இலக்ஷ்மணன் வந்திருக்கிறான் என்று சொல் என ஆஞ்ஞை செய்தார்.

அங்கதன் அவ்விதமே என்று விரைவாக ஸுக்ரீவரிடம் சென்று, கோபத்தாற் சிவந்த கண்களையுடைய இலக்ஷ்மணர், நகரத்தின் வெளியில் வந்திருக்கிறா என்றான்.

இதைக் கேட்ட வானர மகாராஜனாகிய ஸுக்ரீவர் மிகவும் நடுக்க மடைந்து, தனது மந்திரிக்குள் சிறந்த ஆஞ்சநேயரை யழைத்து, நீர் அங்கதனுடன் இலக்ஷ்மணரிடம் விரைவாகச் சென்று வணக்கத்துடன் கோபங் கொண்ட வீரரைச் சமாதானம் செய்து, மெதுவாக அரண்மனைக்கு அவரை அழைத்து வாரும் என்று அனுப்பி விட்டு, கபீஸ்வரனாகிய ஸுக்ரீவர் தாரையிடம் சென்று குற்ற மற்ற தாரையைக் கண்டு, "ஓ தாரே! நீ சென்று மிருதுவான பேச்சுகளால் இலக்ஷ்மணர் கோபத்தைச் சமனம் செய்து அரண்மனைக்குள் அவரை அழைத்து வந்த பிறகு எனக்குத் தெரிவிக்கவேண்டும்" என்றார்.

தாரை, இதைக் கேட்டு அவ்விதமே ஆகட்டும் என்று கூறி அரண்மனை மத்தியிலுள்ள ஸ்தானம் வந்தாள்

அனுமார அங்கதனுடன் இலக்ஷ்மணரிடம் வந்து பக்தியுடன் தலையால் வணங்கித் தங்களுடைய வரவு நல்வரவாகுக என்று கூறி, ஓ மஹா பாக்கியம் பெறற வீரராகிய ஸௌமித்திரியே! தாங்கள் சந்தேக மின்றித தங்களுடைய கிருகத்திற்கு வாருங்கள். இராஜத்துவாரத்தில் பிரவேசித்து ஸுக்ரீவரையும் பார்த்து பின்பு என்ன ஆஞ்ஞை செய்கிறீர்களோ அதை நான் செய்கிறேன் என்று

ரைத்து, பக்தியுடன் இலக்ஷ்மணருடைய கரத்தைப் பிடித்துக் கொண்டு அரண்மனைக்கு அழைத்து வந்தார்.

இலக்ஷ்மணர், அந்த கிஷ்கிந்தையிலுள்ள வானர யூதபர் (கூட்டத்தினர்) களின் உப்பரிகைகளை நான்கு பக்கங்களிலும் பார்த்துக் கொண்டு, தேவேந்திரன் அரண்மனைக்குச் சமானமான ஸுக்ரீவா அரண்மனைக்கு வந்தார்.

அரண்மனையின் நடுப்புறத்தில் நின்ற, சந்திரன் போன்ற முகத்தையும், மதர்த்துக்கடையிற் சிவந்த கண்களையும், சர்வாபரண அலங்காரத்தையும், உடைய தாரையானவள், இலக்ஷ்மணர் வரவைப் பார்த்து அவர் அருகிற் சென்று நமஸ்கரித்து, இனிய குரலோடு "ஓ ஸுமித்திரா புத்திரரே! வரவேண்டும். உமக்கு மங்களம் உண்டாகுக, நீர் பக்தர்களிடம் வாற்சல்லிய (உருக்கம) முடையவர்; ஸாதுவானவர். பக்தனும், பிருத்திய (அடிமை) னும், கபிகளுக்கு அரசனுமாகிய ஸுக்ரீவரிடம் ஏன் கோபங் கொள்ளுகிறீர்.

இந்த ஸுக்ரீவர் வெகு காலம்வரை இன்பமடையாமல் மிக்க துக்கங்களையே அநுபவித்துக்கொண்டு இருந்தவர். இப்பொழுது அந்தத் தீங்குகளில் நின்று தங்களால் இரக்ஷிக்கப்பட்டவர். உங்களுடைய அநுக்கிரகத்தால் இராஜ்யத்தை யடைந்திருக்கிறார்.

புத்தியிற் சிறந்த ஓ இலக்ஷ்மணரே! காமத்தில் விருப்பங் கொண்டதனுல் ஸுக்ரீவர் இரகுநாதரைச் சேவிக்க வரவில்லை.

ஓ பிரபுவே! வெகு தேசங்களிலிருந்து வானரர்கள் வரப் போகிறார்கள். ஓ இரகு சிரேஷ்ட! வானர சைனியங்களை அழைக்கப் பதினாயிரம் தூதர்கள் சென்றிருக்கின்றார்கள். ஸுக்ரீவர் வானர யூதபர்கள் யாவருடனும் தானே வந்து, இராக்ஷச சிரேஷ்டர்களையும், இராவணனையும வதமடையும்படி செய்யப் போகிறார். இப்பொழுது தங்களுடன் கூடவே வானர சிரேஷ்டர் வரப்போகிறார். தாங்கள் இப்போது அரண்மனையைப் பார்க்கவேண்டும். அங்கு புத்திரர், மனைவி, மித்திரர்களால் சூழப்பட்ட ஸுக்ரீவரைப் பார்த்து, அவருக்கு அபயம் கொடுத்து, அவரையும் கூடவே அழைத்துச் செல்ல வேண்டும் என்று கூறினுள்.

மிகுதியான கோபங் கொண்ட இலக்ஷ்மணர் தாரையின் வார்த்தையைக் கேட்டு, கோபந்தணிந்து, வானரராஜனாகிய ஸுக்ரீவரிருக்குமிடம் சென்றார்.

அந்தப் புரத்தில் தன் பத்தினி ருமையுடன், அன்போடு கூடிக் குலாவிக் கொண்டிருந்த கபிராஜன், இலக்ஷ்மணர் வருவதையறிந்து மிகவும் பயந்தவராகி, எழுந்திருந்து ஜடுதியில் ஓடி வந்தார்.

தன்னிடம் வந்த துஷ்ட நடத்தை யுள்ளவரும், மதத்தால் தளர்ந்த கண்ணுடையவருமாகிய ஸுக்ரீவரைப் பார்த்து இலக்ஷ்மணர் கோபங் கொண்டு, 'ஓ ஸுக்ரீவ! நீ இரகூத்தமரை மறந்து விட்டாய், எந்த பாணத்தால் வாலி மாண்டானோ, அந்த பாணம் இப்போதும் தயாரா யிருக்கிறது. என்னால் அடிபட்டு நீ வாலியின் ஸ்திதியை அடைவாய்" என்று கடிந்து கூறினார்.

இவ்விதம் கடுமையாகப் பேசும் இலக்ஷ்மணரைப் பார்த்து, வீரனாகிய அனுமார், "ஓ இராமானுஜ! ஏன் இவ்விதம் பேசுகிறீர்கள். இந்த வானர மஹா ராஜா தங்களை விட இராமரிடம் மிகுந்த பக்தியுடையவர். இராகவருடைய காரியம் நிறைவேற வேண்டு மென்று எப்போதும் ஞாபகத்தில் வைத்திருக்கிறார், மறக்கவில்லை. ஓ பிரபுவே வானரர்கள் கோடிக்கணக்காகத் துரிதத்தில் வருகிறார்கள் பார்க்கலாம். ஸீதையைத் தேடுவதற்கு, சீக்கிரமாகவே செல்லப் போகிறார்கள். ஸுக்ரீவர் இராம காரியம் யாவற்றையும் சாதகமாகச் செய்து முடிக்கப் போகிறார்" என்று கூறினார்.

ஸௌமித்திரி, அனுமாருடைய வார்த்தையைக் கேட்டு சமாசத்தை அடைந்தார்.

ஸுக்ரீவன், அர்க்கியம், பாத்தியம் முதலிய உபசாரத்தோடு இலக்ஷ்மணரைப்பூஜித்து, அவரை அணைத்து, "ஓ ஸுமித்திராபுத்திர! நான் இராமருக்குத்தாஸன்; அவரால் இரக்ஷிக்கப்பட்டவன்; இரகுவீரர் தன்னுடைய தேஜஸால் உலகங்களை அரைக்ஷணத்துக்குள் ஜயித்து விடுவார். பிரபுவே! அவருக்கு நானும் என்னுடைய வானர சைனியங்களும் ஸகாய மாத்திரமேயல்லாது வேறல்ல, என்று கூறினன்.

ஸௌமித்திரியும், ஸுக்ரீவரைப் பார்த்து "ஓ ஸுக்ரீவ! மகா பாக்கியம் செய்தவரே! கோபத்தால் நான் பேசியதைப் பொறுக்க

வேண்டும், ஏதோ நான் சொல்லிவிட்டேன், நாம் இப்போதே செல்லு வோம் இராகவர் ஜானகியின் வியோகத்தால் மிக்க துக்கமடைந்து தனியாகவே அரண்யத்தில் இருக்கிறார்" என்றார்.

ஸுக்ரீவர் அவ்விதமே என்று கூறி, இலக்ஷ்மணர் ஸஹிதம், தேரின் மீதேறி, பேரி, மிருதங்கம் முதலிய வாத்தியம் முழங்கவும், வெண்குடை, நிழற்றவும், நீலன், அங்கதன், அனுமான், முதலிய வானர வீரர்கள் சூழவும், கரடிக்கரசனாகிய சாம்புவன் தொடரவும் இராமச் சந்திரனிடம் வந்தார்.



## ஆறாவது சருக்கம்.

பருவதத்தின் குகையில் வசிப்பவரும், மரவுரி தரித்தவரும், சடைமுடியோடு விளங்குகிறவரும், சியாமளவர்ணரும், நீண்ட கண்கள் உடையவரும், சாந்த குணமுடையவரும், புன்னகையோடு கூடிய அழகு வாய்ந்த முக கமலமுடையவரும், ஸீதையின் வியோகத்தால் தாபமடைந்தவரும், மிருகங்களையும், பக்ஷிகளையும் பார்க்கிறவருமாகிய ஸ்ரீராமரைப் பார்த்து, ஸுக்ரீவர், இலக்ஷ்மணர் இருவரும் வெகு தூரத்திலேயே தேரை விட்டிறங்கி, விரைவாக வந்து பக்தியுடன் ஸ்ரீராகவருடைய பாதங்களுக்கு முன்னிலையில் சாஷ்டாங்கமாக வணங்கினார்கள்.

ஸ்ரீராமச்சந்திரர், இலக்ஷ்மணரையும்,பயத்துடனிருக்கும் ஸுக்ரீவரையும் அணைத்து தன்னருகில் இருக்கச் சொன்னார். அரசநீதி யறிந்த இரகுவீரர் ஸுக்ரீவருக்கு கிரமப்படிக்குள்ள பூஜிதை செய்தார்.

பிறகு ஸுக்ரீவர், பக்தியுடன் வணங்கி, காலநுட்ப முடைய புத்தியுடன், இரகு சிரேஷ்டரைப் பார்த்து, "ஓ தேவ தேவரே! பார்க்கவேண்டும். மிகுதியான வானர ஸைனியங்கள் வருகின்றன என்றார்.

இவர்கள் அஷ்டகுல பருவதத்தில் உண்டானவர்கள். இவர்கள் மேருமலையில் உண்டானவர்கள். இவர்கள் மந்தரமலையில் உள்ளவர்கள். தீவுகளிலும், நதிக்கரைகளிலும், மலைச் சாரல்களிலும் வசிப்பவர்கள். தங்கள் இஷ்டப்படி உருவம் எடுக்கக் கூடியவர்

இவர்கள் எல்லோரும், தேவர்களின் அமிசத்திலிருந்து உண்டானவர்கள். யாவத்திராளும் யுத்தம் செய்வதில் சாமர்த்திய முடையவர்கள். இவர்களிற் சிலர் யானைக்குச் சமமானவர்கள். சிலர் பதிறையிரம் யானைக்கு நிகருள்ளவர்கள். ஓ பிரபுவே! மற்றுமுள்ள சிலர் கணக்கற்ற வலுவுடையவர்கள். இவர்களிற் சிலர் மைநாகமலையின் சிகரம் போன்றவர்கள். சிலர் சுவர்ணத்திற்கு ஒப்பானவர்கள், சிலர் சிவப்பு வர்ணமுள்ள முகமுடையவர்கள்; மற்றுமுள்ள சிலர் நீண்ட ரோமமுள்ளவர்கள், சிலர் பரிசுத்தமான ஸ்படிகம் போன்றவர்கள், சிலர் அரக்கர்களுக் கொப்பானவர்கள். யுத்தத்தில் விருப்பமுள்ள இந்த வானரர்கள் எங்கும் செல்லுவார்கள்; கர்ஜனை செய்வார்கள்.

ஓ பிரபுவே! எல்லோரும் தங்களுடைய ஆஞ்ஞையை அநுசரித்து நடக்கக் கூடியவர்கள். பலன்களையும், மூலங்களையும் ஆகாரமாகப் புசிக்கிறவர்கள்.

இவர் ஜாம்பவான் என்பவர்; வீரிய முள்ளவர்; மஹாவீரர். காடிகளுக்கு அதிபதி, என்னுடைய மந்திரிகளுக்குள் சிறந்தவர். கோடி காடிகளுக்குத் தலைவராயிருப்பவர்.

இவர் வாயுவின் குமாரர். மிகுதியான சத்வகுணத்தையும் பராக்கிரமத்தையும் அடைந்தவர். அநுமான் என்ற பிரசித்தியுள்ளவர். பிறரை அவமதிக்கச் செய்யும் மிகுதியான சக்தியுடையவர். புத்திமான்களுக்குள் சிறந்தவர். இவரும் என்னுடைய மந்திரியில் ஒருவர்.

நளன், நீலன், கவயன், கவாக்ஷன், கந்தமாதனன், சரபன், மைந்தன், கஜன், பனஸன், வலீமுகன், ததிமுகன், ஸுஷேணன், தாரன், மிகுதியான வலுவுடையவனும், அநுமானுக்குத் தந்தையும் பலசாலியுமான கேஸரி, இவர்கள் என்னுடைய யூதபர்கள். வந்திருக்கும் வானர சைனியங்களில் முக்கியமானவர்களை மட்டும் நான் எடுத்துக் கூறினேன்.

இவர்கள் யாவரும் மகாத்மாக்கள், மகா வீரிய முள்ளவர்கள். இந்திரனுக்கு நிகரான பராக்கிரம முள்ளவர்கள். இவர்களில் ஒவ்வொருவரும் கோடிவானரர்களுக்கு எஜமானனவார்கள். யாவரும் தங்களுடைய உத்தரவை அநுசரித்து நடப்பவர்கள்.

இவன் வாலியின் குமாரனாகிய அங்கதன். பெருமை பொருந்தியவன், பிரசித்தியுள்ளவன், வாலிக்குச் சமமான வலுவுடையவன், வீரன், இராக்ஷசர்களின் குலத்துக்கு யமன் போன்றவன்.

இவர்களும், மற்றவர்களும் தங்களுடைய விஷயத்தில் உயிரையும் விடக் கூடியவர்கள். பர்வதத்தின் சிகரங்களைப் பந்து போல் எடுத்து யுத்தம் செய்பவர்கள். சத்துருக்களைச் சங்கரிப்பதில் சாமர்த்திய முள்ளவர்கள்.

ஓ இரகு சிரேஷ்ட! எல்லோரும் தங்களுடைய சுவாதீனத்தில் இருப்பவர்கள். தாங்களே உத்தரவு செய்யுங்கள் என்று கூறினு

இராமச்சந்திரர் ஸுக்ரீவரை அணைத்துச் சந்தோஷத்துடன் ஆனந்த பாஷ்பம் பொழிந்தவராகி "ஓ ஸுக்ரீவ! நீர் என்னுடைய காரியங்களின் நிலைமையை அறிவீர். ஜானகியைத் தேடுவதற்கு உமக்கு இஷ்டமிருந்தால், இவர்களுக்கு ஆஞ்ஞை செய்யும்" என்றார்.

இராகவருடைய வார்த்தையைக் கேட்ட ஸுக்ரீவர், பிரிய முள்ள மனதுடன் மிக்க வலுவுள்ள வானரர்களை மற்ற எல்லாத் திசைகளுக்கும் அனுப்பிவிட்டு, தென்திசைக்கு மட்டும், மிகுதியான பிரயத்தனத்துடன், யுவராஜனாகிய அங்கதன், ஜாம்பவான், மகா பலசாலியாகிய அனுமான், நளன், ஸுஷேணன், சரபன், மைந்தன், த்விவிதன் இந்த பலிஷ்டர்களை அனுப்பினர்.

பிறகு ஸுக்ரீவர் எல்லோரையும் பார்த்து "நீங்கள் பிரயத்தனத்துடன் மங்கள சொரூபமுடைய ஸீதையைத் தேடுங்கள். ஒரு மாதத்துக்குள் திரும்பி விடுங்கள். இந்த ஒரு மாதத்துக்குள் ஸீதையைத் தேடித் தெரிந்து கொள்ளவேண்டும். ஒரு மாதத்துக்கு மேல் ஒரு நாளாயினும் தங்கக்கூடாது. இதற்குள் ஸீதையைக் காணாமல் திரும்பி வந்தால் அப்பொழுது உங்களுக்குப் பிராணனை அபகரிக்கும் சிக்ஷை ஏற்படும்" என்பதாகக் கட்டளையிட்டு மிக்க பராக்கிரமமுடைய வானரர்களைப் பயணப்படுத்தி ஸ்ரீராமரை நமஸ்கரித்து அவர் பக்கத்தில் அமர்ந்தார்.

இரகுநாதர் தென்திசைக்குப் போகப் பிரயாணப்படும் அனுமாரைப் பார்த்து, "ஓ அனுமாரே! இது என்னுடைய மோதிரம் என்னுடைய பெயர் அடையாள முள்ளது. மிகவும் சிறந்தது. இதை

ஸீதா தேவியிடம் அடையாளமாகக் கொடும். ஸீதை தனிமையி லிருக்கும்போது கொடும். ஓ கபிசிரேஷ்ட! நீர்தான் இந்தக் காரியத் தில் பிரதான மாகிறீர். உம்முடைய வலிமை யாவற்றையும் நான் அறிவேன். உமக்கு மார்க்கமானது மங்களத்தைக் கொடுக்கட்டும்" என்று கூறியனுப்பினர்.

ஸீதையைத் தேடுவதற்காக ஸுக்ரீவரால் அனுப்பப்பட்ட அங் கதன் முதலிய வானரர்கள் யாவரும் ஆங்காங்கு சென்றார்கள்.

தென்திசைக் கேகும் அனுமார் முதலிேேனார், விந்தியமலைக்குச் சென்ற போது, அங்கு வசிக்கும் ஓர் இராக்ஷசனைக் கண்டு, 'கல கல' என்று சத்தம் செய்து ஓர் க்ஷணத்தில் முஷ்டியால் அந்த இராக்ஷசனை வதை செய்தார்கள். அவனைப் பார்த்து இவன் இரா வணன் அல்லவென்று மற்றொரு வனம் புகுந்தார்கள்.

அவ்விடத்தில் தாகத்தால் துன்பமுற்று, கண்டம், உதடு, தாவாய்க் கட்டை இவைகள் உலர்ந்து, வரட்சி மீறி, அருந்த ஜலம் அகப்படாமல் தவித்துக்கொண்டு வரும்போது, புற்களாலும், புதர்களாலும் சூழப்பட்ட ஓர் பள்ளத்தாக்கைக் கண்டார்கள். அந் தப் பள்ளத்திலுள்ள குகையில் நின்று வெளிப்படும் நனைந்த இறக் கைகளுடன் கூடிய அன்றில் பக்ஷிகளையும், அம்ஸப்பக்ஷிகளையும் கண்ணுற்று, இவ்விடத்தில் ஜலம் இருப்பது நிச்சயம் என்று தீர் மானித்து அப்பெரிய குகைக்குள் பிரவேசிக்க எண்ணங் கொண்டார் கள். முந்தி அக்குகைக்குள் அனுமார் சென்றார். மற்ற வானரர் களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். உற்சாகத்துடன் ஒருவருக் கொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டு இருட்டில் வெகு தூரம் சென்றார்கள். அங்கு கபி சிரேஷ்டர்கள், மணிகர்ணிகைக்குச் சமானமான ஜலம் நிறைந்த தடாகங்களையும், கற்பக விருக்ஷங்களைப் போன்றவைகளும், பக்குவமாகிய பலன்களின் பாரத்தால் தலை வணங்கினவைகளும், பதக்கு மதுக்களுடன் கூடிய தேன் கூட்டை யுடையவைகளுமாகிய இலந்தை மரங்களையும், பார்வைக்கு மிக்க அழகு அமைந்தனவாயும், மணிகள், இரத்னங்கள், வஸ்திரங்கள், முதலியன நிறைந்தனவாயும், தேவர்களுக்குரிய அன்னம், பக்ஷியம், முதலிய உணவுப் பொருள் அமைந்தனவாயும், மானிட சஞ்சாரம் அற்றன வாயுமுள்ள அநேக கிருகங்களையும் கண்டார்கள். அக் கிருகங்களைப் பார்த்து ஆச்சரியப் பட்டுக் கொண்டு வருகையில் ஓர்

கிருகத்தில், தேவர்களுக்குரிய ஓர் சுவர்ண ஸிம்மாசனத்தில் மிகுந்த காந்தியோடு பிரகாசிக்கும் ஒரு ஸ்திரீ வீற்றிருக்கக் கண்டு அவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். யோகத்தில் இருப்பவளும், தியானம் செய்பவளும் மரவுரியுடுத்தவளும், மகா பாக்கியம் செய்தவளுமாகிய அந்த யோகினியைப் பக்தியுடனும், பயத்துடனும் நமஸ்காரம் செய்தார்கள்.

அந்த தேவி தன்னிடம் வந்து நமஸ்காரம் செய்த வானரர்களைப் பார்த்து, "ஓ வானரர்களே! நீங்கள் யார் ஏன் வந்தீர்கள்? எங்கிருந்து வந்தவர்கள், யாருடைய தூதர்கள், என்னுடைய ஸ்தானத்தை ஏன் ஆக்கிரமித்தீர்கள்?" என்று கேட்டாள்.

அதைக் கேட்ட ஆஞ்சனேயர், "ஓ தேவி! நான் கூறுகிறேன் கேளும்—அயோத்திக் கதிபதியான பெருமை பொருந்திய தசரதர் என்ற ஓர் அரசர் இருந்தார். அவருடைய குமாரர் இராமர் என்று பிரசித்தியுள்ளவர், அவ்வரசருடைய நான்கு புத்திரர்களிலும் மூத்தவர். மகா பாக்கிய சாலியானவர், தந்தையின் வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு அவர் ஆஞ்ஞையை முன்னிட்டு, பத்தினியுடனும், பிராதாவுடனும் வனம் வந்தார். அந்த வனத்தில் துராத்மாவாகிய இராவணன் அந்த இராமச் சந்திரருடைய மனைவி பதிவிருதையாகிய ஸீதையை அபகரித்துப் போய் விட்டான். அவர் தன் பத்தினியைத் தேடிக்கொண்டு தம்பி இலக்ஷ்மணருடன் ஸுக்ரீவரிடம் வந்தார். ஸுக்ரீவர் அவருடன் சிநேகம் செய்து கொண்டு சிநேக வாஞ்சையால் ஸ்ரீராமருடைய பத்தினியைத் தேடுங்கள் என்று எங்களையேவினார். ஆகையால் நாங்கள் வனங்களில் தேடிக் கொண்டு வரும்போது தாகவாக்ஷி மீறி ஜலத்தை விரும்பி இந்த பயங்கரமான குகைக்குள் நுழைந்தோம்; தற்செயலாகத் தம்மிடம் வந்தோம்" என்று கூறி, "நீர் யார்? எதற்காக இங்கு வசிக்கிறீர்; ஓ மங்கள சொரூப முடையவரே! இதைப் பற்றிச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

யோகினி அவர்களைப் பார்த்து, சந்தோஷித்து, "ஓ வானரர்களே! நீங்கள் பலன்களையும் மூலங்களையும் புசித்து நீர் அருந்தி சிரம பரிகாரமடைந்து இவ்விடம் வாருங்கள். பிறகு என் வரலாற்றை ஆதியிலிருந்து தெரிவிக்கிறேன்" என்றாள்.

அதைக்கேட்டு வானரர்கள் அவ்விதமே சென்று தங்களிஷ்டப்படிப் புசித்து நீரைக் குடித்து திருப்தி யடைந்து அந்த தேவியின் அருகில் வந்து கைகூப்பிக்கொண்டு நின்றார்கள்.

தேவாமிச உருவமுடைய அந்த யோகினி, அனுமாரைப்பார்த்து, "ஓ அனுமாரே! முந்தி விஸ்வகர்மாவின் குமாரியும், திவ்வியமான ரூபமுடையவளுமாகிய ஸோமை யென்ற ஓர் ஸ்திரீ இருந்தாள். அந்த ஸோமை நிருத்தனம் செய்து பரமசிவனைச் சந்தோஷப்படுத்தினாள். பரமேஸ்வரர் சந்தோஷமடைந்து மிகச் சிறப்புற்ற இந்த இடத்தை யவளுக்குக் கொடுத்தார். அவள் இங்கு பதினாயிரம் வருஷம் வரையில் வாசம் செய்தாள். நான் அந்த ஸோமைக்குத் தோழியானவள், விஷ்ணுவைத் தியானம் செய்பவள். மோக்ஷத்தை விரும்பியவள். ஸ்வயம்பிரபை என்ற பெயருடையவள். ஓர் கந்தருவனின் குமாரி.

அந்த ஸோமை பிரமலோகம் செல்லும்போது, என்னைப்பார்த்து, "ஓ ஸ்வயம்பிரபையே! மானிடர் யாருமில்லாத இந்த இடத்திலேயே நீ யிருந்து தவம் செய்து கொண்டிரு. திரேதாயுகத்தில், ஸ்ரீமன் நாராயணன் தசரத குமாரராகிப் பூமிபாரத்தைக் குறைக்க, ஆரணியத்தில் சஞ்சரிக்கப் போகிறார். அப்போது அவருடைய பத்தினியைத் தேடிக்கொண்டு உன் குகைக்கு வானரர்கள் வரப்போகிறார்கள். அந்த வானரர்களை யுபசரித்துப் பின்பு ஸ்ரீராமரையடைந்து ஸ்தோத்திரம் செய்தால் யோகிகள் அடையக்கூடிய ஸநாதனமான விஷ்ணு லோகம் செல்லுவாய்" என்று எனக்கு உபதேசித்தாள்.

அதுமுதல் நானிங்கு வசித்து வருகிறேன். இப்போது துரிதமாக அந்த ஸ்ரீராமரைத் தெரிசிப்பதற்குப் போகிறேன். நீங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள், மூடிக்கொண்டால் இந்தக் குகையை விட்டு வெளியே போய்ச் சேருவீர்கள்" என்றாள்.

இதைக்கேட்ட அனுமார் முதலியவர்கள் அவ்விதமே தங்கள் கண்களை மூட முன்னிருந்த வனம் வந்து சேர்ந்தார்கள்.

அந்த ஸ்வயம்பிரபையும், குகையை விட்டு சீக்கிரமாக ஸ்ரீராகவருடைய அருகாமையில் வந்து சேர்ந்தாள். அங்கு ஸ்ரீராமர், இலக்ஷ்மணர், ஸுக்ரீவர், இம்மூவரையும் கண்டு, ஸ்ரீராமரைப் பலதடவை பிரதக்ஷிணம் செய்து, நமஸ்கரித்து, மயிர்க் கூச்சலடைந்து, தாழ்ந்த குரலுடன் கூறுகிறாள்.

"ஓ இராஜ சிரேஷ்டராகிய ஸ்ரீராமப்பிரபுவே! நான் தங்களுக்கு ஊழியம் செய்பவள், தங்களைத் தெரிசனம் செய்வதற்கு வந்தேன். தங்களுடைய தெரிசனத்துக்காக, குகையில் இருந்து அனேக ஆயிர வருஷங்களாகத் தவம் செய்தேன். இப்போதுதான் நான் செய்த தவம் பலித்தது. மாயைக்கு அப்பால் இருப்பவரும், பூதங்கள் யாவற்றுக்கும் உள்ளிலும் புறத்திலும் உள்ள வருமாகிய தங்களை இப்போது நமஸ்கரிக்கிறேன். தாங்கள் மாயையாகிய திரையால் மறைக்கப்பட்டு மானிட ரூபம் தரித்திருக்கிறீர்கள். சைலூஷணன் (ஸ்திரீகளைக் கொண்டு ஜீவிப்பவன்) போல் அஞ்ஞான நேத்ரமுள்ளவர்களுக்குத் தாங்கள் காணப்படமாட்டீர்கள், சாத்மீக குணமுடைய சிறந்த பாகவதர்களாகிய பக்தி மார்க்கத்தை அனுஷ்டிப்பவர்கள். பார்க்க வேண்டுமென்ற விருப்பத்தால் தாங்கள் அவதாரம் செய்திருக்கிறீர்கள். தமோ குணமுடைய நான் எவ்விதந் தங்களைத் தெரிந்து கொள்வேன்.

ஓ இரகு சிரேஷ்ட! உலகத்தில் தங்களுடைய தத்துவத்தை யாரேனும் ஒருவன் அறிவானு? ஓ இரகுவீர! என்னுடைய இருதயத்தில் தங்களுடைய இந்த ரூபமே எப்போதும் விளங்கவேண்டும். ஓ இரகூத்தம! தங்களுடைய இரண்டு பாத பத்மங்களின் தெரிசனமானது மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது. ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தில் அழுத்தாதது, நன்மார்க்கத்தை நன்று தெரிவிக்கக் கூடியது. ஓ ஏழைகளுக்குப் பொருள் போன்ற பிரபுவே! பொருள், புத்திரன், களத்திரம், முதலிய ஐசுவரியங்களால் மிகவும் மமதை கொண்ட ஜீவர்கள் தங்களுடைய குணங்களைச் சொல்லுவதற்கு யோக்கியதையடையார்கள்.

ஓ இரகுராம' மாயையற்றவரும், தன் ஸ்வரூபத்திலேயே இரமிப்பவரும், குணங்கள் அற்றவரும், குணசொரூபரும், ஏழைகளுக்குப் பொருளாகியவரும் ஆகிய தங்களுக்கு நமஸ்காரம். காலரூபியும், பிரபுவும், ஆதி—மத்தி—அந்தம் இவைகள் இல்லாதவரும், எங்கும் சமமாக இருப்பவரும் ஆகிய பரமபுருஷன் என்று தங்களை நான் நினைக்கிறேன். ஓ தேவ! தங்களுடைய சரித்திரத்தை யாரும் அறியார்கள். தங்களுக்கு துவேஷி யென்றுவது, இஷ்டர் என்றுவது, உரியர் என்றுவது, பிறர் என்றுவது ஏற்படுகிறவர்கள் யாரும் இல்லை. மாயையில் கட்டுப்பட்ட மனமுடையவர்கள் தங்

களை, சிலருக்குத் துவேஷி, சிலருக்கு இஷ்டன் என்று நினைக்கிறார்கள்.

ஜன்மம் இல்லாதவரும், செய்கையில்லாதவரும், ஈசனுமாகிய தங்களுக்கு, தேவர்கள், மானிடர்கள், திர்யக்குகள் முதலியவற்றால், ஜன்மமும், கருமமும் உண்டெனெ நினைக்கத்தக்கதாயிருக்கிறது.

சிலர், இயக்கர் முதலினோர் தங்களுடைய கதைகளைச் சிரவணம் செய்து பலன் அடைவதற்காக உண்டானவர் என்று தங்களைக் கூறுகிறார்கள். மற்றும் பலர், கோசல ராஜனுடைய தவத்தின் பலன் சித்தி பெறுவதற்கு, கௌசலை பிரார்த்தித்ததற்காக அவதாரமானவர் என்று சொல்லுகிறார்கள். பின்னும் அநேகர், துஷ்டர்களான இராக்ஷசர்களை வதை செய்து, பூமி பாரத்தை யொழிக்கும்படி பிரமதேவர் பிரார்த்திக்க, அதற்காக அவதாரம் செய்தவர் என்று சொல்லுகிறார்கள்.

ஓ இரகு நந்தன! எந்த மானிடர், தங்கள் கதைகளைக் கேட்கிறார்களோ, அல்லது கீர்த்தனம் செய்கிறார்களோ அவர்கள் ஸம்ஸாரக் கடலைத் தாணம் செய்விக்கும் தங்களுடைய பாதார விந்தங்களைத் தெரிசிக்கிறார்கள்.

நான் தங்கள் மாயையிற் கட்டுண்டவள். மாயா குணங்களுக்கு வேறுபட்டவரும், அக்குணங்களின் ஆசிரயரும், விஷயமில்லாதவரும், வியாபகருமாகிய தங்களை நான் எவ்விதம் தெரிந்து கொள்வேன். எவ்வாறு ஸ்தோத்திரம் செய்வேன்.

ஓ இரகு ராம! தனுசு, பாணம் இவற்றோடு கூடிய பிராதா இலக்ஷ்மணருடனும், ஸுக்ரீவர் முதலினோருடனும் கூடிய தங்களை நான் நமஸ்கரிக்கிறேன்" என்றாள்.

இவ்வாறு ஸ்வயம்பிரபை ஸ்தோத்திரம் செய்தவுடன், வணங்கியவர்களுக்கு ஸுகிருத்தும் பிரஸன்னருமாகிய இரகு சிரேஷ்டர், தன்னிடம் மிக்க பக்தியுடைய அந்த ஸ்வயம்பிரபையைப் பார்த்து இப்போது உன் மனதில் உள்ள கோரிக்கை யாது என்று வினவினார்.

இதைக் கேட்ட ஸ்வயம்பிரபை பக்தியுடன் ராகவலா வணங்கி, "ஓ பக்தவற்சலராகிய பிரபுவே! நான் எந்த ஜென்மம் எடுத்த போதிலும், அழிவில்லாத பக்தி தங்களிடம் எனக்கிருக்கும்படி வரம் கொடுக்க வேண்டும். பிராகிருதர்களாயினும், தங்களுடைய

பக்தர்களின் சேர்க்கை எப்போதும் எனக்கிருக்க வேண்டும். என்னுடைய நாவானது எப்போதும் பக்தியுடன் இராம இராம என்றே கீர்த்தனம் செய்யவேண்டும்.

ஓ இரகுநந்தன! ஸீதை, இலக்ஷ்மணர் இவர்களுடன் கூடியதும் வில், பாணம், இவைகளைத் தரித்ததும், மஞ்சள் பட்டாடை யுடுத்ததும், கிரீடத்தால் பிரகாச முள்ளதும், தோள்வளைகளாலும், தண்டைகளாலும், முத்தாரங்களாலும், கவசங்களாலும் குண்டலங்களாலும் பிரகாசிப்பதும், சியாமள வர்ணமுள்ளதுமாகிய தங்களுடைய ஸ்வரூபமே எப்போதும் என் நினைவில் இருக்க வேண்டும். தங்களுக்கு நமஸ்காரம். வேறு வரம் எனக்கு வேண்டாம்" என்று வணங்கிக் கேட்டுக்கொண்டாள்.

ஸ்ரீராமர், "ஓ மஹாபாக்கியம் செய்த ஸ்வயம்பிரபையே! அவ்விதமே ஆகட்டும், நீ பதரிகாச்சிரமம் சென்று, அங்கு என்னைத் தியானம் செய்து கொண்டிருந்து, இந்த ஸம்ஸாரக்கடலைத் தாண்டி, பரமாத்மவாகிய என்னை விரைவாக அடைவாய்" என்றார்.

ஸ்வயம்பிரபை, அமுத ஸாரம்போன்ற இராமருடைய மொழியைக் கேட்டு அவ்விதமே பதரிகாச்சிரமம் (இலந்தை மரக்கூட்டம்) சென்று தன் மனதில் இரகு நாதரையே தியானம் செய்து கொண்டிருந்து பிறகு சரீரத்தை விட்டு பரமபத மடைந்தாள்.

# ஏழாவது சருக்கம்.

---

பதரிகாச்சிரமத்தில் நின்று வெளிவந்த வானரர்கள் மலை, வனம் நிறைந்த பிரதேசங்கள், விருக்ஷங்கள் சூழ்ந்த பல இடங்கள் எவ்விடத்திலும் சஞ்சரித்தார்கள். ஸீதையைத் தேடுவதில் கவனம் கொண்டார்கள், இருக்குமிடம் தெரியவில்லை. அப்பொழுது வானர சிரேஷ்டனாகிய அங்கதன் சில வானரர்களை நோக்கி, "நாம் யாவரும் குகையில் சஞ்சரித்தமையால் ஒரு மாதம் சென்றது நிச்சயம், இது வரையில் நாம் ஸீதையைக் காணவில்லை. அரசன் உத்தரவை அனுஷ்டிக்கவும் இல்லை, நாம் கிஷ்கிந்தைக்குச் சென்றால் நம்மெல்லோரையும் ஸுக்ரீவர் வதை செய்வார், நான் சத்துருவின் புதல்வனாகையால் என்னை ஸுக்ரீவர் நிச்சயமாக வதை செய்வார். நான் ஸ்ரீராமரால் காக்கப்பட்டவனாயினும் இப்போது அவருடைய காரியத்தை நிறைவேற்றாமல் போவேனாகில் அவரும் என்னிடம் அன்பில்லாமையைப் பாராட்டுவார். ஓ வானர சிரேஷ்டர்களே! ஆகையால் கிஷ்கிந்தைக்குப் போகாமல், எந்த விதத்திலாவது மரணமடைகிறேன்; உயிரை யிழக்கிறேன்" என்றுரைத்தான்

இவ்வாறுரைத்துக் கண்ணீர் உகுக்கும் அங்கதனைப் பார்த்து, சில வானரர்கள் துன்பமுற்று, துக்க நீர் பெருக்கி அங்கதனை நோக்கி, "ஓ அங்கத! ஏன் உமக்கு இத்தனை வருத்தம், நாங்கள் உம்முடைய பிராணனைக் காப்பாற்றுகிறவர்களாகிறோம். இந்தக் குகையிலேயே யாதொரு பயமுமின்றி வசிப்போம், இக்குகையிலுள்ள நகரமோ அமராவதிக்கு ஒப்பாக இருக்கிறது" என்று கூறினார்கள்.

இவ்வாறு ஒருவருக்கொருவர் மெதுவாகப் பேசிக் கொண்டிருப்பதை, நீதி யறிந்த அனுமார் கேட்டு அங்கதனை அழைத்து "ஓ அங்கத! ஏன் இவ்வாறு விசாரிக்க வேண்டும். உன்னுடைய விசாரணை பயனற்றது. உன்னுடைய வீண் விசாரம் எனக்கு விளங்கவில்லை. நீ தாரையின் குமாரனாகையால், அரசனுக்கு மிகவும் வேண்டியவன்; மிகவும் இஷ்டனாகியவன். ஸ்ரீராமர், இலக்ஷ்மணரைவிட உன்னிடம் அதிக அன்பு வைத்திருக்கிறார். ஆகையால் இராகவரி

டம் உனக்குப் பயம் வேண்டாம். ஸுக்ரீவரிடமும் உனக்குப்பயம் வேண்டாம். நான் உனக்கு நன்மை செய்வதில் விருப்பமுள்ளவன்; குழந்தாய்! நீ வேறு ஒன்றும் சிந்திக்க வேண்டாம்.

இப்போது இந்த வானரர்கள் நாம் இந்தக் குகையிலேயே வாசம் செய்தால் யாவராலும் பேதிக்க முடியாதென்று கூறினார்கள். அது பிசகான காரியம். மூவுலகங்களிலும் ஸ்ரீராமருடைய பாணங்களுக்குப் பேதிக்க முடியாதது எது? ஓ வானர சிரேஷ்டனாகிய அங்கத! உனக்குத் துர்ப்போதனை செய்யும் இந்த வானரர்கள் பெண்டு பிள்ளைகளை விட்டு எவ்விதம் உன்னுடன் கூட இருப்பார்கள்? ஓ அங்கத! மிகவும் காப்பாற்றத்தக்க ஓர் இரகசியம் சொல்லுகிறேன் கேள்.

பிரத்தியக்ஷமாக வந்த ஸ்ரீராமர் மானிடனல்ல, தேவன்; அழிவற்ற நாராயணன்; ஸீதையோ ஜனங்களுக்கு மிகுதியான மோகத்தைக் கொடுக்கும் மகிமை பொருந்திய மாயை. இலக்ஷ்மணரோ உலகத்துக்கு ஆதாரமாகத் தாங்கும் சர்ப்பராஜனாகிய ஆதிசேஷன். இம்மூவரும் பிரமதேவரால் பிரார்த்திக்கப்பட்டு இராக்ஷசக் கூட்டங்களை நாசம் செய்வதற்காக மானிட வடிவங்கொண்டு வந்திருக்கிறார்கள்.

வைகுண்ட வாசியாகிய விஷ்ணுவுக்கு நாம் யாவரும் பாரிஷதர்களா யிருந்தோம். பரமாத்மாவாகிய ஸ்ரீமன் நாராயணன் தன்னிச்சையால் மானிடத்தன்மையை யடைந்தவுடன், அவருடைய மாயையால் நாமும் பூமியில் வானரர்களாகப் பிறந்தோம். நாம் முந்தித் தவம் செய்து லோகநாதனாகிய விஷ்ணுவுக்குத் திருப்தியை யுண்டு பண்ணி அவருடைய அநுக்கிரகத்தை யடைந்து பாரிஷதராக இருக்கு நிலைமையை யடைந்தோம். இப்போதும் கபடமன்றி அந்தப் பகவானுக்கே ஊழியம் செய்து மறுபடியும் வைகுண்டம் சென்று முன்போல இருக்கும் மார்க்கத்தை அநுசரிப்போம். இது மிக்க இரகசியமான விஷயம், இதையொட்டி இனிமேல் நடக்கவேண்டிய காரியத்தை நாம் செய்வோம்" என்று அங்கதனுக்குக் கூறி அவ்வானரர்களையும் சமாதானம் செய்தார்.

இதைக்கேட்ட அங்கதன் முதலிய வானரர்கள் யாவரும் அநுமருடன் விந்தியமலை போய்ச் சேர்ந்தார்கள், அங்கு ஜனகராஜ

நந்தனி (மகள்) யைக் காணவில்லை. பிறகு தென் கடற்கரையிலுள்ள மகேந்திரமலையின் பரிசுத்தமான பக்கம் வந்து சேர்ந்தார்கள். அங்கு ஸீதையை நாடித் தேடிவருகையில் மிக்க ஆழமானதும், பயத்தை விருத்திபண்ணக்கூடியதும், யாவராலும் தடைசெய்யக் கூடாதது மாகிய கடலைக்கண்டு, வானரர்கள் பயந்து மிகவும் நடுங்கி, நாம் என்ன செய்வோம் என்று தியங்கி, யாவரும் கவலைகொண்டு சமுத்திரக்கரையில் உட்கார்ந்தார்கள்.

மிகுதியான பலம் பொருந்திய அங்கதன் முதலிய வானரர்கள் யாவரும் ஒருவருக்கொருவர் ஆலோஜனை செய்து இதுவரையில் நாம் ஒரு மாதகாலமாகத் தேடிக்கொண்டு வந்தும் இராவணனையாவது அல்லது ஸீதையையாவது பார்க்கவில்லை. நமக்கு அரசனால் கொடுக்கப்பட்ட கெடு முடிந்துபோய் விட்டது. நமது அரசனோ கொடிய சிக்ஷை செய்கிறவன், நம்மெல்லோரையும் நாசம் செய்வான் சந்தேகமில்லை. அரசனாகிய ஸுக்ரீவரால் வதமடைவதைக் காட்டிலும், பிராயோபவேசனம் (உபவாசம்) செய்து உயிர் விடுவதே நலமாகும் என்று நிச்சயித்தார்கள்.

பிறகு, யாவரும் நான்கு பக்கங்களிலும் போய் தருப்பைகளைக் கொண்டுவந்து பரப்பி மரணம் அடைவது நிச்சயமென்று நினைந்து பிராயோபவேசனம் செய்தார்கள்.

இந்த சமயத்தில் அந்த மகேந்திரமலையிலுள்ள குகையின் மத்தியிலிருந்து பருவதம் போன்ற ஒரு கழுகு வெளிப்பட்டு மெதுவாக வந்து, மரணமடைவதற்காகச் சயனம் செய்துகொண் டிருக்கும் அந்த வானர சிரேஷ்டர்களைப் பார்த்து, "ஆ! எனக்கு வெகு ஆகாரம் கிடைத்திருக்கிறது, நாள் ஒன்றுக்கு ஒரு வானரமாக இக்குரங்குகள் யாவற்றையும் கிரமமாகப் புசித்து விடுகிறேன்" என்று சொல்லிற்று.

அந்த வார்த்தையைக் கேட்ட வானரர்கள் பயமடைந்தவர்களாகி, "இக்கழுகு நம் மெல்லோரையும் புசிக்கப் போகிறது சந்தேகமில்லை. ஓ வானர சிரேஷ்டர்களா! நாம் இராகவருடைய காரியத்தைக் கொஞ்சமேனும் செய்யவில்லை. ஸுக்ரீவருக்கும் ஒரு வித புகழைத் தேடவில்லை, நாமும் யாதொரு நன்மையையும் அடையவில்லை. இந்தக் கழுகால் வீணாக வதை யடைந்து யமலோகம் செல்

லப் போகிறேம். சத்துருக்களைச் சங்கரிப்பவனும், நல்ல புத்தியுள்ளவனும், தருமத்தில் திருப்தியுள்ளவனுமாகிய ஜடாயு ஸ்ரீராமர் விஷயத்தில் உயிரைப் போக்கி, யோகிகளுக்கும் கிட்டாத மோக்ஷத்தை அடைந்தான். நம்முடைய விதி யிப்படியா ஆயிற்று" என்று வருத்தமடைந்து ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டார்கள்.

அவ்விடம் வந்த ஸம்பாதி என்ற அக்கழுகு அரசர் அவ்விதம் பேசிய வானரர்களின் மொழிகளைக் கேட்டு, "நீங்கள் யார்? நீங்கள் பேசிய ஜடாயுவின் வார்த்தை என் செவிக்கு அமுதம் போலிருக்கிறது. அந்த ஜடாயு என்னுடன் பிறந்தவன். ஓ வானர சிரேஷ்டர்களே! என்னிடம் உங்களுக்குப் பயம் வேண்டாம், நடந்ததைச் சொல்லுங்கள்" என்று கேட்டார்.

பெருமை பொருந்திய அங்கதன் எழுந்து ஸம்பாதியின் சமீபத்தில் வந்து நின்று "ஓ கழுகரசரே! தசரத குமாரராகிய ஸ்ரீராமர், பத்தினி ஸீதையுடனும், தம்பி இலக்ஷ்மணருடனும் ஆரண்யத்தில் சஞ்சரித்து வந்தார். அங்கு துராத்மாவாகிய இராவணன் பதிவிரதையாகிய ஸீதையை அபகரித்துப் போய்விட்டான். ஸ்ரீராமரும், இலக்ஷ்மணரும், அந்த சமையம் வேட்டைக்குச் சென்றிருந்தார்கள். தனியாக விருந்த ஸீதையை இராவணன் அபகரித்துக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும்போது ஸீதை ஓ இராம! ஓ இராம! என்று கதறினாள்

அதைக்கேட்ட பிரதாபசாலியும் பக்ஷி சிரேஷ்டருமாகிய ஜடாயு ஸ்ரீராமருக்காக இராவணனுடன் கடுமையான சண்டைசெய்து இராவணனால் சிறகரியப்பட்டு மாண்டார். அவர் ஸ்ரீராமரால் தகனம் செய்யப்பட, ஓர் க்ஷணத்தில் அவர் வைகுண்ட பதவியடைந்தார். பிறகு இரகுராமர் ஸுக்ரீவரிடம் வந்து அக்கினி சாக்ஷியாக அவருடன் சிநேகம் செய்து கொண்டு, ஸுக்ரீவர் வேண்டுகோளின் பேரில் மகாபலசாலியாகிய வாலியை வதைசெய்து ஸுக்ரீவருக்குக் கிஷ்கிந்தை ராஜ்யத்தை ஆளப் பட்டாபிஷேகம் செய்து வைத்தார்

பிறகு ஸுக்ரீவர் ஸீதையைத் தேடுவதற்காக எங்களை அனுப்பினர். 'ஒரு மாதத்துக்குள் திரும்புங்கள், இல்லாவிடில் உங்களுடைய பிராணனை வாங்குவேன்' என்று அவர் ஆக்ஞைசெய்தார்

நாங்கள் அதைக் கேட்டுப் புறப்பட்டு காடு மலை முதலிய இடங்களெல்லாம் ஒரு மாதமாகச் சுற்றிப் பார்த்தும் ஸீதையைக் காணவில்லை. கடைசியாக இந்த உப்புக் கடற்கரையில் மாணமடையத் தீர்மானித்துப் பிராயோபவேசனம் செய்து விட்டோம்" என்றுகூறி, உமக்கு அந்த மங்கள வடிவமான ஸீதையைப்பற்றி யேதாவது தெரியுமானால் அதை எங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்டான்.

ஸம்பாதி, அங்கதன் கூறியதைக் கேட்டுத் துக்கமும், சந்தோஷமு மடைந்து, "ஓ வானசிரேஷ்டர்களே! ஜடாயு என்பவர் என் பிராதா, எனக்குப் பிரியமுள்ளவர். என் பிராதாவின் காலமுடிவை, அவர் காலஞ் சென்ற வருஷமுடிவில் தங்களால் கேட்டேன். ஓ பிலவங்க (குரங்கு) சிரேஷ்டரே! நான் உங்களுக்கு வாக்காலாகிய ஒத்தாசையை மட்டும் செய்கிறேன். இப்போது நான் முதலில் ஜடாயுவுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டியவனாகிறேன். என்னை நீங்கள் ஜலத்திற் கருகாமையில் அழைத்துச் செல்லுங்கள். தர்ப்பணம் முடிந்த பிறகு உங்களுடைய காரியம் சித்தி பெறுவதற்கு வேண்டியவைகளைக் கிரமமாகக் கூறுகிறேன்" என்றார்.

வானரர்கள் ஸம்பாதியைக் கடற்கரைக்கு அழைத்துச் சென்றார்கள். ஸம்பாதியும் ஜலத்தில் ஸ்நானம்செய்து தன் பிராதாவாகிய ஜடாயுவுக்குக் கிரமப்படி செய்ய வேண்டிய தர்ப்பணாதிகளைச் செய்து முடித்தா

மறுபடியும் வானரர்கள் ஸம்பாதியை முன்னிருந்த இடத்துக்கே அழைத்து வந்தார்கள்

ஸம்பாதி வானரர்களைச் சந்தோஷப்படுத்தி, "ஓ வானரவீரர்களா! கேளுங்கள் திரிகூடமலையின் சிகரத்தில் இலங்கை என்ற ஓர் நகரம் இருக்கிறது. அந்நகரத்திலுள்ள அசோகவனத்தில் ஸீதையிருக்கிறாள். ஸீதையை இராக்ஷஸ ஸ்திரீகள் காத்துக்கொண் டிருக்கிறார்கள்.

அந்த இலங்கை இந்த சமுத்திரத்தின் மத்தியில் ஒரு நூறு யோஜனை தூரத்துக் கப்பால் இருக்கிறது, நான் இதோ பார்க்கிறேன். அங்கிருக்கும் ஸீதையையும் பார்க்கிறேன். எனக்கு நன்றாய்த் தெரிகிறது. நான் கழுகாகையால் வெகு தூரத்திலுள்ளதை நோக்கும் திறமை எனக்குண்டு. இது விஷயத்தில் நீங்கள் சந்தேகம் அடையவேண்டாம். எவன் நூறு யோஜனை அகலமுள்ள கடலைத்

தாண்டுகிறுனே அவன் தான் ஸீதையைப் பார்த்து மறுபடியும் வருவான் என்பது நிச்சயம்; நானே துராத்மாவாகிய அந்த இராவணனைக் கொல்லுவேன், நான் ஒருவனுகை இருப்பவன், இறக்கைகளில்லாதவன். ஆகையால், சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு நீங்கள் முயலுங்கள். பிறகு இரகு சிரேஷ்டர் இராவணனைக் கொல்லுவார். ஓ வானரர்களா! நூறு யோஜனை விஸ்தாரமான கடலைக்கடந்து இலங்கையிற் பிரவேசித்து, வைதேகி (ஸீதை)யைப் பார்த்து அந்தத் தேவியுடன் சம்பாஷணைசெய்து மறுபடியும் சமுத்திரத்தைத் தாண்டுகிறவன் உங்களுக்குள் எவன் என்று நீங்கள் விசாரணை செய்யுங்கள்" என்றார்.

---

# எட்டாவது சருக்கம்.

---

ஸம்பாதி, பின்னும் வானர சிரேஷ்டர்களைப்பார்த்து, "ஓ வானர வீரர்களே! நானும் என் பிராதா ஜடாயுவும், யௌவனப்பருவமுள்ளவர்களாக இருக்கும் பொழுது கொழுப்புக் கொண்டு எங்களிருவரின் பலத்தைத் தெரிந்து கொள்ள விரும்பி ஆகாயமார்க்கம் சேவி சூரிய மண்டலம் வரை செல்லக் கிளம்பினோம். வெகுவாயிரம் யோஜனை தூரம் பறந்து சென்றோம். செல்லுங் காலை ஜடாயு உஷ்ணம் பொறுக்காது மிகுதியான தாபமடைந்தான். அவனை இரக்ஷிப்பதற்காக என் இறக்கைகளால் அவனுக்கு நிழல் உண்டாகும்படி மறைத்தேன். சூரிய வெப்பத்தால் என்னுடைய இறக்கைகள் கரிந்து பொசுங்கின. நான் பறக்கச் சக்தியற்றுக் களையுற்று விந்திய மலையின் சிகரத்தில் விழுந்தேன். வெகு தூரத்திலிருந்து விழுந்ததால் நான் மூர்ச்சை யடைந்தேன். மூன்று நாட்கழிந்தபின் யான் பிரஞ்ஞையடைந்தேன். என் இறக்கைகள் தீய்ந்து போயினதால் கலக்கமுற்ற மனத்துடன், பிரதேசத்தையாவது, பருவதசிகரத்தையாவது நான் தெரிந்து கொள்ள வில்லை. மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தேன். அங்கு ஓர் ஆச்சிரமம் இருந்தது. மெள்ள மெள்ள அவ்வாச்சிரமத்தின் அருகிற் சென்றேன். அவ்விடம் வசிக்கும் சந்திரமஸ் என்ற ஓர் முனிராஜன் என்னைப் பார்த்து ஆச்சரியமடைந்து, "ஓ ஸம்பாதியே! என்ன இது, இப்போது உன்னை யார் இவ்விதம் விகாரப் படுத்தியது, உன்னை நான் முந்தி அறிவேன். நீ மிகவும் வலுவுள்ளவனல்லவா? உன்னுடைய இறக்கைகள் என்ன காரணத்தால் பொசுங்கிப் போயின. இஷ்டமிருந்தால் சொல்லலாம்" என்று கேட்டார்.

நான் என் வரலாறு யாவற்றையும் தெரிவித்தேன், துக்கமடைந்தேன், "ஓ பிரபுவே! இறக்கையின்றி ஜீவிக்க எவ்விதம் முடியும்" என்று அந்த முனி சிரேஷ்டரை மிகவும் வணங்கிக் கேட்டுக் கொண்டேன்.

அந்த முனிவர் என்னைப் பார்த்து, தன்னிரு நேத்திரங்களிலும் கருணை நீர் பெருக, "ஓ குழந்தாய்! நான் சொல்வதைக் கவனமாகக் கேள், பிறகு உன்னிஷ்டம்போல் செய்" என்றார்.

நான் அம்முனிவரடியில் வணங்கி, 'சுவாமி! தங்கள் கட்டளைப் படி நடக்கிறேன்" என்றேன்.

அந்த முனிவர் என்னை நோக்கி, இந்த துக்கமானது, தேகம் காரணமாகவுடையது. தேகம் கருமத்தாலுண்டானது, புருஷன் தேகமே நான் என்ற அறிவை அடைவானாகில் அவனிடம் கருமம் பிரவிருத்திக்கிறது. அஹங்காரமானது அறுதியானது, அவித்தையா லுண்டானது. ஜடமோ சித்தினுடைய சாயையுடன் கூடியது, எப் போதும் உருகும் இரும்பைப் போன்றது, அந்த அஹங்காரத்துடன் ஜீவன் ஒருமைப்படும்போது, தேகமானது பிரஞ்ஞை அடைகிறது. அஹங்காரத்தின் பலத்தினால் ஆத்மாவுக்கு தேகம் நான் என்ற புத்தி யுண்டாகிறது. இதற்குக் காரணம் விஷம்போன்ற ஸம்ஸார பந்தம், அந்த ஸம்ஸாரபந்தமே ஸுகத்திற்கும், துக்கத்திற்கும் ஏதுவா கிறது.

விகாரமில்லாத ஜீவன், அஹங்கார சகிதமாய், தேகத்துடன் பொருந்தி தேகத்தையே தானென மதித்து நான் தேகி யென்றும் நான் கருமங்களைச் செய்கிறவனென்றும், சங்கற்பத்தைச் செய்து கொண்டு கருமங்களைக் செய்கிறான். அந்தக் கருமபலத்தினால் ஜீவன் சுவாதீனத்தன்மையற்றுக் கட்டுப்படுகிறான். அதனால் ஜீவன் பாப புண்ணிய சொரூபனாகி, சுவர்க்கத்திலும், நரகத்திலும் எப் போதும் சுற்றிக்கொண்டிருக்கிறான்.

நான், யாகங்களையும், தானங்களையும், வெகு காலம் செய்திருக் கிறேன், மிகுதியான புண்ணியத்தைச் செய்திருக்கிறேன். ஆகையால் சுவர்க்கம் சென்று சுகங்களை யநுபவிக்கிறேன் என்று சங்கற்ப முடையவனாகி விட்டால் அவ்விதமே சுவர்ககம் சென்று மிகுதியான சுகத்தை அநுபவிக்கிறான். புண்ணியம் குறைந்தவுடன் தனக்கு இஷ்டமில்லாவிடினும் சுவர்க்கத்திலிருந்து கீழாக விழுகிறான். முத லில் சந்திரமண்டலத்தில் விழுந்து, அதிலிருந்து பனியுடன் கூடி, பூமியில் இறங்கி நெல் முதலிய உணவுப் பொருள்களில் வெகு கால மிருந்து, புசிக்கத்தக்க நான்குவித பதார்த்தமாகிறான். அப்பதார்த் தத்தைப் புருஷர்கள் புசித்தவுடன், இந்திரியம் என்ற ரேதஸ் ஆகிப் பின்பு ஸ்திரீகளின் சோணிதத்திற் சேருகிறான். அத்துடன் கல ந்து ஜராயு என்ற பையால் சூழப்படுகிறான். புஷ்டி தினத்தில் சேர்ந் ந்து விருத்தியை யடைகிறான், அந்த விருத்தி யடைந்த பாகமானது,

ஐந்து நாளில் குமிழாக ஆகிறது, அந்த பாகம் ஐந்து நாளில் மாம்ஸபிண்ட மாகிறது, அந்த மாம்ஸபிண்டத்துக்குப் பதினைந்து நாளில் இரத்தக் கலப்புண்டாகிறது, அந்த இரத்தம் கலந்த பிண்டத்தில் இருபத்தைந்து நாளில் முளையுண்டாகிறது. கழுத்து, சிரசு, தோள், முதுகு, வயிறு, இவ்வைந்து அங்கங்களும் ஐந்து நாளில் கிரமமாக வுண்டாகின்றன. இவைகள் ஒரு மாதத்திலுண்டாகின்றன. இரண்டாவது மாதத்தில் கை, கால், பக்கம், இடை முழங்கால் இவைகளுண்டாகின்றன. மூன்றாவது மாதத்தில் அவயவங்களின் சந்திகளுண்டாகின்றன. நான்காவது மாதத்தில் விரல்களுண்டாகின்றன. ஐந்தாவது மாதத்தில் நாசி, செவிகள், கண்கள், இவைகளும், பிறகு பல் வரிசையும், நகங்களும், இரகசியப் பிரதேச வுருப்புகளும் உண்டாகின்றன; ஆறு மாதத்திற்குள்ளாகவே செவிகளின் துவாரமானது வியத்தமாக உண்டாகிறது, ஆறாவது மாதத்தில் பாயுரு, பாதம், பாணி, உபஸ்தம், நாபி, இவைக ளுண்டாகின்றன. ஏழாவது மாதத்தில் சரீர ரோமங்கள், சிரசின் கேசங்கள், அவயவங்களின் பிரிவு இவைகளுண்டாகின்றன. எட்டாவது மாதத்தில் யாவற்றுமுண்டாகின்றன. ஓ ஸம்பாதியே! ஸ்திரீ ஜாதியின் கருப்பம் இவ்விதம் விருத்தியடைகிறது, அந்த எட்டாவது மாதத்தில் ஜீவன் எங்கும் சைதன்னியத்தை யடைகிறான், சூத்ரம் போன்ற நாபியின் அற்பமான துவாரத்தின் வழியாகத் தாய் புசித்த அன்னத்தின் சாரத்தால் கருப்பத்திலிருக்கும் பிண்டமானது விருத்தியடைகிறது, தான் செய்த கருமங்களால் மரிப்பதில்லை. கருப்பத்திலிருக்கும் ஜீவன், 'தாய் வயிற்றிலிருக்கும் தீயால் தாபமடைந்து பலவிதமான வெகு ஆயிரம் விதமான பிறவிகளிற் பிறந்து சுகங்களை அநுபவித்தேன். பிள்ளைகள், பெண்டுகள் இவைகளின் சம்பந்தமும், பந்து ஜனங்களின் சேர்க்கையும, கோடிக் கணக்காக ஏற்பட்டன. குடும்பத்தைப் போஷிப்பதற்கு ஆவல் கொண்டு, நியாயத்தாலும் அநியாயத்தாலும் பொருளைச் சம்பாதித்தேன். நாராயண மூர்த்தியைப் பற்றி சொப்பனத்திலும் நினைக்க வில்லை. பாக்கிய மில்லாத நான் அதன் பலனை இப்போது மிகுதியான கர்ப்ப துக்கத்தை அநுபவிக்கிறேன். இந்தத் தேகமானது அநித்தியமாயினும் நித்தியம் போல் ஆசை கொண்டு அகாரியங்களையே செய்தேன். என்க்குற்ற நன்மையை நான் தேடிக் கொள்ள வில்லை. என்னுடைய கருமத்தால் துக்கங்களை வெகுவாக அநுபவித்துக்கொண்டு நரகத்தைப்

போன்ற இந்தக் கருப்பத்தில் நின்று எப்போது வெளிப்படுவேன். இனிமேல் எப்போதும் விஷ்ணுவைத்தியானம் செய்துகொண்டிருக்கப் போகிறேன்,' என்று பேசி தன்னுடைய ஜன்மங்களையும், கருமங்களையும் நினைத்து, யந்திரம் போன்ற யோனி வழியாய் மிக்க துக்கப்பட்டு, பாபம் செய்தவன் நரகத்திலிருந்து வெளிவருவது போலும் ஊன்வடியும் புண்ணிலிருந்து விழும் புழுப் போலும் பூமியிற் ஜனன மாகிறான். பிறகு குழந்தைப் பருவத்திலுற்ற துக்கங்கள் யாவற்றையும் அநுபவிக்கிறான், யௌவன முதலிய காலங்களிலும் அநுபவிக்கிறான். அந்த சுகதுக்கங்களை நீயும் அநுபவித்திருக்கிறாய். இவ்விஷயங்களை உனக்கு நான் கூறினேன். தேகமோ இவ்விதமுண்டாகிறது. தேகமே தான் என்ற அபிமானத்தால், நரகத்தைவிடத் துக்கமான கருப்பவாசம் முதலிய கஷ்டங்களுண்டாகின்றன.

ஆகையால் ஆத்மா ஸ்தூலம் என்றும், சூக்ஷமம் என்றும் சொல்லப்படும் இரண்டு தேகத்திற்கும் வேறுபட்டவன், பிரகிருதிக்குப் பிரனுகியவன் என்றறிந்து, தேகம் முதலியவைகளில் நான் என்ற தன்மையைவிட்டவன் ஆத்மஞானியாகிறான்.

சாக்கிரம் முதலிய அவஸ்தைகள் அற்றதும், சத்தியம், ஞானம் முதலிய இலக்ஷணங்கள் அமைந்ததும், சுத்தமும், சாந்தமுமான பிரமத்தை எப்போதும் தாரணை (சிந்தைவைத்தல்) செய்யவேண்டும்.

ஆத்மசுபாவத்தை அறிந்தவுடன் அறியாமையாலுண்டான மோகம் நாசம் அடைகிறது. பிராரத்வ கருமத்தை அநுசரித்து வந்த தேகம், இருந்தாலும் அல்லது நாசமடைந்தாலும், யோகிக்கு அஞ்ஞானத்தாலுண்டாகும் சுகமோ துக்கமோ கிடையாது.

ஆகையால் பிராரத்வ கருமம் நசிக்கும்வரை தேகத்துடன் சட்டையுடைய சர்ப்பம்போல் சுகமாக இரு. மேலும் ஓ பக்ஷியே! உனக்கு மற்றொரு ஹிதத்தையும் கூறுகிறேன் கேள். அதாவது:—

திரேதா யுகத்தில் அழிவற்ற நாராயணன் தசரத குமாரராக அவதாரம் செய்து, இராவணனை வதைசெய்யத் தண்டகாரண்யம் வரப் போகிறார். அவரோடு கூட மனைவி ஸீதையும் தம்பி இலக்ஷ்மணரும் வரப்போகிறார்கள். அம்மூவரும் வனத்திலுள்ள ஆச்சிரமத்தில்

வசிக்கும்போது, இராமர், இலக்ஷ்மணர் இருவரும் இல்லாத சமயம் பார்த்து, இராவணன் திருடன் போல் வந்து, ஸீதையை எடுத்துக் கொண்டு போய் இலங்கையில் வைக்கப்போகிறான். ஸீதையைத் தேடுவதற்கு, ஸுக்ரீவருடைய உத்தரவின்பேரில் வானரர்கள் கடற் கரைக்கு வரப்போகிறார்கள். அவ்விடத்தில் அவர்களுடன் உன க்கு ஓர் காரணத்தைக்கொண்டு சேர்க்கை ஏற்படப்போகிறது, அப்பொழுது அவர்களுக்கு ஸீதையினிருப்பைக்கூறினால், அப்பொ ழுதே உனக்குப் புதிதாக இறக்கைகள் உண்டாகும்" என்று அந்த முனிவர் உரைத்தார்.

ஓ வானர சிரேஷ்டர்களே! ரிஷிகளுள் சிரேஷ்டரான சந்திர மஸ் என்ற முனிவர் எனக்கு முன்னம் இவ்வாறு உபதேசம் செய் தார். இதென்ன ஆச்சரியம், பாருங்கள்; இதோ எனக்கு இறக்கை கள் மனோஞ்ஞமாக உண்டாயிருக்கின்றன. உங்களுக்கு க்ஷேம முண்டாகவேண்டும். நிச்சயமாக ஸீதையைப் பார்ப்பீர்கள். தாண்டு வதற்கு அரிதாகிய கடலைத்தாண்ட முயலுங்கள், நான் போய் வரு கிறேன்.

ஓ வானரர்களா! துஷ்டனாயினும் ஒருவன் மஹா விஷ்ணுவின் நாமத்தை ஸ்மரணம் செய்தவளவில், எல்லையில்லாத ஸம்ஸாரக் கடலைத்தாண்டி, சாச்வதமானதும், மூவுலகங்களுக்கும் சித்திக்குக் காரணமுமான பரமபதமடைகிறான். அந்த மஹா விஷ்ணுவே மானிடனாக வந்த இராமருக்குப் பிரியமுள்ள பக்தர்களாகிய நீங்கள் இந்த சிறிய கடலைமட்டும் தாண்டுவதற்கு எவ்விதம் சக்தியில்லாமற் போவீர்கள், சக்தியுள்ளவர்களாக ஆவீர்கள்" என்றுரைத்துச் சென்றார்.

## ஒன்பதாவது சருக்கம்.

---

யுவராஜனாகிய ஸம்பாதி ஆகாய மார்க்கமாகச் சென்ற பின்பு வானர சிரேஷ்டர்கள் மிகுதியான சந்தோஷமடைந்து, ஸீதையைத் தெரிசனம் செய்வதில் அபிலாஷையுடன் சமுத்திரத்தைப் பார்த்தார்கள். அந்த சமுத்திரம் அனேக முதலைகள் வசிக்கப்பெற்று மிகப் பயங்கரமாக இருந்தது, அலைகளின் சப்தம் நிறைந்திருந்தது. ஆகாயம்போல ஒருவராலும் அடைய முடியாததாகவு மிருந்தது. இதைப் பார்த்து யாவரும் ஒருவருக்கொருவர் இக்கடலை எவ்விதம் தாண்டுகிறதென்று யோசனை செய்தார்கள்.

அப்போது அங்கதன், "ஓ வானர சிரேஷ்டர்களே! நீங்கள் மிகவும் வலுவுடையவர்கள், சூரர்கள், போதுமான பாதவேக முள்ளவர்கள், ஆகையால் இந்த வானரர்களுக்குள் எவன் இந்தக் கடலைக் கடந்து அரசனுடைய காரியத்தைப் பூர்த்தி செய்கிறானோ அவன் எல்லோருக்கும் பிராணனைக் கொடுத்தவனாகிறான். சந்தேகமில்லை. எவன் மஹாபலம் பொருந்தியவனோ அவன் இப்போது எழுந்திருக்கட்டும். அப்பேர்ப்பட்டவன், எல்லாவானரர்களையும், ஸுக்ரீவரையும், ஸ்ரீராமரையும் காப்பாற்றியவனாவான். இதில் சம்சயம் இல்லை" என்றான்.

யுவராஜனாகிய அங்கதன் இவ்வாறு கூற, வானரர்கள் யாவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு ஒன்றும் பேசாதவர்களாகவே யிருந்தார்கள்.

அவர்களைப் பார்த்து அங்கதன், "நீங்கள் ஒருவரை யொருவர் பார்ப்பதில் பிரயோஜனமில்லை; தனித் தனியாக உங்களுடைய பராக்கிரமத்தை இக்கடல் தாண்டும் விஷயத்தில் கூறுங்கள். யாரால் காரியம் ஆகும் என்பதைப்பற்றிப் பிந்தி யோசிப்போம்" என்றான்.

இதைக்கேட்ட வானர வீரர்களில் ஒருவர் தான் பத்து யோஜனை தூரம் தாண்டக்கூடும் என்றும், மற்றொருவர் இருபது யோஜனை தூரம் முடியு மென்றும், மற்றவர்கள் இவ்வாறு படிப்படியாக பத்துப் பத்து ஜாஸ்தியாகத் தாண்டமுடியும் என்றார்கள். அப்போது ஜாம்பவான் என்பவர் வானரர்களுக்கு மத்தியில் வந்து, "இப்

போது நான் நூறுயோஜனை தூரத்துக்குக் குறைவாகத்தான் தாண்ட முடியும், முந்தி பகவான் திரிவிக்ரம அவதாரம் செய்தபோது அவருடைய பூமியின் அளவுக்குச் சரியான பாதத்தை, பிரதக்ஷணவிதிப்படி இருபத்தொரு தடவை பிரதக்ஷணம் வந்தேன். இப்போது மூப்பினால் வியாபிக்கப்பட்டு, கடல் தாண்டுவதற்குச் சக்தியில்லாதவனாக இருக்கிறேன்" என்றார்.

அங்கதன், "நானே இக்கடலைத் தாண்டுவேன்; மறுபடியும் தாண்டி யிவ்விடம் வருவதற்குத் திறமையிருக்குமோ இருக்காதோ அது எனக்குத் தெரியவில்லை" என்றான்.

அப்போது ஜாம்பவான், "ஓ அங்கத! நீர் எங்களுக்கு அரசர்; எங்களை ஆளுகிறவர். ஆகையால் திரும்பிவரக்கூடிய சமர்த்தராயினும் நாங்கள் உம்மை அனுப்புவது உசிதமல்ல" என்றார். இதைக் கேட்ட அங்கதன் "ஆனால் முன்போலத்தர்ப்பாசனத்தில் சயனம்செய்வோம். இக்காரியத்தைச் செய்பவன் நம்மில் எவனுமில்லை, பிழைத் திருக்க வழியும் இல்லை" என்றுரைத்தான். இப்படித் தயங்கும் வீரனாகிய அங்கதனைப்பார்த்து ஜாம்பவான், "ஓ யுவராஜ! எவனால் நம்முடைய காரியமானது விரைவாகச் சித்திபெறுமோ அந்த சூரனை நான் உமக்குக் காண்பிக்கிறேன்" என்றுரைத்து, சமீபத்திலிருக்கும் அனுமாரைப் பார்த்து, "ஓ ஆஞ்சனேயரே! காரியம் பெரிதாக வந்திருக்கும்போது ஒன்றுந் தெரியாதவர்போலப் பேசாமலிருக்கிறீர். ஓ மகாபுத்தியுள்ளவரே! இப்போது உம்முடைய சாமர்த்தியத்தைக் காட்டவேண்டும், நீர் வாயுபகவானின் குமாரர்; அவருக்குச் சமமான பராக்கிரம முள்ளவர்; இராகவருடைய காரியம் நிறைவேறுதற்கே மகாத்மாவாகிய வாயுவிடமிருந்து உண்டானவர்; நீர் பிறந்தவுடன், உதயமாகிவரும் சூரியபகவானைப் பார்த்து, இது பக்குவமான பலன் என்று கருதி அச்சூரிய கனியைக் கிரஹிக்க, குழந்தை விளையாட்டாக, ஐந்நூறு யோஜனை தூரம் ஆகாயத்தில் பாய்ந்தீர்; பிறகு நீர் பூமியில் தாவினீர். ஆகையால் உம்முடைய வலுவின் மகிமையைக் கூறுவதற்கு எவன் சக்தி பெறுவான்; எழுந்திரும்; ஸ்ரீராமருடைய காரியத்தைக் கவனிக்கவேண்டும். சோபனமான விரதமுடைய அனுமாரே! எங்களைக் காக்கவேண்டும்" என்றார்.

அனுமார் ஜாம்பவானுடைய வார்த்தையைக்கேட்டு மிகுதியான சந்தோஷமடைந்து, பிரமாண்டத்தைப் பேதிப்பவர் போல் சிங்க

நாதம் செய்தார், பருவதத்துக்குச் சமானமான ஆகிருதியோடு மற்றொரு உருத்திரர் போன்றவருமாக விஸ்வரூபங் கொண்டார். அவரை வானரர் கண்டார்கள். ஆச்சரியமுற்றார்கள். அவ்வானரங்களை நோக்கி அனுமார், "ஓ வானரர்களா! நான் இப்போது இந்த சமுத்திரத்தைத் தாண்டுகிறேன்; இலங்கையைச் சாம்பலாகச் செய்கிறேன்; இராவணனை அவன் கூட்டத்தாருடன் கொன்று, ஜனக ராஜன் குமாரியைக் கொண்டு வருகிறேன்; அல்லது இராவணனைக் கயிற்றினால் கட்டி அவனோடு கூட அந்த இலங்கை என்னும் பருவதத்தை, என்னிடது கையால் தூக்கி இராகவருக்கு முன் கொண்டு வந்து போடுகிறேன். அல்லது ஒரு சமயம் சுபமான இலக்ஷணங்கள் அமைந்த அந்த ஜானகியைப் பார்த்தது மாத்திரம் போதும் எனத் திரும்பி வருகிறேன்" என்று கூறினார். ஜாம்பவான் அனுமானுடைய வார்த்தையைக் கேட்டு, ஆனந்தம் மேலிட்டு "ஓ வாயுபுத்திர! ஜீவனுடனிருக்கும் சுபலக்ஷணமுள்ள ஜானகியைப் பார்த்து மட்டு வாரும். பிறகு இராமச் சந்திரருடன் சென்று உமது பராக்கிரமத்தைக் காட்டலாம். ஆகாயம் மார்க்கமாகச் செல்லும்; உமக்கு மங்களமுண்டாகட்டும்; இராகவருடைய காரியத்திற்காகச் செல்லும் உம்மை வாயுபகவான் தொடர்ந்து வாட்டும்" என்று ஆசீர்வாதம் செய்தார். வானர சிரேஷ்டர்களும் வழியனுப்பினார்கள்.

ஆஞ்சனேயர் மகேந்திர மலையின் சிகரம் சென்று அற்புதமான ரூபத்தோடு நின்றார். பெரிதான பருவதத்திற் கொப்பானவரும், மஹாத்மாவானவரும், சுவர்ணம் போன்ற வாணமுடையதும், சிவந்ததும், மனோஞ்ஞமுமான முகமுடையவரும், பெரும் சர்ப்பம் போன்ற மிகவும் நீண்ட வாலையுடையவரும், ஆகிய வாயுகுமாரரைத் தேவர் முதலிய யாவரும் கண்டார்கள்.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று.

# சுந்தர காண்டம்.

## முதலாவது சருக்கம்.

ஆனந்தம் மிகுந்த வாயுகுமாரனாகிய அனுமார், நூறுயோஜனை அகலமுள்ளதும், மரக்கலத்தை விழுங்கக்கூடிய மகாமச்ச முதலிய ஜந்துக்களுக் கிருப்பிடமுமாகிய கடலைத் தாண்டுவதற்கு எண்ணங் கொண்டு, பராமாத்மாவாகிய ஸ்ரீராமனை அந்தக்கரண சுத்தியோடு தியானம் செய்து, வானரவீரர்களைப் பார்த்து, “ஓ வானரர்களே! இராம தூதனாகிய நான் அவரால் பிரயோகிக்கப்பட்ட பாணத்தைப் போல ஆகாயமார்க்கத்தில் செல்லும் வேகத்தைப் பாருங்கள். கண்மூடித் திறப்பதற்குள் (அதாவது நொடிப்போதுக்குள்) ஜனக நந்தனியும், இராமர் பத்தினியுமாகிய ஸீதாபிராட்டியைத் தரிசிக்கிறேன். நாம் பிரயத்தனித்த காரியத்தை முடித்துக் கிருதார்த்தனாகி அந்த இராமச்சந்திரனைச் சந்தோஷமாகப் பார்க்கிறேன். பக்தனான ஒருவன், ஐம்புலனும் பொறிகலங்கி யறிவழிந்து நெறிமயங்கி, சோமை மேலிட்டுப் பிராணன் வெளிப்படுஞ் சமயத்தில், எந்தப் பிரபுவினுடைய நாமஸ்மரணத்தைக் கொண்டு, தேவர்களும் நண்ணுவதற்கு அரிதாகிய வைகுண்டத்தை யடைகிறானோ, அந்தப் பிரபுவே சங்குசக்கரத்தை மறைத்துப் பூமியில் மாயாமானிடனாக வந்தவதரித்து இரகுகுல சிரேஷ்டராக விளங்கும் ஸ்ரீராமப் பிரபுவினுடைய தூதனாகிய நான், அவருடைய கமலம்போன்ற கரத்தில் தரிக்கும் ஆழி (முத்திரை மோதிரம்) யைத் தரித்து, மேற்கூறிய மஹத்துவமுடைய அவர் நாமத்தை ஸ்மரித்து, மனோகரமுள்ள அவருடைய ரூபத்தையும் தியானித்துச் செல்வதால், இந்த அற்பமாகிய கடலைத் தாண்டுவதற்கு என்ன தடையிருக்கிறது” என்றுரைத்து, கைகளிரண்டையும், வைகுண்டநாதனைத் தாங்கும் பெருமை வாய்ந்த கருடனுடைய இறக்கைகளைப் போல விரித்து, க்ஷீரக்கடலைக் கடைய உபயோகித்த வாசுகியின் வாலைப்போல வாலை நீட்டி, மகேந்திர மலையினின்றுமெழுந்து ஆகாய மார்க்கமாக இரண்டுபாதங்களையும்

சுருக்கிக்கொண்டு, தென்முகம் நோக்கிக் கடலைத் தாண்டினார். ஆகாயமார்க்கத்தில் தேவர்கள் பார்க்க விரைவாகச் சென்றார்.

அதிவேகமாகச் செல்லும் வாயுகுமாரனைப் பார்த்து, தேவர்கள் இவர் திறமையைப் பரிக்ஷிப்பதற்காக, நாகலோக வாசிகளுக்குத் தாயாகிய ஸுரஸை என்ற ஸ்திரீயைப் பார்த்து, "ஓ ஸுரஸே! நீ சென்று வானரசிரேஷ்டனாகிய அனுமானுக்குக் கொஞ்சம் இடையூறைச் செய்து அவனுடைய புத்தியையும் வலுவையுந் தெரிந்து கொண்டு மறுபடியும் இங்கே வா" என்றார்கள். அதைக்கேட்ட ஸுரஸை அவ்விதமே யென்று கூறிசென்று ஆஞ்சநேயன் செல்லும் வழியை மறைத்து அவர் முன்னால் நின்று "ஓ மஹா புத்திசாலியே! இப்பொழுதே நீர் என் வாய்க்குள் பிரவேசிக்கவேண்டும், பசியால் துன்பமுறும் எனக்குத் தேவர்கள் உன்மை ஆகாரமாக ஏற்படுத்தி யிருக்கிறார்கள்" என்று கூறினாள்.

இதைக்கேட்ட அனுமான், "ஓ தாயே! நான் ஸ்ரீராமருடைய உத்தரவின் பேரில் ஜானகியைத் தேடிச் செல்கிறேன். போய்க் கண்டு பிடித்து ஸீதையின் க்ஷேமத்தை ஸ்ரீரகுவீரரிடத்தில் தெரிவித்து, கூடிய சீக்கிரத்தில் வந்து உன் வாயிற் பிரவேசிக்கிறேன் எனக்கு வழிவிடு, உனக்கு நமஸ்காரம்" என்று பரிவாகச் சொன்னார். ஸுரஸை, "அனுமானே! நான் பசியால் மிகவும் வருந்துகிறேன். இப்போதே நீ என் வாய்க்குள் பிரவேசிக்காத பக்ஷத்தில் நானுன்னை விழுங்குவேன்" என்றாள். அனுமான், அப்படியானால் ஸுரஸே உன் வாயைத்திற, இப்போதே செல்கிறேன் என்று சொல்லி ஒரு யோஜனை பருமனுள்ள சரீரமுள்ளவராகி யவள் முன் நின்றார். ஸுரஸை அனுமானுடைய பெருத்த ரூபத்தைப்பார்த்து ஆச்சரியமடைந்து, தன் முகத்தை ஐந்து யோஜனை அகலம் பரவச் செய்தாள். பிறகு வாயுகுமாரன் பத்து யோஜனையாகவும், ஸுரஸை இருபது யோஜனையாகவும் ஆனார்கள். இப்படி ஒருவருக்கொருவர் தங்களுடைய சரீர ஆகிருதியைப் பெருகச் செய்ய, கடைசியில் ஸுரஸை ஐம்பது யோஜனை அகலமுள்ள முகத்தோடு நின்றாள். அப்போது அனுமான் அங்குஷ்டப்பிரமாணராகி (கட்டைவிரலளவாகி) ஸுரஸையின் வாய்க்குள் சென்று வெளியில் வந்து, ஓ தேவி! இப்போது உன் வாயிற் பிரவேசித்து வெளியிலும் வந்தேன் என்றுரைத்து உமக்கு நமஸ்காரம் என்றார். அநுட்ப

மான புத்தியுடைய ஆஞ்சனேயரைப் பார்த்து ஸுரஸை "ஓ அறிவாளருக்குட் சிறந்த புத்திமானே! நீர் சுகமாகச் சென்று, ஸ்ரீராமச்சந்திரர் காரியத்தை நிறைவேற்றலாம். தேவர்கள் உம்முடைய வல்லமையையும், புத்தி நுட்பத்தையும் பரிக்ஷிக்க என்னை யனுப்பினார்கள் இதை மன்னிக்கவேண்டும். ஓ வாயுபுத்திர இரத்தினமே! நீர் இலங்கையிற் சென்று, ஸீதையைக்கண்டு நமஸ்கரித்து, அத்தேவி கொடுக்கும் ஆழியைக் கைக்கொண்டு, ஸ்ரீராமரிடம் சென்று அவர் துயரத்தை யொழிக்கப் போகிறீர். செல்லலாம். செல்லலாம். சுபம்! சுபம்!!" என்று கூறி ஸுரஸை தேவலோகஞ் சென்றாள். ஆஞ்சனேயர் புள்ளரசனாகிய கருடபகவானைப் போலக் காற்றினுங் கடுமையாகச் சென்றார்.

அப்பொழுது சமுத்திர ராஜன், இரத்தின மயமான மைநாக மலையை நோக்கி, "ஓ மைநாக! இதோ மிக்க வலிவுடைய மருத்துவின் குமாரனாகிய மாருதி, இராம காரியமாகச் செல்கிறார். அவருக்கு நம்மால் இயன்ற வுதவி புரியவேண்டும். ஏனெனில் முன்னம் நான் இரகு வம்சத்திலுற்பவித்த முதலெழு வள்ளலாகிய ஸகர மகாராஜன் குமாரர்களாகிய சாகரர்களால் தோண்டப் பெற்று விர்த்தியடைந்து ஸாகரம் என்ற நாமத்தைப் பெற்றேன். ஆகையால் அதற்குப் பிரதியுபகாரமாக, அந்த ஸகர மகாராஜ பரம்பரையி லுதித்த தசரத மகாராஜனின் குமாரராகிய ஸ்ரீ ராமபிரான் காரிய சித்தியை யுத்தேசித்துச் செல்லும் மாருதிக்குச் சிரமபரிகாரம் செய்யவேண்டும். சீக்கிரம் எழுந்து நில். உன்னிடம் சற்று நேரந் தங்கி, களையாறி யவர் செல்லட்டும்" என்று கூறினான்.

மைநாகன் அவ்விதமே யென்று பகர்ந்து ஜலத்திலிருந்து இரத்தினமயமான கொடு முடிகளுடன் மேலே கிளம்பி, மிகவுமுயர்ந்து, சிகரத்தின் மீது தான் ஒரு மானிட வடிவமாகி நின்று, ஆஞ்சனேயரைப் பார்த்து, "ஓ அநுமானே! நான் மைநாகன் நீர்; சற்றுநேரந் தங்கி சிரமபரிகாரஞ் செய்துகொண்டு போகும்படி யென்னை சமுத்திர ராஜன் அனுப்பினார்; ஆகையால் நீர் இவ்விடம் தங்கி அமுதத்திற்குச் சமானமான பழவர்க்கங்களைப் பக்ஷித்து, க்ஷணநேரங் கழித்து சிரமபரிகாரமானவுடன் தம்முடைய இஷ்டப்படி போகலாம்" என்று வணக்கத்துடன் கூறினான்.

இந்த உபசார வார்த்தையைக் கேட்ட மாருதாத்மஜன் (வாயு குமாரனாகிய மாருதி) "ஓ மைநாக! நான் இராமகாரியத்தையநுசரி

த்து அவசரமாகச் செல்லுகிறேன். இந்த சமயத்தில் எனக்கு ஆகாரமாவது சிரமபரிகாரமாவது எவ்விதம் ஏற்படும். பெரிய காரியம், தாமசிக்கக்கூடாது நின்றுபோகச்சாவகாசமில்லை" என்று தெரிவித்து தன் கைவிரலால் அந்த சிகரத்தைத் தொட்டு அவனைச் சந்தோஷப்படுத்திச் சென்றார்.

கொஞ்சதூரஞ் சென்றதும், ஜலத்தில் வசித்துக்கொண்டு, ஆகாயத்தில் சஞ்சரிப்பவர்களுடைய நிழலை அபஹரித்து விழுங்கும் நியதியுடைய ஸம்ஹிகை யென்னும் நாமமுடைய ஓர் இராக்ஷஸி, தன் வழக்கம்போலக் ககனமார்க்கத்தில் மிகுந்த வேகத்துடன் தாவா நின்ற வாயுகுமாரனாகிய ஆஞ்சநேயனுடைய நிழலைப் பற்றிக் கிரஹித்தாள். இதனால் மாருதிக்கு வேகந்தடைபட்டது. இராமதூதனாகிய அவர் சற்றுத் தயங்கி நம்முடைய வேகத்தைத் தடுத்தவன் யார்; நமக்கு இந்த இடத்தில் இடையூறு செய்தவன் எவன்; ஒருவரையுங் காணோமே யென்று மயங்கி ஒருவாறு தனக்குள் ஆலோசித்துக் கீழ் நோக்கிப் பார்த்தார். அங்கு பருத்த சரீரத்தையும், பயங்கரமான ரூபத்தையுமுடைய ஸம்ஹிகையைக் கண்டு வருத்தமடைந்து, கடுஞ்சினமுற்றுச் செவ்வானம்போன்று சிவந்தகோபத்துடன் கூடிய இராக்ஷஸியின் சிரத்தின்மீது தன் பாதம்பொருந்தக் கீழே குதித்து, சமுத்திரத்திலழுத்தி நசுக்கித் தேய்த்து அவளுயிரை மாய்த்து நாசஞ் செய்து, மறுபடியும் மேலே கிளம்பி ஆகாயமார்க்கமாகத் தென் முகம் நோக்கிச் சென்றார்.

அப்பால், பலவிதமான பழங்களையுடைய மரங்கள் சூழ்ந்த கரையைக் கண்டு அதில் பிரவேசித்தார். * திரிகூட மலையின் சிகரத்

* திரிகூட மலையின் சிகரத்தில் விளங்கும் நகரம் என்பது.—[இதற்கு முன் ஓர் காலத்தில், சப்தகுணம் ஒன்றே யுடைய ஆகாயத்திலிருந்து, சப்தம், பரிசம் என்ற இரண்டு குணங்களையுடைய வாயு பிறந்தது, அந்த வாயு விலிருந்து, சப்தம், பரிசம், ரூபம் என்ற மூன்று குணங்களையுடைய தேயு, (அக்னி) பிறந்தது. அந்தத்தேயுவிலிருந்து, சப்தம், பரிசம், ரூபம், ரஸம் என்ற நான்கு குணங்களையுடைய அப்பு (ஜலம்) பிறந்தது. அந்த அப்பிலிருந்து, சப்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து குணங்களையுடைய பிருதிவு (பூமி) பிறந்தது. இவைகளில் வாயுபகவானே சரம் (நடையுள பொருள்) அசரம் (நடையிலாப் பொருள்) எனும் இருவகைத்தாகிய புல், பூண்டு, மரம், மலை, புழு, பறவை, பாம்பு, மானிடர், பேய், கணங்கள், அசுரர், முனிவர் தேவர் முதலியன அடங்கின இத்தாவர

தில் விளங்கும் ஓர் நகரத்தைக் கண்டார். அதுதான் இலங்கை நகரம். ஸுமாலி மகள் கைகசி, புலஸ்தியன் மகன் விச்ரவாகுவினிடம் வரம் பெற்றுப் பெற்ற தசக்கிரீவனாகிய இராவணனால் ஆளப்பட்டது. சக்கரவடிவம் போன்ற ஓர் வட்ட வடிவினையுடையதும், எழுநூறு யோஜனை விஸ்தீரணமுள்ளதும் நான்கு புறத்திலும் சமுத்திரத்தால் சூழப்பட்டதும், சூரியனைச் சூழ்ந்த பரிவேடம் போல, தன்னை வளைத்துச்சுற்றிய அகழிகள் அடுக்கடுக்காக அமையப் பெற்றதும் ஆகிய அப்பட்டணம், தேவலோகம் செல்லும் (சோபானங்கள்) படிக்கட்டுகள் என்று சொல்லும்படி வானம் எட்டிய நான்கு கோபுரங்களையும், கோட்டைகளையும், கோட்டை வாசல்களையும், நாலுலக்ஷம் வீதிகளையும், வெள்ளி மலை

---

சங்கமங்கள் ஜீவிப்பதற்கு ஆதாரமாக வுள்ளவர். இவருடைய சலனமில்லாத வரையில் எவையும் உயிர் பிழைத்திரா. இவ்வளவு மகிமை தங்கிய வாயு பகவானுக்கும், காசிபப்பிரமாவுக்கும் அவர் மனைவி கத்துருவைக்கும் பிறந்து இந்தப் பூமண்டலத்தை, ஆயிரத்தெட்டு பணமுடியோடு கூடித் தாங்குகிற மஹா பராக்கிரமசாலியாகிய ஆதிசேஷனுக்கும் இருவருக்குள் யார் பலசாலியென்ற விவாதம் நேரிட்டு, ஆதிசேஷன் தன்னுடைய ஆயிரத்தெட்டு முடிகளுடன் மகமேரு கிரியை அழுத்தி மறைத்துக் கொள்கிறதென்றும், வாயு பகவான் தன்னுடைய முழுப்பலத்தையுங் கொண்டு அம்மலையை யசைத்து விட்டால் ஆதிசேடன் தோற்றுப்போனதாகவும், வாயுபகவான் கெலித்ததாகவும் ஏற்பாடு செய்துகொண்டு, ஆதிசேஷன் மகமேரு மலையைப் பற்றி தன் முடிகளால் மூடிக்கொண்டார். வாயு பகவான் பிரசண்ட மாருதம் (ஊழிக் காற்று) போல் வீசி அம்மலையை யசைக்கப் பார்த்தார். முடியவில்லை. வாயு பகவான் வெட்கி ஓரிடத்தில் போய் தன்னுடைய சலனத்தை யடக்கிக் கொண்டு இருந்தார். எல்லா உலகங்களும் பிழைப்பதற்கு வழியில்லாமல் தத்தளித்தன. பிரமன் முதலிய தேவர்கள்வந்து இருவரையும் அழைத்து சமாதானம் செய்து, ஆதிசேஷனை மூன்று முடியைத் தூக்கிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார்கள். ஆதிசேஷன் அவ்விதமே தனது முடிகளில்மூன்று முடியைக் கிளப்ப, வாயு பகவான் மகமேருவின் மூன்று சிகரத்தைப் பறித்து தென் சமுத்திரத்தில் கொண்டுபோய்ப் போட்டார். அம்மலை பொன்னுருவமானதால் அது வீழ்ந்த இடம் பொன்னாகவே யிருந்தது. அந்த இடம் யாவராலும் செல்லுவதற் கரிதாகியதால் தேவர்களால் இலங்கை யென்றழைக்கப் பட்டது. அதில்-மாலி-ஸுமாலி-மாலியவான், இவர்களால் ஏவப்பட்ட தேவதச்சன் மயனால் இலங்காபுரி யென்னும் நகரம் சிருஷ்டிக்கப்பட்டது. ஆகையால் அந்த நகரத்துக்கு திரிகூடமலையின் சிகரத்தில் விளங்கும் நகரம் எனக் கூறலாயிற்று.)

போல் விளங்கும் கணக்கற்ற மாளிகைகளையும், கோடி தேவாலயங் களையும், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, முதலிய நான்கு வகைப் புஷ்பங்கள் மலர்ந்து, அவைகளினின்று ஒழுகுந் தேனை வண்டுகளுண்டு களித்து சதா ரீங்காரம் செய்யும் சப்தம் அகலாத அநேகம் பூந்தோட்டங்களையும், அசோகு, ஆச்சா, இச்சி, இலவம், கடம்பு, கமுகு, கருங்காலி, கொன்றை, கோங்கு, சந்தனம், செண் பகம், தெங்கு, இலந்தை, நாரத்தை, நெல்லி, பலா, பாதிரி, மருதம், மாதளை, வில்வம், விளா, வேங்கை, ஸிம்ஸுபா முதலிய விருக்ஷங் கள் அடர்ந்த அநேக வனங்களை (ஊர்சூழ்ந்த சோலை) யும், எண்ணி றந்த ராக்ஷசர்களையும் தன்னகத் தடக்கி ஓர் புவலோகம் போல் விளங்கியது. அந்த இலங்காபுரியைப் போலொத்த நகரத்தை, எக்காலத்திலும் மண்டிடாத ஸ்ரீராம தூதனாகிய மாருதியானவர், இப்படிப்பட்ட பட்டணத்தில் எப்படிப் பிரவேசிக்கிறது என்று கவலை கொண்டு, தனக்குத் தானே ஆலோசித்து, தன்னுடைய விஸ்வரூபத்தை யடக்கி, சூக்ஷ்மமான ஓர் ரூபத்தைப் பெற்று, ஒருவருமறியாமல் இரவில் பிரவேசிப்பதே தகுதியான காரிய மெனத் தீர்மானித்து விருக்ஷங்கள் சூழ்ந்த அந்த இடத்திலேயே தங்கி யிருந்தார்.

அனுமான் இராக்காலம் வந்த பிறகு இலங்கையிற் பிரவேசிக்க எண்ணங் கொண்டிருப்பதை, அந்த வனத்தில் வாழும், வலியன், கருடன், காடை, கழுகு, கோட்டான், ஆந்தை, மூஞ்சூறு, பூனை, எலி, அணில், கீரி, உடும்பு, இவைகள் வலமானால் அபசகுனம் என்பதையும், காகம், நரையான், நரி, கிளி, முயல், கோழி, கொக்கு, மயில், உடும்பு, புனுகு பூனை, செம்போத்து இவைகள் இடமானால் அபசகுன மென்பதையும் அறிந்து, ஒருக்கால் சாஸ் திர பண்டிதராகிய அனுமானுக்குத் தங்களால் அபசகுன மேற் பட்டு ஸ்ரீராம காரியம் தடைப்படுமோ வென்று சந்தேகித்துச் சென்றது போல, பட்சி வர்க்கம் முதலியவைகள் தத்த மிருப்பிடஞ் சென்றன. சூரியன், தன் மரபை விளக்கஞ் செய்ய வுதித்த ஸ்ரீராமன் காரியத்தை மாருதி தான் சென்ற பிறகு எத்தனிக்கப் போகிறார் என்பதை யறிந்து, இராமகாரியத்துக்குத் தாமசங் கூடாதென்பதை நினைந்து சீக்கிரம் சென்றவர்போல் மேற்றிசை யில் அஸ்தமனமானார்.

சந்திரன், திருப்பாற் கடலில் தன்னுடன் பிறந்த இலக்ஷ்மி தேவியின் அம்சத்தைப் பெற்ற ஸீதாதேவியினிடஞ் சென்று, அவள் மனக்கலக்கத்தைத் தீர்க்கப்போகிற அனுமான் இராக் காலத்தை யபேட்சித்து நிற்பதை யறிந்து அவருக்கு உதவிபுரியத் தன்னுடைய வெண்மை நிறமுடைய கிரணத்தோடு கீழ்த்திசையி லுதயமானார். ப|

இந்த சமயத்தில், சோலையிற்றங்கியிருந்த இராமதூதனுகிய மாருதி, சூக்ஷ்மமான சரீரமெடுத்து விரைவாகச் சென்று கோட்டை வாயலுள் பிரவேசித்தார். கோட்டைவாசற் காவலாளியாகிய இலங் கணி யென்பவள், உள்ளே செல்லும் அனுமானைப் பார்த்து அவ ரைப் பின்பற்றித் தொடர்ந்து தடுத்து, நீயார்? என்னுடைய காவலை யிழந்து, என்னையும் அலக்ஷியஞ் செய்து, குரங்கு ரூபமெடுத்து இர வில் பிரவேசித்து, திருடனைப்போல என்ன செய்யக் கருதினாய்? இது வரையில் இவ்வளவு தைரியமாக என்னை அவமதித்துச் சென் றவர்கள் ஒருவருமில்லையே யென்று கோபித்துக் கண்கள் சிவந்து, அவரை ஓர் குரங்கென நினைத்துத் தன் கையால் ஓர் அறை அறைந் தாள். அனுமான் கோபம் மூண்டு தன்னிடது கையால் ஓர் குத் துக் குத்தினார். அக்குத்தைப் பெற்ற இலங்கணி, இரத்தத்தைக் கக்கிக்கொண்டு குப்புறப்பூமியில் விழுந்து களை தெளிந்து மறுபடி யும் எழுந்து மஹா பலம் பொருந்திய மாருதியைப் பார்த்து "ஏ பலவானே! நீர் செல்லலாம். உமக்கு மங்களமுண்டாகுக. ஓ தேஜஷ மற்றவரே! நீர் இலங்கையை ஜெயித்து விட்டீர். ஏனெனில், முந்தி பிரமதேவர் என்னிடம் இருபத்தெட்டாவது பரிவிருத்தியில் (மாறி மாறிச் சுழன்று வருவது) திரேதாயுகத்தில் சாக்ஷாத் நாராயணன் தசரதகுமாரனுகிய ஸ்ரீராமனுகவும், மாயை ஜனகனிடம் ஸீதையாக வும் உற்பவிக்கப் போகிறார்கள். அவர்கள், இலக்ஷ்மணனுடன் பிதுர் வாக்கிய பரிபாலனத்துக்காகத் தண்டகாரண்யம் வருகிறார்கள். அப்போது துற்கிருத்தியனுகிய இராவணன் ஸீதையை அபஹரித்து இலங்கையிற் கொண்டு வந்து வைக்கப்போகிறான். ஸ்ரீராமன் சுக் கிரீவனோடு தோழமைபூண்டு, அச்சுக்கிரீவனால் ஸீதையைத் தேட அனுப்பும் வானரசிரேஷ்டன் ஒருவன் இரவில் உன் அத்துமீறி இலங்கையிற் பிரவேசிக்க நீயவனைத்தடுக்க அப்போது உங்களிரு வருக்கும் சண்டை நேரிட்டு அவன் உன்னை வதம் செய்யப்போகி றான். அப்போதே இராவணனும் அதமாயினு னென்றறிந்து கொள்

என்று கூறியிருக்கிறார். அவர் வாக்கின்படியே யிப்போது நடைபெற்றது. இனி இராவணன் விஷயமும் அப்படியே சந்தேகமில்லை. ஓ அனுமானே! இராவணனுடைய அந்தப்புரத்தில் பலவித விருக்ஷங்கள் நிறைந்த அசோகவனம் என்ற தோட்டம் ஒன்றிருக்கிறது. அதில் ஸிம்ஸுபாஎன்ற விருக்ஷத்தின் அடியில்இராக்ஷசஸ்திரீகளின் பாதுகாப்பில் ஸீதை யிருக்கிறாள். அந்தத் தேவியைப் போய்ப் பார்த்து,பிறகு ஸ்ரீராமனிடத்தில் சென்று அந்த அம்மையின் ஸ்திதியைத் தெரியப்படுத்தும் "நான் கிருதார்த்தை யாகிவிட்டேன். வெகுகாலம் சென்று இப்பொழுது தான் சம்சார பந்தத்தைப் போக்கும் இராமருடைய ஸ்மரணம் எனக்குண்டாயிற்று. அவருடைய பக்தர்களுக்குக் கூட அவருடைய ஸ்மரணம் கிடைப்பது அரிது. என்னுடைய இருதயத்தில் தசரத குமாரராகிய இரகுவீரர் பிரசன்னராக இருக்கட்டும்," என்று கூறி மரணமடைந்தாள்.

வாயு குமாரன் கடலைத் தாண்டின காலத்தில், அசோகவனத்தில் வசிக்கும் ஸீதையின் இடக்கண்ணும், ஆரண்யத்தில் வசிக்கும் ஸ்ரீ ராமனுடைய வலதுபுஜமும் துடித்தன; மேலும் அதே காலத்தில் இலங்கையிலுள்ள இராவணனுக்கும் இடது கண்ணும் இடது தோளும் துடித்தன.



## 2-வது சருக்கம்.

அனுமார், இலங்கணியை வதஞ்செய்த பின்பு அக்கோட்டை வாசலைவிட்டுப் புறப்பட்டு, மிகவும் அலங்காரமாகத் தோன்றும் அந்த இலங்காபுரி நகரத்துக்குள் அமைந்த மதிள், அகழி முதலியவைகளைத் தாண்டி, இராஜவீதி மார்க்கமாகச் சென்று, அங்குள்ள மாடமாளிகை, கூடகோபுரம் முதலிய இடங்கள் எல்லாஞ் சுற்றிப் பார்த்துக்கொண்டு இராவணன் அரண்மனைக்குட் பிரவேசித்தார். அவர் அவ்விடத்தில் இலங்கேசன் பள்ளியறை, ஸ்திரீகள் வசிக்குமிடம், இராவணன் பத்தினி மண்டோதரி சயனிக்கும் மாளிகை, மற்றுமுள்ள ஸ்திரீகள் வாசஞ் செய்யுமிடம் முதலியவைகளையும் போய்ப் பார்த்தார்; எந்த இடத்திலும் ஸீதையைக் காணவில்லை; பிறகு சற்று நேரம் யோசித்து இலங்கணி சொல்லிய வார்த்தையை நினைத்து, நந்தவனம், பூங்காவனம், சோலை முதலிய இடங்களிலுஞ்

சென்று தேடிக் கடைசியாக அசோகவனத்தைக் கண்டு பிடித்தார். அதிலுள்ள சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிஜாத முதலிய தேவ விருக்ஷங்களிலும், இரத்தினப் படிக்கட்டமைந்த சிங்காரமான மேடைகளை நடுவிலுடைய பூந்தோட்டங்களிலும், நான்கு பக்கத்திலுங் காய்த்துப் பழுத்துக் குலைகள் தாங்கமுடியாமல் வளைந்து தொங்குகிற கிளைகளையுடைய விருக்ஷங்களிலும், இன்னும் வானமளாவும் ஓங்கிவளர்ந்து தழைத்து நின்ற ஒவ்வொரு மரங்களின் கிளைகளிலும் நுழைந்து, ஆராய்ந்து பார்த்துவரும் ஆஞ்சநேயர், ஓரிடத்தில் ஆகாயத்தை யளாவியதும், உன்னதமானதும், புத்தர்களின் கோபுரம் போன்றதுமான ஓர் மண்டபத்தைப் பார்த்தார்; வயிரத்தால் கால்கள் நாட்டி, மரகதத்தால் துயிலமேற்றி, இரத்தினத்தால் தளவரிசைபோட்டு, வெகு விசித்திரமாகக் கட்டப்பட்ட அந்த மண்டபத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்து, அதனுட் பிரவேசித்துப் பார்க்க, அதிலும் ஸீதையைக் காணாமல் அதையும் தாண்டி அப்பால் கொஞ்சதூரஞ் சென்றார்.

பிறகு மாருதி, ஓர் விருக்ஷத்தின் மீதேறி அதினுடைய கிளையில் இலைகளின் மறைவிலிருந்து பார்த்தார். அப்போது எட்டுத்திசையுந்தாவிய கிளைகள் படர்ந்து, பசுமை பொருந்தி நெருங்கிய தழைகள் அடர்ந்து, பொன்னிறமுடைய பக்ஷிகள் அநேகம், தன் பேடைகளுடன் கூடிச்சூழ்ந்து வாழ, தன்னையடுத்தவர்களுக்கு வெய்யலின் வெப்பத்தைப் போக்கி நிழலையளிக்கும் பெருமை வாய்ந்துள்ள ஓர் ஸிம்ஸுபா விருக்ஷத்தின் அடியில், சில இராக்ஷஸ ஸ்திரீகள் நடுவில், தனது இரக்ஷகரைக் காணாமல் உபவாசத்தால் சரீரம் இளைத்து, தரித்திர திசையை யடைந்தவரைப்போல ஒரு மெல்லிய வஸ்திரத்தை யுடுத்து, தேவலோகமிருந்து பூமியில் விழுந்த தேவ கன்னியை யொத்து, மறுபடியுஞ் சீவி முடிக்காமல் முன்னம்முடித்த அந்தச் சடைப்பின்னலையே வகித்து, படுக்கை, தலையணை முதலியனவில்லாமல் தரையிலேயே படுத்து, இராம! இராம! என்னும் நாமத்தையே வாயால் உச்சரித்து, கரைகாணுத்துயரத்தோடு வசிக்குந் தேவியைப் பார்த்தார். அத்தேவி மெலிந்த சரீரத்தையும், வக்கங்கொண்ட முகக்குறிப்பையு முடையவரா யிருப்பதோடு, ஓயாது இராமநாமத்தையே யுச்சரித்து வருவதையுங் கொண்டு, இந்த அம்மையார் ஸ்ரீராமமூர்த்தியின் தேவி (ஸீதை) யென்றே நிச்சயித்தார். நான் ஜனகநந்தனி (ஸீதை)யைப்பார்த்து விட்டதால் கிருதார்த்த

னுனேன். பரமாத்மாவாகிய ஸ்ரீராமருடைய காரியத்துக்கு நானே சாதகஞ் செய்தவனுனேன் என்று மனம் மகிழ்ந்து, அந்த ஞானி மனுளனுடைய திருவடியைப் புகழ்ந்து, அளவற்ற சந்தோஷக் கடலிலாழ்ந்து, துளசிமாலையைத் தரித்த இராமன் நாமத்தையே ஜெபித்துக்கொண்டு அம்மரக்கிளையில் சற்றுநேரந் தங்கினுர்.

அப்பொழுது, சமீபத்தில் கண! கண! என்ற சத்தங்கேட்டது. மரத்தின் மீதிருந்த மாருதி இது என்னவென்று யோஜித்துத் திரும்பிப் பார்த்தார். அங்கு சில ஸ்திரீகள் கூட்டத்தின் நடுவில், பத்து சிரங்களையும், இருபது கரங்களையும், கறுத்த மேனியையுமுடைய ஓர் புருஷன் வரக்கண்டார். இவன்தான் இராவணன் என மதித்து, அவனைப் பார்த்து ஆர்சரியமடைந்து, இவன் மர்மத்தை யறிவோமென நினைந்து, தானிருந்த மரத்தினுடைய இலைகளில் மறைந்திருந்தார்.

அனுமார் இவ்விதமிருக்க, அரண்மனையில் இருந்த இராவணன், "இராமனுல் தனக்கு மரணம் சீக்கிரம் எப்போதுண்டாகும், ஸீதையை யுத்தேசித்துக்கூட இராமன் இன்னும் வரவில்லையே, அதற்கென்ன காரணம்" என்று மனதில் சந்தேகித்து, இராமனையே இருதயத்தில் ஸ்மரித்துக்கொண்டிருந்தான். இப்படியிருந்த அந்த இராவணனிடம் அன்று இராத்திரி சொற்பனத்தில் இராமன் தோன்றி "ஏ இராவணு! இன்றையதினம், எந்த ரூபமாயினும் நினைத்தபடி எடுக்கக் கூடியவனும், ஸூக்ஷ்ம வடிவந்தரித்தவனுமாகிய ஒரு வானரன் அசோகவனம் வந்து ஓர் மரத்திலிருந்து ஸீதையைப் பார்க்கிறுன்" என்று அறிவித்தார்.

இவ்விதம் அற்புதமான சொற்பனங்கண்ட தசக்கிரீவன், தன் மனதில் ஆலோசித்து இந்தக் கனவு உண்மையானுலும் ஆகலாம். ஆகையால் அந்த வானரனுக்குத் தெரியும்படி, ஸீதையை அவமானமான வார்த்தை யென்னும் பாணத்தால் அடித்து, அவள் மனம் வருந்தும்படி செய்தால், அதைப் பார்த்திருந்த வானரனுவது இராமனிடத்தில் போய்த் தெரிவிக்கட்டும், அதைக்கேட்ட பிறகாவது இராமன் இவ்விடம் வரட்டுமென்று தீர்மானித்து, படுக்கையைவிட்டெழுந்து புறப்பட்டான். அப்போது சில பணிப்பெண்களாகிய ஸ்திரீகள் சர்வாபரண பூஷிதராகக் கையில் மணிவிளக்குகளை யேந்தித் தன்னுடன் சூழ்ந்துவர ஸீதை வசிக்கும் அசோகவனத்துக்குத் தைரியத்துடன் வந்தான். பணிப்பெண்களின் காற்சிலம்பின் சத்

தத்தைக்கேட்டு ஸீதை மனங்கலங்கிப் பயமடைந்து தலைகுனிந்து முகத்தைமூடிக் கண்ணீர் பெருகும் நேத்திரங்களுடன், தன்னுடைய சித்தத்தை இராமனிடத்தில் செலுத்தி நிராதார நிலைமையிலிருந்தாள்.

தசக்கிரீவன், ஸீதையின் சமீபத்தில் வந்து, "ஏ சோபனமுடையவளே! வில்வளைவான புருவமுடையவளே! என்னைப் பார்த்து ஏன் முகத்தை மூடிக் கொள்கிறாய்? இராமன் தம்பியுடன் வனசஞ்சாரிகளோடு வனவாசம் செய்கிறான். அவனைத் தேடிச் செல்லும் சிலர் சில சமயங்களில் அவனைப் பார்க்கிறார்கள். பலர் அநேக தடவைகளில் அவனைப் பார்ப்பதற்கு முடியவில்லை. நான் அநேக தடவைகளில் அவனைப் பார்ப்பதற்குத் தூதர்களை யனுப்பினேன். சென்ற தூதர்கள் பல இடங்களிற் சென்று தேடியும் காணக்கிடைக்கவில்லை. அவனிருக்கிற இடமே தெரியவில்லை. இப்படி யிருக்க, நீ எப்போதும் அவனிடத்திலேயே யன்பு வைத்து வருகிறாய், அவனோ உன்னிடத்தில் அன்பில்லாதவனா யிருக்கிறான். இதற்கு நீ என்ன செய்யப்போகிறாய்? ஆனாலும் அந்த இராகவன் உன்னால் ஆலிங்கனம் செய்யப்பட்டவனாயினும், உன்னருகிலிருக்கப் பெற்றவனாயினும், உன்னிடத்தில் அவனுக்கு மனப்பூர்வமான விஸ்வாசம் ஏற்படவில்லை. அவன் உன்னிடம் பல சுகங்களை யநுபவித்திருந்தும், உன்னுடைய குணங்களை அறிந்தவனா யிருந்தும், அவைகளை யெல்லாம் இப்போது மறந்தவனா யிருக்கிறான். நீ செய்த உபகாரத்தையெல்லாம் நினையாதவனா யிருக்கிறான். ஏ பதிவிரதையாகிய ஸீதே! உன்னை நான் கொண்டுவந்தேன்; நீ துக்கத்தாலும், சோகத்தாலும், வியாகுலமடைந்தாய்; இத்தன்மையுடைய வுன்னைத் தேடி அவன் இவ்விடமின்னும் வரவில்லையே" என்று கூறினான்.

மேலும் நான்கு வேதமும் உணர்ந்த இராவணன் ஸ்ரீராமனிடம், அந்தரங்கத்தில் விஸ்வாசமும், பஹிரங்கத்தில் விரோதமும் வைத்தவனானபடியால், தன்னுள்ளக் கருத்தை ஸீதை யறியாதிருக்கும் நிமித்தம் சிலேடையான வார்த்தையைக் கொண்டு அவளுக்குக் கோபமுண்டாகும்படிச் செய்யக் கருதி, ஸீதையை நோக்கி *

* ஸீதை கோபிக்கும்படிக்குள்ள வாக்கிய வியாக்யானம்.
ஓ பாபினி!—ஓ பெண்ணே!
இராமன்—இரா+மன். இரவுக்கு மன்னனாகிய சந்திரனைப் போன்ற பிரகாசித்தி பெற்றவனது நாயகனாகிய இராமன்.
மாலானவன்—கருமை நிறங்கொண்டவன்.
நிர்க்குணன்—குணமற்றவன். அதாவது நற்குணமில்லாதவன்.

ஓ-பாபினி! இராமன்—மாலானவன், நிர்க்குணன், நிராதாரன், பிரமமாயினவன், விகாரி, வனசஞ்சாரி, கருவமில்லாதவன், மண் விளங்க நின்றவன், மூடவிருத்தி யுடையவன், நராத்மன், பண்டிதன் என்ற எண்ணமுடையவன், உன்னிடம் நோக்கமில்லாதவன்.'

நீ இத்தன்மையுடைய இராமனிடத்தில் அன்பு வைத்தாயே. அதனால் எத்தன்மையுடைய ஸுகத்தை அநுபவிக்கப்போகிறாய்? நான்

---

நிராதாரன்—ஆதாரமற்றவன். அதாவது நிலையில்லாதவன்.
பிரமமாயினவன்—மயக்கமுடையவன்.
விகாரி—பார்வைக்கு விகார ரூபமுடையவன்.
வனசஞ்சாரி—வனத்தில் சஞ்சாரஞ் செய்பவன்.
கருவமில்லாதவன்—அலங்காரமில்லாதவன்.
மண்விளங்க நின்றவன்—நெற்றியில் திருமண் (நாமம்) இட்டுக் கொண்டவன்.
மூடவிருத்தி யுடையவன்—அறிவீனத் தன்மையுடையவன்.
நராத்மன்—மானிடன்.
பண்டிதன் என்ற எண்ணமுடையவன்—நூல் கற்றவன் என்ற மமதை கொண்டவன்.
உன்னிடம் நோக்கமில்லாதவன்—உன்னிடத்தில் பார்வையில்லாதவன் அதாவது பிரீதி யில்லாதவன்.

## இராவணன் அந்தரங்க வாக்கிய வியாக்யானம்.

ஓ பாபினி!—என் பெண்ணைப்போன்ற ஏ குழந்தாய்!
இராமன்.—ஸம்சாரமென்ற (இரவு) இருளைப்போக்கடிக்கும் (அரசன்) கடவுள்.
மாலானவன்.—விஷ்ணுவானவன்.
நிர்க்குணன்.—குணமற்று நின்ற தேவன்.
நிராதாரன்.—தனக்கென ஓர் ஆதாரமில்லாமல் தானே தோன்றும் ஈஸ்வரன்.
பிரமமாயினவன்.—பிரம சொரூபியானவன்.
விகாரி.—ப்ரவ்ருத்தியில்லாதவன்.
வனசஞ்சாரி.—வனம்—ஜலத்தில், சஞ்சாரி—வசிப்பவன்.—ஜலத்தில் வசிப்பவன்.
கருவமில்லாதவன்.—செருக்கில்லாதவன்.
மண்விளங்க நின்றவன்.—பூமியானது (ஜெகமானது) விளங்க—விர்த்தியடைய, நின்றவன்—காப்பவன் (ஜெகத் இரக்ஷகன்)
மூடவிருத்தியுடையவன்.—தாமதவிருத்தி யுடையவன். (பொறுமையாகக் காரியம் நடத்துபவன்.)
நராத்மன்.—மானிட ஜீவனுமானவன்
பண்டிதன்.—பண்டு + இதன்—முதன்மைதொட்டே ஹிதத்தைச் செய்கிறவன்.
உன்னிடம் நோக்கமில்லாதவன்.—உன்னிடம்—நீ யிருக்கும் இலங்கையில், நோக்கமில்லாதவன்—திருஷ்டியில்லாதவன். ஆசையில்லாதவன்.

உன்னிடம் * ஆர்வமுடையவன். அசுரர்களுக்குள் சிறந்தவன். ஆனகயால் என்னை நீயடையலாம். அடைந்தால் தேவஸ்திரீகள், கந்தருவ ஸ்திரீகள், யக்ஷ ஸ்திரீகள், நாகலோக ஸ்திரீகள் கின்னர ஸ்திரிகள் முதலியவர்களுக்கு எஜமானியாக நீ இருக்கலாம் என்றிவ்வாறு பலவிதம் பகர்ந்தான்.

இராவணன், அச்சமற்றுப் பேசிய வார்த்தையைக் கேட்ட ஸீதை, கோபத்துடனும் வீராவேசத்துடனும் ஆங்காரத்துடனும் தலை குனிந்து, பூமியைப் பார்த்து நடுவில் ஒரு † திரணத்தைப்போட்டு அதை நோக்கி "ஓ துராத்மாவே! நீ இராமப் பிரபுவினிடத்தில் வைத்த பயத்தால், துறவிவேடம்பூண்டு, அப்பிரபுவும் அவர் தம்பி இலக்ஷ்மணருமில்லாத சமயம் பார்த்து ஆச்சிரமத்திற் பிரவேசித்து, தேவர்களுக்கு யாகத்தி லேற்பட்ட அவிஸை நாயானது இச்சித்துக் கவர்ந்த தன்மைபோல என்னை அபகரித்துக்கொண்டுவந்தாய்; ஏ நீச! தாமசமில்லை. அப்பலனை விரைவாக நீ யடைவாய்; ஸ்ரீராமபாணமானது உன் சரீரத்தைச் சல்லடைக் கண்ணாகத் துளைக்கக்கண்டு நீ களிக்கப்போகிறாய், கூடிய சீக்கிரத்தில் நீ யமனுடைய சமூகம் செல்லத் தயாராயிருக்கிறாய், நீ ஸ்ரீராமனை மானிடனாக நினைத்துக் கடலை எப்படித் தாண்டி வரப்போகிறான் என்று நினைக்கிறாய், அப்பிரபுவோ சமுத்திரத்தை வற்றச் செய்தோ, அல்லது அதன்மீது சரக்கூடு கட்டியோ அல்லது அதற்கு அணையேற்படுத்தியோ, தம்பி இலக்ஷ்மணருடன் இங்குவந்து உன்னை வதம் செய்யப்போகிறார்; சந்தேகமில்லை. ஏ இராக்ஷஸ! மேலும் உன் புத்திரமித்திரர்களுடன் உன் குலத்தை வேரறுக்கப் போகிறார்; நீ யுன்னிருபது திருஷ்டியாலும் அகமுருகப் பார்க்கப் போகிறாய், பிறகு என்னை அயோத்திக்கழைத்துச் செல்லப்போகிறார்" என்று கடுமையாகக் கூறினாள்.

இராக்ஷஸ அரசனாகிய இராவணன், ஜானகியின் கடுஞ் சொற்களைக் கேட்டுக் கோபங்கொண்டு கண்கள் சிவந்து உறையிலிருந்த கத்தியை யெடுத்து ஸீதையைக் கொல்ல நினைந்து அதி வேகத்துடன் வந்தான். இதைக்கண்ட திரிஜடை (விபீஷணன் பெண்) தன் ஸிரேஷ்ட பிதாவாகிய தசகண்டகனிடம் வந்து பணிந்து "ஓ பிதாவே! ஸீதை மானிட ஸ்திரீ, பராதீனத்தன்மையுடையவள்,

---

* ஆர்வம்—ஆசை.

† திரணம்—துரும்பு.

இளைப்புடையவள், கிருபணத் தன்மையுடையவள், இவளை விடப் பதின்மடங்கு இலட்சணத்திலும், குணத்திலும் விசேஷமுள்ள தேவ ஸ்திரீகள் கந்தருவ ஸ்திரீகள், நாகலோக ஸ்திரீகள் முதலிய எண்ணிறந்த ஸ்திரீகள் தங்களை நாயகனாக அடைந்திருக்கிறார்கள். இப்படியிருக்க, நாம் சாப்பிடக்கூடிய இந்த மானிட மாதை, வதைப் பதினால் என்ன பிரயோஜனம்? இன்னும் கொஞ்சகாலம் பார்ப்போம்" என்று தடுத்தாள்.

இவ்வார்த்தையைச் செவிக்கேற்ற தசக்கிரீவன், சாந்தனாகிப் பின்னும் மோகமுற்றவனைப்போல, காவலுக்கேற்பட்ட கோரரூபமுடைய இராக்ஷஸ ஸ்திரீகளை நோக்கி, "ஓ மாதர்களே! ஸீதை யின்னம் இரண்டு மாதத்துக்குள் என் சுவாதீனமாவதற்கு வேண்டிய தந்திரங்களைச் செய்யுங்கள். அதற்குடன்பட்டால் இந்த இலங்காபுரி இராஜ்யத்தையே நீயாளலாம் என்று அவளுக்கு நீங்கள் போதியுங்கள். உங்கள் போதனைக்குக் கட்டுப்படாத பக்ஷத்தில் அவளைக் கொன்று அந்த மாம்சத்தை நான் காலையில் புசிக்கும் சாகபக்ஷணமாகச் செய்யுங்கள்" என்று ஆஞ்ஞாபித்துத் தன்னுடன் வந்த மாதர்கள் சூழப் புறப்பட்டு அரண்மனைக்குச் சென்றான்.

இராக்ஷஸ ஸ்திரீகளில் ஒருத்தி ஜானகியிடம் வந்து, "ஓ அம்மா! வீணாகப் போகும் உன் யௌவனமானது இலங்கேசனுடன் சேர்ந்தால் எவ்வளவோ பிரயோஜனமுள்ளதாகுமே என்றாள்." மற்றொருத்தி கோபத்துடன் மற்ற இராக்ஷஸ ஸ்திரீகளைப்பார்த்து ஏன் தாமதம் சீக்கிரம் ஜானகியினுடைய அங்கத்தைத் துண்டுதுண்டாக வெட்டுங்கள் என்றாள். பின்னும் ஒருத்தி தன் கையிலிருந்த கத்தியை ஓங்கிக்கொல்ல எத்தனித்தாள். பயங்கரமான முகமுடைய வேறொரு இராக்ஷஸி தன் வக்ரதந்தத்தோடு கூடிய அகண்ட வாயைத் திறந்துகொண்டு விழுங்கவந்தாள். இவ்விதம் சிலர் பயமுறுத்த அவர்களை வெறுத்து திரிஜடை, "ஓ துஷ்டைகளா! என் பேச்சைக் கேளுங்கள் உங்களுக்கு நன்மையுண்டாகும். ஏ இராக்ஷஸிகளா! உங்கள் அகோரமான வக்ரப் பற்களைக் காட்டி, முல்லையரும்பை யொத்த பற்களையுடைய அந்த வைதேகி (ஸீதை)யைப் பயமுறுத்தாதிருங்கள். அந்த ஜானகி அம்மையைச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்யுங்கள். ஏனெனில், இப்போது தான் நான் ஒரு சொப்பனங் கண்டேன். அதாவது தாமரைக் கண்ணனாகிய இராமன், இலக்ஷ்மணனுடன் வெண்மைவர்ணமுடைய ஐராவதத்தின் மீதேறிக்

கொண்டு இலங்கைக்கு வந்து, யுத்தஞ்செய்து நகரத்தைக்கொளுத்தி இராவணனைக் கொன்று ஜானகியைத் தன் மடிமீது வைத்து, அவர் ஓர் பருவதத்தின் சிகரத்தில் வீற்றிருக்கக் கண்டேன்; இராவணன் தைலம் தேய்த்துக்கொண்ட சரீரத்துடன் திகம்பரனாகத் தன்புத்ர, பௌத்ர, மித்ரர்களுடனும், அரளிப் பூமாலையைத் தன் மார்பிலணிந்து கொண்டு, கோமயம் நிறைந்த ஓர் குழியிற் பிரவேசிக்கக் கண்டேன்; மேலும், விபீஷணனை ஸ்ரீ ராமனிடஞ் சென்று அவர் பாதார விந்தங்களில் பக்தியுடன் நமஸ்கரித்து, சந்துஷ்டியுடைய மனமுடையவனாய் இராகவன் அருகில் வீற்றிருக்கவும் கண்டேன். ஆகையால் ஸ்ரீ இராமச்சந்திரன் எந்த விதத்திலும் தசகண்டனை யவன் கூட்டத்தாருடன் வதஞ்செய்து, இராஜ்யத்தை விபீஷணனுக்குக் கொடுத்து, ஸந்தோஷமான முகமுடைய ஜானகியைத் தன்மடிமீது வைத்து, அந்தர மார்க்கமாக இந்திர விமானத்தேறித் தன் நகரம் செல்லப்போகிறார். சந்தேகமில்லை" என்று கூறினாள்.

மகிமையுள்ள புத்தியுடைய திரிஜடையின் வார்த்தையைக் கேட்ட அந்த அரக்கிமார்கள், தங்கள் கடுமையான கொடிய செயல்களை விட்டு மனதிற் பயமடைந்து, ஆங்காங்கு படுத்து நித்திரை போனார்கள்.

பிறகு ஸீதை, அரக்கிமார்களுடைய கொந்தராவுக்கஞ்சிப் பயந்தவளாய் மிகுந்த தளர்ச்சியடைந்து, தனது இரக்ஷகராகிய ஸ்ரீ ராமனைக் காணாத துக்கத்தால், கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகக் கரைகாணாத் துயரத்திலாழ்ந்தவளாகி நாளைய தினம் நாம் உயிர் வைத்திருப்போமானால், இராக்ஷஸ ஸ்திரீகள் நம்மைக் கொன்று தின்று விடுவார்கள். ஆகையால் இப்போதே மரணமடைவது உத்தமமெனக் கருதி, எந்த விதத்தில் பிராணத்தியாகம் செய்துகொள்கிறது என்று ஆலோசித்து, எப்படியாயினும் உயிர் துறப்பதே தகுதியெனத் தீர்மானித்து, ஒன்றுந் தோன்றாதவளாய் மதிமயங்கி நின்றாள்.

# 3-வது சருக்கம்.

அசோகவனத்தில் ஸீதை, கடைசியாகச் சுருக்கு மாட்டிக் கொண்டாவது ஜீவனை விடுகிறேன், இந்த இராக்ஷஸர்களின் மத்தியில் ஸ்ரீராமன் அன்றித் தனித்திருக்கும் நான் இஜ்ஜீவனை வைத்திருப்பதனால் அடையக்கூடிய சுகம் என்ன ? என்னுடைய தீர்க்கமான (நீளமான) இந்தவேணி (ஜடைப் பின்னல்) பே சுருக்குக்கு நானாக உபயோகப்படட்டும் என்று நிச்சயஞ்செய்து, உயிரைவிட எத்தனித்தாள். மாருதி, ஜானகியின் நோக்கத்தைக் குறிப்பாலுணர்ந்து ஸூக்ஷ்ம ரூபத்துடன் அந்தேவியின் ஸமீபத்திற்சென்று அத்தாயின் காதிற்படும்படி மெல்லிய குரலோடு ஸ்ரீராமஜெயம் என்று கூறினார்.

இந்த அமிர்தமான மொழியைக்கேட்ட ஜானகி இது என்ன. ஆச்சரியம் !! இவ்வார்த்தை இத்தனை நாளும் காதாற் கேட்கப்படாதது, என்று சிந்தித்துத் தான் கொண்ட கோலத்தை விட்டு, இன்னும் என்ன வருகிறது பார்ப்போம் என்று மனங்கசிந்தவளாய் நின்றாள்.

இதைக்கண்ட மாருதி, நவகண்டத்திலும் மிகுதியான தவத்தோரால் சூழ்ந்து வாழ்வுபெற்ற இப்பரதகண்டத்தில், நீர்வளம் நிலவளம் பொருந்தி விளங்கா நின்ற அயோத்திமா நகரத்தைத் தலை நகராகக் கொண்டு அன்பத்தாறு தேசங்களையுந் தன் குடை நிழற்கீழ் ஆளுந் தவவலிமைபூண்ட இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மஹா பராக்கிரம சாலியாகிய தசரத சக்கரவர்த்தி யென்பவருக்கு, இராமர், இலக்ஷ்மணர், பரதர், சத்துருக்னர் என்ற நான்கு உத்தம குமாரர்களுண்டானார்கள். அவர்களில் மூத்த குமாரரான ஸ்ரீராம பிரானுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய ஆரம்பித்த காலத்தில், ஸ்ரீராமச் சந்திரருக்குச் சிற்றன்னையும் பரதருக்குத் தாயுமாகிய கைகேயி, சக்கரவர்த்தி யிடத்தில் தான் முன்னடிப் பெற்றிருந்த இரண்டு வரத்தில், ஒருவரம் பதினான்கு வருடம் ஸ்ரீராமர் வனவாசம் செய்யவும், மற்றொருவரம் தன் மகன் பரதர் நாடாளவும் வேண்டுமென்று கேட்க, தசரதர் சத்தியந் தவறாத

சர்புத்திர ரானபடியால் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு அவ்வாறே வரமளித்து ஸ்ரீராமரைக் காட்டுக் கேகும்படி விடுத்தனர். இரகு நந்தனர் தன் பிராதா இலக்ஷ்மணருடனும், மனைவி ஸீதையுடனும், பிதுர்வாக்கிய பரிபாலனத்தை மேற்கொண்டு தண்டகாரண்யம் வந்து, கௌதமீ நதிக் கரையிலுள்ள பஞ்சவடி தீரத்தில் இலக்ஷ்மணர் ஸீதை யிவர்களுடன் ஓர் ஆச்சிரமத்தில் வாசஞ்செய்து கொண்டிருந்தார். அக்காலே, இரகு வீரர்களிருவரும் ஆச்சிரமத்தில் இல்லாதிருக்கும் சமயம் பார்த்து, தேவர்களுக் கேற்பட்ட அவிர்ப் பாகத்தை கவர இச்சித்த ஸ்வானத்தைப்போல, துராத்மாவாகிய இராவணன், மஹா பாக்கிய சாலியும், ஜனக குமாரியுமாகிய ஸீதையை அபகரித்து இலங்கைக்குக் கொண்டுவந்து இந்த அசோக வனத்தில் வைத்தான். பிறகு இரகுபதி துக்க மடைந்தவராய் ஸீதையைத் தேடிக்கொண்டு வருகையில், புள்ளரசனுகிய ஜடாயு பூமியிற்களைத்து வீழ்ந்திருக்கக் கண்டார். அவரால் இராவணன் ஜானகியைக் கொண்டுபோயிருக்கிறுன் என்ற சங்கதி தெரிந்து அவருக்கு செய்யவேண்டிய அபரகிரியைச் செய்து முடித்துப் பிறகு ரிசியமூக மலைக்கு வந்தார்.

அந்த மலையிலிருந்த ஸுக்ரீவன், மஹாத்மாவாகிய ஸ்ரீராமருக்குச் சிநேகிதனுனன். இரகுநந்தனர் ஸுக்ரீவனுடைய மனைவியை அபகரித்த வாலியை வதஞ்செய்து கிஷ்கிந்தா நகரத்தை ஸுக்ரீவனுக்கு முடி சூட்டினர். முடிசூட்டப்பெற்ற ஸுக்ரீவன் தன்னுடைய வானர சைனியங்களை வரவழைத்து, ஸீதையைத் தேடுவதற்கு நான்கு பக்கத்திற்கும் அனுப்பினுன். அனுப்பப்பட்டவர்களுக்குள் நான் ஒருவன். வானரன். ஸுக்ரீவனுடைய மந்திரி. நான் தென் திசை நோக்கித் தேடிவருகையில் ஸம்பாதியின் வாக்கியத்தால் ஸீதை யிவடமிருப்பதை யறிந்து, நூறு யோஜனை அகலமுள்ள கடலைத் தாண்டினேன். மங்களகரமான ஜனகநந்தினியை இலங்கையிற்றேடினேன். அங்கு காணுது அசோகவனத்தை நாடி யிவ்விடம்வந்து ஸிம்ஸுபா விருக்ஷத்தைப் பார்த்தேன். இந்த இடத்தில் துக்கத்தால் மனம் வருந்தி, இனி யென்செய்வோமென் றேங்கித் தவிக்கும் ஸீதையைக் கண்டேன். ஸ்ரீராமன் பத்னியைக் கண்டேன். நான் கிருதகிருத்திய னுயினேன்," என்று கூறிவிட்டு மௌனமா யிருந்தார்.

இவ்வரலாற்றைக் கேட்ட ஸீதாதேவி ஆச்சரியமடைந்து என்ன இது, ஆகாயத்தில் நின்று கூறியது வாயுவா, அல்லது ஆகாய வாணியா, என் செவிகளுக்கின்பமாக அமுதமான மொழிகளைப் பேசிய அந்த மஹானுபாவன் என் எதிரில் வரக்காணோமே யென்றாள்.

அனுமான் இதைக்கேட்டு மெதுவாகக் கீழே யிறங்கி ஓர் * கலிங்க பக்ஷியின் பிரமாணமுடைய சரீரத்துடனும், இரத்தவர்ணமுள்ள முகத்துடனும், மஞ்சள் நிறமுள்ள ஆடையுடனும், ஜானகியின் முன் வந்து, தன்னிருகரங்களையுங் கூப்பி மெதுவாக நமஸ்காரஞ் செய்தார்.

ஜனககுமாரி யிவரைக் கண்டு பயந்து, இந்தவேடம் பூண்டு வந்திருக்கும் இவன் இராவணன் தான், நம்மை மோசப்படுத்துவதற்கு வானரவடிவங் கொண்டு வந்திருக்கிறான் என்று நினைத்து மௌனமாகத் தலைகுனிந்து நின்றாள்.

அனுமார் இதை யறிந்து மறுபடியும் ஸீதையை நோக்கி, ஓதேவி! தாங்கள் நினைக்கும் விதமாகியவன் நானல்ல, ஏ தாயே! என்னிடம் வைத்த ஸந்தேகத்தை அடியோடே விட்டுவிடுங்கள், மங்களகரமான ஓமைதுலி! (ஸீதை) நான் கௌசல்யா புத்திரரும் பரமாத்மாவுமாகிய ஸ்ரீராமபிரானுடைய தாஸன், கபிஸிரேஷ்டனாகிய ஸுக்ரீவனுடைய மந்திரி, எல்லோருக்கும் பிராணனாகிய வாயுவின் குமாரன். சோபன குணமுள்ள ஓ வைதேகி! நான் கல்மஷமில்லாதவன், பிரமசரிய விரதத்தை யநுஷ்டிப்பவன்," என்று தெரிவித்தார்

இவ்விதங் கூறி கைகூப்பி நிற்கும் ஆஞ்சனேயரைப் பார்த்து, ஸீதை "ஓ வானர! மானிடர்களுக்கும், வானரங்களுக்கும் எவ்விதம் சேர்க்கை யேற்படும்? நீ இராமபத்திரனுக்குத் தாஸன் என்று கூறுகிறாயே, அப்படியிருந்தால் அந்த இராகவர் எப்பேர்ப்பட்டவர்? அவருடைய இலக்ஷணத்தைக் கூறுவாயாக" என்றாள்.

இதைக்கேட்ட மாருதி, சற்று தூரத்திலேயே நின்று அன்புடனே ஜனகநந்தனியைப்பார்த்து, "ஓ தாயே! சிறந்த புத்தியுடைய இரகுவீரர் சபரியால் பூஜிக்கப்பட்டு ரிசியமூக மலைக்கு வந்தார். அந்த மலையில் வசிக்கும் ஸுக்ரீவன், இராமர் இலக்ஷ்மணர் இருவரையுங் கண்டு பயந்து, அவர்கள் அபிப்பிராயத்தை யறிந்து வர

* கலிங்கபக்ஷி— ஊர்க்குருவி.

என்னை அனுப்பினர். நான் பிரமசாரி வேடம்பூண்டு இராமர் இடஞ்சென்று, அவருடைய உள்ளக்கருத்தை யறிந்து இராம இலக்ஷ்மண ரிருவரையும் என்தோளின் மீதேற்றி, ஸுக்ரீவன் சமீபங் கொண்டுபோய்ச் சேர்த்தேன். அவர்களுடைய சிநேகத்தை ஸுக்ரீவனுக்குண்டுபண்ணினவன் நான்தான்.

நான் தென்றிசை நோக்கித் தங்களைத் தேடப்புறப்பட்டபோது இராகவர் என்னைப் பார்த்து ஓ வாயுகுமாரனே! என்னுடைய காரியம் யாவற்று முன்னாலாகவேண்டியதா யிருக்கிறது. என்னுடைய க்ஷேமத்தையும், இலக்ஷ்மணனுடைய க்ஷேமத்தையும் ஸீதையினிடம் தெளிவாகச் சொல். இது என்னுடைய கணையாழி, என்னுடைய நாமமுத்திரையுடையது, இதை அடையாளமாக ஸீதையிடம் கொடு என்றுரைத்துத் தன் விரலில் நின்று கழற்றி யென்னிடம் கொடுத்தார். அந்தக் கணையாழியை நான் ஸர்வ ஜாக்கிரதையுடன் கொண்டு வந்திருக்கிறேன். அது இதோ இருக்கிறது" என்று சொல்லி ஸீதையிடம் அந்த மோதிரத்தைக் கொடுத்து நமஸ்காரஞ் செய்து இரு கைகளையுங் கூப்பிக்கொண்டு தூரத்திலேயே நின்றார்.

ஜானகி ஸ்ரீராமருடைய நாமாக்ஷரக் குறியுடைய அங்குலியத்தைப் பெற்று, அடங்காத மகிழ்ச்சியுற்றுக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகத் தன் சிரசில் அதைத் தரித்து, மாருதியை நோக்கி "ஓ வானரசிரேஷ்டரே! நீர் எனக்குப் பிராண பிக்ஷைகொடுத்தவர். சிறந்த புத்தியுடையவர். இராகவரிடம் பக்தியுடையவர். பிரியமுள்ள காரியங்களைச் செய்பவர். இதனால் ஸ்ரீராமருக்கு உம்மிடத்தில் அதிக நம்பிக்கையுண்டா யிருக்கிறது. ஆகையால் உம்மையே யென்னிடம் அனுப்பியிருக்கிறார். ஓ ஆபத்சகாய அனுமாரே! நீர் என்னுடைய காலகதி யாவற்றையும் பார்த்தவர். நான் உமக்குச் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை.

சதுர்வித தந்திரமுங் கற்ற நிபுணரே! நீர் அந்த இராமச் சந்திரருக்கு என்னிடம் கருணையுண்டாகும்படி சவிஸ்தாரமாக எல்லாவிஷயங்களையும் எடுத்துக் கூறவேண்டும். விரித்துக்கூற எனக்குத் தெரியாது. ஆயினும் இன்னும் இரண்டு மாதம் வரையில் என்னுடைய ஜீவனை வைத்திருப்பேன். அதற்குள் இரகுநந்தனர் இவ்விடம் வாராவிடில், பரமதுஷ்டனான தசக்கிரீவன் என்னைப் பலகாரமாகப் புசித்து விடுவான். அவன் அப்படிச் செய்வதன்முன் நானே மனமுவந்து என் பிராணனை எமனுக்குப் பலகாரமாகச் செய்து விடுவேன். இது

நிச்சயம். ஆகையால் ஜீவகாருண்யமுள்ள ஸ்ரீராமப் பிரபு, தம்பி இலக்ஷ்மணருடனும் வானர சிரேஷ்டரான ஸுக்ரீவருடனும் விரைவாக இவ்விடம் வந்து, இராவணனை அவன் புத்ரமித்ரர்களுடனும் சேனைகளுடனும் யுத்தத்தில் வதம்செய்து என்னை மீட்பாராகில் அவருடைய வீரத்துக்குத் தக்கதாகும். ஓ வீர! நான் வருணித்த இந்தத் தோத்திரத்தை நீர் அந்த இரகு வீரரிடம் தெரிவிக்க வேண்டும். ஹரிகுல சிரேஷ்டரான இரகுநந்தனர், அசுரகுல நாசனான தசக்கிரீவனைக் கொன்று என்னை மீட்டெடுக்கச்செய்யும் மார்க்கம் எதுவோ அதைத்தேட நீர் தயவுசெய்து முயற்சி செய்யக் கோருகிறேன். பிறருக்கு உதவி புரியும் விஷயத்தில் ஸாதுக்கள் தங்கள் மனம், வாக்கு, காயம் இவைகளினால் செய்யக்கூடிய இதத்தை ஒளியாது செய்வது அவர்களுடைய கடமை. ஓ ஸாது சிரேஷ்டரான மாருதி! உம்மிடமிருந்து உமது வாக்கினாலுண்டாகும் சகாயத்தைப்பாவது நானடைய விரும்புகிறேன். நீர் இந்த உபகாரம் எனக்குச் செய்யவேண்டும்" என்று கோரினாள். அனுமானும், "ஓ தேவி! நான் சென்று இராமர் இலக்ஷ்மணர், ஸுக்ரீவர் இவர்களைக் கண்டவுடன் அவர்கள் ஆயுதபாணியாய், விரைவாக இவ்விடம் வந்து இராவணனைக் கொன்று தங்களை அயோத்தியா நகருக்கழைத்துச் செல்லப் போகிறார்கள். சந்தேகமில்லை" என்றார்.

ஜானகி, இராமதூதனாகிய அனுமானைப் பார்த்து "ஓ வாயுநந்தன! சொல்லுவதற்கரிய தைரியத்தையுடைய இரகு நந்தனர் கணக்கற்ற வானரசைனியங்களுடன் இந்த அகண்ட சமுத்திரத்தை எவ்விதந்தாண்டி வருவார்" என்று வினவினாள்.

அனுமான் "ஓ தாயே! புருஷோத்தமர்களான ஸ்ரீராமர் இலக்ஷ்மணர் இவ்விருவரும் என் தோளின்மீதேறிக்கொண்டு வருவார்கள். வானரமன்னனாகிய ஸுக்ரீவர் தன்னுடைய சைனியங்களுடன் ஆகாய மார்க்கமாக ஓர் கணப்பொழுதில் இந்தக் கடலைத் தாண்டுவார். இவ்விதம் இவ்விடம் வந்து இராக்ஷசக் கடலைத் தூர்க்கப்போகிறார்கள் ஐயமில்லை. தாங்கள் கவலைப்பட வேண்டாம் எனக்கு நன்கு விடைதரவேண்டும். நான் தங்களுடைய கருணையின் திறத்தைக் கொண்டு இந்த *அருணவத்தைத் †தரணித்துச் செல்கிறேன்.

---

* அருணவம்—சமுத்திரம்

† தரணம்—தாண்டல்.

இலக்ஷ்மணருடன் கூடிய கோதண்டமூர்த்தியைப் பார்க்கிறேன். தங்களைக் கவலைக்கடலினின்று கரை சேர்க்கிறேன் அவர்கள் தங்களிடம் வரத் துரிதப்படுத்துகிறேன். ஓ உலகமாதாவே! அந்தக் கொண்டல் வண்ணன் என் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளத்தகுந்த ஏதேனும் ஓர் *சின்னம் தந்தருளவேண்டும். அதைக்கொண்டு நான் உற்சாகத்துடன் செல்லுகிறேன்" என்றார்.

ஸீதை யிதைக்கேட்டு ஆலோசனை செய்து, தனது கேசங்களுக்கு மத்தியில் அலங்காரமாகச் சூட்டிக் கொண்டிருந்த சூடாமணியை யெடுத்து அநுமான் கையிற்கொடுத்து, "ஓ காற்றின்மைந்த! இந்த எனது முடிமணியைக் கண்டால், இராமர் இலக்ஷ்மணர் இவர்கள் உம்முடைய வார்த்தையில் நம்பிக்கை வைப்பார்கள். இதை அடையாளமாக வைத்துக் கொள்ளும். மேலும் மற்றும் ஓர் அடையாளமுந் தருகிறேன். அது இதைவிட மேலானது. அப்பேர்க் கொத்த இலாஞ்சனத்தை மனதில் வைத்துக் கொள்ளும். அதாவது—முன்னம் சித்திரகூட மலையில் ஒரு சமயம் இரகுநந்தனரும் நானும் தனிமையாக இருக்கும்போது, எனது மடியிற் றன்சிரசை வைத்துக்கொண்டு தாசரதி நித்திரை புரிந்தார். அந்தச் சமயம் இந்திரனைச் சார்ந்த ஓர் காகம் என்னிடம் வந்து, தன்னுடைய கூரிய மூக்காலும் விரிந்தகாலின் நகத்தாலும் என் பாதத்தின் கட்டைவிரலைத் தான் புஜிக்கத்தக்க பழவர்க்கமெனக் கருதி ஆசையால் இரத்தம் கசியும்படி யடிக்கடி வந்து கொத்திக் கீறிப் புண்படுத்தியது. நான் எனது பர்த்தாவின் நித்திரைக்குப் பங்கம் வருமெனக் கருதி யந்தச் சிரமத்தைப் பொறுத்துக் கொண்டு பேசாதிருந்துவிட்டேன். பிறகு அனந்கல் தெளிந்த எனது நாயகனாகிய ஸ்ரீராமப் பிரபு, என்பாதப் பெருவிரல் புண்ணாயிருப்பதைக் கண்ணுற்று, "ஓ மங்கள குணமுடையவளே! எந்த துராத்மா இந்த அப்பிரியம் எனக்குண்டாகும்படி யுனது பாதாம்புஜத்தை நோவச் செய்தவன்," என்றுரைத்து, பிரசன்னமாயிருந்த அந்த † வாயசத்தையும் என்னையும் சலிப்புடன் உற்று நோக்கினார். அந்தத் ‡ துரோணம் இரத்தந்தோய்ந்து, சிவந்த மூக்குடனும் நகத்துடனும் மிரண்டோடுவதை நோக்கி, காகுஸ்தர் கோபித்து, ஓர் புல்லை யெடுத்து அஸ்திரமந்திரத்தை

* சின்னம்—அடையாளம்.

† வாயசம்—காக்கை.

‡ துரோணம்—காக்கை, வரண்டம்— காக்கை.

ஜெபித்து விளையாட்டாக அந்த எாண்டத்தின்மீது விடுத்தார். அந்தப்புல் அக்னிஜ்வாலையாக ஜ்வலித்துக்கொண்டு கிளம்பி அக் காக்கையை விரட்டிற்று. அக்காக்கை யுலகமெங்குஞ் சுற்றித் திரிந்து இந்திரன் பிரமன் முதலியவர்களிடத்தில் அடைக்கலம் புகுந்தும் இரக்ஷிக்கப்படாமல் கடைசியாகத் தயாநிதியாகிய தாசரதியின் பாதத்தில் வந்து விழுந்தது. ஸ்ரீ ராசவனாகிய கௌசல்யை குமாரர் தனது பாதமே கெதியெனச் சரணாகதியடைந்த அந்த வாயஸத்தைப் பார்த்து, 'ஓ காக்கையே! நீ செய்த துற்கிருத்தியத்தைப் பொறுத்தேன். ஆயினும் இந்தப் பாணம் வீண்போகக்கூடியதல்ல. ஆகையால் உன்னிரு கண்களில் ஒன்றை யதற்குக்கொடு' என்று ஆதரவுடன் கூற, அக்காகம் தனது வலது கண்ணைக் கொடுத்து விட்டுச் சென்றது. இந்த விஷயத்தையும் அறிகுறியாகப் பிரபுவினிடத்தில் கூறும். இத்தகைய பராக்கிரமமுடைய இரகுவீரர் இன்னமும் ஏன் என்னை உபேக்ஷை செய்கிறார். இவ்விதம் ஸீதை கூறியதாகச் சீக்கிரம ஸ்ரீராமமூர்த்தியிடஞ்சென்று சொல்லுவதுடன் ஏழையாகிய என்னுடைய வந்தனத்தையும் அவர்களுக்குத் தெரியப்படுத்தும்" என்று புகன்றாள்

மாருதியும் ஸீதை பகர்ந்த விருத்தாந்தங்களைக் கேட்டு ஆனந்தம் மேலிட்டு இரகுநந்தனன்காதலியை வணங்கி "ஓ தாயே! தங்கள் பர்த்தா இதுவரையிலும் நீங்கள் இங்கிருப்பதை யறிந்திருந்தால் இராக்ஷசர் நிறைந்த இலங்கையை ஒரு நொடிப்பொழுதில் சாம்பராகச் செய்திருப்பார்" என்று பகர்ந்தார். இதைக்கேட்ட ஸீதை "ஓ சிறுவனே! நீர் எவ்விதம் அரக்கர்களுடன் யுத்தம் செய்யப்போகிறீர். மிகவுங் குறைந்த ஸூக்ஷ்ம சரீரமுள்ளவராக இருக்கிறீரே! உம்மைச் சார்ந்த வானரவீரர்களும் இவ்வித சரீரமுடையவர்கள் தானே!! அவர்கள் தான் இக்கொடிய இராக்ஷசர்களுடன் எப்படி யுத்தம் செய்வார்கள்" என்று வினவினாள்.

ஆஞ்சநேயர் தன் குறுகிய வடிவத்தை நோக்கி ஐயமுற்றுக் கூறிய வார்த்தையைக் கேட்டு மெய்யே யெனச்சிந்தித்து, அத்தேவி முன்னிலையில், தான் வகித்திருந்த ஸூக்ஷ்ம ரூபத்தை விட்டு மஹாமேருவுக்குச் சமமான உயர்வும் அஷ்டகிரியி லொன்றான மந்தாமலையை நிகர்த்த ஆகிருதியும், பொன் வண்ணமான தேஜஸ்ஸோடும் கூடிய விஸ்வரூபத்தை யெடுத்து, அந்த ரூபத்தை இராக்ஷ

சர்கள் கண்டால் திடுக்கிடும்படிக்குள்ள தன்மையை வகித்து நின்றார்.

ஸீதை அனுமான் காட்டிய ரூபத்தைக்கண்டு மனம் மகிழ்ந்து மிகுந்த சந்தோஷத்துடன் ஆஞ்சநேயரை நோக்கி, "ஓ வானர சிரேஷ்டரே! நீர் மஹாபலசாலி ஸத்குணம் நிறைந்தவர், ஸமர்த்தர், போதும் போதும் உம்முடைய ரூபத்தை யடக்கும் அடக்கும். உம்முடைய வடிவத்தை யொருக்கால் இராக்ஷசர்கள் பார்க்கப் போகிறார்கள். உம்முடைய பிரயாணமானது சுபமாகட்டும். ஸ்ரீராமரின் சந்நிதிக்கு நீர் விரைவாகச் செல்ல வேண்டும், இதற்கு, இதல்ல தருணம் என்று கூறிச் சடுதியில் மாருதியைப் பிரயாணப் படுத்தினாள்.

உடனே அனுமார் ஸீதையை வணங்கித் தண்டனிட்டு விடை பெற்று அசோக வனத்தை விட்டுக் கொஞ்ச தூரம் சென்று, ஓர் எஜமானனுடைய காரியத்தை குறித்து வந்ததூதன், அந்த எஜமானனுடைய காரியத்துக்கு விரோத மன்னியில் ஏதேனுமற்றுமோர் காரியத்தைச் செய்யாமல் செல்கிறவன் அதமனாகிறான்; ஆகையால் நான் இங்கு ஏதேனும் ஒரு காரியத்தைச்செய்து, அதை முன்னிட்டு இராவணனைப் பார்த்து, அவனுடன் ஸம்பாஷணை செய்த பிறகு ஸ்ரீராமரிடம் செல்லுகிறேன் என்று, தனக்குள் ஆலோசனை செய்து, அந்த அசோகவனத்திலுள்ள விருக்ஷ வர்க்கங்களை யழிக்க எண்ணங்கொண்டு, ஸீதாதேவி யிருந்த ஸிம்ஸுபா விருக்ஷந் தவிர மற்றவைகளை யழித்து அந்த வனத்தை நாசம் பண்ணி அதிலுள்ள மண்டபத்தை இடித்து, அதன் காவற்காரர்களையும் வதைத்தார்.

அதைக் கண்ட இராக்ஷச ஸ்திரீகள் ஜானகியிடம் வந்து மிகுதியான வலுவுடைய இவன் யார்? குரங்கு ரூபத்துடன் காணப்படுகிறானே யென்று கேட்டார்கள். ஜானகி ஓ அரக்கிகளே இராக்ஷசர்கள் செய்யும் செய்கைகளை நீங்கள்தான் அறிவீர்கள். துக்கத்தால் வருத்தமடைந்த நான் யாதொன்றையுமறியேன் என்றாள். இராக்ஷச ஸ்திரீகள் பயமடைந்து இராவணனிடம் விரைவிற்சென்று "ஓ தேவ! யாரோ ஓர் வானரன், மிகுந்த பலமுடையவன், ஸீதையிடம் வந்து ஸம்பாஷணை செய்துகொண்ட பிறகு, அசோகவனத்திற் புகுந்து, அதிலுள்ள கணக்கற்ற மரங்களையும் முறித்து, புத்தர்களின் இரு

கம்போன்ற அழகமைந்த அதிலுள்ள மண்டபத்தையும் இடித்து அம்மண்டபத்தைக் காவற்காத்திருந்த அரக்கர்களையும் வதைத்தான். சற்றும் பயமன்னியில் அந்த பலிஷ்டன் அங்கேயே யிருக்கிறான்" என்றார்கள்.'

இலங்கேசன் மிகவும் அப்பிரியமான அந்த வார்த்தையைக் கேட்டுக் கடுஞ்சினமுற்று, சில கிங்கரர்களை அனுப்பினான். அக்கிங்கரர்கள், ஈட்டி, கத்தி, முசலம், வில், அம்பு முதலிய ஆயுதபாணிகளாய்ப் புறப்பட்டு வந்து இடிந்துபோன மண்டபத்தின் முன்பக்கத்தில், பருவதம்போன்ற ஆகிருதியுடைய சரீரத்துடனும், சிவந்த முகத்துடனும், கொஞ்சம் அசைந்தவாலுடனும், கையில் இரும்புத் தூணை ஆயுதமாகக் கொண்டு பயங்கரமான வீராவேசத்துடனும் இருக்கும் ஆஞ்சனேயரைக் கண்டு ஆர்ப்பரித்தார்கள். மாருதி தனக்கெதிரில் வரும் கிங்கரர்களைக் கண்டு ஸிங்கநாதம் செய்தார். இதைக் கேட்ட அரக்கர்கள் கோபம் மூண்டு அனுமான்மீது அநேக பாணங்களைப் பிரயோகம் பண்ணினார்கள். வாயுகுமாரன் எழுந்து கையிலிருந்த முசலத்தைக் கொண்டு அந்தக் கிங்கரர்கள் அனைவரையும் கொசுக்களைப் போல ஓர் க்ஷணப்பொழுதில் நாசம் செய்தார்.

கிங்கரர்கள் யாவரும் காலன்வசமானதைக் கேட்டு இராவணன் கோபமடைந்து, மிகுந்த தாபத்துடன் தகுந்த பராக்கிரமமுடைய ஐந்து ஸேனாதிபதிகளை யனுப்பினான். அனுமன் அவ்வைந்து ஸேனாதிபதிகளையும் அந்த இரும்புத் தூணினாலேயே வதை செய்தார். இதையறிந்த தசக்கிரீவன், ஆங்காரமுற்று மந்திரி குமாரர்கள் ஏழுபேரை யனுப்பினான். அந்த ஏழுபேரும் மாருதியிடம் வந்து போர்புரிய, வானர சமர்த்தன் அவர்கள் யாவரையும் அந்த முசலத்தைக் கொண்டே எமபுரிக்கு அனுப்பினார். பிறகு அனுமான் தான் முன்னிருந்த மண்டபத்தின் முன் பக்கத்தில் வந்து தன்னை நோக்கி வரும் இராக்ஷசர்களை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

இராவணன், மந்திரி குமாரர் எழுவரும் காலஞ்சென்றதை யறிந்து கோபம் மிகுந்து, தன் குமாரனும், அதிகப் பிரதாபசாலியுமாகிய அக்ஷயகுமாரனை வரவழைத்து, 'கிங்கரர்கள், ஸேனாதிபதிகள், மந்திரி குமாரர்கள் முதலினோர் மாண்டதை யறிவித்து, அவனுடன் அநேக இராக்ஷச சைனியங்களையும் கூட்டிக் காற்றின் குமாரனிடம் அனுப்பினான். அக்ஷயகுமாரன் அநேக சைனியங்களுடன் யுத்தத்துக்குத் தன்னிடம் வருவதைக் கண்ட வாயு குமாரன் எழுந்து

அந்த இராக்ஷசக் கூட்டத்திற் புகுந்து அவர்கள் அனைவரையும் நாம் ஸப்படுத்தி ஆகாயத்திற் கிளம்பி அங்கிருந்து அக்ஷய குமாரன் ஸிரசிற் பாய்ந்து முசலத்தால் அடித்து அவனையும் வதைத்தார்.

இராக்ஷச சிரேஷ்டனான இராவணன், தனது குமாரனை அக்ஷயகுமாரன் அனுமாரால் வதையுண்டதைக் கேட்டு மட்டற்ற கோபமுடையவனாகித் தனது சிறந்த புத்திரனாகிய இந்திரஜித்தைத் வரவழைத்து, அவனை நோக்கி "ஓ மேகநாத! என்னுடைய மைந்தனை அக்ஷயகுமாரனைக் கொன்ற சத்துருவாகிய வானரனை நானே நேரிற்போய் அவனை வதம் செய்தாவது அல்லது கட்டியாவது யிப்போதே யிவிடம் கொண்டு வருகிறேன்" என்று கடுமையாகக் கூறினான். அதைக்கேட்ட இந்திரஜித்து தகப்பனை வணங்கி "ஓ அண்ணலே! நானிருக்கும்போது எதற்குத் தாங்கள் அந்த வானரத்தை யொரு பொருட்படுத்தி யவனிடம் செல்ல வேண்டும். எதற்காகத் துக்கப்பட வேண்டும். தாங்கள் போகவேண்டாம், நான்போய் அந்த சத்துருவான வானரத்தைப் பிரம்மாஸ்திரத்தால் கட்டியிழுத்துத் தங்கள் சந்நிதானத்துக்குக் கொண்டு வருகிறேன். கவலைப்படவேண்டாம்" என்று கூறி, இந்திரனை ஜெயித்த வீரனாகிய இந்திரஜித்து ஆயுதபாணியாகத் தேரின் மீதேறி அநேக இராக்ஷசர்கள் புடைசூழச் சமீரணன் குமாரனாகிய அனுமானிடஞ் சென்றான்.

இலங்கேசன் குமாரனான மேகநாதன், மிக்க ஆர்ப்பாட்டத்துடன் வருகிறதைக்கண்டு வாயுநந்தனன், வருகிறவன் தகுதியுள்ள ஓர் வீரனாயிருக்க வேண்டுமென்று கருதி, மிகுதியான கோபங் கொண்டு, தான் எழுந்து முசலத்தைக் கையிற்பற்றி யிடசாரி வலசாரியாகச் சுழன்று கருடன் போல் ஆகாயமார்க்கத்தில் கிளம்பி நாலாபக்கமும் வட்டமிட்டு சிங்கநாதம் செய்து கர்ஜித்து நின்றார். இந்திரஜித்து, ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஆஞ்சநேயரைப் பார்த்து, இவன் வானரனல்ல தக்கசூரன் என்றுமதித்து, வில்லை யெடுத்துக் குணத்தொனி செய்து, சரமாரியாக அநேக பாணங்களை மாருதி பேரில் வருஷித்து, ஐந்து பாணங்களால் அவருடைய ஸிரசையும், ஐந்து பாணங்களால் இருதயத்தையும், ஆறு பாணங்களால் இரு பாதங்களையும், ஒரு பாணத்தால் வாலையும் நோவச்செய்து சிங்க நாதஞ்செய்தான். அனுமார் அந்தப் பாணங்களை அலட்சியஞ்செய்து, தன்னுடைய கையில் இருப்புலக்கையை யெடுத்துக்கொண்டு, இந்திரஜித்து ஏறிய இரதம், குதிரைகள், சாரதி யிவைகளை அடித்து

ஒருக்ஷணப்பொழுதில் பொடியாகப் போகும்படிச் செய்தார். இதைக் கண்ட மேகநாதன், சடுதியில் மற்றொரு தேரின் மீதேறி அனுமான் பேரில் அஸ்திரங்களிற் சிறந்த பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணினான். அந்த அஸ்திரம் பிரம்மாவினிடத்தில் அநேகாரமான தவத்தைச் செய்து பெற்றவரப்பிரஸாதத்தையுடைய தானதால், பிரமனுடைய ஆணையைத் தவிர்க்காது அவ்வஸ்திரத்துக்கு அனுமார் கட்டுப்பட்டு, யாவரும், எவருடைய நாமத்தை ஸதா தியானம் செய்து, அஞ்ஞானத்தா லுண்டாகும் கருமபந்தத்தைவிட்டு மங்களகரமான ஸ்தானத்திற்குச் செல்லுகிறார்களோ அந்த இராமருடைய நாமத்தையே தன்னுடைய இருதயத்தில் ஸ்மரணஞ்செய்துகொண்டு யாவற்றாலும் விடுபட்டவராகி விளங்கினர். இத்தகைய அனுமாரை இந்திரஜித்து இராவணன் ஸபைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான்.

---

## 4-வது சருக்கம்.

பிரம்மாஸ்திரத்தில் கட்டுப்பட்ட அனுமார் இராவணன் சபைக்கு கேகும்போது, அந்நகரத்திலுள்ள இராக்ஷசர்கள் திரளாகக் கூடி வந்து அவரைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். சிலர் அவரிடம் வந்து குத்தியும் வெட்டியும் ஹிம்ஸித்தார்கள். அனுமாரைக் கட்டுப்படுத்திய பிரம்மாஸ்திரமானது க்ஷணப்பொழுது அவரைப்பற்றி நின்று பிறகு நீங்கிற்று இதையறிந்த ஆஞ்சநேயர் அற்பக் கயிற்றினால் கட்டுண்டபடியே யிருந்தார். மேல் நடக்கும் காரியத்தை அநுசரித்து அவ்விதமிருந்தார். அப்பொழுது இந்திரஜித்து இராவணன் சபையில் மாருதியைக் கொண்டுபோய் அவனுக்கெதிரிலிருக்கச்செய்து, இலங்கேசனைப் பார்த்து, "ஓ இராக்ஷசபுரவல! இந்த வானரன் அநேக இராக்ஷசர்களை வதைசெய்ததுமல்லாமல் அசோக வனத்தையு மழித்தான். இவன் சாமான்னிய குரங்கல்ல, மஹா பலசாலி, இவனைப் பிரம்மாஸ்திரத்தால் கட்டிக்கொண்டு வந்தேன். இதோ வந்திருக்கிறான். ஓ இராவணேஸ்வர! அமைச்சர்களுடன் ஆலோசனை செய்து தக்கவாறு செய்ய வேண்டும்" என்று தெரிவித்துக் கொண்டான். ३५

இலங்கைமன்னன் மேகநாதன் கூறியதைக் கேட்டு, தன் முன் மைநாகமலை போலிருக்கும் மந்திரி பிரஹஸ்தனைப் பார்த்து,

"ஏ பிரஹஸ்த! இந்த வானரன் எங்கிருந்து எதற்காக இவ்விடம் வந்தான். அசோகவனத்தை ஏன் நாசம்செய்தான். எந்த உத்தேசங்கொண்டு இராக்ஷசர்களைக் காரணமன்றி, வலுவில் வதம் செய்தான். இவைகளைப் பற்றி என்ன சொல்கிறான் கேள்" என்றான். பிரஹஸ்தன் ஆதரவுடன் அநுமாரைப் பார்த்து, "ஓ வானர! உன்னை யிவ்விடம் அனுப்பினவன் யார்? இராக்ஷச இராஜ சந்நிதானத்தில், உண்மையை ஒளிக்காமல் சொல்லுவாயானால், நான் உன்னை எவ்விதத்திலாவது விடுவிக்கிறேன். நீ பயப்படவேண்டாம் உள்ளதை யுரை," என்று கேட்டான்.

பிரஹஸ்தன் இவ்விதங் கேட்க, தாசரதி பக்தனாகிய மாருதி, திரிலோக கண்டகனாகிய இராவணனைப் பார்த்து, சத்துருவைப் பார்த்தோமென்ற உற்சாகம் அடைந்தவராகி, அடிக்கடி இராமச்சந்திரனைத் தியானம் பண்ணிக்கொண்டு, ஸ்ரீராம மூர்த்தியினுடைய உத்தமமான கலியாண குணங்களை யெடுத்துக் கூறலானார்.

"தேவர்களுக்கும் மற்றுமுள்ள முனிவர்களுக்கும் சத்துருவான ஓ இராவண! கேள், ஸகலபுவன கர்த்தாவாகவும், எல்லோருடைய இருதயவாசியாகவும், விளங்காநின்ற மூர்த்தி யெவரோ அவருடைய பத்தினியை, நாயானது யாகத்திலேற்பட்ட அவிசை யிச்சித்தெடுத்ததுபோல, மாறுவேண்டம் பூண்டு உன் குலம் நாசமடைய அபகரித்து வந்தாயோ, அந்த இராமருடைய தூதன் நான். அந்தப் பிரபு ரிசியமூகமலைக்கு வந்து அக்னி முன்னிலையில் ஸுக்ரீவனுடன் ஸிநேகம் செய்து அவனுடைய பத்தினியை யபகரித்த வாலியை ஒரே பாணத்தால் வதை செய்து ஸுக்ரீவனைக் கிஷ்கிந்தைக்கு அரசனாக நியமித்தார். அந்த வானராதிபன் தன் சைனியங்களுடனும், இராம இலக்ஷ்மணர்களுடனும், பிரஸ்ரவண பருவதத்தில் மிகுந்த கோபத்துடனிருக்கிறார்.

அந்த வானரமஹாராஜன் ஜனக மஹாராஜரிடம் பூமியிலுற்பவித்த ஜானகியைத் தேடுவதற்குப் பத்துத்திசைகளுக்கும் வானர சிரேஷ்டர்களை அனுப்பினார். அந்த வானரர்களுக்குள் நான் ஒருவன். வாயுவின் குமாரன், வானரஜாதியைச் சேர்ந்தவன். பத்மதளம் போன்ற நேத்திரங்களையுடைய ஸீதாதேவியைத் தேடிக்கொண்டு வந்தேன். இலங்கையில் அத்தேவியைக் கண்டேன். இராம பத்தினியாகிய ஸீதையைக் கண்ட சந்தோஷத்தினால் குரங்கினத்தின் குணத்தை அநுசரித்து அசோகவனத்தை யழித்தேன்.

அதன்நிமித்தம் என்னைக் கொல்லுவதற்கு வந்த ஆயுதபாணிகளாகிய இராக்ஷசக்கூட்டங்களை நான் தப்பித்துக்கொள்ளும் நிமித்தம் வதைத்தேன், என்னுடைய சரீரத்தைக் காப்பாற்றிக்கொண்டேன்.

ஓ பிரபுவே! தேகமானது யாவருக்கும் பிரியமுள்ள தல்லவா? பிறகு மேகநாதன் என்னைப் பிரம்மாஸ்திரத்தால் கட்டிக்கொண்டுவந்தான். அந்த அஸ்திரமும் அப்பிரமதேவரிடம் நான் பெற்றிருந்த வரத்தால் என்னிடம் சற்றுநேரந்தங்கிப் பிறகு என்னைவிட்டு விலகிப் போயிற்று. ஆயினும் கட்டுப்பட்டவன்போல உம்மிடம் வைத்த கருணையால் உமக்கு ஹிதமான மார்க்கத்தைப் போதிக்கக் கருதி யிவடம் வந்தேன். ஓ இராவண! விஞ்ஞானத்தால் மாயா கற்பிதமான பிரபஞ்ச உற்பத்தியை விசாரித்தறிந்து, பாபகிருத்தியமான இராக்ஷசகுல விருத்தியை யடியோடு நிவர்த்தித்து, திரேகமெடுத்ததனு லடையக்கூடிய உத்தமமான மோக்ஷகதியை அநுசரித்து, துக்க சாகரமாகிய ஸம்ஸார பந்தத்தில் நின்று விடுதலையடைய நீர் பிரயத்தனிக்கவேண்டும். பகுத்தறிவுடைய இத்தேகம் கிடைப்பது அரிது. இத்தேகம் கிடைத்தது எத்தன்மையுடையது என்றால்:—மாறிமாறி யுண்டாகும் அலைகளை வீசுங்கடலினிடத்துப் போடப்பட்ட நுகத்தடியின் இருகடையிலுமுள்ள நான்கு துவாரங்களில் ஏதாயினும் ஓர் துவாரத்தில், ஒரு துரும்பு தன்னுடைய சரீர உறுப்பில் பட்டால், உடனே தன் கை, கால், முகம், வால் இந்த அவயவாதிகளைத் தனக்குள் ளடக்கிக்கொள்ளும் கூர்மத்தின் (ஆமையின்) கழுத்தானது புகுவது எத்தன்மையோ அத்தன்மையுடையதாகும்.

நீரோ பிரமதேவர் வம்சத்திலுற்பவித்த புலஸ்தியர் குமாரரான விச்ரவசுவின் குமாரர், குபேரனைப் பிராதாவாக வுடையவர், சதுர்வேத பாண்டித்தியமுடையவர், ஆகையினாலே நீர் தேகமே ஆத்மா என்ற பாவனையால் பார்த்தபோதிலும் இராக்ஷசனல்ல. தானே ஆத்மா என்ற பாவனையால் பார்த்தபோதிலும் இராக்ஷசனல்ல. தேகமோ, அதைச் சார்ந்த மனம் முதலிய அந்தக்கரணங்களோ, ஞானேந்திரிய கர்மேந்திரியங்களோ, ஸுகமோ, துக்கமோ இவைகளின் முறைமை யுமக்கில்லை. நன்கு ஆராய்ந்து நோக்கில் நீருமில்லை, இவைகள் உம்முடையனவுமல்ல, நீர் நிர்விகாரி, சரீரம் முதலியவைகளுக்கு ஜீவன் ஸ்வாதீனனாகக் காணப்படுகிறது, அஞ்ஞானமே தவிரவேறல்ல. இது ஸத்தியம், உமக்கு விகாரமில்லை, விகாரமடையக் காரணமுமில்லை. ஆகாயமானது எங்கும் வியா

பித்திருந்தாலும், எவ்விதம் பற்றுதலடையாம லிருக்கிறதோ அவ்விதம் நீர் தேகத்தை யநுசரித்திருந்தாலும், புளியம் பழத்தின் ஓடு போல ஸூக்ஷ்மத்திலிருந்து மற்றவைகளிற் பற்றுதலற்றவரா யிருக்கிறீர். தேகமெடுத்தவன், பிராணன், இந்திரியம், சரீரம் இவைகள்தான்; தான் என்று எண்ணுவானாகில், யாவற்றுபந்தத்தையு மடைவான். எவன் ஒருவன் நான் சின்மாத்திரன், ஆநந்த ஸ்வரூபன் என்று எண்ணுகிறானோ அவன் ஸம்ஸார பந்தத்தில் நின்று விடுபடுவான். தேகம் ஆத்மாவல்ல, பஞ்சபூத விகாரத்தால் உண்டாகக்கூடியது, பிராணனும் ஆத்மாவல்ல, வாயுவின் அம்சம், மனமும் ஆத்மாவல்ல, ஆகாசத்தின் அம்சமே, இவைகளெல்லாம் ஆத்மாவல்ல. ஆத்மா சச்சிதாநந்த மயன். விகாரமில்லாதவன். தேகம் முதலியவைகளுக்கு வேறு பட்டவன். அவனே ஈஸ்வரன். நிரஞ்சனன். உபாதியில் நின்று விடுபடுகிறவன். இவ்வாறு உம்முடைய ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு அறிந்து கொள்ளும். நீர் துர்மார்க்கத்தை விடுத்து நன்மார்த்திற் பிரவேசித்து முத்தியையடைய விரும்புவீராக. ஓ அறிவிற் சிறந்த இராவணா! நான் உம்மிடம் வைத்த அன்பினால் நீர் நடைத்தேறும் வண்ணம் மோக்ஷ ஸாதனத்தை ஸாவதானமாகச் கூறுகிறேன் கேளும்: ஒரு ஜீவன் முத்தியை யடைவதற்கு நான்கு மார்க்கங்களேற்பட் டிருக்கின்றன. அவை யாவன (1) தாதமார்க்கமான சரியை (2) சற்புத்திரமார்க்கமான கிரியை (3) சகமார்க்கமான யோகம். (4) சன்மார்க்கமான ஞானம். இவைகளின் பலன்கள் முறையே, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பவைகளே. இவைகளில் முதல் மூன்றும் அபரமுக்திகள். பிந்திக்கூறிய சாயுச்சிய பதவி யொன்றே மேலானது, அழியக்கூடாதது, ஜனன மரணமில்லாமற் போக்குவது, அதுவே பரமுக்தி. ஆகையால் அதையடைய முயல்வதே தேகமெடுத்ததின் பிரயோஜனம். அதை யடைவதற்கு ஒருவன், [புண்ணியம், பாவம், மிச்ரம் (நிஷ்காமபுண்ணியம்) எனக் கருமம் மூன்று வகைப்படும். அதிலும், உக்ருஷ்டம், மத்திமம், சாமானியம் என ஒவ்வொன்றுக்கும் மூன்றுவிதம் உண்டு. புண்ணிய உக்ருஷ்டபலம்-இரண்ய கருப்பாதி சரீரப் பிராப்தி, புண்ணிய மத்திமபலம்-தேவேந்திராதி சரீரப்பிராப்தி, புண்ணிய சாமானியபலம்-யக்ஷ, இராக்ஷச, கின்னர, கிம்புருட, பிசாசாதி சரீரப்பிராப்தி. பாப உக்ருஷ்டபலம் - பிராணிகளுக்குத் துக்கத்தை யுண்டாக்கப்பட்ட தேள், பாம்பு, கொசு, மூசு, புலி, காடி முதலிய சரீரப் பிராப்தி.

பாபமத்திமபலம்-புளியமரம், மாமரம், பலாமரம், தென்னைமரம், எருமை, பருந்து முதலிய சரீரப்பிராப்தி. பாபசாமானியபலம்-பசு, யானை, குதிரை, அரசு, துளசி, முதலிய சரீரப் பிராப்தி] மிச்ர உக்ருஷ்ட பலமாகிய நிஷ்காம புண்ணிய பலத்தால் புண்ணிய ஜென்மமெடுத்து, சித்தசுத்தி யடைந்து * சரியை மார்க்கத்தை யநுஷ்டித்து அதின் பலனை யநுபவித்து, பிறகு புண்ணிய ஜென்மமெடுத்து * கிரியா மார்க்கத்தை யநுஷ்டித்துப் பிறகு, * யோகமார்க்கத்தைப் பொருந்திக் கடைசியாக * ஞானமார்க்கத்தைப் பெற்று, அதிலும், ஞானத்தில் சரியை * கேட்டல்; ஞானத்தில் கிரியை * சிந்தித்தல் ; ஞானத்தில் யோகம் * தெளிதல்; ஞானத்தில் ஞானம் * நிஷ்டை என்னும் நான்குமுறைகளையும் அப்பியசிக்க வேண்டும். இதை யநுஷ்டித்தால் முக்தியை யடையலாம். ஆகையால் நீர் இப்போது விஷ்ணுவினிடம் பக்தி செய்யவேண்டும். அந்த பக்தியைச் செய்வீரானால் மேற்கண்ட ஞானமார்க்கத்தை யடைந்து முக்தியை (பரமபதத்தை) அடையலாம். இப்போது பிரசன்னமாக வந்திருக்கும் இராமமூர்த்தி, ஹரி, இலக்ஷ்மிகாந்தன், புருஷோத்தமன், பிரகிருதிக்குப்பரன், பிரபு. ஆகையால் ஓ இராவணா! நீர் கொண்டிருக்கும் சத்துரு பாவனையை ஒழித்து மித்துருத் தன்மையை யடைந்து, இராமச்சந்திரரிடம் ஸீதையைக் கொண்டுபோய் விடுத்து, உன் புத்திரமித்திரர்களுடன் அவர் பாதார விந்தங்களில் நமஸ்காரம் செய்து அவரை ஸ்தோத்தரித்து வழிபடுவீரானால் சம்சார பந்தத்தில் நின்றுவிடுபட்டு முத்தியையடையும் ஞானமார்க்கத்தை யடைவீர்.

---

**சரியை.**—தேவாலயங்களிற் சென்று திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கிடுதல், நந்தவனம் வைத்தல், புஷ்பமெடுத்து மாலைகட்டி ஈஸ்வரனுக்குச் சாத்தல், வேதாகம புராண இதிகாசங்களைப் பாராயணஞ் செய்தல், அடியார்களை வணங்குதல், ஆலயப்பிரதிஷ்டை செய்தல் கங்கை முதலிய புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தல், ஆலயப் பிரதக்ஷணம் செய்தல் முதலியனவாம்.

**கிரியை.**— சந்தனம், புஷ்பம், தூபம், தீபம, நைவேத்தியம் இவைகளைச் சேகரித்துக்கொண்டு, தயிலம், பால், தயிர், இளநீர் முதலிய அபிஷேகத் திரவியங்களையுங்கூட்டி, மூர்த்தியை மந்திர பூர்வமாக ஸ்தாபித்து, அபிஷேகம் பூஜை நைவேத்தியம் செய்து ஸ்தோத்தரித்து நித்தமும் ஓமாக்கினி காரியமும் செய்தலாம்.

**யோகம்.**—உச்சுவாசம், நிச்சுவாசம் இரண்டையு மடக்கி, சுழுமுனை மார்க்கத்தில் பிராணவாயுவை நிறுத்தி விஷயங்களில் மனதைச் செல்லவொட்டாமற்றடுத்து, ஆறு ஆதாரங்களின் கிரமத்தை யுணர்ந்து, அதன் தேவதைகளைத் தியானித்து மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திரமளவும், அசபையுடன் சென்று, அப்பிரமரந்திரத்துள்ள தாமரை மொக்கை அலரப்பண்ணி, அதிலுள்ள சந்திர மண்டலத்தை மூலாக்னியினால் இளகச்செய்து, அதன் வழியாக ஒழுகும் அமிர்தத்தைத் தேகம் முழுதும் நிரப்பி, தன்னை ஜோதிமயமாகத் தியானித்திருத்தலாம்.

**ஞானம்**—சகல கலைஞானங்களும், புராணங்களும், வேதாகமங்களிலுள்ள கருமகாண்டங்களும், மற்றச் சாஸ்திரங்களும், ஏனைச் சமய நூல்கள் பலவும் ஆராய்ந்து, பலவழிப்படுகின்ற பொருள் முழுதுங் கீழெனக்கண்டு கழித்து, மேலான பதி-பசு-பாசமாகிய மூன்று பொருள்களில், பதிப்பொருள் மற்றப் பசு பாசங்கட்கு மேலானதால், அதைச் சொரூப லக்ஷணத்தில் வைத்துக் கூறும் ஞானகாண்டத்தை ஓதிக் கேட்டுச் சிந்தித்து, ஞாதுரு-ஞானம் ஞேயம் (காண்பான்-காக்ஷி-காணப்படும் பொருள்) ஆகிய பிரிவில்லாமல், அத்துவிதமாய், அகண்டகார நித்திய வியாபகமாய், சத்து,-சித்து-ஆனந்தமயமாய் நிற்கின்ற பதிப்பொருளோடு கலக்குந் தன்மையை யநுஷ்டித்தலாம்.

**கேட்டல்**—சூரிய சந்நிதானத்தில், சூரிய காந்தக் கல்லினிடம் அக்னி தானே தோன்றுவதுபோல, அருளை திருமேனியாகக் கொண்டெழுந்தருளி வந்த ஞானாசிரியரிடம் சென்று கேட்க, அவ்வாசிரியரின் சந்நிதி மகிமையினாலே, அம்மாணவனிடம் ஞானத்திற் சரியையாகிய கேட்டலறிவு விளங்கித் தோன்றும். அது விளங்கவே முதல்வனாகிய பதியும் நிருவிகற்பமாய்த் தோன்றும். அப்பதியினுள்ளே தானாகிய பசுவும் நிருவிகற்பமாய்த் தோன்றும், அப்பசுவாகிய தன்னுள்ளே பிரபஞ்சவடிவமாகிய பாசமும் நிருவிகற்பமாய்த் தோன்றும். அப்போது முதல்வன், அணுவோர் அண்டமாக நேரியனாகவும், அண்டம் ஓர் அணுவாகப் பரியனாகவும் நிற்பதால், அம்முதல்வன் உயிர்க்குயிராதலும், எங்கும் நிறைந்து நிற்றலும், அவைகள் ஒன்றினுக்குள் ஒன்று வியாபக வியாப்பியமாய் நிற்கும் நிலைமையாவும் நிருவிகற்பமாய் விளங்கும். இதுவே கேட்டலநுபவம்

**சிந்தித்தல்.**—முதல்வன் தன்னுயிர்க்குயிராய் நிற்குந்தன்மையை யறிந்த சீடன், ஆசிரியனுரைத்த நூற் பொருளில் மலைவற்று, அம்முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நிஷ்டை கூடுதற்கு விருப்பமுண்டாகி, சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு ஓடும்பொன்னும் ஒக்கவே நோக்குபவனாய், மற்ற எதிலும் பற்றுதல் அற்றவனாய், ஜீவன் முக்தரோடொத்து, பேரறிவாகிய முதல்வனும் சிற்றறிவாகிய தானும் ஆதித்தன் ஒளியுங்கண்ணொளியும்போல அத்துவிதமாய் நிற்றலால், தான் என்னும் ஓர் பொருள் உளதென அறியாது, முதல்வன் தோற்றம் ஒன்றையே காணப்பெற்று, முதல்வன் சீடனையும் சீடன் முதல்வனையும் விடாமல் முதல்வனோடு உடந்தையாய் ஒக்க உறைந்து, நிருவிகற்பம்,

ஓ சுக்ரீவ! நீர் இவ்விதம் செய்யாவிடில், நீர் செய்யும் பாதகச் செயல், உம்முடைய ஜீவனை நரகத்துக் கேகும்படிச் செய்யும்; ஒருநாளும் அந்நரகத்தில் நின்று விடுதலை யடையமாட்டீர்” என்றார்.

இராவணன் அனுமார் கூறிய அமிர்தபானத்துக்குச் சமானமாகிய வேதாந்தசார மொழிகளைக் கேட்டு (அந்தரங்கத்தில் இவையனைத்துந் தெரிந்தவனாயினும்) கோபமடைந்து தன்னிருபது கண்களும் கடைவரையிற் சிவந்தனவாகி, மாருதியைக் கடிந்து நோக்கி ‘ஏ குரங்கே! எனக்கு முன் ஏன் பிதற்றுகிறாய், மிக்க தைரியமுடையவன் போலக் காண்கிறாய் நீ புத்தி கெட்டவன், வானரங்களுக்குள் அதமன். அந்த இராமன் யார்? வனத்தில் சஞ்சரிக்கக் கூடியவன் எப்பேர்ப்பட்டவனா யிருக்கவேண்டும். அவனையும் அவன் தம்பி

---

சவிகற்ப மென்னும் இரண்டிற்கும் நடுவே நிற்பன். இது சிந்தித்தல் அநுபவம்.

தெளிதல்—முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நடுநிலைமையில் நிற்கும் சீடன், ஆசிரியன் திருவருளால், அறியாமையும், அறிதலுமாகிய இருவழியும் நீங்கித் தன்னறிவினிடத்தே, கேட்டலறிவினைக் கேட்கும் முறையிற்கேட்டு, சிந்திக்கு முறையிற் சிந்தித்து, அன்பு செய்து அந்தக் கரணங்களிற் சேராது அடங்கி நிற்கப் பெறுவானாகில், தன்னுடன் பிரிதலில்லாத முதல்வன், அவனுக்கு,தான் கேட்டகாலத்துப் பொருட்டன்மை பற்றிப் பேதமாய்த்தோன்றி, சிந்தித்தற்காலத்து உலகபேதம் அனைத்தினுங் கலந்திருப்பதுபற்றி அபேதமாய்த் தோன்றி, தெளிந்த காலத்து இவ்விரண்டுமின்றி, எவற்றினுங் கலந்து நிற்கினும் ஒன்றிலும் பற்றிலனாய்த் தோன்றி நிராதாரனாய் நிற்பன். இது தெளிதலின் அநுபவம்,

நிஷ்டை—தெளிதல் அநுபவம் பெற்றவர், விபாபகமாகிய உயிர், அவ்வியல்பு இழந்து, துன்பம் அநுபவிப்பதற்குக் காரணமாகிய பாவமும், இன்பம் அநுபவிப்பதற்குக் காரணமாகிய புண்ணியமுந் தனக்குத் தளையாதலின் அவ்விரண்டினையும், ஞானநூல் கேட்டல், சிந்தித்தல் இவைகளின் பயனாய் ஏற்படுந் தெளிதலென்னும் அரத்தால் அறுத்து, பூமி, நரகம், ஸொர்க்கம் இவைகளிற் செல்லுதலுமற்று, தன்னுடைய கரணங்கள் வசப்படுதலின்றி, முற்கூறியவாறு தோன்றிய முதல்வனது வியாபகத்தில் தலைப்பட்டு, சூரியன் எவ்விடத்து உதித்தாலும் அதனால் தனக்காவதோற் பயனில்லாமையைத் தெரிந்தவராய் ஒரு விதத்திலுங் குறைவில்லாமையைப் பெற்று இம்மையிலேயே ஜீவன் முத்தராகி, மாசுநீங்கிய விடத்து, ஆடையினது வெண்மை, அவ்வாடை முழுதும் விளங்கினாற்போல, இவ்வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையில், தமது வியாபகம் எங்கும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோடு ஒத்து நிற்பர். இதுவே, முக்தியடைவதற்குரிய நிஷ்டை நிலை.

இலக்ஷ்மணனையும் அவனோடு சிநேகங் கொண்டிருக்கும் சுக்கிரீவனை
யும் வானர சைனியங்களையும் நான் வதை செய்கிறேன். உன்னை
யிப்போது முதற்கொன்று பிறகு ஜானகியையுங் கொல்கிறேன்.”
என்றான்.

இவ்விதம் தசக்கிரீவன் கூறியதைக் கேட்ட மாருதி, கடுஞ்
சினமுற்று, இராவணனைப் பார்த்து, “ஓ அதம! கோடிப்பேர் உன்னைப்
போன்றவர்களிருந்தாலும் எனக்குச் சமமாகமாட்டார்கள். நான்
இராமருடைய தாஸன், மேலும் அபாரமான பராக்கிரமமுடையவன்.
என் முன் ஏன் வீணான வார்த்தைகள்பேசிக் குதிக்கிறாய்” என்றார்.

தசானனன், அனுமாருடைய வார்த்தையைக்கேட்டுக் கோபி
த்துப் பக்கத்தில் நின்ற அரக்கர்களைப்பார்த்து, “ஓ வீரர்களே!
இந்தக் குரங்கைக் கண்டதுண்டமாகத் துண்டித்து வெட்டுங்கள்.
புத்திரர்கள் மித்திரர்கள் பந்து ஜனங்கள் யாவரும் வேடிக்கைபார்க்
கட்டும்” என்றான்.

இதனையறிந்த அங்கிருந்த விபீஷணர் அனுமாரைக் கொல்
வதற்கு எத்தனித்த இராக்ஷசர்களைத்தடுத்து, அரக்கர்களுடைய
தலைவனைப்பார்த்து, “ஓ அரசனே! பராக்கிரமமுடைய வீரர்கள்,
ஒருவரிடமிருந்து வந்த தூதனை வதம்செய்ய மாட்டார்கள். அதி
வீரராகிய நீர் தூதனைக் கொல்ல உத்தரவிடுவது தகுதியற்ற காரியம்.
ஆகையால் அதைத் தடுக்க வேண்டும். மேலும இந்தத் தூதனாகிய
வானரன் மரணமடைந்தால், இராமரிடம் இங்குநடந்த விஷயத்தைத்
தெரிவிப்பவன் எவன்? இராமரோ யுத்தத்துக்குத் தயாராயிருக்கிறார்.
இப்போது இந்த வானரத்துக்குத் தகுதியானதும், வதைக்குச் சம
மானதுமாகிய வேறு தண்டனை செய்ய யோசனை செய்யுங்கள். சுக்கி
ரீவனுடைய மந்திரியாகிய இந்த வானரன் செல்லட்டும். இவன்
போய்த் தெரியப்படுத்தினதைத் தெரிந்துகொண்ட அந்த இராமர்
வானர சைனியங்களுடன் இவ்விடம் வருவார். அப்போது அவர்
களுடன் யுத்தம் செய்து அவர்களை வெளியில் வெல்லலாம்” என்றார்.

இராவணன், விபீஷணர் கூறிய வார்த்தையைக் கேட்டுச் சற்று
லோசித்து, “ஓ இராக்ஷசர்களே! வானரங்களுக்குப் புச்சம்
(வால்) மிகவும் கௌரவமுள்ளது. ஆகையால் அந்தவாலில், துணி
களைச் சுற்றிப் பந்தமாக்கி யதில் தீயைக் கொளுத்தி நம்முடைய
நகரின் நான்கு பக்கங்களிலும் இழுத்துக் கொண்டுபோய் இவனை

அவமானப் படுத்திப் பின்பு விட்டு விடுங்கள். இவனைச்சார்ந்த வானர சிரேஷ்டர்கள் யாவரும் பார்க்கட்டும்" என்று கூறினான்.

இராக்ஷஸவீரர்கள், அவ்விதமே யென்று கூறி, அப்பட்டணத்திலுள்ள சணல்நார்க்கயிறுகளாலும், பழந்துணிகளாலும், மற்றுமுள்ளவைகளாலும், மாருதியின் வாலின் நுனியில் சுற்றித் தயிலத்தில் நனைத்துத் தீயை யிட்டுக் கொளுத்தினார்கள். பிறகு அவ்வனுமானைக் கயிற்றினால் கட்டிப்பிடித்துக் கொண்டு, இதோ ஒரு சாரணன் வருகிறான் பாருங்கள் என்று நான்கு பக்கத்துத் தெருக்களையும் சுற்றிக்கொண்டு போனார்கள். தம்பட்டம் முதலிய வாத்தியங்களை அடித்தார்கள். ஆஞ்சனேயனை அவமதிப்பான வார்த்தைகள் பேசித் திட்டினார்கள், அடித்தார்கள். வாயு குமாரனும் ஏதோ அவர்கள் செய்ய வேண்டியதை யெல்லாம் செய்யட்டும் என்று பொறுத்திருந்தார். மேலக்கோட்டை வாசலுக் கருகிற் சென்றதும், அனுமார் ஸூக்ஷ்ம வடிவத்தை யெடுத்துத் தன் கட்டுகளை விடுவித்துக்கொண்டு, மறுபடியும் பருவதத்துக்குச் சமமான ஆகிருதியோடு விஸ்வரூபத்தை யடைந்து அந்த மேலக்கோட்டை வாசல் கோபுரத்தின் மீது தாவித் தன் வாலிலிட்ட தீயானது ஊழித்தீயெனப் பிரகாசிக்க நின்றார். அக்கினி பகவான், வாயு பகவானுக்குச் சிநேகிதரானதால் வாயுபகவான் குமாரன் அனுமாரிடத்தில் பக்ஷம் வைத்து அவரை அதிக ஹிம்சை செய்யாமலிருந்தார். தீயிட்டதை யறிந்த ஸீதாதேவி அக்கினிபகவானை நோக்கி இராமதூதனாகிய மாருதியை ஹிம்ஸிக்காதிருக்கும்படி வேண்டினாள். அந்தத் தேவியின் வேண்டுகோளுக் கிணங்கித் தென் கீழ்த்திசையோனும் மாருதியின் வாலில் குளிர்ந்த ஜலம் போலிருந்தார் பிறகு கோபுரத்தின்மேல் நின்ற அனுமார் அதிலிருந்த ஒரு இரும்புத்தூணைக் கிரகித்துக்கொண்டு அங்கிருந்த கோட்டை வாசற் காவலாளர்களை அத்தூணால் வதைத்து, அதிலிருந்து மற்றொரு கிரகத்துக்கும் அக்கிரகத்திலிருந்து வேறொரு மாளிகைக்குமாகப் பாய்ந்து, தனது நீண்ட வாலில் எரியும் நெருப்பால், மாடமாளிகை, கூட கோபுரங்களோடு கூடிய அந்த இலங்காபுரிப்பட்டணம் முழுமையுங் கரியாகச்சுட்டுக் கொளுத்தினார். அந்நகரத்தில் வசிக்கும் இராக்ஷச ஸ்திரீகள், குழந்தைகள், இராக்ஷசர்கள் யாவரும், ஓ நாத! ஓ சகோதர! ஓ ஆபத் சகாயவென்று அனுமாரை நோக்கிக் கத்தினார்கள். விபீஷணர் வசிக்கும் கிரகந் தவிர நகரத்திலுள்ள எல்லாக் கிரகங்களும்,

உப்பரிகைகளும் மாடங்களும், கூடங்களும், சாலைகளும் வெந்து சாம்பலாயின. பிறகு வாயு குமாரனான மாருதி உபாக்கினம்பி சமுத்திரத்தில் குதித்துத் தன் வாலை நனைத்து சிரமபரிகாரமடைந்தார். ஸ்ரீராமருடைய நாமத்தை ஸ்மாணை செய்தார். ஆன்மகோடிகள் எந்தப் பிரபுவினுடைய நாமத்தை ஸ்மாணை செய்து, * ஆதியாத்மீகம், ஆதிபௌதீகம், ஆதிதெய்வீகம், என்ற மூன்று தாபாக்கினியையுங் கடக்கிறார்களோ அந்தப் பிரபுவாகிய ஸ்ரீராமபிரான் நாமத்தைச் சதா தியானம் செய்கிறவரும், அந்த ராமதூதருமாகிய இந்த அநுமாருக்கு இப் பிராகிருதமான அழியத்தக்கதான நெருப்பு எவ்விதந் தாபத்தை யுண்டாக்கக் கூடும், அநுமார் ஸ்வஸ்தமான மனமுடையவராய் விளங்கினார்.

## 5-வது சருக்கம்.

பிறகு அநுமார் அங்கிருந்து புறப்பட்டு ஸீதாதேவியிடம் வந்து, அவளை, மூன்று தரம் வலம்வந்து நமஸ்காரம்செய்து, "ஓ தேவி! நான் ஸ்ரீராமரிடம் போகவிருக்கிறேன். எனக்கு உத்தரவு கொடுக்க வேண்டும், நான் சென்றவுடன் இரகுநந்தனர் சீக்கிரமாகத் தம்பி இலக்ஷ்மணனுடனும், ஸுக்ரீவனுடனும் கோடிக்கணக்கான வானரவீரர்களுடனும் தங்களைப்பார்க்க வருவார். அவர்களைத் தாங்கள் காணப் போகிறீர்கள். தங்களுக்கு மங்கள முண்டாக வேண்டும்," என்று கூறினார்.

இதைக்கேட்ட ஸீதை துயரத்தால் வருத்தமடைந்து மாருதியை நோக்கி, "ஓ ஆஞ்சனேய! உம்முடைய வரவானது என்னுடைய துக்கத்தை மாற்றியிருந்தது. இப்போது நீர் செல்கிறீர். இனி

* ஆதியாத்மீகம் —சரீரத்தை யநுஷ்டித்துக் கொண்டு வரப்பட்ட சீதசுரம், அதிசுரம், க்ஷயரோகம், குன்மம், சூலை முதலான வியாதிகளும், மக்கள், பேய்கள், இராக்ஷசர்கள், திருடர்கள் முதலானவர்களா லுண்டாகுந் துக்கங்களுமாம்.

* ஆதி பௌதீகம்.—ஜலப்பிரயாகம், வெய்யில், மழை, காற்று, இடி கோபுரம், மண்டபம் இவை முதலிய அசேதனங்களா லுண்டாகப்பட்ட துக்கங்களாம்

* ஆதி தெய்வீகம்.—கருப்பந் தரித்தல், வளர்தல், நரை, திரை, அஞ்ஞானம், துர்மரணம், ஜனனம், மரண முதலிய துக்கங்களாம்

மேல் இராமருடைய விருத்தாந்தத்தை எவர் எனக்குத் தெரிவிக்கப் போகிறார்கள். எப்படி அப்பிரபுவினுடைய வர்த்தமானத்தைக் கேளாது என்னுயிரை வகித்திருப்பேன். என் செய்வேன்" என்றாள்.

மாருதி, ஸ்ரீராமரிடத்தில் கண்ணும் கருத்துமாயுள்ள ஜனக ராஜபுத்திரியாகிய ஸீதாதேவியை நோக்கி, "ஓ அறிவிற்சிறந்த தாயே! அப்படி யுங்களுக்கு மனத்தாழ் விருக்கும் பக்ஷத்தில், இஷ்டமிருந்தால் என்னுடைய தோளின் மீதேறிக் கொள்ளுங்கள். ஓர் க்ஷணப் பொழுதில் இலக்ஷ்மணருடன் வீற்றிருக்கும் இராக்ஷச கண்டகராகிய இரகுவீரரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன்" என்று, தனக்கிருக்கும் பக்தியால் வணக்கத்துடன் கூறினார்.

ஸீதா பிராட்டி, ஸ்ரீராமதாஸரான வாயு குமாரர் விசுவாசத்துடனும் பக்தியுடனும் பகர்ந்த வார்த்தையைக் கேட்டு அகங்குளிர்ந்து மனந்தெளிந்து, அநுமானைப் பார்த்து, "ஓ புத்தியிற் சிறந்த மாருதி! நீர் கூறியது மெய்யே. ஆயினும், அது ஸ்ரீராமபிரானுடைய புகழ்ச்சிக்கிழிவான காரியம். ஆகையால் இரகுவீரர் கரையற்ற சமுத்திரத்தை வற்றச்செய்தோ, அல்லது சரக்கூடுகட்டியோ ஏராளமான வானர ஸைனியங்களுடன் இவ்விடம் வந்து மஹா பாதகனாகிய தசமுகனைப் புத்திர மித்திரர்களுடன் யுத்தத்தில் வதைத்து, என்னை அழைத்துக் கொள்வாராகில் அது அப்பிரபுவினுடைய கௌரவத்துக்கும், வீரச்செய்கைக்கும் ஏற்றகீர்த்தியையுண்டுபண்ணும். ஆகையால் நீர் சென்று இரகுநாதருடைய புகழுக்கே யுரித்தான காரியத்தைச் செய்ய முயற்சி பண்ணும். நான் எப்படியாயினும் என் பிராணனை அதுவரையிலும் வகித்திருக்கிறேன். நீர் விடை பெற்றுக் கொள்ளலாம்" என்றாள்.

மஹா தீரனாகிய வாயு குமாரர் ஸீதாதேவியைச் சுற்றி மும்முறை வலம் வந்து நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு, கடலைத் தாண்டி அக்கரைசேரப் பருவதத்தின் சிகரஞ்சென்று, அதில்நின்று உதைந்து ஆகாயமார்க்கத்தில் கிளம்பிச் சென்றார். அப்போது ஐம்பது யோஜனை உயரமுள்ள அப்பருவதம் பூமி மட்டத்துக்குச் சரியாய்த் தரைக்குள்ளமுழ்ந்திற்று. அதிவேகத்துடனும் கம்பீரத்துடனும் செல்லும் வாயு குமாரர் பாதிதூரம் செல்லும்போதே தனக்கு உண்டான சந்தோஷத்தினால் இடி முழக்கம்போல ஆர்ப்பரித்தார். அந்த ஆரவாரத்தைக் கேட்ட வானர சிரேஷ்டர்கள் யாவரும்

இராமதூதராகிய அஞ்ஜனை குமாரர் வந்து சேர்ந்தா ரென்றறிந்து, அடங்காத மகிழ்ச்சியோடு பெருங்கூச்சலிட்டுக் கரகோஷம் செய்து குதூகலித்தனர். அனுமார் போட்ட பேரொலியைக் கொண்டே காரியசித்தியோடு தான் வந்தாரென்று தெரிந்துகொண்டவர்களாய், அதில் ஒருவர் ஏ வானரவீரர்களே அனுமாரைப் பாருங்கள் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டே வந்திருக்கிறார் என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஆஞ்சநேயர் அப்பருவத சிகரத்தின் மத்தியி லிறங்கினார்.

அங்கிருந்த வானர சிரேஷ்டர்க ளெல்லோரும் ஒருங்குகூடி அனுமாரிடம் வந்து, போனகாரியம் என்னவென்று வினவ, காற்றின் மைந்தன், நான் இலங்கையிற் சென்று அசோகவனத்தி லிருக்கும் தாயாகிய ஸீதாதேவியைக் கண்டேன். அந்த அசோகவனத்தையும், இலங்காபுரிப் பட்டணத்தையும் நாசஞ்செய்தேன். இராக்ஷசகுல காலனாகிய தசமுக இராவணனையுங் கண்டு சம்பாஷித்தேன். பிறகு இவ்விடம் வந்தேன். இலக்ஷ்மணர், ஸுக்ரீவர் இவர்களுடனிருக்கும் ஸ்ரீராமச்சந்திரரிடம் இப்போதே செல்வோம் புறப்படுங்கள்,” என்று பதில் கூறினார்.

உடனே வானர வீரர்கள் யாவரும் சந்தோஷக்கடலில் முழுகி அனுமாரைக் கட்டியணைத்து முத்தமிட்டு வாலைத்தூக்கி உற்சாகத்துடன் கூத்தாடினார்கள். பிறகு இரகுநந்தனர் தூதராகிய மாருதியும் மற்ற வானர சிரேஷ்டர்களும் ஏகோபித்துப் பிரயாணப்பட்டு, ஸ்ரீராமர் வசிக்கும் பிரஸ்ரவண பருவதத்தை நாடிச் சென்றார்கள். செல்லும் போது வானரவீரர்கள் மார்க்கத்திலுள்ள சிருங்காரமானதும், பலவிதக் கனிவர்க்கங்கள் நிறைந்ததும், தேன் கூடுகள் முதலிய மதுவினங்களமைந்ததும், ஸுக்ரீவரால் மதிக்கப்பெற்றதும், அநேக வானரர்களால் காக்கப்பட்டதுமாகிய மதுவனத்தைக்கண்டு, யுவராஜனாகிய அங்கதனை நோக்கி “ஓ *கோகுல காவல! சிறந்தமதியுடைய பால!! நாங்கள் ஸ்ரீராம பத்தினியாகிய ஸீதா தேவியைத் தேடப் புறப்பட்டு, வனம் பர்வதம் அடர்ந்த பிரதேசங்களெங்குஞ் சுற்றித் தேடி பசியால் வாடித் தேகங்களைத்துக் களைமுடிப்பரிதவிக்கின்றோம். ஆகையால் நாங்கள் இந்த வனத்திற் சென்று, ருசிகரமான கனிகளைப் புசிக்கவும், அமுதம் போன்ற மதுவைப் பானம் செய்யவும், புத்திசாலியாகிய தாங்கள் உத்தரவு கொடுக்கவேண்டும். தன்பால்

* கோகுலம்—குரங்கு

அன்பில் மிகுந்த தம்பியுடன் வசிக்கும் ஸ்ரீ ராமச்சந்திரனை நாங்கள் சந்தோஷத்துடனும், தைரியத்துடனும் போய்ப் பார்க்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

இதைக் கேட்ட அங்கதன், "ஓ வானர வீரர்களே! நீங்கள் பசியால் வருந்தி யிளைத்திருப்பது மெய்யே. ஆயினுங் காரியத்தை முடித்தவர் மாருதியானபடியால், அவருடைய மேன்மையையொட்டி நீங்களும் அவ்வனத்திற் சென்று கனிவர்க்கங்களையும், மதுவினங்களையும் புசியுங்கள் பானம் பண்ணுங்கள்" என்று விடைபகர்ந்தான். அதைக்கேட்ட வானரவீரர்கள் வனத்திற் பிரவேசித்து மதுவைப் பானம் செய்ய எத்தனித்தார்கள். அப்பொழுது அந்த வனத்துக்குக் காவலாளனாய் ஏற்பட்டிருந்த ஸுக்ரீவ மஹாராஜன் அம்மானாகிய ததிமுகனால் ஏற்படுத்தப்பட்ட காவலாளிகள், வானரவீரர்களைத் தடுக்க, அவர்களை அனாதரவு செய்து அடித்துத் துரத்திவிட்டு வானர வீரர்கள் கனியைப் புசித்தும், மதுவைக் குடித்தும் களிப்படைந்தார்கள். இதை யறிந்த ததிமுகன் கோபங்கொண்டு, தன்னிடம் வந்து தெரிவித்த மதுவனக் காவலர்களுடன் வானர மஹாராஜனாகிய ஸுக்ரீவனிடம் சென்று, "ஓ கொற்றவ! நீண்டகாலமாக வெகு பிரயாசத்துடன் இரக்ஷிக்கப்பட்டு வருகின்ற மதுவனத்தை, இப்பொழுது அங்கதனும் அனுமானுங்கூடி வானர வீரர்களை யேவி யழித்துவிட்டார்கள்," என்று தெரிவித்தான்

ததிமுகன் கூறியதைக் கேட்ட வானரமன்னன் சந்தோஷமடைந்து "ஓ ததிமுக! வாயு குமாரராகிய மாருதி ஸீதாதேவியைத் தேடிச்சென்றவர், அத்தேவியைப் பார்த்து வந்திருக்கிறார். அந்த சந்தோஷத்தினால் தன்னுடன் கூடவந்த வானர வீரர்களுக்கு மதுவனத்தில் சென்று சிரமபரிகாரம் செய்துகொள்ள அநுமதி கொடுத்திருக்கிறார். இல்லாவிடில் என்னுடைய மதுவனத்துக்குள் புகுவதற்கு அநுமதி கொடுக்கக் காரணமில்லை. அந்த வானரர்களுக்குள் அனுமார் ஒருவர் தான் காரியத்தை முடித்து வந்தவர் சந்தேகமில்லை. இத்தகைய சமயத்தில் அவர்கள் மதுவனத்திற் பிரவேசித்ததைக் குற்றமென்று நாம் கொள்வது தகுதியற்றது" என்று கூறினார்.

இரகுநந்தனர், வானரகாவலனாகிய ஸுக்ரீவன் ததிமுகனிடம் கூறிய வார்த்தையைக் கேட்டு, சந்தேகங்கொண்டு ஸுக்ரீவனைப்

பார்த்து ஓ வானர அரசனே! ஸீதை சம்பந்தமான சம்பாஷணை செய்கிறது என்ன? எதைப்பற்றிப் பேசுகிறீர் என்று கேட்டார்.

ஸுக்ரீவன், தசரத குமாரரைப் பார்த்து "ஓ இராகவ! ஜனக புத்திரியாகிய ஸீதாதேவியை, அநுமார் முதலிய வீரர்கள் பார்த்து வந்திருக்கிறார்கள். ஆகையால் மேற்படி வீரர்கள் மதுவனத்திற் பிரவேசித்து, கனிவர்க்கங்களைப் புசித்து மதுவைக் குடித்துக் குதூகலங் கொண்டாடியிருக்கிறார்கள். அவ்வனத்திற் காவலிருந்த காவற்காரரையும் மிரட்டியிருக்கிறார்கள். ஓ தேவ! நாடிச்சென்ற தங்கள் காரியம் சித்திபெறாவிடில், அவ்வீரர்கள் இவ்வளவு சந்தோஷத்துடன் மதுவனத்திற் புகுந்து எக்களிப்புக் கொண்டாடமாட்டார்கள். ஆகையால் தேவியைத் தெரிசித்தே வந்திருக்கிறார்களென்பது நிச்சயம்" என்று கூறினார்.

பிறகு, ஸுக்ரீவ மஹாராஜன் மதுவனங்காக்கும் வீரர்களை நோக்கி, "ஓ காவலாளர்களே! நீங்கள் பயப்படவேண்டாம், இப்போதே க்ஷணநேரத்தில் வனஞ்சென்று அங்கு தங்கியிருக்கும் அங்கதன் முதலிய வானர சிரேஷ்டர்களை யிங்கழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டார்.

அந்த அரசன் கட்டளையைச் சிரசில் வகித்துக் காவலாளர்கள், காற்றிலுங் கடுமையாகச் சென்று, மதுவனத்தில் வசிக்கும் அநுமார் முதலிய வானர வீரர்களைக் கண்டு, "ஓ வீரர்களே! மஹாராஜாவின் உத்தரவுப்படி நீங்கள், ஸ்ரீராமர், இலக்ஷ்மணர் இவர்களுடன் கூடிய ஸுக்ரீவ மஹாராஜாவிடம் இந்த க்ஷணமே செல்லவேண்டும், நம் மஹாராஜா உங்களுடைய வரவை எதிர்பார்க்கிறார்" என்று கூறினார்கள்.

யுவராஜனாகிய அங்கதனும், அநுமாரும், மற்றுமுள்ள வானர சிரேஷ்டர்களும், அவ்விதமே யென்று கூறி அவ்விடம் விட்டுப் புறப்பட்டு ஆசாயமார்க்கமாகச் சென்று, தம்பி இலக்ஷ்மணருடனும் ஸுக்ரீவருடனும் விளங்கா நின்ற ஸ்ரீ ராமசந்திர சமுகத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அநுமார், தசரத குமாரராகிய ஸ்ரீராமமூர்த்தியை சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு வணங்கிய பிறகு வானர ராஜராகிய ஸுக்ரீவ மஹாராஜாவையும் வணங்கி, இரகுநந்தனனைப்பார்த்து, "ஓ ஸ்வாமி! நான் இலங்காபுரியில் பதிவிரதா சிரோமணியாகிய ஸீதா தேவியைக் கண்டேன். 35 அங்குள்ள அசோக வனத்தின் மத்தியிலிருக்கும் ஸிம்ஸுபா விருக்ஷத்தினடியில்

வசிக்கிறார். அவரைச் சூழ்ந்து சில இராக்ஷச ஸ்திரிகள் காவலிருக்கிறார்கள். ஓ பிரபுவே! ஸீதாதேவி, சதா ஓ இராம! ஓ இராம! என்று பிரலாபித்துக்கொண்டிருப்பதோடு, ஆகாரமில்லாமல், சரீரம் மெலிந்தும், ஓர் மெல்லிய வஸ்திரமணிந்தும், ஒற்றைப் பின்னலோடு கூடிய தாழ்சடையிட்டும், ஈன சுரத்தோடுங்கூடி யிருப்பதையுங் கண்டேன். பிறகு நான் ஸூக்ஷ்ம ரூபத்துடன் ஓர் விருக்ஷத்தின் கிளையிலிருந்துகொண்டு, தாங்கள் தண்டகாரண்யம் வந்ததும், பஞ்சவடி தீரத்தில் ஒருவருமில்லாத சமயம் பார்த்து தசக்கிரீவன் ஸீதையை அபகரித்துச் சென்றதும், பிறகு ஸுக்ரீவருடன் சிநேகம் செய்துகொண்டு வாலியை வதைத்து ஸுக்ரீவருக்குக் கிஷ்கிந்தா பட்டாபிஷேகம் சூட்டியதும் கூறி, பிறகு கிஷ்கிந்தை மன்னராகிய ஸுக்ரீவ மகாராஜா, ஸீதாதேவியைத் தேட நாலா பக்கங்களுக்கும் வானர வீரர்களை யனுப்பினார். அவர்களுக்குள் நான் ஒருவன், ஸுக்ரீவருடைய மந்திரி, ஸ்ரீராமபிரானுடைய தாஸன், ஜென்மாந்தர புண்ணியத்தால், ஜானகியைக் கண்டேன், என்னுடைய பிரயாணமானது பலித்தது என்றும் புகன்றேன்.

என்னுடைய வார்த்தைகளைக்கேட்ட ஸீதாதேவி மனம் மகிழ்ந்து, அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற முகமுடையவராய், நாலு திக்கிலும் பார்த்து ஒருவரையுங் காணாமல் நினைத்து, இப்போது இதுவரையிலும் நான் கேட்காதது, என் காதுக்கு அமுதம்போன்றதுமான இனிய வசனங்களை மொழிந்தவன் யாவன்? என் காதிற் படும்படியாகக்கூறிய தேனினும் பாலினுமினிய இந்த விருத்தாந்தங்கள், மெய்யா யிருக்குமாயின், அதை யுரைத்தவன் என்னெதிரில் வரட்டுமே, மறைவிலிருந்து கூறுவது எதற்காக என்று சொன்னார்.

அத்தேவி ஆதரவுடனும், மனக்கலக்கத்துடனும் கூறிய வார்த்தையைக்கேட்ட நான் ஸூக்ஷ்ம ரூபத்தோடு கூடிய வானர வடிவத்துடன், அவர் சமுகத்திற் சென்று நமஸ்கரித்து எழுந்து அஞ்சலிபந்தனாய் சற்று தூரத்திலேயே நின்றேன்.

ஓ பிரபுவே! ஸீதாதேவி அடியேனை நோக்கி நீ யார் என்று கேட்க, நான் ஸ்ரீ ராமச்சந்திரருடைய சேவகன் என் பெயர் அனுமான் என்று தெரிவித்து, நடந்த வர்த்தமானங்களையும் விபரமாக எடுத்துக் கூறித் தாங்கள் கொடுத்த மோதிரத்தையுங் கொடுத்தேன். அதைப் பார்த்தவுடனே அங்கம் பூரித்து, என்னுடைய

வார்த்தையில் மிகுந்த நம்பிக்கை வைத்து என்னிடமிருந்து தங்களுடைய க்ஷேமத்தையும், இலக்ஷ்மணருடைய ஸௌகாநுபவத்தையும் விசாரித்துத் தெரிந்துகொண்ட பிறகு மனங்களித்து என்னைப் பார்த்து "அநுமாரே! அல்லும் பகலும் இந்தக் கொடிய துஷ்டைகளாகிய இராக்ஷச ஸ்திரீகளிடத்தில் நான் படும் கஷ்டத்தை நீர் நேரில் பார்த்தீரல்லவா, இவையனைத்தும் ஒளியாமல் எனது பிராணநாதராகிய ஸ்ரீராமமூர்த்தியிடம் தெரியப்படுத்தவேணும்" என்றார். ஓ காவல! தேவி பகர்ந்த தீன வார்த்தையைக் கேட்ட நான், ஓ தாயே! இராமச்சந்திரரும், தங்கள் விஷயமாகக் கொண்ட கவலையால், இராப்பகல் நித்திரையற்றுக் கதறிக்கொண்டேதா னிருக்கிறார். ஆனால் தங்களுடைய விருத்தாந்தந் தெரியவில்லை. இப்போது நான் அப்பிரபுவினிடம் சென்று தங்கள் பதிவிரதா நிலைமையைக் கூறுவேனாகில், பகைவர் சிங்கமாகிய அத்தசரத குமாரர் தம்பி இலக்ஷ்மணருடனும், தோழர் ஸுக்ரீவருடனும், கடல் போன்ற வானர சைனியங்களுடனும், உடனே புறப்பட்டு இவ்விடம் வந்து, இராக்ஷசகுல காலனாகிய தசமுகனையவன் சகோதரர், புத்திரர்களுடன் வதைத்து, ஜெயபேரியடித்து தங்களைத் தம் நகரத்துக்கு அழைத்துச் செல்லுவார். நான் சென்று கூறும் வார்த்தைகளை அப்பெருமான் நம்புவதற்கு ஆதாரமாக யாதாமொரு அடையாளம் கொடுங்களென்று கேட்டுக் கொண்டேன்.

ஸீதாதேவி, நான் கோரியதைச் சரியென்று அங்கீகரித்துச் சற்றுலோசித்துப் பிறகு, தன் கேசபாரத்தி லணிந்திருந்த நவரத்ன கசிதமான சூடாமணியை யெடுத்து என்னிடங் கொடுத்து, அத்துடன் சித்திரகூட மலையில் தாங்கள் அவரோடு தனித்திருக்குங் காலையில் நடந்த காக்கையின் சரித்திரத்தையும் அடையாளமாகக் கூறி, கண்ணீர் ததும்பும் முகத்தினராய் என்னை நோக்கி 'ஓ மாருதி! நீர் ஸ்ரீராமமூர்த்தியினிடம் சென்று, பேதையாகிய ஸீதை, ஸ்ரீராகவ வீரர் க்ஷேமமா என்று கேட்டாளென்றும், அவர் தம்பி இலக்ஷ்மணரிடம் தான் முந்தி அறியாமையினால் பேசிய உதாசின வார்த்தைகளை மன்னிக்கும்படி யவரைக் கேட்டுக்கொண்டாளென்றும் தெரியப்படுத்தும்' என்று கூறினார். மேலும் இராமச்சந்திரர், என்னை இத்துன்பக் கடலினின்று எவ்விதங் கரையேற்றக் கூடுமோ அவ்விதம் தயவு செய்து மீட்கவேண்டும் என்றுரைத்து, மட்டற்ற துக்கத்துடன் ரோதனம் செய்தார். நான் அவருக்குத் தைரியங்கூறிச் சமாதானம்

செய்து அவரிடம் விடைபெற்றுத் தங்கள் சமுகம் வரப்புறப்படும்போது, இராவணனுக்குப் பிரியமுள்ள அசோகவனத்தை யழித்து, அதிலுள்ள அரக்கர்களையும் வதைத்தேன். அதைப்பற்றி யென்னிடம் யுத்தத்துக்கு வந்த இராவணன் புதல்வன் அக்ஷய குமாரனையும் கொன்றேன். பிறகு தசக்கிரீவனையுங் கண்டு சம்பாஷணை செய்தேன். இலங்காபுரிப் பட்டணத்தைத் தீக்கிரையாக்கினேன், உடனே தங்களை நாடி இவ்விடம் வந்தேன் என்று தெரிவித்தார்.

மஹாத்மாவாகிய ஸ்ரீராமமூர்த்தி அனுமார் கூறிய விருத்தாந்தங்களைக் கேட்டுச் சந்தோஷமுற்று, மாருதியைக் கிருபாவீக்ஷண்யத்துடன் நோக்கி, "ஓ அனுமாரே! நீர் செய்த காரியம் தேவர்களாலும் செய்வதற்குரியதல்ல. நீர் செய்த உதவிக்குப் பிரதி யுபகாரமாக உம்முடைய செய்கைக்குத்தக்க *பிரசாதனம் உள்ள பொருள் நான் ஒன்றையும் அறியேன். ஆயினும் எனக்கு †உரிய பொருளை யுமக்குக் கொடுக்கிறேன்" என்று கூறி அனுமாரை யருகிலழைத்து, கட்டி ஆலிங்கனஞ்செய்து, தான் ஏகாக்ர சித்தராய், தன்னிரு விழியும் மேனோக்கி, அரைக்கண் மூடி, சிதா நாசம் பற்றி, சின்மாத்திர வடிவினராகி, அனுமாரை அநந்நவாகச் சிந்தித்து, தனது அருட்பார்வையால் அவரைப்பார்த்து, "நீயே நான் நானே நீ". எனத் தெரிந்து கொள்" என்று அவருக்கு உபதேசித்தார். பிறகு "அனுமாரே! நீர் எனக்குப் பிரியமுள்ள பக்தனாயினீர். என்னுடைய ஸ்பரிசமுமக்குக் கிடைப்பதரிது. எவர் ஒருவர், எந்த பரமாத்மாவுடைய பாத கமலங்களைத் துளசிதளத்தால் பூசித்துப் பரமபதமடைகிறாரோ, அந்த பரமாத்வாகிய என்னாலேயே உம்மைச் சற்சிஷனாகப் பாவிக்கப்பட்டு, எனது கரசரணங்களாற் பரிசித்து, எனதருட் கண்ணோக்காற் பார்த்து, உம்முடைய மும்மலங்களையும் போக்கி, எனது திருவடி ஞானத்திலேயே யும்மை நிறுத்தி, உம்முடைய தற்போதத்தை நீக்கும்படியான ஞானவாக்கியத்தைப் போதித்தேன். நீர் யாவருமதிர்க்கரிய மேலான பதவியையடைந்து நித்திய சூரியாக எஞ்ஞான்றும் விளங்கக்கடவீர்" என்று திருவாய் மலர்ந்து அனுக்கிரகஞ் செய்தார்.

---

* பிரசாதனம் = அலங்கரிப்பு. மனத்திருப்தி.

† உரிய பொருள் = பதிப்பொருளாகிய நாம், பசுப்பொருளாகிய பக்குவமுள்ள சீடனை, ஆணவம், மாயை, கன்மம், என்ற மும்மலங்களினின்று விடுவிப்பதற்கு, அருளே திருமேனியாக உருவெடுத்து வந்து, சீடன், தன்னை

யுந் தனது நிலைவனையுமறியாமல், பாசத்தில் ஆழ்ந்து, இன்பதுன்ப நுகர்ச்சிக்கேதுவான பிறவியில் மாறி மாறிப் பிறந்து உழல்வதினின்று காப்பாற்ற, கோழியானது தன்னுடைய முட்டையிலுள்ள கரு, பக்குவமடையத் தன் செட்டையால் மூடிப் பரிசிப்பதுபோல, நம்முடைய கரசரணங்களால் சீடனைப் பரிசித்தும், ஆமையானது கரையிலிட்ட தன் முட்டை பக்குவமடையத் தான் நீரிலிருந்துகொண்டே தன் மனதிற் பாவிப்பதுபோல அவனை எமதருள் உருவாய்ப் பாவித்தும், மீனானது தனது சினையை உருவாக்கப் பார்த்தல்போல அவனை அருட்கண் பார்வையாற் பார்த்தும், அவனுடைய மும்மலங்களையும்போக்கி, அவனுடைய சரியை கிரியா யோகங்களைச் செய்யும் வாசனையாகிய தற்போத மயக்கத்தை நீக்குவதற்கேதுவாகிய ஞானோபதேச மொழிகளை அவனுக்கு உபதேசித்தும், அவனுடைய உடல் பொருள் ஆவி மூன்றையும் நாம் ஏற்றுக்கொண்டு (இங்கு பொருள் என்பது-தேகத்தையும், பிராணனையும், தான் என்றும், தன்னுடையதென்றும் அபிமானிக்கும் ஜீவனைக் குறிக்கும்) "அது நான்" எனச் சொல்லும் வேதவாக்கியத்தையும், "நீ அது" எனச் சொல்லும் ஆகம வாக்கியத்தையும் ஒன்றென்றே அவனுக்குச் சந்தேகமறத் தெரிவித்தும், பசுவாகிய அசசற்சீடனைப் பதியாகிய நாம், 'எமது உருவாக்கி" மறுபடியும் அவன் ஜெனனம் எடுக்காமற் காப்பாற்றுதலே எமக்குரிய பொருளாம்.

அனாதியே மெழுக்குண்டையிற் பதிந்த ரத்னங்களைப் போல ஆணவமலத்திற் கட்டுண்ட ஜீவர்களை, தநு, கரண, புவன, போகங்களாகிய கண்ணாடியைக் காட்டி, அதில் மோகிப்பச் செய்து அவர்கள் செய்யுங் கருமங்களிரண்டும் ஒத்தகாலத்து, அவர்களுக்கு மலபரிபாகம் செய்து, நமது திருவடி நிழலிற் பொருந்தி யிறுமாந்திருக்கச் செய்வதே நமது திருவிளையாட்டாகும்.

இதனிமித்தமே நாம் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் திரோபவம், அநுக்கிரகம், என்னும் பஞ்சகிருத்தியங்களை நடத்த, பிரமன், விஷ்ணு, ருத்திரன், மஹேசன், சதாசிவம்; ப்ரத்யுமனன், அநிருத்தன், சங்கருஷணன், வாசுதேவன், பரமபத நாதன் என்ற பஞ்சமூர்த்திகளாகவுந் தோன்றினோம். பிரமன் முதல் சதாசிவ மீறாகக்கூறும் சைவாகமப்பெயரும், பிரத்யுமனன் முதல் பரமபதநாதமீறாகக்கூறும் வைஷ்ணவாகமப் பெயரும் நாமபேதமேயன்றி மூர்த்திபேதமில்லை. உள்ளபடி தத்துவத்தை யுணர்ந்த ஞானிகளுக்கு மூர்த்தி பேதமில்லை யென்பது பொருந்தும். தத்துவத்தை யறியாத வேஷதாரிகளுக்கு, அது பொருந்தாது.

சுந்தரகாண்டம் முற்றிற்று.

# யுத்த காண்டம்.



## 1-வது சருக்கம்.

இராமச்சந்திரர் அநுமாருக்கு ஆசிர்வாதம் செய்த பிறகு, ஸுக்ரீவரை நோக்கி, "ஓ ஸுக்ரீவ! மாருதிசெய்த காரியம் தேவர்களாலும் மற்ற யாவர்களாலும் செய்வதற்கு அரிதானது; மனதினால் நினைப்பதற்குக்கூட முடியாதது, இராக்ஷசர்களால் இரக்ஷிக்கப்படும் இலங்கையைக் கொளுத்துவதற்குத் தகுதியுள்ள வீரன் எவன் இருக்கிறான்? நூறு யோஜனை தூரமுள்ள கடலைத்தாண்டும் சக்தியுள்ளவன் எவன்? ஒரு காரியஸ்தன் செய்யுங் கிருத்தியத்தைவிட ஆயிரமடங்கு அதிகமான காரியத்தை மாருதிசெய்து முடித்தார், அனுமார் ஸீதையைத் தேடிப்பார்த்து அவளிருக்குமிடத்தையுந் தெரிந்து வந்ததால் இரகுகுல வீரர்களும், ஹரிகுல சிரேஷ்டர்களும் புகழுக் குரியவர்க ளானார்கள். ஜானகியின் விருத்தாந்தந் தெரியவில்லையே யென்று கொண்டிருந்த கவலை யொழிந்தது. ஸீதையிருக்குமிடம் போய்ச் சேருவதற்குக் குறுக்கிக தடையாயுள்ள நூறு யோஜனை தூரமுள்ளதும், மிக்க ஆழமுள்ளதும், மகரம் முதலிய ஜெந்துக்கள் வாழக்கூடியதுமாகிய ஆழியைக் கடப்பதற்கு என்ன செய்யலாம்" என்றார்.

இரகுபதியாகிய ஸ்ரீராமர் கூறிய ஆலோசனை வார்த்தையைக் கேட்டவானராதிபனாகிய ஸுக்ரீவர், "பெருக்க ராநிறைந்த கறுத்த வர்ணம் பொருந்திய சமுத்திரத்தை நாங்கள் தாண்டி இலங்கையிற் பாய்ந்து அதைத் தும்ஸப்படுத்தி அங்குவாழும் இராவணன் முதலிய அரக்கர்களை நாசம் செய்கிறோம். ஓ தாஸரதி! தாங்கள் கவலையை விட்டுவிடவேண்டும். கவலை யென்பது காரியஹானி செய்யக்கூடியது. செல்லா நின்ற இந்த ஹரிசிரேஷ்டர்கள், மஹாத்மாக்கள், மிக்க வீரத்தன்மையுற்ற தீரர்கள், பக்தியிலும் அடிமைத்தரத்திலும் மிகச் சிறந்தவர்கள். 'தங்களுடைய பிரீதியை வேண்டிக் கீர்த்தியை நாடித் தீயில் குதிக்கவும் இஷ்டமுடையவர்கள்'. மேலும் ஓ இராகவ! யுத்தகளத்தில் கோதண்டபாணியாய் நிற்குந் தங்களுக்கெதிரில் நின்று போர்புரிபவன் இந்த உலகத்திலாவது

மற்றெந்த உலகத்திலாவது இருக்கிறான் என்று எனக்குத் தோற்ற வில்லை. ஓ ஸ்ரீராமப் பிரபுவே! எந்த விதத்திலும் நமக்கு ஜெய முண்டாகப் போகிறது தடையேயில்லை. அதற்குரிய நற்சகுனத்தை நான் கண்டிருக்கிறேன்" என்று கூறினர்.

இரகுநந்தனர், பக்தியுடனும் வீரத்துடனும் கூறிய ஸுக்ரீவர் வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷம்செய்து, அயலில் நிற்கும் மாருதி யைப் பார்த்து, 'ஓ அஞ்சனை குமார! தேவர்களாலும் உட்செல்லு வதற்கு அரிதாகிய அந்த இலங்கையின் ஸ்திதியை யிப்போது எனக் குக் கூறும். அதைத் தெரிந்து கொண்ட பிறகு அதற்குத் தக்க ஆலோசனை கூறுகிறேன்" என்றார்.

தசரத குமாரர் கூறிய வார்த்தையைக் கேட்ட ஸ்ரீராக் கவலை யுற்ற மாருதி, ஆதரவுடன் கைகூப்பி நின்று, "ஓ தேவ! நான் நேரிற் போய்ப் பார்த்ததைக் கொண்டு, தற்காலம் அந்த இலங்காபுரியின் நிலைமையைக் கூறுகிறேன். அப்பட்டணம் தேவர்களுக்கே புரியாதது. திரிகூட பருவதத்தின் சிகரத்திலிருக்கிறது; ஸ்வர்ணமயமான பிரகா சத்தையுடையது. அலங்காரமான வீதிகளையும், இரத்ன கசிதமான மாட மாளிகை கூடகோபுரங்களையும், பாதாளலோகம் வரையிற் றாழ்ந்த ஆழமும், நிர்மலமான ஜலம் சூழ்ந்த அகழியையும், பலவித மான உத்தியான வனங்களையும் உடையது. மேற்குக்கோட்டை வாசலில் ஆயிரக் கணக்கான கஜவீரர்களும், வடக்கு வாசலில் கணக் கற்ற துரக வீரர்களும், கிழக்கு வாசலில் அற்புதக் கணக்கான பதாதிகளும், தெற்கு வாசலில் எண்ணற்ற இரதவீரர்களும் இரு ந்து காவல்புரிந்து வருகிறார்கள். அப்புரியின் மத்தியப் பிரதேசத் திலும் ஏராளமான இரதகஜ துரகபதாதிகளு மிருக்கின்றன. அந்த நகரம் பலவித யந்திரங்களையும் சதக்னியென்ற ஆயுதங்களையு முடை யது. இத்தகைய அரண்பொருந்தியிருந்தாலும், நான் அங்கு சென்ற போது அக்காவலர்களிற் சற்றேறக்குறைய நாலிலொரு பாகத்தை வதஞ்செய்தேன். இலங்கையைக் கொளுத்தினேன்; அந்நகரின் ஸ்வர்ணப் பிரகாசத்தைக் கரியாக்கினேன். சதக்னி யென்ற ஆயு தங்களையும், பலவித யந்திரங்களையுந் தொலைத்தேன். ஓ இராகவ! தாங்கள் பார்த்த மாத்திரத்தில் அந்த இலங்கை நாசமாகிவிடும். ஓ ஈசனே! பிரயாணமாக வேண்டும். மஹாவீரர்களாகிய வானர சைனி யங்கள் நான்கு பக்கத்திலும் சூழச் சமுத்திரக்கரைக் கேகுவோம்" என்று கூறினர்.

இரகுநந்தனர், ஆஞ்சனேயர் கூறிய ஆப்த வார்த்தையைக் கேட்டு, சற்றுலோசித்துத் தைரியமுற்று, மர்க்கட சக்கிரியாகிய ஸுக்ரீவரைப் பார்த்து, "ஓ நண்ப! வானர சைனியங்கள் பிரயாண மாகக் கட்டளையிடும். இக்காலந்தான் ஜெயமுகூர்த்தகாலம். இந்த முகூர்த்தத்தில் சென்று, நால்வகைச் சைனியங்களும் ஆயுதபாணி களாய் நின்று காக்கும் இலங்கைக்கதிபனாகிய தசமுக இராவணனை யவன் குலத்தோடு நாசம்செய்து ஸீதையை மீட்டுக்கொண்டு திரும்பு கிறேன். எனது வலது நேத்திரந் துடிக்கிறது. உனதுவுடைய வானர சைனியம் யாவும் புறப்பட்டுச் செல்லவேண்டும். யூதபர்கள் சேனை களை அணிவகுத்து நடத்தவேண்டும். நான் அனுமார் மீதேறிக் கொண்டு முன் செல்லுகிறேன். பிறகு இலக்ஷ்மணன் அங்கதன் மீதேறிக்கொண்டு வரட்டும். ஓ தோழ! நீர் என்னுடன் கூடவே வர வேண்டியது. மிகுந்த புத்தியும், அதிக பராக்கிரமமும் உடைய நளன், நீலன், ஸுஷேணன், ஜாம்பவான் முதலிய யாவரும் சேனை யுடன் மிக்க கவனத்துடன் வந்து சேரட்டும்" என்று கூறினர்.

இவ்விதம் ஸீதாபதி வானர ராஜனுக்குக் கட்டளையிட்டு, இலக்ஷ் மணருடன், அனுமார், அங்கதன், இருவர்களுந் தங்களைத் தாங்கிச் செல்ல, சந்தோஷத்துடன் பிரயாணமானர்.

வானர காவலரான ஸுக்ரீவர், தமது சைனியங்களுக்கும் சேனாதிபதிகளுக்கும் ஸ்ரீராமமூர்த்தியிட்ட கட்டளையை யறிவித்து, தானும் ஸ்ரீராமபிரானுடன் புறப்பட்டார்.

கிஷ்கிந்தை மன்னராகிய ஸுக்ரீவரிட்ட கட்டளையை மேற் கொண்டு, அவருக்குச் சமதையுள்ள வானரவீரர்களும், சைனியங் களும் கர்ச்சனை செய்துகொண்டு புறப்பட்டுத் தென்திசை நோக்கிச் சென்றார்கள்.

வானர சைனியங்கள் தாங்கள் செல்லும் மார்க்கத்திலுள்ள கனிவர்க்கங்களைப் புசித்துக்கொண்டு எக்களிப்புடன் இப்போதே இராவணனைக் கொல்லுவோம், ஒப்பற்ற வெற்றியை யடைவோம், உலகத்தில் எக்காலத்திலும் நிலைக்கத்தக்க புகழைப்பெறுவோம் என்று வாஞ்சையுடன் கூறிக்கொண்டு சென்றார்கள்.

அனுமார் அங்கதன் இவர்களிருவராலும் தூக்கப்பட்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும் இராம இலக்ஷ்மணர்களிருவரும், ஒற்றை யாழித் தேர்மேற்செல்லும் சூரியபகவான் கிழக்கிலுதித்து மேற்கிற்

செல்லுங் கதியைமாறி, இரண்டு சூரியர் வடக்கிற்றோன்றித் தென் முகம் நோக்கிச் செல்வதுபோலப் பிரகாசித்தார்கள்.

ஸ்ரீராமமூர்த்தியின் தபாபாத்திரர்களாகச் செல்லும் எழுபது வெள்ளம் வானர சைனியங்கள், ஊழிகாலத்திலும் தன்னிலைவிட்டுப் பெயராத வடக்கிலுள்ள உலகந்தாங்கு அச்சாணியான மகாமேரு கிரியானது தன்னிலைவிட்டுப் பெயர்ந்து ஆகாயத்திற் கிளம்பவும், தெற்கிலுள்ள அகஸ்தியர் வசிக்கும் பொதியமலை முதலிய பருவதங் கள் தங்களுடைய நிலைதிரிந்து பூமியுடன் பாதாளத்தில் அழுந்தும் படியாகவும், தரைமுழுதும் பரவிச் சென்றன.

அனுமார் தோளின்மேலாரோகணித்துச் செல்லும் ஸ்ரீராம மூர்த்தியும், அங்கதன் தோளின்மேலேறிச் செல்லும் இலக்ஷ்மண ரும், இவர்களுடன் ஆகாயத்தைத் தாவிச் செல்லும் ஸுக்ரீவரும், மிக்க தைரியத்துடனும், அதிகவேகத்துடனுந் தென்றிசை நோக்கிச் செல்லும் அந்த வானர சைனியங்களும், பகல், இரவு என்று சொல் லும் இரண்டு காலங்களிலும், ஓர் க்ஷணப்பொழுதேனும், ஓரிடத்தி லுந் தங்காமல் காற்றினுங் கடுமையாகச் சென்று, மலய பருவதத்தை யும், சஹ்ய பருவதத்தையும், தண்டகாரண்யத்தையும் கடந்து, ஸ்ரீ மகாவிஷ்ணுவே தேவர்கள் சகாயத்தின் பொருட்டு, மாயா மானிடவேடம்பூண்டு, பிராதா இலக்ஷ்மணருடனும் சகாயர் ஸுக்ரீவ ருடனும், இராவணன் முதலிய துஷ்டர்களாகிய இராக்ஷசர்களை வதம் செய்யத் தென்றிசை நோக்கித் தன்னிடம் வந்ததை, சமுத் திர ராஜன் அறிந்து, தனது கரங்களால் வாருங்கள்! வாருங்கள்!! என்று சந்தோஷத்துடன் அழைப்பதை யொப்ப, அலைகளை வீசி பெறியாநின்ற தென் சமுத்திரக்கரை வந்து சேர்ந்தார்கள்.

ஸ்ரீராமசந்திரர், அனுமார் தோளிலிருந்தும், இலக்ஷ்மணர் அங்கதன் தோளிலிருந்தும் கீழிறங்கி, ஸுக்ரீவருடன், அலைமோதி யறையுமிடத்துக்குப் போய், கடலிலுண்டாகும் பயங்கரமான இரைச்சலையும், அகாதமான நீர்ப்பரப்பையும் வானத்தை முட்டி யோங்கி யெழுந்து மடங்கிப் பூமியில் வந்து படிந்து மாறி மாறிப் புரண்டு வரும் அலைகளின் ஆலோலத்தையும் பார்த்து, வானரபதியை நோக்கி "ஓ ஸுக்ரீவ! நாம் இதுவரையில் யாதொரு தடையு மின்றியே வந்து சேர்ந்தோம். இனிமேல் நம்முடைய பிரயாணத் துக்குத் தடையாயிருக்கிற இக்கடலை வானரசைனியங்கள் கடத்தல் அரிது. இக்கடலைத் தாண்ட ஏதாவது ஒரு உபாயந் தேடிக்கொண்டு

தான் செல்லவேண்டும், ஆகையால் சேனைகள் அதுவரையில் இங்கேயே யிருக்கட்டும். இத்தடையை நிவர்த்திக்க வேண்டிய காரியத்தை ஆலோசித்துச் செய்வோம்" என்று கூறினர்.

கிஷ்கிந்தை பூபதி, தாசரதி கூறிய புத்திமைக் கேட்டு, தமது சேனாதிபதிகளை யழைத்து, யூதபர்களால் இரக்ஷிக்கப்படும் சேனைகளைக் கடற்கரைக்குச் சமீபத்திலேயே தங்கும்படி யேற்பாடு செய்யக் கட்டளையிட்டார்.

சேனாதிபதி பார்வையில் தளகர்த்தர்களால் நடத்தப்படும் வானர சேனைகள், பயங்கரமான கோஷத்துடன் விளங்குகின்றதும், உயர்ந்து கிளம்பி வருகின்ற அலைகளை யுடையதும், கறுத்துப் பெருத்து நீண்ட முதலைகளா லுண்டாகும் அபயிருத்துபயம் பொருந்தியதும், அகாத ஆழமும் உள்ள அந்த சமுத்திரத்தைப் பார்த்து, துக்கமடைந்து எவ்விதம் இக்கடலைக் கடப்போம், எப்போது இராக்ஷசாதிபனை இராவணனை ஜெயிப்போம் என்று கவலை யடைந்து அச்சமுத்திரக்கரை சமீபத்திலேயே வசித்து வந்தார்கள்.

அப்பொழுது, காரியங்களைக் குறித்து மானிட வடிவங் கொண்டவரும், இரண்டற்றவரும், சித்ஸ்வரூபம், சனாதனரும், பரமாத்மாவுமாகிய ஸ்ரீராமமூர்த்தி ஸீதாதேவியை மனதில் நினைத்து மிக்க துக்கத்துடன் பிரலாபித்தார்.

ஸ்ரீராமமூர்த்தியினுடைய சொரூப இலக்ஷணத்தை அறிந்த மானிடன் எவனோ அவனையே துக்கம் அணுகாது. ஆனந்த ரூபனும் அழிவற்றவனுமாகிய ஈசனையா துக்கம் அணுகப் போகிறது? துக்கம், சந்தோஷம், பயம், கோபம், லோபம், மோஹம், மதம் முதலியன அஞ்ஞானச் சின்னங்கள், சித் சொரூபனாகிய ஈசனிடம் அவைகள் எவ்விதம் நிலை பெறும். துக்கமானது தேகத்தில் அபிமான முள்ளவனுக்கே யுரியது. தேகாபிமானமற்ற பரமாத்மாவுக்குத் துக்க மேது! ஸ்ரீராமர் பரமாத்மா, புராணராகிய புருஷர், எப்பொழுதும் உள்ளவர். நித்திய சுகசொரூபர். சேஷ்டை யில்லாதவர்; ஆயினும், இவர் மாயையை அநுசரித்து, ஸுகிபோலும், துக்கிபோலும் காணப்பட்டார்.

---

# 2-வது சருக்கம்.

---

ஸ்ரீராமமூர்த்தி, தென் சமுத்திரக் கரையில் இலக்ஷ்மணனுடனும் ஸுக்ரீவர் முதலிய வீரர்களுடனும் எழுபது வெள்ளம் வானர சைனியங்களுடனும் தங்கி, இனி நடக்கும் காரியம் எவ்வண்ணம் முடியுமெனச் சிந்தித்திருந்தார்.

இங்கு இவ்விதமிருக்க, இலங்கையில் இராவணன் மாருதி தன்னுடைய பட்டண முழுதும் தீயினால் கொளுத்திச் சென்ற வீரத்தன்மையை நோக்கி வெட்கமடைந்து, தன்னுடைய தம்பி, குமாரன், மந்திரி முதலிய யாவரையும் கூட்டி ஓர் மந்திராலோசனைச் சபையேற்படுத்தினன். அதில் தம்பியாகிய கும்பகர்ணன், விபீஷணன், குமாரனாகிய இந்திரஜித்து, மந்திரியான மஹோதரன், மற்றுமுள்ள இராக்ஷசவீரர்கள் யாவரும் ஒருங்குகூடி வந்து சேர்ந்தார்கள். சபையிலிருந்த இராக்ஷச சிரேஷ்டர்களை நோக்கி இராவணன் "ஓ வீரர்களே! கேவலம் ஓர் குரங்கு, தேவர்களும் அணுகுவதற்கரிதாகிய நம்முடைய நகரத்துக்குட் பிரவேசித்து, ஸீதையைக்கண்டு வார்த்தையாடி, அசோகவனத்தையும் அழித்து, எனது அன்பு வாய்ந்தமனைவியாகிய மண்டோதரியின் குமாரனாகிய அக்ஷயகுமாரனையும் வதைத்து, நகரம் முழுமையும் நீக்கிரையாகும்படிச் செய்து, சமுத்திரத்தையுந் தாண்டிக் குதூகலத்துடன் சென்றது. என்னுடைய அரசாக்ஷி மிகவும் அழகாயிருக்கிறது. ஆகையால் எனக்கு நன்மையும் கீர்த்தியுமுண்டாகும் விதம் எதுவோ அவைகளை ஆலோசனை செய்து தெரிவியுங்கள்" என்று கூறினன்.

இலங்கேசன் கூறிய வார்த்தையைக்கேட்டு சபையிலிருந்த இராக்ஷசவீரர்கள், இராவணனை வணங்கி "ஓ இராக்ஷஸகாவல! மூன்று லோகங்களையுஞ் ஜெயித்த தங்களுக்குப் பிரஸ்தாப இராமன் ஒரு நிகரா? தங்களுடைய குமாரனாகிய இந்திரஜித்து, வானவர் யுத்தத்தில் தேவர்களுக்கரசனாகிய இந்திரனை ஜெயித்து அவனை இந்த நகருக்குக் கொண்டு வந்து இந்திரஜித்து எனும் பேரை வகித்தார். தாங்களோ அளகாபுரிக்கரசனாகிய குபேரனைவென்று அவனிடமிருந்த புஷ்பக விமானத்தைப் பறித்துக்கொண்டு வந்து ஸுகத்தை

அநுபவிக்கிறீர். ஓ பிரபுவே! உலகத்திலுள்ள ஜீவராசிகளை யெல்லாங் கொண்டுபோகிற கூற்றனையும் ஜெயித்துக் காலதண்டத்தின் பயமற்றவராயும் விளங்குகிறீர். மயன் என்ற அசுர சிரேஷ்டன் தங்களிடமுண்டான பயத்தினால் தன்னுடைய கன்னிகையை வலுவில் தங்களுக்குக் கொடுத்துத் தங்களுடைய சிநேகத்தைப் பெற்றுத் தங்களுடைய சுவாதீனத்தி லிருக்கிறான். மற்றுமுள்ள அசுரர்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? தேவர்கள் அசுரர்கள் கதி யிவ்விதமிருக்க, மானிடர், வானரர் இவர்களைப் பற்றி என்னயோசனை யிருக்கிறது. ஆயினும் இப்போது தங்களுக்கு அனுமானால் ஏற்பட்ட அவமானச் சொல்லானது, நாங்கள் இவன் குரங்குதானே இவன் என்ன செய்வான் இவனிடத்திலா நம்முடைய பராக்கிரமத்தைக் காட்டுகிறது என்று அலக்ஷியமாக இருந்ததினாலேற்பட்டது. அது விஷயத்தில் நாங்கள் மோசம் போனோம். நாங்கள் கவனித்திருந்தால் அனுமான் உயிருடனும் இந்நகரைவிட் டோடுவானா? இந்த க்ஷணம் எங்களுக்கு உத்தரவு கொடுப்பீர்களானால் அந்த மாருதி ஒருவன் மட்டுமல்ல, உலகத்திலுள்ள வானரங்கள் யாவற்றையும் அடியோடே தொலைத்து வருகிறோம். மேலும் பூவுலகத்தில் மானிடர் என்ற நாமமே யற்றுப் போகும்படிச் செய்கிறோம். எங்களில் எவனையேனும் தனியாகச் செல்லும்படி யுத்தரவு கொடுத்தாலுஞ் சரியே" என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

அப்போது அச்சபையிலிருந்த இராவணன் தம்பியாகிய கும்பகர்ணன், இராக்ஷசகுல காவலனான தனது தமயனைப்பார்த்து, "ஓ பிராதாவே! நீர் செய்த காரியம் உம்மோடு விடாமல் உம்முடைய குலத்துக்கே நாசத்தை யுண்டாக்கியது. ஏதோ நீர் முன் ஜென்மத்தில் செய்த புண்ணிய வசத்தால், மகாத்மாவாகிய அந்த இராமன் பஞ்சவடி தீரத்தில் உம்மைப் பார்க்கவில்லை. அந்த தீரன் உம்மைப் பார்த்திருப்பானானால் நீர் உயிருடன் திரும்பி இந்நகர் வந்து சேரமாட்டீர். இராமன் மானிடனல்ல, அவன் தேவன், பிரத்யக்ஷ நாராயணன், அழிவற்றவன். ஸீதையோ மகிமை பொருந்திய மகா இலக்ஷ்மி, இராமனுக்குப் பத்தினியாக ஏற்பட்டு வந்திருக்கிறாள். அந்த உத்தமி கீர்த்தி வாய்ந்தவள், நல்ல நடையுள்ளவள். அத்தகைய சீமாட்டியை நீர் வலையிலகப்பட்ட மானைப்போல், இராக்ஷசர்கள் நாசமடையக் கொண்டு வந்தீர். இனியும்மாலாகிற காரியம் என்ன? தெரியாத்தனத்தினால் அநுசிதமான காரியத்தைச் செய்து

விட்டீர். ஆயினும் ஓ அண்ணாலே! இவை யாவற்றையும் பரிகரிக்கிறேன், நீர் மட்டும் சாந்தமான மனமுடையவராகவேண்டுமென்று விளம்பினன்.

சிறப்பனாகிய கும்பகர்ணன் கூறிய வார்த்தைகளைக் கேட்டிருந்த இராவணன் குமாரனாகிய மேகநாதன் தனது தந்தையை நோக்கி, "ஓ நாத! தாங்களிப்போது எனக்கு மட்டும் உத்தரவு கொடுப்பீர்களானல், அந்த நரனாகிய இராமன், அவன் தம்பி இலக்ஷ்மணன், அவர்களுக்கு உதவியாக வந்திருக்கும் ஸுக்ரீவன், அவனைச் சார்ந்த வானர சைனியங்கள் முதலிய யாவற்றுப் பேர்களையும் ஓர் க்ஷணப் பொழுதில் கொன்று போட்டு மறுபடியும் இந்நகரம் வந்து சேருகிறேன்" என்று தைரியத்துடன் கூறினன்.

இவைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பக்தியிற் சிறந்தவனும், புத்தியில் மிகுந்தவனுமான விபீஷணன், தேவர்கள் சத்துருவாகிய இராவணனை நமஸ்கரித்து அவனருகில் வந்து உட்கார்ந்து, காமத்தால் புத்திகெட்டு மோகப்பிணியடைந்த தசக்கிரீவனையும், நியமமற்று மதங்கொண்டவர்களாய் விளங்கும் கும்பகர்ணன், மேகநாதன் முதலியவர்களையும் பார்த்து, "ஓ மஹாராஜனே! கும்பகர்ணன், இந்திரஜித்து, மகோதரன், கும்பன், நிகும்பன், அதிகாயன் முதலிய வீரர்கள் யுத்தகளத்தில் அந்த இராகவருக்கு முன்னிற்கச் சக்தியில்லாதவர்கள். இவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைத்து இவர்களைத் துணையாகப் பாவித்து இவர்கள் சொல்லும் நியவழியிற் பிரவேசிப்பீரானல், மன்குதிரையை நம்பி ஆற்றில் இறங்கினவன் கதை போலாகும் தங்களுடைய செய்கை. ஓ மாட்சிமைதங்கிய இராக்ஷசகுலச் சிகாமணியே! ஸீதை யென்ற பெயருடைய ஒரு பெருந்த இராகுக்கிரஹத்தினது வாயில் அகப்பட முயன்றிருக்கிறீர். ஓ அரசே! உமக்கு விடுதலை கிடையாது. ஆயினும் நம்குலத்துக்கு அபகீர்த்தியுண்டாகும்படித் தாங்கள் எடுத்துவந்த அந்த ஸீதையையே காணிக்கையாகப் பிரஸ்தாப ஸ்ரீராமரிடம் கொண்டுபோய்க் கொடுத்து அவரைச் சரணாகதி யென்று அடைவீராகில், கொடிய தவத்தைச்செய்து பெற்ற இந்த மஹோன்னத பதவியை யிழக்காமல் ஸுகத்தைப் பெற்று ஸ்திரமாக நீர் நீண்டகாலம் வாழலாம். ஆகையினலே என்னுடைய சத்தியமான வார்த்தையில் நம்பிக்கை வைத்துத் தாங்கள் நல்ல வழியிற் பிரவேசித்துக் கீர்த்தியையும் ஸுகத்தையும் அடையக் கோருகிறேன்.

மேலும், அந்த இராகவருடைய கூர்மையான பாணங்கள், இலங்கையில் வியாபித்து இராக்ஷசர்களைச் சேதிக்காமுன்னம் அந்த ஜானகியை அவரிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிடுங்கள்.

பருவதம் போன்றவர்களும், பகைவராகிய தந்திக்குச் சிங்கம் போன்றவர்களும், மஹாபலமுள்ளவர்களும் வால்களாலுந் தோள்களாலும், கால்களாலும் கைகளாலும் கோரப்பற்களாலும் யுத்தம் செய்யும் சக்தியுடையவர்களுமாகிய அந்த வானர சைனியங்கள் இலங்கையில் புகுந்து நாசம் செய்வதற்கு முன்னம் இரகுஸிரேஷ்டரிடம் அந்த வைதேகியைக் கொண்டுபோய் விட்டுவிடுங்கள்.

தேவர்களாலும் மற்ற யாவர்களாலும் வியக்கப்பட்ட புகழ்ச்சியைப் பெற்ற ஓ இலங்கேச! தாங்கள் சங்கரனாலும் தேவஸிரேஷ்டர்களாலும் இரக்ஷிக்கப்பட்டாலும் இந்திரனுடைய மடியிலேனும் அல்லது எமனுடைய மடியிலேனும் போய் வசித்தாலும், பாதாளலோகங்களிற் போய்ச் சஞ்சரித்தாலும் ஸ்ரீராமருடைய பாணத்துக்குத் தப்பி உயிருடன் மீளமாட்டீர்கள்" என்று மிகப் பரிதாபத்துடன் கூறினான்.

இராக்ஷச கண்டகனாகிய இராவணன், அறிவிற் சிறந்த விபீஷணனாற் கூறப்பட்ட ஹிதமும், ஸுகமும் பெறக்கூடிய அமுதம் போன்ற மொழியை பிணி கொண்டவன் மரண மடைவதற்கு ஔஷதத்தைக் கிரஹிகாதது போல தான் பின்னிட்டடையும் துக்கத்தை முன்னிட்டு அங்கீகரிக்காமல் வெறுத்து, விபீஷணனைப் பார்த்து "ஓ துரோகி! நீ என்னால் போஷிக்கப்பட்டு வளர்ந்த சரீரத்தை யுடையவனாயிருந்தும், எப்போதும் என்னால் காப்பாற்றப்பட்டவனாயிருந்தும், நான் உனக்குச் செய்த ஹிதமான காரியங்கள் யாவற்றையும் மறந்து, சமயம் வாய்த்த பொழுது எனக்குத் தீமை புரிய நினைக்கிறாய்; நீ எனக்கு மிகவும் அன்புவாய்ந்த மித்ரன் என்ற பாவனையுடனிருந்து, அந்தரங்கத்தில் சத்துருத் தன்மையைப் பூண்டவனாயிருக்கிறாய் சந்தேகமில்லை; பண்ணின உபகாரத்தை மறந்த பரம துஷ்டனாகிய உன்னுடைய உறவு எனக்கு உசிதமாகத் தோற்றவில்லை. ஞாதிகள் தங்களுடைய ஞாதிகளுக்கு எப்போதுந் தீங்குசெய்யவே நினைக்கிறார்கள். நீயும் எனக்கு மிகவும் நெருங்கிய அப்போர்க்கொத்த ஞாதியில் ஒருவனே. நம்மவர்களில் எவனாவது இம்மாதிரியான வார்த்தைகள் பேசுவானாகில் அவனை அந்த க்ஷணத்திலேயே வதம் செய்

வேன். ஆயினும் உன்னை இப்போது உயிருடன் விட்டுவிட்டேன். நீ இச்சபையைவிட்டு விலகலாம்” என்று கடுமையாகக் கூறினன். 3

அதர்ம சிந்தையுடைய தசாநநன் இவ்விதம் கொடுமையுடன் பகர்ந்த ஹிதமற்ற வார்த்தையைக்கேட்ட அப்போதே, மஹாபல சாலியும் தர்மத்தை அநுசரித்த மனதையுடையவனுமாகிய விபீஷணன், தனது கதையைக் கையில் எடுத்துக்கொண்டு நான்கு மந்திரிகளுடன் சபையிலிருந்து ஆகாயமார்க்கமாக உயரக்கிளம்பி நின்று, மிகுந்த கோபமடைந்து தசக்ரீவனைப் பார்த்து, “ஓ அண்ணலே! நீர் நாசமடையாமல் ஸுகமடையவேண்டி, ஹிதமான நடை கூறிய என்னை மதத்தினால் திக்காரம் செய்தீர். ஆயினும் நீர் மூத்த பிராதா, பிதாவுக்குச் சமானமானவர். ஆகையால் இன்னும் உம்மிடம் வைத்த அன்பினால் கூறுகிறேன். உமது காலன் தசரதனுடைய கிருஹத்தில் இராமனாக உண்டாயிருக்கிறான். காளிதேவி, ஸீதை யென்ற நாமத்துடன் ஜனகரிடம் உற்பவித்திருக்கிறாள். அவர்களிருவரும் பூமியின் பாரத்தைப் போக்குவதற்காக இவ்விடம் வந்திருக்கிறார்கள்.

அந்த இராமனாலேயே பிரேரிக்கப்பட்டு நீர், நான் சொல்லும் ஹிதவாக்கியங்களைக் கேட்கவில்லை. அதெப்படி யென்னில், ஸ்ரீராமராகிய பரமாத்மாவானவர், பஞ்சீகரிக்கப்பட்ட (1) அன்னமய கோசம், (2) பிராணமய கோசம், (3) மனோமய கோசம், (4) விஞ்ஞானமய கோசம், (5) ஆனந்தமய கோசம் ஆகிய இவ்வைந்திலும், ஆன்மாவானது வேற்றுமையில்லாமலிருந்து நடத்தும்படி முறையே சிறப்புடைய தேரைத் தரையில் செலுத்துவோர் தன்மை போலும், மரப்பாவையைச் செய்விப்போர் தன்மை போலும், தோல் பாவையை ஆட்டுவோர் தன்மைபோலும், பரகாயப் பிரவேசஞ்செய்வோர் தன்மை போலும் ஆட்டிவைக்கிறார்.

---

(1) அன்னமயகோசமாவது.—அன்னத்தினால் வளர்ந்து, கரசரண அவயவாதிகளுடன் ஸ்தம்பம்போல் காணப்படுகிற ஸ்தூல சரீரம், அது பல விதமாக விவகரிக்கப்படுகின்றது.

(a) நான் ஜீவன், மனுஷன் என்பது ஜீவனைப்பற்றி யுண்டாகிறது.

(b) நான் பிறந்தேன், இருக்கிறேன், பருத்தேன், இளைத்தேன், நசித்துப்போகிறேன் என்பது விகாரத்தா லுண்டாகிறது.

(c) நான் பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்பது வருணத்தா லுண்டாகிறது

(d) நான் காசிப கோத்திரன், பாரத்துவாஜ கோத்திரன், ஆஸ்வலாய சூத்ரன், ஆபஸ்தம்ப சூத்ரன், போதாயன சூத்ரன், கார்த்தியாயன சூத்ரன் என்பது விசேஷ ஜாதி பேதத்தாலுண்டாகிறது.

(e) நான் பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்பது ஆச்சிரமத்தா லுண்டாகிறது.

(f) நான் கோவிந்தன், அருணாசலப் பட்டன், திப்பா பட்டன் என்பது நாமத்தா லுண்டாகிறது.

(g) நான் தீக்ஷிதன், சோமயாகி, பவுண்டரீகயாகி என்பது சம்ஸ்காரத்தா லுண்டாகிறது.

(h) நான் பாகவதன், சைவன், புராணீகன் என்பது வேஷத்தா லுண்டாகிறது.

(i) நான் உபாத்தியாயன், சிஷ்யன், தச்சன், கருமான், அம்பட்டன், வண்ணான், மணியக்காரன், என்பது கிரியையாலுண்டாகிறது. இவை முதலாயின அன்னமய கோச சுபாவதர்மங்கள்.

(II.) பிராணமய கோசமாவது:— கருமேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமும் கூடியது.

(a) நான் பசியுடையவன், தாகமுடையவன், சக்தியுடையவன், வாயுடையவன், ஊமை, சப்பாணி, காலுடையவன், இவைகள் பிராணமய கோச சுபாவதர்மங்கள்.

(III) மனோமய கோசமாவது :—மனதும் ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடியது.

(a) நான் சங்கற்பன், விகற்பன், சோகி, மோகி, சற்சனன், கிராதகன், செவிடன், குருடன் இவைகள் மனோமய கோச சுபாவதர்மங்கள்.

(IV) விஞ்ஞானமய கோசமாவது :—புத்தியும், ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடியது.

(a) நான், கர்த்தா, நிச்சயவான், புத்திமான், யோகசாதனன், விரதன், பண்டிதன், லோகாந்தரத்துக்குப் போகிறவன் இவைகள் விஞ்ஞானமய கோச சுபாவதர்மங்கள்.

(V) ஆனந்தமயகோசமாவது :—பிரியம், மோதம், பிரமோதம் என மூன்று வகைப்படும். இஷ்டமான வஸ்துவைப் பார்த்தமாத்திரம் வரும் சந்தோஷத்திற்குப் பிரியமென்றும், அந்த வஸ்து கிடைத்த பிறகு வருகிற சந்தோஷத்துக்கு மோதமென்றும், அதை அநுபவித்த பிறகு வருகிற சந்தோஷத்திற்குப் பிரமோதமென்றும் பெயராம். இவையே ஆனந்தமயகோசம்.

(a) நான், சுகி, சாந்தன், ராசதன், தாமதன், துக்கன், மூடன் அஞ்ஞானி, விவேகி, பிராந்தன் இவைகள் ஆனந்தமய கோச அஞ்ஞான சுபாவதர்மங்கள், மேலும், ஆத்ம ஞானசுபாவ தர்மமான சத்து, சித்து, ஆனந்தங்களும், ஆனந்தமய கோச ஞான சுபாவ தர்மங்களாம்.

இவ்விதமாக அந்த பகவான் ஆத்மாவைப் பஞ்சகோச சுபாவ தர்மங்களை யநுசரித்து நடக்கும்படி தான் ஒரு சூத்தாடிபோல நின்று பிரபஞ்சக்கூத்தை ஆட்டி பாவம்பண்ணின ஆத்மாவை நரக போகத்திலுள்ள துக்கத்தை யநுபவிக்கச்செய்து சிக்ஷித்தும், புண்ணியம்பண்ணிய ஆத்மாவை சுவர்க்கபோகத்திலுள்ள சுகத்தை யநுபவிக்கச்செய்து காப்பாற்றியும், மிச்சிரகர்மத்தைச் செய்து தன்னிடம் பக்திசெய்யும் ஆத்மாவைத் தன் திருவடி நீழலிலிருக்கச் செய்து இரக்ஷித்தும் வருகிறார்.

ஓ அண்ணலே! மேலும் அபபாமனல நடததபபடும இப்பிர பஞ்சம் உற்பத்தி, ஸ்திதி, நாசம் என்னும் முப்பகுதியையுடையது. "படைத்தும் காத்தும் கரந்தும் விளையாடி" என்பது வேதசம்மதம். அபாரமான இப்பிரபஞ்ச காரியத்தை மிக எளிதிற் செய்வதுபற்றி 'விளையாடி.' என்று கூறப்பட்டது. பரமன் மாயையிற் றோன்றிய முக்குணங்களில் இராசதகுணத்தை யதிஷ்டித்து பிரமனாகி, கலையெனும் சத்தியைக்கொண்டு அண்டபிண்டசராசரங்களனைத்தையும் சிருஷ்டிக்கிறார். சாத்விக குணத்தை யதிஷ்டித்து மாலாகி, திருவெனும் சத்தியைக்கொண்டு காத்துவருகிறார். தாமதகுணத்தை யதிஷ்டித்து உமையெனும் சத்தியைக்கொண்டு சங்கரித்தும் வருகிறார்.

ஓ என்னுடைய ஜேஷ்ட பிராதாவாகிய இராவணப் பிரபுவே! நீர் முற்கூறியபடி விஞ்ஞான மயகோசத்தை யநுசரித்து, பஞ்சாக்கினி பத்தியில் நின்று ஆயிரம் வருஷம் தவஞ்செய்து ஒரு சிரத்தை அறுத்து அக்கினியில் ஓமஞ்செய்து, இவ்விதம் பதினாயிர வருடம் தவஞ்செய்து பத்து சிரசையும் அறுத்து அக்கினியிலிட்டு தவத்தை முடித்து அத்தவப்பேற்றினால் அமுதகலசத்தையும் பெற்று திரிலோகத்தையும் ஆளும் சக்தியை அடைந்தீர். அப்படிப்பெற்றதைக் கொண்டு, ஆனந்தமயகோசத்தை யநுஷ்டித்து, ஆத்மஞான சுபாவதர்மமான சச்சிதானந்தத்தை யடையாமல், மனோமயகோசத்தை யனுஷ்டித்து கிராதகச்செய்கையைச் செய்ததைக்கண்டு மனம்பொறாமல் உம்மை அழிக்கக்கருதி அப்பரமன் ஸ்ரீராமராகவும், ஸம்ஹாரசத்தியே ஸீதையாகவும் உருவெடுத்து நின்று செய்யும் அவருடைய சங்கற்பத்தை மாற்ற யாரால் முடியும்? ஆகையால் நான் கூறிய இத வார்த்தையை யங்கீகாரம் செய்யாமல் நிக்கிரகித்தது மெய்யே. பின்னும் ஸ்ரீராமர், உம்மை புத்திரர்களுடனும் பிராதாக்களுடனும் ஸ்னேகி

யங்களுடனும் வதம் செய்யப்போகிறார். ஓ இலங்கேச! அந்த பக வானுகிய இரகுவீரரால் வதமடையுந் தங்களை யிங்கிருந்து பார்ப்ப தற்கு எனக்கு மனந்துணியவில்லை. ஆகையால் உம்மையும் இராக்ஷச பரம்பரையும் விட்டு ஸ்ரீராமரிடம் நான் செல்கிறேன். நான் சென்ற பிறகாவது நீண்ட காலம் இந்த அரண்யலோயிலிருந்து சுகமாக வாழும் படியான மார்க்கத்தைத் தேடிக்கொள்வீர்" என்று செப்பினன்.

பிறகு விபீஷணன், மனைவி, மக்கள், கிருகம் முதலிய புறப பற்றை ஒருங்கே விட்டு, பகவானுகிய ஸ்ரீராமருடைய பாதார விந்தங்களில் கைங்கரியம் செய்ய விரும்பி பரிபூரணமான மன துடன் அவரிருக்கும் இடத்தை நாடிச்சென்றான்.

## 3-வது சருக்கம்.

மஹாபாக்கியசாலியாகிய விபீஷணன் நான்கு மந்திரிகளுடன் இராவணன் சபையில் நின்று புறப்பட்டு ஆகாயமார்க்கமாக ஸ்ரீ ராம ருக்கெதிரில் வந்து நின்று, உச்சஸ்வரத்தோடு மஹாத்மாவாகிய ஸ்ரீராமமூர்த்தியைப் பார்த்து, "ஓ ஸ்வாமியே! ஓ ஸ்ரீராமப்பிரபுவே! தங்களுடைய மனைவியாகிய ஸீதையைத் திருடின இராவணனுக்கு நான் உடன் பிறந்தவன், விபீஷணன் என்ற பெயருள்ளவன், என் னுடைய பிராதாவாகிய இராவணனால் தள்ளப்பட்டு தங்களையே சரணமடைந்தவன்.

ஓ தேவ! ஆத்ம சொரூபமறியாத இராவணனுக்கு நான் ஹிதத்தைக் கூறினேன். அதாவது விதேஹவம்சத்தில் ஜனித்த ஸீதையை இரகு நந்தனரிடத்தில் கொண்டுபோய் விடு என்று அடிக் கடி பகர்ந்தேன். காலபாசத்தில் வசப்படும் அந்த இராவணன் என் வார்த்தையைக் கேட்கவில்லை. மேலும் அவன் தன் கத்தியை யெடுத்துக்கொண்டு என்னைக் கொல்லுவதற்கு நாடி வந்தான். நான் அதுகண்டு பயமடைந்து தங்களைச் சரணமெனப் புகுந்தேன். ஸம்ஸார பந்தத்தில் நின்று விடுபடத்தங்களைப் பிரார்த்திக்கின்றேன்" என்றான்.

ஸுக்ரீவர், சரணமென் று கூறிவந்த விபீஷணன் வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீராமரிடம் வந்து பணிந்து "ஓ தேவ! இராக்ஷசனுகிய இவனை நம்பக்கூடாது. இவனோமாயாவி, ஸீதாதேவியைத் திரு

டிப்போன இராவணனுடைய தம்பி, மகாமாயமுடையவன்; ஆயுதத் துடனும் நான்கு மந்திரிகளுடனும் வந்திருக்கிறான். நாம் ஸாவதானக் குறைவாயிருக்கும் சமயம் பார்த்து நம்மைக் கொன்று விடுவான். ஆகையால், ஓ பிரபுவே! வானரர்களை யேவி யிவனை வதை செய்யும்படி யெனக்கு உத்தரவு செய்யவேண்டும்.” என்று கேட்டுக் கொண்டார்.

இரகுநந்தனர், ஸுக்ரீவர் சொன்னதைக் கேட்டுப் புன்னகை கொண்டு, அவரைப் பார்த்து “ஓ கபிசிரேஷ்ட! நான் விரும்பினால் ஒரு நிமிஷத்தில் இந்த உலகம் யாவற்றையும் நாசம் செய்வேன். மறுபடியும் இவ்வுலகம் முன்னிருந்த நிலைமையிலிருக்கச் செய்வேன். இவனால் நமக்கு ஆபத்து வருமென்று நான் நினைக்கவில்லை. மேலும் என்னிடம் வந்து அடைக்கலம் புகுந்தவனைக் காப்பது என்னுடைய விரதம். ஆகையால் இவன் இராக்ஷசனாகிலும் என்னைச் சரணமென்று வந்தடைந்தபடியால் இவனுக்கு அபயங்கொடுக்கிறேன். சீக்கிரம் அவனை யிவ்விடம் வரவழையும்” என்றார். ஸ்ரீராமமூர்த்தி கூறிய தைரியமும் அன்பும் பொருந்திய வசனத்தைக் கேட்டு ஆச்சரியமடைந்து சுக்கிரீவர்சென்று விபீஷணரை இரகுவீரர் சந்நிதானத்துக் கழைத்து வந்தார்.

விபீஷணர், சியாமள வர்ணமும், விசாலமான நேத்திரமும், பிரசன்னமான முகாரவிந்தமும், தநுசையும் பாணத்தையுந் தரித்த இரண்டு கரங்களுமுடையவராய், சாந்தகுணமும் பொருந்தி, தம்பி இலக்ஷ்மணனுடன் வீற்றிருக்கும் இரகுநாதரைப்பார்த்து, சாஷ்டாங்கமாகப் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து எழுந்து அந்த சமீபத்திலேயே நின்று பக்தியும், அன்பும் நிறைந்து, கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழிந்து, தயங்கிய மொழியோடு, “ஓ ஸீதாராமப் பிரபுவே! ஓ இரகுசிரேஷ்டரே! நமஸ்காரம், ஸீதா தேவியின் மனதுக் கினிய காகுஸ்த! நமஸ்காரம், ஓ உக்கிரமான கோதண்டத்தைத் தரித்த புருஷோத்தம! நமஸ்காரம், ஓ பக்தவற்சல! நமஸ்காரம், ஏகரும், அனந்தரும், சாந்தரும், ஒப்பற்ற தேஜஸையுடையவருமாகிய தங்களுக்கு நமஸ்காரம், தூர்ச்சனருக்குச் சத்துருவும், ஸுக்ரீவருக்கு மித்துருவும், இரகு குலத்துக்குப் பதியுமாகிய தங்களுக்கு நமஸ்காரம், உலகத்தின் உற்பத்திக்கும், ஸ்திதிக்கும், நாசத்துக்கும் காரணமாகிய தங்களுக்கு நமஸ்காரம், மூவுலகத்துக்குக் குருவும், அநாதியான கிருஹஸ்தருமாகிய தங்களுக்கு நமஸ்காரம், ஓ மஹாத்

மாவே! தாங்கள் ஸ்தாவர ஜங்கம ஸ்வரூபமான வைகளுக்குள்ளும் புறம்பும் வியாபிக்கத்தக்கதும், வியாபித்ததுமாகிய உருவத்துடன் லோகமயமாக விளங்குகிறீர்கள். மாயையிலாழ்ந்து அஞ்ஞான வசத்தர்களாகிய ஜனங்கள் பாப புண்ணிய வசத்தால் ஜென்ம மரணக்கரை அடைகிறார்கள். அவித்யையில் அஞ்ஞானம் நீங்கி ஞானம் அடையவில்லையோ அவித்யையில், அவர்களுக்கு உலகமானது முத்துச்சிப்பி வெள்ளியென்று தோற்றுவது போலத் தோன்றுகிறது. அஞ்ஞானத்தால் தாமுடைய சுபரூபத்தை யறியாமல் மனைவிமக்கள், கிரகம் முதலியவற்றில் பற்றுதலடைந்து முடிவில் துக்கத்தைக் கொடுக்கும் சிற்றின்பத்தில் இரமிக்கிறார்கள்.

ஓ பிரபுவே! தாங்கள் புருஷோத்தமரே. அணுவுக்குள் அணுவாகிய ஸ்தூலத்துக்கும் ஸ்தூலமாயிருக்கிறீர். உலகங்களுக்குத் தாயாகியுந் தந்தையாகியும் நின்று போஷிக்கிறீர். ஆதி மத்தி அந்தம் இல்லாதவர். பரிபூரணர். அச்சுதர். காரணாதி அவயவங்களில்லாதவர். அப்படியிருந்தும், கேட்பவர் பார்ப்பவர் கிரஹிப்பவர் முதலிய எல்லோரையும் உண்டு பண்ணினவர். பஞ்சகோசங்களுக்கும் வேறுபட்டவர். நிர்க்குணர். ஆசிரயமில்லாதவர். நிருவிகற்பர். நிர்விகாரர். நிராதாரர். விருத்தி, க்ஷயம் முதலிய குணமில்லாதவர். அனாதி புருஷர். பிரகிருதிக்கப்பால். ஆயினும் மாயையால் மறைக்கப்பட்டு மானிடன்போல் தோன்றுகிறீர். தங்களை நிர்க்குணர் என்றும், அஜரென்றும் அறிந்த பக்தர்கள் மோக்ஷம் அடைகிறார்கள். ஓ ஸ்ரீராமமூர்த்தியே! நான் தங்களுடைய உபயசரணாரவிந்த பக்தியாகிய படியை யடைந்து, ஞானத்தில் ஞானமாகிய உப்பரிகையில் ஏற விரும்புகிறேன்.

ஓ ஸீதாபதியாகிய ஸ்ரீராமப்பிரபுவே! நமஸ்காரம், கருணையாளருக்குள் உத்தமரே! நமஸ்காரம், ஓ இராவண சத்துருவே! நமஸ்காரம், ஓ அண்ணலே! என்னை ஸம்ஸாரக் கடலில் நின்று கரையேற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

பக்தவற்சலராகிய ஸ்ரீராமர் தன்னுடைய பாதாரவிந்தத்தில் வந்து வணங்கிக் கேட்ட விபீஷணரைப் பார்த்து, ஓ விபீஷண! உனக்கு மங்கள முண்டாகுக. நீ விரும்பிய வரத்தைக் கேட்பாயாக. உன்னிஷ்டப்படி வரங்கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன் என்றார்

பக்தியிலீடுபட்ட விபீஷணர், பரம புருஷராகிய ஸ்ரீராமமூர்த்தி பாதத்தில் நமஸ்கரித்துச் சேவித்து நின்று, "ஓ அண்ணலே! என்னை

ஆண்டுகொண்டருளிய அமுதே! ஓ தயாநிதே! நான் தன்யனாயினேன். தங்களுடைய பாதாரவிந்தத்தின் தெரிசனத்தாலே விமோசன மடைந்தேன். சந்தேகமில்லை. என்னுடைய மாயா சம்பந்தம் நிவர்த்தியடையத் தங்களிடம் பக்தி செய்யும் ஞானமும் பரமார்த்தமான தங்களுடைய தியானமும், எனக்குண்டாகக் கிருபை செய்ய வேண்டும். ஓ இரகுநந்தன! விஷய சுகத்தை நான் விரும்பவில்லை. மோக்ஷத்துக்குச் சாதனமான தங்கள் பாதாரவிந்த பக்தியையும், தேஜஸ்பொருந்திய தங்கள் திவ்விய சொரூப தியானத்தையும் நான் அபேக்ஷிக்கிறேன்" என்று வேண்டினான்.

வைகுண்டநாதனாகிய ஸ்ரீராமமூர்த்தி, 'ஓம்' என்றுரைத்து, "ஓ விபீஷண! மங்களகரமானதும், நிச்சயமானதும், மோக்ஷத்துக் கேதுவானதுமாகிய சாதனத்தைக் கூறுகிறேன் கேள். அதாவது:— என்னுடைய சொரூப தியானமே. "தியானமாவது:—அஞ்ஞானத்தால் தேகமே தான் என்று மதித்திருந்த ஜீவன், ஞானாசிரியரால் தேகம் நீயல்ல, பட்டுணர்வு கெட்டு மேம்பட்டு நின்ற பதிப்பொருள் நீ யென்று விளக்கிக்கூறக் கேட்டு, அத்தேகமாகிய பாசமும், அப்பதிப்பொருளும் நான் அன்று, இரண்டிற்கும் வேறெனக் கண்டு, வேறாகிய பாசத்தை நீக்கி, அப்பதிப்பொருள் தன்னுள்ளத்திலே, கண்ணொளியும், ஞாயிற்றினொளியும் போல வேற்றுமை சிறிதுந் தோன்றாது வியாபக வியாப்பியமாய் ஒற்றித்து நிற்பதைக் கண்டு, "கருடோகம்பாவனை" போல அப்பதிப் பொருளாகிய பரமேதான் என, "சிவோகம்" பாவனை செய்வானாகில், கருடதியானத்தால் விஷம் நீங்குவதுபோல, அப்பரப்பொருளாகிய நானும், அவனை விட வேறுதல் அற்று அத்துவிதமாய்த் தோன்றி, அவனுடைய மலங்களை நீக்கிப் பரிசுத்தனாக்கி முத்தியடையச் செய்வேன். வேதத்தில் "அது நான்" என்று பாவிக்கச் சொல்வதும் இந்தப்பாவனையாகிய தியானத்தையே." அகப்பற்றும், புறப்பற்றும் நீங்கிய என்னுடைய பக்தர்களின் இருதயத்தில் நான் எப்போதும் என்னுடைய சக்தியுடன் வசிக்கிறேன். ஆகையால் நீ எப்போதும், சாத்விக குணத்தைப் பொருந்தி, சந்தேகம் கொஞ்சமேனும் இல்லாமல், ஏகாந்த ஸ்தலத்தில் மேவி, இதயத்தில் ராகாதி குணங்களைவிட்டு, தேகாபிமான முதலிய வாஞ்சைகளுமற்று, புறம்பே செல்லும் புத்தியை இந்திரிய வழியிற் செல்லாமற் றடுத்துநின்று, என்னையே தியானம் செய்வாயாகில், பயங்கரமாகிய ஸம்ஸாரக் கடலினின்று நீ விடுபடுவாய்" என்று உபதேசம் பண்ணினார்.

எவன் ஒருவன் இந்த "விபீஷணோபதேசத்தை" அநுஷ்டிக்கிறானோ அல்லது படிக்கிறானோ அதவா எழுதுகிறானோ அவன் என்னுடைய சாரூப்பத்தை யடைவான்.

பக்தர்களிடம் கருணைவைத்த ஸ்ரீராமர், இவ்விதம் வரங்கொடுத்த பிறகு, இலக்ஷ்மணரைப் பார்த்து "ஹே தம்பி! இந்த விபீஷணன் என்னைத் தரிசனம் செய்ததின் பலனை யிப்பொழுதே யடையட்டும். இவனை இலங்கை நகருக்கதிபனாகப் பட்டாபிஷேகஞ் செய்விக்கிறேன். சூரியன் சந்திரன் பூமியுள்ள மட்டும், அப்பூமியினிடத்து என்னுடைய சரித்திரம் நிலைநிற்குங் காலம் வரையிலும் இவன் அந்த நகரத்தைப் பரிபாலனஞ் செய்யப்போகிறான். நீ சமுத்திர தீர்த்தங் கொண்டுவா" என்று கூறி, இலக்ஷ்மணரைக் கொண்டு குடத்தில் கங்கை கொண்டுவரச் செய்து, இலக்ஷ்மணனுடைய திருக்கரத்தால் விபீஷணனுக்கு இலங்கா ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து வைத்தார்.[1]

வானரர்கள் யாவரும் நன்று நன்று என்று மிகவும் ஸ்தோத்திரம் செய்தார்கள். பிறகு ஸுக்ரீவனும் விபீஷணனை அணைத்து, "ஹே விபீஷணரே! பரமாத்மாவாகிய ஸ்ரீ ராமருக்கு நாம் எல்லோரும் ஊழியக்காரர்கள். அந்த இரகுவீரர் உம்மிடம் கிருபை வைத்து உம்மைத் தம்முடைய பக்தரில் ஒருவராக நிதானித்தபடியால், நீரும் முக்கியமான சிஷ்யருமானீர். நீர் இராவணனை வதஞ் செய்யும் விஷயத்தில் உபாயமாகிய ஸஹாயஞ் செய்ய வேண்டும்" என்றார்.

இதைக்கேட்ட விபீஷணன், "ஹே கபிச்ரேஷ்டரே! நான் தேவநாதராகிய ஸ்ரீராமருக்கு உதவி செய்யத் தகுந்தவனோ? ஆயினும் எனக்கேற்பட்ட பக்தியினால் அவருடைய மனக்கொள்கைக் கிசைந்தபடி யென் சக்திபாராமல் ஊழியஞ் செய்யத் தயாராயிருக்கிறேன்" என்றார்.

இந்த சமயத்தில் இராவணனால் அனுப்பப்பட்ட சுகன் என்ற இராக்ஷசன், ஆகாய மார்க்கத்திலிருந்து கொண்டு ஸுக்ரீவனைப் பார்த்து, "ஹே வானர ராஜனே! இலங்கேசனாகிய இராவணன் உம்மைக்கண்டு கூறும்படி கட்டளை யிட்டதாவது:—"நீர் அவருக்குப் பிராதாவென்றும், வானரர்களுக்குத் தலைவரென்றும், இராஜ வம்சத்திற் பிறந்தவரென்றும், உமக்கும் மானிடருக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையென்றும், நான் மானிடனாகிய இராமன்

பத்தினியை அபஹரித்து வந்ததால் உமக்கு ஆகவேண்டியது ஒன்று மில்லை யென்றும், ஆகையால் நீர் உம்முடைய சைனியங்களுடன் கிஷ்கிந்தைக்கே செல்வது உமக்குத் தகுதி யென்றும், தேவர்களா லும் மற்ற யாவர்களாலும் பிரவேசிக்க முடியாத இலங்கைக்குள் அற்ப வலுவுடைய மானிடர்களும் கேவலம் குரங்காகிய நீங்களுமா பிரவேசிக்கப் போகிறீர்களென்றும், பிரவேசித்தாலும் உங்களாலாகக் கூடிய காரியமொன்றுமில்லை யென்றும், உமக்கு அறிவிக்கும்படி யெனக்குக் கட்டளை யிட்டார்" என்று தெரிவித்தான்.

இதைக்கேட்டுக்கொண்டிருந்த வானரவீரர்களிற் சிலர் சடுதி யில் ஆகாயத்திற் கிளம்பி அந்த ஸுகனைப் பிடித்துக் கட்டிக் குத்தி ஹிம்சிக்க ஆரம்பித்தார்கள். ஹிம்சையைப் பொறுக்கக்கூடாத ஸுகன் ஸ்ரீராமனை நோக்கி, ஓ இராஜசிரேஷ்டனே, அரசர்கள் தூதர்களை வதை செய்கிற வழக்கம் எங்குமில்லை. ஆகையால் இந்த வானர வீரர்களை யடக்கவேண்டுமென்று முறையிட்டான். அக்கூக் குரல் கேட்ட ஸ்ரீரகுவீரர் ஸுக்ரீவனை நோக்கி, சாரணனைக் கொல் வது அடாத காரியம். ஆகையால் சாரணனாக வந்த அந்த இராக்ஷ சனை ஒன்றும் செய்யவேண்டாம் என்று கூறினார். ஸுக்ரீவர் அந்த ஸுகனைக் காப்பாற்றி முன்னிருப்பிடம் செல்லலாம் என்றார். ஆகாய மார்க்கத்தில் செல்லும் அவன் வானரசிரேஷ்டராகிய ஸுக்ரீவரைப் பார்த்து ஓ வானரராஜனே! நான் எங்களுடைய மஹாராஜாவுக்குப் பதில் என்ன சொல்கிறது? அதைத் தெரிந்துக் கூறவேண்டுமென்று கேட்டான்.

ஸுக்ரீவர் அந்த சாரணனைப் பார்த்து "ஓ ஸுகனே! நீ இராவணனிடம் சென்று, ஓ இராக்ஷசாதமனே, என்னுடைய பிராதா வாகிய வாலியினுடைய ஸ்திதி யெவ்விதமோ அதையே நீயும் அடை யப்போகிறாய், நான் உன்னைப் புத்திர மித்ரர்களுடனும், இரத கஜ துரக பதாதிகளுடனும் வதை செய்யத் தயாராயிருக்கிறேன். நீ இரகுநாதருடைய பத்னியை யபஹரித்துக்கொண்டவனானபடியால், இந்த வுலகத்தை விட்டு மற்றெந்த வுலகத்துக்குத் தப்பிப் பிழைக்க ஓடினும் விடப்போகிறதில்லை. இது நிச்சயமெனத் தெரிந்துகொள் ளென்று நான் செப்பியதாக அறிவிக்க வேண்டியது" என்று பதி லளித்தார். சாரணனும் அவ்விதமே யென்று கூறிச் சென்றான்.

இதற்குள் சார்த்தூலன் என்ற மற்றொரு இராக்ஷசன் சமுத் திரக் கரைக்கு வந்து, அங்கு தங்கியிருக்கும் பெருத்த வானரசைனி

யங்களையும், தூதனைக் சென்ற ஸுகனுடைய கெதியையும் நேரில் பார்த்துக்கொண்டு போய் இராவணனிடம் தெரிவித்தான். இராவணன் தூதன் செப்பிய வார்த்தையைக் கேட்டுப் பெருமூச்சு விட்டுத் தனது அரண்மனையில் நீர்க்காலோசனை செய்துகொண்டிருந்தான்.

இராவணன் இலங்கையில் இவ்விதமிருக்க, ஸ்ரீராமமூர்த்தி ஸமுத்திரக் கரையில் வானரசைனியங்களுடன் தங்கியிருந்தவர், ஆழியினுடைய கொந்தளிப்பைப் பார்த்து ஆங்காரங்கொண்டு கண் சிவந்தவராகி, ஒப்பற்ற தம்பியைப் பார்த்து "ஓ இலக்ஷ்மணா! இந்த கர்வங்கொண்ட சமுத்திரராஜன் இதுவரையிலும் நம்மை வந்து பார்க்கவில்லை. இந்தக் குரங்குகளுடன் இந்த மானிடன் என்ன செய்யப் போகிறான் என்று நினைத்திருக்கிறான். பார்; இப்போது இக்கடலை வற்றச் செய்கிறேன். இந்த வானர சைனியங்கள் யாதொரு சிரமமின்றி யக்கடலின்மீது பாதசாரியாய் நடந்தே செல்லட்டும் என்று கூறித் தனது ஒப்பற்ற கோதண்டத்தை வளைத்து நாணேற்றி அம்புறுத் தூணியினின்று பிரளயகாலாக்கினிக்குச் சமமான ஓர் அஸ்திரத்தை யெடுத்துத் தொடுத்துக் கரணபரியந்தமிழுத்து, இந்தப் பாணத்தின் செய்கையை எல்லா உயிர்களும் பார்க்கட்டும். *நதம், நதியிவைகளுக்குப் பதியாகிய ஸமுத்திர ராஜனைச் சாம்பலாகச் செய்கிறேன் என்று கோபத்துடன் கூறினார். இவருடைய கோபக் குறியைக்கண்டு பூமிதேவி நடுங்கினாள்; அஷ்ட கெஜங்களும் திடுக்கிட்டன; பத்துத் திசைகளிலும் இருள் மூண்டன; ஸமுத்திரங்கலங்கின. அதிலுள்ள † திமிங்கலம், ‡ திமிங்கலகிலம், முதலை, மகரம் முதலிய நீர்வாழும் ஜெந்துக்கள் யாவுந்தாபமடைந்து பரிதபித்தன; கடல் ஒரு யோஜனை தூரம் தன் ஸ்தானத்தைவிட்டுப் பின் தாங்கினது.

"ஸமுத்திர ராஜன் நடுநடுங்கி ஒரு திவ்விய உருவெடுத்துப் பிரத்யக்ஷமாகித் தன்னிடமுள்ள இரத்னங்களைக் காணிக்கையாகக் கொண்டுவந்து, ஸ்ரீராமமூர்த்தி சந்நிதியில் வைத்து, அவர் பாதாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாகத் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து எழுந்து, தன்னிருகரங்களையுங் குவித்து நின்று, மூவுலகங்களையும் காப்பவராகிய "ஓ இராமமூர்த்தி! இந்த அண்டபிண்ட சராசரங்கள்

---

* நதம்—கிழக்கிலிருந்து மேற்கிலோடும் நதி.

† திமிங்கலம்—யானையை விழுங்கும் மீன்.

‡ திமிங்கலகிலம்—திமிங்கலத்தை விழுங்கும் மீ

யாவற்றையும் படைத்துக் காக்கும் கடவுளாகிய தங்களால் சிருஷ்டிக்கப்பட்டவன் நான். தங்களுடைய கோரிக்கையைத் தடுக்க எனக்கு சக்தியுண்டாகுமா? பஞ்சபூதங்களும் தங்களால் சிருஷ்டிக்கப்பட்டு, தங்களுடைய ஆணை கடவா தடங்கி நிற்கின்றன. ஓ பிரபுவே! நிர்க்குணப் பொருளாகிய தாங்கள் மாயையின் குணங்களைக் கிரகித்து, பஞ்சீகிருத ஸ்தூல பூதங்களைக்கொண்டு அண்டங்களையும், அந்த அண்டத்தில் கீழ் ஏழு மேல் ஏழு உலகங்களையும், அவைகளுக்குரிய ஏழு வகைப் பிறப்பினாலுண்டாகும் எண்பத்து நான்கு லக்ஷம் யோனி பேதங்களையு முண்டாக்கி வைராஜன் என்ற நாமத்தையும் அடைகிறீர்கள். அசக்தனாகிய நான் தாங்கள் லீலா விநோதமாக எடுத்து வந்த இந்த மானிட ரூப சொரூபத்தை எவ்விதம் அறிவேன். ஓ பிரபுவே! பசுக்களுக்குத் தடிக்கம்பு போல மூடர்களுக்குத் தண்டம் பிரயோஜனகரமானது. ஓ ஈசா! பக்தவற்சலராகிய தங்களை இப்போது சரணமடைந்தேன், எனக்கு அபயஸ்தம் கொடுக்கவேண்டும், இதோ வானரசைனியங்கள் இலங்கைக்குச் செல்ல வழி கொடுக்கிறேன்" என்று கூறினான்.

தீனதயாளுவாகிய ஸ்ரீ ராமபிரான் கோபந் தணிந்து, ஸமுத்திர ராஜனை நோக்கி, ஓ நதிபதி! இப்பாணம் வியர்த்தமாகக் கூடியதல்ல. ஆகையாலிதை ஏதாவது பிரதேசத்தில் விடலாம். இதற்கு ஓர் இலக்ஷியத்தைக் காட்டு என்று கேட்டார்.

சமுத்திரராஜன் ஸ்ரீராமர் கூறியதைக் கேட்டு, அந்தப் பாணத்தையும், அவரையும் பார்த்து, ஓ தயாநிதி! எனக்கு வடபாகத்தில் 'த்ருமகுல்யம்' என்று பிரசித்தி பெற்ற ஓர் பிரதேசமிருக்கிறது. அதில் பாபமே தொழிலாக அநேகர் இருந்து கொண்டு என்னை உபத்திரவப்படுத்தி வருகிறார்கள். அந்த இடத்திற்கு இந்த அஸ்திரத்தைப் பிரயோகப்படுத்துங்கள் என்று வணக்கமாய்க் கேட்டுக்கொண்டான்.

இரகுவீரர் உடனே அந்தப் பிரதேசத்துக்கு அப்பாணத்தைப் பிரயோகம் பண்ணினார். ஓர் க்ஷணப்பொழுதில் அங்குள்ள துஷ்டர்களை வதம் செய்து, அப்பாணம் மறுபடியுந் திரும்பி வந்து அம்புறாத் தூணியில் முன்போலத் தங்கியது.

இதைக்கண்ட ஸமுத்திரராஜன் சந்தோஷமடைந்து, இரகுநந்தனரைச் சேவித்து, ஓ மஹாநுபாவே! விசுவகருமாவின் குமாரனும், புத்திசாலியுமாகிய நளன், கட்டட வேலையிற் சமர்த்தன்,

திறமை வாய்ந்தவன், வரம் பெற்றவன். அவன் என்னுடைய ரூபமாகிய இந்த ஜலத்தின் மேல் அணை கட்டட்டும். உலகத்திலுள்ள எல்லா ஜனங்களும், இந்த ஸேதுவில் வந்து ஸ்நானஞ் செய்வதினால் அவர்களுடைய சகல பாபங்களையும் நிவர்த்திக்கும் தங்களுடைய சக்தியைத் தெரிந்து கொள்ளட்டும் என்று சொல்லி ஸ்ரீராமனை நமஸ்கரித்து விடைபெற்று மறைந்தான்.

பிறகு இரகு நந்தனர், இலக்ஷ்மணர், ஸுக்ரீவர் இவர்களை நோக்கி, ஸுக்ரீவரைக் கொண்டு நளனை வரவழைத்து, வானர வீரர்களுடைய ஒத்தாசையைக் கொண்டு ஸேதுபந்தனம் செய்ய அவனுக்குக் கட்டளையிட்டார். நளனும் மிகுந்த சந்தோஷ மடைந்தவனாய், வானர வீரர்கள் மிக்க சாமர்த்தியத்துடன் கொண்டுவந்து கொடுக்கும் மலை, விருக்ஷம் முதலியவைகளைக் கொண்டு அழுத்தமாகவும் அகலமாகவும் நூறு யோசனை தூரம் தீர்க்கமானதாகவும் முன்னா ஸேதுவைக் கட்ட ஆரம்பித்தான்.

## 4-வது சருக்கம்.

ஸ்ரீ ராமர் ஸேதுபந்தனம் செய்ய எத்தனிக்கும்போது அங்கு உலகத்திலுள்ள ஜீவகோடிகளின் ஹிதத்தைக் கருதி இராமனாதன் என்று ஓர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜித்து எந்த மானிடனாயினும், இந்த இராமேசுவரனாகிய சிவனைத் தெரிசனம் செய்து சேதுவை நமஸ்கரித்து சங்கற்பம் செய்துகொண்டு, புறப்பட்டு நியமத்துடன் வாரணாசியை யடைந்து கங்கையில் ஸ்நானம் பண்ணி அங்கிருந்து கங்கையையும், மணலையும் கொண்டுவந்து, ஸ்ரீ ராமனாதருக்குக் கங்கையை அபிஷேகித்து, ஸேதுவையடுத்த ஸமுத்திரத்தில் மணலைப் போடுவானாகில் அவன் பிரம்ம சொரூபத்தை யடைவான், சந்தேகமில்லை என்று வரமளித்தார். ஸேது பந்தனம் செய்ய ஆரம்பித்த முதல்நாளில் பதினான்கு யோஜனையும், இரண்டாம் நாளில் இருபது யோஜனையும், மூன்றாம்நாளில் இருபத்தொரு யோஜனையும், நான்காம் நாளில் இருபத்திரண்டு யோஜனையும், ஐந்தாம்நாளில் இருபத்துமூன்று யோஜனையுமாக வானர சிரேஷ்டனாகிய நளன் ஸேதுவைக் கட்டிமுடித்தான். அந்தச் செய்கையின் மார்க்கமாகவே வானர சைனியங்கள் நூறு யோஜனை தூரம் நடந்து ஸுவேலமலை போய்ச் சேர்ந்தார்கள்.

ஸ்ரீராமர் மாருதியின் மீதும், இலக்ஷ்மணர் அங்கதன் மீதும் ஆரோகணித்துச் சென்றார்கள். அவர்களும் ஸ்வேல பருவதம் போய்ச்சேர, ஸ்ரீராமர் இலங்கையைப் பார்க்க விரும்பி, மிகவும் உயரமான அப்பருவதத்தின்மீது ஏறினார். அம் மலையின் சிகரத்தில் நின்று, அகண்ட விஸ்தாரமுடையதாகி, ஆழ்ந்த அகழிகளால் சூழப்பட்டு, ஸ்வர்ணமயமான மதில்கள் ஆகாயத்தை யளாவி நிற்க, அவைகளில் சதக்னி என்ற ஆயுதங்களும், பல விதமான யந்திரங்களும் ஸ்தாபிக்கபட்டு நகரத்துக்கு அரணாக அமைக்கப்பெற்று, நான்குபுறத்திலும் நான்கு வாயிலாகிய கோபுரங்களோடும், அதனுள் பலவிதமான சித்திரத் துவஜங்களாலும், மகர தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மாடமாளிகைகள் நெருங்கிய அநேக வீதிகளோடும், விளங்காநின்ற இலங்காபுரியைப் பார்த்தார்.

அச்சமயம் இலங்கையின் வடக்குக் கோபுரத்தின்மீது, மஹா பலம் பொருந்திய வீரர்களான மந்திரிகள் புடைசூழ, இரத்ன மய மான தண்டங்களுடைய வெண்குடை நிழற்கீழ், கார்மேகத்துக்குச் சமானமான காந்தி பக்துத்திசையிலும் வீசவும், நீலமயமான பரு வதத்தின் சிகரம் போன்ற பத்துக் கிரீடங்கள் பிரகாசிக்கவும், சூரி யனுக்கொப்பான ஜோதியோடு விளங்கும் தசமுகத்தோடும் கூடிய இராவணன் வீற்றிருந்தான்.

அப்போது ஸ்ரீராமரால் விடுவிக்கப்பெற்று வந்த சாரண னாகிய ஸுகன் நகைபற்ற முகத்தோடு கூடினவனாகி இராவணேஸ்வர னிடத்தில் வந்து வணங்கி கைகூப்பி நின்று "ஓ இராக்ஷஸ மஹாராஜ! நான் தாங்கள் கூறியபடி ஸமுத்திரத்தின் வடகரையிலிருந்த ஸுக்ரீவனிடம் சென்று தெரிவித்தேன். அங்குள்ள வானரவீரர்கள் என்னைப் பிடித்துக் கட்டிக் கையால்குத்தியும் பல்லால் கடித்துப் நகத்தால் கீறியும் இன்னும் பலவிதமான ஹிம்சை செய்தார்கள். அத் துன்பம் பொறுக்காமல் இராமரைப் பார்த்து ஓ இராம என்னைக் காப்பாற்றவேண்டுமென்று ஓலமிட்டேன். அந்த இரகு சிரேஷ்டர் தூதனை யொன்றும் செய்யாமல் விட்டுவிடுங்களென்று கட்டளை யிட் டார். அந்த வீரர்கள் என்னைவிட்டுவிட்டார்கள். நான் அந்தப்பெருத்த வானர சைனியங்களைப் பார்த்து நடுக்கத்துடன் திரும்பி யிவ்விடம் வந்து சேர்ந்தேன். ஓ இராக்ஷசகாவல! தேவர்களுக்கும் அசுரர் களுக்கும் எப்படி பொருத்தமில்லையோ அதுபோல இராக்ஷசர்

களுக்கும், வானரர்களுக்கும் சேர்க்கை கிடைக்கமாட்டாது. அந்த வானர சைனியங்கள் முன்னதாக நம்முடைய கோட்டைவாசலுக் கருகில் வந்து சேருவார்கள். அவர்களிவ்விடம் வருவதற்கு முந் திப்ப, சீக்கிரமாக ஸீதையை இராமரிடத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பிக்க வேண்டும். இல்லாதவரையில் நாம் முன்னதாக அவர்க ளிடம் சென்று யுத்தந்துக்காவது ஆரம்பிக்கவேண்டும். இவ்விரண்டி லொன்றைத் தாங்கள் கவனிக்கவேண்டும்

ஓ தேவ! ஸ்ரீராமர் நானிவ்விடம்வரும்போது என்னை அழைத்து, "ஓ ஸுக! நீ இராவணனிடத்திற் சென்று, அவன் எந்த தைரியத் துடன் வந்து ஸீதையைத் திருடினனோ அந்த தைரியத்துடனும் ஸேனைகளுடனும் புத்ரமித்திரர்களுடனும் வந்து அவனுடைய ஆண் மைத்திறத்தை யிப்பொழுது காண்பிக்கவேண்டும். நாளைபதினம் காலையில் அகழியோடுங் கோட்டை மதில்களோடும் வீதிகளோடும் மாடமாளிகைகளோடுங் கூடிப் பொன்மயமாகப் பிரகாசிக்கும் இலங் காபுரிப் பட்டணத்தையும் அதிலுள்ள இராக்ஷசர்களையும் என்னு டைய கோதண்டத்தில் நின்று விடுபடும் உக்கிரமான பாணம் சின் குலையச் செய்வதை, அவனுடைய இருபது கண்களாலும் பார்க்க லாம். அப்போது அவன் சக்தியைக்கொண்டு அவைகளைக் காப்பாற் றிக் கொள்ளவேண்டிய பிரயத்தனத்தைச் செய்து காட்டலாம்" என்று நான் செப்பியதாகக் கூறக்கடவாயென் றுரைத்துப் பின் மௌனமாயிருந்தார்.

ஓ இராக்ஷச காவலரே! அந்தப் புருஷ சிரேஷ்டரான ஸ்ரீராமர், அவர் தம்பி இலக்ஷ்மணர், அவரிடம் சிநேகம் பெற்ற ஸுக்ரீவர், தற் போது தங்களிடமிருந்து விடுபட்டு அவர்களிடம்போய் அடைக்கலம் புகுந்த தங்கள் தம்பியாகிய விபீஷணர் இந்நால்வரும் ஒரே மனதாய் இந்த இலங்கையை யழிக்க எண்ணங்கொண்டிருக்கிறார்கள். அவர் கள் தாம்கொண்ட கோலத்தை நிறைவேற்றும் சக்தி வாய்ந்தவர் கள். அவர்களுக்குத் துணையாக வந்திருக்கும் வானர சைனியங்க ளோ இந்த நகரத்தை பெரித்துச் சாம்பலாக்கும் திறமை வாய்ந்த சூரர்களாகவு மிருக்கின்றார்கள்

மேலும் அந்த இரகுவீரருடைய ரூபத்தையும், தீரத்தையும், கோதண்டந்தரித்திருக்கும் கோலத்தையும் நான் பார்த்தமட்டில், மற்ற மூவருமிருக்கட்டும், அவர் ஒருவரே இந்த இலங்கையை நாசம் செய்வார் என்று எனக்குத் தோன்றுகிறது. கணக்கற்று நிறைந்

திருக்கும் வானரசேனையைப் பாருங்கள். பருவதத்துக்குச் சமான மான ஆகிருதியுடைய அந்த வானரங்கள் குதூகலத்துடன் ஆர்ப் பரிப்பதைச் சற்று கவனியுங்கள். அவர்களைக் கணக்கிட்டுச் சொல்லத் தான் முடியுமா ? ஆனாலும் அவர்களில் முக்கியமானவர்களை எனக் குத் தெரிந்த மட்டில் கூறுகிறேன்; கேளுங்கள்.

அதோ இலங்கையை யெதிர்நோக்கிக் கர்ச்சித்துக்கொண்டு லக்ஷம் யூதபர்கள் சூழ மத்தியில் வசிப்பவன் ஸுக்ரீவனுடைய ஸேனாதிபதியாகிய நீலன்; அக்கினியின் குமாரன்.

இதோ சூரியனைப்போன்ற காந்தியும், பருவதம்போன்ற தேக மும், அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற முகமும் உடையவனாய் அடிக்கடி தன் நுனிவாலை யாட்டிக்கொண்டிருக்கும் இவன், மஹா பலசாலியாகிய வாலியின் குமாரனும், யுவராஜனுமாகிய அங்கதன்.

அந்த அங்கதனுக்குச் சமீபத்திலிருப்பவன், நம்முடைய இரா க்ஷசர்களால் காக்கப்பட்ட இந்த இலங்கைநகருள் ஒருவரு மறியா மற் பிரவேசித்து அசோக வனத்திலிருந்த ஸீதையைக் கண்டு பேசினவன் எவனோ, பிறகு தங்களுடைய குமாரனைக் கொன்றவன் எவனோ, இந்நகர் தீக்கிரையாகக் கண்டவன் எவனோ, அந்தப் பிர சித்தி பெற்ற வானரனாகிய அனுமான் என்று கூறும் வீரன்.

அசுர குருவாகிய சுக்கிராச்சாரிக்குச் சமமானவனும், மிகுதி யான புத்தியையும், வெல்லுதற்கரிய பராக்ரமத்தையு முடையவனு மாகிய இவன் ஸ்வேதன் என்ற நாமமுடையவன். ஏதோ ஓர் அவ சர காரிய நிமித்தம் ஸுக்ரீவனிடம் வந்து மறுபடியுந் திரும்பிப் போகிறான் அதோ பாருங்கள்.

இவன் பகைவராகிய * மாதங்கத்துக்குச் சிங்கம் போன்றவ னும், நிகரற்ற பராக்கிரம முடையவனுமாகியவன், தம்பன் என்ற நாமமுடையவன், இலங்கையை நாசம் செய்யத் தகுதியானவன்

ஓ இராக்ஷச சிரேஷ்ட! பாருங்கள்; இதோ ஒரு வானரன் இந்த இலங்கையைப் பொசுக்குகிறவன் போல் பார்க்கிறானல்லவா, இவன் கோடி யூதபர்களுக்கு எஜமானுகி சரபன் என்ற நாமம் அடைந்தவன்

இவன் மிகுந்த வீரத்தன்மை பூண்டவன். பனஸனின் குமா ரன், த்விவிதன் என்ற நாமமுடையவன், கோடி யூதபர்களுக்கு எஜமானன்.

* மாதங்கம்—யானை.

இவன் விஸ்வகர்மாவின் புத்திரன், மிகுந்த வலுவுள்ளவன், நளன் என்ற பெயருடையவன், சிற்பவேலையில் மிகத் தேர்ச்சிபெற்றவன், இவன் தான் சமுத்திரத்திற்கு அணை கட்டினவன்.

அங்கு வந்து தங்கியிருக்கும் வானரர்களை வர்ணிக்கவாவது, கணக்கிட்டுச் சொல்லவாவது யாவரால் முடியும்? எல்லோரும் சூரர்கள், பலமுற்ற சரீரத்தைப் பெற்றவர்கள், யுத்தத்தில் மிக்கவிருப்பமுடையவர்கள். கணக்கற்ற இராக்ஷசர்களுடன் கூடிய இலங்கையை க்ஷணப்பொழுதில் சூர்ணிக்கச் செய்யுந் திறமை வாய்ந்தவர்கள்.

இத்தகைய வானர சைனியங்களின் தொகை இருபத்தோராயிரம்.

புலஸ்தியன் வமிசத்தி லுற்பவித்து, நான்கு வேதங்களுங் கற்று, அவைகளிலுள்ள முடிவுப பொருளை முற்று முணர்ந்த ஓ இராவணேஸ்வர! நான் கூறிய அந்த வானர சைனியங்களின் பராக்கிரமம் நாம் மெச்சத்தக்கதா யிருந்த போதிலும், ஆழ்ந்து யோசித்துப பார்க்கில் அவைகள் பிரபஞ்சமே ருபங்கே. பிரத்தியட்சமான அந்த இராமர் மானிடரே. மானிடராக இருந்தும், வானர சைனியங்களைத் தமக்கு ஓர் துணையாக நம்பி அவர்களை அதிரசம் போல் பக்ஷணம் பண்ணும் நம்மிடத்தில் யுத்தத்துக்கு வந்திருப்பதைச் சற்றுக் கவனித்து விஞ்ஞானத்துடன் ஆராய்ந்து பார்க்கில், அந்த வானர சைனியங்கள் குரங்குகள் அல்ல; இராமரும் மானிடரல்ல. மற்றும் யார் என்பீர்களாயில், அந்த வானரர்கள் தேவலோக வாசிகளாகிய தேவர்களே; பிரத்யக்ஷ ஸ்ரீ ராமரோ! சாக்ஷாத் மஹா விஷ்ணுவே. மேலும் இந்த யுத்தத்துக்குக் காரணமாகிய ஸீதையை வினவிலோ லோகங்களுக்கு மாதாவும், பிரபஞ்ச சொரூபிணியுமாகிய சிற்சத்தியே. அந்த மஹாவிஷ்ணு சிற்சத்தியினிடமிருந்து ஸ்தாவர ஜங்கம சொரூபமான எல்லா வுலகங்களையு முண்டாக்கினர். ஆகையால் ஸீதையும ஸ்ரீராமரும், உலகத்துக்குத் தாயுந்தந்தையு மானவர்கள் என்று வெளிப்படையாய்ப்போல் விளங்குகின்றன. இந்த இரகசியத்தைத் தாங்கள் அறிந்தீர்களோ அறியவில்லையோ அந்த விஷயம் அற்ப புத்தியுள்ள எனக்குத் தோற்றவில்லை. அந்த ஜெகத்காரணியாகிய ஸீதையைத் தாங்கள் அபஹரித்து வந்தீர்கள்.

ஓ அறிவிற் சிறந்த கொற்றவ! இந்த ஸ்தூல சரீரம் அழியக்கூடியது, பஞ்சபூதங்களின் அமிசத்திலுண்டானது. எப்படியெனில்:—பிருதுவியிற் பிருதுவி அஸ்தி, அதில் அப்பு மாமிசம்,

அதில் அக்கினி சர்மம், அதில் வாய்வு நரம்பு, அதில் ஆகாசம் ரோமம், ஆக 5-ம் பிருதுவியின் கூறு. அப்புவில் அப்பு மூத்திரம், அதில் பிருதுவி உமிநீர், அதில் அக்கினி வேர்வை, அதில் வாய்வு உதிரம், அதில் ஆகாசம் சுக்கிலம், ஆக 5-ம் அப்புவின் கூறு. தேயுவிற்றேய்வு நித்திரை, அதிற் பிருதுவி பசி, அதில் அப்பு [illegible] அதில் வாய்வு ஆலசியம், அதில் ஆகாசம் சங்கமம், ஆக 5-ம் தேயுவின் கூறு. வாயுவில் வாய்வு ஓடல், அதில் பிருதுவி படுத்தல், அதில் அப்பு நடத்தல், அதில் தேயு உட்கார்தல், அதில் ஆகாசம் [illegible]டல், ஆக 5-ம் வாயுவின்கூறு. ஆகாசத்தில் ஆகாசம் மோகம், அதில் பிருதுவி ராகம, அதில் அப்பு துவேஷம், அதில் தேயுவு பயம், அதில் வாய்வு லச்சை ஆக 5-ம் ஆகாசத்தின் கூறு. இந்த இருபத்தைந்து தத்துவங்களோடுங் கூடி, துர்க்கந்தமுள்ள மலம் நிறைந்ததும் அஹங்காரத்துக் கிருப்பிடமுமான சரீரத்தில் அபிமானம் வைத்து அற்பமாகிய சரீர ஸுகத்தையே விரும்பியவர்களுக்குக் கெதி எப்படி யுண்டாகும்? அவர்களை இரக்ஷிப்பவர்கள் எவர்கள்? இச்சரீர ஸுகத்துக்காக பிரும்மஹத்தி முதலிய பாதகங்களைச் செய்கிறார்கள். ஸுகங்களை அநுபவிக்கும் இச்சரீரமானது இங்கு விழுந்து விடுகிறது. பிறகு ஜீவன்யாதனு சரீரத்தைப்பெற்றுத் தான் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தக்க பலனை ஸ்வர்க்கம், நரகம் இந்த இடங்களிற் சென்று அநுபவிக்கிறது.

இச்சாவசத்தராய் அஞ்ஞானத்திற் கட்டுண்ட ஜீவர்களை [illegible] தனது காருண்யத்தால் பிரமதேவனுப் நின்று ஜீவாங்குரத்தால் அசைவித்து, அந்தக்கரண மென்னுங் கண்ணாடியைக்காட்ட அதிற் பிரதிபலித்து, இந்த ஸ்தூலசரீரத்தைத் தாமென்றும், புவனபோகங்களைத் தமதென்றும், அபிமானித்து வந்த ஜீவர்களது சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷி சைதன்னியம் என்பவைகளின் பேதங்களை யறியக்கூடிய அறிவினது கண்ணை ஆவரணசக்தி மூடிவிடுகிறது. எதுவரையில் தேகமேதானென்றும், அதை யொட்டிவரும் போகங்கள் தனதென்றும் அபிமானிக்கிறானோ அதுவரையில் அவனுக்கு ஜெனனம், மரணம் ஒழியப்போகிறதில்லை.

ஆகையால் மஹாபுத்திசாலியாகிய தாங்களும் தேகபோகத்தில் வைத்த அபிமானத்தை அறவே விட்டுவிடுங்கள். ஆத்மாவானது நிர்மலம், சுத்தம், விஞ்ஞான சொரூபம், சலனமற்றது, அழிவற்றது, அஞ்ஞான வசத்தால் பந்தத்தில் கட்டுப்பட்டு மோஹமடை

கிறதை யறிந்து, க்ஷேத்ரம், மனைவி, புத்திரர் முதலியவைகளி லுண்டாகும் ஆசையை அடியோடு ஒழியுங்கள். நாய், பன்றி முதலிய சரீரமெடுத்தாலும், ஒழிவடைந்திருந்தால் விடுதலையடையலாம்.

நிஷ்காமிய புண்யத்தைச்செய்து மோக்ஷத்தை யடையுந் திவ்விய தேகத்தைப் பெற்றும், விசேஷித்த விவேகம் நிறைந்த பிராம்மணத் தன்மையை யடைந்தும், அதிலும் பாரத வருஷத்தில் மிகவுந் [illegible]மான கருமபூமியிற் ஜெனித்தும், எந்த புத்திமானுவது தேகத்திலும் போகத்திற்கும் ஸ்வாதீனனுவானு? ஆகையால்தாங்கள் பிராம்மணாரகவும், புலஸ்தியவமிசத்திற் பிறந்தவாரகவும் இருந்தும், அஞ்ஞானமுடையவனைப்போல் ஏன் போகங்களை அநுசரிக்கிறீர்கள்? இனியாவது பற்றுதலை விட்டு அந்த ஸீதா தேவியை ஸ்ரீராமரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பித்து, பக்தியுள்ள மனதுடன் அந்த பரமாத்மாவான ஸ்ரீரகுவீரரை யடுத்து அவருடைய பாதாரவிந்த சேவையி லீடுபட்டு முக்தியைபயடைய வழி தேடிக் கொள்ளுங்கள். இவ்விதஞ் செய்தால் இதுவரையிலுஞ் செய்த எல்லாப் பாவங்களி னின்று விடுபட்டு விஷ்ணுலோகம் செல்வீர்கள். இல்லாவிடில் மறுபடியுந் திரும்பக்கூடாத கீழ்ப் பிரதேசத்தையே யடைவீர்கள். என் வார்த்தையை அங்கீகரிக்க வேண்டும். நான் தங்களுடைய ஹிதத்தை நாடியே சொல்லுகிறேன்.

ஓ பிரபுவே! தாங்கள் சரணம் அடையத் தகுதியானவரும், மரகதப்பச்சையின் பிரகாசம் போன்ற தேக காந்தியுடையவரும், ஸீதையுடன் கூடியவரும், தரிக்கப்பட்ட கோதண்டத்தையும் பாணத்தையு முடையவரும், இலக்ஷ்மணர், ஸுக்ரீவர், விபீஷணர், இவர்களால் சேவிக்கப்பட்ட ஸ்ரீபாதங்களை யுடையவரும், ஸ்ரீரகுவமிசத்திற் பிறந்தவருமாகிய ஸ்ரீஹரியைப் பஜனை செய்யுங்கள்," என்று கூறினன்.

## 5-வது சருக்கம்.

புத்தியிற் சிறந்த ஸுகசாரணர், அஞ்ஞானத்தை யடியோடு தொலைக்கும் ஞானமார்க்கமான மொழிகளைக்கூற, அந்த கிராதக சிந்தையுடைய தசக்கிரிவன் கோபங்கொண்டு தனது கண்களில் நின்று அக்கினிப் பொறி பறக்கச் சிவந்த நேத்திரங்களையுடையவனுகி, தனக்கு ஹிதத்தைத் தேடிய ஸுகனைப் பார்த்து, "ஏ அற்

புத்தியுள்ளவனே! நீ என்னை அநுசரித்து ஜீவிக்கிறவன். அப்படிக் கிருந்தும் எனக்கோர் ஆசிரியனைப் போல் பேசுகிறாய். நான் மூன்று உலகத்தையும் சிக்ஷிக்கிறவன். எனக்கு நீயா புத்தி போதிக்கிறவன். உனக்கு வெட்கமில்லையா? ஆயினும் நீ எனக்கு முன்செய்த உபகாரத்தை நினைக்காவிடில் இப்போதே யுன்னை வதைசெய்வேன். நீ கொல்லத்தக்கவனாயினும் நான் உன்னை யிப்போது காப்பாற்றினேன். ஓ மூட! இம்மாதிரி நீ எனக்குப் போதிப்பது தகுதியல்ல. ஆகையால் இப்போதே இந்த இடத்தை விட்டுச் செல்லலாம்" என்று கடினமாகக் கூறினான். ஸுகா அந்த வார்த்தையைக் கேட்டு இதுவே பெரும் அநுக்கிரகம் என்று கூறி யவ்விடம் விட்டுச் சென்றார்.

இந்த ஸுகா முதலிய ஜென்மத்திற பிராம்மணராக இருந்தவர். பிராம்மணர்களுக்குள் மிகச் சிறந்தவர். பிரம்ம சொரூபத்தை யறிந்தவர். வானப்பிரஸ்த விதிப்படி அரண்யத்திலிருந்து தனக்குரிய காரியங்களைச் சிரத்தையுடன் புரிந்துவந்தார். மிக்க மேதாவியாகி இந்த அந்தணர் தேவர்கள் விருத்தி யடையவும் அஸுரர்கள் க்ஷயமடையவும் கருதி, இடைவிடாமல் அதற்குத் தகுந்த யாகம் முதலிய கிருத்தியங்களைச் செய்து வந்தார்.

ஸுகர் பிரதினமும் இவ்விதம் செய்து வருவதை யறிந்து, இவர் தேவர்களுடைய நன்மையில் முயற்சி யுடையவரெனத் தெரிந்து, இவரிடம் இராக்ஷசர்களுக்கு விரோதமுண்டாயிற்று. வஜ்ரதம்ஷ்ட்ரன் என்ற பிரஸித்தியுடைய ஓர் இராக்ஷசன், இவருக்குத் தீங்குசெய்ய வேண்டுமென்று கருதி சமயத்தை யெதிர்பார்த்துக்கொண் டிருந்தான்.

ஒருபகல் அகஸ்திய முனிவர் அந்த ஸுகருடைய ஆச்சிரமத்துக்கு வந்தார். ஸுகா எழுந்து அகஸ்திய முனிவரை வணங்கிப் பூஜித்து "ஓ தேவ! எனது கிருகத்தில் தாங்கள் இன்றையதினம் போஜனம் செய்யவேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடன் கேட்டுக் கொண்டார். அகஸ்திய நும் ஒப்புக்கொண்டு ஸ்நானம் செய்யச் சென்றார். அந்த சமயத்தில் காலத்தை யெதிர்பார்த்துக்கொண் டிருந்த வஜ்ரதம்ஷ்ட்ரன் என்ற அரக்கன், அகஸ்திய முனிவரைப்போல உருவமெடுத்து ஸுகரிடம் வந்து அவரைப் பார்த்து "ஓ பிராம்மணோத்தம! நீர் கோரியபடி எனக்குப் போஜனம் அளிப்பதில் மாமிஸத்துடன் அன்னம் படைத்தல்வேண்டும். நான் வெகு கால

மாக மேஷ மாமிஸம் புஜிக்கவில்லை" என்றான். இதைக்கேட்ட ஸுதர் சடுதியில் வெளியே சென்று மேற்கண்ட மாமிஸத்தைச் சேகரித்துக் கொடுத்துப் பக்குவம் செய்து வைக்கும்படித் திட்டம் செய்தார். அகஸ்திய முனிவர் தீர்த்தக்கரை சென்று ஸ்நாதி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஸுதர் ஆச்சிரமத்துக்குள் பிர வேசித்துப் போஜனத்துக் குட்கார்ந்தார். அப்போது மேற்கூறிய வஜ்ரதம்ஷ்ட்ரன், ஸுதருடைய மனைவியைப்போல் மிகவும் ஸுந்தர மான வடிவெடுத்து, ஸுதர்பத்தினியை உள்ளேயே சற்று தாமதிக் கச் செய்து தான் நன்று பக்குவம் செய்த மனுஷ்ய மாமிஸத்தைக் கொண்டுவந்து அகஸ்தியர் இலையிற் பரிமாறிவிட்டு மறைந்தான். அகஸ்திய முனிவர் மனுஷ்ய மாமிஸத்தைப் பார்த்துக் கோபங் கொண்டு ஸுதரை நோக்கி "ஓ துர்ப்புத்தியுள்ளவரே! பரிசுத்தமில் லாத மானுட மாமிஸத்தை யல்லவா எனக்களித்தீர், ஆகையால் நீர் இராக்ஷசனாகிமானுட மாமிஸத்தைப் புஜிக்கக்கடவாய்" என்று சாபங் கொடுத்தார். முனிவர் இவ்விதம் சபித்தவுடன் ஸுதர்பயந்து "ஓ அகஸ்திய முனிவரே! நீர் முன்னம் மாமிஸம் வேண்டுமென்று கூற வில்லையா? ஆகையால் மாமிஸம் ஏற்படுத்தியதை யறிந்தும் எனக்கு ஏன் சாபம் கொடுக்கிறீர்" என்று வினவினார்

ஸுதருடைய வார்த்தையைக் கேட்ட அகஸ்திய முனிவர் ஞானதிருஷ்டியால் நோக்கிப் பார்த்து இந்தக் காரியம் இராக்ஷசன் செய்ததென் றறிந்து அவரை நோக்கி ஓ ஸுதரே! உமக்குஅபகாரம் செய்யவேண்டி யிந்தக்காரியத்தைச் செய்தவன் ஓர் இராக்ஷசன். முனி சிரேஷ்டரே! நான் விசாரிக்காமல் சாபங் கொடுத்துவிட்டேன். என்வாக்கு வீண்போகாது. ஆயினும் நீர் இராக்ஷச ரூபத்தைப் பெற்று இராவணனுக்கு உதவி புரிந்து கொண்டிரும். அப் பொழுது ஸ்ரீராமர் தசக்கிரீவனை வதஞ் செய்வதற்காக வானர சைனியங்களுடன் இலங்காபுரிக்குச் சமீபத்தில் வரப்போகிறார். அதை யறிந்த இராக்ஷச காவலன் உம்மை, சாரணனுக இருநந்த னரிடம் அனுப்புவான், நீர் சாரணனுகச் சென்று ஸ்ரீராமரைப் பார்த்து, அவருடைய தெரிசன மஹத்வத்தால் இந்த சாபத்தில் நின்று விடுபட்டு, தசக்கிரீவனுக்குத் தத்துவஞானத்தை யுபதேசிக்க அவன் உம்மேல் வெகுளியுற்று அவ்விடத்தைவிட்டேகச் செய்வன், பிறகு நீர் முக்தனுகிச் சிறந்த ஸ்தானத்தை யடைவீர்" என்று பதி லுரைத்தார்.

இவ்விதம் அகஸ்திய முனிவர் கூறிய வார்த்தையைக் கேட்ட பிராமண சிரேஷ்டரான ஸுகர் அவ்வாறே இராக்ஷசனுகி இராவணனிடம் சென்று அவன் ஏவற்காரரில் ஒருவராயிருந்தார். இப்போது அவர் அந்த தசக்கிரீவனுல் ஏவப்பட்டு சாரணராக வந்து, பரமாத்மாவாகிய ஸ்ரீராமர், தம்பியாகிய இலக்ஷ்மணருடனிருக்கச் சேவித்து இராவணனிடம் சென்று அவனுக்கு ஞானத்தை யுபதேசித்துப் பிறகு முன்போலப் பிராமணனுகி * வைகானஸர்களுடன் வாசஞ்செய்தார்.

இலங்கேசன் சமுகத்தைவிட்டு ஸுகர் சென்ற பின்பு, தசக்கிரீவனுக்கு மூதாதையும், புத்தியிற் சிறந்தவனும், நீதியிற் பேர் போனவனும், தன்னுடைய பேரனிடத்தில் பிரியமுள்ளவனுமாகிய மாலியவான் இராவணனிடம் வந்து மிகவும் ஒழிவடைந்த மனத்துடன் அரக்கர் குலசிகாமணியாகிய தசமுகனைப் பார்த்து, "ஓ அரசே! நானிப்போது உன்னுடைய குலவிருத்தியைக் குறித்துச் சொல்லப்படும் வார்த்தையைக் கவனித்துக் கேள். அச்சொல் உனக்கு ஹிதமில்லாவிடில் பிறகு உன்னிஷ்டம்போல் செய்யலாம். ஓ என்னருமைத் தவப் பேருகிய தசக்கிரீவ! நீ யிப்போது உனக்கு எதிரியாக்கிக்கொண்ட ஸ்ரீராமருக்கு இஷ்டநாயகியாகிய ஜானகியை எப்போது இலங்காபுரியிற் கொண்டு வந்து சேர்த்தாயோ அது முதல் அபசகுனங்களை யிங்கு காணப்படுகின்றன. அந்த அபசகுனங்கள் மிகப் பயங்கரமும், நாசமடையக் காரணமுமானவைகள். அவைகள் யாவையெனில், பயங்கரமான குமுறலும் இடிமுழக்கமுமுடைய கறுத்தமேகங்கள் இலங்கைப் பட்டணமெங்கும் அநேகமான இரத்த மழை வருஷிக்கின்றன; தேவ பிம்பங்கள் உரோதனம் செய்கின்றன; அந்த பிம்பங்களின் மேலிருந்து வியர்வையுண்டாகின்றன; அவைகள் அசைகின்றன; காளி, துர்க்கை முதலியவர்கள் தங்கள் வெண்ணிறமுள்ள வக்கிரதந்தங்களை வெளிக்காட்டி ஹாஸ்யம் செய்கின்றார்கள். பசுக்களிடம் கழுதைகளுண்டாகின்றன. எலிகள், ஒணுன்களுடனும், பூனைகளுடனும் சண்டை போடுகின்றன. ஸர்ப்பங்கள் கருடனுடன் கலகம் செய்கின்றன. காலன், கிருஷ்ணவர்ணம், பிங்களவர்ணம் இவைகள் பொருந்தி, மிக்க உயரமும் விகாரமுமுள்ள தலையற்ற முண்ட சரீரத்தைப் பெற்று எல்லாருடைய கிரகத்திலும் ஒவ்வொரு சமயத்திற் காணப்படுகிறான். இவைகளைத்

* வைகானஸர்—வனவாசிகள்.

தவிர இன்னும் மற்றுமுள்ள அபசகுனங்களும் காணப்படுகின்றன. ஆகையால் புலஸ்தியன் வம்சத்தைக் காப்பாற்றுவதற்கு, நீ கொண்ட கோபத்தை விட்டு மனதில் ஒழிவைப்பெற்று, ஸீதையைக் காணிக்கையாகச் சில பொருள்களோடு ஸ்ரீராமரிடம் அதிசீக்கிரமாகக் கொண்டு போய் அர்ப்பணம் செய்யவேண்டும். ஸ்ரீராமரை நாராயணனென்றே யறிந்து அவரிடம் உண்டாக்கிக்கொண்ட துவேஷத்தை விட்டுவிட வேண்டும்.

ஆத்மஞான முடையவர்கள் அந்த இரகுவீரருடைய பாதங்களாகிய தெப்பத்தைப்பற்றித் தாங்கள் செய்யும் பக்தி மார்க்கத்தால் பரிசுத்தமான உள்ள முடையவர்களாகி ஸம்ஸாரக்கடலைத் தாண்டுகிறார்கள். ஆகையால் ஸ்ரீராமன் மானிடனல்ல; எல்லாருடைய இருதயத்தில் வசிக்கும் பரமாத்மா; அத்தகைய ஸ்ரீராமரை பக்தியுள்ள மனதுடன் பஜனம் செய்வாயானால் நீ கெட்ட நடத்தையுள்ளவனாயினும் பரிசுத்தனாகி விடுவாய். நம் குலத்துக்கு மங்களமுண்டாக வேண்டி நான் கூறிய வார்த்தையைக் கேட்க வேண்டும்" என்றான்.

தசக்கிரீவன் தனது பிதாமகனாகிய மாலியவான் கூறிய ஹித வசனத்தைக் கேட்டு, துஷ்டநடையைப் பின்பற்றிக் காலதண்டத்துக் கிலக்காகுவதை முன்னிட்டு அம்மொழியை மனத்துட்கொள்ளாமல், கடுங்கோபங் கொண்டு சீறி மாலியவானைப் பார்த்து "ஓ விருத்தனே! மானிடனும், கிருபணத்தன்மை பூண்டவனும், பிறர் ஸகாயமில்லாதவனும், குரங்குகளை ஆசிரயித்தவனும், முனிவர்களிடம் அன்பு வைத்தவனும், தந்தையால் கௌரவஹீனத் தன்மை யடைந்தவனுமாகிய அந்த இராமனை எந்தக் காரணத்தைக் கொண்டு மிகுந்த சமர்த்தனாக நீ நினைக்கிறாய்? இதனால் நீ அவனால் அனுப்பப்பட்டவன் போலுமாகிறாய். கொஞ்சமேனுந் தடையில்லாமற் பேசுகிறாய். நீ காலங்கண்ட கிழவனும் எனக்குப் பாட்டனுமாகியபடியால் உன்னால் கூறப்பட்ட கர்ண கடூரமான வார்த்தை யாவற்றையும் பொறுத்தேன். இனிமேல் இவ்வித மொழிகள் என் செவிக்கு நாராசத்தைக் காய்ச்சிவிட்டது போன்றனவாகும். உன் வாயைமூடு, இனிப் பேசவேண்டாம்" என்று பேசினான். இதைக் கேட்டு மாலியவான் தளர்ந்த மனத்துடன் இராவணன் சமுகம் விட்டேகினான். பிறகு தசானனன் மந்திரிகளுடன் அங்கிருந்தபடியே வானர சைனியங்களைப்

பார்த்துவிட்டு யுத்தத்துக்கு இராக்ஷச சைனியங்களைச் சேர்க்கும்படி மந்திரிகளுக்கு ஆஞ்ஞை செய்தான்.

அச்சமயம் இராமச்சந்திரர் தம்பி இலக்ஷ்மணருடன் கோதண்டபாணியாய் நின்று கோபுரத்தின்மீது மந்திரிகள் புடைசூழவும், அநேக வெண்குடைகள் நிழற்றவும், தசக்கிரீடங்கள் பத்துத் திசைகளிலும் ஒளி வீசவும் வீற்றிருந்த இராவணனைக் கண்டு கோபங் கொண்டு, தன்னுடைய ஒப்பற்ற சாபத்தை வளைத்து நாணேற்றி, ஓர் அர்த்த சந்திர பாணத்தை யெடுத்து விடுத்து, இராக்ஷச கண்டகனுடைய ஆயிரம் வெண்குடைகளையும் நவரத்னங்கள் பதித்து விளங்காநின்ற பத்துக் கிரீடங்களையும் அரை நிமிஷத்திற் பொடிப்பொடியாகச் சேதித்தார்.

இந்த ஆச்சரிய சம்பவம் நேர்ந்ததும், இராவணன் வெட்கமடைந்து, மனக்கிலேசத்துடன் எழுந்து விரைவாகத் தனது கிரகம் சென்றான். பிறகு இராக்ஷசர்களுக்குக் காலன்போன்ற தசக்கிரீவன் ப்ரஹஸ்தன் முதலிய அரக்கர் சிரேஷ்டர்களை வரவழைத்து, வானர சைனியங்களுடன் யுத்தம் செய்வதற்குக் கட்டளையிட்டான்.

இராக்ஷச சைனியங்கள் அவ்வுத்தரவை மேற்கொண்டு யுத்த சன்னத்தராகி, பேரிகை, படகம், மொந்தை, முரசு, பறை முதலிய வாத்திய முழக்கத்தோடு, எருமை, கழுதை, புலி, சிங்கம் முதலியவைகளை வாகனமாகக் கொண்டு, வில், வாள், மழு, சக்கரம், தோட்டி ஈட்டி, கத்தி முதலிய ஆயுதபாணிகளாய் ஒருங்குகூடி இலங்கையின் வடக்கு வாசல் வந்து நிறைந்தார்கள்.

இதற்கு முந்தியே இரகுவீரர், வானர சிரேஷ்டர்களுக்குப் போருக்குத் தயாராயிருக்கும்படி ஆஞ்ஞை செய்ய, அதைத் தங்கள் தலைவர்களால் கேட்ட வானரசைனியங்கள், மிக்க ஆரவாரத்தோடும் குதூகலத்தோடும், விருக்ஷங்களையும் பருவதங்களையும் அடியோடு பேர்த்து, தங்களுக்கு ஆயுதங்களாக எடுத்துக்கொண்டு யுத்தத்துக்குத் தயாரானார்கள். வானரசிரேஷ்டர்களும் கோடி வானரர்களுடன் கூடி ஆகாயம் முட்டவந்து சூழ்ந்தார்கள். வானரர்கள் யாவரும் உற்சாகத்துடன் கிளம்பித்தாண்டிக் குதித்துக் கர்ச்சனை செய்தார்கள்.

வானர சைனியங்கள் "அதிவீர பராக்கிரமராகிய ஸ்ரீராமருக்கே ஜெயம்; மஹா பலம் பொருந்திய இலக்ஷ்மணருக்கே ஜெயம்;

இராகவரால் பரிபாலிக்கப்பட்ட ஸுக்ரீவருக்கே ஜெயம்" என்று ஜெய பேரிகை யடித்துக் கொண்டே யுத்தம் செய்தார்கள்.

அனுமார், அங்கதன், குமுதன், நீலன், நளன், சரபன், மைந்தன், த்விவிதன், ஜாம்பவான், ததிவக்த்ரன், கேஸரி, தாரன் மற்றுமுள்ள வானர சிரேஷ்டர்கள் இலங்கையின் நான்கு பக்கத் திலும் சூழ்ந்து தகைந்தார்கள்.

வானரர்கள் பெருத்த பருவதங்களாலும், விருக்ஷங்களாலும் இராக்ஷசர்களை யடித்துக் கட்டிப் பிடித்துக்கொண்டு பற்களால் கடித் தும், நகங்களால் கிறியும, வாலாலடித்தும் இன்னும் பல விதமான ஹிம்சைகளையும் செய்தார்கள்.

மலைபோன்று பருத்த சரீரமுடையவர்களும், மஹா பலசாலி களுமாகிய அரக்கர்கள், இலங்கையின் நாலுபக்கங்களிலுமிருந்து புற்றிலிருந்து புறப்படும் ஈசல் போல் வெளிப்பட்டு, கத்திகளாலும், ஈட்டிகளாலும், பிண்டிபாலங்களாலும், மூவிலைச் சூலங்களாலும், வானரசைனியங்களை வெட்டியுங் குத்தியும் பலவிதமான ஹிம்சை கள் செய்தார்கள்.

ஆயுதமற்ற வானரர்களும் அந்த இராக்ஷசர்களை வாலால் கட்டி யும், மலைகளால் தாக்கியும், கையாற் பிடித்து வாரி அம்மானைபோ லாடியும், காலாலுதைத்துக் கீழேதள்ளியும், ஒருவர்மேல் ஒருவரை வாரியடித்து நசுக்கித் தேய்த்தும், சண்டைக்கு வந்த இராக்ஷசர்கள் ஓ வென்றலறும்படிச் சாடினார்கள். அரக்கர்களுடைய கூட்டத்தின் நடுவில் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓட, அதின்மீது வானர சைனியங்கள் ஓடி மிதித்துத் துவைத்து நடமாடுவதனாற் சேறுண் டாகி, அதில் இராக்ஷசப் பிணங்கள் புதைபட்டுக் கிடந்தன.

இதனைக்கண்ட அரக்க சிரேஷ்டர்கள், தாவாநின்ற குதிரை களின் மீதும், மும்மதங்களையும் பொழியா நின்ற யானைகளின் மீதும், சுவர்ணமயமான பரிகள் பூட்டப்பட்ட இரதங்களின்மீதும் இருந்துகொண்டு பாணப் பிரயோகம் பண்ணினார்கள்.

வானர சைனியங்களோ அப்பாணங்களைக் கையாற் பிடித்து ஒடித்து எறிந்து, தங்கள் கையிலிருக்கும் மலையாகிய குண்டுகளா லும், விருக்ஷமாகிய கதைகளாலும் தாக்கி, அரக்க சைனியங்க ளுடைய இரதம், கஜம், துரகம், பதாதிகள் யாவற்றையும் பொடி யாக்கி, அச்சிரேஷ்டர்களையும் வதஞ்செய்தார்கள். மஹா விஷ்ணு

அமிசமாகிய ஸ்ரீராமர் தமது தடங்கண்ணால் தமக்காகப் பாடுபடும் தேவாமிசமாகிய கபிக்கூட்டங்களை, கிருபாநோக்கத்துடன் பார்த்த வுடன் அவ்வானரர்கள், அமுதபானம் செய்தவர்கள் போலச் சரீர புஷ்டியும் மனத்தைரியமும், வீரத்தன்மையும் பெற்று விளங்கினார் கள்

மஹா இலக்ஷ்மி அமிசமாகிய ஸீதாதேவியை மாறுவேடம் பூண்டு அபஹரித்து வந்த கொடும்பாதகனாகிய தசக்கிரீவனால் ஏவப் பட்ட இராக்ஷசர்கள், மயிலைக்கண்ட சர்ப்பம்போல, சரீர பலங்குன்றி வலுவிழந்து, வானரர் கையாலடிபட்டு உயிர் துறந்து மறலி நகர் புகுந்தனர். இராக்ஷச சேனைகளில் நாலில் ஒரு பங்கு மீதியாக மற்ற மூன்று பங்கு சேனைகள் போர்க்களத்தில் மாண்டன.

பிரம்ம தேவரிடம் வரம்பெற்றவனும், மேன்மை பொருந்திய வனும், மஹிமை பொருந்திய பல அஸ்திரங்களை யுடையவனும் கெட்டபுத்தி யுள்ளவனுமாகிய மேகநாதன் தன்னுடைய சேனைகள் மாண்டதைப் பார்த்து ஆகாய மார்க்கமாக வந்து வானர சைனியங் கள் மீது பலவித ஆயுதங்களைப் பிரயோகஞ் செய்து நாசப் படுத்திக் கடைசியாகப் பிர்ம்மாஸ்திரத்தையும் பிரயோகம் செய்தான். அந்தப் பிர்ம்மாஸ்திரமானது வானரக் கூட்டங்களுள் பிரவேசித்து சைனி யங்களைக் கீழே வீழ்த்திவிட்டது.

வில்வித்தையிற் சிறந்த ஸ்ரீராமரும், அந்தப் பிர்ம்மாஸ்திரத்தை வெகுமானித்து க்ஷணப்பொழுது மௌனமாக இருந்தார். பிறகு வானர சேனைகள் வீழ்ந்து கிடப்பதைப் பார்த்து இரகுவீரர் கோபங் கொண்டு "ஓ ஸௌமித்ரியே! தநுசைக் கொண்டுவா, நானும் அந்தப் பிர்ம்மாஸ்திரத்தாலேயே அந்தரத்தில் நிற்கும் அந்த மேகநாதனை க்ஷணப்பொழுதில் சாம்பலாகச் செய்கிறேன். அப்பொழுது என் வல்லமையை யாவரும் பார்க்கலாம்" என்றார்.

மாய வல்லமையுடைய மேகநாதன் ஸ்ரீராமர் கூறிய வார்த்தை யைக் கேட்டு உடனே இலங்கையை நோக்கிச் சென்று மறைந்தான்.

பூமியில் விழுந்து கிடக்கும் வானரர்களைப் பார்த்து, ஸ்ரீராமர் மிகுந்த துக்கமடைந்து அனுமாரை நோக்கி "ஓ ஆஞ்சனேய! நீ விரைவாகப் பாற்கடல் சென்று, சஞ்சீவினி முதலிய ஔஷதங்களை யுடைத்தாகிய த்ரோணகிரியைக் கொண்டுவா, ஓ அறிவிற் சிறந்த வனே! அந்த வானரர்களை நன்று ஜீவிக்கச் செய்ய வேண்டும்,

அவ்விதம் அவர்கள் பிழைப்பது உனக்குக் கீர்த்தியை யுண்டாக்கும்" என்றார்

காற்றினுங் கடுமையாகச் செல்லுந் திறமை வாய்ந்த மாருதி, "ஓ இரகுநந்தன! தங்களுடைய ஆஞ்ஞையே பிரமாணம்," என்றுரைத்துச் சென்று அப்பருவதத்தைப் பேர்த்தெடுத்துக்கொண்டு வந்தார். அம்மலையிலுள்ள ஔஷதங்களின் வாடைக்காற்று பட்டவுடன் வானர சைனியங்கள் யாவும் மூர்ச்சை தெளிந்தெழுந்தன. வானர சிரேஷ்டரான மாருதி மறுபடியும் அந்த மலையை, அதிருந்த இடத்திற் கொண்டுபோய் ஸ்தாபித்து க்ஷணத்தில் திரும்பி வந்தார். வானரர்கள் யாவரும் கரகோஷம் செய்து மிக்க சந்தோஷத்துடன் ஆர்ப்பரித்தார்கள்.

வானர சைனியங்களுடைய ஆரவாரத்தைக் கேட்ட இராவணன், தனது சேனாதிபதிகளைப் பார்த்து, "ஓ வீரர்களே! எனக்கு நீண்ட காலச்சத்துருவாகிய தேவர்களால் விரும்பப்பட்ட ராகவன் வந்திருக்கிறான். அவனைக் கொல்லுவதற்கு நீங்களும், என்னுடைய க்ஷேமத்தை விரும்பும் மந்திரிகளும் பந்துக்கள் முதலிய சூரர்களும் இன்னும் மற்றுமுள்ள வீரர்களும் யுத்தபாணிகளாகி சைனியங்களுடன் யுத்தத்துக்குச் செல்லவேண்டும். எவர்கள் பிராணநாசத்திற்குப் பயந்து யுத்தத்துக்குச் செல்லவில்லையோ அவர்கள் என் ஆஞ்ஞைப்படி வதைக்குள்ளாவார்கள்" என்று கடுமையாகக் கூறினான்.

அக்கட்டளையை மேற்கொண்டு நடுநடுங்கி யுத்தத்திற் சாமர்த்தியமுடைய அங்குள்ள இராக்ஷசர்கள் யாவரும் ஆயுதபாணிகளாகிப் போருக்குப் புறப்பட்டார்கள், அவர்களுடன் இராவணன் குமாரனான அதிகாயனும், ப்ரஹஸ்தன், தேவசத்துரு, நிகும்பன், தேவாந்தகன், நராந்தகன் இன்னும் மற்றுமுள்ள திறமை வாய்ந்த அரக்கவீரர்கள் யாவரும், தங்களுக்குரிய வாகனாதிகளி லேறிக் கொண்டு யுத்த சன்னத்தர்களாய்ப் போர்க்களம் வந்து சேர்ந்தார்கள்.

கணக்கற்ற இராக்ஷச சைனியங்கள் கெர்வங்கொண்டு வானர சேனைக்குட் பிரவேசித்து உலக்கை, பிண்டிபாலம், கத்தி, வாள் முதலிய ஆயுதங்களைக் கொண்டு அவர்களைக் கலக்கினார்கள். அரக்கர் சேனாதிபதிகளும் அநேக பாணங்களை வில்லிற் றொடுத்து விட்டு நாலாபக்கங்களிலும் நின்று வானர சைனியங்களுடன் போர் புரிந்தார்கள்.

யுத்தத்திற் சளைக்காத வானரர்களும், மரங்களாலும், மலைகளாலும், மலைச்சிகரங்களாலும், எதிரி சைநியிலிருந்து தாங்கள் பறித்துக்கொண்ட கதை, வாள் முதலிய ஆயுதங்களாலும், வாலாலும், தோளாலும், தாளாலும், வக்ரதந்தப் பற்களாலும், முஷ்டிகளாலும், அடித்தும் பிடித்தும் கட்டியும் குத்தியும் காலை வாரிப் பிடித்தும் ஆகாய மார்க்கத்தில் எறிந்தும் இராக்ஷச சைனியங்களை எமலோகத்துக் கனுப்பினார்கள். அதிகாயன் முதலிய இராக்ஷச வீரர்கள் யாவரும், சிலர் ஸ்ரீராமராலும், சிலர் இலக்ஷ்மணராலும், சிலர் ஸுக்ரீவனாலும், சிலர் அனுமார், அங்கதன், நீலன், நளன், முதலிய வானர வீரர்களாலும் வதை செய்யப்பட்டார்கள். யுத்தத்துக்கு வந்த இராக்ஷச சைனியங்களும், சேனாதிபதிகளும் மற்றுமுள்ள யாவற்று அரக்கர்களும் ஏககாலத்தில் ஒரே கூட்டமாக எமலோகஞ் சென்றார்கள். எமலோகமெங்கும் இராக்ஷச ஜீவன்கள் நிறைந்தன. இரணகளமெங்கும் அரக்கர் பிரேதங்கள் குவிந்துகிடந்தன. அவைகளின்நடுவில் பைசாசங்கள், பூதகணங்கள் நின்று கூத்தாடின; நாய், நரி, கழுகு முதலியவைகள் வயிறாரப் பிணத்தைப் பிடுங்கித் தின்று களித்தன.

வானர வீரர்கள் ஜெயம் பெற்றவர்களாய் விளங்கி ஸ்ரீராமரைத் துதித்து நின்றார்கள்.

ஓ பிரியமுள்ள பார்வதி! இராமருடைய கிருபா வீக்ஷண்யம் பெற்ற வானரர்கள் யாவரும் வலுவுடையவரானார்கள். இராமர் தயையற்ற துஷ்ட கிருத்தியமுடைய இராக்ஷசர்கள் யாவரும் பல ஹீனமடைந்தார்கள். பக்தியில்லாதவர்களுக்கு வெற்றி எவ்விதம் கிடைக்கும்? ஜகத் முழுமையுந் தனது சொரூபமாகக்கொண்டு பிரபஞ்சத்தை யுண்டுபண்ணினவரும், சிதானந்த சொரூபருமாகிய விஷ்ணுவே மானிடத் தன்மையை யடைந்து, தன்னிடம் பக்தி செய்பவர்களின் கதியின்னதென்றும், அப்படிச் செய்யாது அஹங்காரத்தில் மூழ்குகிறவர்களின் கதியின்னதென்றும் பிரகடனப்படுத்த, இந்த யுத்தத்தை லீலாவினோதமாகப் புரிந்தார்.

# 6-வது சருக்கம்.

---

இராவணன் தனது குமாரனாகிய அதிகாயனும், மற்றுமுள்ள இராக்ஷச வீரர்களும், கணக்கற்ற ஸேனைகளும் யுத்தத்தில் மாண்டதைக் கேள்விப்பட்டு, துக்கத்தில் மூழ்கித் தாபமடைந்து, தணிக்க முடியாத கோபங் கொண்டவனாகி, எண்டிசையுங் கீர்த்திபெற்ற தனது வீரத்தை மனத்தில் நினைத்து வீராவேசத்தை யடைந்து, இலங்கையை இரக்ஷிப்பதற்குத் தனது குமாரனாகிய மேகநாதனை வைத்துவிட்டு, தானே நேரிற்போய் அந்த இராமனிடத்தில் யுத்தம் செய்து அவனை வதம் செய்கிறேன் என்று கூறி, அரக்க சைனியங்களுடன் யுத்த சன்னத்தனானான். மஹா பலசாலியாகிய அந்த இராக்ஷச சிரேஷ்டன் சர்வாயுதபாணியாய்த் தேவர்களுக்குரிய தனது தேரின் மீதேறி, வானர சைனியங்களை யெல்லாங் கடந்து இராகவனையே நோக்கிச் செல்லும்போது, தன்னை வந்து தாக்கின அநேக வானரர்களைச் சர்ப்பங்களுக்குச்சமானமான பாணங்களால் கொன்று, ஸுக்ரீவனையும் பூமியில் களைத்து விழச் செய்தான். அவ்விடத்தில் தனது கதா யுதத்தைக் கையில் பற்றிக்கொண்டு நிற்கும் மஹா பலமுள்ள தன்னுடைய தம்பி விபீஷணனைப் பார்த்து அஹங்காரங் கொண்டு அவன் மீது, பிரமதேவரால் தனக்குக் கொடுக்கப்பட்ட மிகவுங் கூர்மையும் பலமுங்கொண்ட சத்தி வேலாயுதத்தைப் பிரயோகம் செய்தான். அந்த வேலாயுதமானது விபீஷணனை வதைக்க மிக்க கொரோத்துடன் வருவதை யறிந்த இலக்ஷ்மணர், தங்களிடம் வந்து அடைக்கலம் புகுந்து இரக்ஷிக்கக் கோரிய விபீஷணனுக்கு ஸ்ரீராமர் அபயஸ்தம் கொடுத்திருக்கிறார். ஆகையால் இவனை வதமடைய விடுவது தகுதியான காரிய மல்லவென்று சிந்தித்து, அந்த விபீஷணனுக்கு முன்னால் தான் சென்று ஒரு மலைபோல அவனை மறைத்து நின்றார். மஹா பாதகனாகிய இராவணனால் விடப்பட்ட சத்தி வேலானது மேலான வலுவுடையதானதால், இலக்ஷ்மணருடைய மார்பிற் புகுந்தது.

இந்த மாயா பிரபஞ்சத்தில், மாயை தனதுவலுவால் எவ்வளவு சக்தி யுண்டாக்கக் கூடுமோ அவைகளுக்கெல்லாம் ஆதாரமாகியவரும், மஹாத்மாவும், ஆதிசேஷனுடைய அம்சமாகியவரும், மஹா

விஷ்ணுவுக்குச் சரீரமாகியவருமாகிய இலக்ஷ்மணரை அந்த சத்தி வேல் என்ன செய்யக்கூடும்?

ஆயினும் இலக்ஷ்மணர் மானிடத்தன்மையை யடைந்தவராகை யால், அதை அநுசரித்து மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார்.

தசக்கிரீவன், அதையறிந்து இலக்ஷ்மணரிடம் வந்து அவரைக் கிரஹிக்க முயன்றான். அவரைத் தனது இருபது கைகளாலும் முழுப் பலத்தோடு தூக்கினான். அசைக்கக்கூட அவனால் முடியவில்லை. அதைக் கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தான்.

எல்லா உலகத்தின் ஸாரமாகியவரும், விராட்டு ரூபமாகியவரும் உலகங்களை ஆசிரயித்தவருமாகிய விஷ்ணு சொரூபத்தை இராக்ஷஸனாகிய அந்த இராவணன் எப்படி யசைக்கக் கூடும்?

ஸௌமித்திரியைத் தூக்கிக்கொண்டு போகப் பிரயத்தனப் பட்ட தசமுகனை அநுமார் பார்த்துக் கோபங்கொண்டு அவனுடைய மார்பில் வஜ்ரம் போன்ற தனது கையால் ஓங்கிக் குத்தினார். அக்குத்தினால் தசக்கிரீவன் முழந்தாளை மண்டியிட்டுக் கைகளைப் பூமியில் ஊன்றி வாய்களால் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு தனது சேஷ்டையற்றுத் தானேறிவந்த தேரின் சமீபத்தில் உட்கார்ந்தான்.

பிறகு மாருதி, சோபமடைந்த இலக்ஷ்மணரைக் கையாற்றூக்கிக் கொண்டு ஸ்ரீராமரிருக்கும் இடம் வந்து சேர்ந்தார்.

பெருமையுள்ளவைகளுக்கெல்லாம், மிகப்பெருமையுள்ளவராயினும், விஷ்ணுவின் அம்சத்தைப் பெற்றவராயினும், இலக்ஷ்மணர், அநுமார் தனக்கு ஸுஹிருதராகையாலும், பக்தியுள்ளவராகையாலும், அவருக்கு லேசாக இருந்தார்.

இராவணனால் லேவப்பட்ட அந்த சத்திவேலும், இலக்ஷ்மணரை ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சத்திலுண்டானவரென்றறிந்து அவரை விட்டு இராவணனிடம் வந்து சேர்ந்தது.

அரக்கர்கோனும் பிரஞ்ஞையடைந்து கோபம்மிகுந்து, கேதுவினால் விழுங்கப்படும் சந்திரனைப்போல இராமச்சந்திரனை யெதிர்க்க வந்தான்.

இரகுநந்தனரும், கோபத்துடன் மஹாபலம் பொருந்திய அநுமார் மீதேறிக்கொண்டு, இரதத்தின்மீதேறிக்கொண்டு வந்திருக்கும் இலங்கேசனாகிய இராவணனை யெதிர்த்தார்.

இரகுவீரர் கம்பீரமாகத் தனது வில்லினுடைய இடிமுழக்கம் போன்ற நாணோசையைக் காட்டி, இராக்ஷச சிரேஷ்டனாகிய தசக்கிரீவனைப் பார்த்து, ஓ இராக்ஷசாதம! என் முன்னிலையில் நில்லு. யாவரையும் சமமாகப் பாவிக்கும் எனக்கு, அபராதத்தைச் செய்த நீ யிப்பொழுது எங்கு செல்லப்போகிறாய். திரிசிரசு முதலிய இராக்ஷசர்கள் எந்த பாணத்தால் மாண்டார்களோ அதே பாணத்தாலுன்னை நான் வதைசெய்கிறேன். என்னெதிரிலே நீ நிற்கலாம் என்று கூறினார்.

ஸ்ரீராமருடைய கடுமையான வார்த்தையைக்கேட்ட இராவணன், யுத்தத்தில் ஸ்ரீரகுவீரரைத் தூக்கிக்கொண்டிருக்கும் மாருதாத்மஜனை (வாயு குமாரனை)க் கூர்மையான பாணங்களா லடித்தான். அந்தக் கூர்மையான பாணத்தா லடிபட்டவராயினும் வாயு குமாரன், மிக்க தேஜஸ் உடையவனாகப் பிரகாசித்து அண்டங்களெல்லாம் திடுக்கிடும்படியான கர்ச்சனை செய்தார்.

ஸ்ரீராமர் தனது வாகனமாகிய மாருதி பாணத்தா லடிபட்டு நொந்ததை யறிந்து, ஊழிக்காலத்து உருத்திரனைப்போல் வீராவேசங் கொண்டு, தனது கோதண்டத்தை வளைத்து அனேகபாணங்களைச் சரமாரியாகத் தொடுத்து, இராவணன் ரதத்திற் பூட்டிய குதிரைகள், துவஜங்கள், குடை முதலியவைகளை நாசஞ்செய்து, ஓர் பாணத்தால் அவன் சாரதியையுமாய்த்து, ஓர் பாணத்தால் அவன் குதிரையுமழித்து, மற்றொரு பாணத்தால், அவன் கையிலிருந்த வில்லையுமறுத்து, பின்னுமோர் பாணத்தால் அவனுடைய சரீரமெங்குஞ் சல்லடைக் கண்ணாகத் துளைத்ததுமன்றி, ஓர் அர்த்த சந்திர பாணத்தை விடுத்து, இராவணன் தரித்திருந்த சூரியனுக்கொப்பான ஒளிவீசத்தகுந்த கிரீடங்களையும் நாசம் செய்தார்.

மூன்று உலகங்களையுஞ் ஜெயித்து ஏகச்சக்ராதிபனாகி இலங்கையையாண்ட இராவணன் தானே நிவர்த்தி தேரையுமிழந்து, சாரதியு மற்று வில்லையும்விட்டு, பத்துக் கிரீடங்களையும் பறிகொடுத்து, தான்மட்டும் ஏகாங்கியாகி, மனந் தளர்ந்து யாதுங் கதியற்றவன் போல் நிலத்தைக் கீறிக்கொண்டு மௌனமாய் நின்றான்.

பரமதயாளுவாகிய ஸ்ரீராமமூர்த்தி தனது சந்நிதானத்தில், ஏகாங்கியாய் நின்ற இராக்ஷச சிரேஷ்டனைப் பார்த்து, "ஓ இராவண! நீ யிப்போது எனது பாணத்தால் சோகமடைந்தவனாய்க் காணப்படு

கிறாய்; ஆகையால் நீ இன்றையதினம் இதைவிட்டு உன்னிருப்பிடமாகிய இலங்கைக்குச் சென்று, உன்னுடைய மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு நாளைய தினம் வரலாம்; அப்பொழுது என்னுடைய தீரத்தைப் பார்க்கலாம்; நான் உனக்கு இப்பொழுது உத்தரவு கொடுக்கிறேன். விரைவிற் செல்லலாம்" என்று கூறினார்.

ஸ்ரீராமச்சந்திரர் ஜீவகாருண்யத்துடன் கூறிய வார்த்தையை, சரத்தால் சரீரமெங்கும் பேதிக்கப்பட நொந்து, யாவராலும் அழிதற்கரிய தனது கர்வத்தையுமிழந்து, எவ்விதத்திலும் பொறுக்க முடியாத துன்பத்தையு மடைந்து, மேற்செய்யும் காரியம் இன்னதெனத் தனக்குள் நிர்ணயிக்க முடியாது பரிதவித்து, கடன் கொண்டவன் நெஞ்சம் போலக் கலங்கிநின்ற, இலங்கை வேந்தனாகிய இராவணன் கேட்டு, ஒருவாறு மனந்தேறி வெட்கம் மீறி இலங்கையை நோக்கி அடியைப்பேர்த்து வைத்துப் பூமியைப் பார்த்துக் கொண்டே பாதசாரியாய்த் தனது அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

தாமரைக்கண்ணரும், பூமியில் விழுந்து மூர்ச்சை யடைந்து கிடக்கும் இலக்ஷ்மணரிடம் வந்து, அவரைப் பார்த்து, மானிடத் தன்மையை யாசிரயித்ததற் கேற்ப மனம்பதறி, பலவாறு கதறி, துக்கம் மீறிப் பிரலாபித்து, பிறகு தனக்குள் தானே தேறினவராகி, மாருதியைப் பார்த்து ஓ வத்ஸ! (தயையுடையவனே) நீ முன்போலப் பாற்கடற் பிரதேசஞ் சென்று, அந்த மஹா மூலிகையைக் கொண்டு வந்து, யுத்தத்திற் களைத்த வானரர்களையும், இலக்ஷ்மணரையும் தாபந்தீர்ந்தெழும்படிச் செய்யவேண்டுமென்று செப்பினார்.

ஸ்ரீராமர் கூறிய சூக்ஷ்ம மொழியைச் செவிக்கேற்ற மஹா கபியாகிய ஹனுமாரும், ஓர் க்ஷணப்பொழுதில் இலவண சமுத்திரத்தைத் தாண்டி, காற்றையும், மனத்தையும் விட வேகமாக க்ஷீர சமுத்திரத்தை நோக்கிச் சென்றார்.

இச்சமயத்தில் சாரணர்கள் இராவணனிடம் சென்று, "ஓ தேவ! இலக்ஷ்மணன் ஜீவிக்கச் சஞ்சீவி கொண்டுவர, ஸ்ரீராமன் அனுமானைப் பாற்கடலுக் கனுப்பியிருக்கிறார். மாருதியும் மிகுந்த வேகத்துடன் அங்கு சென்றார்" என்று தெரிவித்தார்கள்.

சாரணர்களின் வார்த்தையைக் கேட்ட இராவணன், மிகுந்த கவலையுடன் இரவில் தனிமையாக, மாயவித்தையில் வல்லவனாகிய காலநேமி யென்னும் அசுரனிடம் சென்றான். காலநேமி, நள்ளிருளில் தனது இரகம்தேடி ஒண்டியாக வந்த இலங்கேசுவராஜனை

தசமுகனைக்கண்டு ஆச்சரியமடைந்து பயத்தை யநுசரித்து, நடுக்க முடையவனாகி, அவனிடம் வந்து, அர்க்கிய பாத்திராதி யுபசாரணை களைச் செய்து, அவனைத் திவ்வியாசனத்திலிருக்கச் செய்து, தானு மருகில் நின்று "ஓ அரக்கர் சிரேஷ்டரே! எளியேனை நாடித் தாங்க ளிங்குவந்த காரணம் என்ன" என்று மிகப் பிரீதியுடன் கேட்டான்

தசக்கிரீவன்! மிகுந்த கவலையிலாழ்ந்து துன்பமுற்றவனாகி, காலநேமியை நோக்கி, "ஓ மாயா வல்லவரே! எனக்குக் கால வசத்தாற் சகித்தற்கரிய கஷ்டம் வந்திருக்கிறது. தற்காலம் எனக்கும் இராம னுக்கும் நேர்ந்த யுத்தத்தில் என்னுடைய சத்தி வேலாயுதத்தால், அவன் தம்பி இலக்ஷ்மணன் அடிபட்டுப்பூமியில் விழுந்தான். மரணத் துக்கு ஏதுவாயிருக்கிற அந்தஸௌமித்திரியை ஜீவிக்கச்செய்ய அனு மான் ஔஷதங்களைக் கொண்டுவரப் பாற்கடற் பிரதேசத்துக்குப் போயிருக்கிறான். ஓ மஹா புத்திசாலியாகிய எனது மித்ருவே! அவ்வனுமானுக்கு இடையூறு நேரும்படி ஒரு மாயாவிசித்திரஞ் செய்யவேண்டும். அதாவது, நீர் மாயையால் முனிவேடம் பூண்டு, அம்மாருதியைக் கண்டு அவனை மோஹப்படுத்தி எவ்விதத்திலாவது காலதாமதத்தை யுண்டுபண்ணி அந்த மூலிகை யிங்குவந்து சேராத மார்க்கத்தை யேற்படுத்தவேண்டு மென்பதே" என்று கேட்டுக் கொண்டான்

அரக்கர்கோன் கூறிய கடிய விஷத்துக்குச் சமானமாகிய வார் த்தையைக்கேட்டு, காலநேமி தனது கரத்தால் செவியை மூடி, "ஓ இராவணேஸ்வர! நான் தெரிவித்துக்கொள்ளும் விஞ்ஞாபனத்தை, மனோஞ்ஞமாகக்கேட்டு, அதை ஞாபகத்துடன் ஆதரிக்கவேண்டும், தங்களுக்கு நான் ஹிதத்தையே நாடுகிறேன். என் பிராணனை நான் இலக்ஷியம் பண்ணவில்லை. ஓ தசக்கிரீவ! மாயமானாகிச்சென்ற மாரீசனுக்கு, முந்தி ஆரணியத்தில் என்ன ஏற்பட்டதோ அதுவே எனக்கும் உண்டாகப்போகிறது சந்தேகமில்லை. அதைப்பற்றி நானிப் போது யோசிக்கவில்லை. தங்களைப் பொறுத்தமட்டுஞ் சிந்திக் கிறேன். அதாவது யுத்தம் ஏற்பட்டு இரண்டு நாளாவதற்குள் தங்க ளுடைய புத்திரர் மித்திரர், பந்துக்கள், முதலிய அநேக அரக்கர்கள் யுத்தத்தில் மாண்டார்கள்; எஞ்சிநின்ற இராக்ஷசர்களும் மாண்டு போவது நிச்சயம்; ஒருக்கால் எதிரிகளைச் ஜெயித்து, இராஜ்யத்தையு மடைந்து ஜானகியையும் பெற்று தாங்களும் உயிருடன் ஜீவித்திருப் பீர்களானாலும், அந்த உயிர்வாழ்க்கையினாலாவது, இராஜ்யத்தினாலா

வது, ஸீதையினுலாவது, தங்களுடைய ஆத்மாவுக்குக் கிடைக்கும் பலப் பிராப்தி யென்ன விருக்கிறது ஒன்றையுங் காணேன். காணப் பட்ட ஜடசொரூப மெல்லாம் அழியக்கூடியது. என்றைக்கும் அழியக் கூடாத நித்திய ஸுகத்தைத் தாங்கள் அடையும் வழியைத் தேட வேண்டியது அவசியம். ஆகையால் சற்று திர ஆலோசித்து, ஸீதையை ஸ்ரீராமரிடங் கொண்டுபோய்ச் சேர்த்து, இராஜ்யத்தை விபீஷணனிடத்தில் ஒப்புவித்து விட்டு, இப்போ தேற்பட்டிருக்கும் மனக்கவலையை யடியோடே ஒழித்து, மனதுக்கு இரம்யமும், முனிவர்களுக்கு இருப்பிடமுமாகிய வனத்திற்குச் சென்று அங்கு ஓர் ஆச்சிரமத்தை யேற்படுத்திக் கொண்டு அதிற்றங்கி, பிரதிதினமும் அதிகாலையி லெழுந்து, பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானம் பண்ணி, சந்தியா வந்தனம் முதலிய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்த பின்பு, தனிமையில் பத்மாசனத்தி லுட்கார்ந்து, விஷயத்தில் அலையும் மனத்தை யடக்கி, வெளியிற் பிரவிருத்திக்கின்ற இந்திரியங்களைப் பல வழியிற் செல்ல வொட்டாமற் றடுத்து, ஏகாக்ர சித்தனுகி, "அது நான்" எனப்பாவித்து, அன்னிய மாகாது தியானம் செய்து வரவேண்டு.

ஆத்மாவை யெப்பொழுதும் பிரகிருதிக்கு வேறுபட்டதாக நிச்சயிக்க வேண்டும். ஸ்தாவர ஜங்கம சொரூபமாகிய உலகமும், பிரம தேவர் முதல் காணப்படுகிறதும், கேட்கப்படுகிறதுமாகிய யாவையும், மாயா சொரூபமென்றே ஸ்திரப்படுத்த வேண்டும். பிரபஞ்சமாகிய விருக்ஷத்தின் சிருஷ்டி, ஸ்திதி, நாசம் இவைகளுக்கும் அந்த மாயையே காரணமாகிறது. மாயையானது எப்போதும், வெளுப்பு, சிவப்பு, கறுப்பு இம்மூன்று நிறங்களும் ஒன்றாகச் சேர்த்து முறுக்கிய கயிறு போல, முறையே ஸத்வகுணம், இராஜோ குணம், தமோகுணம் என்ற முக்குணங்களும் ஒன்றுபட்டு அக் குணங்களில் இராஜோகுணத்தில் நின்று தத்துவஞானிகளென்றும், காமக்குரோத கர்ம நிஷ்டர்களென்றும, சோம்பல், நித்திரை மயக்கமுடையவர்களென்றும் கூறப்படுகிற பிரஜைகளை யுண்டுபண்ணுகிறது. அந்த மாயை தன்குணவேறுபாட்டின்படி ஆத்மாவை மோஹமடையும்படிச் செய்கிறது. கர்த்தா, போக்தா இவர்களுடைய தன்மை முதலிய தன்னுடைய குணங்களை, நிர்விகாரியாகிய ஆத்மாவினிடம் ஆரோபித்து, அதைத் தன் வசப்படுத்தி அத்துடன் எப்போதும் விளையாடுகிறது. ஆத்மா சுத்தனுயிருந்த போதிலும்,

அந்த மாயையுடன் கலந்து பகிர்முகப்படுகிறான். மாயையின் குணங்களால் மோஹமடைந்து தன்னை மறந்து விடுகிறான்.

எப்பொழுது ஆத்மஞான குருவினால் தனது சொரூபம் இன்னதென்று அறிவிக்கப்படுகிறானோ அப்பொழுதே வெளிப்பார்வையை விட்டு, அந்தர் முகப்பார்வையில் அதீதப்பட்டு, வியக்தமாகத் தன்னைப்பார்க்கிறான். அத்தன்மை யுடையவன் ஜீவன் முக்தனாகிப் பிரகிருதியில் நின்று விடுபடுகிறான். ஆகையால் தாங்களும், தங்களை யின்னானென்று விஜாரித்து, இந்திரிய விகாரங்களை யொழித்து, பிரகிருதிக்கு வேறு பட்டவன் என்று அறிந்து கொண்டால், அப்போதே ஜீவன்முக்தனாவீர் கள்

நான்கு வேதமுங் கற்று, அதின் முடிவுப்பொருளை யு முணர்ந்த ஓ அரக்கர் காவல! மேற்கூறிய வண்ணம் நிஷ்குணத்தியானம் செய்யத் திறமை யில்லாவிடில், ஸகுணத்தியானமாக விஷ்ணு சொரூபியாகிய அந்த ஸ்ரீராமரையாவது தியானம் செய்யுங்கள்.

பரிபூரணரும், ஏகரும், நாமரூப மற்றவரும், புராண புருஷருமாகிய மஹா விஷ்ணுவே ஜீவர்களின் பொருட்டு, அர்ச்சாவதார மூர்த்தியாக, மானிட வுருவெடுத்து வந்திருக்கிறார். ஆனதுபற்றி, நவரத்னங்களும் பதிக்கப்பெற்ற சுவர்ணபீடத்தில், நீலமேக ஸாமள ரூபரும், கிருபா வீக்ஷண்யம் பொருந்திய விஸாலாக்ஷரும், மின்னல் கூட்டம் போன்ற பிரகாசம் பொருந்திய வஸ்திரந் தரித்தவரும், கிரீடம், முத்தாரம், கேயூரம், கௌஸ்துவம், கங்கணம், நூபுரம், வனமாலை இவைகள் அணிந்தவரும், ஸீதாசமேதரும், இலக்ஷ்மண சகிதருமாக வீற்றிருப்பவரும், எல்லாருடைய இருதயத்திலும் வசிப்பவரும், தாமே ஆத்மாவாகியவருமாகிய ஸ்ரீராமருடைய திவ்விய மங்கள ரூபத்தைத் தங்களுடைய இருதயமாகிய தாமரை பீடத்தில் ஸ்தாபித்து, மானசமாக அபிஷேக அலங்கார தூப தீப நைவேத்திய முதலியனவோடு அந்தரியாக பூஜை செய்து வழிபட்டு, ஸ்தோத்தரித்து, அவருடைய அஷ்டாக்ஷரத்தை விதிப்படி ஜெபித்து பக்தியோடு தியானம் செய்யவேண்டும். புறம் பேயும் பூஜிக்கலாம். இவ்விதம் அனுதினமும் செய்வீர்களானால் அழியக்கூடாத பேரின்பத்தை யடைவீர்கள். மேலும் அந்த ஸ்ரீராமருடைய திவ்விய சரித்திரத்தை நாள் தோறும் பாராயணம் செய்தல், பிறர் ஓதக்கேட்டல் முதலிய சத்காலகாலக்ஷேபமும் பக்தியுடன் செய்து வந்தால், முன் செய்த பாபங்கள் எவ்வளவாயினும்,

தீப்பட்ட பஞ்சுபோல் க்ஷணப் பொழுதில் அவ்வளவு பாபமும் நசித்துப் போகும். ஆகையால் மேற்கூறிய இரண்டில் ஒன்றைத் தாங்கள் அநுசரிக்க வேண்டும்" என்று கூறினன்.



## 7-வது சருக்கம்.

இராவணன் அமுதத்திற்கொப்பானதும், ஸம்சார பந்தத்தினின்று விடுவிப்பதுமான காலநேமியின் வார்த்தைகளைக்கேட்டு, கோபத்தால் சிவந்த கண்களுடன் அக்கினியுடன் கூடிய நெய்யானது ஜ்வலித்தாற்போல ஜ்வலித்து, "ஓ துராத்மாவே! என்னுடைய கோரிக்கைக் கிணங்காத உன்னை க்ஷணநேரத்தில் கொல்லுவேன். நீ ஏதோ என்னுடைய சத்ருவினிடம் கிரஹித்துக்கொண்டதினிமித்தம் அந்த இராமனுக்குச் சுகிர்தனாகப் பேசுகிறாய்" என்று கூறினன்.

அந்த வார்த்தையைக்கேட்ட காலநேமி, இராவணனைப் பார்த்து ஓ தேவ! என் வீணான வார்த்தைகளை யுபயோகிக்கவேண்டும். என்னுடைய வார்த்தையில் தங்களுக்குப் பிரியமில்லாவிடில், இப்போதே நான் சென்று தாங்கள் கூறியவண்ணம் செய்கிறேன் என்று கூறினன். இராவணன் அப்படியே சென்று அனுமானுக்கு இடையூறு விளைவிக்கவேண்டுமென்று ஆஞ்ஞாபிக்க, காலநேமியும் விடைபெற்றுக்கொண்டு பிரயாணமானன்.

அக்காலநேமி அதிதுரிதமாக உத்தரதிசையை நோக்கிச் சென்று, இமயமலையின் பிரதேசத்தை யடைந்து அங்கு ஓர் தபோவனத்தை யேற்படுத்திக்கொண்டு, ரிஷிவேடம் பூண்டு, தன்னுடன் சில சிஷ்யர்கள் சூழ, மஹாத்மாவாகிய வாயு குமாரன் செல்லும் மார்க்கத்தில் காத்திருந்தான்.

அதிவேகத்துடன் செல்லும் மாருதி, இந்திரன் நந்தவனத்தைப் போல் விளங்கானின்ற காலநேமி ஆச்சிரமத்தைக் கண்ணுற்பார்த்து இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது. முன்பு நான் போகும் போது இந்த விடத்தில் இந்த ரமணீகரமான ஆச்சிரமம் காணப்படவில்லையே, நான் தான் வழிதப்பி வந்துவிட்டேனே, அல்லது மனதிலுண்டான பிரமமோ, என்று சற்றுலோசித்து, எப்படி யிருந்த போதிலும், இந்த ஆச்சிரமத்தில் வசிக்கும் ரிஷிகளைக் கண்டு தெரிசித்து, அவருடைய ஆசியைப் பெற்று, அவ்விடத்தில் சற்று வசித்து. தற்காலம்

தாகமாயிருப்பதால் கொஞ்சம் ஜலத்தைப் பருகி, தாகசாந்தி யடைந்த பின்னர், துரோணாசலம் செல்லலாம் என்று சிந்தித்து அவ்வாச்சிரமத்திற் பிரவேசித்தார்

அவ்வாச்சிரமமானது, நான்கு பக்கங்களிலும் ஒரு யோஜனை தூரவிஸ்தீரணத்தை யுடையது. பக்குவமான அனேக பலன்களை யுடையது. வாழை, பலா, பேரீச்சு முதலிய மரங்கள் சூழ்ந்தது. பரிசுத்த மானது. நிர்மலமான இலக்ஷணம் அடைந்தது. இத்தகைய வளப்பம் வாய்ந்த அந்த ஆச்சிரமத்தில் காலநேமி என்ற அசுரன் சிவபூஜை செய்து கொண்டிருந்தான். அனுமார் அந்த சமயத்தில் அந்த ரிஷிவேஷம் பூண்ட அசுரனை மேன்மை பொருந்திய ரிஷியென்றே மதித்து அவர் பக்கம் சென்று, விழுந்து நமஸ்கரித்தெழுந்து கைகட்டி நின்று ஓ பகவானே நான் இராமதூதன், என் பெயர் அனுமான், ஸ்ரீராமர் காரியத்தை முன்னிட்டு, பாற்கடற் பிரதேசம் செல்கிறேன். தாகவாட்சி மேலிட்டதனால் சோகமடைகிறேன். அதைத் தணிப்பதற்கு இவ்விடத்தில் சுத்தஜலம் எங்கிருக்கிறது என்று மிகுந்த பரிவுடன் கேட்டார்.

ரிஷிவேஷம் பூண்ட காலநேமி, மாருதி கூறிய வார்த்தையைக் கேட்டு ஓ மாருதி! இதோ என்னிடமிருக்கும் கமண்டலத்தில் ஜலமிருக்கிறது, தடையன்னியிலே என்னாச்சிரமத்திலுள்ள பக்குவமான கனிவர்க்கங்களைப் புஜித்து தீர்த்தபானம் பண்ணி, சற்றுநேரம் நித்திரை புரிந்து களையாறியபின்னர் செல்லலாம். நான் என்னுடைய தபோ மஹிமையால் செல்காலம், நிகழ்காலம், வருங்காலம் இவைகளில் நடக்கும் வர்த்தமானங்க ளியாவையு மறிவேன். இலக்ஷ்மணர் எழுந்திருக்கிறார். ஸ்ரீராமரால் இரக்ஷிக்கப்படும் வானரர்களும் பிழைக்கிறார்கள் என்று கூறினர்

அனுமார் அவ்வார்த்தையைக் கேட்டு "ஓ ரிஷி சிரேஷ்டரே! எனக்கிப்போது தாகம் மிகுதியாயிருப்பதால் இக்கமண்டலத்திலுள்ள ஜலத்தால் அது நிவிர்த்தியாகமாட்டாது. ஆகையால் ஜலமிருக்கும் இடத்தைக் காண்பிக்கவேண்டும்" என்றார்

காலநேமியாகிய ரிஷி, அவ்விதமே என்று கூறி தன்னிடமிருந்த மாயாவியாகிய ஓர் பிரமசாரியை யழைத்து அவனைப் பார்த்து "ஓ மாணியே! (மாணி—பிரமசாரி) இந்த அனுமாரை யழைத்துச் சென்று, பானத்துக் கருகமான ஜலம் நிறைந்த தடாகத்தைக் காண்பி

வித்து வாரும். ஓ வாயுகுமாரரே! நீர் இவருடன் சென்று தடாகத்தைக் கண்டு அதன் கரையிலிருந்து கண்ணைத் திறவாது மூடிக் கொண்டே ஜலத்தைப் பானம் செய்து பிறகு என்னிடம் வந்து சேரும், நான் உமக்கு அருமையான மந்திரோபதேசம் செய்கிறேன். அந்த மந்திரபலத்தால் சஞ்சீவி முதலிய மூலிகையைப் பார்க்கலாம்'' என்று பகர்ந்தார்.

பிறகு அந்த மாயாவியாகிய பிரமசாரி, ஆஞ்சனேயரை யழைத்துக் கொண்டு போய்த் தடாகத்தைக் காண்பிக்க வாயுகுமாரர் ரிஷி கூறிய வார்த்தையை நம்பி கண்ணை மூடிக்கொண்டே ஜல பானம் பண்ணினர். அந்தச்சமயத்தில் அத்தடாகத்தி லிருந்து கருமை நிறத்தோடு கூடிய பெருத்த சரீரத்தை யுடைய ஓர் பெண் முதலை, அதி வேகமாக வந்து, மஹாகபியாகிய மாருதியை விழுங்கிற்று.

அனுமார் தனது கண்ணைத் திறந்துபார்த்து, தன்னை விழுங்கும் அப்பெரிய காவினது வாயைத் தனது கையாற் பற்றிப் பிடித்துக் கிழித்தார். அந்த இடங்கர் (முதலை) மாண்டது. மாருதி பிரமித்து நின்றார். அப்பொழுது திவ்விய சொரூபத்தையுடைய ஓர் ஸ்திரீ ஆகாயமார்க்கத்தில் அவர் முன்னே தோன்றி, அனுமானைப் பார்த்து "ஓ ஆஞ்சனேயரே! முதலை ரூபங்கொண்டிருந்த யான், தான்யமாலினி என்று பிரசித்தி பெற்ற ஓர் அப்சரஸ்திரீ; முந்தி ஓர் முனிவர் ஒரு காரணத்தைக் கொண்டு எனக்குச் சாபங் கொடுத்தார். அந்தச் சாபத்தை யேற்று நான் முதலை யாகினேன். ஓ கபிசிரேஷ்ட! தங்களுடைய அநுக்கிரகத்தால் இப்போது நான் அந்தச் சாபவிமோசனம் அடைந்தேன். இந்த ஆச்சிரமத்தில் தாங்கள் தெரிசித்த ரிஷி ரிஷியல்ல, காலநேமி யென்ற அசுரன். ஓ தோஷமற்ற பிரபுவே! தங்களுடைய பிரயாணத்துக்கு விக்கினம் செய்யும் படி, இராவணனால் ஏவப்பட்டவன். ரிஷிவேடம் பூண்டவன், ஸாதுக்களை ஹிம்சிக்கிறவன், அந்த ரிஷிவேஷம் பூண்ட பரமதுஷ்டனாகிய காலநேமி யென்ற அசுரனை சற்றும் யோசிக்காமல் வதை செய்துவிட்டு அதிசீக்கிரமாக த்ரோணமலைக்குச் செல்லவேண்டும். இப்போது தங்களுடைய ஸ்பரிசத்தால் பாபம் நீங்கினவளாகி நான் பிரமலோகஞ்செல்கிறேன்'' என்று தெரிவித்து, அந்தத் தான்யமாலினி சுவர்க்கலோகஞ் சென்றாள்.

அநுமார், தான்யமாலினி கூறிய வார்த்தையைக் கேட்டு, கோபமடைந்து சடுதியாகக் காலநேமி ஆச்சிரமம் வந்து சேர்ந்தார். காலநேமி அவரைப்பார்த்து, ஓ வானர சிரேஷ்டா! உமக்கேன் இவ்வளவு தாமதம், நான் உபதேசிக்கும் உத்கிருஷ்டமான மந்திரத்தைக் கிரஹித்துக் கொண்டு, உம்மாலியன்ற குருதக்ஷிணையை எனக்குக் கொடும் என்று கேட்டார்.

இவ்விதம் கேட்ட காலநேமியைப் பார்த்துக் கோபங்கொண்டு, அநுமார் தனது கரத்தை முஷ்டியாகப் பிடித்துக் கொண்டு இந்தத் தக்ஷிணையைப் பெற்றுக் கொள்ளும் என்று கூறி ஒரு குத்துக் குத்தினார். அக்குத்துப்பெற்ற காலநேமியென்ற அசுரன், தான் கொண்டிருந்த முனிவேடத்தைவிட்டு மாறி, சுயரூபத்தை யடைந்து பலவிதமான மாயா விசித்திர மார்க்கத்தோடு அநுமாருடன் போர் புரிந்தான்.

மாயா சக்தி பெற்றவர்களுக்குச் சத்துருவும், மாயா சகிதராகிய ஸ்ரீராமருக்கு மித்துருவுந் தூதனுமாகிய மாருதி அந்த முஷ்டியினாலேயே காலநேமியின் சிரசிற் குட்டினார். அக்குட்டினாற் காலநேமி மண்டை திறந்து உயிர் துறந்து மாண்டான்.

உடனே ஆஞ்சனேயர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, பாற்கடற் பிரதேசஞ் சென்று, த்ரோணம் என்ற பெரிய பருவதத்தையடைந்து பார்க்க, அங்கு அவர்கண்ணுக்கு அந்தமூலிகை காணப்படாததால், அந்தமலையை அடியோடே பெயர்த்தெடுத்துக் கொண்டு, காற்றினுங் கடுமையாக விரைந்தோடி வந்து ஸ்ரீராமருடைய சந்நிதானத்தில் அம்மலையை வைத்து, ஓ தேவ! இதோ அந்த மூலிகையுடைய பருவதத்தையே கொண்டு வந்திருக்கிறேன். எது உசிதமோ அதைத் தயவு செய்து செய்யவேண்டும், காலதாமதம் வேண்டாமென்று பிரார்த்தித்தார்

மாருதி கோரிய வார்த்தையைக் கேட்டு ஸ்ரீராமர் திருப்தியடைந்து, உற்சாகத்துடன் அம்மலையருகிற் சென்று அதிலுள்ள சஞ்சீவி மூலிகையைக் கிரஹித்து, ஸுஷேணனிடம் கொடுத்து, அவனைக்கொண்டு மஹாத்மாவாகிய இலக்ஷ்மணருக்குச் சிகிச்சை செய்வித்தார். உடனே இலக்ஷ்மணர், உறங்கி விழித்தவரைப்போல, "ஓ தசக்கிரீவ! இரு, இரு, எங்கு போகிறாய், இப்போதே உன்னை வதை செய்கிறேன்" என்று பேசிக்கொண்டே யெழுந்தார்

ஸ்ரீராமர் இலக்ஷ்மணரைக் கட்டித்தழுவி யுச்சிமுகந்து தன்னருகிலிருக்கச் செய்து, மாருதியைப் பார்த்து "ஓ மஹாவீரரே! உம்முடைய அநுக்கிரஹத்தால், என்னுடைய பிராதாவாகிய இலக்ஷ்மணனைப் பிணிபற்றவனுகப் பார்க்கிறேன்" என்று கூறி, யுத்தத்தில் களைத்த வானரர்களையும் அம்மூலிகையைக் கொண்டு தாபந்தீர்ந்தெழும்படிச் செய்து, வானர சைனியங்களுடனும், ஸுக்ரீவனுடனும் விபீஷணனுடனும் யுத்த சன்னதராய் வீற்றிருந்தார். வானரர்களும், பருவதம், மலைச்சிகரம், விருக்ஷம் முதலியவைகளைக் கிரஹித்துக்கொண்டு யுத்தத்துக்குத் தயாரா யிருந்தார்கள்.

இங்கு இவ்விதமிருக்க இலங்கையில், இராமபாணத்தால் அடிபட்டுக் களைந்து அவமானத்துடன் திரும்பி வந்த இராவணன், ஸிம்மத்தைக் கண்ட யானையைப் போலும், கருடனைக்கண்ட ஸர்ப்பத்தைப் போலும் மனமருண்டு ஸிம்மாசனத்தில் வந்துட்கார்ந்து, இராக்ஷசர்களைப் பார்த்து "ஓ எனக்கு மிகப்பிரியமுள்ள வீரர்களே! நேற்று நடந்த யுத்தத்தில் மஹாத்மாவாகிய இராகவனுல் அவமதிக்கப்பட்டு வந்தேன். முன்னம் பிரம்மதேவர் எனக்கு மானிடனுலேயே மரணமென்று கூறியிருக்கிறார். ஆனல் பூமியிலுள்ள மானிடரில் என்னைக் கொல்லுவதற்குச் சக்திவாய்ந்தவன் எவனுமில்லை. ஆகையினுல் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே பிரத்யக்ஷமானிடனுக வந்திருக்கிறார். சந்தேகமில்லை.

அந்த பகவானே, தசரத குமாரனுகி, இராமன் என்ற நாமம் வகித்து, என்னை வதம்செய்ய வந்திருக்கிறார். இரகுவமிசத்திலுற்பவித்த அநரண்ய மஹாராஜன், மரணந்தகாலத்தில் என்னை நோக்கி "ஓ இராக்ஷசேஸ்வர! என் வமிசத்தில் ஸனுதரும், பரமாத்மாவுமாகிய பகவான் ஒரு புத்திரனுகத் திருவவதாரஞ் செய்யப் போகிறார். அந்த மஹானுல் நீ புத்திர மித்திர பௌத்திரர்களுடனும் பந்துஜனங்களுடனும் வதமடையக் கடவாய்," என்று சாபங்கொடுத்து ஸ்வர்க்கம் சென்றார். அவ்விதமாகவே அந்த இரகுவமிசத்தில் தோன்றிய ஸ்ரீராமர் என்னை வதஞ்செய்யப்போகிறார்" என்றுமிகுந்த மனத்தளர்ச்சியுடன்கூறி, ஆயினும் "ஓ இராக்ஷசர்களே! எனதுதம்பியாகிய கும்பகருணனே மூடாத்மா; சதா தூக்கத்தில் பிரியமுடையவனுயிருக்கிறன். இங்கு நடக்கும் காரியங்களைக் கவனிக்கிறதில்லை. ஆகையால் நீங்கள் அந்தப் பலம்பொருந்திய கும்பகருணனிடம்

சென்று, அவனைத்தூக்கத்தை விட்டுக் கிளப்பி, அதி சீக்கிரத்தில் என்முன் அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

இராக்ஷசர்கள் அரசனிட்ட கட்டளைப்படி கும்பகருணனிடம் சென்று, பலவகையான பிரயத்தனத்தால் அவனை நித்திரையை விட்டு எழுந்திருக்கச்செய்து இராவணன் சமுகத்துக்கு அழைத்து வந்தார்கள்.

இராக்ஷசர்களுள் மஹா தீரனாகிய கும்பகருணன் தனது தமயனிடம் வந்து, அவனடியில் வீழ்ந்து நமஸ்கரிக்க, இராவணனும் தம்பியாகிய கும்பகருணனைக் கையால் தூக்கி யுபசரித்து ஓர் அரியாசனத்தில் தன்னருகில் வீற்றிருக்கச் செய்தான். பிறகு இராக்ஷச காவலன் தனக்கிளைய காளையாகிய கும்பகருணனைப் பார்த்து "ஏ தம்பி! நான் சொல்வதைச் சற்று கவனி. அதாவது தற்போது எனக்குச் சகிக்தற்கரிய மனக்கிலேசம் நேரிட்டிருக்கிறது. தசரத குமாரனாகிய இரகுவீரன், தனது தோழனாகிய ஸுக்ரீவனுடனும், அனுமான் முதலிய வானரவீரர்களுடனும், ஏராளமான *வலிமுகச் சைனியங்களுடனும் ஸமுத்திரத்தைக் கடந்துவந்து இலங்கையின் கோபுர வாசலை யடுத்து வீராவேசத்துடன் நிற்கிறான். நம்குலத்துக்கே சத்துருவாகத் தோன்றி வந்திருக்கிற இராமன் அம்பால், எனது அருமையான புத்திரர்களும், பெருமை வாய்ந்த மித்திரர்களும் சிறந்த அனேக அரக்கவீரர்களும் போரில் மாண்டார்கள். யுத்தத்தில் வானரர்களுக்குள் நாசம் ஏற்பட்டதை நான் எப்போதும் கேள்விப்படவில்லை, பார்க்கவுமில்லை. இது என்ன ஆச்சரியம்??. எனக்கும் மரணம் நேருங்காலம் சமீபத்திலிருக்கிறது. ஓ மஹா பாகுவே! சத்துருக்களை நாசம் செய்யவேண்டும், அதற்காகவே உன்னை யெழுப்பினேன். எனது அன்புவாய்ந்த சகோதரனும் மஹா பலசாலியுமாகிய நீ யிந்த விஷயத்தில் உன்னால் செய்யக்கூடிய காரியத்திற் பின்வாங்காமல் செய்யவேண்டும்," என்று கூறினான்.

கும்பகருணன், தனது சிரேஷ்டபிராதாவும் இலங்கை மன்னனுமாகிய இராவணன் மிகச்சஞ்சலத்துடன் கூறிய வார்த்தையைக் கேட்டு, மிக்கதுயரத்தை யடைந்து சஹிக்கமுடியாத கோபத்துடன் தமயனைப் பார்த்து "ஓ இராவணேஸ்வர! முந்தி மந்திராலோசனை செய்யும் பொழுது நான் கூறிய வண்ணம் உம்முடைய அக்கிரமத்

* வலிமுகம்=குரங்கு.

துக்குத் தக்கபலன் இப்போது கிடைத்திருக்கிறது. முந்தியே நான் அந்தப்பரம புருஷனாகிய இராமன் ஸ்ரீமந்நாராயணனென்றும், ஸீதை லோகமாதை யென்றுந் தெரிவித்திருக்கிறேன், சற்றும் நீ யதைக் கவனிக்கவில்லை.

மேலும் நான் கொஞ்ச காலத்திற்கு முந்தி வனசஞ்சாரியாகி ஓர் வனத்தில் நள்ளிருளில் தங்கினேன். அப்பொழுது மகா யாழுடன் கூடிய முனிசிரேஷ்டராகிய நாரத முனிவர் என்னெதிர்ப் பட்டார். நான் அந்த மஹானுபாவனைப் பார்த்து "ஓதவசிரேஷ்டரே! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்," என்று கேட்டேன். அதற்கு அம்முனிவர் என்னைப்பார்த்து "ஓ கும்பகருண! நான் தேவர்களின் மந்திராலோசனைச் சபையிலிருந்து வருகிறேன்" என்று கூறினர். அதைக்கேட்ட நான் "ஓ முனிவரே? தேவர்கள் மந்திராலோசனைச் சபை கூட்டியது எதற்காக அங்கு நடந்த விஷயம் என்ன" என்று கேட்டேன். யாழிற்சிறந்த அம்முனிவர் என்னை நோக்கிச்சற்றுலோசித்துப் பிறகு "ஓ கும்பகருண! அந்தச்சபையில் நடந்த விருத்தாந்தத்தை ஒளிக்காது உமக்குக்கூறுகிறேன். அதாவது, இராவணனும் உம்மாலும் பீடிக்கப்பட்ட தேவர்கள் யாவரும், மஹா விஷ்ணுவினிடத்திற் சென்று, பரிசுத்தமான மனத்துடன் சர்வேஸ்வரனாகிய தாமோதரனைப் பத்தியோடு ஸ்தோத்திரஞ் செய்து, ஓ தேவ தேவ! மூவுலகுக்கும் சத்துருவாகிய தசக்கிரீவனை வதைசெய்ய வேண்டும். அவனுக்குப்பிரமதேவர் மானிடனால் மரணமென்று ஏற்படுத்தி யிருக்கிறார். ஆகையினாலே தாங்கள் மானிட அவதாரம் செய்து அந்த துஷ்டனைச் சம்ஹரித்து, எங்களைக் காக்க வேணுமென்று வணங்கிக் கேட்டுக் கொண்டதை கொண்டு மஹாவிஷ்ணுவும் பூமியில் இரகு வம்சத்திற் பிறந்த தசரதச் சக்கரவர்த்தியின் குமாரனாக, அவதாரம் செய்து ஸ்ரீராமன் என்கிற நாமந்தரித்து விளங்குகிறார் என்றும், அவர் இராவண சம்ஹாரத்துக்குப் புறப்படத் தாங்கள் செய்ய வேண்டிய காரியத்தை முயற்சிப்பதற்கும் சபை கூடி யாலோசித்தார்கள். ஸ்ரீராமர்அயோத்தியை விட்டுத் தண்டகாரண்யம் வந்துசேர முயற்சியும் செய்திருக்கிறார்கள். கூடிய சீக்கிரத்தில் இராமச்சந்திரனும் ஆரண்யம் வந்து சேருவார். இராவணன் முதலிய இராக்ஷசர்கள் யாவரையும் வதை செய்யப் போகிறார்" என்றுரைத்து அம்முனிவர் சென்றார். ஆகையினால் இப்போதாவது நான் சொல்லுகிற வண்ணம் நீ நடப்பாயானால் ஏற்பட்டிருக்கும் சங்கடத்தினின்று விடுபடலாம்.

ஐயப்பட வேண்டுவதில்லை. அதாவது, பிரத்யக்ஷ இராமரை ஸகு ணமான பரப்பிர்ம்ம சொரூபியென்று அறிந்து மாயாமானுடவடிவங் கொண்ட அப்பிரபுவினிடத்து வைத்திருக்கும் விரோதத்தை விட்டு பக்தியுடன் பஜிக்கவேண்டும். அப்படிப் பஜிக்கிறவர்களுக்கு அவர் அநுக்கிரஹம் செய்கிறார். பக்தியானது ஞானத்தை யுண்டுபண்ணி, அதன் வழியாக மோக்ஷத்தையும் கொடுக்கக்கூடியது. பக்தியிற் சிறந்தது வேறு எதுவுமில்லை. பக்தி நிறைந்தவன் செய்யுங்காரியம் யாவும் சிறந்தனவாகும். மஹாவிஷ்ணுவின் லீலையை விளக்கும் அவதாரங்களில் ஆயிரம் அவதாரங்களுக்கு நிகராகியது இந்த இராமாவதாரம். இந்த இராமர் ஞானசொரூபர். சிவசொரூபர், மங்களசொரூபர். மனதாலும் வாக்காலும் எப்போதும் இராமரைத் தியானிக்குந் தரம் வாய்ந்த ஸமர்த்தர்கள் அஞயாஸமான ஸம்ஸாரக் கடலைத் தாண்டி மஹாவிஷ்ணுவின் பதம் அடைகிறார்கள். பூமியில் எப்போதும் பரிசுத்தமான ஸத்வகுணமுடைய எந்த ஸாதுக்கள் இராமரைத் தியானம் செய்கிறார்களோ, எந்த ஸாதுக்கள் அவருடைய சரித்திரங்களைப் படிக்கிறார்களோ, அந்த ஸாதுக்கள், ஸம்ஸாரமாகிய படத்தினையுடைய பெரும் ஸர்ப்பங்களாகிய பாசங்களில் நின்று விடுபட்டு முடிவற்ற சுகமுடைய ஸ்ரீயப்பதியின் ஸ்தானத்தை யடைகிறார்கள். ஆகையால் நீயும் அந்த இராமரை எப்போதும் பக்தியுடன் தியானிப்பதே மிகவும் உத்கிருஷ்டமான காரியமென்று கூறினான்.

---

## 8-வது சருக்கம்.

தசக்கிரீவன், கும்பகருணன் பச்சாதாபத்துடன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு, கோபத்தாற் கண்சிவந்து கடுத்த முகமுடையவனாகி, ஆசனத்திருந்து கிளம்பி, திசையெட்டும் நடுங்கக் குதித்து, உட்கார்ந்து தம்பியை நோக்கி, ஓ கும்பகருண! எனக்கு ஞானோபதேசஞ் செய்ய உன்னை நான் அழைக்கவில்லை. நான் பிரவிர்த்தித்த காரியத்தை முடிக்க உனக்கும் இஷ்டமிருந்தால், எதிரிகளை வதஞ் செய்வதற்கு ஆக வேண்டியதில் முயற்சி யெடுத்து யுத்தம் செய். இல்லாவிடில் வழக்கம்போல் நீ நித்திரை செய்யப் போகலாம். தூக்க மயக்கத்தால் காரியா காரியம் இன்னதென்று தெரிந்து கொள்ள அறிவற்றவனா யிருக்கிறாய் என்று கூறினான்.

நிகரற்ற பலசாலியும், விசேஷித்த புத்திசாலியுமாகிய கும்ப கருணன், தமையன் கடுஞ்சினத்துடன் கூறிய வார்த்தையைக் கேட்டு, "விதியை வெல்வ தரிது" ஆகையால் தனது பிராதாவாகிய இராவணன் ஊழின் வலியினால் இக்கொடிய காரியத்தில் பிரவேசித் திருக்கிறான். இதைத் தடுக்க நம்மால் முடியாது; இவனுடன் ஒத்து உயிர்வாழ்வதைவிட இராமனிடத்திற் சென்று போர்புரிந்து, இம்மாய வாழ்க்கையைத் துறப்பதே நலமெனக் கருதி, அச்சபையை விட் டெழுந்து சென்றான்.

பிறகு கும்பகருணன், வில், வாள், கதை முதலிய ஆயுதங் களைத் தரித்துக் கொண்டு யுத்த சன்னத்தனாகி, ஆயிரம் யாளிகள் பூட்டப்பட்ட தனது ஒப்பற்ற தேரின்மீதேறி, கணக்கற்ற இராக்ஷச சைனியங்கள் பின் தொடர, யுத்தகளத்தை நோக்கிச் சென்றான். ஓர் பெருத்த பருவதத்துக்குச் சமமான சரீரத்தையுடைய கும்பகரு ணன், வானர சைனியத்துக்குட் பிரவேசித்து, சமுத்திர கோஷம் போல அட்டகாசம் பண்ணினான். ஒரு பெருத்த குன்றானது இரண்டு இறக்கைகளை யுடைந்து பறந்ததை யொப்ப, கும்பகருணன் தனது ஐந்து விரல்களை யுடைய கரங்களை நீட்டி, வானர சைனியங் களின் மேற் பாய்ந்து, அவர்களைக் கையாலும் காலாலும் அடித்தும் உதைத்தும் வாரி, ஆகாயத்தில் எறிந்தும், காலனைப் போல் குரங் கினத்தவர்களைச் சேர்த்தெடுத்துப் புசித்தும், க்ஷணப்பொழுதில் கபிக் கூட்டத்தைச் சின்னபின்னமாகச் சிதற அடித்தான்.

கும்பகருணனால் ஹிம்ஸிக்கப்பட்ட வானரர்கள் எல்லோரும் கலைத்தோடினார்கள்.

இச்சமயத்தில், சிறந்த புத்தியுடையவனும் கதாயுதத்தைக் கையில் தரித்தவனுமாகிய விபீஷணன், வானர சைனியங்களுட் பிர வேசித்துக் காலனைப் போல வானரர்களைத் துன்பப்படுத்துகிற தனது தமயனாகிய கும்பகருணனைப் பார்த்து, விரைவில் அவனிடம் வந்து, தமையனது பாதார விந்தங்களில் வணங்கி, 'ஓ அறிவிற் சிறந்த பிராதாவே! நான் தங்களுடைய பிரியமுள்ள தம்பியாகிய விபீஷணன்; என்னிடம் தாங்கள் தயைபுரிய வேண்டும்; நான் நமது தமையனாகிய இராவணனுக்கு, அவனுடைய சுகத்தைக் கருதி யென்றுங் கூடிய வரையில், ஸ்ரீராமர் ஸ்ரீமந் நாராயண னென்றும், ஸீதை மாயா சொரூபி யென்றும், அத்தகைய ஸீதையை ஸ்ரீராமரிடம் கொண்டுபோய் விட்டு விடுவதே யுன்

க்ஷேமத்துக்கடுத்த காரிய மென்றும் எடுத்துக் கூறினேன். அவன் என்னுடைய வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. மேலும், என்னை வதைசெய்வதற்குக் கத்தியை ஓங்கினவன் பிறகு எதையோ நினைத்துக்கொண்டு, என்னை நோக்கி, ஓ விபீஷண! உன்னை நான் விட்டுவிட்டேன். இந்த இடத்தை விட்டு ஓடிப் பிழையெனக் கடுமை யுடன் கூறினான். அதைக்கேட்டு நான் என்னுடன்கூட நான்கு மந்திரிகளையும் அழைத்துக் கொண்டு, அவ்விடம்விட்டுப் புறப்பட்டு வந்து ஸ்ரீராமரைச் சரணமென்றடைந்தேன் என்று தெரிவித்துக் கொண்டான்.

அதைக்கேட்ட கும்பகருணன், தன்னிடம் வந்து வணங்கித் தெரிவித்துக் கொண்ட விபீஷணனைக் கட்டியணைத்து முத்தமிட்டு, "ஓ அறிவிற்சிறந்த தம்பியே! நீ ஸ்ரீராமரிடம் சென்று அவரால் மதிக்கப்பெற்று அவருடைய கிருபைக்குப் பாத்திரனாகி, நம்முடைய குலம் விளங்கச் செய்வதற்காகவும் நம்மையடுத்த இராக்ஷசர்களை இரக்ஷிப்பதற்காகவும் நீ உயிருடன் வாழ்வதையே நான் விரும்புகிறேன். நீ அவ்விதமே இரகுவீரனிடம் சென்று ஜீவித்திருப்பாயாக! நீ சிரேஷ்டமுள்ள பாகவதனாவாயென்று முந்தி நாரத மஹாமுனிவர் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். ஆகையால் நீ யிப்போதே ஸ்ரீராமரிடம் செல்லலாம். இப்போது நான் எதையும் யோஜிக்க முடியவில்லை. நானோ தற்காலம் வெறிகொண்டவனாக இருக்கிறேன், நம்மைச்சார்ந்தவன் அல்லது பிறரைச்சார்ந்தவன் என்று அறியக் கூடவில்லை" என்று மிக்க ஒழிவுடன் கூறினான்.

இதைக் கேட்ட விபீஷணன், கண்ணீர் சொரியும் முகத்துடன் தனது தமையனாகிய கும்பகருணன் பாதங்களில் வணங்கி விடைபெற்றுக்கொண்டு, ஸ்ரீராமரிடம் வந்து மிகுந்த கிலேசத்துடனிருந்தான். பிறகு கும்பகருணன், மதங்கொண்ட யானையைப்போல வானரசைனியத்திற் பிரவேசித்து, கையால் பிடித்துப் பிசைந்தும், காலால் துவைத்தும் வானரர்களைக் கலக்கி காசராதிகளோடு கூடிய ஓர் மலைபோல யுத்தகளத்தில் விளங்கினான்.

ஸ்ரீராமர், மிக்க கோபாவேசத்துடன் சஞ்சரிக்கும் கும்பகருணனைப் பார்த்துக் கடுஞ்சினமுற்று, கோதண்டத்தை வளைத்து, ஒரு திவ்ய வாயுவஸ்திரத்தைப் பிரயோகித்து, கும்பகருணனுடைய வலது கையைச் சேதித்தார், சேதிக்கப்பட்ட கையானது அநேக

வானரர்களுக்குத் துன்பத்தை யுண்டாக்கிக் கொண்டு மலைபோல பூமியில் விழுந்தது, பக்கத்தில் நின்ற வானரர்கள் யாவரும் பயத்தால் பீதியடைந்து ஸ்ரீராமருக்கும் கும்பகருணனுக்கும் நடக்கும் யுத்தத்தைப் பார்த்துக்கொண்டு பிரமித்து நின்றார்கள்.

மஹாதீரத்தை யடைந்த கும்பகருணன் தனது வலது கரம் துணிபட்டுக் கீழே விழுந்ததைச் சற்றும் பாராமரிக்காமல், மிஞ்சிய இடது கரத்தால் ஒரு பலத்த சால விருக்ஷத்தைக் கையிற்பற்றிக் கொண்டு, இராமனை வதைக்க எதிர்த்தோடி வந்தான். மிருந்த துணி கரத்துடன் ஓடிவரும், பருவதத்துக்குச் சமானமான கும்பகருணனுடைய விருக்ஷத்துடன் கூடிய இடது கரத்தையும், ஸ்ரீராமச்சந்திரர் ஓர் காந்தி பொருந்திய இந்திராஸ்திரத்தை விடுத்துத் துண்டித்தார்.

பிறகு, இருகரமுமற்ற கும்பகருணன், சிறகிழந்த நடைக் குன்றம் போலக் கர்ச்சித்து வந்தான். அத்தகைய கொடிய சூரனைப்பார்த்து, இரகுவீரர் தனது அம்புறாத் தூணியி விருந்து இரண்டு கூரிய அர்த்த சந்திரபாணத்தை யெடுத்து வில்லிற்றொடுத்து விடுத்து, அப்பாதகனுடைய பருத்து நீண்ட இரண்டுகால்களையுந் துணித்து அவைகள் யுத்தகளத்தில்விழாதபடி, இலங்கையின் அடித்துவாரத்திற் போய் விழும்படிச்செய்தார்.

அப்போது கும்பகருணன் இரண்டு கைகளும் இரண்டு கால்களும் துண்டிக்கப்பட்ட முண்டமான சரீரத்தை யுடையனாயினுந் தனது ஆழிபோன்று அகண்ட வாயைத் திறந்துகொண்டு, இடி போன்ற முழக்கத்தோடு, சந்திரனைவிழுங்கவரும் கேதுவை யொப்ப, ஸ்ரீராமனை யெடுத்து விழுங்க எண்ணங் கொண்டு எதிர்த்தான்

இராமச்சந்திரர், தன்னை விழுங்கிவிடலாமென்ற எண்ணத்துடன் வரும் கும்பகருணனுடைய திறந்தவாயில், கூர்மையுள்ள அநேக பாணங்களைப் பிரயோகித்து அவன் வாயை நிரப்பினார். அவ்விதம் பாணங்கள் நிறைந்த வாயையுடைய கும்பகருணன்,வேறு செயலற்றவனுய் மிகுந்த பயங்கரமான முண்ட ரூபத்தோடு கூடிக் கடலெனக் கதறினன். அந்தச் சத்தம் எட்டுத்திசையையும் நடுங்கச் செய்தது. அதைக் கண்ட ஸ்ரீராமர் அவனை வதம் செய்யக் கருதி, அஸ்திரங்களிற் சிறந்த ஒரு இந்திராஸ்திரத்தை யெடுத்து, கோதண்டத்திற் றொடுத்து அரக்கனுடைய சிரசுக்கு இலக்ஷியம் வைத்து

விடுத்தார். அப்பாணம் வில்லினின்று புறப்பட்டு பளபளவென
சூரியனைப் போல் பிரகாசித்துக் கொண்டு சென்று, மிருந்த காந்தி
யோடு விளங்கும் இரண்டு குண்டலங்களையும், அகோரமான வக்
தந்தங்களையுமுடைய இராக்ஷச சிரேஷ்டனான கும்பகருணனுடைய
சிரசைச் சேதித்து, அச்சிரம் இலங்கையின் துவாரத்திலும், உடல்
சமுத்திரத்திலும் விழும்படி செய்து, திரும்பி ஸ்ரீராமருடைய அம்
புறாத்தூணியில் வந்துசேர்ந்தது. துவாரத்தில் விழுந்த கும்பகருணன்
சிரசானது அந்த இலங்கையின் அகண்ட வாயலை யடைத்து, இராக்ஷ
சர்கள் போக்குவரத்தில்லாமற் றடுத்தது. ஸமுத்திரத்தில் விழுந்த
உடலானது அதில் சஞ்சரிக்கும் மகரம, முதலை முதலிய ஜந்துக்களை
நாசஞ் செய்தது.

கும்பகருண சம்ஹாரத்தைப் பார்த்துக்கொண்டிருந்த தேவர்
கள், முனிவர்கள், கந்தருவர்கள், கின்னரர்கள் முதலிய யாவரும்
சந்தோஷித்துப் புஷ்பமாரிபொழிந்தார்கள். இரகுநந்தனரை ஸ்தோத்
திரஞ் செய்தார்கள். துந்துபி முதலிய வாத்திய கோஷம் செய்
தார்கள். ஆனந்த நிருத்தனமாடினார்கள். தங்கள்கலி நீங்கினதென்று
கொண்டாடினார்கள். அரம்பை முதலிய ஸ்திரீகள் பாடினார்கள்.

இந்திவரம் (கருநெய்தல்) போன்ற சியாமள ரூபமுடையவரும்,
கம்பீரமான காத்திரமுள்ளவரும், கண்சிவந்து மதர்த்து அகண்டு
நீண்ட நேத்திரமுடையவரும், சந்திரப் பிறைபோல் வளைந்து நீண்ட
தேஜஸோடு கூடிய கோதண்டத்தை ஓர் கையில் பிடித்தவரும், மற்
றோர் கையில் வடிக்கணையான இந்திராஸ்திரத்தைத் தரித்தவரு
மாகிய ஸ்ரீராமர், யுத்தத்தில் பாணங்களால் துன்பமுற்ற வானரர்
களைப் பார்த்து மனம் வருந்தி அவர்களிடம் தயை கூர்ந்து அஞ்சா
தீர்களென அவர்களுக்கு அபயஸ்தம் கொடுத்து இனிய வார்த்தை
கூறி இலக்ஷ்மணர், ஸுக்ரீவர், விபீஷணர் புடைசூழக் கிருபாமூர்த்
தியாய் வீற்றிருந்தார்.

அப்பொழுது தேவலோகத்திலிருந்து, தவமுனிவர்களில் மிகச்
சிறப்புற்றோங்கிய நாரத முனிவர், இராவணன், கும்பகருணன், இந்
திரஜித்து முதலிய இராக்ஷச ஸிரேஷ்டர்களால் துன்பமடைந்து
நிலைபெயர்த்து நின்ற தேவர்கள் கும்பகருணனுடைய வதையைக்
கேள்விப்பட்டு மட்டற்ற சந்தோஷக் கடலில் ஆழ்ந்து ஸ்ரீராமபிரானை
ஸ்தோத்திரித்த விஷயத்தைக் கண்டு, தானும் ஆனந்த பரவச

மாகி இராக்ஷசகுல காலனாகிய ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவைத் தரிசிக்க ஆசைகொண்டு வந்தார்.

மிக்க காதலுடன் வந்த அன்பிற் சிறந்த நாரத முனிவர், தயாநிதியென விளங்கும் ஸ்ரீராமரைக் கண்டு, இருகண்களிலும் ஆனந்த பாஷ்பம் பொழிய, மெய் சிலிர்த்துக் கரங்குவித்து ஓ தேவ தேவ! ஜெகன்னாத, ஸனாதன, நாராயண, எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிய வரே, விஸ்வசாக்ஷியே! உமக்கு நமஸ்காரம். நீர் பரிசுத்தமான ஞான சொரூபியாயினும், மாயையால் மானிட வடிவங்கொண்டு, ஸுகதுக்கங்களை யடைந்தவர்போல் காணப்படுகிறீர். நீர் எல்லோருடைய இருதயத்திலும் வசிப்பவர். சுயஞ்சோதி மயமானவர். நிர்மலமான மனமுடையவர்களுக்கு வியக்தராகியவர், ஓ இராம! உம்முடைய நேத்திரங்களைத் திறப்பதால் மூவுலகங்களையும் சிருஷ்டிக்கிறவர். நேத்திரங்களை மூடுவதால் உலகங்களை அழிப்பவர். எவ்விடம் ஸ்தாவரஜங்கம சொரூபமான இந்தப் பிரபஞ்சம் யாவும் காணப்படுகிறதோ, இவ்வுலகில் எவரைவிட வேறொன்றும் காணப்படவில்லையோ அந்தப் பிர்மமாகிய உமக்கு நமஸ்காரம். எவரைப் பிரகிருதி புருஷன், காலன், வியக்தாவியக்த சொரூபி என்று சகலமுனிவர்களும் அறிகின்றார்களோ அந்த ரூபிகரமான உமக்கு நமஸ்காரம். எந்த சுருதியானது உம்மை விகாரமில்லாதவர், சுத்தர், ஞான சொரூபர் என்று கூறியதோ அந்தச் சுருதியே உம்மை உலகம் முழுமைக்கும் ஆதாரமான மூர்த்தியாகக் கூறுகிறது. ஓ தேவ! வேதங்கற்றவர்களுக்குப் பதிகிருத்தாரணந் தெரிகிறது. பக்திமான்களாகிய உமதடியார்களுக்கு உம்முடைய அநுக்கிரகமின்றி ஈஸ்வர நிச்சயந் தெரிகிறதில்லை. ஓ தேவ! மாயையால் விளையாடிப்பவராகிய உமக்குக் கொஞ்சமேனும் விரோதமில்லை. பிரமையால், சூரிய கிரணத்தாலுண்டாகும் கானலை ஜலமென்று கருதுவது போல, பிரபஞ்சமும் உம்மிடத்தில் கற்பிக்கப்படுகிறது. ஓ தேவ உம்முடைய மகிமை தங்கிய நிர்க்குண ரூபமானது, மனதுக்கு விஷயமாகாதது; அது எவ்விதங் காண்பதற்குரியதாகும்? ஆகையால் அறிஞர்கள் உம்முடைய அவதாரங்களில் ஏற்படும் ரூபங்களைப் பஜிக்கிறார்கள்; அதைக்கொண்டு ஸம்சாரக் கடலைத் தாண்டுகிறார்கள். இவ்விதம் பஜனை செய்யும்போது, காமம், குரோதம் முதலிய சத்துருக்கள், எலிக்குப் பூனை யெப்படி சத்துருவாகிறதோ அதுபோலச் சத்துருவாகிப் பலன் அடையாது கெடுக்கின்றன. ஓ இராமச் சந்திர!

எப்போதும் உம்முடைய நாமத்தை ஸ்மரணம் செய்பவர்கட்கும், உம்முடைய ரூபத்தை மனதில் தியானம் செய்பவர்கட்கும், உம்முடைய பூஜையில் ஆவலுடையவர்கட்கும், உம்முடைய சரித்திரமாகிய அமுதத்தில் ஈடுபட்ட மனமுள்ளவர்கட்கும், உம்முடைய பக்தியில் பற்றுதலுடையவர்கட்கும், ஸம்ஸாரமானது (பசுவின் அடிவைப்பு போலாகிறது) புளியம்பழத் தோடுபோலப் பற்றற்று நிற்கிறது. நான் எப்போதும் என்னிருதயத்தில் உம்முடைய ஸகுணமான ரூபத்தியானம் செய்துகொண்டு, அதனால் தேவர்களனைவராலும் பூஜிக்கத்தக்கவனாகி, ஜீவன்முக்தனாக உலகங்களில் சஞ்சரிக்கிறேன். ஓ இரகுவீர! தேவர்களுடைய நன்மையை விரும்பி, நீர் பெரிதான காரியத்தைச் செய்கிறீர். ஓ பிரபுவே! கும்பகருணன் வதமடைந்ததால், இப்பொழுது பாரத்தில் பாதி நீங்கிற்று.

அன்பிற் சிறந்த இலக்ஷ்மணர், நாளையதினம் யுத்தத்தில் இந்திரஜித்தை வதைசெய்யப் போகிறார்.

ஓ இராம! மறுநாள் போரில் நீர் தசக்கிரீவனைச் சம்ஹரிக்கப் போகிறீர். ஓ தேவேஸ்வர! இனி நடக்கப் போகிறதை, தேவர்களுடன் ஆகாயமார்க்கத்திலிருந்து நான் பார்க்கப்போகிறேன். ஓ தேவ! அநுக்கிரஹிக்க வேண்டும். நான் தேவ லோகஞ் செல்ல விடையளிக்க வேண்டுமென்று வணங்கினர். ஸ்ரீராமர் நாரதமுனிவரை வணக்கத்துடன் இனிய வார்த்தையாடி வழியனுப்ப, நாரதமுனிவர் விண்ணுலகஞ் சென்று, தேவர்களால் பூஜிக்கப்பெற்று, பிறகு கல்மஷமில்லாத பிரமலோகஞ் சென்றார். ஸ்ரீராமர், இலக்ஷ்மணர், ஸுக்ரீவர், விபீஷணர், அனுமார் முதலியவர்களோடு மேல் நடக்கும் விஷயத்தை யெதிர் நோக்கி யிருந்தார்.

இலங்கையில் இராவணன், மஹாபலசாலியும், தனது அருமைப் பிராதாவுமாகிய கும்பகருணன் மாண்டதைக் கேள்விப்பட்டு, துக்கக் கடலில் மூழ்கித் தாபமடைந்து, மூர்ச்சையடைந்து, பூமியில் விழுந்து புரண்டு ஓ என்னருமைக் கண்மணியே, எனக்குரிய பிரிதற்கரிய தோழனே, உன்னைப்பிரிந்து நான் எவ்விதம் உயிர்தரிப்பேன் என்று பத்து வாயும் விட்டுத் திசையெட்டுஞ் சிதறக் கதறினன்.

இதைக்கண்ட தசாநநன் புதல்வனான மேகநாதன், புகழ்தற்குரிய தனது சிறிய தந்தை இராமனால் மாண்டதைக் கேட்டு, சோகத்தால் தளர்ச்சி யடைந்து ஒருவாறு மனத்தேர்ச்சி பெற்று,

தம்பி யிறந்த துக்கத்தால் மனக்கிளர்ச்சி யற்று, துன்பமுற்றுப் பாதவிக்கும் தனது தந்தை யிடம் வந்து, அவனடியில் விழுந்து நமஸ்கரித்து "ஓ மஹா வீரதீர சிரேஷ்டரே! தாங்கள் இவ்வாறு துக்கப்படுவது தகுதியற்றது. ஓ அறிவிற் சிறந்த பிரபுவே, துக்கத்தை விட்டு விடுங்கள். இந்திரனைச் சிறையில்வைத்த மேகநாதனாகிய நான் உயிருடனிருக்கும்போது, தாங்கள் ஏதுக்கு இவ்வளவு கவலையடைய வேணும். அதற்கு இது சமயமல்லவே. ஓ தேவ சத்துருவே, மனக் கலக்கம் யாவையும் அடியோடே ஒழியுங்கள். ஸ்வஸ்தமாகக் களிப்புடன் வசியுங்கள், நான் எல்லாவற்றையும் சரிப்படுத்துகிறேன். தங்களுடைய சத்துருக்களையும் வதம் செய்கிறேன். தாங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டுவதில்லை. இப்போது முதலில் நான் நிகும்பலை சென்று யாகஞ்செய்து அக்கினிக்குத் திருப்தி செய்வித்து, தேர் முதலியவற்றைப் பெற்று, யாவராலுஞ் ஜெயிக்க முடியாதவனாகி வருகிறேன் என்று கூறி தகப்பனிடத்தில் விடைபெற்று, அநேக கோடி இராக்ஷச சைனியங்கள் பின் தொடரச் சென்று, யாகஞ் செய்யுமிடத்தை யடைந்து, நாலுதிக்குக்கும் இராக்ஷச சைனியங்களையுங் காவல் நியமித்து, சிவந்த வஸ்திரத்தைத் தரித்து, செஞ்சநதனத்தைப் பூசி, சிவப்புப் பூமாலையை யணிந்து, மௌனமாக விருந்து, நிகும்பலையில் ஹோமம் செய்ய ஆரம்பித்தான்.

பக்தியிற் சிறந்த விபீஷணன், 'துராத்மாவாகிய இந்திரஜித்து நிகும்பலை யாகஞ்செய்ய ஆரம்பித்திருப்பதைக் கேள்விப்பட்டு, இரகுநந்தனரிடம் வந்து, அடிபணிந்து ஓ ஸ்வாமின்! மேகநாதன் யத்தனித்திருக்கிற யாகம் நிறைவேறுமாயின், தேவர்களாலும், மற்ற எவர்களாலும், அவனை ஜெயிக்க முடியாது. ஆகையால் இலக்ஷ்மணரைக்கொண்டு அந்த யாகத்தையழித்து, இராவணன் குமாரனாகிய இந்திரஜித்தையும் வதைத்துவருகிறேன். என்னுடன் தநுர் வித்தையிற் சிறந்த இலக்ஷ்மணரை யிப்போதே அதிசீக்கிரமாகப் புறப்பட்டுவரும்படிக் கட்டளை யிடவேண்டு மென்று தெரிவித்துக் கொண்டான்.

இந்த வார்த்தையைக் கேட்ட இரகுநாதன், சந்தோஷமடைந்து, தன்காரியத்தில் சிரத்தையுள்ளவனும், சமயோசிதமான புத்தியுடையவனுமாகிய விபீஷணனை நோக்கி, "ஓ இலங்காதிப! அந்த இந்திரஜித்தென்ன, மற்றுமுள்ள இராக்ஷசவீரர்களென்ன, இவர்கள்

யாவரையும் ஓர் அக்கினி யஸ்திரத்தால் வதைசெய்ய நானே வரு கிறேன்" என்று பதில் கூறினர்.

அறிவிற் சிறந்த விபீஷணன், மிக்க கர்வமுடையவரும், தக்க வீரமுடையவரும், மற்றொரு கால ருத்திரன் போன்றவருமாகிய ஸ்ரீராமரைத் திரும்பவும் நமஸ்கரித்து, "ஓ இரகுவீர! இந்திரஜித்தை, கொடிய விரதத்தை அநுஷ்டித்திருக்கும் இலக்ஷ்மணரைத் தவிர மற்ற யாவராலும் கொல்ல முடியாது; ஏனெனில் எவன் ஒருவன் பன்னிரண்டு வருஷம் நித்திரையையும், ஆகாரத்தையும் விட்டிருக் கிறானே அப்பேர்ப்பட்டவனாலேயே அவனுக்கு மரணம் என்று முன்னமே யேற்பட்டிருக்கிறது. இந்த இலக்ஷ்மணர், அயோத்தியை விட்டுப் புறப்பட்டது முதல் நாளது வரையில் ஊண், உறக்கமில்லாமல் தங்களுடைய ஊழியத்திலேயே கண்ணுங்கருத்துமாயிருந்து வந் திருக்கிறார். ஆகையினால் இவரே பன்னிரண்டு வருஷம் நித்திரை, ஆகாரம் இவைகளை யொழித்து வந்தவர். ஓ இரகுல சிரேஷ்ட! நான் தங்களுடைய பாதசேவை மஹத்வத்தால் இவைகளை யறிந்திருக் கிறேன். மேலும் இந்த இலக்ஷ்மணர் பூமியைத்தாங்கும் ஆயிரம் பணமுடியோடு கூடிய ஆதிசேஷன் அம்சம், மானுட சொரூபி யல்ல. ஆகையால் மாயாவித்தையில் வல்லவனும் துராத்மாவுமாகிய மேகநாதனை யிவரே வதைசெய்யத் தகுதியுள்ளவர் ஸந்தேகமில்லை. ஆகையினாலே இந்த இலக்ஷ்மணரை இந்தக்ஷணமே யென்னுடன் கூட அனுப்பவேண்டும். மேலும் தாங்களோ ஜெகத்துக்கு ஆதி மூலப்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி அம்சம். இலக்ஷ்மணரோ தங்களுடைய சயனமாகிய சேஷாம்ஸம். நீங்களிருவரும் பூமி பாரத்தை நீக்குவதற்காக உலகத்தில் நாடகம் நடிக்கும் ஸூத்திர தாரர்களைப் போல மானுடாவதாரர்களாகி, கொடிய செய்கைகளை யுடைய இராக்ஷசர்களை நாசம் செய்ய ஏற்பட்டிருக்கிறீர்கள். தங்க ளுக்கு நான் எடுத்துக் கூறவேண்டியது ஒன்றுமில்லையே," என்றான்.

# 9-வது சருக்கம்.

---

ஸ்ரீராமர், விபீஷணன் சொல்லைக்கேட்டுக் களிகூர்ந்து, இலங்கை மன்னனை நோக்கி, ஓ விபீஷண! குரூரனாகிய அந்த மேகநாதனுடைய மாயை யாவற்றையும் நான் அறிவேன். அவ்வரக்கன் பிரம்மாஸ்திர முடையவன். அதிக சூரன். மிக்க மாயா பலமுடையவன். ஆயினும் இலக்ஷ்மணன் என்னைத்தாங்கும் சேஷாம்ச ரூபியென்பதையும் நானறிவேன். தெரிந்திருந்தும் வருங்காரியம் மிகப்பெருங்காரியமாக இருப்பதை முன்னிட்டுச் சற்றாலோசித்தேனே யொழிய வேறில்லை என்று கூறினார்.

பிறகு ஞானமுடையோர்களுக்குள் சிரேஷ்டராகிய ஸ்ரீரகுவீரர் தனது பிராதாவாகிய இலக்ஷ்மணரைப்பார்த்து, "ஓ ஸௌமித்திரியே! நீ அனுமார் முதலிய யுத்தவீரர்கள் அனைவருடனும், காடிகளுக்கு அரசனாகிய ஜாம்பவானுடனும், மற்றுமுள்ள வானரசைனியங்களுடனும் நிகும்பலைக்குச் சென்று, சற்றும் பயமின்றி இராக்ஷச சைனியங்களுடன் நின்று, மேகநாதன் செய்யும் யாகத்தை யழித்து, அவனுக்குத் துணையாக வந்திருக்கும் அரக்கர் கூட்டத்தையும் ஒழித்து, இந்திரஜித்தையும் வதைத்து ஜெயத்துடன் திரும்பி வருவாயாக. விபீஷணன் தனது மந்திரிகளுடனும் உன்னைப் பின் தொடர்ந்து வருவான். மேகனாதனிருக்கும் பிரதேசத்தையும், அவனுடைய தந்திரங்களையும் விபீஷணன் அறிவான் என்றும் கூறினார்.

பகர்வதற்கரிய பராக்கிரமமுடைய இலக்ஷ்மணர், விபீஷணர் வேண்டுகோளுக் கிணங்கிய ஸ்ரீராமரிட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு வீராவேசம் பூண்டு, மற்றொரு வில்லையும் அம்புறாத் தூணியையுந்தரித்து நின்று, ஸ்ரீராமபிரான் பாதாரவிந்தங்களைத் தொட்டு வணங்கி "ஓ பரமாத்மாவே! இப்பொழுது என்னுடைய வில்லிலிருந்து விடுபடும் பாணமானது இராவணன் குமாரனாகிய இந்திரஜித்தை வதைத்துப்போக வழியில் ஸ்நானம்செய்து எனது அம்புறாத்தூணி வந்தடையக் கருணைபுரிய வேண்டுமென்று பிரார்த்தித்து, இரகுநாதனை வலமாக மூன்றுதரம் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, மேகநாதனுடைய நாசத்தை யுள்ளத்திற் கருதி, புறப்பட்டு, அதிவேகமாகப் பாதசாரியாகச் சென்றார்.

அனுமார் பல்லாயிரம் வானரர்களுடனும், ஜாம்பவான் கணக்கற்ற கரடிக்கூட்டங்களுடனும், விபீஷணன் தனது நான்கு மந்திரிகளுடனும், அங்கதன் அனேக வானர சைனியங்களுடனும், ஸௌமித்திரியைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

'இலக்ஷ்மணர் வானரவீரர்களுடன் நிகும்பலை சென்று, கோர ரூபத்தையுடைய இராக்ஷச சேனையைப் பார்த்து, வில்லை வளைத்துக் குணத்தொனி செய்து, அங்கதன், ஜாம்பவான் முதலிய வீரர்கள் புடைசூழ மிக்க ஜாக்ரதையுடன் நின்றார்

அப்பொழுது விபீஷணன் ஸௌமித்திரியைப் பார்த்து, "ஓ வீர! இதோ நமக்கெதிரில் காணப்படுகிற கடலனைய அரக்கர் சைனியங்களைப் பேதிக்க வேண்டும். பேதித்தால் இராவணன் குமாரன் காணப்படுவான். அவனைக்கண்டு அவன் செய்யும் யாகம் முடிவு பெறுவதற்கு முன்னம் பிறருடைய ஹிம்ஸையிலேயே கருத்துள்ளவனும் அதர்மத்திலேயே ஆவலுள்ளவனும், துராத்மாவுமாகிய அந்த மேகநாதனைக் கோறல் வேண்டும்" என்றான்.

ஜெயத்தில் இலக்ஷியமுடைய இலக்ஷ்மணர் விபீஷணன் கூறிய யுத்த தந்திரவார்த்தையைக் கேட்டு மெச்சி, இந்திரஜித்து யாகத்தைவிட்டு வெளிப்படுவதை யுத்தேசித்து முதலில் இராக்ஷச சைனியங்களின்மீது அம்புமாரி பெய்து, அக்காவற் சைனியங்களைச் சின்னபின்னப்படுத்தி அநேக அரக்கர்களை மாய்த்தார்.

அனுமார், அங்கதன் முதலிய வானர சிரேஷ்டர்களும் நாலு பக்கங்களிலும் நின்று விருக்ஷங்களாலும் மலைச்சிகரங்களாலும் வீசி அடித்து கணக்கற்ற இராக்ஷசர்களை மடியச் செய்தார்கள்.

அந்த அரக்கர்களும் கூர்மையுள்ள பாணங்களாலும், கத்திகளாலும், தோமரங்களாலும், ஈட்டிகளாலும் வானர சைனியங்களை மிகவும் நலியச் செய்தார்கள். வானரர்களுக்கும், அரக்கர்களுக்கும் யுத்தம் அபரிமிதமாக நடந்தது. ஸமுத்ரகோஷத்தைவிடப் பெரும் சத்தமுண்டாயிற்று.

இந்தப் பேரிரைச்சலினால் மேகநாதன் நிகும்பலையில் செய்துகொண்டிருந்த யாகத்தை விட்டு வெளியில் வந்து, தன்னுடைய சைனியம் நாசமடைவதைக் கண்டு மனம் பொறாதவனாகிக் கோபம் மிகுந்து, கவசமணிந்து ஆபிரம்பரிகள் பூட்டிய தனது திருத்தேர் மேலேறி, வில்லைவளைத்து நாணேற்றிக் குணத்தொனி செய்து சிங்கம்போல் கர்ச்சித்து யுத்த முனைக்கு வந்து, மூவுலகையுலகையுங் காக்

கும் முதல்வனுடைய தம்பியாகிய இலக்ஷ்மணரைக் கண்டு கண் சிவந்து, "ஓ ஸௌமித்திரை குமாரா! நான் தான் மேகநாதன், வருப்பிற் ருழ்ந்த மானிட இனத்திற் பிறந்து, அடித்தாற் பல்லிளிக்கும் வானரக் கூட்டத்தை யடைந்து மனமுவந்து, என்னிடம் யுத்தஞ் செய்ய முன்வந்து நின்றாயே! இன்றைய தினம் நீ யென்னுடன் போர்புரிவாயாகில், உன்னுடைய ஆவியை யுத்தகளத்தில் வீணாகத் தாரைவார்த்துப் போவாயே யல்லாமல், அமரிற் ஜெயித்துக் கெம்பீரத்துடன் உன்னூருக்குத் திரும்பிப்போவாயென்று நான் நினைக்கவில்லை" என்றான்.

அச்சமயம் அங்கு கையிற் கௌதையுடன் நின்ற சிறிய தந்தையாகிய விபீஷணனைக்கண்டு அனலிற்பட்ட மெழுகையொப்ப மனமுருகி, ஊழித்தீயெனச்சீறி, "அடா துரோகி! என் தகப்பனுக்குப் பின்னவனாகப் பிறந்து, அவராலே ஆதரிக்கப்பட்டு வளர்ந்து, சகல ஆதிக்கமுமடைந்து கீர்த்தியுடன் வாழ்ந்து வந்த நீ, உன்னைச் சார்ந்த உறவினர்களை விடுத்து நாம் பொரித்துத் தின்னும் மானிடரையடுத்து அவர்களுக்கு ஊழியக்காரனாக இருப்பதோடுங்கூட, உன்னுடற் பிறந்தான் குமாரனாகிய என்னையுங் கெடுத்தாய், என்யாகத்தையும் அழித்தாய், புத்ர துரோகமுஞ் செய்தாய். புத்தியில்லாதவனே! நீ பாவியாகிவிட்டாய், இதைவிட இழிவான காரியம் உலகத்தில் என்ன இருக்கிறது!" என்று கூறினான்.

மேகநாதன் கூறிய சௌரிய வார்த்தையைக் கேட்ட ஸௌமித்திரி, வீரா வேசங் கொண்டு, தக்கனது வேள்வியை யழித்த வீரபத்திர மூர்த்தியை யொத்து, மாருதி திருத்தோள்மேலாரோகணித்து தனது கரத்தில் விளங்குந் தனுசைவளைத்து நாணேற்றிக் குணத்தொனி யெழுப்பிச் சிங்கநாதம் செய்து யுத்த சன்னத்தனாக நின்றார்.

மேகநாதனும் அனுமார் திருத்தோள்மேல் விளங்குந் தாசரதி தம்பியாகிய இலக்ஷ்மணரைப்பார்த்து, தேரில் நின்று, மிகவும் பெரிதும் பயங்கரமுமான தனது வில்லை வளைத்துக் குணத்தொனிசெய்து, தேரை அவர்முன் செலுத்தி ஊங்கார சத்தமிட்டு "ஓ வானரர்களா! இப்போது என்னுடைய பாணங்கள் உங்களுடைய பிராணன்களைப் புசிக்கப் போகின்றன" என்று கூறி நின்றான்.

அப்பொழுது சத்துருக்களை நாசஞ்செய்யும் சக்தியுடைய இலக்ஷ்மணர், மேகநாதன் கூறிய வார்த்தைகளைக் கேட்டுக் கோபஞ்

கொண்டு, அனந்தனைபோற்சீறிப் பெருமூச்செறிந்து, தனது வில் வில் பாணத்தை அநுசந்தானஞ் செய்து, காதளவிழுத்துப் பாதகனுகிய தசக்கிரீவன் குமாரனுகிய மேகநாதனைக் குறிப்பிட்டு விட்டார். அப்பாணம் வில்லினின்று புறப்பட்டு அக்னி ஜ்வாலையைக் கக்கிக்கொண்டுபோய் இந்திரஜித்து மீதிற் ருக்கியது.

ஸௌமித்திரியால் விடப்பட்ட பாணத்தையேற்ற மேகநாதன் கோபத்தாற் சிவந்த கண்களுடன் இலக்ஷ்மணரைப் பார்த்து, விவேகமிழந்து கொஞ்சகாலம் பிரஞ்ஞையற்றுத் தேரின்மீது சாய்ந்து பிறகு மூர்ச்சை தெளிந்து எழுந்து தனது வில்லில் பாணங்களைச் சரமாரியாகத் தொடுத்து, ஓ இலக்ஷ்மண இதுவரையில் எனது பராக்ரமத்தை நீ பார்த்ததில்லை. இப்பொழுது என்னுடைய வில்வித்தையை க்ஷணப்பொழுதுக்குள் உனக்குக் காட்டுகிறேன் பார் என்று கூறி, ஏழு பாணங்கள் இலக்ஷ்மணன்மீதும், பத்துப் பாணங்கள் அநுமான்மீதும் முதலில் விடுத்துப் பிறகு முன்னிலும் இருமடங்கு படபடப்புக்கொண்டு ஏககாலத்தில் கூர்மையுான முனைகளையுடைய நூறு பாணங்களை யெடுத்து விபீஷணன்மீதும் பிரயோகித்தான்.

இலக்ஷ்மணரும், சத்துருவாகிய இந்திரஜித்து விட்ட பாணங்களுக்குத் தக்க எதிர் பாணங்களை விடுத்து அவைகளைக் கண்டித்து, அவன் வேறு பாணந்தொடுப்பதற்கு முந்தி நூறுபாணங்களை யெடுத்து மேகநாதன் மார்பைக் குறிப்பிட்டு விட்டார். அப்பாணங்கள் அவன் அணிந்திருந்த வஜ்ரகவசத்தைப் பொடியாக்கி அவனுடைய தேர்த்தட்டில் சிதறிவிழும்படிச் செய்தன.

கவசமிழந்த மேகநாதன் மிகுந்த கோபங்கொண்டு பயங்கரமான மின்னலுக்குச் சமானமாகிய வொளியோடு கூடிய ஆயிரம் அஸ்திரங்களை யெடுத்து வில்லிற்றொடுத்து சொல்லற்கரிய பராக்ரமமுடைய வீரனுகிய இலக்ஷ்மணர்மேரில் விடுத்தான். அப்பாணமானது அவர் மீதிற்றாக்கி யவரணிந்திருந்த கவசத்தை சிதறப்பண்ணிற்று. இப்படியாக ஒருவர் செய்ததை மற்றொருவரும் செய்து நீண்ட போர் புரிந்தார்கள். அடிக்கடி பெருமூச்சுவிட்டு பாணங்களால் தாபமடைந்து, சரீரமுழுமையும் இரத்தத்தால் நனையப் பெற்று அகோரமான யுத்தஞ் செய்தார்கள். இருவருள் ஒருவராவது ஜெயத்தையாவது அபஜெயத்தையாவது அடையவில்லை. இதை நோக்கி மஹா தீரனுகிய இலக்ஷ்மணர், வீராவேச மடைந்து தனது ஹஸ்தலாவகத்தைக் காட்டி, யாவர்களாலுந் தாங்குதற்கரிய ஐந்து

பாணங்களை விடுத்து, இந்திரஜித்தினுடைய சாரதியையும், தேரில் பூட்டிய குதிரைகளையும் வதைத்து, அவனேறி யிருந்த இரதத்தை யும் அழித்து, அவன்கையில் பிடித்திருந்த வில்லையும் ஒடித்தார்.

இந்திரஜித்து க்ஷணத்துக்குள் வேறொரு வில்லை யெடுத்து நாணேற்றிப் பாணப்பிரயோகஞ் செய்ய எத்தனித்தான்.

அதற்குள் இலக்ஷ்மணர் மூன்று பாணங்களால் அந்த வில்லை யும் சேதித்து அவன்மீது பல பகழிவை விடுத்து அவன் தேக கத்தைச் சல்லடைக் கண்ணாகத் துளைத்தார்.

மஹா வீரனாகிய இந்திரஜித்து, இலக்ஷ்மணரால் வப்பட்ட பாணங்களையும் பொறுத்து, மற்றொரு தனுசைக் கிரஹித்து, சூரிய னுக் கொப்பான காந்தியையுடைய அநேக அஸ்திரங்களைப் பிர யோகித்து இலக்ஷ்மணரைக் களைக்கச் செய்து, வானரர்களையும் பூமியில் வீழ்த்தினான்.

ஸுமித்திரை குமாரரான ஸௌமித்திரி மனந்தளர்வில், ஓர் இந்திராஸ்திரத்தை யெடுத்து தனது வில்லிற்றொடுத்து காதளவு மிழுத்து, ஸ்ரீராமருடைய பாதாரவிந்தத்தை ஸ்மரித்து, அந்தப் பாணத்தை மந்திர பூர்வமாகப் பூஜித்து, "ஓ பாணமே! ஸ்ரீராமர் தர்மபரிபாலகராகவும், சத்திய வந்தராகவும், தசரத குமாரராகவும், மூவுலகினும் எதிரியற்ற வீரராகவும் இருப்பது மெய்யானால் நீ சென்று இந்த இராவணன் குமாரனாகிய மேகநாதனைக் கொல்" என்று கூறி அவன் சிரசுக்கு இலக்ஷியம் வைத்து விடுத்தார்.

அந்தப் பாணமானது வில்லினின்று புறப்பட்டு, கடையுகத் தெழும் அக்கினிபோல் தீப்பொறிகளை யுமிழ்ந்து, திருநாதன் சக் ரத்தையும், ஆறுமுகன் வேலாயுதத்தையும் ஒப்பச்சென்று வயிர மிட்டிழைத்த கிரீடத்தையும், நவரத்னமமைத்த குண்டலங்களையும் அணிந்த இந்திரஜித்தின் சிரத்தைத்துணித்து பாதாள கங்கையில் ஸ்நானம் செய்து ஸௌமித்திரியின் அம்புறாத்தூணியில் வந்தமர்ந் தது. அவன் சரீரமானது மின்னலோடுங் கூடிய மேகம் தரையில் வீழ்ந்ததெனப் பூமியில் சாய்ந்தது. சந்திர சூரியர்களை யொத்து விளங்காநின்ற இரண்டு குண்டலங்களுடன், செக்கர் வானத்தை யொத்த குஞ்சி அலைய அவன் சிரமானது சூரியமண்டலந் தரணியிற் சாய்ந்ததெனப் பாரில் விழுந்தது

இதைக் கண்ட தேவர்கள் மிகவும் சந்தோஷமடைந்து இரகு நந்தனர் தம்பியாகிய இலக்ஷ்மணரைப் புகழ்ந்து புஷ்பமாரி பொழிந்

தார்கள். ஆனந்த நிருத்தன மாடினார்கள். ஸ்தோத்திர கீர்த்தனம் பாடினார்கள். மஹிமை பொருந்திய இந்திரன் தேவர்களுடனும், ரிஷிகளுடனும்கூடி, மேகநாதன் வதமடைந்ததைக் கொண்டாடி, துந்துபி வாத்தியம் முழங்கும்படிச் செய்தான். ஆகாயம் நிர்மல மாக விளங்கியது. பூமிதேவி தன்குறை நீங்கியதென மனமகிழ்ந் தாள்.

இலக்ஷ்மணர், இந்திரஜித்தை ஸம்ஹரித்த பிறகு, யுத்தகளத் தில் சங்கநாதஞ் செய்தார். அதைக் கேட்டு வானரர்கள் சிரமம் நீங்கிச் சந்தோஷம் அடைந்தார்கள். இலக்ஷ்மணர் சந்தோஷ முள்ள மனமுடைய வானர சிரேஷ்டர்கள் துதிசெய்து புடைசூழ அயோத்திமன்னர் வீற்றிருக்கும் இடம் நாடிச் சென்று, அனுமா ருடனும், விபீஷணருடனும், தனது ஜேஷ்டரும், பிரபுவும், நாராய ணருமாகிய ஸ்ரீராமரை மும்முறைவலம் வந்து அவர் பாதார விந்தங் களில் நமஸ்காரம் செய்து, "ஓ இரகுசிரேஷ்ட! தங்களுடைய அநுக் கிரஹத்தால் யுத்தத்தில் மேகநாதன் மரணம் அடைந்தான்" என்று விண்ணப்பஞ் செய்தார்.

இரகுநந்தனர், தன்னையடைந்து சேவித்துக் கூறிய இலக்ஷ்மண வார்த்தையைக் கேட்டு, அவரை யடங்கா மகிழ்ச்சியுடன் அருகழைத் துக் கட்டியணைத்து முத்தமிட்டு உச்சி முகந்து கிட்ட இருத்தி, உள்ளம் மகிழ்ந்து முகம் மலர்ந்து தம்பியை நோக்கி, "ஓ இலக்ஷ்மண. நான் இன்று நன்று ஸந்தோஷித்தேன். எவராலும் செய்தற்கரி தான பெருங் காரியத்தை நீ செய்து முடித்தாய். தேவர்களை நாசஞ் செய்யுந்திறமை வாய்ந்த இந்திரஜித்தை வதைத்து ஜெயம் பெற்ற தால், எஞ்சிநின்ற அரக்கர்களை ஜெயித்தோமென்றே சொல்ல லாம். மஹா வீரனாகிய மேகநாதனை மூன்று நாளைக்குள் மிகுந்த சிரமத்துடன் பிரயாசைப்பட்டு ஸம்ஹாரம் செய்தாய்; அதனால் நான் சத்ருவற்றவனாயினேன். இனிமேலாகவேண்டிய தென்ன இருக் கிறது. கொடிய இராவணனோ தனது குடிக்குத் தலைவனான முடி யையுடைய மேகநாதன் ஆவிமுடிந்த சேதிகேட்டு, புத்ரசோகத் துடன் என்னுடன் போர்புரியப் புறப்படப் போகிறான்? அக்கரிய மேகத்தை யொத்த நிறத்தோடுங் கூடிய தசக்கிரீவனை, பனம்பழத் தைப்போல அவன் பத்துத் தலைகளும் நிலத்தில் தத்திவிழும்படி வதை செய்கிறேன்" என்று கூறினார்.

பிறகு ஸ்ரீராமர், இலக்ஷ்மணன், விபீஷணன், ஸுக்ரீவன், அனுமான் முதலியவர்கள் தன்னைப் பணிய மேல்நடக்கும் காரியத்தை நினைத்து, இராவணன் வருகையை யெதிர்பார்த்து வீற்றிருந்தார் இங்கிவ்வாருக, இலங்கையில், மஹா பலசாலியாகிய இராவணன் தனது பெறுதற்கரிய அருமைப் புதல்வனுகிய மேகநாதன், ஸ்ரீராமன் தம்பியாகிய இலக்ஷ்மணனால் யுத்தத்தில் மாண்டானென்ற செய்தியைக்கேட்டு மனந்திடுக்கிட்டு மூர்ச்சையுற்று சிம்மாசனத்தை விட்டுப் பூமியில் விழுந்து, கடகடவெனப் புரண்டு மறுபடியும் எழுந்து புத்ர சோகத்தால் பெருந்துன்பமுற்று இந்திரஜித்தின் அசாத்யமான தைரியத்தையும், செப்புதற்கரிய அபாரமான சௌரியத்தையும், நினைத்து நினைத்துக் கதறுகிறான். "ஏ குமாரா! உன்னால் சிறையிடப்பட்ட தேவேந்திரன் இப்போது இந்திரஜித்து மாண்டானென்று கேள்விப்பட்டு மனக்கவலையை விட்டுப் பயமின்றிச் சுகமாகத் தூங்குவான். தேவர்களும் தங்கள் துன்பம் நீங்கினதெனக் கண்டு மிக்க ஆனந்தங்கொண்டு குதூகலிப்பார்களே. ஆ என் கண்மணியே! ஒரு பெண்ணின் நிமித்தம் உன்னை யிழக்கலானேனே யென்று தனது பத்து வாயாலும் பத்துவிதம் புலம்பிக் கதறினுன்.

பின்பு ஒருவாறு மனந்தேறி இராக்ஷசாதிபனுகிய இராவணன் கோபங்கொண்டு தனது புத்திரனைக் கொன்ற இராமன் முதலிய மானுடர் யாவரையும் அடியோடு மாய்த்துவிடுகிறேன். இவைகளுக்கு எல்லாம் ஆதாரமாயிருந்த ஸீதையை முதலில் வெட்டித் துண்டாக்குகிறேன் என்று கூறி, உடைவாளையுருவி கையிலெடுத்துக் கொண்டு அசோகவனத்தை நோக்கிச் சென்றான்.

கோபத்தோடும் அதிவேகத்தோடும் கரத்தில் பிடித்த கத்தியுடன் வருகிற தசக்கிரீவனை, இராக்ஷஸ்திரீகள் மத்தியில் வசிக்கும் ஸீதாதேவி பார்த்து, மிகப்பயந்து, சோபமடைந்தாள்.

அச்சமயம் பரிசுத்தனும் அதிமேதாவியும் தசாநநனுக்கு மந்திரியுமாகிய ஸுபார்ச்வன் என்ற அரக்கன் இராக்ஷச மஹாராஜனைப் பார்த்து "ஓ இராவணேஸ்வர! நான்கு வேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்து நான்கு கலைஞானம் முதலிய யாவற்றையும் கற்று ஸ்நான ஜெபதப ஓமதர்ப்பணுதி விரதங்கள் முதலிய யாவற்றையும் அநுஷ்டித்தவரும், குபேரனுக்கு அநுஜராகியவரும், வெகு குணங்கள் நிறைந்தவருமாக இருந்த நீர் இப்போது புத்ரசோகத்தை முன்னிட்டு ஸ்திரீ ஹத்தி செய்ய முயல்வது உம்முடைய பெருமைக்கும்

புலஸ்திய வமிசத்துக்கும் அடாத காரியம் ஆகும். ஆகையால் இதைத் தவிர்த்து, குலத்துக்கடுத்த வீரத்தை அநுசரித்து என்னைப் போன்ற இராக்ஷச வீரர்களைச் சேகரித்துக்கொண்டு யுத்த களத்துக்குச் சென்று மானுடர்களாகிய அந்த இராம இலக்ஷ்மணர்களைக் கொன்று ஜெயம்பெற்றுத் திரும்பக் கருதுவதே புகழுக்குரியதாகும். அவ்விதம் ஜெயத்தை யடைந்து இலங்காபுரிக்குத் திரும்புவீராகில் அக்காலம் ஸீதையை நினைந்து வருத்தப்பட வேண்டியதாகும். நீரே யோசித்துக்கொள்ளும்” என்று கூறினான்.

இராவணன், தனது மந்திரியாகிய ஸுபார்சுவன் கூறிய மொழியை மதித்து அதன்படி நடக்கக் கருதி அரண்மனைக்குச் சென்று மற்றுமுள்ள அநேக மந்திரர்களை வரவழைத்து ஸபை கூட்டி மறுபடியும் ஆலோசிக்கலானான்.

## 10-வது சருக்கம்.

தசமுகன், தனது மந்திரிகளுடனும், வலிய அரக்கர்களுடனும் சபையில் ஆலோசனை செய்து, முடிவில் மீதமிருந்த இராக்ஷச வீரர்களுடன் தானே இராமனிடம் யுத்தஞ் செய்கிறதென்று தீர்மானித்து, விட்டில்பூச்சிகள் விளக்கில் போய் மாள்வதைப்போல, அக்கினியைப்போல் ஜ்வலிக்கும் இராமரிடத்தில் இராவணன் கணக்கற்ற இராக்ஷச சேனைகளுடன் யுத்தத்துக்குச் சென்றான்.

இரகுவீரர் தன்னை வந்தெதிர்த்த இராவணாதி அரக்கர்களைத் தனது கோதண்டத்தில் நின்று புறப்படும் உக்கிரமான அநேக பாணங்களால் வாட்டிக் காலபாசத்துக்கு இரையாக்கினார். அநேக இராக்ஷசர்கள் கால்களற்றும், கைகளற்றும், சிரங்களற்றும் முண்டங்களாகி யுத்தகளத்தில் மாண்டார்கள். இராவணனும், தசரத குமாரனால் விடப்பட்ட அஸ்திரங்களினால் சரீரமனைத்தும் துளைக்கப்பட்டுத் தாபமடைந்து களைப்புற்று எதிர்த்துச் சண்டை செய்வதற்கு ஆற்றாதவனாய் வெட்கத்துடன் திரும்பி இலங்கையை நோக்கிச் சென்றான்.

இலங்கேசன், தசரத குமாரருடைய புருஷத்தன்மையையும், மானிடத்தன்மையையும், யுத்தத்தில் செய்யும் வீரத்தன்மையையும், அநுமாருடைய சௌரியத்தையும் பார்த்து ஆச்சரிய மடைந்து, தான் களைத்திருப்பதை யோசித்துச் சடுதியில் சுக்ராசாரியிடம்

சென்று அவர் பாதாரவிந்தங்களில் அடியற்ற மரம்போல் விழுந்து நமஸ்கரித்தெழுந்து கைகூப்பி நின்றுகொண்டு "ஓ சுக்ராசாரியரே! தசரத குமாரனாகிய ஸ்ரீராமன், இலங்கையிற் புகுந்து அநேக இராக்ஷச சிரேஷ்டர்களையும், எனது புத்திரமித்ரர்களையும் பந்து ஜனங்களையும் நாசமடையச் செய்தான். அதனால் என் மனது மிக மெலிந்து வாட்டமடைந்தது. சற்குருவாகிய தாங்களிருக்கும்போது எனக்கிவ்வளவு துக்கமுண்டாகக் காரணமில்லையே" என்று தெரிவித்துக்கொண்டான்.

இவ்வாறு தன்னையடைந்து வணங்கிக் கேட்டுக்கொண்ட இராவணனை நோக்கி, சுக்ராசாரியார் "ஓ தசக்ரீவ! நீ அஞ்ச வேண்டாம். நான் ஒரு மஹத்வமுள்ள மந்திரோபதேசஞ் செய்கிறேன். அதை யென்னிடம் பெற்றுக்கொண்டு இலங்கை சென்று, மிக்க பிரயத்தனத்துடன் இரகசியமாக ஹோமகுண்ட மேற்படுத்தி அக்கினி வளர்த்து, அந்த அக்கினியில் விதிப்படி ஹோமம் செய்வாயானால், அந்த ஹோமகுண்டத்தி லிருந்து சிரேஷ்டமான இரதம், குதிரை, வில், அம்புறை, பாணங்கள் முதலியவை உண்டாகும். அந்தக் குதிரை பூட்டிய இரதத்திலேறிச் சென்று வில் அம்புறையைத் தரித்து அப்பாணங்களைப் பிரயோகித்து யுத்தம் புரிவாயாகில் சத்ருக்களை நாசப்படுத்தி ஜெயமடைவாய்." என்று கூறி அந்த அபிசார ஹோமத்தின் மந்திரங்களையும் அதற்குச் செய்ய வேண்டிய விபரங்களையும் அவனுக்குத் தெரிவித்தார்.

இராவணன் அசுரகுருவாகிய சுக்ராசாரியாரிடம் மந்திரோபதேசம் பெற்றுக் கொண்டு அவரை வணங்கி விடைபெற்று இலங்கைக்கு வந்து, தன் அரண்மனையில் பாதாளத்துக்குச் சமானமான ஒரு குகையை யேற்படுத்தி, இலங்கை நகரத்தின் துவாரத்திலுள்ள கதவுகளையும்மூடி, அபிசார ஓமத்தின் விதியைக் கூறும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஹோமத் திரவியங்களை யெல்லாஞ் சேகரித்துக் கொண்டு, ஸ்நானம் பண்ணி நியமத்துடன் அக்குகைக்குள் சென்று, வெளியில் அதிபராக்ரமசாலிகளாகிய அநேக இராக்ஷசர்களைக் காவல் வைத்து, அக்குகையின் வாயலைப் பெரும்பாறையால் மூடிவிட்டு, தான் ஒரு சித்ராசனத்திலமர்ந்து ஹோமகுண்டம் ஏற்படுத்தி அக்கினி மூட்டி அதன் எதிரிலிருந்து தன்னைமறந்து மௌனமடைந்து அபிசார ஹோமவிதிப்படி மந்திரத்தை ஜெபித்து அந்த ஹோமத்தைச் செய்தான்.

இராவணன் அனுஜனாகிய விபீஷணன், தமையன் அரண்மனைப் பிரதேசத்திலிருந்து எழும்பும் புகையைக் கண்டு ஆலோசித்து, இப்புகையானது தனது பிராதாவால் செய்யப்படும் ஒருவித ஹோமாக்கினியின் தூபமென நிச்சயித்து, இரகு நந்தனரிடம் வந்து பணிந்து "ஓ இரகுநாத! இந்தப் புகையைப் பார்க்கவேண்டும். இதைக்கொண்டு தசமுகன் ஏதோ ஒரு யாகம் செய்கிறான் என்பது நிச்சயம். அந்த யாகம் முடிவு பெறுமாகில் அதில் நின்று யாவராலும் வெல்லுதற்கரிய படைக் கருவிகளை இராக்ஷச காவலன் அடைவான். அப்பால் அவனை ஜெயிப்பது துர்லபமாக முடியும். ஆகையால் யாகம் நிறைவேறாமல் விக்னமடையத் தாங்கள் அதிசீக்கிரமாக வானர சிரேஷ்டர்களை யங்கு அனுப்புங்கள்" என்று ஒரு யுக்தி சொன்னான்.

ஸ்ரீராமர் அதைப்பார்த்து சற்றாலோசித்து நல்லது எவ்விதமானாலும் இருக்கட்டும் என்றுரைத்து, ஸுக்ரீவனையும், அங்கதனையும், அனுமானையும் அழைத்து நீங்கள் மஹா பலசாலிகளாகிய வானர சைனியங்களுடன் இலங்கை சென்று அங்கு நடக்கும் ஓமத்தைத் தெரிந்து அது நிறைவேறக்கூடாத காரியத்தைப் புரிந்து வாருங்கள் என்று கட்டளையிட்டார். அந்தக்ஷணமே ஸுக்ரீவன், அனுமார், அங்கதன் சகிதம் பத்துக்கோடி வானரவீரர்களுடன், இராவணன் அரண்மனைக்குட் சென்று, அங்கு எழும்பும் புகையைக் கொண்டு ஓமம் நடக்கும் இடத்தைக் கண்டு அதற்காக வைக்கப் பட்டிருக்கும் காவற்காரர்களாகிய இராக்ஷசர்களை அடித்து நாசப் படுத்திப் பார்க்க அவ்விடத்தில் வேறெ யாதொன்றும் அவர்களுக்குப் புலப்படவில்லை. அச்சமயம், விபீஷணன் மனைவியாகிய ஸரமை தனது கை ஜாடையால் ஹோமம் நடக்கும் ஸ்தானத்தை காண்பித்தாள். அதைக்கொண்டு மிகுந்த பலமுடைய அங்கதன் குகையின் வாயலை மூடியிருக்கும் பாறையைக் காலாலுதைத்துப் பொடியாக்கி, அப்பெரிய குகைக்குள் பிரவேசித்தான். அதனுள்ளே ஓர் திவ்யாசனத்தமர்ந்து கண்களை மூடிக்கொண்டு ஜெபம் செய்யுந் தசமுகனைக் கண்டான். தன்னுடன் வந்த மற்ற யாவரையும் கூவி வரவழைத்தான். அனுமான் முதலிய யாவரும் ஏகோபித்து அக்குகைக்குட் சென்றார்கள். அவ்விடத்தில் நடக்கும் அபிசார ஹோமத்தைக் கண்டு அதற்கு ஒத்தாசையாயிருந்த அரக்கர்களை யடித்து விரட்டிவிட்டு ஹோமத்துக்குரிய திரவியங்களை அக்கினி குண்டத்தில் தூக்கி

யெறிந்து ஹோமத்தைச் சின்னாபின்னமாகக் கலைத்தார்கள். வானர சிரேஷ்டரான அனுமார் இராவணன் கரத்திலிருந்த ஸ்ருவத்தைப் பிடுங்கிக்கொண்டு அதனாலே தசக்கிரீவன் முதுகில் அடித்தார். இராவணன் அடிபட்டும், தான் சத்துருக்களை ஜயிக்கவேண்டிய விருப்பத்துடன் கொண்ட கோலத்தினின்று தான் செய்துகொண்டிருந்த தியானத்தை இழந்து வெளிப்படவில்லை. இதைக்கண்ட அங்கதன் மிக்க வேகத்துடன் அந்தப்புரஞ் சென்று, மஹா பதிவிருதையாகிய மண்டோதரியை இராவணன் பக்கம் இழுத்து வந்தான். நாதனிருந்தும் இல்லாதவள்போலக் கதறும் மண்டோதரி அணிந்திருந்த இரத்னங்களிட்டமைத்த அலங்காரமுள்ள (கஞ்சுகம்) சட்டையை இராவணன் முன்னிலையிற் கிழித்தான். அப்பொழுது அதிலமைக்கப் பட்டிருந்த முத்துக்கள் இரத்ன மணிகள் முதலியன சிந்தின. மண்டோதரியினிடையிற் றரித்திருந்த நவரத்னங்களிழைத்த மேகலை மாலையானது நழுவியது. மற்றுமுள்ள ஆபரணங்களெல்லாம் நாலு பக்கங்களிலும் சிதறுண்டன. மற்றுமுள்ள வானர சிரேஷ்டர்கள் அரக்கர் கோன் அரண்மனையிற் காவற்பட்டிருக்கும் தேவகந்தருவ ஸ்திரீகள் யாவரையும் அரக்கன் முன்னிலையில் அழைத்து வந்தார்கள்.

இத்தியாதி கோலா கலங்களைக் கண்ணுற்ற மண்டோதரி இலங்கை மன்னனுக்கு முன்னால் துக்கத்தோடு பிரலாபித்து, "ஓ வீரியமுள்ள சூரரே! நீர் தற்காலம் மானமிழந்தவ ராகினீர். நான் உமக்கு மனைவியல்லவா? பிறரால் நானும் மற்ற ஸ்திரீகளும் அவமானப்பட நீர் ஒரு ஸ்திரீயை முன்னிட்டு ஹோமம் செய்கிறீரே, உமக்கு அபிமானமில்லையா? எவனொருவன் தனது ஸ்திரீயை எதிரிகள் ஹிம்ஸிக்கப் பார்க்கிறானோ அவன் உயிருடனிருப்பதைவிட மரணம் அடைவதே மேலான புகழைத் தரும் காரியமாகும்.

ஹா மேகநாத! இந்திரனைச் சிறையிட்ட உன்னைப் புத்திரனாகப் பெற்ற என்னை இந்தக் குரங்குகள் துன்பப்படுத்துங் காலம் நேர்ந்ததே! நீ உயிருடனிருந்தால் எனக்கு இவ்விதத்தீங்கு அணுகுமா? உனது பிதாவும் எனது பர்த்தாவுமாகிய இலங்கை மன்னர், ஒரு நங்கையை முன்னிட்டுத் தனது மங்கையரைப் பின்னிடச்செய்து, மானாபிமானத்தையும் விடுத்து உயிர்வாழ்க்கையை மட்டும் அபேக்ஷித்து நிற்கிறார். இதென்ன காலகதி" என்று ஓலமிட்டுக் கதறினாள்.

இலங்கை மன்னனாகிய தசமுகன், மண்டோதரி பிரலாபிக்கும் சப்தத்தால் தான் செய்துகொண்டிருந்த சிந்தனையை விட்டு எழுந்து

கையில் கத்தியை க்ரஹித்து நின்று அவள் நிலையைக் கண்டு கோபங் கொண்டு ஸர்ப்பம் போற் சீறி தேவியை விடு என்று கூறி அங் கதன் தொடையில் ஓங்கி அடித்தான். அங்கதன் முதலியோர், ஹோ மத்தைத் தடுக்கும்படித் தங்களுக்குக் கட்டளையிட்டபடி நாம் நடக்க வேண்டியதே யல்லாது வேறுகாரியம் நாம் செய்வது தகுதியன்று எனக் கருதி ஹோமத்தை யழித்து அதைவிட்டு ஸ்ரீராமரிடம் வந்து நடந்த சங்கதியைத் தெரிவித்து சந்தோஷத்துடன் இருந்தார்கள்.

இராவணன் தனது காதலுள்ள பத்தினியாகிய மண்டோதரி யைப் பார்த்து இனிய வார்த்தை கூறி சமாதானம் செய்து, "ஃ கற் பிற் சிறந்தவளே! என்னன்பிற்கினியாளே! இப்போது நான் கூறும் இரகசியார்த்தமான மொழியையுட்கொண்டு உன் மனக்கிலேசத்தை விட்டு நிச்சய ஞானத்தைப் பெற்று ஸம்ஸார பந்தத்தில் நின்று நீங்கி மோக்ஷத்தை யடைய வழிதேடுவாயாக.

ஓ விசாலாக்ஷி! இந்தப் பிராணன் தெய்வாதீனமானது. சோகம் அஞ்ஞானத்தா லுண்டாகக் கூடியது. அது ஞானத்தை நாசம் செய் யும் பந்தமும் அஞ்ஞானத்தா லுண்டானது. தனம், க்ஷேத்ரம், மனைவி, புத்திரர் இவைகள் மூலமாக பந்தம் விர்த்தியடைகிறது. அவைகளினால் சுகம், துக்கம், கோபம், லோபம் முதலியவைகளை ஆன்மா அடைகிறது. ஆன்மா விகாரமற்றது; ஆனந்த ரூபமுடை யது; உற்பத்தி நாசமில்லாதது. இவ்விதம் ஆத்மஸ்வபாவத்தை யறி ந்து துக்கத்தை ஒழித்து விடு. ஓ புத்தியிற் சிறந்த பத்தினியே! நான் உனக்கு உறுதியாகக் கூறுகிறேன். அதாவது:—நான் இப் போது யுத்தத்துக்குச் சென்று நம் பகைவர்களாகிய அந்த இராம இலக்ஷ்மணர்களை வென்று ஜெயத்தோடு இவ்விடம் வரு கிறேன். இல்லாவிடில் அந்த இரகுவீரனுடைய கைப்பாணத்தால் உயிரைவிட்டு வீரசொர்க்க மடைகிறேன். அப்போது நீ என் னுடைய அபரக் கிரியைகளை விதிப்படிசெய்து முடித்த பிறகு, என் உத்தரவுப்படி ஸீதையைக் கொன்றுவிட்டு நீ தீவளர்த்தி அக்கினிப் பிரவேசம் செய்து சுவர்க்கலோகஞ் செல்ல வேண்டியது" என்றான்.

இவ்வித முரைக்கும் தசாநநன் வார்த்தையைக்கேட்டு மண்டோ தரி, அடங்காத துக்கத்திலமுழ்ந்தி, "ஓ என் பிராணநாத! நான் கூறும் விசிஷ்ட வாக்கியத்தைக் கேட்டு அதன் தாற்பரியத்தை யறிந்து அதன்படி நடப்பீதே நம்மிருவருக்கும் மேலான பதவியை அளிக்

கும் சன்மார்க்க நெறியாகும். அதாவது:—தாங்களாவது இ
முள்ள மற்ற அரக்கர்களாவது நமக்கெதிரியாக வந்திருக்கு
இலக்ஷ்மணர்களை ஒரு போதும் யுத்தத்தில் ஜெயிக்க முடி
ஸ்ரீராமரோ! பிரத்யக்ஷபரவாஸுதேவர், பிரதான புருஷோ
பக்தவத்சலர். இந்த ராகவர்தான் முன் கற்பத்தில், மச்சா
மெடுத்து, வேதத்தைத் திருடிக் கொண்டு கடலிலொளித்த சோ
காசுரனென்னும் இராக்கதனைக் கொன்று, வைவஸ்த மநுவை
தில் நின்று விடுவித்து இரக்ஷித்தவர். இவரே, முன்னம் தேவர்
அசுரர்களும் கூடி, மந்தரகிரியை மத்தாகவும், வாஸுகியை கா
வுங் கொண்டு பாற்கடலைக் கடையும்போது, ஒரு இலக்ஷயோ
விஸ்தாரமுள்ள கூர்மாவதார மெடுத்து மந்திரமலையைத் தா
வர்; இவரே, பூமியைப பாயாகச் சுருட்டிய ஹிரண்யாக்ஷ
கொல்லவும், அப்பூமியை விரிக்கவும் வாராஹாவதாரம் செய்
மேலும், இந்தப் பரமபுருஷரே, ஹிரண்யாக்ஷனைக் கொன்ற ப
வாங்கக்கருதி, ஸருவதேவ வணக்கம் விலக்கின அவன் தம்பியா
ஹிரண்யகசிபுவை வதைக்க நரஸிம்மாவதாரம் எடுத்தவர். இந்
நான்கு அவதாரத்துக்குந் தாயாரில்லை.

காசிபரும், திதியும் தந்தை தாயாக வாமனாவதாரம் செய்
மஹாபலிச் சக்ரவர்த்தியிடம் மூன்று அடிமண் யாசித்து அவனை
பாதாளத்தழுத்தி இரக்ஷித்து மூன்றுலகத்தையும் ஈரடியாலளந்
தனதாக்கி தேவேந்திரனுக்கு மூவுலகத்தையும் கொடுத்தவர் இந்த
பிரபுவே.

மேலும், சமதக்கினியும், ரேணுகையுந் தந்தைதாயாக பரசு
ராமாவதாரம் செய்து, க்ஷத்திரிய வடிவத்துடன் அரசராற்றுழ்த்தப்
பட்ட பிராம்மணர் நிமித்தம பூமிக்குப் பாரமாயுள்ள அநேக அரசர்
களை யுத்தத்தில் வென்று பூமியை ஜெயித்து அந்தப் பூமியை காசிப
முனிவருக்குத் தானம் செய்தவரும் இந்த மஹானுபாவரே. 50

இப்போது, தசரதரும், கௌசலையும் தந்தை தாயாக இராமாவ
தாரம் எடுத்து, தங்களையும், தங்களைச் சூழ்ந்த இராக்ஷசர்களையும்
கொல்வதற்கு மானுடராக வந்திருக்கிறார். இவ்வளவு மஹிமை
வாய்ந்த ஸ்ரீராமருடைய பத்தினியாகிய கற்பிற்சிறந்த ஸீதையைத்
தாங்கள் திருட்டுத்தனமாக தண்டகாரணியத்திலிருந்து நம் குடிக்
குத் தீம்பாகக் கொண்டு வந்து சிறை வைத்தீர்கள். அக்கொடிய
செய்கையே என்னருமைப் புதல்வனாகிய மேகநாதன் மரண மடை

யதற்கும், மற்றுமுள்ள புத்திரர், சகோதரர், இராக்ஷசர்கள் நாச மடைவதற்கும் காரணமானதுந் தவிர, இன்னும், தாங்களும் எஞ்சிய இராக்ஷசர்களும் எமலோகமடைய ஹேதுவாயுமிருக்கிறது. ஆகையினல் இனிமேலாவது அந்த இரகுவம்ச திலகரும், பரமாத்மாவுமாகிய ஸ்ரீராமரிடத்தில், அவர் மனதுக் கிசைந்த காதலியாகிய வைதேஹியை அனுப்பிவிட்டு, அநித்தியமாகிய இந்த ராஜ்யத்தை விபீஷணனிடம் ஒப்புக்கொடுத்து நாமிருவரும் நித்தியமான அந்த புருஷோத்தமரின் உலகமாகிய வைகுண்டத்தையடைய, வனம் சென்று சத்கருமஞ் செய்வோம் இதுவே யாவற்றிற்கும் மேலானது. தேவர்களாலும், மற்ற யாவர்களாலும் புகழக்கூடியது இதுவே என்னுடைய துணிபு" என்று தெரிவித்தாள்.

புத்தி, யுக்தியிற் சிறந்தவளும், மஹா பதிவிரதையும், பஞ்ச கன்னியிலொருத்தியுமாகிய மண்டோதரி எடுத்துக் கூறிய அற்புதமான வாக்கியங்களைக் கேட்டு, தசாநநன் பரம சந்துஷ்டி யடைந்து, தனது அன்பிற்குரிய காதலியை நோக்கி, 'ஓ நற்குணமுடையவளே! என்னுடைய அந்தரங்கத்தை யிப்போது உனக்கு ஒளிக்காது தெரிவிக்கிறேன். அதாவது:—நீ கூறியபடி வனத்திற் சென்று வானப்ரஸ்தாச்சிரமத்தை யடைந்து, கந்தமூல பலாதிகளை யுண்டு சரியையாதி மார்க்கத்தை யநுஷ்டித்து சாலோகாதிபத ப்ராபதி யடையலாம். ஆனல் அது காலாந்தரத்தில் பலனை யளிக்கக் கூடியது. மேலும் யுத்தத்திற் புத்ரர்களையும் மித்ரர்களையும் ப்ராதாக்களையும் மற்றுமுள்ள இராக்ஷசக் கூட்டங்களையும் இழந்து வனத்தில் சஞ்சரித்து, எவ்விதம் ஜீவித்திருப்பேன்? ஆகையினலே ஸ்ரீராமருடன் யுத்தம் செய்து அவருக்குச் சத்துருவாகவே யிருந்து அவர் கைப் பாணத்தினு லடிபட்டு உயிரைத் துறந்து விஷ்ணு லோகமாகிய வைகுண்டத்தைச் சேருகிறேன். ஸ்ரீராமர் விஷ்ணு சொரூபரென்றும், ஸீதை மாயா சொரூபி யென்றும் நான் அறிவேன். இதைத் தெரிந்தே அந்த ஜனககுமாரியாகிய ஸீதையை வனத்திலிருந்து அபகரித்து வந்தேன்.

ஓ பிரியமுள்ள பத்தினியே! உன்னைவிட்டு ஸம்ஸார பந்தத்தில் நின்று விடுபடுகிறேன். மோக்ஷத்தில் விருப்பமுடையவர்கள் எந்தக் கதியை யடைகிறார்களோ அந்தக் கதியை யுத்தத்தில் இராகவர் கையால் மரணமடைவதைக் கொண்டே நான் அடைகிறேன். கல்

மஷம் யாவற்றையும் போக்கி எவர்களுக்கும் கிடைக்காத முக்தி (வைகுண்ட ப்ராப்தி) நான் அடைகிறேன்.

ஓ பதிவிருதா சிரோமணியே! ஜீவசைதன்யத்தை மறைத்தும், ஜெகத் ரூபமாகி அன்னிதாகக் காணப்படுவதும், வி ஞான முண்டாக்குவதும், உணர்வை யழிப்பதும், ஸத்து துக் கன்னியமாவதுமாகிய ஐந்துவித மாயா குணங்களா அலைகளையுடையதும், மனைவி, புத்ரன், ஆப்தன், பந்து, பொருள் ஆகிய மீன்களுடையதும், காமம், குரோதம், உலோ மோகம், மதம், மாற்சரியம் என்னும் முதலைகளை யுடைய கோபம் என்னும் வடவாக்கினியையுமுடைய இந்த ஸம்ஸார கடலைத் தாண்டி, ஸாட்சாத் பரப்பிரம்ம சொரூபியாகிய விஷ்ணுவின் திருவடியிற் சேருகிறேன் என்று தன்னுள்ளக் கையை வெளிப் படையாக மண்டோதரிக்குத் தெரிவித்தான்.

## 11-வது சருக்கம்.

இலங்காபுரி மன்னனாகிய இராவணன், தன்னுடைய பத்தினி யாகிய மண்டோதரியினிடம், தனது அந்தரங்க வார்த்தைகளை கூறிக் கலந்து பேசிய பிறகு, பகைவராகிய இராமரிடம் செய்யப் பிரயத்தனமானான்.

அரக்கர் கோனாகிய இராவணன், வச்ர கவசமணிந்து, வில் வாள், கதை முதலிய ஆயுதந்தரித்து யுத்த சன்னத்தனாகி, பதினாறு சக்ரங்களுடையதும், பயங்கரமான பைசாசங்களின் முகமுடைய யாளிகள் பூட்டப்பட்டதும், கொடி, ஆலவட்டம் முதலியவைகளால் அலங்கரிக்கப் பட்டதுமாகிய இரதத்தின் மீதேறிக்கொண்டு, அகோரமான ரூபமுடைய அநேக இராக்ஷச வீரர்கள் பின் தொடரத் தனது அரண்மனையினின்று புறப்பட்டு யுத்த களத்துக்கு வந்தான்.

இராமரால் இரக்ஷிக்கப்படும் வானரசேனைகள் அவனைக்கண்டு நடுங்கிற்று. இருந்தபோதிலும் மஹா பலசாலியாகிய அநுமான் பார்த்து இராவணனிடம் யுத்தத்துக்கு வந்தான். நிகரற்ற விஸ்வ ரூபமுடைய ஆஞ்சனேயர், முதலில் இராக்ஷச காவலன் மார்பில் தனதுகையை முஷ்டியாகப் பிடித்து ஓங்கிக் குத்தினார். அந்தக்

...ததினால், தசக்கிரீவன் முழங்காலை மண்டியிட்டு இரதத்தில் ...ய்ந்து மூர்ச்சை யடைந்தான்.

பிறகு ஒரு முகூர்த்தத்துக் கெல்லாம் களைதெளிந்தெழுந்து, ...ராவணன் வானர சிரேஷ்டனைப் பார்த்து "ஓ மாருதி! நீ சூரன் ...று நான் நினைக்கிறேன்" என்றான்.

அதைக் கேட்ட ஆஞ்சனேயர் தசமுகனைப் பார்த்து "ஓ இரா ...ணா! நீ என் குத்துப்பட்டும் ஜீவனுடனிருக்கிறாய் அல்லவா? அதிருக்கட்டும். இப்போது நீ என்னுடைய மார்பில் உன்முஷ்டியால் குத்து, பிறகு நான் உன்னைக் குத்துகிறேன். அப்போது நீ பிராண னுடனிருப்பதைப் பார்ப்போம். கட்டாயம் நீ ஆவியை யிழப்பாய்," என்று கூறினார்.

கார்மேகம் போன்று கறுத்த சரீரத்தையுடைய இராவணன் மாருதி சொன்னதற்குச் சம்மதித்து தனது பனைபோல் நீண்ட கரத் தை முஷ்டியாகப் பிடித்து அவனது முழுப்பலத்தோடும் அனுமான் மார்பில் குத்தினான். ஆஞ்சனேயர் கட்டொழிந்து கலங்கி, கொஞ்சம் சிரமத்தை யடைந்தார். பிறகு கபிசிரேஷ்டரான மாருதி பிரஞ்ஞை யடைந்து தசக்கிரீவனைக் குத்த யத்தனித்தார். அதற்குள் பிரதாப இலங்கேசன் பயந்து வேறு இடம் சென்றான்.

அப்போது அனுமான் தன்னை வந்தெதிர்த்த அக்னி வரண னோடும், அங்கதன், ஸர்ப்பரோமாவோடும், நளன், கட்க ரோமா வோடும், நீலன், விருச்சிகரோமாவோடும், தனித்தனி போர்புரிந்து அவர்களை யேக காலத்தில் காலனூருக்கு அனுப்பினார்கள். இந்த நால்வரும் மிகவும் பயங்கரமான பராக்ரமமுடைய நான்கு அரக்க வீரர்களையுங் கொன்று சிங்கநாதம் செய்துகொண்டு ஸ்ரீராமச்சந்தி ரன் பக்கம் வந்து நின்றார்கள்

அந்தச் சமயம், தசக்கிரீவன் கோபங்கொண்டு, உதட்டைக் கடித்துக் கண்கள் சுழலும்படி விழித்து இராமனையே யெதிர்த்து ஓடிவந்து, தேரின்மீதிருந்தபடியே ஸ்ரீராமன்மீது தனது வில்லை வளைத்துச் சரமாரியாக அஸ்திரப் பிரயோகம் பண்ணினான். இராக வனை யடுத்து நிற்கும் வானரவீரர்கள்மீதும் அநேக பாணத்தைப் பிரயோகித்தான்.

இதைக்கண்ட இரகுநந்தனர் தனது கோதண்டத்தை வளைத்து நாணேற்றி அக்கினிமயமாக வெளிப்படும் அநேக பாணங்களைத்

தொடுத்து இராவணன் மார்பிலும் புஜத்திலும் படும்படி அம்பு மாரி பெய்தார்.

ஸ்ரீராமர் தரையில் நின்றுகொண்டும், இராவணன் தேரிலிருந்து கொண்டும் ஒருவர்க் கொருவர் சளையாது வில்யுத்தம் புரிந்தார்கள்.

இரகுநந்தனர் பாதசாரியாகவும், அரக்கர்கோன் இரதசாரியாகவும் நின்று யுத்தம் புரிவதை அமராபதிக் கதிபனான இந்திரன் கண்டு தனது தேர்ப்பாகனான மாதலியை யழைத்து "ஓ சாரதி! நீ யிப்போதே நம்முடைய உச்சைச்சிரவங்கள் பூட்டிய இரதத்துடன் பூலோகத்திலுள்ள இலங்கையில் இராவணனுடன் போர்புரியும் ஸ்ரீராமரிடம் சென்று, அவருக்கு இரதசாரதியாக இருந்து உன் காரியத்தைக் கவனத்துடன் செய்" என்று கட்டளை யிட்டான்.

தேவராஜனிட்ட கட்டளையை மேற்கொண்டு சாரதியாகிய மாதலி இந்திரன் தேரில் பச்சை நிறமுள்ள குதிரைகளைப் பூட்டி அதி சீக்கிரமாகச் சுவர்க்கத்தில் நின்று புறப்பட்டு யுத்தகளம் வந்து தேரை நிறுத்தி, தாசரதியைப் பார்த்து, தேரின்மீதிருந்து அஞ்சலி செய்து வணங்கி, ஓ இரகுசிரேஷ்ட! தேவராஜன் என்னைத் தங்களிடம் அனுப்பினார். ஓ பிரபுவே! இது தேவேந்திரனுடைய இரதம், இந்த இரதத்தையும், அலங்காரம் பெற்ற தமது வில்லையும், பேதிக்கத்தகாத தமது கவசத்தையும், பளபளப்புடைய ஓர் திவ்விய சக்தியையும், இரண்டு அம்புறாத் தூணியையும் இத்துடன் தங்களுக்குச் சாதகமாக அனுப்பி யிருக்கிறார்

ஓ மஹா ராஜேந்திர! தாங்கள் இந்த இரதத்தின் மீதிருந்து இராக்ஷசனாகிய இராவணனைச் சம்ஹரிக்க வேண்டும். தேவராஜர் என்னைச் சாரதியாகக் கொண்டு இந்த இரதத்தின் மீதேறி விருத்தாசுரனை வென்றதுபோலத் தாங்களும் இத்தேரின்மீ தாரோகணித்து, என்னைச் சாரதியாகவு மடைந்து இராவணனை நாசம் செய்ய வேணும்" என்று விண்ணப்பித்தான்.

இவ்விதம் இந்திரன் சாரதி தெரிவித்துக் கொண்டவுடன் இரகு வீரன் அந்த இரதத்தை வலம்வந்து அதன் மீ தாரோகணித்தார்.

பிறகு மஹாத்மாவாகிய இராகவருக்கும், அதி கண்டகனாகிய இராவணனுக்கும் பயங்கரமான பெரும் யுத்தம் கண்டவர்கள் சரீரத்தில் மயிர்க் கூச்சலுண்டாகும்படி நடந்தது. வில்வித்தையிற் சிறந்த

இராகு சிரேஷ்டர், இராவணனுற் பிரயோகிக்கப்படும் அக்னியாஸ்திரத்துக்கு அக்னியாஸ்திரத்தாலும், தேவாஸ்திரத்துக்கு தேவாஸ்திரத்தாலும் கண்டித்தார்.

தெய்வத்தன்மை பொருந்திய பாணங்களையுடைய அரக்கர் கோனும் வெகுளி மீறி இரகுநந்தனர் மீது கொரோமான இராக்ஷச பாணமாகிய நாகாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அப்பாணம் வில்லினின்று விடுபட்டு ஒன்று பத்து நூறு ஆகத்தோன்றி ஸர்ப்பவுருவந்தரித்து விஷத்தைக் கக்கிக்கொண்டு இராகவரிடம் நான்கு பக்கத்திலும் வந்து சூழ்ந்தன. நாலு பக்கங்களிலும் எங்கு பார்த்தாலும் ஸர்ப்பமயமாய் அக்கினிபோன்ற விஷத்தைக் கக்கிக்கொண்டு எட்டுத் திசைகளிலும் நிறைந்தன.

ஸீதாகாந்தன் எங்கு பார்த்தாலும் சர்ப்பமயமாகக் காண்பதைப் பார்த்து, கெருடாஸ்திரத்தை யெடுத்து வில்லிற் றொடுத்து விட்டனர். அந்த அஸ்திரமானது வில்லினின்று விடுபட்டு ஒன்று பத்து நூறு ஆயிரக் கணக்காக வெளிவந்து அந்த ஸர்ப்ப பாணங்களை இருந்த இடந் தெரியாமல் நாசப்படுத்தின.

தசமுகன் தன்னுல் விடப்பட்ட பாணம் வீணுகப்போனதைக் கண்ணுற்றுப் பின்னும் கோரங்கொண்டு மஹிமை தங்கிய அநேக பாணங்களை யெடுத்து இராமர் மீது பாணவருஷம் வருஷித்து, பல விதமான சரங்களைக் கொண்டு காகுஸ்தனை மறைத்து, கொரோமான சரங்களால் இரதசாரதியாகிய மாதலியையும் அடித்து, சில பாணங்களால் தேரில் கட்டியிருந்த ஸ்வர்ணமயமான துவஜத்தையும் அறுத்துத் தேர்த்தட்டில் தள்ளி, சில சரங்களால் இரதத்தில் பூட்டியிருந்த உச்சைச் சிரவமென்னும் இந்திரன் குதிரைகளையும் ஸ்ரீராமர் மனம் தயங்கும்படி வாட்டினன்

விஷ்ணு சொரூபியாகிய ஸ்ரீராமர் துன்பமடையக் கண்ட தேவர்கள், கந்தருவர்கள், பிதுர்லோக வாசிகள், மஹரிஷிகள், வானரச் சிரேஷ்டர்கள், விபீஷணர் முதலிய யாவரும் வருத்தமுற்றூர்கள்.

பத்து சிரங்களையும் இருபது கரங்களையுமுடைய வீரனுகிய இராவணன் தனுசைப் பிடித்த காத்தோடு மைநாகமலைபோல விளங்கினன்.

இராமச்சந்திரர் விற்போன்ற தனது புருவத்தை நெரித்து, கடல் போன்ற கண்கள் சிவக்க உருட்டி விழித்து, நிகரற்ற கோபத்தை யடைந்து, அற்புதமான தனுசை யெடுத்து, பிரளய காலாக்னிக்குச் சமானமான காந்தியுடைய பாணங்களைத் தொடுத்து, நாம் மன்மதனை யழிக்க நெற்றிக்கண்ணால் பார்த்ததுபோல, சத்துருவாகிய தசகண்டனைப் பார்த்தார்.

காலசொரூபியாகிய காகுஸ்தர் இமையா நாட்டத்தையுடைய தேவர்களும், மற்ற யாவர்களும் விழித்த விழி விழித்தாற்போலிருக்க, தேஜஸோடு கூடிய தனது பராக்ரமத்தைக் காண்பிக்க எத்தனித்தார். ஸ்ரீராமர் தனது வில்லைக் காதளவுமிழுத்து, இராவணனை யடுத்து, சரமாரியாகப் பாணங்களை விடுத்து அவனை யசையவொட்டாமற் றடுத்து, வானரர்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுத்து, பிரளய காலருத்திரனைப்போல் விளங்கினார்.

இரகுவீரன் கோபங்கொண்டு, சத்துருவைக் குறிப்பிட்டு நிற்கும்போது, அவருடைய சினக்குறிப்போடு விளங்கும் திருமுக மண்டலத்தைப் பார்த்து இராக்ஷசர்கள் யாவரும் நடுங்கினார்கள்; பூமி யசைந்தது; இலங்கேசனும் பயமடைந்தான்.

ஸ்ரீராமர், இராவணனுடன் அதிகொரமாகச் செய்த பெரும் யுத்தத்தை, வானத்திலிருந்த தேவர்கள், கந்தருவர்கள், கின்னரர்கள், யாவரும் பார்த்து வியப்படைந்தார்கள்.

அன்றையதினம் நடந்த யுத்தத்தில் பகல் இரவு தெரியவில்லை. அவ்விருவர்களுடைய உருவமும் காணப்படவில்லை. அவ்விருவர்களுடைய தேர்களும் திசையெட்டிலும் சஞ்சரித்தன. ஆகாயத்திலிருந்து இராவணனுடைய இரத்தந் தோய்ந்த கரங்கள் பூமியில் விழுந்தன. பனைமரத்திலிருந்து பழம் விழுவதுபோல வானத்திலிருந்து தசகண்டனுடைய துணிபட்ட சிரங்கள் தரையில் விழுந்தன.

இவ்வாறு இரகுவீரர் இராவணனுடைய கரங்கள், சிரங்கள் இவைகளைப் பலமுறை கொய்தும் அவைகள் மறுபடியும் விருத்தியாகிக் கொண்டே வந்தன. அவன் சிரங்களை நூற்றொருதரம் சேதித்தும், அவனுயிர் போகவில்லை.

இரகுநந்தனர், எந்த பாணங்களைக் கொண்டு, தகுதியுள்ள இராக்ஷசர்களை வதம் செய்தாரோ, அந்த பாணங்களெல்லாம், இரா

வணன் விஷயத்தில் பிரயோஜனமற்றவைக ளாயின. ஆனால் அக் கொடியோனுடைய சிரத்தைத் துணித்ததே யல்லாது அவனுயிரைப் போக்கவில்லை.

பிறகு இராமசந்திரன் ஆச்சரிய முற்றவராகி, மிக்க தேஜஸ்ஸுடைய தசாநநன் சிரம் நூற்றொருதரம் துணிக்கப்பட்டும், அவனுயிர் மாளவில்லையே, இதற்குக் காரணம் நமக்குப் புலப்படவில்லையே யென்று சற்று யோசித்தார். அப்போது சமீபத்திலிருந்த விபீஷணன், தசரத குமாரனை நோக்கி, "ஓ இரகுநந்தன! இந்த தசக்கிரீவன் பிரமதேவரிடத்தில், வெட்டுண்ட சிரங்களும், கைகளும் மறுபடியும் உண்டாகும்படி வரம் பெற்றிருக்கிறான். இவனுடைய நாபிப் பிரதேசத்தில் அமுதகலச மிருக்கிறது. அதனை அக்னியாஸ்திரத்தால் சோஷிக்கச் செய்யவேண்டும். அது வற்றினால் தான் இவன் மரணம் அடைவான்" என்று கூறினான்.

மஹா பராக்ரமசாலியாகிய இரகுவீரன், விபீஷணன் சொல்லைக் கேட்டு, அக்னியாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்றொடுத்து இராவணனுடைய நாபி ஸ்தானத்துக்குக் குறிவைத்து விடுத்து அமுதகலசத்தைச் சிதைத்தார். பிறகு ஸ்ரீராமர் தீவிரமாக அடுத்தடுத்துப் பாணங்களை விடுத்துத் தசகண்டனுடைய சிரங்களையும் கைகளையும் பரபரப்புடன் துணித்தார்.

தசக்கிரீவனுடைய அமுதகலசம் பேதிக்கப்பட்டதால் தசாநநன் எனும் நாமத்தை யிழந்து ஏக சிரத்துடனும் துவிபகரத்துடனும் விளங்கி ஏகாநநன் எனும நாமத்தைப் பெற்றான். பிறகு அஸுர சிரேஷ்டனாகிய இராவணன், குரோதத்துடன் விபீஷணனே யிவ்வளவு சொல்லி யிருக்கிறானெனக் கருதி அவன் மீது பயங்கரமான சக்தி ஆயுதத்தை யெடுத்துப் பிரயோகித்தான்.

இராகவர் அந்த சக்தியாயுதத்தை தனது வலிமை பொருந்திய பாணத்தால் விலக்கினார்.

இதைக்கண்ட இலங்கேசன் கோபமடைந்து கணக்கற்ற அஸ்திரங்களையும், பலவிதத் தெய்வீகத தன்மை பொருந்திய சஸ்திரங்களையும் ஸ்ரீராமர் மீது மேகவருஷம்போல வருஷித்தான்.

இரகுநாதனும், மேகநாதன் தாதையால் விடப்பட்ட அஸ்திர சஸ்திரங்கள் யாவையும் தனது தனுசில் நின்று விடுபடும் கணையென்னும் அக்கினியால் தகித்தார்.

இவ்விதம் அயோத்திமன்னனாகிய ஸ்ரீராமருக்கும், இலங்கை யரசனாகிய இராவணனுக்கும், தேவர்களுக்கும், மற்ற யாவர்களுக்கும் மயிர்க்கூச்சலிடும்படி, மிகப் பயங்கரமாகவும் நிபிடமாகவும் பொருந்த யுத்தம் நடந்தது; தசகண்டன் களைக்கவில்லை.

இதைக்கண்ட தேர்ச்சாரதியாகிய மாதலி, "ஓ இரகோத்தம! தேவர்கள் கூறியபடி இவனுடைய நாசகாலமானது இன்னும் கிட்டவில்லை. இவனை வதைசெய்யப் பிரமாஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணுங்கள். மேலும் இவனுடைய சிரஸைச் சேதிக்கவேண்டாம். அதனால் இவன் வதமடையக்கூடியவனல்ல, மருமஸ்தானம் பிளக்கப் படுவதால் மரணமடையக்கூடியவன்" என்று ஸ்ரீராமருக்கு ஞாபகப் படுத்தினான்.

இரகுநந்தனர் தனக்குள் ஆலோசித்து மாதலி சொன்னதையும் அநுசரித்து, ஆகிருதியில் மஹாமேருவை யொத்ததும், சலனத்தில் ஆகாயத்தை நிகர்த்ததும், சிறகில் பெருமூச்சுவிடும் ஸர்ப்பத்தைக் கீழ்ப்படுத்தியதும், நாசியில் சூரியனைவிட அதிகரித்ததும், இரு பக்கத்தில் வாயுவும், நுனியில் அக்கினியும், கணுக்களில் லோக பாலர்களும் வசிக்கப் பெற்றதும், பூமிதேவியின் பாரத்தைப் போக்கக் கூடியதும், அதியற்புதச் செய்கையைத் தனக்குள்ளடக்கியதும், மிகுந்த உக்ரத்தோடும் விளங்கா நின்றதுமான பிரமாஸ்திரத்தை யெடுத்து, தனது கையிற் பிடித்து வில்லிற்றொடுத்து, வேதத்தில் கூறிய விதிப்படி மந்திரங்களை ஜெபித்து, வில்நாணைத் தனது திருத்தோள் வரையிழுத்து, மிகவும் ஸாவதானமாக இராவணன் மருமஸ்தானத்தைக் குறித்து, இலக்ஷியம் வைத்து விடுத்தார்.

அப்போது பஞ்சபூதங்களும் நடுங்கிற்று, பூமியும் ஆடிற்று. வில்லினின்று விடுபட்ட இராமபாணமானது யாவராலும் ஆக்ரமிக்க முடியாத யமன்போல, அக்கினியைக் கக்கிக்கொண்டு சென்று, கறுத்த நிறத்தையுடைய இராவணனது மலைபோன்ற மார்பில் தாக்கி, அவனுடைய இருதயத்தைப் பிளந்து, அவன் தவம் செய்து பெற்ற வாணாளையும், தேவர்களாலும் ஜெயிப்பதற்கு அரியவன் எனப்பெற்ற வரத்தையும், மூன்று லோகங்களையும் ஜெயித்து திக்குவிஜயம் செய்த புஜபலத்தையும் தின்று, அவனுயிரையும் குடித்துப் புறம்பே சென்று பாற்கடலிற் படிந்து ஸ்ரீராமருடைய அம்புறையில் வந்து சேர்ந்தது.

பிறகு அந்தத் தசகண்டனுடைய கரத்திற் பிடித்திருந்த வரை போன்ற கார்முகம் விரைவில் தரையிற் சாய,மைநாகமலையை யொத்த அரனுக்கையும் பூதலத்தில் விழுந்தது.

உயர்துறந்து பூமியில் விழுந்த இராவணனைப் பார்த்து யுத்தத்தில் மாண்டதுபோகத் தங்கிய இராக்ஷசர்கள் நாதனற்றுப் பயத்தால் நடுக்கமுற்றுத் திசையெட்டினும் பரந்தோடினார்கள்.

அப்பொழுது, வானரர்கள் தசக்கிரீவனுடைய நாசத்தையும், தசரத குமாரனுடைய ஜெயத்தையும் கண்டு சந்தோஷித்து, ஆரவாரித்துக் கூத்தாடிக் கர்ச்சித்தார்கள்.

தேவர்கள், அமரர்கள், சித்தர்கள் முதலியோர் ஆகாயத்தில் துந்துபி வாத்தியத்தை முழக்கி, ஸ்ரீராமன் மீது புஷ்பமாரி பொழிந்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள். கின்னரர்கள் கின்னர வாத்தியகோஷம் செய்தார்கள். நாரதர் முதலியோர்கள் இன்னிசை பாடினார்கள். அப்ஸர ஸ்திரீகள் நிருத்தனம் ஆடினார்கள்.

மனத்தினும் எண்ணுதற்கரிய தபோபலனுகிய இராவணனுடைய சரீரத்திலிருந்து ஒரு ஜோதி யுண்டாகி, சூரியனைப்போல் பிரகாசித்து, தேவர்கள், முனிவர்கள், ரிஷிகள், யாவரும் பார்க்கும்படி ஸ்ரீராமரிடம் வந்தடைந்தது.

அதைக்கண்ட தேவர்கள் "ஆ இதென்ன ஆச்சரியம்! மஹாத்மாவாகிய இராவணனுடைய பாக்யமே பாக்யம். இது வரையில் நாமெல்லோரும், ஸாத்விகர்கள் என்றும், பயம்,துக்கம் முதலியவைகளோடு கூடி ஸம்ஸாரத்திலிருப்பவர்களாயினும் ஸாத்விகத் தன்மையால் விஷ்ணுவின் கருணைக்குரியவர்களென்று நினைத்திருந்தோமே! இராக்ஷச சிரேஷ்டனுகிய இராவணன், மிக்க குரூரத்தன்மை யடைந்தவன்; ஸாதுக்களை ஹிம்சித்தவன்; பிறர் மனைவிருப்பமுடையவன்; மானிடர்களைப் புசிப்பவன்; ஹிம்சிப்பவன்; விஷ்ணுவிடத்தில் துவேஷமுடையவன்; தாமஸகுணத்தை யுடையவன். இப்படிக்கிருந்தும், நாமெல்லோரும் பார்த்திருக்கும்போதே இந்த இராவணன், அந்த ஸ்ரீராமரையே வந்தடைந்தான். இதன் உண்மை நமக்குத் தெரியவில்லையே!" என்று கலக்கமுற்ற மனத்தினராய் ஒருவருக்கொருவர் வார்த்தை யாடினார்கள்

இதைக் கேட்டுக் கொண்டிருந்த தவத்தில் மிகுந்த நாரத முனிவர், சங்கையடைந்து நின்ற தேவர்களைப் பார்த்து "ஓ தேவர்

களே! கேளுங்கள்! நீங்கள் தத்வத்தை அநுசரித்துக் கருமஞ்செய்யத் தகுந்தவர்கள். இராவணனே ஸ்ரீராமரிடத்தில் அந்தரங்க பக்தியுடையவன், வெளியில் துவேஷத்தை யநுசரித்தவன். ஸ்ரீராமரை யிடைவிடாது மனதில் பாவனைசெய்து துதித்தவன். அந்த இராமரால் மரணமடையக் கேட்டுக் கொண்டவன். பக்தியினால் இரகுவீரனைத் தினந்தோறும் சொப்பனத்திலும் தியானஞ்செய்து வந்தவன். கோபமும் இராவணனுக்குக் குருவின் உபதேசத்தைவிட அதிகப் பலனைக் கொடுத்தது. கடைசியாக ஸ்ரீராமர் கரத்தினால் மரணம் அடைந்து கல்மஷம் யாவற்றையும் போக்கிப் பந்தங்களினின்று விடுபட்டு ஸ்ரீ பகவானுடைய ஸாயுஜ்ய பதவியை யடைந்தான்.

மிக்க பாபிஷ்டனாயினும் துராத்மா வாயினும், பிறர் பொருள், மனைவி யிவைகளிற் பற்றுதலுடையவனாயினும், எவன் ஒருவன் சிநேகத்தாலோ, பயத்தாலோ இரகுகுலதிலகரைத் தியானம் செய்து மரண மடைகிறானோ அவன், பரிசுத்தமான மனமுடையவனாகி, அநேக ஜென்மங்களிலேற்பட்ட பாபங்களெல்லாம் விடுபட்டு, விஷ்ணு பக்தர்களாலுந் தேவர்களாலும் கொண்டாடப்படும் வைகுண்டத்தை யடைகிறான்" என்று கூறினார்.

அதன்பின் முனிசிரேஷ்டரான நாரதமுனிவர், கோடிசூரியருக் கொப்பானவரும், ஸ்ரீ இலக்ஷ்மி சகிதரும், தேவராஜனால் ஸ்தோத்திரஞ் செய்யப்படுபவருமாகிய ஸ்ரீராகவர் நம்மைக் காப்பாற்ற வேண்டுமென்று வணங்கினார்.

ஸ்ரீராமர் மூவுலகங்களுக்கும் விரோதியாகிய தசமுக இராவணனை வதை செய்து, இடதுகரத்தில் பிடித்த கோதண்டத்தைப் பூமியில் ஊன்றிக்கொண்டும், வலதுகரத்தில பற்றிய சரத்தைச் சுழற்றிக்கொண்டும், பாணங்களால் அடிபட்ட தழும்பையுடைய சரீரத்தோடும், நன்கு சிவந்து பரந்து விளங்கிய நேத்திரத்தோடு நாலு பக்கங்களையும் பார்த்துக் கொண்டும் ஸ்ரீ இலக்ஷ்மி பிரகாசத்துடன் விளங்கினார்.

---

## 12-வது சருக்கம்.

---

ஸ்ரீராமர் சந்தோஷத்துடன், இலக்ஷ்மணன், விபீஷணன், ஸுக்ரீவன், அநுமான் அங்கதன், ஜாம்பவான் மற்றுமுள்ள வானரர்கள் யாவரையும் பார்த்து, "ஓ வீரர்களே! உங்களுடைய உதவியைக் கொண்டே நான் இராவண ஸம்ஹாரத்தை முடித்தேன். உங்களுடைய புண்யத்தால் சந்திர சூரியர்களுள்ளமட்டும் இந்தக் கீர்த்தி நிலை நிற்கும். பின்னிட்டவர்கள் மூவுலகத்தையும் பரிசுத்தம் செய்யும் தன்மை யுடையதும், கல்மஷத்தைப் போக்கக் கூடியதும், என்னுடன் கூடிய உங்களது சரித்திரத்தைக் கீர்த்தனம் செய்யப் போகிறார்கள். ஸிரேஷ்டமான கதியை அடையப் போகிறார்கள்" என்றார்.

இந்த சமயத்தில் தசமுகன் மரணமடைந்து கிடப்பதை, அவன் மனைவி மண்டோதரி முதலிய ஸ்திரீகள் கேள்விப்பட்டு ரணக்களத்துக்கு வந்து, இராவணன் மலைபோல் மாண்டு கிடப்பதைக் கண்டு அப்பிரேதத்துக்கு முன் விழுந்து கோவென்று அலறிப் பிரலாபித்தார்கள்.

விபீஷணன் மிகுதியான துக்கங்கொண்டு துன்பத்துடன் சோக மடைந்தான். தமையன் சவமாய்க் கிடக்கும் இடஞ்சென்று பலவிதம் கூறிக் கதறினன்.

அப்பொழுது ஸ்ரீராமர் இலக்ஷ்மணனைப் பார்த்து "ஓ ஸௌமித்திரியே! நீ விபீஷணனிடம் சென்று, உன்னுடைய பிராதாவாகிய இராவணனுக்குச் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரத்தைச் செய்ய ஏன் தாமதப்படுத்த வேண்டும். உடனே அக்காரியத்தைச் செய்து முடிக்கிறது என்றும், இராவணனிடம் பிரியமுள்ள ஸ்திரீகள் யாவருக்கும் ஸமாதானம் செய்விக்கிறதென்றும் கூறி வருவாயாக" என்றார்.

இராமச்சந்திரர் இவ்விதம் சொன்னவுடன், இலக்ஷ்மணன், இறந்துபோய்ப் பிரேதமாய்க்கிடக்கும் தனது தமையனாகியஇராவணனுக்கருகில் பிரேதம்போல் விழுந்துகிடக்கும் விபீஷணன் அருகே வந்து, மிக்க சோபம் அடைந்த அவனை யெழுப்பி "ஓ விபீஷண! நீ யாரைப் பற்றி துக்கப்படுகிறாய்? எதற்காக? இராவணனுக்கும் உனக்கும் என்னசம்பந்தம்? அவன்யார்? நீயார்? இந்த ஸிருஷ்டிக்கு முன் நீங்கள் யார்? இனி வரப்போகிற ஸிருஷ்டியில் நீங்கள் யாவர்களாகப்

போகிறீர்களோ? ஜலப்பிரவாகத்தில் அகப்பட்ட மணல் அப்பிரவாகத்தின் சுவாதீனமாய்ச் செல்லுவது போல, மானுடர்கள் கருமவசத்திலகப்பட்டு, காலதத்துவத்தின்படி சேர்க்கையையும் பிரிவையும் அடைகிறார்கள். நீயும், நானும், மற்றவர்களும் சமமாகியவர்கள்; கருமத்தாலுண்டானவர்கள். ஈசுவரன் எல்லாப் பிராணிகளையும் உண்டுபண்ணுகிறார். பரிபாலிக்கிறார். ஸம்ஹரிக்கிறார். தேகத்திலிருந்து செய்வினைக்கீடாக மற்றொரு தேகமுண்டாகிறது. பலவிதமாக இருப்பதும், உற்பத்தி, விருத்தி, லயம் இவைகளும் கருமபலத்தைச் சேர்ந்தவைகள். இவைகளைக் கூட்டி முடிப்பது தெய்வம். ஆகையால், நான், என்னுடையது என்ற மயக்கத்தை விட்டுவிடும். எல்லாப் பூதங்களின் சொரூபமானவரும், மாயாமானுட வடிவங்கொண்டவரும், மிகச் சிறந்தவரும், மஹாத்மாவும், ஈசுவரருமாகிய இராமச்சந்திரரிடம் மனதைச் செலுத்தும். மனம், விஷய சுகங்களிலும், அடுத்த பாகங்களிலும், பிரவிர்த்திப்பதை மெதுவாகத் தடுத்து, அவைகளில் தோஷமுண்டென்பதை யறிந்து, ஆனந்த சொரூபராகிய இராமரிடம் அந்த மனம் பிரவிர்த்திக்கச் செய்யும். தேகத்தை அநுசரித்து மாதா, பிதா, பிராதா, சத்துரு, மித்துரு என்ற பாவனைகள் ஏற்படுகின்றன. ஜீவன், தேகத்துக்கு விலக்ஷணன் என்று ஒருவன் தன்னை அறிவானாகில், அவனுக்குயார் பிதா, மாதா, பிராதா, மித்துரு, சத்துரு ஆவார்கள்? மித்தையான அஞ்ஞானத்தால், க்ஷேத்திரம், தாரம், தனம், புத்திரன் முதலியவைகளிற் பற்றுதலுண்டாகின்றது. இரதம், துரகம், கெஜம்பதாதிகள், சேனை சைனியங்கள், இராஜ்யங்கள், இன்னும் பலவித சம்பத்துகள் கருமப்பலத்தாலுண்டானவைகள். அவைகள் க்ஷணப்பொழுதில் ஒருவனிடம் உண்டாகி க்ஷணப்பொழுதில் நாசமடையக் கூடியவைகள். ஆகையால் முக்காலத்திலும் அழியாத பரப்பிரம்ம சொரூபராகிய ஸ்ரீராமரை மனதில் ஸ்மரித்து, பக்தியுடன் அவரைத் துதித்து, தினந்தோறும் அவரையே நேசித்து, அவருடைய பாதாரவிந்தங்களில் பூஜித்து, அவர் கைங்கிரியத்தில் மன மீடுபட்டவனாயிருந்து கொண்டு, உன்னுடைய இராஜ்ய முதலிய விஷயங்களிற் பிரவேசித்து, அதில் ஏற்படும் ஸுகங்களை யநுபவித்து, சென்ற காரியம், இனி வரப்போகும் காரியம் இவைகளைக் கவனியாமல், நடந்து வரும் காரியங்களில் தற்சுவாதீனத்தை யொழித்து, எல்லாம் ஸ்ரீராமருடைய சுவாதீனமெனவே நிதானித்து, நீயும் அவருடைய அடி.

மையெனப் பாவித்து, நீதி தவறாமல் இராஜ்ய பரிபாலனஞ் செய்து வருவாயானால், நீ ஸம்ஸார பந்தத்தில் கட்டுப்படாமல் கடைத்தேறி முக்தியடைவாயென்று ஸ்ரீராமர் கட்டளையிடுகிறாரென்று கூறினார்.

ஓ சிறந்த புத்தியுடைய விபீஷண! நீர் உமது பிராதாவும், இலங்கேசனுமாகிய இராவணனுக்குச் சாஸ்திர விதிப்படி செய்யவேண்டிய ஈமகிருத்திய முதலிய கிரியைகளைச் செய்யவேண்டும். ரோதனம் செய்கிற இராஜ ஸ்திரீகளைச் சமதானப்படுத்தி அந்தப்புரம் போய்ச் சேரும்படி செய்விக்க வேண்டும்" என்றார்.

விபீஷணன், இலக்ஷ்மணர் கூறிய வார்த்தையைக் கேட்டு சோகத்தையும், மோகத்தையும் விட்டு மனந்தெளிந்து, ஸ்ரீராமச் சந்திரரிடம் வந்தான்.

தருமசீலனாகிய விபீஷணன் தனக்குள் ஆலோசித்து இராமரைச் சேவித்து அவரைப்பார்த்து "ஓ பிரபுவே! குரூரனும், கருணையில்லாதவனும், தருமங்களையும், விருதங்களையும் விட்டவனும், பிறர் மனைவியை யிச்சித்தவனுமாகிய இந்த இராவணனுக்கு நான் ஸம்ஸ்காரம் செய்வது தகுதியல்லவே என்று தெரிவித்துக் கொண்டான்.

அந்த வார்த்தையைக் கேட்ட இரகுவீரன், பிரீதியுடன் இராவணன் சகோதரனைப் பார்த்து "ஓ விபீஷண! விரோதம் மரணபரியந்தமுள்ளது. நம்முடைய கோரிக்கை முடிவடைந்தது. ஆகையால் தசகண்டனுக்குச் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரத்தைச் செய்" என்று கட்டளை யிட்டார்.

தர்மாதர்மங்களை யறிந்தவனும் தர்மிஷ்டனுமாகிய விபீஷணன் ஸ்ரீராமருடைய ஆஞ்ஞைப்படி ராஜஸ்திரீயாகிய மண்டோதரிக்கு இனிய வார்த்தை கூறி சமாதானப்படுத்தினான். பிறகு விபீஷணன் தனது தமையனுக்கு ஸம்ஸ்காரம் செய்யப் பந்து மித்திரர்களை வரவழைத்து வைத்துக்கொண்டு, பிதிர்மேத விதிப்படி ஆஹிதாக்னிக்குச் செய்யும் கிரமப்படி யாவற்றையுஞ் செய்து, அந்த அக்னியைக் கொண்டு, இலங்கேசனைச் சிதையில் வைத்துத் தகனம் செய்தான். பின்பு சுத்தகங்கையில் ஸ்நானம்செய்து ஈரவஸ்திரத்துடன் திலதர்ப்பணம் செய்தான். ஜலதர்ப்பணமும் செய்து தலையால் வணங்கி, திருப்தி வசனங்கூறி ஈமகருமத்தை முடித்தான்.

பிறகு விபீஷணன் பந்து மித்திரர்களை இலங்கைக்கு அனுப்பி விட்டு ஸ்ரீராமரிடம் வந்து வணங்கி நின்றான்.

ஸ்ரீராமரும், இலக்ஷ்மணன், ஸுக்ரீவன், வானரவீரர்கள் இவர்களுடன் சத்துருவை வென்றதில், விருத்தாசுரனை வென்ற தேவேந்திரன் போல் சந்தோஷத்துடன் விளங்கினார்.

அப்போது தேவேந்திரன் சாரதியாகிய மாதலி, ஸ்ரீராமரிடம் வந்து அடிவணங்கி விடைபெற்றுக் கொண்டு ஆகாய மார்க்கமாக ஸ்வர்க்க லோகஞ் சென்றான்.

பிறகு இரகுநந்தனர், மனத்திருப்தியுடன் இலக்ஷ்மணரைப் பார்த்து "ஓ சௌமித்திரியே! நான் முந்தியே இலங்காபுரி இராஜ்யத்தை விபீஷணனுக்குக் கொடுத்திருக்கிறேன். இப்பொழுது நீ இலங்கைக்குச் சென்று விதிப்படி அந்தணர்களுடன் விபீஷணனுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவைத்து வா" என்று கூறினார்.

இலக்ஷ்மணர் அக்கட்டளையைச் சிரமேல் வகித்து விபீஷணனை யழைத்துக்கொண்டு வானர சிரேஷ்டர்களுடன் இலங்கைக்குச்சென்று, பக்தியிலும் புத்தியிலும் சிறந்த விபீஷணருக்கு பிராமண சிரேஷ்டர்களைக் கொண்டு விதிப்படி ஸ்வர்ண கும்பங்களிலமைத்த கங்கையினால் அபிஷேகம் செய்தார். பிறகு சம்பிரதாயப்படி மந்திரி முதலிய இராக்ஷசர்கள் விபீஷணருக்கு இராஜோபசார மரியாதைகள் யாவற்றையும் செய்தார்கள்.

விபீஷணன் இராஜ்ய பட்டாபிஷேகம் பெற்றுக் கொண்ட பிறகு இலங்கைமா நகரத்து ஜனங்களுடனும், மந்திரி பிரதானிகளுடனும் அநேக காணிக்கைகளுடனும் இலக்ஷ்மணரோடு ஸ்ரீராமமூர்த்தியிடம் வந்து அவரது பாதாரவிந்தங்களில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து ஸ்தோத்தரித்தான்.

தசரத குமாரராகிய ஸ்ரீராமர், விபீஷணன் இராஜ்யத்தை யடைந்து சந்தோஷித்திருப்பதைக் கண்டு, தனது பிராதாவாகிய இலக்ஷ்மணனுடன் 'நான் கிருதார்த்தனானேன்'னென்று மகிழ்ச்சியடைந்தார்.

பிறகு இரகுநந்தனர் ஸுக்ரீவனை யருகழைத்து அணைத்து, "ஓ ஸுக்ரீவ! உன்னுடைய சஹாயத்தைக் கொண்டு, யாவராலும் ஜெயிக்க முடியாத வலுவுடைய இராவணனை ஜெயித்து இலங்கையை விபீஷணனுக்குக் கொடுத்து அவன் அதை ஆளும்படி செய்தேன்" என்றார்.

அதன் பிறகு தாசரதி, பக்கத்தில் மிகுந்த வணக்கத்துடனிருக்கும் அநுமானைப் பார்த்து, "ஓ மாருதி! நீ விபீஷணனுடைய அநுமதியின் பேரில் இலங்கை சென்று அசோகவனத்திலிருக்கும் ஸீதையிடம் இராவணன் வதமானதைத் தெரிவித்து அந்த ஜானகி சொல்லும் பதிலை சீக்கிரம் என்னிடம் வந்து தெரியப்படுத்து" என்று கட்டளையிட்டார்.

இவ்விதம் இரகுநந்தனர் ஆக்ஞை செய்ய, புத்திசாலியாகிய வாயுகுமாரன், இராக்ஷசர்கள் பூஜிக்க இலங்கைக்குள் பிரவேசித்து அசோகவனஞ் சென்று, மிகவும் மெலிந்த சரீரத்தையும், யாவராலும் புகழப்பட்ட மேன்மையை உடைத்தானவளும், இராக்ஷசர்களால் சூழப்பட்டவளும், ஸ்ரீராமரையே ஸதா தியானிப்பவளுமாகிய ஸீதையைக் கண்டு, மிகுந்த பக்தியோடு வணங்கி எதிரில் மரியாதையுடன் நின்றார்.

ஜானகி அநுமானைப் பார்த்து முதலிற் பேசாமலிருந்தாள். பிறகு முன் நடந்த விருத்தாந்தத்தை நினைத்து ஞாபகமடைந்து அவர் இராமதூத ரென்றறிந்து ஸந்தோஷத்தால் அன்று மலர்ந்த செந்தாமரை புஷ்பம் போன்ற திருமுக மண்டலத்தோடு பிரகாசித்தாள்.

அநுமார் ப்ரஸன்ன முகத்துடன் விளங்கும் ஸ்ரீராமர் தேவியைப் பார்த்து "ஓ தேவி! லக்ஷ்மணருடனும், ஸுக்ரீவருடனும், விபீஷணருடனும் வானரங்களுடனும் கூடிய ஸ்ரீராமர் க்ஷேமமாக இருக்கிறார். திரிலோக கண்டகனாகிய தசகண்டனை யவன் புத்ர மித்ரர்களுடனும் மந்திரி சேனாதிபதி சேனைகளுடனும் யுத்தத்தில் கொன்று விபீஷணருக்கு இலங்காபுரி இராஜ்யத்தைத் யளித்து, இராஜ்ய பட்டாபிஷேகமும் அவருக்குச் செய்வித்தார். இந்த ஜெயப்பிரபாவத்தைத் தங்களிடம் தெரிவிக்கும்படி எனக்குக் கட்டளையிட்டார்" என்று தெரிவித்தார்.

ஸீதை தனது அன்பிற்குரிய பர்த்தாவின் பிரிய வசனத்தைக் கேட்டு, சந்தோஷப்பட்டு, ஆனந்தத்தினால் உள்ளிருந்து ததும்பி வரும் அமுதத்துக் கொப்பான வாக்கினால், "ஓ ஆஞ்சனேய! இப்போது உமக்கு என்ன வெகுமானஞ் செய்வேன். நீர் கூறிய பிரிய மொழிகளுக்குச் சமமான இரத்னங்களையோ அல்லது ஆபரணங்களையோ நான் மூவுலகத்திலும் காணேனே" என்று மொழிந்தாள்.

ஆஞ்சனேயர், "ஓ தேவி! தமது பர்த்தாவாகிய இராமச்சந்திரர் சத்ருவை ஜெயித்துக் குதூஹலத்துடன் வீற்றிருப்பதை நான் பார்க்கிறதே, எனக்கு நவரத்னக் குவியல்கள்; ஆபரணங்கள், இராஜ்யங்கள் இவைகளை யடைந்ததினு லுண்டாகும் ஆனந்தத்தைவிட மேன்மையானது" என்றார்.

மாருதி கூறிய அன்பிற் சிறந்த வாக்கியத்தைக் கேட்ட ஜானகி, "ஓ அன்பே! திருவுருக்கொண்ட அனுமானே! சத்குணங்கள் யாவும் உம்மிடத்திலேயே குடிகொண் டிருக்கின்றன. இப்போது நான் ஸ்ரீராமரைப் பார்ப்பதிலேயே மிகுந்த விருப்பமுள்ளவளாகிறேன். அந்தப் பிரபுவானவர் என் மனம் மகிழும்படி அவ்விதமே கிருபை புரியவேண்டும். நீ நம் அதற்காக வேண்டிய பிரயத்தனத்தைச் சீக்கிரம் செய்யவேண்டும்," என்று சொன்னாள்.

மாருதி, அவ்விதமே யென்று மிகுந்த வணக்கத்துடன் மொழிந்து, ஸீதாதேவியை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு திரும்பி இரகுநந்தனரிடம் அதிசீக்கிரம் வந்து ஸீதை மிகப் பிரியத்துடன் கூறிய வார்த்தையைத் தெரிவித்து, "ஓ தசரதகுமார! எதற்காக இவ்வளவு முயற்சி செய்தது? இம்முயற்சியால் அடையககூடிய பலன் என்ன? மிகுந்த சோகததால் தாபமடைந்த அந்த அம்மையைத் தாங்கள் பார்ககவேண்டும். அந்த அம்மைக்குத் தரிசனம் கொடுக்கவேண்டும்" என்று மிக்க விநயத்துடன் வேண்டிக்கொண்டார்.

இவ்வாறு மஹா மேதாவியாகிய அனுமான் வேண்ட, விஞ்ஞான சொரூபர்களிற் சிறந்த இரகுவீரர் மாயா ஸீதையை விடுத்து அக்னியில் வசிக்கும் ஸீதையைக் கிரஹிக்க மனதிலெண்ணி, விபீஷணனைப் பார்த்து "ஓ அரசே! நீ சென்று ஜனகராஜன் குமாரியை ஸ்நானம் செய்வித்து தகுந்த ஆடையுடுக்கச் செய்து, மேன்மையுற்ற ஆபரணங்களால் அலங்கரித்து, விரைவாக என்னுடைய சமுகத்துக்கு அழைத்துவா" என்று கூறினார்.

விபீஷணன், அம்மொழிகேட்டு மாருதியுடன் சென்று, மிகவும் வயதில் மூப்புள்ள ஸ்திரீகளைக்கொண்டு ஸீதைக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து, நவரத்னம் பதித்தஆபரணங்களால் அலங்காரம் செய்து, மஹா, உன்னதமான ஓர் சிவிகையின்மீது எழுந்தருளப்பண்ணி, அநேக தாதிமார்கள் புடைசூழ, பல கட்டியக்காரர்கள் சிவிகையின்

முன்னே கட்டியங்கூறிச் செல்ல, அத்தேவியை ஸ்ரீராமரிடம் அழைத்துவந்தான்.

அப்போது புஷ்பத்தைக்கண்டு ஓடும் வண்டுகள் போல வானரர்கள் யாவரும் ஜானகியைத் தரிசிக்க ஆவலுடன் ஓடிவந்தார்கள். அவர்களைக் கட்டியக்காரர்கள் தடுத்தார்கள். ஆயினும் எல்லோரும் குதூஹலத்துடன் ஸ்ரீராமரிடம் வந்து சேர்ந்தார்கள்.

இரகுசிரேஷ்டர் விபீஷணனை நோக்கி, "ஓ விபீஷண! பல்லக்கின் மீதுவரும் ஜானகியைப் பார்க்கவந்த வானரர்களை அரக்கர் ஏன் விலக்குகிறார்கள். அன்பிற்சிறந்த வானரர்கள் ஸீதையைத் தாய் போல் பார்த்துச் சேவிக்கும்படி, அந்த வைதேகி கால்நடையாக நடந்து வரட்டும்" என்று கூறினார்.

இரகுநந்தனருடைய வார்த்தையைக்கேட்டு ஜானகி, சிவிகையை விட்டுக் கீழிறங்கி, பாதசாரியாகவே அன்னம்போல நடந்து தனது கணவன் அருகில் வந்தாள்.

ஸ்ரீராமர், பின்வரும் காரியத்தை யுத்தேசித்துச் சிருஷ்டித்த அந்த மாயாஸீதையை நோக்கி நிந்தையான வார்த்தைகள் பேசினார்.

இராகவர் பேசிய இழிவான வார்த்தையைக்கேட்டு வைதேஹி இலக்ஷ்மணரைப் பார்த்து, "ஓ மஹானுபாவரே! உலகிலுள்ளோர் என்னைப் பற்றி அபவாதச்சொல் கூறுமலிருக்கவும், ஸ்ரீராமபிரானுக்கு நம்பிக்கை யுண்டாவதற்கும் ஹேதுவாக நான் அக்னியிற் பிரவேசிக்கிறேன். நீர் விரைவாக ஒரு குழியில் அக்னி யுண்டுபண்ணும்" என்றாள்.

இலக்ஷ்மணர் தனது பிராதாவின் உள்ளக்கருத்தை அறிந்தவரானபடியால், ஸீதை கூறியதற்கிணங்கி, பெருங்கட்டைகளைச் சேகரித்து ஒரு குழியிலிட்டு அதில் அக்கினியைமூட்டித் தீயையுண்டு பண்ணிவிட்டுப் பிறகு இராமரிடம் வந்து உரையாடாது நின்றார்.

ஜானகி அக்கினி குண்டத்தில் தீஜ்[illegible]யெழும்பிப் பிரகாசிப்பதைப் பார்த்து, மனத்தளர்ச்சியில்லாமல் [illegible]ந்த சந்துஷ்டியுடன் கணவரிடம் சென்று அவரைப் பிரதக்ஷிணமாக மும்முறை வலம் வந்து, அங்குற்ற ஜனங்கள், இராக்ஷச ஸ்திரிகள் முதலினோரும், அந்தரத்தில் தேவர்கள், அருந்ததி முதலிய தேவஸ்திரீகளும் பார்த்துக் கொண்டிருக்க, அக்னி குண்டத்தினருகிற் சென்று, பக்தியுடனே தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும் நமஸ்காரம் செய்து,

கைகூப்பி நின்று, என்மனமானது ஸதாகாலமும் ஸ்ரீராமனைவிட்டுப் பிரியாமலிருந்தது உண்மையானால் இந்த அக்னி யென்னை இரக்ஷிக் கட்டும் என்று கூறி, அந்த அக்னியை மூன்றுதரம் வலம்வந்து, கல்மஷமில்லாத மனத்துடன், ஜ்வலித்து எழுகின்ற அக்னியிற் பிரவேசித்தாள்.

இதைக்கண்ட தேவர்கள், ஸித்தர்கள், முனிவர்கள், மஹரிஷி கள் முதலியோர்கள், அடங்காத் துக்கத்தில் மூழ்கினவர்களாகி, இந்த இரகுவீரர் இலக்ஷ்மிதேவியாகிய தன்னைச்சார்ந்த ஸீதையை அறிந்தவராயிருந்தும், ஏன் இவ்விதம் அக்னிப்பிரவேசமாகச் சம் மதித்தார் என்றுகூறி, இது மிகுந்த ஆச்சரியத்தை விளைவிக்கிறது என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்தார்கள்.

## 13-வது சருக்கம்.

பிறகு, ஆயிரங்கண் படைத்த இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாய்வு, குபேரன், ஈசானன் முதலிய திக்குப் பாலர் களும், தேவர்கள், முனிவர்கள், ஸித்தர்கள், கந்தருவர்கள், அப்ஸர ஸுகள், உரகர்கள், ரிஷிகள், முனிவர்கள், முதலியோர்களும் புடை சூழ ஸரஸ்வதி நாயகியாகிய பிரமதேவரும், மற்றுமுள்ள தேவலோக வாசிகளும், நாகலோக வாசிகளும் பித்ருலோக வாசிகளும், தங்கள் தங்கள் வாகனங்கள், விமானங்கள் இவைகளின்மீதேறிக்கொண்டு ஸ்ரீராமச் சந்திரனிடம் வந்தார்கள். நாமும் ரிஷபவாகனரூடராய் அங்கு சென்றிருந்தோம்.

தேவலோகத்தில் வசிக்கும் தேவர்கள், பரமாத்மாவாகிய ஸ்ரீ ராமனைப் பார்த்து, "ஓ பிரபுவே! நீர் உலகம் யாவற்றையும் படைத் தவர்; சாக்ஷியாயிருப்பவர்; விஞ்ஞான விக்ரஹமானவர்; அஷ்ட வஸுக்களாகவும், ஏகாதசருத்ரர்களாகவும் ஆகிறீர்; உலகங்களுக்கு ஆதிகர்த்தாவாகிய நான்முகப் பிரமனாகவும் ஆகிறீர். உமக்கு அக்னி தேவர்கள் செவிகளாகவும், சந்திர சூரியர்கள் நேத்திரங்களாகவும், இருக்கிறார்கள். நீர் உலகங்களுக்கு ஆதியும் அந்தமுமாகிறீர்; நித் தியருமாகிறீர்; நீர் எப்போதும் சுத்தர்; எப்போதும் புத்தர்; எப் போதும் முக்தர்; குணமில்லாதவர், இரண்டற்றவர்; உம்முடைய மாயை சூழப்பெற்றவர்களுக்கு மட்டும் நீர் மானுட சரீரம் பெற்றவ

ராகிறீர். உம்முடைய திவ்ய நாமத்தை ஸதாஸ்மரணம் செய்பவர்களுக்கு, நித்யானந்த சித் சொரூபராக விளங்குகிறீர். எங்களுடையதேஜஸ்ஸுடன் எங்கள் பதவியையும் இராவணன் அபகரித்துக் கொண்டு வாழ்ந்தான்; அத்தகைய கொடிய துஷ்டனை யிப்பொழுது நாசமடையச் செய்தீர்.

இதனால் மறுபடியும் எங்கள் பதவி எங்களுக்குக் கிடைக்க நேரிட்டது" என்று வியந்து கூறினார்கள்.

பின்பு, பிதாமகனாகிய பிரமதேவர் இராமனை வணங்கி யாவற்று ஸ்திதிக்கும் ஹேதுவாகியவரும், அத்யாத்மஞானமுடையோர்களால் எப்போதும் மனதில் தியானிக்கத்தக்கவரும், கொள்ளத்தக்கது நீக்கத்தக்கது என்ற இரண்டு மற்றவரும், உத்கிருஷ்டரும், ஸத்தாமாத்ரரும், எல்லோருடைய இருதயத்திலிருப்பவரும், ஞானசொரூபரும், ஏகரும், அநேகரும், விஷ்ணுவுமாகிய உம்மை நான் நமஸ்கரிக்கிறேன்.

துறவிகள், நிச்சயமுள்ள புத்தியுடன் பிராணனையும், அபானனையும் மனதில் நிறுத்தி, விஷயங்களையும் ஸம்ஸார பந்தங்களையும் போக்கி, மோகமிழந்தவர்களாகி, லலாடமத்தியில் ஜோதி சொரூபமாக எந்த ஈசனைப் பார்க்கிறார்களோ, அந்த சோதி ஸொரூபமுள்ளவருமாகிய உம்மை நான் நமஸ்கரிக்கிறேன்.

மாதவரும், மாயையைக் கடந்தவரும், ஆதியிலிருப்பவரும், யோகவிதானமுள்ளவரும், நித்யானந்தரும், பரிபூரணரும், உலகத்திலுள்ள யாவராலும் ஸ்தோத்திரம் செய்யத்தக்கவரும், மோகத்தை நாசம் செய்பவரும், முனிவர்களால் நமஸ்கரிக்கத்தக்கவரும், ஜனங்களை ரஞ்சிக்கச் செய்பவருமாகிய உம்மை நான் நமஸ்கரிக்கிறேன்.

ஸுரங்களில் விருப்பமுள்ளவர்கள், பூஜிக்கத்தக்க பாதாரவிந்தங்களுடையவரும், அஸுரர்கள் யாவருக்கும் காட்டுத் தீப்போன்றவரும், மஹாவீரருமாகிய உம்மை நமஸ்கரிக்கிறேன்.

அடியார்களால் வேண்டப்படும் யாவற்றையும் கொடுக்கத் தக்கவரும், எல்லாவற்றையு மாதரிப்பவரும், பக்தியால் அடையத் தக்கவரும், ஸம்ஸார பந்தத்தைப் போக்குகிறவரும், யோகாப்யாஸ பாவங்கள் அடைந்தவரும் ஆகிய நீர் எனக்கு நாதனாகிறீர்.

உலோகாதீதரும், உலகங்களுக்குப் பரரும், சாஸ்திரங்களால் அறியத் தக்கவரும், பக்தி, சிரத்தை, பாவனை இவைகளுடையவர்களால் பஜிக்கத் தக்கவரும், ஸுந்தர வடிவமானவரும், நீலோற்பலம் போன்ற வர்ண முடையவருமாகிய உம்மை நமஸ்கரிக்கிறேன்.

ஓ மாதவ சொரூப! கர்வமில்லாதவரும், ஆதியானவரும், மனுநீதருமாகிய உம்மை அறிய எவன் தான் சக்தி பெறுவான்? ஆயினும், பிருந்தாவனத்தில் தேவர்களால் ஸ்தோத்திரிக்கப்பட்ட உம்மை நான் நமஸ்கரிக்கிறேன்.

வேதங்களாலும், பலவித சாஸ்திரங்களாலும், பிரதி பாதிக்கத் தக்கவரும், நித்தியானந்தரும், ஞானமுடையவரும், மானுடரூப முடையவரும், மரகதம்போன்ற நிறமுடையவருமாகிய உம்மை நமஸ்கரிக்கிறேன் என்று பிரமதேவர் ஸ்தோத்திரித்து நின்றார்.

பூமியில் எவன் ஒருவன், சிரத்தையுடன், அடியார்களுக்கு அவர்கள் விருப்பப்படி விரும்பியதைக் கொடுக்கக் கூடியவரும், சியாமளரூபரும், ஈசுவரருமாகிய ஸ்ரீஇராமரைத் தியானம் செய்து, பிர்ம்மஞானத்துக்குக் காரணமும், பிரமதேவர் கூறியதுமாகிய இந்த ஸ்தோத்திரத்தை, எப்போதும் பாராயணம் செய்கிறானோ அவன் சகல பாவங்களினின்று விடுபடுவான்.

இந்த சமயத்தில், தேவர், முனிவர், மானுடர் முதலியோர் செய்யும் யாகாதி ஓமங்களுக்குப் பிரதானமானவரும், உலகத்துக்குப் பிரத்தியக்ஷ சாக்ஷியாகியவருமாகிய அக்னிதேவன், நிர்மலமான சூரியனைப்போல் காந்தியோடு பிரகாசிப்பவளும், ஸ்வர்ணமயமான சிவந்த வஸ்திர முடுத்தவளும், திவ்விய ஆபரணங்களால் அலங்கரிக்கப் பெற்றவளும், ஜனக ராஜகுமாரியுமாகிய ஸீதையை அந்த அக்கினியில் நின்று கொண்டுவந்து, பிரஸன்னரும், எல்லோருடைய துன்பத்தைப் போக்குகிறவருமாகிய இராமரிடத்தில் விட்டு, அவரைப்பார்த்துச் சேவித்து, "ஓ விஷ்ணு சொரூபியாகிய ஸ்ரீராம! இராவண ஸம்ஹாரத்தை முன்னிட்டு, முந்தி ஆரணியத்தில் என்னிடம் ஒப்புவிக்கப்பட்ட ஸீதையை மறுபடியும் அங்கீகரிக்க வேண்டும்; இப்போது தசமுகன் புத்ரமித்ர பந்து ஜனங்களுடன் மரணமடைந்து விட்டான்; பூமிபாரமும் நீங்கிவிட்டது; இவைகளை யுத்தேசித்துத் தங்களால் சிருஷ்டிக்கப்பட்ட மாயா ஸீதை கிருதார்த்தையாகி மறைந்து போய்விட்டாள்; எதார்த்த ரூபமுடைய ஸீதா

தேவி பிதா இருக்கிறார்; கிருபைசெய்து அழைத்துக் கொள்ள வேண்டும்'' என்று வந்தனையுடன் தெரிவித்துக் கொண்டார்.

ஸ்ரீராமர், மிகுந்த சந்தோஷமடைந்தவராய் அக்னிதேவனை யுபசரித்து, ஸீதையைக் கிரஹித்து மூவுலகங்களுக்கும் தாயும், தமக்கு வேறு படாதவளுமாகிய இலக்ஷ்மியைத் தன்மடிமீதில் வைத்து ஸீதாபதியாக விளங்கினார்.

அப்போது, தேவராஜனாகிய இந்திரன், ஸீதையோடு வீற்றிருக்கும் ஸ்ரீராமரைப்பார்த்து, சந்தோஷத்துடனும், பக்தியுடனும், கைகூப்பி நின்று, கருங்குவளைபோன்ற தேக காந்தியுடையவரும், ஸம்ஸாரமாகிய அரண்யத்துக்குக்காட்டுத் தீயென்று பிரஸித்திபெற்று விளங்குபவரும், ஸம்ஸார விநாசத்துக்கு ஹேதுவாகியவருமாகிய உம்மை நான் எப்போதும் பஜிக்கிறேன்.

தேவர்கள் அநுபவித்த கஷ்டத்தைப் போக்க முக்கிய காரணரும், அதற்காக மானுடரூப மடைந்தவரும், ஸ்துதி செய்யத் தகுதியானவரும், பரமேச்வரரும், பரமானந்த சொரூபரும், சிரேஷ்டரும், மஹாவிஷ்ணு சொரூபியுமாகிய உம்மை நான் பஜிக்கிறேன்.

சரணம் புகுந்தவர்களுக்கு, நித்தியானந்தத்தை நிரம்பச் செய்பவரும், சரணமடைந்தவர்களின் துக்கம் யாவற்றையும் நாசம் செய்பவர் என்ற நாமத்தைப் பெற்றவரும், தவத்தையும் யோகத்தையும் உடைய யோகீஸ்வரர்களால் தியானிக்கப்படுபவரும், ஸுக்ரீவன் முதலியோருக்கு மித்ரரும், சியாமளரூப முள்ளவருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன்.

எப்போதும் காமாதிகளை அபேக்ஷித்தவர்களுக்கு, வெகு தூரத்தி லிருப்பவரும், யோகாப்பியாசம் செய்பவர்களுக்கு மிக்க சமீபத்தில் சந்தோஷத்துடன் விளங்குகிறவரும், சிதாநந்தத்துக்கு மூலமானவரும், வைதேஹியின் ஆனந்தத்துக்கு இராமனனவருமாகிய உம்மை நான் முப்பொழுதும் சரணமடைகிறேன்

நீர் சிரேஷ்டையான லோகமாயையின் காரியங்களுடன் கூடியவர்; மிகுதியான மானுடலீலா விருத்தியுடையவர்; இவ்வுலகில் உம்முடைய விநோதமான லீலைகளடங்கிய சரித்திரங்களைச் சிரவணம் செய்யும் செவிகளையுடைய பக்தர்கள் எப்போதும் ஆனந்தசொரூபராகிறார்கள்.

ஓ ஸர்வேச! நான் கௌரவத்திலும், மானத்திலும், அபிமானத்திலும் பிரியமுள்ளவன்; சாகசரூபத்தன்மை யில்லாதவன். ஆகையால் தங்களுடைய மஹிமையை நான் அறியேன். ஆனாலும் இப்பொழுது தங்களுடைய சேவையால் நான் தேவலோகத்துக்கு அரசன் என்ற இறுமாப்பு நீங்கிற்று.

பிரகாசிக்காநின்ற ரத்னகேயூரங்களையும், ஹாரங்களையும் தரித்திருப்பவரும், மனோஞ்ஞரும், பூமிக்குப் பாரமாகிய அசுரக் காட்டுக்குத் தீயாகியவரும், சரத்காலச் சந்திரன் போன்ற திருமுகமுடையவரும், விளங்கும் பத்மம் போன்ற நேத்திரமுடையவரும், கருணைக்கடலாகியவருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன்.

பிரகாசம் பொருந்திய கோடிசந்திரன்போல் விளங்கும் ஆதிபீடத்தில் ஸீதையை மடியில் வைத்துக்கொண்டிருப்பவரும், பிரகாசிக்கும் ஸ்வர்ணம்போன்ற காந்திபொருந்தியவரும், மின்னல் கூட்டம் போன்ற ஒளியுள்ளவரும், துன்பமும் சோம்பலுமில்லாதவருமாகிய உம்மை நான் பஜிக்கிறேன் என்று ஸ்தோத்திரம் செய்தான்.

பிறகு நாம் (பரமசிவன்) ஆகாயத்தில் ரிஷபவாகனரூடராகி தாமரைக் கண்ணனாகிய இராமனைப்பார்த்து, "ஓ இராம! மஹாபாகுவே, சின்மயானந்த விக்ரஹ, ஸத்வசொரூப, ஸர்வஞ்ஞ, நிர்மல, மாயாவிஹார!! நீர் அயோத்தி சென்று முடிசூட்டிக்கொண்ட பிறகு நான் வந்து பார்க்கிறேன். ஓ ராகவ! உமக்குத் தந்தையாகிய தசரதரைப் பார். ஸ்வர்க்க லோகத்திலிருந்து உன்னைப் பார்க்க வந்திருக்கிறார். என் பக்கத்திலிருக்கிறார்" என்றேன்.

அப்பொழுது இரகுநந்தனன் தன் முன்னால் விமானத்தின்மீதிருக்கும் தசரதரைப் பார்த்து லக்ஷ்மணனுடன் அவருடைய பாதங்களில் சந்தோஷத்துடனும், பக்தியுடனும் வணங்கினார்.

தசரத மஹாராஜன் இராமனை அணைத்து, "ஓ பாலக! உன்னால் நான் துக்கக்கடலாகிய ஸம்ஸாரத்தில் நின்று விடுபட்டேன்" என்றுரைத்தார். இராமன் பூஜித்தார், தசரதர் தனதிருப்பிடம் சென்றார்.

பிறகு அருகில் நிற்கும் தேவராஜனைப்பார்த்து "ஓ சகஸ்திராக்ஷ! எனக்காக யுத்தம் செய்து மரணமடைந்து பூமியில் விழுந்து கிடக்கும் வானரர்களை ஜீவிக்கச் செய்யவேண்டும்," என்றார்.

தேவேந்திரன், அவ்விதமே அமுதத்தைப் பொழிந்து வானரர்களைப் பிழைக்கச் செய்தான். வானரர்கள் தூங்கி யெழுந்தவர்கள்

போல் முன்போல வலுவுள்ளவர்களும், சந்தோஷமுள்ளவர்களுமாகி, இராமன் பக்கத்தில் வந்தார்கள்.

அப்பொழுது விபீஷணன் ஸ்ரீராமனைச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, "ஓ தேவ! உங்களிடத்தில் எனக்கிருக்கும் பக்தியை முன்னிட்டு, இப்பொழுது ஸீதையுடன் தாங்களும், மங்களஸ்நானம் செய்யுங்கள், இலக்ஷ்மணருடன் அலங்காரம் செய்துகொள்ளுங்கள், நாம் நாளையதினம் அயோத்திக்குச் செல்லலாம்" என்று கூறினன்.

இரகு சிரேஷ்டன் விபீஷணனுடைய வார்த்தையைக்கேட்டு, "ஓ விபீஷண! பரதன் மிகவும் மிருதுவான சரீரமுடையவன்; சிறந்த பக்தன்; சடை முடியையும், மரவுரியையுந் தரித்தவன். சத்துருக்கனுடன் அயோத்தியில் என் வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருக்கிறன். அந்தப் பரதனை யன்னியில் நான்மட்டும் எப்படி ஸ்நானம் அலங்காரம் முதலியன செய்து கொள்ளக்கூடும். ஆகையால் ஸுக்ரீவன் முதலியவர்களை யுபசரித்தால் என்னையும் யுபசரித்தது போலாகும், சந்தேகப்பட வேண்டாம்," என்றுரைத்தார்.

இரகுவீரன் இவ்வாறு சொன்னவுடன், இலங்கைக் கோனுகிய விபீஷணன், ஸுக்ரீவன் முதலிய வானர சிரேஷ்டர்களுக்கு அவர்களிஷ்டப்படிக்கும், தன்னுடைய மனோரதப்படிக்கும், ஸ்வர்ணங்களாலும், ரத்னங்களாலும், வஸ்திரங்களாலும் கனகமழை பொழிந்தான்.

இரகுநந்தனன், ரத்னங்களால் நிறைக்கப்பெற்ற அந்த வானர சிரேஷ்டர்களைக் கொண்டாடி கிரமப்படி அவர்களிருப்பிடத்துக்கனுப்பினர்.

பிறகு சூரியகாந்தியைப் போன்று பிரகாசிக்கும் காந்தியுடைய புஷ்பக விமானத்தைக் கொண்டுவந்தான்.

இரகுநாதன், குபேரனுடைய அந்த விமானத்தின் மீதேறினர். கீர்த்தி வாய்ந்தவளும், நாணமுடையவளுமாகிய வைதேகியைத் தனது மடியின்மீது வைத்துக்கொண்டார். பராக்கிரமமுள்ளவனும், வில்லாளியுமாகிய இலக்ஷ்மணனும் விமானத்திலேறினன்.

ஸ்ரீராமன் விமானத்தின் மீதிருந்தபடியே வானரர்களனைவரையும், வானர இராஜனுகிய ஸுக்ரீவனையும், அங்கதனையும், விபீஷணனையும் பார்த்து, "நீங்கள் மித்ரர்கள் செய்யவேண்டிய காரியமனைத்தும் செய்தீர்கள். நான் உங்கள் யாவருக்கும் மிகுந்த சந்தோஷத்துடன்

உத்தரவு கொடுக்கிறேன். நீங்கள் உங்க ளிருப்பிடம் செல்லலாம். ஓ ஸுக்ரீவ! நீ வானர ஸேனைகளுடன் கிஷ்கிந்தைக்குச் செல். ஓ விபீஷண! நீ என்னுடைய பக்தன். இலங்கையில் பய மன்னியில் வசிக்கலாம். உன்னை இந்திரனும் தேவர் முதலியவர்களும் ஆக்ரமிக்க முடியாது. நான் அயோத்தி செல்ல விரும்புகிறேன்" என்றார்.

இவ்வாறு இராமச்சந்திரன் சொன்னவுடன், மஹா பலம் பொருந்திய அந்த வானரர்களும், விபீஷணனும், கை கூப்பிக் கொண்டு "ஓ இரகு சிரேஷ்ட! நாங்களும் தங்களுடன் அயோத்திக்கு வருகிறோம் தங்களுடைய பட்டாபிஷேக மஹோற்சவத்தைத் தெரிசித்துவிட்டு, கௌசல்ய அம்மையையும் கண்டு நமஸ்கரித்த பிறகு நாங்கள் எங்களுடைய இருப்பிடம்வந்து சேருகிறோம். ஓ பிரபுவே! அவ்விதம் எங்களுக்கு உத்தரவு கொடுக்கவேண்டு" மென்றார்கள்.

ஸ்ரீராமன் பரம சந்தோஷத்துடன் "ஓ ஸுக்ரீவ, வானரர்கள், அனுமான், விபீஷணன், மற்று முள்ளவர்கள் யாவரும் இந்த விமானத்தின் மீதேறிக் கொள்ளுங்கள்" என்றார்.

உடனே வானர சேனைகளுடனும், அனுமானுடனும், ஸுக்ரீவனும், மந்திரிகளுடன் விபீஷணனும், மற்றுமுள்ளவர்களும் புஷ்பக விமானத்தின் மீதேறினார்கள்.

அவர்கள் யாவரும் ஏறிக்கொண்டவுடன் புஷ்பகவிமானமானது இராமனுடைய உத்தரவு பெற்று ஆகாயமார்க்கமாகக் கிளம்பியது.

அம்லபக்ஷிகளுடன் கூடிய அந்த விமானத்தின் மீதிருக்கும் இரகுநந்தனன் ஸந்தோஷமடைந்தார். தேவர்கள் புடைசூழ வீற்றிருக்கும் பிரமதேவர்போல, ஸ்ரீராமர் ஸுக்ரீவர் முதலினோரோடு மற்றொரு பிரமதேவர்போல அவ்விமானத்து மீது விளங்கினார்.

சூரிய பிம்பத்துக் கொப்பானதும் தவத்தால் அடைந்ததுமாகிய குபேரனுடைய அந்த விமானமானது லக்ஷ்மணனுடனும், ஸீதையுடனும் கூடிய இராமனால் மிகவும் காந்தியை யடைந்தது.

---

# 14-வது சருக்கம்.

விமானத்தின் மேற்செல்லும் இரகுநந்தனன், நாலாபக்கங்களை யும்நோக்கி சந்திரன் போன்ற முகமுடைய மைதிலியைப்பார்த்து, "ஓ ஸீதே! திரிகூடமலையின் சிகரத்திலிருக்கும் மிகுதியான காந்தி யுள்ள இலங்கையைப்பார்; மாமிசமாகிய சேற்றினால் நிறைந்த யுத்த பூமியைப்பார்; இது அரக்கர்களுக்கும் வானரர்களுக்கும் யுத்தம் நடந்தவிடம்; இங்குதான் என்னால் வதம் செய்யப்பட்ட இராவணன் மாண்டுகிடந்தான்; இவ்விடத்தில்தான் கும்பகருணன், இந்திரஜித்து முதலிய மஹா பலசாலியான அரக்கர்கள் மாண்டது; மழைக் காதாரமாகிய கடலில் நம்மால் கட்டப்பட்ட ஸேது இதுதான். இது மஹாத்மாவாகிய ஸமுத்திர ராஜனுடைய முதுகில் கட்டப்பட்ட ஸேதுபந்தனம் என்று பிரஸித்தி பெற்றது. மூவுலகத்தோராலும் பூஜிக்கப்பட்டது; பரிசுத்தமானது. மிகச்சிரேஷ்டமானது. தரி சனம் செய்தாலே பாபங்களைப் போக்கக் கூடியது. ஸமுத்திரத்தி லுள்ள ஸேதுவைக் கண்டால் மறுபடியும் ஜென்மம் இல்லை. நான் ஸேதுக்குப் போகிறேன். அங்கு பிதுர்க்களுக்குத் திருப்தி செய் விக்கிறேன் என்று வேறு ஸ்தலத்திலிருந்துகொண்டு நினைக்கும் ஜனங்கள்கூட, பிதுர்க்களுடன் முக்தியடைவார்கள்.

ஸேதுபந்தனத்தின் மஹிமையை நான் சொல்ல முடியாது. நான் எல்லாத்தேவர்களுடனும் இந்த ஸேதுவில் வசிக்கிறேன். ரிஷி கள், ஸித்தர்கள், கந்தருவர்கள் வாலகியர்கள் முதலினோர் யாவரும் என்னைத்தரிசனம் செய்ய வேண்டுமென்ற ஆவலுடன் மனங்குவிந்த வர்களாகியிந்த ஸேதுவில் வசிக்கிறார்கள். எவன் ஸேது யாத்திரை செய்து ஸ்நானம்பண்ணி பிதுர்க்களுக்குத திலதர்ப்பணம் பண்ணு கிறானோ அவன் தேவன் ஆகிறான் என்பதிற் சந்தேகமில்லை,

மூவுலகிலுமுள்ள மூன்றரைக் கோடி தீர்த்தங்களும் மத்தியான காலத்தில் ஸேதுவைத் தரிசனம் செய்யவும், ஸ்நானம் பண்ணவும் நித்ய நியமாக வருகின்றன.

நான், லக்ஷ்மணன், அனுமான், விபீஷணன், ஸுக்ரீவன் இவர் களுடன் உலகிலுள்ள மானுடர்கள் முத்தியடைய இங்கு எப்போதும் சானித்தியமாக வசிக்கிறேன்.

ஓ ஜானகி! இங்கு ஸாட்சாத் பரமசிவத்தை லிங்கத்திற் பிரதிஷ்டை செய்து இராமேச்வரர் என்னும் நாமத்தை வைத்துப் பூஜை செய்தேன். இங்கு தான் விபீஷணன் நான்கு மந்திரிகளுடன் என்னைச் சரணமடைந்தான்.

இதுவோ ஸுக்ரீவனுடைய நகரமாகிய கிஷ்கிந்தை. விசித்திரமான காடுகளுடையது பார்" என்றார். அப்போது இராமருடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு ஸுக்ரீவன் ஸீதையினிடத்திலுள்ள பிரியத்தால் தரிசிக்கும் நிமித்தம், தாரை முதலிய வானர ஸ்திரீகளை வரவழைத்தான். அந்த ஸ்திரீகளும் வந்து ஸீதையை வணங்கி நமஸ்கரித்து விமானத்தின் மீதேறினார்கள். பிறகு விமானம் வானத்திற் கிளம்பிற்று. அப்போது இராகவன் ஸீதையைப் பார்த்து, "ஓ மைதிலி! ரிசியமூகமலையைப் பார். இங்கு தான் வாலி மரணமடைந்தான்.

இதுதான் பஞ்சவடி; இந்தவிடத்தில்தான் கரதூஷணன் முதலிய இராக்ஷசர்கள் மரணமடைந்தார்கள்.

ஓ வைதேகி! இது கடலைப்பருகின அகஸ்திய மகா முனிவருடைய ஆச்சிரமம். இது ஸுதீக்ஷ்ணருடைய ஆச்சிரமம். இவைகளைப் பார்.

ஓ காந்தியுடைய ஸீதே! இதோ தபத்திற் சிறந்த ரிஷிகள் யாவரும் காணப்படுகிறார்கள் பார்.

ஓ தேவி! பருவத்திற் சிரேஷ்டமான சித்திரகூடம் இதோ காணப்படுகிறது பார்; இந்த இடத்திற்றான் பரதன் தன் தாய்மார்களுடனும் அயோத்திமா நகரவாசிகளுடனும், வசிஷ்டர் முதலிய ரிஷி சிரேஷ்டர்களுடனும் என் அநுக்ரகம் பெறவந்தான்

யமுனா நதிக்கரையில் காணப்படும் பரத்வாசமுனிவரரின் ஆசிரமம் இதோ தெரிகிறது பார்.

உலகங்களை யெல்லாம் பரிசுத்தி செய்யும் பகீரதி யென்று வழங்கும் கங்காதேவி யிதோ காணப்படுகிறாள் பார்.

இதோ யூபஸ்தம்பங்களின் வரிசையுடைய ஸரயு நதியைப் பார்.

அதோ அயோத்திமா நகரம் காணப்படுகிறது" என்று ஸீதைக்கு ஒவ்வொரு இடத்தையும் குறிப்பிட்டுக் காட்டிக்கொண்டே பாத்துவாச முனிவருடைய ஆச்சிரம் வந்தார்.

இரகுநந்தனன், அன்றையதினம், பதினைந்து வருடம் பூரணமான பஞ்சமி திதியானதால், பரத்துவாச முனிவரைப் பார்த்து, இலக்ஷ்மணருடன் நமஸ்கரித்து "ஓ முனிசிரேஷ்டரே! எனது பிரியமுள்ள தம்பி பரதன் சத்துருக்னனுடன் க்ஷேமமாக இருக்கிறனா? தாங்கள் அதைப்பற்றி யேதாவது கேள்விப்பட்டீர்களா? அயோத்திமாநகரம் ஸுபிக்ஷமாக இருக்கிறதா? தாய்மார்கள் ஸுகஜீவியாயிருக்கிறார்களா?" என்று கேட்டார்.

தவத்தில் மிகுந்த பிரதாபமுடைய பரத்துவாச முனிவர் இராமருடைய வார்த்தையைக் கேட்டு "ஓ இராமச் சந்திர! அயோத்தியில் யாவரும் க்ஷேமமாகவே யிருக்கிறார்கள். மிகவும் சிறந்த குணமுடைய பரதன் நீர் அயோத்தியை விட்டுப் போனதுமுதல், கந்தமூல பலாதிகளை ஆகாரம் செய்துகொண்டு, மரவுரிதரித்தவனாகி, பாதுகைகளுக்கு இராஜோபசாரம் செய்து அதன் முன்னிலையில் இராஜீய விவகாரங்களை நடத்திக்கொண்டு உம்மை எதிர்பார்த்தவனா யிருக்கிறான்.

மேலும் ஓ இரகுநந்தன! தண்டகாரண்யத்தில் நீர் செய்த ஒவ்வொரு காரியங்களையும், இராவணன் ஸீதையை அபகரித்ததையும், தசகண்டன் முதலான அரக்கர்கள் நாசமடைந்ததையும் உம்முடைய அனுக்கிரகத்தால் நான் தவத்தின் மகிமையைக் கொண்டு ஞானதிருஷ்டியால் அறிந்தேன்.

ஓ இரகுராம! நீரே பரப்பிர்மம். ஆதி மத்தி அந்தம் இவைகளில்லாதவர்; ப்ருதிவி முதலுள்ள பஞ்ச பூதங்களையும் சிருஷ்டி செய்யும் நீர், ஜலத்தை சிருஷ்டித்து அதில் சயனம் செய்துகொண்டீர்; பிரபஞ்ச சொரூபியாகிய பரமபுருஷன் நீர், மானுடர்களுக்கும் தேவர் முதலிய மற்ற யாவருக்கும் அந்தர்யாமியாக விருப்பவர் நீரே, நாராயணன் என்ற நாமத்தை வகித்தவர் நீரே.

உலகங்களுக்குப் பிதாமகராகிய பிரமதேவர், உம்முடைய நாபிக் கமலத்திலிருந்து உண்டானவர், ஆகையால் ஜெகத்துக்கு ஈசனுமாகிநீர், தேவர், மானுடர் முதலிய யாவராலும் நமஸ்கரிக்கப்படுகிறீர், நீரே மஹாவிஷ்ணு; ஜானகி இலக்ஷ்மி தேவி! இலக்ஷ்மணன் ஆதி சேஷன்.

நீர் இந்தப் பிரபஞ்சத்தை உம்முடைய மாயையைக் கொண்டு சிருஷ்டி செய்கிறீர். இந்தப் பிரபஞ்சத்தில் ஆகாயம் போலப் பற்றுதலற்று விளங்குகிறீர்.

ஓ இராகுநந்தன? ஸர்வ பூதங்களுக்கும் உள்ளிலும் வெளியி லும், சிற்சத்தி மயமாகி ஸர்வ சாக்ஷியாகிறீர், நீரே ஸர்வபரிபூரணர். ஆயினும் அஞ்ஞான முடையவர்களுக்கு வேறுபட்டவர்போல் காணப்படுகிறீர், நீர் பிரபஞ்சமும் ஆகிறீர், பிரபஞ்சத்துக்கு ஆதாரமு மாகிறீர். பிரபஞ்சத்தைப் பரிபாலிப்பவரும் நீரே, அழிப்பவரும் நீரே,

ஓ இரகு ச்ரேஷ்ட! காணப்படும்பொருள், கேட்கப் படும்பொருள், யாவற்றும் நீரே, நினைப்பதும் மறப்பதும் உம்முடைய செயலே, உம்மைத் தவிர வேறொன்று மில்லை."

ஓ ராம! உம்முடைய பிரேரணையால் மாயை உலகங்களை யுண்டு பண்ணுகிறது, காந்தமானது தன்னுடைய சமுகத்துக்கு எப்படி ஜடப் பொருளைக் கிரஹிக்கின்றதோ, அதைப்போலத் தம்முடைய ஸந்நிதானத்தில் மாயையானது உம்முடைய கிருபாவீக்ஷண்யத் தைக் கொண்டு உலகத்தைப் படைக்கிறது. ரூபமில்லாத உமக்கு, உலக இரக்ஷணார்த்தம், இரண்டு தேகம் ஏற்படுகிறது. அவை களுக்கு விராட் சொரூபம், ஸ்தூல சரீரமென்றும், ஸூத்ரம், ஸூக்ஷ்ம சரீரமென்றும் கூறப்படுகிறது. விராட் சொரூபத்தி லிருந்து அநேக அவதாரங்கள் உமக்கு ஏற்படுகின்றன. அந்த அவதாரங்கள் எதற்காக ஏற்பட்டனவோ அதன் காரியங்கள் முடிவான பின்பு அவைகள் விராட் சொரூபத்திலேயே லயமாகின்றன. யாதாம் ஒருவர் அந்த அவதாரத்தில் நடந்த சரித்திரத்தைக் கானம் செய்கின்றார்களோ, அல்லது கீர்த்தனம் செய்கின்றார்களோ அவர் களுக்கே முக்தி யுண்டாகிறது.

இப்போது நீர், முன்பு பிரமதேவரால் பிரார்த்திக்கப் பட்டு, பூமி பாரத்தைக் குறைக்க, அவர் தவத்துக்கு மனமுவந்து, இரகு வம்சத்தில் ஸ்ரீராமராக அவதாரம் செய்தவர்.

ஓ இராம! யாவராலும் செய்ய முடியாத அரிய பெரிய காரியம் யாவற்றையும் தேவர்களுக்காகச் செய்து முடித்தீர். இன்னும் அநேக வருஷம் வரையில இநத மானுட சரீரத்தை ஆசிரயித்திரு ந்து, இந்த லோகத்திலும் இதர லோகத்திலுமுள்ள யாவருக்கும் நன்மையுண்டாகும்படி அரிதான காரியங்களைச் செய்து ஜன்ம கோடிகளின் பாபத்தைப் போக்கி அவர்கள் மேன்மையடையும் மார்க்கத்தை யுண்டுபண்ணி, உலோகங்களைக் கௌரவப்படுத்தப் போகிறீர்.

ஓ லோகநாத! இப்போது நான் கிருதார்த்தனாகவேண்டி இன்றைய தினம் என் ஆச்சிரமத்தில் தங்கிப் போஜனஞ் செய்துகொண்டு நாளையதினம் அயோத்திக்குச் செல்லவேணுமென்று பிரார்த்திக்கிறேன்" என்று கூறினர்.

பாரத்துவாசர் அன்பின் மிகுதியால் கோரிய விஞ்ஞானத்துக்கு ஸ்ரீராமர் மனமுவந்து, அவ்விதமே யென்று கூறி அவர் ஆச்சிரமத்தில் இலக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் மற்றுமுள்ள வானர, இராக்ஷச சிரேஷ்டர்களுடனும் சைனியங்களுடனும் தங்கினர்.

பிறகு ஸ்ரீராமர் இன்றைபோடு பதினான்கு வருடமும முடிவாகிறதை மனதில் நினைத்து, மாருதியைப் பார்த்து, "ஓ அனுமானே! பரதன் நம்மிடத்தில் மிகுந்த பக்தி சிரத்தை யுடையவன்; அவன் அன்பிற்குக் கரையில்லை. நான் அவனுக்குக்கூறியபடி இன்றைபோடு ஈரேழு வருடகாலமும் முடிவு பெற்றுப் போகிறது. அவன் அரைக்ஷணங்கூடச் சகிக்கமாட்டான். ஆகையால் நீ அதிவிரைவாக நந்திக்கிராமம் சென்று என்பிராதாவாகிய பரதனைக்கண்டு, ஸீதை, இலக்ஷ்மணன் நான் மூவரும் க்ஷேமமாக வந்து பாரத்துவாசர் ஆச்சிரமத்தில் அம்முனிவர் வேண்டுகோளுக் கிணங்கித் தங்கி யிருப்பதையுந் தெரிவித்து, ஸீதையை இராவணன் அபகரித்துப் போனது முதல் இராவண வதம் வரையில் நடந்த சங்கதி யாவற்றையும் கிரமமாக அவனுக்கு அறிவித்து, நான் சத்துருக்கள் யாவரையும் வென்று என் மனோரதம் நிறைவேறியபின் ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் வானர சிரேஷ்டர்களுடனும் விபீஷணனுடனும் நாளையதினம் அயோத்திக்கு வருவதைக்கூறி, பரத சத்ருக்கனுடைய க்ஷேமத்தையுந் தெரிந்து கொண்டு அதன்பின் அயோத்திக்குச் சென்று அரண்மனையில் தாய்மார் முதலிய யாவருடைய க்ஷேமங்களையும் விசாரித்துக் கொண்டு, சிருங்கிபேர புரியிலிருக்கும் நமது நண்பனாகிய குஹனைக் கண்டு நம்முடைய க்ஷேமங்களையும் நம்முடைய வரவையும் அவனுக்கு விரித்துரைத்து, விரைவில் இவ்விடம் வந்து சேர்" என்று கூறினர்.

அனுமான், அவ்விதமே யென்றடி பணிந்து, விடைபெற்று மானுட சரீரமடைந்து, தனது தகப்பன் வாயுவைவிட வேகமாக, ஓர் பெரிய ஸர்ப்பத்தைக் கிரஹிக்கச் செல்லும் கருடனைப் போல மிகுந்த மன வெழுச்சியுடன் நந்திக்கிராமம் செல்லப் புறப்பட்டு வரும் மார்க்கத்திலுள்ள சிருங்கிபேர நகரம்வந்து குஹனைக்

கண்டு மனக்களிப்புடன் "ஓ மித்ரா! உனக்கு மித்ரரும், தசரத குமாரருமாகிய ஸ்ரீராமர் ஸீதையுடனும் இலக்ஷ்மணருடனும் க்ஷேமமாக இருக்கிறார். உம்முடைய க்ஷேமத்தை யறிந்து வர என்னை யனுப்பினர். இப்போது தசரத நந்தனர் பாரத்துவாஜ முனிவருடைய ஆச்சிரமத்தில் ஸீதையுடனும், இலக்ஷ்மணருடனும், வானர சிரேஷ்டர்களுடனும், விபீஷணருடனும் சைனியங்களுடனு மிருக்கிறார். நாளையதினம் அயோத்திக்குச் செல்ல வரப்போகிறார். இந்த மங்களகரமான காரியத்தை யுமக்குத் தெரிவிக்கும்படி யெனக்குக் கட்டளை யிட்டார்' என்று கூறிவிட்டு, உடனே மஹாதேஜஸ் அடைந்த வரும், மிருந்த வேகமான நடையுடையவருமாகிய மாருதி, ஆகாய மார்க்கமாகக் கிளம்பிச் சென்று, இராம தீர்த்தத்தையும், ஸரயுஎன்ற புண்ணிய நதியையும் கடந்து அயோத்திமாநகரத்துக்கு ஒருகுரோச தூரத்துக்குத் தெற்கிலுள்ள நந்திக்கிராமம் அடைந்து மரவுரியையும், மான்தோலையும் உடுத்தி, புழுதி யடைந்த சரீரத்துடன் சடைமுடியையுந் தரித்து, ரிஷிகளைப் போல் ஆச்சிரம வாசியாகி காய் கனி முதலிய பல வர்க்கங்களைப் புசித்து, ஸதா இராமஸ்மரணையிலே காலத்தைக் கழித்து, இராமனுடைய இரண்டு பாதுகைகளையே ஸ்ரீராமனெனப் பாவித்துப் பூஜித்து, காஷாய வஸ்திரந் தரித்த மந்திரிகளுடனும், இரகுநந்தனனிடத்தில் பிரியாத அன்பு வாய்ந்த நகரத்து ஜனங்களுடனும், இராஜ்ய சம்பந்தமான காரியங்களைப் பரிபாலித்து, தரும தேவதையே சரீரமெடுத்து வந்து உலகத்தை இரக்ஷிப்பதைப் போல, தயை, ஜீவகாருண்யம், நல்லொழுக்கம், தவம், சீலம் முதலிய நற்குணங்களமைந்த சரீரத்தை வஹித்து தென் திசையையே நோக்கிக் கொண்டிருக்கும் பரதனைக் கண்டு, கரை கடந்த ஸந்தோஷங் கொண்டு, இருகையும் அஞ்சலி கூப்பி நின்று, "இராஜாதி இராஜரான ஓ பரத! யான் கூறும் விஞ்ஞாபனத்தைச் சற்றுக் கவனித்துக் கேட்கவேண்டும். நான் இராமச் சந்திரருடைய தூதன். அவர் தண்டகாரண்யத்தில் தாபதவாசியாக இருக்கிறார் என்று தாங்கள் வஹித்திருந்த வருத்தத்தை ஒழித்து விடுங்கள். அவர் இன்னும் வரவில்லையே யென்று கவலையுடன் படுந்துக்கத்தையும் ஒழியுங்கள். ஸ்ரீராமர் தண்டகாரண்யத்தில் வசிக்கும்போது இராக்ஷச சிரேஷ்டனை இராவணன் ஸீதையை அபஹரித்துச் செல்ல, அவர் வானரர்களுடைய சிநேகத்தைப் பெற்று, அவனைக்கொன்று ஸீதையை யடைந்து

மனக்களிப்புடன் ஸீதையுடனும், இலக்ஷ்மணருடனும் வானர சைனியங்களுடனும் நாளையதினம் இவ்விடம் வருகிறார். இன்று பரத்து வாஜமுனிவர் ஆச்சிரமத்தில் தங்கியிருக்கிறார். தங்களிடம் இந்த விஷயத்தைத் தெரிவித்து தங்களுடைய க்ஷேமத்தையும் தெரிந்து வரும்படி என்னை யனுப்பினார்' என்று விண்ணப்பித்தார்

இரகுசிரேஷ்டரைப் பற்றிய கவலையுடன் விளங்கும் பரதன், மாருதி கூறிய இனிய வார்த்தையைக் கேட்டு ஆனந்த ஸாகரத்தில் மூழ்கினவனாகி, தன்னிடம் தனக்குப் பிரியமுள்ள வசனத்தைத் தெரிவித்த மாருதியைக் கட்டியணைத்து ஆனந்தக்கண்ணீரால் அபிஷேகஞ்செய்து, "ஓ மித்ரா, நீ தேவனோ, மானுடக்கு அமுதத்துக்குச் சமானமாகிய வார்த்தை யென் செவியிற்படச் சாற்றினாய். என்னிடம் கிருபையுடன் வந்து என்நாதனுடைய க்ஷேம ஸமாசாரத்தைத் தெரிவித்து எனக்குப்பிரளித்த உமக்கு மேன்மைபொருந்திய லக்ஷம் பசுக்கள், நீர்வளம் பொருந்திய நூறு கிராமங்கள், ஸர்வாபரணபூஷிதர்களாகிய பதினாறு கன்னிகைகள் இவைகளை வெகுமதியாகத்தருகிறேன். பெற்றுக்கொள்ளும்; என் நாதனாகிய ஸ்ரீராமர் ஆரண்யம் சென்று வெகு வருடங்களாயின; அவருடைய விருத்தாந்தத்தை இப்பொழுதுதான் கேட்கிறேன். உலகத்திலுள்ள மானுடர்களுக்கு ஆனந்தமானது நூறு வருடத்துக்குப் பின்பாவது வந்து சேரும் என்று கூறிய சாஸ்திரக் கருத்தானது இன்று எனக்கு உண்மையாகவே பலிதமாயிற்று. இது ஆச்சரியமே!

இராகவருக்கும், வானரர்களுக்கும் சேர்க்கை யெப்படியுண்டாயிற்று? அதன் வரலாற்றைக் கூறவேண்டும்? உமக்கு மங்களமுண்டாகுக. உம்முடைய வார்த்தையை நான் நம்புகிறேன்" என்று கூறினான்.

மஹாத்மாவாகிய பரதன் இவ்வாறு கூறியவுடன் மாருதி ஸ்ரீராமனுடைய சரித்திரம் யாவற்றையும் விபரமாகத் தெரிவித்தார்.

பரதன் அனுமார் கூறிய ஸ்ரீராமபிரான் லீலையைக்கேட்டு ஆனந்த பரவசனாகித் தனதருகிலிருந்து முன்னவன் விருத்தாந்தத்தைக் கேட்டுச் சந்தோஷிக்கும் சத்ருக்னனைப் பார்த்து "ஓ இரகுபால! இந்த நகரத்திலுள்ள தேவாலயங்களுக்குப் பக்தியிற் சிறந்த பிராமணோத்மர்களைக்கொண்டு அபிஷேக அலங்கார நைவேத்தியங்களும் சிறப்பாக நடத்திப் பலவித காணிக்கைகளும் செலுத்தி, கிராம

தேவதைகளுக்குத் திருப்தி செய்து வைக்கவேண்டும். நமது நகரத்திலுள்ள பாடகர்கள், வைதாளிகர்கள், வந்தியர்கள், தோற்கருவி, துளைக்கருவி முதலிய வாத்தியக்காரர்கள், தாலிகள் முதலினோரும் ஒருங்கே புறப்படவேண்டும்.

இரத கஜ துரக பதாதிகளோடுகூடி சேனைகள் யாவும் ஆயத்தமாகவேண்டும். நகரத்திலுள்ள பிராமணர்கள், தனவந்தர்கள், வியாபாரிகள் முதலிய யாவற்று ஜனங்களும் புறப்படவேண்டும்

இராஜஸ்திரீகள், மந்திரிகள், நம்முடைய நகரத்தில் வந்திருக்கும் பிரதேச மன்னர்கள் யாவரும் மனக்களிப்புடன் நம்முடைய குலக்கொழுந்தாகிய ஸ்ரீராமபிரானுடைய திருவடியைக் கண்டு தரிசிக்கப் புறப்பட்டுப் போக வேண்டுமென்று கட்டளையிட்டான்

தாலனிற் சிறந்த பரதனிட்ட ஆஞ்ஞையைப் பெற்ற சத்ருக்னன், மந்திரி மூலமாக ஏவற்காரர்களை வரவழைத்து நகரமெங்கும் பறைசாற்றி ஸ்ரீராமர் அயோத்திக்கு நாளைய தினம் வரப்போகிறார் என்றும், பட்டணமெங்கும் அலங்கரித்து வைக்க வேண்டுமென்றும், இன்றையத்தினமே யாவரும் இரகுநந்தனரை யெதிர்கொண் டழைக்கச் சென்று அவரைக் கண்டு ஆனந்தங் கொண்டு அவர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து குதூஹலத்துடன் பட்டணத்துக்கு இரகு சிரேஷ்டரை யழைத்துவர வேண்டுமென்றும் தெரிவிக்கச் செய்தான்.

ஒற்றர்கள் பிரசித்தப்படுத்திய ஸ்ரீராம நகரப்பிரவேசத்தை யறிந்த அயோத்திமா நகரவாசிகள் தங்கள் தங்கள் தெருக்களையும் கிரஹங்களையும் மாடமாளிகை வாயில்களையும் கொடிகளாலும் புஷ்ப தோரணங்களாலும் வாழை, கமுகு முதலியவைகளாலும் அலங்காரம் செய்து முத்துக்களாலும் பவளங்களாலும் இரத்னங்களாலும் நிறையப் பெற்ற பூரணகும்பங்களமைத்து அயோத்திப் பட்டணத்தைச் சுவர்க்கலோக மெனப் பிரகாசிக்கச் செய்தார்கள்.

அயோத்திமா நகரமாக்க ளனைவரும் கங்கையில் நீராடிப் பட்டாடையுடுத்தி, மாணிக்கம், வயிரம், முத்து, கோமேதகம், நீலம் முதலியன வைத்திழைத்துக் காந்தியோடு ஜொலிக்கின்ற ஆபரணங்களைத் தரித்து, தேவலோக வாசிகள் நாகலோக வாசிகளென்று கூறப்படும்படியான தேஜஸ்ஸை யடைந்து, இரஜிதத் தட்டிலும், பொற்றட்டிலும், முத்துமாலை, பவளமாலை, புஷ்பமாலை, நாரிகேளம், கதலீபலம், அரிச்சந்தனம், குங்குமம் முதலிய வகைகளை நிறைத்து,

மாணிக்கம் முதலிய நவவித இரத்னங்களையும் காணிக்கையாக எடுத்தமைத்து, ஸ்ரீ புமான்கள் யாவரும் தத்தம் வருணத்துக்குரிய விதிப்படி அக்ஷதை நிறைந்த பூரண கும்பங்களுடன், ஸ்ரீராம தரிசனம் இன்றையதினம் கிடைக்கப் போகிறது என்று தனக்குள் அடங்கா மகிழ்ச்சி கொண்டு வரிசை வரிசையாக இரகுநாதனைத் தரிசிக்க மிக்க ஆவலுடன் கூடிப் பிரயாணப் பட்டார்கள்.

ஸ்வர்ணங்களாலும், ரத்னங்களாலும் அமைக்கப்பட்ட ஆபரணங்களால் அலங்கரிக்கப் பெற்ற லக்ஷம் குதிரைகள், முகபடாம், கிம்புரிக்கட்டுகளுடைய பதினாயிரம் யானைகள், பொன்மயமான சிகரங்கள் வாய்ந்த பதினாயிரம் இரதங்கள் புறப்பட்டன.

அப்பொழுது பரதன், ஸ்ரீராம பாதுகைகளைத் தனது சிரஸின் மீது வைத்துக்கொண்டு கைகளை அஞ்சலி கூப்பினனாய், சக்கரவர்த்திக் குரிய சிறந்த திரவியங்களைச் சேகரித்துக் கொண்டு, தம் பின் சத்ருக்னனுடன் ஸ்ரீராமனைச் சேவிக்க, கால் நடையாகப் புறப்பட்டான். அவனோடு இராஜஸ்திரீகளும் சிவிகையின் மீதாரோகணித்துப் பின் சென்றார்கள்.

அப்பொழுது வெகு தூரத்தில், பிரமதேவருக்காக ஏற்பட்டதும், சூரியனைப்போல் பிரகாசிப்பதும், சந்திரனுக்கு நிகரானதுமாகிய புஷ்பக விமானம் காணப்பட்டது.

அதைக்கண்ட வாயுகுமாரனாகிய மாருதி, நகர வாசிகளைப் பார்த்து, "ஓ ஜனங்களா! அதோ காணப்படுகிற விமானத்தில் தான் வீரர்களாகிய இராமலக்ஷ்மணர்கள், ஸீதை, ஸுக்ரீவன், மந்திரிகளுடன் கூடிய இலங்கைமன்னனாகிய விபீஷணன், இவர்கள் எல்லோரும் ஏறி வருகிறார்கள் பாருங்கள்" என்று கூறினார்.

அனுமார், இதோ தெரிகிற விமானத்தில் இராமர் வருகிறார் என்று கூறிய வார்த்தையைக்கேட்ட புருஷர்கள், ஸ்திரீகள், சிறுவர்கள், காளையர், விருத்தாப்பியர் முதலிய யாவரும் தங்களுக்குண்டாகிய மனக்களிப்பினால் ஏகோபித்துப்போட்ட இராம! இராம! என்ற கூச்சலானது ஆகாயத்தை அளாவியது. தேரின்மீதும், யானையின் மீதும், குதிரையின் மீதும் இருக்கும் ஜனங்கள், அவரவர்களேறிவந்த வாகனங்களைவிட்டுக் கீழே யிறங்கி, ஆகாய மார்க்கத்தில் தோன்றும் விமானத்திலிருக்கும் இராமச்சந்திரனை, வானத்தில் சஞ்சரிக்கும் சந்திரனைப் பார்ப்பதுபோல் பார்த்தார்கள்.

பரதன் தன் சிரஸின்மீது கைகூப்பி ஆகாயமார்க்கமாக வரும் விமானத்தில் மேருமலையில் விளங்கும் சூரியனைப்போல் விளங்கும் இரகுவீரனை நோக்கி வணக்கத்துடன் நமஸ்கரித்தான்.

இதைக்கண்ட இரகுநந்தனன், புஷ்பக விமானத்தைப் பூமியி லிறங்கும்படி யுத்தரவிட அந்த விமானம் அந்தரத்தில் நின்று கீழிறங்கியது.

அப்பொழுது பரதன், சத்ருக்னனுடன் இராமனிடம் சென்று, சந்தோஷங்கொண்டு மறுபடியும் நமஸ்கரித்தான்.

இரகுநாதன் தன்னடியில் வந்து வணங்கிய பிராதாவாகிய பரதனை, வெகு காலத்துக்கு முன் பார்த்தவரானதால் அதிகப் பிரியத்துடன் அவனை வாரியணைத்துக் கட்டித்தழுவி யெடுத்துத் தன் மடி மீது வைத்து உச்சிமுகர்ந்து முத்தமிட்டு தன் கண்களிலிருந்து பெருகும் ஆனந்த பாஷ்பத்தால் அவன் சரீரமனைத்தும் நனைத்து, "ஆ என் அன்பிற்குரிய குலக்கொழுந்தே" என்று மொழிந்து தழுவி அணைத்தார்.

பின்பு பரதன் ஸ்ரீராமனை விட்டு நீங்கி இலக்ஷ்மணனிடம் சென்று தன் பெயரைக் கூறி அவனை ஆலிங்கனம் செய்துகொண்ட பின், ஸீதையிடம் சென்று தன்னை முன்னர் தெரிவித்துக் கொண்டு அன்புடன் வணங்கினான்.

அதன்பின், பரதன், விபீஷணன், ஸுக்ரீவன், ஜாம்பவான், யுவராஜனாகிய அங்கதன், மைந்தன், த்விவிதன், நீலன், ரிஷபன், ஸுஷேணன், நளன், கவாக்ஷன், கந்தமாதனன், சரபன், பனஸன், முதலியோர்களைக் கண்டு ஆலிங்கனம் செய்து கொண்டான். அவர்கள் யாவரும், அகமகிழ்ச்சி யுடையவர்களாகி, பரத மஹாராஜனை க்ஷேமம் விசாரித்தார்கள்.

பிறகு பரதன், ஸுக்ரீவனை நோக்கிப் பக்தியுடன் "ஓ ஸுக்ரீவ! உன் ஒத்தாசையால் ஸ்ரீராமருக்கு ஜெயமுண்டாயிற்று. இராவணன் மரணமடைந்தான். நீ எங்கள் நால்வருக்கும் ஐந்தாவது பிராதாவாகிறாய் என்று மகிழ்வுடன் கூறினான்.

அப்பொழுது சத்ருக்னனும், இராம லக்ஷ்மணர்களை வணங்கிய பிறகு ஸீதையிடம் சென்று வினயத்துடன் நமஸ்கரித்தான்.

ஸ்ரீராமன், சோபை யில்லாதவளும், சோகத்தால் தளர்ந்தவளுமாகிய கௌசல்யா தேவியை யடைந்து, ஓ தாயே யென்று

கூறி, அவள் மனம் திருப்தியாகும்படி, அவள் பாதாரவிந்தங்களில் விழுந்து நமஸ்கரித்தார். பிறகு கைகேயி, ஸுமித்ரை இந்த இரண்டு தீாய் மார்களையும் நமஸ்கரித்து ஓரிடத்தமர்ந்தார்.

அச்சமயம், பரதன் பக்தியுடன் நன்றுபூசிக்கப்பட்ட பாதுகைகளை ஸ்ரீராமர் பாதங்களில் சேர்த்து, ஓ பிரபுவே! என்னிடம் ஒப்புவித்த இராஜ்யத்தை இப்போது தங்களிடம் ஒப்புவித்தேன். நான் கிருதார்த்தனாயினேன், என் ஜன்மம் ஸபலமாயிற்று, என் மனோரதம் பிரயோஜனமுள்ளதாயிற்று. ஓ ஜெகன்னாத! தாங்கள் அயோத்திக்கு வந்துசேர நான் செய்த புண்யமே புண்யம், இதை விட வேறு எனக்கு என்ன வேண்டிய திருக்கிறது. ஓ லோகநாத! தங்களுடைய கிருபையால், பொக்கிஷசாலை, தான்யசாலை, ஸேனை முதலியவைகள் முன்னையவிடப் பத்துமடங்கு அதிகமாகி யிருக்கின்றன என்று வணக்கத்துடன் விண்ணப்பித்து அவர் திருவடியில் சாஷ்டாங்கமாகத் தண்டமிட்டான்.

இரகுநந்தனர், தன்னடி வணங்கித் தெரிவித்துக் கொண்ட பரதனைத் தன் மடிமீதிருத்திக் கொண்டாடினார். அச்சமயம் வானர சிரேஷ்டர்கள் யாவரும் சந்தோஷத்துடன் ஆரவாரித்தார்கள்,

பிறகு இரகு நாதன் தாய்மாருடனும், ஸீதையுடனும், இலக்ஷ்மணன், பரதன், சத்ருகனனுடனும் வானர சிரேஷ்டர்கள் முதலிய யாவர்களுடனும் புஷ்பக விமானத்தின் மீதேறி, பரதனுடைய ஆச்சிரமம் சென்றார்.

இராமர் ஆச்சிரமம் சென்றவுடன் புஷ்பகவிமானத்தைப் பார்த்து, "ஓ விமானமே! அளகாபுரிக் கதிபனான குபேரனிடம் சென்று அவனிடம் இருக்கலாம்" என்று கட்டளை யிட்டார். அச்சமயம் அங்கு பிரவேசித்த வசிஷ்டமுனிவரைக் கண்டு, தேவேந்திரன் பிரகஸ்பதியினுடைய பாதத்தில் வணங்குவதுபோல் ஸ்ரீராமர் தனது குருவாகிய அம்முனிவருடைய உபயசரணாரவிந்தங்களில் ஸீதை, பரதன், இலக்ஷ்மணன், சத்ருக்னன் முதலியோருடன் நமஸ்கரித்து, அவரால் ஆசிர்வதிக்கப் பெற்று, அந்த ஆசிரியருக்கு ஓர் திவ்யாசனமளித்து, அவரை யந்த ஆசனத்தின் மீது வீற்றிருக்கச் செய்து தானும் தம்பிகளுடன் ஆசிரியர் சமீபத்தில் வீற்றிருந்தார்.

---

## 15-வது சருக்கம்.

---

ஸ்ரீராமர் பரதன் ஆச்சிரமத்தில் ஓர் திவ்யாசனத்தில் எழுந்தருளி யிருக்கும்பொழுது, பரதன் தனது தாய் கைகேயியுடனும், குலகுருவாகிய வசிஷ்ட முனிவருடனும், இராமச்சந்திரரிடம் வந்து, "ஓ ராமா! நீர் என்னிடம் ஒப்புவித்த இராஜ்யத்தை மறுபடியும் உம்மிடம் கொடுக்கிறேன். அங்கீகரிக்கவேண்டும் என்று வணக்கத்துடன் நமஸ்கரித்துப் பிரார்த்தித்தான்.

ஸர்வேசனாகிய ஸ்ரீராமப் பிரபு! மானுடத்தன்மை யடைந்து, மாயையை ஆச்ரயித்துப் பரதனிடமிருந்து இராஜ்யத்தை ஒப்புக்கொள்ள இசைந்தார்.

ஞான சொரூபரும், ஸுகசொரூபரும், ஆனந்த சொரூபரும், பரமாத்மாவாகவும், ஆகிய எந்தத் தேவனால், பிரமதேவன், சத்திய லோகத்தையும், தேவேந்திரன் தேவலோகத்தையும், காலன் எமலோகத்தையும் வகிக்க அடைகிறார்களோ அந்தத் தேவனாகிய ஸ்ரீராமர் விளையாட்டாக இந்த மானுட இராஜ்யத்தை ஆள்வதற்கு மனமுவந்தார்.

விளையாட்டாகப் பிரமாண்ட முதலியவைகளைச் சிருஷ்டி செய்து காக்கும் இலக்ஷ்மிகாந்தனுக்கு இந்த அயோத்தி நகரத்தின் ஆளுகையில் என்னபயன்? ஆயினும், தன்னைப் பஜிப்பவர்களின் மனோரதத்தைப் பூர்த்திசெய்ய வேண்டி மானுட சரீரத்தை அடைந்து ஸ்ரீராமனாக உருவெடுத்து லீலையாகப் பூலோக இராஜ்ய பரிபாலனத்தையும் அபேக்ஷித்தார்.

இரகுநந்தனர் குறிப்பை யறிந்த பரதன், வசிஷ்ட முனிவர் அநுமதியின் பேரில் ஸ்ரீராம பட்டாபிஷேகத்துக்குரிய பொருள்களைச் சேகரிக்கும்படி மந்திரி ஸுமந்திரனுக்கு ஆஞ்ஞாபித்தான்.

பிறகு முன்னதாகப் பரதன், நாவிதனை வரவழைத்து சடைமுடியை யெடுத்துக்கொண்டு ஸ்நானம் செய்ய, பிறகு இலக்ஷ்மணனும், சத்ருக்னனும் ஸ்நானம் செய்தார்கள். அதன் பின் வானர சிரேஷ்டனாக ஸுக்ரீவனும், அரக்கர் கோனாகிய விபீஷணனும் ஸ்நானம் செய்தார்கள்.

ஸ்ரீராமர் சடைகளைக் களைந்து ஸ்நானம் செய்து பட்டு வஸ்திர முடுத்து, மகரகுண்டல கடக கேயூரந் தரித்து, வயிரக் கண்டிகை மதாணிப்பதக்கங்க ளணிந்து, பூமாலைபூண்டு பரிமள சந்தன களப கஸ்தூரி முதலியன பூசி, அரியாசனத்தின் மீதமர்ந்தார்.

மிகு மேதாவியாகிய பரதன் ஸ்ரீராமருக்கும் இலக்ஷ்மணருக்கும் ராஜோபசார மரியாதைகளைச் செய்தான்.

இராஜஸ்திரீகள் ஸீதைக்கு மங்களஸ்நானம் செய்வித்து, சிறந்த பட்டாடை யுடுத்தி நவரத்னங்களமைத்த ஆபரணங்கள் பூட்டி, வாசனை பொருந்திய மலர்மாலை சாத்தி, திலகமிட்டு ஆசனத்தமரச் செய்வித்தார்கள்.

நற்குணமுடையவளும், புத்திரனிடம் அன்புள்ளவளுமாகிய கௌசலாதேவி ஸந்தோஷத்துடன், வானர ஸ்திரீகள் யாவருக்கும் அலங்காரம் செய்வித் தமர்த்தினள்.

பிறகு பரதன், சிரேஷ்டமான புத்தியுடைய ஸுமந்திரனை நோக்கி இரதம்கொண்டு வர ஆஞ்ஞாபிக்க, அவனும் சூரியப் பிரகாசத்துக்கு நிகரான இரதத்தைப் பூட்டிக்கொண்டு வந்து முன்னால் நிறுத்தினன்.

ஸத்யத்தையும், தருமத்தையும் முக்கியமாகக்கொண்ட இராமர் தேரின்மீதேறினர். ஸுக்ரீவன், அங்கதன், அனுமான், விபீஷணன், முதலிய யாவரும், பட்டு வஸ்திர முடுத்தி, திவ்யாபரணங்களணிந்து, தேஜோமயமான அலங்காரஞ் செய்துகொண்டு, தேர், குதிரை, யானை இவைகளின்மீதாரோகணித்து ஸ்ரீராமருக்கு முன்னகச் சென்றார்கள்.

ஸீதை, வானரசிரேஷ்ட ஸ்திரீகளாகிய தாரை, ருமை முதலியவர்கள் புடைசூழ விமானத்தின் மீதேறிச் சென்றாள்

இரகு சிரேஷ்டர். தேவர்கள் சூழப் பச்சைவர்ணமுள்ள இரதத்தின் மீதேறிச் செல்லும் இந்திரனை யொப்ப, சத்ருக்னன் ரத்னப்பிடி யமைந்ததும், மிகுந்த காந்தியுடையதுமாகிய வெண்குடை பிடிக்க, இலக்ஷ்மணன் சமீபத்திலிருந்து சாமரைபோட, தேவர்களும், ஸித்தர்களும், திவ்ய ரூபமுடைய ரிஷிகளும் தோத்திரம் பண்ண, பரதன் சாரத்யஞ் செய்து தேரூர்ந்து பேரி, சங்கு, மிருதங்கம், சூளம், பணவம், திண்டி, படகம், முரசு, குடமுழா

முதலிய வாத்தியங்கள் கோஷிக்க, அயோத்திமா நகரத்துக்குச் சென்றார்.

நகரத்திலுள்ள புண்ணியசாலிகளாகிய ஜனங்கள் யாவரும், மேகத்தைக்கண்ட மயில்போல், குதூகலங்கொண்டு வெயில்வீசும் ரத்ன கிரீடங்கள் மின்னவும், மாணிக்கம், வயிரம் முதலியன இழைத்துப் பிரகாசிக்கானின்ற ஆபரணங்கள் துலங்கவும், தூர்வாதள ச்யாமள வர்ணச்சரீரம் சோபிக்கவும், செந்தாமரை மலர்போன்ற நேத்திரங்கள் கருணைபொழியவும், தேரின்மீது விளங்கி வருகின்ற இரகு நந்தனனைக்கண்டு ஸந்தோஷித்தார்கள்; ஆடினார்கள்; பாடினார்கள்; அளவற்ற ஸ்தோத்திரஞ் செய்தார்கள்.

ஒளிவீசும் ரத்னங்கள் கோத்த பட்டுநூல்களால் நெய்யப்பட்ட மஞ்சள் பட்டாடை யணிந்தவரும், விலை யுயர்ந்த முத்துக்களால் செய்யப்பட்ட ஹாரங்கள் தாங்கிய மார்பினரும், பருத்தபுஜங்களுடையவருமாகிய இரகு நந்தனனை அயோத்தி நகரவாசிகளாகிய சகல ஜனங்களும் பார்த்தார்கள்.

ஸுக்ரீவன் முதலிய வானர சிரேஷ்டர்களால் சேவிக்கப் படுகிறவரும், சூரியனுக்கொப்பான தேக காந்தியுள்ளவரும், கஸ்தூரி கலந்த சந்தனம் பூசப்பட்ட சரீரமுடையவரும், வணக்கமுள்ளவரும், கற்பகத்தருவின் புஷ்பமாலை யணிந்தவருமாகிய இராமனை அயோத்தியில் வசிக்கும் மன்மதனை யொத்த காளைப்பருவமுள்ள புருஷர்கள் கண்டார்கள்.

இரகுநாதன் வந்தாரென்பதைக் கேட்ட மங்கைப் பருவமுள்ள ஸ்திரீகள் யாவரும், ஸந்தோஷமுடைய முகமுடையவர்களாகி, வீட்டுக் காரியங்களை விட்டுவிட்டு, ஸர்வாபரண பூஷிதர்களாக உப்பரிகையின் மீதேறி, யாவருக்கும் நேத்திரானந்தத்தைக் கொடுக்கும் ஓர் ஆச்சரியகரமான அழகு வாய்ந்த ரூபலாவண்யமுடைய ஸ்ரீராமனைப் பார்த்து, புன்னகையோடு கூடிய முகத்தினராய் அவர் மீது புஷ்பங்களை வாரியிறைத்து இந்த உருவம் தெய்வீகத்தன்மையுடையதுதான் என்று சேவித்து நின்றார்கள்.

ஸ்ரீராமர், மற்றொரு பிரமதேவரைப் போல் மந்த ஹாஸத்தோடும், கருணைவாய்ந்த பார்வையோடும், ஜனங்களைப் பார்த்துக் கொண்டே, இந்திரன் மாளிகை போல் அலங்கரிக்கப்பட்டுள்ள

தந்தையின் திருமாளிகைக்கு இரதத்தை மெதுவாகவே நடத்திக் கொண்டு சென்றார்.

சக்கரவர்த்தி வசித்துவந்த மாளிகை வாயிலின் முன் இரதம் சென்றவுடன், ஸ்ரீராமன் இலக்ஷ்மணருடன் தேரை விட்டிறங்கி அரண்மனைக்குட் சென்று, கௌசல்யை, கைகேசி, ஸுமித்திரை இத்தாயார்களின் திருவடித் தாமரைகளில் ஸாஷ்டாங்கமாகப் பக்தியுடன் நமஸ்கரித்தார்.

ஸீதை தேரைவிட்டிறங்கித் திருமாளிகையினுட் சென்று சக்கரவர்த்தி மனைவியாரின் செந்தாமரை மலர் போன்ற ஸ்ரீபாதங்களில் வணக்கத்துடன் நமஸ்கரித்தெழுந்து அவர்களுடைய வாழ்த்துப் பெற்று அந்தப்புரத்தில் யாவரும் புகழ வீற்றிருந்தாள்.

பிறகு சத்தியமே புகழெனக்கைக்கொண்ட ஸ்ரீராமர், அன்பே தவமெனக் கைபாடிய பரதனைப் பார்த்து, "ஓ பரத! ஸம்பத்துக்கள் யாவற்றாலும் நிறைந்த நமது மாளிகையில், ஸுக்ரீவன், விபீஷணன் முதலியோர் ஸுகமாக வசித்திருக்கும்படியான ஏற்பாட்டைச் செய்" என்று சொன்னார்.

பரதன் அப்படியே யென்று வணங்கி ஸுக்ரீவன், விபீஷணன், வானர சிரேஷ்டர்கள், குகன் முதலிய மித்திரர் யாவர்களுக்கும் அவரவர்களும் தக்க சௌகரியத்துடன் வசிக்கத் தகுந்த மாடமாளிகைகளைத் திட்டம் செய்து அவைகளில் அவர்களை வசிக்கும்படிச் செய்தான்.

பிறகு பரதன், ஸுக்ரீவனுடனும், மந்திரியுடனும் வசிஷ்ட முனிவரிடம் சென்று ஸ்ரீராமர் பட்டாபிஷேகத்தைக் குறித்து ஆக வேண்டிய விஷயத்தை ஆலோசிக்க, அவர் திவ்யமான ஓர் லக்கின மேற்படுத்தி அபிஷேகத்துக்கு வரவேண்டிய கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களை முதலில் வரவழைக்க வேணுமென்று கூறினார்.

பரதன், ஸுக்ரீவனைப் பார்த்து, "ஓ ஸுக்ரீவ! பட்டாபிஷேகத்துக்கு நான்கு ஸமுத்திரங்களிலுமிருந்து பரிசுத்தமான ஜலத்தைக் கொண்டுவரப் பராக்ரமமும் வேகமுமுள்ளவர்களைப்பார்த்து அனுப்ப வேணும்" என்று கூறினார்.

ஸுக்ரீவன், அவ்விதமே யென்று களிப்புடன் ஜாம்பவானையும், அனுமானையும், அங்கதனையும், ஸுஷேணனையும் நான்கு ஸமுத்திரத்துக்கும் அனுப்பினான்.

அவர்கள் நால்வரும் ஆனந்தங்கொண்டு வாயுவைவிட வேக மாகச் சென்று, ஸ்வர்ண குடங்களில் ஜலத்தை நிரப்பிக்கொண்டு வந்தார்கள்.

ஸத்ருக்னன், மந்திரிகளுடன் வஸிஷ்ட முனிவரிடம் சென்று பட்டாபிஷேகத்துக்குப் பரிசுத்தமான கங்கை வந்து சேர்ந்ததைத் தெரிவித்தான்.

பரிசுத்தரும், யாவற்றிலும் மேன்மை பொருந்தியவருமாகிய வஸிஷ்ட முனிவர், தவத்திற் சிறந்த ரிஷீஸ்வரர்களுடனும் வேதோத்தமரான பிராமணர்களுடனும், அரண்மனைக்கு வந்து, இந்திரன் கொலு மண்டபத்திற்கு மேலாக அலங்கரித்திருக்கும் ஸபாமண்டபத்தில் ஏற்படுத்தியிருக்கும், நவரத்னங்களை இழைத்துக் காந்தியோடு பிரகாசிக்கும் ஓர் அரியாசனத்தின் மீது, ஸ்ரீமகாலக்ஷ்மியைப் போல விளங்காநின்ற ஸீதையுடன், ஸ்ரீராமரை வீற்றிருக்கச் செய்தார்.

வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, கௌதமர், வான்மீகி, இவர்களும் அநேக ரிக்விக்களும், சிறந்த பிராமணர்களும் பட்டாபிஷேக சாலையில் வந்து கூடி மகுடாபிஷேகச் சடங்குகளை வேதத்தில் விதித்த கிரமப்படி ஸங்கற்பம், விக்னேஸ்வர பூஜை, புண்ணியாகவாசனம், கடஸ்தாபனம் முதலியன செய்து ஓமாதி காரியங்களும் முடித்து ஈஸ்வர திருப்தி தேவ திருப்திகளாகிய ஆராதனைகளைச் செய்து முடித்த பின்னர் வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, கௌதமர் வான்மீகி இவ்வைந்து ரிஷி சிரேஷ்டர்களும், ரத்ன கலசத்தில் தர்ப்பை கூர்ச்ச துளஸி மாலிகாவுடன் வேதமந்திர உச்சாடனஞ்செய்து விதிப்படி யேற்பட்டிருக்கும் புண்ய தீர்த்தத்தைக் கொண்டு, அஷ்ட வஸுக்கள் இந்திரனுக்கு அபிஷேகம் செய்வது போல, பரதன் ஸ்வேதவர்ணக்குடை பிடிக்க, லக்ஷ்மணன், சத்ருக்னன் கவரிவீச, அனுமான் அரியணை தாங்க, அங்கதன் உடைவாளேந்த, ஸுக்ரீவன், விபீஷணன் சாமரம் இட, அரியணைமேல் ஸீதையோடு விளங்கும் ஸ்ரீராமருக்கு அபிஷேகஞ் செய்தார்கள்.

வஸிஷ்டர், நவரத்னங்க ளிழைத்த முடியை வேளாண்மை மாந்தர் எடுத்துக்கொடுக்க ஸீதா ஸமேதராக வீற்றிருக்கும் ஸ்ரீராமருக்குச் சூட்டினார், தேவதுந்துபி வாத்யம் முழங்கிற்று. தேவ கந்தருவர்கள் பாடினார்கள். அப்ஸர ஸ்திரீகள் நிருத்தனம் செய்தார்கள். தேவர்கள் ஆகாயத்தில் நின்று புஷ்பமாரி பொழிந்தார்கள். தேவர்கள், லோகபாலர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள்.

இந்திரன் பக்தியுடன் இரத்னம், மணி, முத்து, ஸ்வர்ணம் முதலியன கொண்டமைக்கப்பட்ட ஹாரத்தை இராமருக்குச் சாத்தினான்.

தூர்வாதளம் போன்ற சியாமள வர்ணரும், தாமரைத்தளம் போன்ற நீண்ட கண்ணுடையவரும், கோடி சூரிய உதயத்துக் கொப்பாக விளங்கும் கிரீடமணிந்தவரும், மன்மதன் போன்ற ரூப லாவண்ய முடையவரும், மஞ்சள் பட்டாடை யுடுத்தினவரும், பலவித திவ்ய ஆபரணங்கள் நிறைந்தவரும், திவ்யபரிமள கலவை கஸ்தூரி சந்தன முதலியன பூசியவரும், திரண்டு நீண்ட இரண்டு புஜங்களுடையவரும், தனது இடதுபாகத்து இடது தொடையில், ஸ்வர்ணச் சாயலைப்பெற்று, ஸர்வாபரண பூஷிதளாகி, ஒரு கையில் செந்தாமரைப் புஷ்பத்தைத் தரித்து, வீற்றிருக்கும் ஸீதையை இடது கையால் அணைத்துக்கொண் டிருப்பவருமாகிய ஸ்ரீராமரைப் பார்த்து, ப்ரு தேவர்களுடன் கூடிய ~~துதிக்கின்றன~~ "ஓ ஸ்ரீராமப் பிரபுவே! இப்போது பிரத்தியட்சமாகச் சக்தியுடன் கூடியவரும், நீலோற்பலம் போன்ற சியாமள வர்ணரும், மனோஞ்ஞரும், கிரீடம், ஹாரம், தோள்வளை இவைகளை ஆபரணமாக அணிந்தவரும், ஸிம்மாசனத்தி லிருப்பவரும், மிகுதியான காந்தி யுள்ளவருமாக விளங்கும் நீர், ஆதி, மத்தி, அந்தமில்லாதவர். நீர் ஒருவரே மாயையால் உலகங்களைப் படைக்கிறீர், பரிபாலிக்கிறீர், ஸம்ஹரிக்கிறீர். அந்த வுலகங்களில் நீர் பற்றுதலடைகிறதில்லை. எப்போதும் நித்ய சுகத்தை விரும்புகிறவர்கள் பூஜிக்கத் தகுதி பெற்றவர்

சரணம் புகுந்த பக்தர்களை இரக்ஷிப்பதற்காக, மச்ச, கூர்ம, வராக, நரஸிம்ம, மானுடர் முதலிய அபார சக்தியுடைய அவதாரங்களை யெடுத்து லீலை செய்கிறீர். அப்போதெல்லாம் இவ்வாறு கானம் செய்யப்படுகிறீர்.

உம்முடைய அம்சத்தால் உலகம் யாவற்றையும் படைத்து, அது நிலைபெற அதன்கீழ் ஸர்ப்பராஜனாக இருந்து தாங்குகிறீர். மேலுலகிலும், கீழுலகிலும் விளங்குகிறீர். ஜலரூபமாக இருந்து உலகத்தைப் பலவிதமாகப் பரிபாலிக்கிறீர். அக்னி ரூபமாயிருந்து உலகத்திலுள்ளவர்கள் புசிக்கும் பதார்த்தங்கள் யாவற்றையும் பாகம் செய்கிறீர். பஞ்சபூதங்களின் சொரூபமாக நின்று அகண்டமான உலகத்தைக் காப்பாற்றுகிறீர்.

சூரியன், சந்திரன், அக்னி இவர்கள் மத்தியிலிருக்கும் தேஜஸ்ஸும், சித் சொரூப சரீரங்களின் தேஜஸ்ஸும், சரீரம் படைத்தவர்களின் தைரியம், சௌர்யம், ஆயுள் இவையாவும் உம்முடைய அம்சமாகிறது.

பிர்மா, விஷ்ணு, சிவன் என்ற நாமபேதத்தால் வாதம் செய்பவர்களுக்கு நீர் வேறுபட்டவராகத் தோன்றுகிறீர். இரண்டற்றதும், வேறுபடாததுமாகிய பிரமமென்று உம்மை வேதம் நிச்சயிக்கிறது. ஸத், அஸத் என்ற பிரிவையடைந்தவர் நீரே, உம்மைத்தவிர வேறொன்றும் விளங்கவில்லை.

சராசரம் முதலிய கணக்கற்ற சிருஷ்டியில் உண்டானது, உண்டாகியிருப்பது, உண்டாகப் போகிறது யாவற்றும் உம்மைத் தவிர ஒன்றும் காணப்படவில்லை. ஆகையால் நீர் பரத்துக்குப் பரமாகியவர்.

ஜனங்கள் யாவரும் உமமுடைய மாயையால, பரமார்தமாவாகிய உம்முடைய தத்வத்தைத் தெரிந்துகொள்ளவில்லை.

உம்முடைய பக்தர்களின் தரிசனத்தால், நிர்மலமான மனமுடையவர்களுக்கு மட்டும், உத்திருஷ்டமும், ஏகமும், உம்மைச் சார்ந்ததுமாகிய தத்வம் விளங்குகிறது.

ஞானமுடையவன் உம்மைக் குறித்து இந்த ரூபத்தையே பஜிப்பானாகில், துக்கத்தில் நின்று விடுபடுகிறான்.

ஓ தேவ! பிரமதேவர் கொடுத்த வரத்தால் இராவணன், எனக்கும் தேவர்களுக்குமுள்ள சௌக்கியங்களைக் கெடுத்தான். உம்முடைய அநுக்கிரகத்தால் அவை யாவும் எங்களுக்குக் கிடைத்தன. துஷ்டனும் எங்களுக்குச் சத்ருவுமான இராவணனை வதைசெய்தீர்.

ஓ பிரபுவே! நான் செய்த இந்த ஸ்தோத்திரத்தை தம்மிடம் பக்தியுடையவர்கள், பாராயணம், சிரவணம் செய்தாலும், எழுதினாலும் உம்முடைய அநுக்ரஹத்தால் சௌக்கியம் யாவற்றையும் அடைந்து உம்முடைய ஸ்தானத்தையும் அடையக் கிருபை செய்ய வேண்டும்,” என்றும் பிரார்த்தித்தான்.

பிறகு, அந்தரவாசிகளாகிய தேவர்கள் ஸ்ரீராமரைப் பார்த்து “ஓ விஷ்ணு சொரூபியே! பூலோகவாசியாகிய ரிஷிகள், முனிகள், அந்தணர்கள் முதலியோர் கொடுக்கும் ஹவிஸுகளை, அசுரனும்,

துஷ்டனுமாகிய இராவணன் அபஹரித்தான். அக்கொடியனைத் தற்காலம் நீர் வதைசெய்தீர். இனி நடக்கப்போகிற யாவற்று யாகங்களில் ஏற்படும் ஹவிர்ப்பாகங்கள் தம்முடைய அநுக்கிரஹத்தால் எங்களுக்கு முன்போலவே கிடைத்து வருமென்பதில் சந்தேகமில்லை" என்று கூறி ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

அதன்பின், பிதிர்க்கள் இராமசந்திரனைப் பார்த்து "ஓ மஹாத்மாவே! கயை முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் மானுடர்கள் எங்களுக்காகக் கொடுக்கும் பிண்டங்களை நாங்கள் பெறாமல் எங்களைப் பிடித்து ஹிம்ஸித்து, இந்த இராவணன் முதலிய இராக்ஷசர்கள் பலாத்காரமாகப் பெற்று வந்தார்கள். இந்தத் துராத்மாவாகிய தசகண்டனைத் தாங்கள் வதைசெய்து விட்டபடியால், இனி நாங்கள் யாதொரு தடையுமில்லாமல் மானுடர்கள் எங்களுக்குத் திருப்தியாகச் செய்யும் பிதிர் கருமத்தில் ஏற்படும் பிண்டங்களை யாதொரு தடையுமில்லாமல் நாங்களே யடையச் சுதந்திரமுடையோர்களாயினோம்" என்று கூறி ஸ்தோத்திரித்தார்கள்.

பின்னும் யக்ஷர்கள் "ஓ பகவானே! இந்தத் துஷ்டனாகிய இராக்ஷச காவலன், எங்களை ஊழியஞ் செய்யக் கட்டளையிட்டிருந்தான். நாங்கள் அவ்விதமே அவனால் ஏவப்படும் எல்லா வேலைகளையும் துக்கத்துடன் செய்து வந்தோம். அந்தக் கொடிய துஷ்டனாகிய தசகண்டனை அவன் புத்ரமித்ரர்களுடன் தாங்கள் வதம் செய்தீர்கள். இனி நாங்கள் யாதொரு துக்கமுமில்லாமல், சுயேச்சையாகச் சுகித்து, வாழ்வதற்கு யாதொரு தடையுமின்றி, நிர்ப்பயமாயிருக்க மார்க்கம் ஏற்பட்டு விட்டது. நாங்கள் துக்க வலையினின்று விடுபட்டோம்" என்று கூறி வணக்கத்துடன் ஸ்தோத்திரம் புரிந்தார்கள்.

அதன்பின் கந்தருவர்கள், "ஓ இராம! நாங்கள் ஸங்கீத சாஸ்திரத்தில் மிகத்திறமை யடைந்தவர்களாகி, தங்களுடைய லீலையாகிய அமுதத்தைக் கானஞ் செய்து கொண்டு, அந்த ஆனந்தமாகிய அமுதப் பிரவாகத்தால் திருப்தியடைந்தவர்களாகவும், பூரணர்களாகவும் முந்தி யிருந்தோம். பிறகு துராத்மாவாகிய இராவணனால் ஹிம்ஸிக்கப்பட்டு அவன் புகழைப் பற்றியே கானம் செய்தும் அவனைப் பூஜிப்பதிலேயே காலங்கழித்தும் வந்தோம். அதனால் நாங்கள் மிகவும் மனவருத்த மடைந்து நொந்து கொண்டிருந்தோம்.

இப்பொழுது தாங்கள் மேற்கூறிய அரக்கனை வதஞ்செய்து எங்களுடைய துயரத்தைப் போக்கி எங்களை இரக்ஷித்தீர்கள்" என்று கூறி இரகு நந்தனன் கீர்த்தியைப் புகழ்ந்து பாடினார்கள்.

இவ்விதமாக உரகர், ஸித்தர், கின்னரர், கிம்புருஷர், மருத்துக்கள், வஸுக்கள், முனிவர்கள், ரிஷிகள் யாவரும் ஸ்ரீராமரிடம்வந்து தரிசனஞ் செய்து, நேத்திரானந்தங் கொண்டு, தனித்தனியாய் ஸ்தோத்திரஞ்செய்து, இரகு நந்தனால் கொண்டாடப்பட்டு, தத்தமிருப்பிடஞ் சென்றார்கள்.

ஆகாய மார்க்கத்தில் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, ஸந்தோஷமுள்ள மனமுடைய தேவேந்திரனும் தேவர்களாலும், முனிவர்களாலும் கொண்டாடப்பட்டு, ஸீதை, இலக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன், அனுமான், விபீஷணன் முதலியோர்கள் சேவிக்க, ஸியாமள வர்ணமுடைத்தாய், புன்முறுவலோடு கூடிய திருமுகத்துடனும், கோடி சூரியனைப் போன்ற பிரகாசத்துடனும் ஸீதா ஸமேதராய் அயோத்தியில் அத்தாணிமண்டபத்தில் அரியாசனத்தில் ஸ்ரீராமர் நன்கு விளங்கினர்.

---

## 16-வது சருக்கம்.

இராஜ சிரேஷ்டராகியவரும், ஜனங்கள் யாவருக்கும் சுகத்தைக் கொடுப்பவருமாகிய ஸ்ரீராமன் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்துகொண்டவுடன், பூமியானது இருவித பலன்களாலும் நிறைந்து விளங்கிற்று, விருக்ஷங்கள் பலன்களைக் கொடுத்தன. வாசனையில்லாத புஷ்பங்கள் வாசனையுள்ளதாகப் பிரகாசித்தன.

இரகுநந்தனர், முதலில் பிராமணர்களுக்கு இளங்கன்றையுடைய லக்ஷம் பசுக்களும், நூறு ரிஷபங்களும், லக்ஷங் குதிரைகளும் தானமாகக் கொடுத்தார். பிறகு முப்பது கோடி ஸ்வர்ணம், வஸ்திரம், ஆபரணம், இரத்னம் இவைகளை வேதமோதினோர், ஸாதுக்கள் முதலியோருக்கு வழங்கினர்.

பக்தவத்ஸலனான இராகவன், சூரியகாந்திக்குச் சமானமான சோபையுடையதும், ஸ்வர்ணங்களாலும், ரத்னங்களாலும் அமைந்துள்ள ஓர் மாலையை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தார்.

இரகுநந்தனர், ஸ்வர்ணமயமான தோள்வளைகளை அங்கதனுக்குக் கொடுத்தார்.

இரகுகுல சிரேஷ்டர், சிறந்த ரத்னங்களாலும், ஸ்வர்ணங்களாலும் அமைக்கப்பெற்ற ஓர் திவ்விய சந்திரஹாரத்தைப் பிரீதியுடன் ஸீதையிடம் கொடுத்தார்.

ஜனகமஹாராஜன் குமாரியாகிய ஸீதை தனது கழுத்திலணிந்திருந்த ஹாரத்தை யெடுத்துக் கையில் வைத்துக்கொண்டு வானர சிரேஷ்டனாகிய அனுமானையும், தனது பர்தாவாகிய ஸ்ரீராமனையும் பார்த்தாள்.

குறிப்புணரும் இரகுவீரன், அந்த வைதேஹியைப் பார்த்து "ஓ ஸீதே! ஓ சிரேஷ்டமான குணமுடையவளே! நீ யாருடைய பணிவிடையில் திருப்தியடைந்தாயோ அவனிடத்தில் உன்கையில் கழற்றி வைத்திருக்கும் ஹாரத்தைக் கொடு" என்று கூறினர்.

ஸீதை, ஸ்ரீராமச்சந்திரன் முன்னிலையில் அந்த ஹாரத்தை அனுமானிடங் கொடுத்தாள்.

ஆஞ்சனேயன் அந்த ஹாரத்தைப் பெற்று, கௌரவத்துடன் அடிவணங்கி கைகூப்பி நின்றான்.

பிறகு ஸ்ரீராமன், தனது சமீபத்தில் கைகூப்பி நிற்கும் மாருதியை நோக்கி, அவருடைய சிறந்த பக்தியை முன்னிட்டுச் சந்தோஷமடைந்து, "ஓ அனுமானே! உனக்கு நான் பிரஸன்னனாகி விட்டேன். உனக்கிஷ்டமான வரத்தைக் கேள்; மூவுலகிலும், தேவர்களாலும் அடையக் கூடாததாயிருந்தபோதிலும் கொடுக்கிறேன்" என்றார்.

ஆஞ்சனேயனும், சந்தோஷமுள்ளவனாய், இராமச்சந்திரனை வணங்கி, "ஓ இராம! தங்களுடைய நாமத்தை ஸ்மரணஞ்செய்வதைத் தவிர வேறொன்றிலும் எனக்குத் திருப்தி யுண்டாகவில்லை. ஆகையினால் தங்களுடைய நாமமானது எதுவரையில் பூமியில் வழங்குகிறதோ அதுவரையில், நான் தங்களுடைய நாமஸ்மரணை செய்துகொண்டு பூமியிலிருக்கிறேன். அதுவரையில் என் சரீரமும் பூமியி லிருக்கட்டும். ஓ இராஜ சிரேஷ்டரே! இதுவே யெனக்கு வேண்டிய வரம்," என்று தெரிவித்துக் கொண்டார்.

ஸ்ரீராமர் ஆஞ்சனேயன் வேண்டுகோளுக் கிணங்கி "ஓ மாருதி! நீ யவ்விதமாகவே சரீரத்துடன் முக்தி பெற்றவனாக வுலகத்திலிருக்

ஜானகி, "ஓ அனுமானே! நீர் எந்த விடத்திலிருந்த போதிலும் என்னுடைய ஆஞ்ஞையால் சுகம்யாவும் உம்மையடையட்டும்" என்று அன்புடன் கூறினாள்.

இவ்வாறு ஸ்ரீராமனும், ஸீதையும் சொன்னவுடன் அனுமார் மிகுந்த சந்தோஷமுடையவராகி ஆனந்த பாஷ்பம் இரு கண்களினின்று பெருக, ஸீதாஸமேதராகிய இரகுநந்தனரை அடிக்கடி நமஸ்கரித்து விடை பெற்றுக் கொண்டு வெகு பிரியத்துடன் தவஞ்செய்வதற்கு இமயமலை சென்றார்.

அதன்பின் இரகுவீரர், தன்னிடம் அஞ்சலி செய்து கொண்டு களிப்புடன் நிற்கும் குகனை நோக்கி, "ஓ நண்ப! நீ சிறிற்சிறந்தாம், மனோஞ்ஞமாகிய சிருங்கிபேரபுரம் சென்று, விஞ்ஞானத்துடன் கூடி ஸதா என்னையே ஸ்மரித்துக் கொண்டு ஸுகஜீவியாயிருந்து சகல போகங்களையும் அநுபவித்து முடிவில் என்னுடைய ஸாரூப்ய பதத்தையே யடையக்கடவாய்" என்றுரைத்து, அவனுக்குத் திவ்வியமான ஆபரணங்களையும், இராஜ்யங்களையும் பரிசளித்து அவனைக்கட்டி ஆலிங்கனம் செய்து கொண்டார்.

குகன் மிகுந்த ஸந்தோஷத்துடன் இராமனை அடிவணங்கி உத்தரவு பெற்றுக் கொண்டு தன்னிருப்பிடம் சென்றான்.

பிறகு, இராகவன், அயோத்திக்கு வந்திருந்த மற்றுமுள்ள வானர சிரேஷ்டர்களுக்கு விலைமதிக்காத ஆபரணங்களையும், ஆடைகளையும் கொடுத்து உபசரித்தார். ஸுக்ரீவன் முதலிய வானரர்கள் யாவரும் இராமனால்உபசரிக்கப் பெற்று ஸந்தோஷகரமாய் கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள்.

இலங்கை மன்னனாகிய விபீஷணனும் இராமனால் புகழப்பெற்று, விலை யுயர்ந்த ஆடை ஆபரணங்கள் பரிசளிக்க ஏற்று மனமகிழ்ச்சியுடன் சத்துருவற்ற தனது நகரமாகிய இலங்காபுரிக்குச் செல்ல விடைபெற்றுக்கொண்டு குதூகலத்துடனும் மந்திரியுடனும் தன்னிருப்பிடம் சென்றான்.

எல்லோரிடத்திலும் வாத்ஸல்யமுள்ள இராகவர், மநுநீதி கோணாது இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்.

இலக்ஷ்மணன் இராஜ்ய அதிகாரத்தில் விருப்பமில்லாதவனாயினும், அவருக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். இலக்ஷ

மணர், சிறந்த பக்தியுடன் இராமஸேவை செய்வதிலேயே ஊக்க முடையவராக இருந்தார்.

ஸ்ரீராமர், பரமாத்மாவாயினும், கர்மங்களுக்குப் பிரபுவாயினும், நிர்மலனாயினும், விகாரமற்றவனாயினும், எப்போதும் தன்னானந்தத்தில் சந்தோஷமுடையவனாயினும், பரமானந்த சொரூபனாயினும், மானுடசரீரத்தை யடைந்து மிகுதியான பொருட் செலவுகளுடைய அஸ்வமேதயாகம் முதலிய புண்ணிய கருமங்களை, உலகத்தார் இவ்விதம் செய்ய வேண்டுமென்று தெரிந்து கொள்வதற்குச் செய்து காட்டியும், ஸதா பகவானைப் பூஜித்தும் வந்தார்.

இராமன் அரசாளும்போது, விதவைகள் ரோதனம் செய்யவில்லை. துஷ்ட ஜெந்துக்களின் பயமுண்டாகவில்லை. வியாதிகளாலுண்டாகும் துன்பங்களும் கிடையா. உலகத்தில் திருடர் பயமுமில்லை. ஒருவித அனர்த்தமுமில்லை. மூப்புள்ளவர்கள் ஜீவிக்கச் சிறுவர்கள் மரணமடைவதில்லை. எல்லோரும் ஸ்ரீராமனைப் பூஜிப்பதில் ஆவலுள்ளவர்கள். யாவரும் அவனைத் தியானிப்பதில் அக்கறையுள்ளவர்கள்.

மேகங்கள் காலந்தவறாமல் மாதம் மும்மாரி பொழிந்தன. பிரஜைகள் தங்களுக்குரிய தர்மங்களில் ஆவலுடையவர்களா யிருந்தார்கள்.

வருணாச்சிரம தர்மங்கள் புறக்கணிக்காமல் நன்று அநுஷ்டானம் செய்யப்பட்டு வந்தன.

இரகுநந்தனரும், தன் குடைக்கீழ்வாழும் பிரஜைகளைத் தந்தையானவன் தன் வயிற்றிலுண்டான புத்திரனைக் காப்பதுபோலக் காப்பாற்றி வந்தார்.

சகல லக்ஷணங்கள் பொருந்தினவரும், சகல தர்மங்களையும் அறிந்தவரும், தர்மாத்வாவுமாகிய ஸ்ரீராமன், பதினோராயிர வருஷம் வரையில் ஸீதையுடன் அயோத்திமா நகரத்தில், நீதி தவறாமல் அரசாக்ஷி புரிந்து வந்தார்.

ஓ பார்வதி! மேற்கூறியதே ஸ்ரீராமனுடைய திவ்ய சரித்திரம். இதற்கே அத்யாத்மராமாயணம் என்று பெயர். இது மிக்க இரகசியமான பொருள். பரிசுத்தமானது. மிகுதியான புண்ணியத்தைப் பெறச் செய்வது. தனம், தான்யம், ஐஸ்வரியம், வித்தை, ஆயுள்,

ஆரோக்கியம், ஜயம், விஞ்ஞானம், மோக்ஷம் முதலியவைகளைத் தடையில்லாமற் கொடுக்கக்கூடியது.

ஸாவதானமான இந்திரியங்களையுடையவனும், சந்தோஷங் கொண்ட மனமுடையவனுமாகிய மானுடன், பக்தியுடன் சிரவணஞ் செய்தாலும், பாராயணஞ் செய்தாலும், தான் அபேக்ஷிக்கும் அபீஷ்டங்களனைத்தையும் அடைந்து, சகல பாபங்களினின்றும் நின்று விடுபடுவான்.

பொருளில் விருப்பமுடைய மானுடன், பரிசுத்தமான மனத்தோடு கூடியிருந்து இராமனுடைய பட்டாபிஷேகத்தைச் சிரவணஞ் செய்வானாகில் மிகுதியான பொருளையடைவான்.

எவன் ஒருவன் இந்த இராமாயணத்தை, முதலிலிருந்து கடைசி வரையில் பாராயணம் செய்கிறானோ, அவன் சகல நற்குணங்களும் பொருந்திய சற்புத்திரனை அடைவான்.

இந்த அத்யாத்ம ராமாயணத்தைச் சிரவணம் செய்தால் இராஜாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமையென்ற அஷ்ட ஐஸ்வரியமும் பொருந்திய பூமியை அடைவான். மேலும், சத்துருக்களைச் ஜெயித்து அவர்களாலுண்டாகும் அவமதிப்பை யடையாமல், ஜெயமுள்ளவனுவான்.

ரஜோ ரூபமான தோஷமுள்ள (மூன்று நாள் விலக்குள்ள) ஸ்திரீயாயிருந்தாலும், ஸ்ரீராமனிட மீடுபட்டு, இந்த இராமாயணத்தைச் சிரவணம் செய்தால், சிரேஷ்டனுகிய புத்திரனை அடைவாள். மேலும் பதிவிருதையாகவும் ஜனங்களால் பூஜிக்கப்பட்டவளாகவும் ஆவாள்.

ஸ்திரீகள் இந்த அத்யாத்ம ராமாயணத்தைச் சிரவணம் செய்தால், தீர்க்காயுளுள்ள புதல்வர்களைப் பெற்று, அதனுல் இகபரசாதகங்களையும் பெற்று எல்லோராலும் பூஜிக்கப்பட்டவர்களாவார்கள்.

இதைச் சிரவணஞ் செய்யும் ஸ்திரீ மலடியாயினும், அழகு வாய்ந்த புத்திரனைப் பெறுவாள்.

எச்சாதியிற் பிறந்தவனாயினும், ஒருவன் இந்த இராமாயணத்தைச் சிரத்தையுடன் கேட்பானாகில் அவன், காமாதியாறு குற்றங்களையும் ஜெயித்து, ஸம்ஸாரக் கடலினின்று விடுபட்டு, துன்பம் யாவற்றையும் போக்கிக்கொண்டு, யாதொரு பயமுமின்றி இராமனிடம் பக்தியுடன் பேரின்பத்தை யடைபவனுவான்.

இந்த இராமாயணத்தைச் சிரவணம் செய்பவர்கள் தேவர்களால் கொண்டாடப்படுவார்கள். விக்கினம் யாவற்றினின்றும் விடுபடுவார்கள். சிறந்த ஸம்பத்துகள் யாவுமடைவார்கள்.

இந்த இராமாயணத்தைத் தினந்தோறும் பூஜித்து நமஸ்காரம் செய்பவர்கள், எல்லாப் பாவங்களினின்று விடுபட்டு விஷ்ணுவினுடைய ஸ்தானத்தை யடைவார்கள்.

இந்த அத்யாத்ம ராமாயணத்தைப் பக்தியுடன் சிரவணம் செய்பவர்கள், பாராயணம் செய்பவர்கள், பாராயணம் செய்விப்பவர்கள், இவர்களுக்கு ஸ்ரீராமனுடைய கிருபாவீக்ஷண்யமுண்டாகும்.

ஸ்ரீராமரே பரப்பிரும ஸ்வரூபர். அவரே ஸந்தோஷ மடைந்தால் உலகத்தில் பெறக்கூடாத காரியம் என்ன விருக்கிறது? ஆகையால், தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், இவைகளில் எதை விரும்புகிறனோ அதை அவன் இந்த அத்யாத்ம ராமாயண பாராயணத்தால் அடைகிறான். மேலும், ஆயுளையும், ஆரோக்கியத்தையும் பெறுகிறான். கற்பகோடி காலமாகச்செய்த பாபங்களும் அவனை விட்டுப் போகின்றன. தேவர்கள், மஹரிஷிகள், பிதுருக்கள், சூரியன் முதலிய நவக்கிரகங்கள் யாவரும் அவனிடம் ஸந்தோஷிக்கிறார்கள். இந்த அற்புதமாகிய ராமாயணத்தை யாவராயினும், பாராயணம் செய்தாலும், சிரவணம் செய்தாலும் எழுதினாலும் அவர்களுக்கு அதே ஜன்மத்தில் முக்தி; மறுஜென்மம் கிடையாது.

ஓ தேவி! நாம் அறிந்தவரையில், விஷ்ணுவின் ஸ்வரூபியாகிய ஸ்ரீராமன் தாரகப்பிரம்மமென்றும் அவனுடைய சரித்திரம், மிக அற்புதமான இரகசிய தத்துவங்களை வெளிப்படுத்தக்கூடியதென்றும், அதை மிகவும் சுருக்கமாக உனக்குக் கூறினேனென்றும் நீ யறிந்து உன் சந்தேகத்தைவிட்டு உண்மையான மெய்ப்பொருளை நாடுவாயாக" என்றார்.

# உத்தர காண்டம்.

## 1-வது சருக்கம்.

இரகுகுலத்தி லுற்பவித்து, அதிபராக்ரமத்தை யடைந்து, யுத்தத்தில் இராவணன் முதலிய கொடிய செய்கைகளை யுடைய இராக்ஷசர்களைக் கொன்று, தேவர், முனிவர், முதலியோருடைய துன்பங்களைப் போக்கிய பிறகு அயோத்தியில் பட்டாபிஷேகம் செய்து கொண்ட ஸ்ரீராமன் பூமியில் எவ்வளவு காலம் வரையில் வாசஞ் செய்திருந்தார்? கடைசியில் இந்த மானுட தேகத்தை எவ்விதம் விட்டார்? ஓ தேவ தேவரே! அடியேனுக்கு மேற்கண்ட விஷயங்கள் காதலாமலகம் போலத் தெள்ளிதி லுணரப் பணித்தருளல் வேண்டுமென்று, ஸ்ரீபார்வதிதேவி, ஸாக்ஷாத்பரமசிவத்தை வணங்கிக் கேட்டனள்.

ஸ்ரீமஹாதேவர், தன்னடியில் வணங்கிக் கேட்ட பார்வதியை அன்புடனோக்கி, "ஓ தேவி! ஸ்ரீராமன் இராக்ஷசர்களை வதை செய்து அயோத்திக்குச் சென்று இராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு ஸீதையுடனும், தம்பிமார்களுடனும், குருகலத்துடன் வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில், அகஸ்தியர், தனது சிஷர்களுடனும், அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், ஜமதக்கினி, பரத்துவாஜன், வசிஷ்டன், விஸ்வாமித்திரன், முதலிய ஏழு முனிவர்களுடனும், ஸ்ரீராமனைப் பார்ப்பதற்காக அயோத்திக்குச் சென்று அரண்மனை வாயில் காப்போனைக்கண்டு, 'ஓ காவலர்களே! நீங்கள் சக்கரவர்த்தி திருமகனைக்கண்டு உங்கள் அரண்மனை வாயிலில், அகஸ்தியர்முதலிய முனிவர்கள் யாவரும் வந்து தங்களைப் பார்க்க மிக்க ஆவலுடன் காத்திருக்கிறார்களெனத் தெரியப்படுத்துங்கள்" என்று கூறினார்.

அதைக் கேட்ட வாயிலாளர், விரைவுடன் ஸ்ரீராமரிடம் வந்து நமஸ்கரித்து "ஓ பிரபுவே! தங்களைத் தரிசனஞ் செய்வதற்காக, அகஸ்திய முனிவர் ஸப்த முனிவர்களுடனும் வந்து வாயில் புறத்தில் காத்திருக்கின்றனர்" என்று தெரிவித்தனர்.

இதை யறிந்த ஸ்ரீராமன் "ஓ துவாரபாலக! யாதொரு தடையு மில்லாமல் அம் முனிவர்கள் இவ்விடம் வர வேண்டும்," என்று ஆஞ் ஞாபிக்க, அவ்வாறே துவாரபாலகர்களால் பூஜிக்கப் பெற்று அம் முனிவர்கள் அலங்காரமுள்ள அரண்மனைக்குட் பிரவேசித்தார்கள்.

அகஸ்தியர் முதலிய முனிவர்கள் தன்னைநாடி வருவதைக் கண் ணுற்ற ஸ்ரீராமன், ஆசனத்திருந்து சடிதியிலெழுந்து கைகூப்பிநின்று அர்க்கியம் பாத்யம், முதலியவைகளாற் பூஜித்து உபசரித்து அவ ரவர்களுக்கும் தக்க ஆசனங்களைக் கொடுத்து வீற்றிருக்கச் செய் தார்.

முனிவர்கள் ஸ்ரீராமன் தங்களிடம் காட்டிய அன்பின் மிகுதி யைக் கண்டு சந்தோஷங்கொண்டு திவ்வியாசனங்கள் மீது வீற்றிருந் தார்கள். பிறகு முனிவர்கள் இரகுநந்தனனைப் பார்த்து, "ஓ ரகுகுல சிரேஷ்ட! தேவர்களுக்கும், எங்களைப் போன்ற முனிவர்களுக்கும், மற்றுமுள்ள ஸாதுக்களுக்கும், காலனைப் போலிருந்த இராக்ஷசேஸ் வரனுகிய இராவணன், கும்பகருணன் முதலிய அதி பாதகர்களையும், தசக்கிரீவன் குமாரனுகிய இந்திரஜித்தையும், வதஞ்செய்து இப் பூமண்டலத்தில் எக்காலத்திலும் நிலை பெற்ற புகழைத் தாங்கின தங் களுடைய கோதண்டத்தின் பெருமை வியக்கத் தக்கதே! அதிலும் மேகநாதனை எமலோகத்துக் கனுப்பின விந்தை, தேவர், நாகர், மானுடர் முதலிய மூவராலுந் துதித்தற்குரியது. அது எங்களுக் கெல்லாம் ஸதா ஆனந்தத்தை யுண்டுபண்ணுகிறது.

ஓ மஹா பாகுவே! தாங்கள் முன்னம் எங்களுக்கு அபயஸ்தம் கொடுத்தபடி சத்துருக்களாகிய இராக்ஷசர்களைக் கொன்று கிரு தார்த்தத் தன்மையை யடைந்தீர், தங்களுக்குப் பல்லாண்டு ஸுப முண்டாகுக" என்று ஆசி மொழி கூறினார்கள்.

ஆத்ம ஸ்வரூபத்யானம் செய்பவர்களாகிய முனிவர்களின் வார்த்தையைக் கேட்ட ஸ்ரீராமன், ஆச்சரியமடைந்து, அஞ்சலி செய்து அவர்களை நோக்கி "ஓ முனி சிரேஷ்டர்களே! மூவுலகையுஞ் ஜெயித்து கயிலையையும் பேர்த்த அதிபராக்ரமசாலியாகிய இராவண னையும், கும்பகருணன் முதலிய போர்வீரர்களையும் விட்டு, மேக நாதனைப் பற்றி யிவர்களைவிட மேலாகப் புகழ்ந்ததற்குள்ள காரணம் யாது" எனக் கேட்டா

மிகுந்த கீர்த்தி பொருந்திய அகஸ்திய முனிவர், மஹாத்மா வாகிய ஸ்ரீராமனுடைய வார்த்தையைக் கேட்டு, "ஓ இராகவ! இலங் கேசனுகிய இராவணனுடைய உற்பத்தியையும், அவன் தவம்செய்து பெற்ற வரத்தின் மஹிமையையும், அவன் தம்பி கும்பகருணனுடைய வரப் பெருக்கையும், தசக்கிரீவன் குமாரனுகிய மேகநாதனுடைய தவத்தையும், அவனுடைய ஒப்பற்ற பராக்கிரமச் செய்கையையும் விபரமாகத் தாங்கள் கேட்பீர்களானல், நாங்கள் வியந்து கூறினது தங்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியெனப் புலப்படும்," எனச் சாற்றினர்.

இரகுநந்தனர், "ஓ தபோ சிரேஷ்டரே! அப்படியானல், அரக் கர்களுடைய உற்பத்தியையும், இராவணன், கும்பகருணன், மேக நாதன் முதலினோர்களுடைய தவப் பெருமைகளையும், அவர்களின் வீரச் செய்கைகளையும் கேட்க ஆவலுள்ளவனுக இருக்கிறேன. அவைகளைக் கிரமமாகச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

இதைக் கேட்ட முனி சிரேஷ்டரான அகஸ்தியர் இராக வனை நோக்கி, "ஓ இரகுநந்தன! கமலாசனத்தில் வீற்றிருக்கும் பிரமதேவர், இந்த அண்டங்களையும் அவைகளிலுற்ற ஜீவகோடி களையும் சிருஷ்டித்த போது, இரக்கமற்ற யாவரையும் அரக்கர்க ளாகச் சிருஷ்டித்தார். அவர்களில், பிரகேதி, ஏதி என்ற இரு வர்கள் சகோதரர்களாக உற்பத்தி யானர்கள். அவர்களில் பிர கேதி யென்பவர் நீதிமார்க்கத்தைப் பெற்று ஸாதுக்கள் தன் மையைப் பூண்டொழுகினர். ஏதியென்பவன், கொடிய செய்கை யுடையவனுகி வாழும் நாளில், பிரபையை மணந்து வித்து கேச னைப் பெற்ருன். அந்த வித்துகேசனுக்கு சந்திரியின் மகள் தார மாயினள். அவ்விருவரும் காமக்கடலி லாழ்ந்து லீலையில் மிக்க விருப்ப முடையவர்களாகி தங்களிடம் உற்பத்தியாகும் சிசுக் களைப் பிறந்த இடத்திலேயே போட்டு விட்டுச் சென்ருர்கள். முதன் முதற் பிறந்த ஸுகேஸன் என்னும் சிசுவைக் காட்டில் அலறி யழும்படி விட்டுச் சென்றபோது, அக்குழந்தை திக்கற்றதாய்த் தனியே கிடந்து அழுவதைக் கண்ணுற்ற பார்வதி அக்குழந்தையின் இளமைப் பருவத்தை நோக்கிப் பரிதாபப்பட்டு இறைவனுகிய பரம சிவத்தை நோக்கி, "ஓ தேவ! இக்குழந்தையின் பரிதாப நிலைமையை நோக்கி அதைக் காப்பாற்ற வேண்டும்," என்று வேண்ட, பரமன்

அக்குழந்தை யீன்றதாயின் பருவத்தையும், ஒப்பற்ற வீரத்தையும் அடையக் கடவதென்று வரமளித்தார். உடனே அந்த ஸுகேசன் தாயின் பருவத்தை யடைந்து, மிகுந்த பலத்தையும் பொருந்தி வாழும் நாளில், கந்தருவப்பாவை தெய்வவதியை மணந்து ஸுகித்திருந்திருந்தான். அவர்களுக்கு, மாலியவான், ஸுமாலி, மாலி யென மூன்று குமாரர்க ளுற்பத்தியானார்கள்.

அம்மூவரும், பிரமதேவரை நோக்கி அரியதவம் புரிந்தனர். பிரமதேவர், அவர்கள் தவத்தைப் புகழ்ந்து, அவர்கள் முன்னிலையிற் பிரசன்னராகி யவர்கள் சகல புவனத்துள்ளோர்களையும் ஜெயிக்கவும், நீடூழிகாலம் வாழவும் வரமளித்தார். அவ்வரத்தைப் பெற்று ஒப்பற்ற ஜெய சீலர்களாகி இலங்கையை மயனைக்கொண்டு தேவலோகத்துக்குச் சமானமான நகரமாக்கி அதில்பிரவேசித்து வாழும் நாளில், அம்மூவரும், கந்தருவப்பாவை தருமதை பெற்ற மூன்று மாதரையும் முறையே மணம்புரிந்தனர்.

அவர்களில் மாலியவானுக்கு, வச்சிரமுட்டி 1, பெரும் பாக்கன் 2, துன்முகன் 3, ஸுதகந்தன் 4, நியாயகோபன் 5, மத்தன் 6, உன்மத்தன் 7, என்ற எழுவரும் பிறந்தார்கள். ஸுமாலிக்கு, கைகசி 1, வனசவிலோஜனை 2, என்ற இரண்டு குமாரத்திகளும் பிறந்தார்கள். மாலிக்கு, அனலன் 1, அனிலன் 2, அரன் 3, சம்பாதி 4, என்ற நான்கு குமாரர்கள் பிறந்தார்கள்.

மேற்கண்ட மூவரும், புத்திர ஸம்பத்துடனும் அளவற்ற பாக்கியத்துடனும், தங்களுக்கு உலகில் யாரும் நிகரற்றவர்களாய்வாழும் நாளில், தேவர்கள் முதலியயாவரையும் ஒருங்கே ஹிம்ஸைப்படுத்தி ஆராத்துயரத்தி லாழும்படி செய்தார்கள்.

இந்திரன் முதலிய தேவர்கள் அம்மூவர்களாற்படும் துயரஞ் சகிக்க முடியாமல், கயிலையை யடைந்து, பரமசிவத்தின் திருவடியில் வணங்கி, தங்களுக்கு நேரிட்டிருக்கும் ஆபத்தைத் தெரியப்படுத்தி அரக்கர்கள் செய்யுந் துன்பத்திலிருந்து தங்களை விடுவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

பரசுபாணி, இந்திரன் முதலிய தேவர்களை நோக்கி "ஓ தேவர்களே! ஸுகேசன் வழிவந்த அரக்கர்கள் நம்மை யடைந்தோர்களான தால், அவர்கள் எவ்விதமான பிழையைச் செய்தபோதிலும், நா அவர்களைக் கொல்லமாட்டோம். அவர்களைக் கோறல் புரிதலில்

வல்லவன் திருமாலெனக் கூறி, அவர்பாற்சென்று தெரிவித்துக் கொள்ளுங்களென்று விடை பகர்ந்தார்.

இதைக் கேட்ட இந்திராதி தேவர்கள், திருப்பாற் கடற் சென்று, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை ஸ்தோத்திரித்தார்கள். திருமால் அவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி, வெளிவந்து அஞ்சாதீர்களென்று அபயஸ்தங் கொடுத்தருளினார்.

இந்திரநாதன் முதலிய வானவர்கள், பஞ்சாயுதனிடம் விடை பெற்று தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

மாலியவான், ஸுமாலி, மாலி இம்மூவர்களும், மேகவூர்தி முதலிய தேவர்கள், பின்னை நாரணனிடம் சென்றதையும், அவர் இடுக்கண் தீர்த்தருளுவதாக வாக்களித்ததையும், ஒற்றர் மூலமாகத் தெரிந்து இந்திரன் பேரிற் கோபங்கொண்டு, எத்திசையிலுமுள்ள அரக்கவீரர்களை ஒருங்கே வரவழைத்து, யுத்த சன்னத்தர்களாகி, தேவலோகஞ் சென்று அகோரமான யுத்தஞ் செய்ய ஆரம்பித்தனர்.

இதை யறிந்த வானவர்கோன் ஸ்ரீ வாசுதேவனுக் கறிவிக்க, மாயவன் கெருடாரூடராக எழுந்தருளி, பொன்னுடு வந்து, காண்டாவனுடன் தேவர்களை அழிக்கப் போர்க்கோலங் கொண்டு வந்த அரக்கர்களுடன் போர் புரிந்தார். அந்த யுத்தத்தில் மாலி யென்பவன் மாயனால் கொல்லப்பட, எஞ்சிய மாலியவான், ஸுமாலி யிருவரும் மறுபடியும் போர்க் கோலங் கொண்டு மஹாவிஷ்ணுவுடன் யுத்தஞ்செய்து அவரால் தோற்கடிக்கப்பட்டு, இலங்கை நகரத்தை விட்டு, பாதாள லோகஞ் சென்று தங்கள் குடும்பத்தார்களுடன் அங்கு வசித்துவந்தார்கள். இலங்காபுரிப் பட்டணமானது ஆள்வாரின்றிப் பழாய்க் கிடந்தது. இஃதிவ்வாறிருக்க,

பிரமதேவர் குமாராகிய புலஸ்திய முனிவர், மஹாமேருவின் பக்கஞ்சென்று தவஞ்செய்து கொண்டிருக்கும் நாளில், அவர் தவஞ் செய்யும் வனத்திற் கருகாமையில் திரணவிந்து முனிவர் ஆச்சிரமம் ஒன்றேற்படுத்தி அதில் வசித்து வந்தனர்.

புலஸ்திய முனிவர் தவஞ்செய்யும் ஆச்சிரமத்தில் தேவகன்னிகளும், கந்தருவ கன்னிகளும், மற்றுமுள்ள கன்னிகளும் வந்து, வீணாகானம், நிருத்தனம், வாத்திய கோஷம், நீராடல், பூக்கொய்

தல் முதலிய பலவித விநோதங்களைச் செய்து, அம்முனிவர் தவத்துக் கிடையூறு விளைத்து வந்தார்கள்.

புலஸ்திய முனிவர் தேவகன்னிகளின் விளையாட்டினால் தன்னுடைய தவத்துக்குப் பங்கம் வருவதை யுணர்ந்து இனி யெவரேனும் இவ்வாச்சிரமத்திற்குள் புகுந்து விளையாடுவார்களானால், உடனே யவர்கள் கருப்பந்தரிக்கக் கடவர்கள் என்று சாபமிட்டார். இதனை யறிந்த கன்னிமார்கள் யாவரும் அவ்விடம் வரா தொழிந்தார்கள்.

ஒருதினம் இச்சாபத்தினை யறியாத திரணவிந்து முனிவரின் குமாரத்தி அந்த ஆச்சிரமத்தை நாடி, தன்னுடன் கூடி விளையாடுந் தேவகன்னிகளைத் தேடிச்சென்று, அங்கு ஒருவரையுங் காணாது மயங்கி அம்முனிவர் வசிக்கும் இடத்திற்குச் சென்றாள். சென்றவுடனே அக்கன்னி கருப்பச் சின்னமடைந்து தனது மேனியானது வெளுத்து, கண்களும் பசப்படைந்து கருப்பவதியானாள். இதன் காரணத்தை யறியாத திரணவிந்து ரிஷியின் குமரி, தன்றந்தைபாற் சென்று தனக்கு நேரிட்டதைத் தெரிவித்து வணங்கி நின்றாள்.

திரணவிந்து மஹரிஷி தனது கற்பிற் சிறந்த குமாரத்தி யறிவித்ததை ஞான திருஷ்டியால் நோக்கிப் பார்த்து நிகழ்ந்ததைத் தெரிந்து அக்கன்னியை யழைத்துக் கொண்டு புலஸ்திய முனிவரிடம் சென்று, தனது புத்திரிக்கு நேரிட்டதை யறிவித்து அப்பெண்ணை அம்முனிவருக்கே தத்தம் செய்தார். பிறகு அப்பெண், அம்முனிவரிடமிருந்து அவருக்குத் தக்க பணிவிடை செய்து வந்ததை முன்னிட்டு முனிவர் மனமகிழ்ந்து உபயகுலமும் விருத்தியாகும்படியான ஓர் சற்புத்திரனை நீ யடையக்கடவா யென்று அப்பெண்ணுக்கு வரமளித்தார். அவ்வாறே யப்பெண், உலகங்களிற் பிரசித்திபெற்ற விச்சிரவஸ் என்ற புத்திரனைப் பெற்றாள். அப்புதல்வன் நாளுக்குநாள் ஓங்கிவளர்ந்து, நற்செய்கை, ஈஸ்வரபக்தி, முதலிய குணங்கள் வாய்ந்து வருவதை யறிந்து, பரத்துவாஜ முனிவர், தேவவன்னி யென்னுந் தனது குமாரியை, அக்குமாரனுக்கு விவாஹம் செய்து கொடுத்தார்.

தேவவன்னி, தன் கொழுநனை தெய்வமெனக் கருதி யவர் திருவுளத்துக் கேற்றவாறு பணிவிடை செய் தொழுகும் நாளில், சகலலோகங்களிலுமுள்ள யாவரும் களிப்பெய்த ஒரு புத்திரனைப் பெற்

றுள். அப்புதல்வனை, பிரமன், இந்திரன், தேவர்கள், முதலியவர்கள் வந்து பார்த்து, சந்தோஷம் மேலிட்டு அக்குமாரனுக்கு வச்சிர வணன் எனப் பெயரிட்டு ஆசீர்வதித்துச் சென்றனர்.

வச்சிரவணன், சகலவேத சாஸ்திரங்களின் உண்மைப்பொருளை, தாதைபாற் கசடறக் கற்றுணர்ந்து, தவஞ்செய்வதில் ஆவலுடையவனாகி, குற்றமற்ற புண்ணிய தீரத்தையடுத்த வனத்திற்சென்று, சுத்த ஜலமருந்தியும், வாயுபக்ஷணம் பண்ணியும் நின்று பல்லாண்டு தவம் புரிந்தான். பிரமதேவர் அவன் தவத்தை மெச்சி யவன்பால் பிரசன்னமாகி, மூவுலகத்திலு முன்னை யொப்பவரில்லை யென்று கூறி, இந்திரன் முதலிய உலக பாலகர்களை யொப்ப நீயும் ஒரு திக்குப் பாலகனாக விளங்குவாயென்று வாயளித்து, சூரியன் தேசைப்பார்க்க அகண்டதும், புரவிபற்றதும், மனோகதியைப் போன்ற கதியுடையதும், பதினான்குலோகத்திலு முள்ளோர் வந்தேறினும் இடங்கொடுப்பதுமாகிய புஷ்பக விமானம் ஒன்றையும் அளித்துச் சென்றனர்.

வச்சிரவணன், பிதா மகனிடத்தில் வரம்பெற்று புஷ்பக விமானத்தின் மீதேறி, தந்தையிடம் வந்து தான் பெற்ற வரத்தை யவருக்குத் தெரிவித்து, "தந்தையே! எனக்குப் பிரமதேவர் வரத்தை மட்டுங் கொடுத்தாரே யொழிய இந்த இடத்தில் வசியென ஆஞ்ஞாபிக்கவில்லை. ஆகையால் நான் வசிக்கத்தக்க இடத்தைத் தாங்களே பணித்தருளல் வேண்டும்," என்று வணங்கிக் கேட்டான்.

தாதையாகிய விச்சிரவஸு, தனது அருமைப் புதல்வன் கூறிய வார்த்தையைக் கேட்டு, புளகாங்கிதம் மேலிட்டுத் தனயனைநோக்கி, "ஓ மைந்த! முன்னம், அரக்கர் கோனாகிய மாலியவானுக்கு, விசுவகருமாவால் நிர்மாணிக்கப் பட்டது இலங்கைமாநகரம். சங்கு, சக்கரதாரியாகிய விஷ்ணுவிடம் போர்புரிந்து களைத்து, மாலியவான் தனது சகோதரனாகிய ஸுமாலியுடன் பாதாள லோகஞ் சென்று மறைந்து வசித்து வருகிறான். அந்த இலங்காபுரி ஸமுத்திரத்திலுள்ளது, யாவராலும் புகுவதற்கரியது, அந்நகரத்திற் சென்று நீ சுகமாக வாழ்ந்திரு" என்று கட்டளை யிட்டார்

வச்சிரவணன், தாதையின் கட்டளைப்படி இலங்கைமாநகரம் சென்று, வடதிசைக் கதிபனாகிய குபேரனென்று பேர்பெற்று அடங்காத மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தான். இவன் இவ்வாறிருக்க,

இலக்ஷ்மீ காந்தன் போருக் காற்றாது பாதாள லோகஞ் சென்ற மாலியவான் ஸுகேசதரன் ஸுமாலி, தனது குமாரத்தி கைகசிக்குத் தக்க வரன் தேடும் பொருட்டு, பாதாள லோகத்தை விட்டு, பூலோகத்தை நாடி, அழகிற் சிறந்த தனது புதல்வியையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு வந்தான்.

அச்சமயம், வச்சிரவணன், இலங்காபுரியை விட்டுப் புறப் பட்டு, புஷ்பக விமானத்தின் மீதேறி, தாதையாகிய விச்சிரவஸுவைப் பார்க்க வந்தான்.

ஸுமாலி, வச்சிரவணனைக் கண்டு, அவன் தாங்களாண்ட இலங்கை மாநகரத்தை யாள்வதையும், புஷ்பக விமானத்தின் மீதூர்ந்து வருவதையும், யாவராலும் புகழப்படுவதையுங் கண்டு, பொறாமை கொண்டவனாகி, தங்கள் குலம் தாழ்மையடைந்ததையும், தங்கள் கீர்த்தி பாழ்பட்டதையும் மனத்திலெண்ணி ஆராத்துயர முடையவனாகி, இதற்கெல்லாம் காரணம் நாராயணனே யென்று தெரிந்து, வச்சிரவணனை ஜெயிக்கவும், தாங்கள் ஆண்ட இலங்கா புரியை மறுபடியும் கைப்பற்றவும், தக்க வலிமையுடைய புத்திரனை, விச்சிரவஸுவினிடமிருந்தே தன் புத்திரி அடையுமாறு செய்விக்க வேண்டுமென்று தன்னுள்ளத்திற் கருதி, தனது புதல்வியை நோக்கி, "ஏ குழந்தாய்! நற்குணமுடையவளே! இவ்வுலகத்தில் நற்குடியி லோர் பெண் பிறக்கத் தந்தை குலமும், தாய் குலமும், புகுந்த குலமும் மேம்பாடுற்று விளங்குமென்பது தொன்றுதொட்டு வழங்கி வரும் விஷயம். மஹாலக்ஷ்மிக்குச் சமானமான ரூபலாவண்ய முடையவளே! இப்போ துன்னால் நம் குலம் விளங்கவேண்டி யிருக் கிறது. மேலும், இது உனக்கு விவாஹஞ் செய்யவேண்டிய காலம், யௌவனமோ அதிக்கிரமிக்கிறது, நீ ஒருக்கால் தங்களை திரஸ்காரம் செய்வாயென்று நினைத்து ஒருவரும் உன்னை விரும்பி வரவில்லை. ஆயினும் நீயே சென்று, பிரமகுலத்திலுதித்த புலஸ்தியன் குமார னாகிய விச்சிரவஸுவைப் பதியாக வரித்துக்கொள். இவ்விதம் செய் வாயானால், நாமாண்ட நகரத்தைக் கைப்பற்றி யாளும் வச்சிரவணனை யொத்த குமாரர்களை யடைவாய், அதனால் நம்முடைய கஷ்டம் நிவர்த்தியாகும்" என்று கூறினான்.

கைகசி அவ்விதமே யென்றுரைத்து, புலஸ்தியன் குமாரனாகிய விச்சிரவஸு வசிக்கும் ஸ்தானத்தையடைந்து, அம்முனிவர் முன்னே நாணத்தினால் தலைகுனிந்து நிலங்கீறி நின்றாள்.

விச்சிரவஸு தன்னருகில் வந்து நாணி நிற்கும் கன்னியைப் பார்த்து, "ஓ சிரேஷ்டமான காந்திவாய்ந்த சரீரத்தையுடைய பெண்ணே! நீயார்? எங்கு வந்தாய்? உன்கருத்தென்ன" என்று வினவினார்.

கைகசி முனிவருடைய வார்த்தையைக் கேட்டு மனமகிழ்ந்து, "ஓ தயாநிதி! நான் பரமசிவத்திடத்தில் வரம்பெற்ற சுகேசன் குமாரரான ஸுமாலியின் குமாரத்தி; என் பெயர் கைகசி, நான் வந்தகாரியத்தைத் தேவரீரே தெரிந்து கொள்ளல் வேண்டும்" என்று வணக்கமாகத் தெரிவித்தாள்.

முக்காலமுமுணர்ந்த விச்சிரவஸு முனிவர் கைகசியை நோக்கி "உன் விருப்பத்தை நான் அறிந்தேன். நீ யென்னிடம் வந்தணுகிய காலத்தை நோக்கினால், உன்னபேக்ஷைப்படி யுன்னிடம் உற்பத்தியாகும் புத்திரர்கள், வரத்தினால் மேம்பாடுற்றவர்களாயினும், குணத்திற் கொடியோராய் எல்லா உலகங்களுக்கும் இடர் செய்யத் தகுந்த தீயசெய்கை யுடையவர்களாவார்கள்" என்று செப்பினார்.

கைகசி, "ஓ முனிசிரேஷ்டரே! தங்களையடைந்து தங்களுடைய கிருபையைப் பெற்றவர்களுக்கும், தங்களையொத்த புத்திரருண்டாகாமற் போவது, கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் கிடைத்தது போலாகுமே! இது தகுதியா?" என்று மனம் உருகிக் கூற, முனிசிரேஷ்டர், "பெண்ணணங்கே! உன் வயிற்றிற் பிறக்கும் மைந்தர்களிற் பின்னவன் பேரறிவுடையவனாவான்" என்று பகர்ந்தனர். இதைக்கேட்ட கைகசி மனத்திருப்தி யுடையவளாயினள்.

பிறகு, விச்சிரவஸு முனிவர், சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் கைகசியை யணைய, பத்துத்தலையும், இருபது தோளும், பூமியை நாசமாக்கும் சக்தியுமுடைய தசக்கிரீவன், தரை நடுங்கவும், அநேக அபசகுனங்களுண்டாகவும் பிறந்தான்.

அதன் பிறகு, ஞாலமடங்க விழுங்கினும் நிறையாத வயிற்றையும், மலையைப்போல் நீண்ட உருவத்தையும், நிமிர்ந்த கையையும், வக்ரதந்தங்களை யுடைய பலத்த வாயையும், பெருத்த விழியையும், ஒருக்காலுமடங்காத பசியையுமுடைய கும்பகருணன் பிறந்தான்.

அவன் பின்னே, பருத்த விடையும், பெருத்த கழுத்தும், மேகத்தின் இடியையொத்த குரலுமுடைய சூர்ப்பநகை பிறந்தாள்.

அப்பெண்ணின் பின்னே, புலஸ்தியன்றன் மரபு விளங்கவும், வேதங்கள் நிலைபெறவும், முன்புதித்த கொடியோரைப் பெற்ற கைகசி வயிறு சுத்தமுறவும் யாவராலும் புகழ்தற்குரிய விபீஷணன் வந்து தோன்றினன்.

பாம்புகளுக்குப் பாலும், நெய்யும் புகட்டினாலும், உபாதையைத் தருகின்ற விஷமே வளருவது போல, தசக்கிரீவன் நான்கு வேதங்களும், ஆறு சாஸ்திரங்களும் கற்றபோதிலும், போதங்கெட்டு அபோதம் மேலிட்டே விளங்கினன்.

பரிசுத்தரான முனிவர்கள், புலஸ்தியன் வழிவந்தோர் பால், குத்தும், புடைப்பும் நாம் பெற்றோமென்று மனம் நடுங்கி வாட, அம்முனிவர்களையே கொன்று தின்னத் தொடங்கினன் கும்பகருணன்.

சூர்ப்பநகை, குற்றமற்ற பிராமண குலத்திற் பிறந்தவர்கள் பாற் சென்று, அவர்களை யெல்லாம் பர்த்தாவாக வரித்துப் போகந் துய்த்துப் பின்னுமவர்களை யெல்லாம் புடைத்துத் தின்ன வாரம்பித்தாள்.

விபீஷணனோ கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை யென்று சொல்லப்பட்ட பஞ்சமா பாதகங்களை யெல்லாம் துப்பற விட்டு, மெய், தவை, தருமம், பொறை யென்று கூறும் சத்கருமங்களைக் கைக்கொண்டு, வேதங்களிற் கூறிய அறத்தின் வழி நின்றான்.

இவ்விதம் அந்த வனத்தில் மேற்கூறிய நால்வரும் வாழ்ந்து வந்தார்கள்.

அச்சமயம், வச்சிரவணன், தனது தாதையாகிய விச்சிரவஸுவைப் பார்க்க எண்ணங்கொண்டு புஷ்பக விமானத்தின் மீதேறி அந்த வனத்தின் வழியே வந்தான்.

அவனைக் கண்ட கைகசி, தனது புத்திரனாகிய தசக்கிரீவனை நோக்கி, "ஓ மைந்த! இதோ புஷ்பக விமானத்தின் மீதேறிச் செல்பவன், நினது தமையன். தெய்வத்தன்மை பொருந்திய புஷ்பக விமானத்தையும், சங்கநிதி, பதுமநிதி யென்று கூறும் இரண்டு நிதிகளையும் தவத்தைச்செய்து பெற்றவன், தனபதி யென்னும் பெயர் வாய்ந்தவன், உன் மரபில் முன்புதித்தோ ராண்ட இலங்காபுரியை யிப்போதாண்டும் வருகிறான்" என்று செப்பினள்.

தனது தாயின் வார்த்தையைக்கேட்டு இராவணன், பல்லினாலே பிதழையதுக்கி, "ஓ தாயே! தமையனுக்குச் சமமாகவாவது, அல்லது அவனுக்கு மேலாகவாவது தவத்தைப் புரிந்து வரப்பிரசாதத்தால் நான் மேன்மையடைகிறேன், நீ கவலையை யொழித்து விடு" என்று தாயைத்தேற்றி, தனது தம்பிகளுடன், எவர்களாலும் செய்து முடிக்கமுடியாத தவத்தைச்செய்து பலனையடைவதற்கு விருப்பமுற்று கோகர்னவனத்தை யடைந்தான்.

கும்பகருணன் அந்த வனத்தில், உம்பர் நடுங்க வெயில் காலத்தில் பஞ்சாக்கினி மத்தியில் நின்றும், மழைகாலத்தில் மழையில் நனைந்தும், ஸ்தம்பத்தில் நாட்டிய சலாகையில் நின்றும், பதினாயிர வருஷம் தவம் புரிந்தான்.

விபீஷணன் திரிகாலமு முணர்ந்த முனிவருந்திகைப்ப, ஒரு காலைத் தரையிலூன்றி மற்றொருகாலை யுயரத்தூக்கி, யிருகைகளும் விரித்து, சூரியமண்டலத்தை நோக்கி யிருந்து, ஐயாயிர வருஷம் அரிய தவமியற்றினான்.

இராவணன், ஆயிரம் வருஷம் ஆகாரமின்றி யுபவாசமிருந்து முடிந்ததும், தனது பத்துச் சிரங்களில் ஒரு சிரத்தைக் கண்டித்து, செந்தீயிடை ஹோமம் பண்ணி, மறுபடியும் ஆயிரம் வருஷத்துக்கோர் சிரமாகத் துணித்து, உபவாசமிருந்து அக்கினியில் ஹோமம் பண்ணி முடிந்த பிறகு, ஆயிரம் வருஷம் ஊணின்றி யுபவாசமிருந்து தனது பத்தாவது சிரசைபுந் துணிக்க வாரம்பித்தான்.

அக்காலை, பிரமதேவர் அவன் முன்னிலையில் பிரசன்னமாகி, அவனை நோக்கி, "ஓ தசக்கிரீவ! அருந்தவத்தில் நின்னை யொப்பவர் உன்னையன்றி யொருவருமில்லை யென்று வியந்துகூறி, நின் கரத்தால் முன்னம் அறிந்த தலைகளெல்லாம், திரும்பவும் முளைக்க" என்று வரமளிக்கத் தலைகளெல்லாம் பண்டையிலும் விசேஷமான அழகு சொலிக்க முளைத்தன.

பின்னும், பிதாமகன், தசமுகனை நோக்கி யுனக்கு வேண்டிய வரத்தைக்கேள் தருகிறேன் என்றார். தசாநநன், மானுடரை ஒரு பொருளாய் மனதிற் கருதாமல், மற்றுமுள்ள தேவர், நாகர், இயக்கர் முதலினோரால், நான் சாகாதிருக்க வரமருளவேண்டு மென்றான். சதுர்முகன் உன்னிஷ்டப்படியே யாகட்டு மென்று வரமளித்தார்.

பிறகு, தருமசீலனுகிய விபீஷணனை நோக்கி, "ஓ பால! உனக்கு வேண்டியதைக் கேள்" என்று ஆதிமூர்த்தி கூறினர். விபீஷணன், "ஓ தேவ! அறத்தைக் கைவிடும்படியான துன்பங்கள் என்னை வந்தணுகினும், நான் தீங்கான காரியத்தைச் செய்யாதிருக்கவும், போரிற் பிரமாதிகளென்னை வெல்லாதிருக்கவும் வரமருள வேண்டும்" என்ன, விரிஞ்சன், "அவ்வாறே நீ பெறுவதோடு, என்று மிறவாது சிரஞ்சீவியா யிருக்கக் கடவாய்" என்றும் வரமளித்தார்.

பின்பு, கமலாசனன், அரியதவத்தை யுடைய கும்பகருணனை நோக்குங்கால், தேவர்கள், பிரமதேவரை நோக்கி, "எம்பிரானே! கும்பகருணன் தங்களிடந் தக்க வரத்தைப் பெறுவானுகில், குச்சைக் கொளுத்தும் சுபாவ சிந்தையுடையோன் கையிற் கொள்ளியைக் கொடுத்த கதை போலாகும், இவனே ஏற்கெனவே கொடுமையான நடையுடையவன், தங்களிட மிருந்து வரமும் பெறுவானுகில், எங்களை யெல்லாம் நிமிஷத்தில் நாசஞ் செய்வான். தாங்கள் எங்களைக் கெடுத்தது போலவே யாகும்" என்று தடுமாறிய சிந்தை யுடையோராய்த் தெரிவித்துக் கொண்டார்கள்.

மாலுந்தி வந்தோன், வானுலகுள்ளோர் க்ஷேமத்தைக் கருதி, கலைநாயகி யினுடைய கமலம்போன்ற திருமுகத்தை நோக்கி, கும்பகருணன் பொல்லா வொழுக்கம் பூண்டு புவன மூன்றையும், நாசஞ் செய்யும் இயற்கைக் குணமுள்ளவனுனபடியால், அவன் வரம் வேண்டுங்கால், அவன் வாக்கில் நின்று, அவன் வேண்டுவன வெல்லாம் தவிர்த்து, துயில வேண்டுமென்று கேட்கும்படி செய்வாயென்று கூற, கலைவாணி அவ்வாறே அவன் நாவிற் பிரவேசித்தாள். அச்சமயம் பிரமதேவர், தேவர்கள் புடை சூழக் கும்பகருணனிடம் வந்து, "ஓ அரக்கரிற் சிரேஷ்டமுள்ளவனே! உன்னரிய தவத்திற்கு மனமுவந்தோம், உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் தருகிறோம்" என்று பணித்தார்.

சரஸ்வதி தேவியால் வியாபிக்கப்பட்ட கும்பகருணன் எல்லாவற்றையும் விட்டு, நான் நித்திரை வேண்டுகிறேன் என்றான். அயன் அவ்வாறே நீ ஆறுமாதந் துயிலக் கடவா யென்றார்.

ஓ தேவி! ஆழ்ந்தமடுவில் மூழ்கியும், அரும் பட்டினி கிடந்தும், வெய்யிலிற் காய்ந்தும், மழையில் நனைந்தும், இன்னும் பலவாருன சகித்தற்கரிய செய்கையைச் செய்தும், தானியற்றிய தவத்தின் பலனை

யடையாது, மாறுத்தாயிலே யடைந்தான் கும்பகருணன். குற்றமுள்ள மனமுடையவர்களுக்கு ஒரு காரியமும் பலிக்காதென்பது இதனால் வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றதல்லவா ?

தேவர்களெல்லாம் நாம் பிழைத்தோம் எனக்கூறி ஆரவாரத்துடன் விண்ணுலகடைந்தனர். தாமரை மலரில் வசிக்கும் நான்முகக் கடவுளும் கலைமகளுடன் தனது உலகம் சென்றனர்.

கந்தமலரோன் சென்ற பின்னர் தடந்தோட் கும்பகருணன், தனது சிந்தையை மாறும்படிச் செய்தது, தேவர்கள் செய்த மாயமென்று மனந் தளர்ந்து, தனது முன்னோனாகிய தசக்கிரீவனுக்கும், பின்னோனாகிய விபீஷணனுக்கும் நடந்ததை விளம்பினான். இதைக்கேட்ட இராவணன் 'ஊழிற் பெருவலியாவுள' என்று சிந்தித்தவனாய், தனது பிராதாக்களிருவர்களுடனும், தாங்கள் முன்னிருந்த வளமிகுத்த வனத்தையடைந்து வசித்து வந்தான்.

பூங்கமலக் கண்ணனுக்குப் போரில் தோற்று, பாதாளலோகஞ் சென்று வசித்துவந்த, ஓங்கு புயவலிமையுடைய மாலியவான், ஸுமாலி, என்னும் அரக்கர்கள், பிரஹஸ்தன் முதலிய துணைவர்களுடனும், மற்றுமுள்ள அரக்கர்களுடனும், தாங்குதற்கரிய பேருவகை தங்களைப் பிடித்துத்தள்ள, பாதாளலோக மிருந்து புறப்பட்டு, தசக்கிரீவன், தம்பிமார்களுடன் வசிக்கும் வனத்தைநாடி வந்து சேர்ந்தார்கள்.

வந்த அரக்கர்கள், மலையொத்த திரட்சியுடைய தோட்களமைந்த தசக்கிரீவன், கும்பகருணன், கலையடுத்து விளங்காநின்ற விபீஷணனையும் பார்த்து, "அலைகடலிற்றுயிலும் அச்சுதனுக்குத் தோற்றுச் சென்ற அரக்கர்களாகிய நாங்கள் திரும்பவும் இவ்வுலகில் வந்து தலையெடுக்கப் பிறந்த குமரர்காள்! நீங்கள் பெருவாழ்வை யடையக் கடவீர்கள்" என்று கூறிக் கட்டியணைத்துத் தழுவிக் கொண்டருகி லமர்ந்தார்கள்.

அக்காலை ஸுமாலி தனது பேரனாகிய தசமுகனை நோக்கி, "ஓ பேர! என் மனோரதம் நிறைவேறிற்று. எவருடைய போருக்காற்றாது பாதாளலோகம் சென்றேறேனோ, அந்த விஷ்ணுவினுடைய பயங்காரமும் நீங்கிற்று, இப்போது உன்னுடைய பிராதாவாகிய வச்சிரவணன் வாசஞ்செய்யும் இலங்காபுரியானது, முந்தி நம்மவர் வாசஞ் செய்த ஸ்தலம். அந்த நகரத்தை, சாமபேதோபாயத்தால் வச்சிர

வணன் உனக்குத் தாராதொழிவானாகில், தண்டோபாயத்தினாலாவது நீ யதைக் கிரஹிக்கவேண்டும், அப்படிச் செய்யாதொழிந்தால், தேவர்கள் நம்மை யிகழ்ச்சி செய்வார்கள்; மேலும் நீ பெற்ற வரமும், நினது வலியும் பிரயோஜனமற்றதாக முடியும்" என்று கூறினான்.

தாயைப்பெற்ற பாட்டனாகிய ஸுமாலி கூறிய வாசகத்தைக் கேட்ட அதிபராக்ரம சாலியாகிய இராவணன், "ஓ பாட்ட! நீர் கூறியது தகுதியன்று; எனக்கு முன் பிறந்தவனை நானெப்படி நிக்கிரகிப்பது; பொருளுக்கிறைவனாகிய தனதன் நமக்கு ஒரு விதத்தில் ஆசிரியனல்லவா" என்று கூறினான்.

அருகிலிருந்த பிரஹஸ்தன், இதைக்கேட்டு "ஓ இராவணேஸ்வர! மூதாதை வார்த்தையைத் தடுப்பது சரியல்ல, ராஜ தர்மத்தை நீ யறியவில்லை. அரசனாகிய வீரனுக்குப் பிராதாக்களிடம் ஒற்றுமை யேது? ஓ பிரபுவே! முன்னிகழ்ந்ததைக் கூறுகிறேன்—கேளும். காசிபப் பிரஜாபதியின் புத்திரர்களான தேவர்களும், இராக்ஷசர்களும் சினேகத்தைவிட்டு, ஆயுதபாணிகளாகி ஒருவருக்கொருவர் போராடினார்கள். பிராதாக்களாகிய அசுரகுலத்தைத் தேவர்கள் மடிக்கவில்லையா? தேவர்களே முன்னிவ்வாறு செய்திருக்கிறார்கள்" என்று சொன்னான்.

இதைக் கேட்ட இராவணன், "ஓ பிரஹஸ்த! அப்படியானால் நீயே வச்சிரவணனிடம் சென்று அவருக் கிவ்விஷயத்தை யெடுத்துக்கூறி, அவர் மனோபாவத்தை யறிந்துவா" என்று சொல்லிவிடுத்தான்.

பிரஹஸ்தன் அவ்விதமேயென்று கூறி விடைபெற்று இலங்கைக்குச் சென்று, தனபதியைக் கண்டு, "ஓ பிரபுவே! உம்முடைய தம்பியாகிய தசக்கிரீவன், தங்களைக்கண்டு, முன்னம் இலங்கை நகரத்தை யாண்டது தனது மூதாதையாகிய மாலியவான் முதலாகிய மூவர்களென்றும், அந்த நகரத்துக் குரியவன் என்னையன்றிப் பிறரில்லை யென்றும், என்னுறவை நீ விரும்பும் பட்சத்தில் அந்த நகரத்தை யெனக்குக் கொடுத்து விடவேண்டு மென்று கேட்டு வரச் சொன்னார்" என்றும் தெரிவித்தான். அவ்வாசகத்தைக் கேட்ட அருநிதிக்கோன் பின்வருங் காரியத்தை மனதில் நினைத்து, பிரஹஸ்தனை நோக்கி, "ஓ சதுர! என்னரசும், என்பதியும் எனது தம்பியினுடையதே, என் தம்பி சொல்லியபடியே நான் செய்கிறேன்" என்று பதிலுரைத்து அவனை இராவணனிடம் அனுப்பிவிட்டான்.

பிறகு தனபதி தனது தாதைபாற் சென்று, நிகழ்ந்ததை யறிவிக்கத் தவத்திற் சிறந்த விச்சிரவஸ், தனது குமாரனைநோக்கி, "ஓ பால! நாமெது சொன்னாலுந் துர்ப்புத்தி யுடைய தசக்கிரீவன் கேட்க மாட்டான். ஆகையால், இலங்கையை யவனிடம் விட்டுவிட்டு, கயிலாயமலைச் சிகரத்தை யடைந்து, நம்மை (சங்கரனை) நோக்கித் தவம்புரிந்து, நீ வசிப்பதற்குத்தக்க இடத்தைப் பெற்றுக் கொள்ளுதல் உனக்கிதமான காரியம்" என்று கூறினார். அவ்வாறே தனபதி, இலங்கையைத் தசக்கிரீவனிடம் விட்டு, கயிலைமலைச் சாரல் வந்து நம்மை (பரமசிவத்தை) நோக்கித் தவமியற்றி, நம்மால் எமது தோழன் என்று கொண்டாடப்பட்டு, திக்குப்பாலகர்களில் ஒருவனாக அமையப் பெற்று நம்மால் ஏவப்பட்ட விசுவகர்மா அளகாபுரியென்ற நகரத்தை நிர்மாணிக்க, அந்நகரத்தில் தனது கிளைஞரொடு சென்று சுகமாக வாழ்ந்து வந்தான்.

பிரஹஸ்தன், தனபதி கூறிய வார்த்தையைக் கேட்டு, இராவணனிடம் வந்து, இலங்கையை விட்டுவிடத் தனபதி யிசைந்ததை யறிவித்தான். தசக்கிரீவன் அதைக்கேட்டு, மாலியவான், ஸுமாலி முதலிய பாட்டன்மார்களோடும், பிரஹஸ்தனோடும், மற்றுமுள்ள அரக்கர்களோடும் இலங்கைமாநகரம் சென்று, நவரத்னங்கள் அமைந்த சிம்மாசனத்தின் மீதமர்ந்து, மந்திரிகளால் முடிசூட்டப்பெற்று, இராக்ஷசர்களுக் கெல்லாந் தலைவனாக இருந்து சுகமாக வாழ்ந்து வந்தான்.

உலகனைத்து முண்டுமிழ்ந்த ஒருவன், துயருழந்த தேவர்களுக்காக வந்து போர்புரிந்து, இலங்கையைப் பாழாக்கின நாள் முதல் பாதாள லோகஞ்சென்று வாழ்ந்துவந்த இராக்கதர்கள் அனைவரும், இழந்த தனம் பெற்றவர்போல், தங்கள் பழம்பதியில் வந்து குடிபுகுந்து பண்டுபோல் சுகித்து வாழ்ந்து வந்தார்கள்.

அப்பொழுது, அரம்பைக்குத் தன்னைப்போலொத்த பராக்ரமமில்லை யென்றும், தனது ஸ்தன்னியபாரத்தைத் தாங்க இடையில்லை யென்றும், நொடிப்பொழுதில் எவ்வுலகத்தையுந் தாண்டி மீளும் நடையில்லை யென்றும் பழித்துக்கொண்டிருக்கும் நங்கையாகிய தனது தங்கை சூர்ப்பநகையை, இராவணன் காலகேயர்களைச் சார்ந்த வித்துஜ்ஜிங்கவனுக்கு விவாஹம் செய்து கொடுத்தான்.

பிறகு ஒருதினம், தசாநநன், வேட்டையாடக் காட்டுக்குச் சென்றபோது, அந்த அரக்கருடைய தச்சனும், திதியின் குமாரனு

மாகிய மயன் என்பவன், உலகத்திற் சிறந்த சுந்தரி யெனவும், *பஞ்ச கன்னியில் ஒருத்தியெனவும், மண்டோதரி யெனவும் பெயர் பெற்ற தனது குமாரியோடு அவ்வனம் வந்தான்.

கன்னியுடன் வந்த மயனைத் தசக்கிரீவன் பார்த்து, "அழகில் மிகுந்த இக்கன்னியுடன் இவ்வனத்துக்கு வந்த நீயார்? இக்கன்னி யார்?" என்று வினவ, மயன், "வெற்றிமாலையைத் தரித்த திடக் தோளையுடைய வீரனே! நான் தயித்தியர் கோன்மகன்; எனக்குத் தேவர்கள், திருவையொக்கும் வடிவுடைய தருச்சனை யென்னும் கன்னியைக் கொடுக்க, அக்கன்னியுடன் ஏமபுரி யென்பதை யெனக் கிருப்பிடமாக நிருமித்துக்கொண்டு, அந்நகரில் ஐந்நாறுண்டு சுக மாக வாழ்ந்து வந்தேன். அத்தருச்சனை வயிற்றில் எனக்குப் பிறந்த பெண்ணிவள்; இம்மங்கையுடன் பிறந்தவர்கள், மாயாவி, துந்துபி, என்று கூறப்பட்ட வலிவில் மிக்க வீரர்களிருவர்; இப்பெண்ணின் குணத்துக்கும், எழிலுக்கும் ஒக்கும் வரனைத்தேடி யெங்குங் காணாது இவ்வனத்தை நாடி வந்தேன்; நல்ல குடிப் பிறப்பும், பழிப்பில்லாத பேரழகும், சாஸ்திர வாராய்ச்சியும், நீரை நீக்கிப் பாலை யுண்ணும் அன்னபக்ஷிபோல், வேதாந்தத்தின் நுட்பபொரு ளைக் கிரஹிக்கும் சக்தியும் உடையவர்கள் இவ்வுலகத்தின் கண் ணில்லை; சுற்றத்தார் நல்ல குலத்தை விரும்புவார்கள்; தந்தை கல்வி யிற் றேர்ந்திருப்பதை விரும்புவர்; தாய் குறைவற்ற செல்வத்தை விரும்புவள்; மங்கையானவள், வரனின் இளமைப் பருவத்தை யும், அழகையும் விரும்புவாள். சொல்லுமிடத்து, இவ்வுலகத்திற் பெண் பெறுவதனாலடையுந் துக்கத்தைப்போல, மற்றெதிலுந் துய ருண்டாக மாட்டாது. அப்படிக் கிருந்த போதிலும், உம்முடைய யௌவனமும், பேரெழிலும் பேசவேண்டாம்; உம்முடைய வழியும் பதியும், பெயரும், நலமும் எடுத்துக் கூறவேண்டும்" என்றான்.

இராவணன், இதைக் கேட்டு, "நான் பிரமதேவர் குமாரனான புலஸ்தியன் குமாரன் விச்சிரவஸுவின் புதல்வன்; இலங்காபுரியை யாளும் மன்னவன்; தசக்கிரீவன் எனும் நாமமுடையவன்; மறைக ளாயிரமும் கற்றுணர்ந்தவன்" என்றான்.

மயன் திடத்த தோள்களையுடைய தசக்கிரீவன் செப்பிய வார்த் தையைக் கேட்டு, இன்று தான் நான் எனது சேயிழையைப் பெற்று

* பஞ்சகன்னிகள்.—அகலிகை, துரோபதை, சீதை, தாரை, மண்டோதரி.

வளர்த்து வைத்துக்கொண்டிருந்த பயனைப் பெற்றேனென்று கூறி, மனமுவந்து குண்டிகை நீரையெடுத்து, எட்டுத்திசையும் போற்று கின்ற வலியையுடைய இராவணனுக்கு, எழிலாக்கர் யாவரும் போற்ற, வண்டமருங்குழலையுடைய மண்டோதரியைத் தத்தம் செய்து மணமுடித்து வைத்தபின்னர், தண்டாமரை மலரோன் பேரில் விடினும், அவனுயிரையுண்டு மீளும் வேலாயுதத்தையும் கொடுத்துச் சென்றான்.

இருபது தோள்களும், ஈரைந்து முடிகளும் பிரகாசிக்க, வாளா யுதத்தையுடைய வலியபடைகள் சூழ, மதில் சூழ்ந்த இலங்கைமா நகருக்கு மண்டோதரியுடன் இராவணன் சென்றான்.

பின்னர், இராவணன் வயிரோசனன் புதல்வன் குமாரியாகிய வச்சிரசுவாலை யென்னுங் கன்னிகையை, கும்பகருணனுக்கு விவா ஹம் செய்வித்தான்.

அதன் பிறகு, தசாநநன், மஹாத்மாவும், கந்தருவர்களுக்கு மன்னனுமாகிய கைதூடணன் தவத்தாற் பெற்ற குமாரியும், தரு மங்களை யறிந்தவளும், சகல இலக்ஷணங்களும் பொருந்தியவளும், மனோஞ்ஞையுமாகிய சரமை யென்னும் கன்னியை விபீஷணனுக்கு மணம் புரிவித்தான்.

இராவணன், தனது தம்பிமா ரிருவருக்கும் வதுவை செய் வித்து, அவர்களிருவரும் தத்தம் பத்தினியுடன் சுகித்துவாழும் போது, தானும் இந்திரனும் சசிதேவியும்போல, மண்டோதரியுடன் கூடிவாழும் நாளில், அத்திருவினாள் பால் ஓர் புத்திரனைப் பெற்றான். அப்புதல்வன் பிறந்தவுடனே, மேகம் போல் கர்ச்சித்து வாய்விட் டழுததினாலே அக்குமாரனுக்கு மேகநாதன் எனப் பெயரிட்டான். அன்னவன்றன்பின் பிறந்தோர், அதிகாயன், அக்ஷய குமாரன் என் னும் போர்வீரர் இருவர்.

பன்னியசீர் வச்சிரசுவாலையின் மணி வயிற்றில் கும்பகருண னுக்குப் பிறந்தவர்கள், காலனை பொருதும் வலுவிற்சிறந்த வீரர்கள், கும்பன், நிகும்பன் என்னும் இருவர்கள்.

திருவினையொத்த அழகுவாய்ந்த சரமை யென்னும் கன்னி வயிற்றில், அறிவிற்சிறந்த விபீஷணனுக்கு வடிவினும், குணத்தி னும் மிகுந்த திரிசடை யென்னும் பெண் உலகமதிக்கப் பிறந்தாள்.

அறுசுவையோடு கூடிய அமுது, இறைச்சியுணவு முதலியவை களை யூட்டி, செவிலித் தாய்மார்கள், முறங்கொண்டு மூட்டி சிறு நெருப்பைப் பெருநெருப்பாக்குவர் போல், இப்பாலர்களை வளர்த்து வந்தார்கள்.

இலங்கைமன்னன், தம் புதல்வர்களுடனும், தம்பியர் குமார்க ளுடனும், இராஜ்ய சம்பத்து, திரவிய சம்பத்து, புத்திர சம்பத்து முதலிய பேறுகளுடன், தனக்கு யாரும் இணையில்லை யென்று இறு மாந்து இராஜ்ய பரிபாலனம் செய்துவரும் நாளில், கும்பகருணன், தனது தமையனிடம் சென்று, தான் தவஞ்செய்து பெற்ற துயிலைச் சாருவதற்கு, இனிதான மண்டபம் ஒன்றியற்றித் தரல்வேண்டு மென்று கேட்டான்.

தென்னிலங்கை மன்னவனும், தெய்வத் தச்சனை யழைத்து, தனது தம்பியாகிய கும்பகருணன், உறங்குவதற்குத் தகுந்த பொன் னணி மண்டபம் ஒன்றேற்படுத்தென்று கூற, அத்தச்சன் ஒரு யோசனை அகலமும், இரண்டு யோசனை நீளமுமுள்ள ஓர் மண்ட பத்தை நிர்மாணித்தான்.

கும்பகருணன், அதனைக் கண்டு மகிழ்ச்சிகொண்டு அதனுட் சென்று நீண்டகாலம் துயில வாரம்பித்தான்.

அக்காலை, தவத்தாலும் வரத்தாலும், புயவலிச் செருக்காலும், மேல்வருங் காரியத்தை யுற்றுணராத இராவணன், இயக்கர், தேவர், மாதவர் முதலினோர் அலறியோடச் செய்தும், அளகாபுரியின் பூமிரி காவெலாம் பொடியாகச் செய்தும், மதங்கொண்ட யானைபோல் சஞ் சரித்து வந்தான்.

தசக்கிரீவனுடைய அக்கிரமங்களைக் கேட்ட, தமையனாகிய அளகை மன்னன் ஓர் தூதனை நோக்கி, நீ யெனது தம்பியாகிய இலங் கை மன்னனிடம் சென்று, உலகத்தில் முன்னவன் வார்த்தையைப் பின்னவனிகழாது கேட்கவேண்டு மென்ற பழமொழியுள்ளதைக் கொண்டு நான் சொல்வதை நீ அங்கீகரிக்கவேண்டும்; அதாவது:-தரு மம் வழுவாமற் பார்த்து, "கழிப்பதும் நீக்கலும் வேண்டாம் உலகம் பழிப்பது நீக்கிவிடு" என்ற பழமொழிக்கிணங்கிப் பழிக்கத்தகும் காரியத்தைச் செய்யக்கூடாது. தேவர், அந்தணர், இவர்களுக்கிடை யூறு செய்யுந் தீயோர் யாவரேயாயினும் அவர்கள் தங்கள் இம்மைப் பலனையுமிழந்து, மறுமையிலும் நரகத்தை யடைவார்கள்; ஆகை

யால் அறிவுளோர் அவர்களோடு பகைகொள்ளமாட்டார்கள்; தேவர்கள், முனிவர்கள், தவத்திற் சிறந்த அந்தணர்கள் இவர்கள் யாவரும், உன்னாற் றுன்பமுற்று வருந்துவதையுங் கேட்டேன்; என்னுடைய வளம்பொருந்திய நந்தன வனத்தை யழித்ததையும் நேரில் கண்டேன். நீ யெனது தம்பியாகில் இனி யித்தகைய செய்கையைச் செய்யாதிருத்தல் வேண்டுமென்று சொன்னதாகத் தெரிவிப்பதோடு, வாசவன் முதலான வானவர்களும், மாதவம் புரியாநின்ற இருடிகளும், ஒழுக்கத்திற் சிறந்த அந்தணர்களும், நினது செய்கையினால் மனஞ்சலித்து, உனக்கு நாசத்தை யுண்டுபண்ணக் காத்திருக்கிறார்கள் என்பதையுங் கூறிவா என்றனுப்பினான்.

தூதன், இலங்கை சென்று அரக்கர் மன்னனைக்கண்டு அளகேசன் கூறிய வார்த்தையைச் சொன்னதும், அம்மன்னன், கண்களினின்று அனற்பொறி சிதறக்கனன்று, கரத்தினோடு கரம் புடைத்து, அருகில் நின்றவர்களை நோக்கி, "அளகேசனும், குற்றமற்றவனும், தீய செய்கையுடைய என்னைத் தேவர்களும், மற்றுமுள்ளோர்களும் கெடுக்கக் காத்திருக்கிறார்களாம், இத்தகைய இழிவுற்ற வார்த்தைகளை யானறிய ஏவப்பட்ட தூதன் கதியைப் பாருங்கள்" என்று கூறி, வாளையெடுத்து அத்தூதன் இரு துண்டாகி மண்ணின்மேல் வீழ வீசினான். மேலுங் கோபமீறி, அத்தகைய அளகேசன் முன்னம் யானே சென்று, என் சினமுடித்து வருகிறேன்; நம் படைமுழுதும் யுத்தத்துக்கு எழுக எனக்கூறினான். உடனே கடலெழுந்ததென அரக்கர் சைனியங்கள் புறப்பட்டன. இராவணனுந் தேரின்மீதேறி மகோதரன், மாரீசன் முதலிய மாயை வல்லவர்கள் புடைசூழ, அளகாபுரி சென்று, குபேரனுடன் போர் புரிந்து அவனைத் தோற்கடித்து, அவனிடமிருந்த அனேக பண்டாரங்களையும், புஷ்பக விமானத்தையும் பறித்துக்கொண்டு அவ்விமானத்தின் மீதேறிப் புறப்பட்டான்

இராவணன் ஏறிவிடும் புஷ்பகவிமானம், கயிலையங்கிரியை யணுகினதும், நடவாது நின்றுவிட்டது. அதன் காரண மின்னதென்றறியாது மயங்கின தசமுகனிடம் நந்திதேவர் வந்து, "ஓ இராவணா! மஹாதேவர் உமையோடு வசிக்குமிடமிது; ஆகையினால், புட்பகமானது நடைபெறவில்லை. அதை இந்த இடத்தை விட்டுவிலக்" கென்று கூற, தசாநநன் கோபமீறி, குரங்கு போன்ற முகத்தை

யுடையவன் நீயார்? நீயா என்னுடைய விமானத்தை யகற்றென்று கூறுகிறவன்" என்று சினந்தான்.

இதைக்கேட்ட நந்திதேவர், "ஓ அரக்க சிரேஷ்டனே! நீ என்னைக் குரங்கென்று கேட்டதனால், உன் நகரிற் குரங்கு புகுந்து உன் குலத்தை நாசஞ் செய்யக்கடவது" என்று சாபமிட்டார்.

இராவணன், மதிப்பில்லாதவனாய், என்னுடைய புட்பகத்தைத் தடைசெய்த இக்கயிலையைத் தூள்பட அடிக்கிறேனென்று கூறி, அதைப் பேர்த்தான். அப்போது சித்தர் முதலினோரும் திபங்கினர்; நீயும் (உமாதேவியும்) பயமுற்று நம்மைக் கட்டித்தழுவினாய். இதனைக் கண்ணுற்ற (அரன்) நாம் நமது பெருவிரலா லம்மலையை யழுத்திட, அரக்கர்கோன், ஆலயிடை யகப்பட்ட கரும்பெனத் தனதுடல் நசுங்க, பத்துவாயினுமிருந்து குருதி பொங்க, அம்மலையினடியிலகப்பட்டு, ஓராயிர வருடம் கதறினான்.

கயிலையின் கீழகப்பட்டுக் கதறும் அரக்கர்கோனை நோக்கி, யவனது மந்திரி, "ஓ இராவணேஸ்வர! கொன்றை மாலையைத் தரித்த பரமசிவத்தின் திருச்செவிக்கேற்ப, நினது சிரமும் கையும்வீணையாக வமைத்துக்கொண்டு, சாமவேத கானம் பண்" என்று கூறினான்.

தசாநநன், அன்னதே கருமமென்று மனதுட்கொண்டு தனது தலையிலொன்றை யறுத்து, தண்டாக அத்துடன் ஒரு கரத்தைப் பொருத்தி, கையினுற்ற நரம்புகளைத் தந்தியாகமாட்டி, யாழாக வமைத்துக்கொண்டு குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசையினோடு, பன்னுதற்கரிய சாமவேத கானம் பாடினான்.

நாம் அரக்கன் பாடலுக்கிரங்கி, மூன்றுலகையுமாள மூன்றரைக்கோடி யாயுளும், எந்தப் படையையும் வெல்லும் ஓர் வாளாயுதமுங் கொடுத்து, நீ நீண்டகாலம் இப்பொருப்பின் கீழ்க் கிடந்து கதறினதினாலே, இராவணன் என்னும் பெயரும் அடையக்கடவாயென்று கூறி விடைகொடுத்தனுப்பினோம்.

நாம் கொடுத்த வரத்தைப்பெற்று, புட்பகத்தின் மீதேறி சிறப்புப்பொருந்திய வாளாயுதத்தோடு செல்லும் இருபது தோளானை, காசாம்பூவை யொத்த மேனியையுடைய மாயவன் கண்டு, நீ பெற்ற மூன்றரைக்கோடியு மொழிய, இன்னும் அரைக்கோடி நாள் கேட்ளென மொழிய, அதற்கிசைந்து தசக்கிரீவன் நம்மிடம் வந்து

அண்ணலே முன்னம் யானடைந்த மூன்றரைக் கோடியும் நீங்க இன்னும் அரைக்கோடி நாளீந்தருளென்ன, நாம், மாசுணப் பாயலான் செய்த மாயமீதென்பதை யறிந்து அவ்வாறே யரைக்கோடி யளித்தனமென்ன, தென்னிலங்கை மன்னன் அவ்வரத்தைப் பெற்றுத் தனதிருப்பிடஞ் சென்றனன்.

இராவணன், இலங்கைமா நகரம் சென்று, வரப்பெருக்காலும், கரத்திறத்தாலும், திரிலோகத்திலுந் தனக் கெதிரில்லை யென்று கருதி, இறுமாந்திருக்கும் காலை, பூதலத்திலுள்ள அரசர்களை யெல்லாஞ் ஜெயித்து, திக்கு விசயம் செய்யவேண்டுமென்று நினைத்து, முதலில் தென் திசைக்கதிபனாகிய யமனிடத்தில் யுத்தத்துக்கு மந்திரிகளுடனும் அளவற்ற சைனியங்களுடனும் சென்றான். உலகையெல்லாம் வாதிக்கும் நமன் தன்னுடன் போர்புரியவந்த அரக்கர் கோன்செருக்கை யறிந்து சீறி, காலபாசம், காலதண்டம் முதலிய ஆயுத பாணியாகி, ஊழிக்காலத்து உருத்திர மூர்த்தியை யொப்பத் தேரேறி, தனது சேனைகள் சூழ, அரக்கர்கோன் முன் வந்தான். காலனைக் கண்டதும் இலங்கை மன்னனின் சைனியங்கள் இன்றே கெட்டோமென்று கருதிப் பின்னிடைய, இராவணன் மிக்க தைரியத்துடன் நின்றான். அவ்விதம் நின்றவன் நிலைமை கண்டு செய்சொரியப் பெற்ற அழலெனப் பொங்கி, தென்றிசை நாதன் ஈட்டி, வேல், குலிசம் முதலிய வாயுதப் பிரயோகம் பண்ண, இலங்கை மன்னன் கோபமிகுத்து, வில்லை வளைத்து, கூரியகணைதொடுத்து, அந்தகனேவிய பாணங்களை யறுத்து, பலவிதமான கணைகளை விடுத்து நமனுக்கிடுக்கணுண்டாக்கினன். இவ்விதம் இருவரு மாறிமாறிக் கணைகளை விடுத்து, ஒருவரை யொருவர் வெல்லக்கருதி, ஏழுநாளிடைவிடாது பெரும்போர் புரிந்தார்கள். கடைசியாக நமன், தனது காலதண்டத்தை தசமுகன்மீது விட எத்தனித்தான்.

இதனையறிந்த நான்முகன், தென்றிசைக் கோன்முன்குறுகி வரத்தில்மிகுந்த அரக்கர்கோன்மீது நீ காலதண்டத்தை விடுவாயாகில், அவன் பெற்றவரத்தினால், உனது தண்டம் அவனுயிரையுண்டிடாது. ஆனதுபற்றி அதைவிடாது நிறுத்தெனக்கூற, தென்றிசைக் கிறைவன், தண்டம் விடா தொழிந்து நின்றனன். நிருதர்குலாதிபன் வெற்றி தனதென்று கூறி, மாரீசன், மகோதரன் முதலினரோடு, தருமனுலகை விட்டுத் திரும்பிப் பாதாளலோகஞ் சென்றான்.

அந்நகருக்கரசனாகிய வாஸுகி அரக்கர்கோனிடம் அன்பு பாராட்டி யுறவாட அதைக்கண்டு மனமுவந்து, அதைவிட்டு நீங்கி தனக்கு நிகரில்லாதவர்களும் பெரும் வரமும் வலியும் பெற்று வாழ்ப வர்களுமாகிய, நிவாதகவசர்கள் வசிக்கும், வளநகரிவந்து புகுந் தான். அந்நகரவாசிகள், அடர்ந்துவந்து அரக்கர்கோன்மேல் அளவி லாப் படையைப் பிரயோகிக்க, இருதிறத்தாரும் ஒருவருக்கொருவர் சளைக்காது போர்புரிய, புண்டரீகப்புத்தேள் ஆங்கு வந்தடைந்து யுத்தஞ்செய்பவர்களைத்தடுத்து நீங்களிருதிறத்தாரும், பண்டைய வரத்தினால் வலுவில் ஒத்தவர்கள், ஆகையால், பல்லாண்டு போர் செய்தாலும் ஒருவரை யொருவர் ஜெயிக்க முடியாது. இருவரும் உறவாயிருப்பதே தகுதியென மொழிந்தார்.

நான் முகத்தோன் கூறியதை யிருவருமேற்று, தனித்தனியே சபதஞ்செய்துகொண்டு, அவுணர்கள் சிறப்பொடு பூசிக்க இராவ ணன், பன்னிரண்டு மாதம் அந்நகரில் வசித்தான். பிறகு அதைவிட் டுப் புறப்பட்டு, அரக்கர்கோன், வருணனை ஜெயிக்க மனத்தெண்ணி, கன்னகிரியடைந்து, அங்குள்ள காலகேயரையெல்லாங் கணத் திற்கொன்று, தன்னுடைய தங்கை சூர்ப்பநகையின் கணவனாகிய வித்துருசிங்கனையும் கொன்றான். பிறகு கடலரசன் மாளிகை யிற்புகுந்து வருணன் எங்குற்றானென்று வினவ, வருணன் குமாரர் கள் ஊழித் தீயெனப்பொங்கி, எதிர்த்துவந்து போர்புரிய அவ்வீரர் களைப்பாரில் வீழ்த்தினான். பிறகு தசக்கிரீவன், வருணன் எங்குற்றா னென, கடலரசன் அமைச்சர்கள், தசாநநன் முன்சென்று எங்க ளிறைவன் பிரமலோகஞ் சென்றிருக்கிறார். அவர் குமாரர்கள் தமக் காற்றாரா யழிந்து போனார்கள். உமக்கு ஒருவரும் எதிரில்லை நீர் சுகமே செல்லலாம் என்றார்கள். அதைக்கேட்டு அரக்கர்கோன், பகிரண்டமதிர ஆரவாரித்து, மதில் சூழ்ந்த இலங்கைநகர் வரும் பொழுது, அந்தணர்தங் கன்னியர்களையும், சுரர், அசுரர், இவர்க ளுடைய கன்னியர்களையும், அளவற்ற கந்திருவக் கன்னியர்களையும் கண்ணிற்கண்டு, அக்கன்னியர்களைப் பூனைவாயகப்பட்ட கிளிபோலக் கைப்பற்றித் தேர்மிசையேற்றித் தன்னகரம் கொண்டுவந்து சேர்த் தான். அதுகண்டு அக்கன்னியரின் தாய்மார்கள், கன்றிழந்த பசுப் போலக்கதறி, எங்கள் கன்னியருக் கிடுக்கண்செய்ததனால், கரிய கூந்தலையுடைய ஸ்திரீயின்பொருட்டு, இலங்கைநகர் பாழாகி, யதன் அரசனும் தன் முடியோடு தலையற்று விழுகவெனச் சாபமிட்டார்கள்.

கொடிய செய்கையுடைய சூர்ப்பநகை, தனது தமையனாகிய இராவணனிடம் வந்து, தன்னுடைய பத்தா, காலகேயர் வதமடைந்த பொழுது, வதையுண்டதை யறிவித்துக்கதறினாள். தசக்கிரீவன் தங்கையின் துயரத்தை யிதச்சொல்லால் மாற்றி, நமது தாயுடன் பிறந்தவள் குமாரர்களான, கரன், தூடணன், திரிசிரசு இம்மூவர்கள் வசிக்கும் வனத்திற்சென்று சுகமே யிருவென்று கூறியனுப்ப, அவளும் அவ்வாறே சென்று அவ்விடம் வசித்து வந்தாள். பிறகு தசக்கிரீவன், நிகும்பலை வனஞ்சென்று அவ்விடம் யாகஞ்செய்து கொண்டிருக்கும் மேகநாதனைக்கண்டு, நீ யிவ்விடம் செய்யும் காரியம் என்னவென்று வினவ, அசுரகுருவாகிய சுக்கிர பகவான், அரக்கர் கோனை நோக்கி, ஓ காவல! இவ்விடத்தில், அங்கிட்டோமம், கோமேதம், இராஜசூயம், அயமேதம், பஞ்சுவணம், வாசபேயம், பாசுபதம் என்று வேதங்களிற் கூறிய பெருவேள்வி யேழையுஞ் செய்து முடித்த பின் மகற்கு, கங்கையைச் சடையிற்றரித்த பரமன் வெளிவந்து, அழியாத் தேரும், சிலையும், அநேக பாணங்களும் உவந்தளித்து, யோகியருங் கலங்கும்படியான மாயாசத்தியில் மிக வல்லனாகக் கடவாயென்று வரமுங்கொடுத்துச் சென்றனர் என்று கூறினர்.

அக்காலை, கும்பகருணன் நித்திரை செய்யவும், மேக நாதன் யாக வேலையில் முயற்சி செய்திருக்கவும், இராவணன் திக்கு விஜயத்தில் திருஷ்டியுள்ளவனாயிருக்கவும், மதுப்புரத்தை யாளும் அசுரர் தலைவனாகிய மதுவென்பான், இலங்கைநகரிற் புகுந்து, இராவணன் சிறிய தாயாராகிய கும்பிநசியென்னுங் குணவதியை பலாத்காரமாய்க் கைப்பற்றிக்கொண்டு தன்னகரம் சென்ற செய்தியை அரக்கர் கோன் கேள்விப்பட்டு அடங்காத துக்கமுடையவனாகி, கோபமிகுந்து இதென்ன ஆச்சரியம்; பூனைச்செவியை யெலி மோந்து பார்த்ததையொத்திருக்கிறது. எனது தாயுடன் பிறந்தவளைக்கொண்டுபோய், மதுவென்பான் என்குலத்தின் மானத்தை யழித்தான். ஆகையால் விபீஷணனை நகரகாவலனாக இலங்கையில் தானே யிருக்கச்செய்து, கும்பகருணனை நித்திரையைவிட் டெழுப்பி யவனுடன் மேகநாதனும் யுத்த சன்னத்தனாகவும், நம்முடைய அரக்க சைனியங்கள் யாவும் உடனே போர்க்கோலத்துடனும் வர வேண்டியது என்று ஆஞ்ஞாபித்து, தானும் ஆயுதபாணியாகித் தேரின் மீதேறி மதுப்புரம் நோக்கிச் சென்றான். இதைக்கேட்ட மதுவின் தேவியும் சிறிய தாயுமாகிய கும்பிநசி யிராவணனிடஞ்

வந்து, அறிவிற் சிறந்த கண்மணியே! விதியை வெல்வதரிது, ஊழின் படி யாவும் நடக்கும், நீ கொண்டசினத்தை யொழித்து எனக்கு மாங்கல்யப் பிக்ஷை கொடுத்து என்பால் தயை செய்யவேண்டு மென்று வேண்டினாள்.

அரக்கர்கோன், சிறிய தாயார் வேண்டுகோளுக்கிரங்கி கோபந் தணிந்து, உனக்காக யாவும் சகித்தேன். நீ சென்று உன் கொழு நனை யென்னோடுறவா யிருக்கச் செய்யென்று கூற, அதைக்கேட்ட அவள் தன் கொழுநன்பாற் சென்று தென்னிலங்கை மன்னன் உம் முடைய நட்பு வேண்டி மதுப்புரத்தின் வாயலில் வந்து நிற்கிறார். நீர் சென்று அவருடன் தோழமை கொண்டு, அவர் தேவலோகத்தை ஜெயிப்பதற்கு உதவிபுரிய வேண்டுமென்று கேட்டுக் கொண்டாள்.

மதுமன்னன் அதற்கிணங்கி அரக்கர்கோனிடம் வந்து அவனைத் தொழுது பூஜிக்க, இலங்கை மன்னனும் அவனில்லம் சென்று ஒரு நாள் தங்கியிருந்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டு அளகாபுரிப் பட்ட ணத்தி னருகிலுள்ள அழகிய ஒரு பூஞ்சோலையில் வந்து தங்கினான்.

அரக்கர்கோன் அப்பொழிலின் அழகை நோக்கி, ஆச்சரியப் பட்டிருக்குங் காலையில், கதிரோன் இராவணனுடையபடையெடுப்பு எதற்கென் றறியாது, இவன் முன்னிற்பது, நமக்குத் தகுதியல்ல வென்று கருதி, மேற்றிசைக் கடலில் ஒளிப்பவன்போல் அஸ்தமன மாயினன்.

அக்காலை யிளந்தென்றலசைய, அனங்கசரம் பாய, அது கண்டு நெஞ்சம் பதைக்கப் பனைத்ததோளையுடைய அரக்கர்கோமான், அளகைநாதன் மகனாகிய நளகூபரனை யணையச்செல்லும் மின்னற் கொடிபோன்ற அரம்பையென்னும் மாதைக்கண்டான். வீடுற்றவரும் விரும்பும் அவள் அழகைக் கண்டு மனம் பதிந்து காதற்கடலில் மூழ்க, மாரனுந்தனது பாணத்தையேவ, இராவணன் மதிமருண்டு, இக்கன்னி புண்டரீக மாதோ, புனமயிலோ, பொற்கொடியோ வென் றையமுற்று, அம்மாதிடம் சென்று, ஓ பெண்ணே யுன்னாரேது, பேரியாது, உனக்குறவு யாவர் என்று வினவ, அப்பெண்மணி, திண் ணிய தோளையுடைய இருபது கண்ணனை நோக்கி, ஓ சிரேஷ்ட! என் பெயர் அரம்பை, குபேரன் குமாரனாகிய நளகூபரன் எனக்கு நாயகன், நான் என்பதியிடம் செல்கிறேன் என்றாள்.

அரக்கர்கோன் அது கேட்டு நகைத்து, யாவராயினும் வகித்துப் பொருள்தேடும் பொதுமகளிருக்குப் பதியுமுண்டோ வென்றுரைத்து, அவள்மேல் விழுந்து கட்டியணையப் புகும்பொழுது, அரம்பை, நடுங்கி, ஓ குன்றனைய தோளையுடையவரே, புலஸ்தியன் பேரனாகிய உமது தமையன் வயிற்றுதித்த குமாரன் எனது நாயகன், பார்க்கு முறையில் அவர் உமக்குப் புதல்வன். ஆகையால் நீர் எனக்கு மாமன்; முறையற்ற இக்காரியத்தைச் செய்யாது விடுமென்று கூற சகிக்காதவனாய்ச் சிந்தைதடுமாறி புரிகுழலைப்பற்றிப் போகம் புரிந்தான்.

அரம்பை அதுகண்டு சகிக்காதவளாய், நீ என்னுடைய சம்மதமின்றி யொரு தலைக்காமமாக என்னைப் புணர்ந்தபடியால், இனி தேவலோகமாதாயினும் பூலோகமாதாயினும், மற்றெந்த நிலமாதாயினும் அவர்களிஷ்டத்துக்கு விரோதமாகப் புணர்வாயானால் நீ வெந்து சாம்பலாகக் கடவாயென்று கூறி, தனது நாயகனிடம் சென்று நடந்ததைக் கூற நளகூபரன், பொல்லா வொழுக்கமுடைய அவ்விராவணனது பொன் முடியோடு கூடிய சிரங்கள்பத்தும் பொடியாகி வீழ்கவெனச் சபித்தான்.

மறுநாட் காலையில், தசமுகன் தானைசூழப் புறப்பட்டு பொன்னுலகத்தை நாடிச்சென்றான். வானோர்மன்னவன் அதனைக்கண்டு தனது சேனையோடு வந்தடுக்க, இருதாத்தாரும் தத்தம் ஆயுதங்களைக்கொண்டு, கண்டவர் வியக்கத்தக்க போர்புரிந்தார்கள். அக்காலை சுமாலி, வசுக்கள் எண்மருடன் போர்புரியவந்து தாக்கினான். அது கண்ட இந்திரன் கோபமிகுத்து, சுமாலி யேறிவந்த தேரைச் சின்னபின்னமாக்கி, அவன் தலை பூமியில் இற்றுவீழும்படி செய்தான். சுமாலீ மாளவே அரக்கர் சைனியம் பின்னிடைய, அதைக்கண்ட மேகநாதன் தனது தேரைநடத்தி சைனியங்களை யணிவகுத்து இந்திரன் குமாரனாகிய சயந்தனைத் தாக்கினான். இருவரும் ஒருவரையொருவர் வெல்லக்கருதிப் போர்புரியுங்காலை, மேகநாதன் விடுத்த வாளிக்காற்றாது மயங்கிய சயந்தனை, அவன் தேர்ப்பாகனாகிய மாதலிமைந்தனை கோமுகன் தனது தேரைப் போர்க்களத்தைவிட்டு விலக்கினான். அதுகண்டு வானவர் சைனியம் திசைகெட் டோடினர். இச்செய்தியைக்கேட்ட சதமகன், கோபம் மீறித் தேர்கொணர்க வென, தக்ஷணம் மாதலி கொணர்ந்த தேரின்மீதேறிச் செருக்களம் நோக்கி வந்தான்.

கங்கையைச் சடையிற்றரித்த பரமன் வாழுங்கைலையைப் பேர்த் தெடுத்த இராவணன், செங்கையில் வில்லேந்தித் தேரூர்ந்துவந்த இந்திரனைத் தாக்கமுயன்றான். அதனைக்கண்ட மேகநாதன், தனது தந்தையை நில்லெனத்தடுத்து போருக்கடுத்த தேவர்சைனியங்களை நாசப்படுத்தி, மத்தடை தயிர்போற் சின்னபின்ன மாக்கினான்.

அமரர் தானையும், இரக்கமற்ற அரக்கர்களை யெதிர்த்து வடிக் கணை தொடுத்து, அவனுடலெங்கும் குருதி சொரியச்செய்தனர். அந்தச் சமயம் கும்பகருணன் அம்பரம் நடுங்க தண்டுகொண்டு தாக்க வசுக்கள் முதலிய அமரர் அவனையடுத்து வடிக்கணைதொடுத்து அவன் மேனியெங்கும் இரத்தம் எழக்கண்டார்கள்.

அதுகண்டு தசமுகன், வடவைத்தீயென மனங்கொதித்து, சிலையை வளைத்து உம்பர்மீது அம்புமாரி பெய்தனன்.

தேவேந்திரனும், இராவணனது பட்டத்து யானையின்மேலினும் தேர்ப்பாகன் மீதிலும், வீரராகிய அரக்கர்கள் மார்பிலும், தசக்கிரீ வன் உரத்தினும் சிரத்தினும் கோடையிடியையொத்த வாளியைப் பிரயோகித்தான்.

அக்காலை அரக்கர், தென்னிலங்கை மன்னன் அழிவுற்றனன் என்று திகைத்தனர்.

அதுகண்டு மேகநாதன் அழன்று, தனது தந்தையை வளைத்த இந்திரனது தானையையடித்து, அண்டர்கட்கரசனது மார்பினும், அவனேறு தேரினும், தோப்பாகனாகிய, மாதலிமீதினும், கணக்கற்ற வாளிகளைப் பிரயோகித்து, பட்டறியாத பாடுபடத்தாக்கினான்.

தேவேந்திரன், தரிக்காதவனாகித் தனது ஐராவதத்தின் மீதேறிவந்து போர்புரிந்தான்.

தசக்கிரீவன் மகன் உபர்தேரேறி கொன்றை மாலையைத்தரித்த பரமசிவத்தினிடம் பெற்றவரத்தினால் தேவலோகம் இருள்மூட மாயப்போர் விளைத்தான். தேவர்கள் மயங்கியொன்றுமுணராதவர்க ளாயினர். தானவர்கோனும் செய்வதொன்றறியாது சிந்தை கலங்கி நின்றான். மேகநாதன் கொடியபாசத்தால் தேவராஜனைக்கட்டினான். அரக்கர்கள் தங்களுக்குக்கிடைத்த ஜெயத்தினால் நிருத்தனமாடி னார்கள். சுரர்கள் மதிமயங்கித் திசைகெட்டோடினார்கள்.

ஜெயம்பெற்ற மேகநாதன், தனது தந்தையை வந்தடுத்து எந் தையே, என்னெதிர் நிற்கமாட்டாமல் இந்திரன் என்கைப்பட்டான்;

உனக்கெதிரி யொருவருமில்லை; உருப்பசி முதலாயுள்ள தேவஸ்திரீ களும், வானவர்களும் உன்னடி வணங்க இவ்வுலகத்தை நீயே யாளென்று கூறினன்.

அதைக் கேட்ட இராவணன், தனது இருபது கைகளாலும் மேகநாதனைக் கட்டித்தழுவினன். மேகநாதன் இந்திரனோடு தன் பொன்னகரம் மேவி, தேவர் மன்னவன்றன்னைச் சிறையில் வைத்தான்.

அமரர்கள், பிரமதேவரிடம் சென்று நடந்ததைத் தெரிவித்து, அவரையுமழைத்துக்கொண்டு, தென்னிலங்கை சென்றார்கள்.

மலரயன், இலங்கேசனைக்கண்டு, ஓ ஒப்பற்ற வலுவுடைய வீர! உனக்கெதிரி யொருவருளரோ! உனது மைந்தன் இந்திரனை யிங்கு சிறை வைத்ததினால், அவனுக்கு இன்று முதல் இந்திரசித்தென்னும் நாமம் உலகமெல்லாம் வழங்குக, சந்திரனைச் சடையிற்றரித்த பரமன் வாழுந்தடவரையை யெடுத்த திண்டோளையுடைய இராவணனே, விண்ணவர் என்னை முற்கொண்டு இவ்விடம் வந்ததாலுனக்கு இன்னும் கீர்த்தி மிகுத்தது. இந்தக்ஷணமே தேவராஜனைச் சிறையில் நின்று விடுவித்தனுப்பென்று கூறினர். அதனைக்கேட்ட தசமுகன், கமலாசனனை நோக்கி, வானவர் கோனை விடுவதின் பலனாக, இப் புவன முள்ளளவும் நான் சாகாதிருக்க வரந்தரவேண்டுமென்று கேட்க, பிரமன் சராசரமான யோனிகளிற் ஜெனித்த வுயிர்கட்கெல்லாம் நித்தியதத்வம் பெறுவதரிதென்று கூற, அது புலப்பட்ட மேகநாதன், நான் செய்யும் வேள்வியிற் பிறந்த தேரின்மீதேறிப் போர்புரிந்தால் எனக்கு நாசம் வாராதிருக்கவும், அவ்வேள்வி முற்றுப்பெற்றால், என் பகைவர் யாவராயினும் எனக்கெதிர் நில்லாமற்றோற்கவும், வரம் வேண்டுமென்று கேட்க, விரிஞ்சன் மனமுவந்து நீ யவ்வாறே பெற்றாயென்று கூற, அரக்கன் மகன் சிறையிலிருந்த தேவர் கோனை விடுவித்து, இறைபவன் முன்பு கொணர்ந்தான். வானவர் காவலன், தனக்குற்ற மானக்கேட்டுக் காற்றாதவனாகி, மற்றியாவரையும் பாராது தராதலத்தையே நோக்கி நின்றான்.

அத்தகைய தேவேந்திரனை, அயன் நோக்கி ஏ தேவலோக காவல! முன்பு கௌதமனிட்ட சாபத்தால் இத்தகைய துன்பமுனக்கு நேரிட்டது, நீ மனவருத்தமடைய வேண்டாம், உன்பதிக் கேகென்று செப்பித்தானும் பிரமலோகஞ் சென்றனர்.

இராவணன், உலகம் எல்லாவற்றையும் ஜெயித்து அவைகளைத் தன் வசமாக்கிக்கொண்டு மிகவுங் கீர்த்தியுடனுண்டு வந்தான்.

இத்தகைய மஹிமையுடைய அந்த இராவணனையும், கொடிய துஷ்டனுகிய கும்பகருணனையும் நீர் வதம் செய்தீர். மஹா வரப்பிரசாதியாகிய மேகநாதனை மஹாத்மாவாகிய லக்ஷ்மணர் வதை செய்தார். நீர் பிரத்யக்ஷமாகிய நாராயணன். உலகங்களுக்கு நன்மையைச் செய்பவர். ஸ்தாவர ஜங்கமவடிவமான உலகம் யாவற்றும் உம்முடைய சொரூபமே. உலகத்தைச் சிருஷ்டித்த பிரமதேவர் உம்முடைய நாபிக்கமலத்திலுதித்தவர். தேவர்கள் உம்மைச் சார்ந்தே யாகத்தில் ஹவிஸைப்புசிக்கிறார்கள். யாவரும் உம்மை ஆச்சிரயித்தே ஜீவித்திருக்கிறார்கள். பாலில் நெய்போல் நீர் எங்கும் வியாபித்திருக்கிறீர். ஞானக் கண்ணுள்ளவன் உம்மை யெங்குமிருப்பவராகப் பார்க்கிறான். அஞ்ஞானிகளும்மைப் பார்க்கிறதில்லை. யோகிகள் உம்மைத் தங்கள் சரீரத்திலேயே பார்க்கிறார்கள்.

ஓ ராம, நீர் எல்லோருடைய இருதயத்திலிருக்கும் விஷயங்களை யறிந்தவர். நீர் விஞ்ஞான நேத்திரமுடையவர். நிர்மலர். விளையாட்டாக மானிட வடிவங்கொண்டவர். மாயாகுண விசேஷத்தால் விளையாடுகிறீர். இப்போது உம்மாலேவப்பட்ட நான் இராக்ஷதர்களின் பிறப்பையும், அவர்கள் பெற்ற வரப்பெருக்கையும், அவர்கள் கொண்ட செருக்கையும் கூறினேன். சின்மாத்திர ரூபியாகிய உம்மை நானறிந்து உம்மை யநுசரித்து உம்முடைய அனுக்ரஹத்தால் நான் சஞ்சரிக்கிறேன் என்றார்.

இவ்வாறு கூறிய கடத்திற் பிறந்த குறுமுனியைப்பார்த்து, சூரியவம்சத்துக்குக் கீர்த்தியை யுண்டாக்கிய இரகுநாதன், மந்தஹாஸம் செய்து, இந்தப்பிரபஞ்சம் யாவையும்மாயைச்சார்ந்தது, என்னைத் தவிர மற்றொன்றில்லை, என்னுடைய லீலாகதை யுலகத்திலுள்ளவர்களுடைய பாபத்தைப் போக்கக்கூடியதென்று தெரிந்து கொள்ளுமென்றார்.

அகஸ்தியர், ஓ பிரபுவே யாவற்றையுமறிந்த தங்கள் முன்னிலையில், நான் ஏதோ கூறினேன் மன்னிக்கவேண்டும். நான் தங்களுடைய அநுக்ரகத்தையடைந்தவன், ஏகரும் சின்மாத்ரரும், அக்ஷரரும், ஸர்வஞ்ஞரும், ஈச்வரரும், கணக்கற்ற குணமுடையவரும், பஜிப்பவர்களுக்கு வேறுபடாதவருமாகிய உம்மை நான்பஜிக்கிறேன் என்றார்.

## 2-வது சருக்கம்.

---

உலகத்திலுள்ள *பலநதம், நதி யிவைகளுக்குப் புகலிடமா யுள்ள கடலை, உளுந்தளவுப் பிரமாண மாக்கி ஆஜமனம் பண்ணின குறுமுனி யுரைத்த இராவணனுதியர் உற்பத்தியையும், தவ மகிமை யையும், அதனாலடைந்த கீர்த்திப் பிரதாபத்தையும் கேட்ட இராமசந்திரன், அதிக வியப்படைந்து, அகஸ்திய முனிவரை நோக்கி, "ஓ தவநிதியே! இக்கடல் சூழ்ந்த வுலகத்தில் ஒருவராவது இராவணனை விட வலியுள்ளவரா யிருந்தாரென்று தாம் கூறவில்லை. அப்படிக்கு ஒருவரு மில்லையா? இருந்தால் அவர்களை யெடுத்துச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

குறுமுனி, "ஓ பிரபுவே! தன்னை வந்தெதிர்க்கும் மாற்றலரின்றி யுலகத்தை யாண்ட ஆயிரந் திண்டோளுடைய கார்த்த வீரியனுக்கும், மஹா வரப்பிரசாதியும் மிக்க வலிமையு முடைய வாலிக்கும், அரக்கர் கோனாகிய தசக்கிரீவன் வலுவிற் குன்றி யிகழ்ச்சி யடைந்தான்" என்று செப்பினார்.

மாட்சிமை தங்கிய இராகவன், "ஓ தூயமாமுனியே! அக்கதையை விரித்துச் சொல்லவேண்டு"மென்று மிக்க ஆவலுடன் கேட்டார்.

கடத்திற் பிறந்த குறுமுனிவர் "ஓ இரகுகுலாதிபனே! அரக்கர் கோன் உலகெலாம் ஜெயித்து, தேசமன்னரை யெல்லாங் கீழ்ப்படுத்தி வரும் நாளில், ஒரு நாள் மாஹிஷ்மதி நகரம் சென்று, அந்நகரத்தையாளும் கார்த்த வீரியார்ச்சுனன் எங்குற்றான், இலங்கா புரி மன்னன் யுத்தத்துக்கு வந்திருக்கிறான் என்று தெரியப்படுத்துங்கள் என்று கூறினான். அருச்சுனனுடைய அமைச்சர்கள், எங்கள் இறைவர் அழகிற் சிறந்த அநேக ஸ்திரீகளுடன் ஜலக்கிரீடையை விரும்பி, நருமதை யென்னும் நதிக்குச் சென்றிருக்கிறார் என்று புகன்றார். அரக்கர்கோன் அதுகேட்டு அவ்விடம் செல்லக்கருதி, அழகிய பூஞ்சோலைகள் சூழ்ந்து, ஆயிரம் சிகரத்தோடு கூடி விளங்கும் விந்திய பர்வதத்தை யடைந்து, அதனை யடுத்த நருமதை யென்னும் நதியைக் கண்ணுற்று, பெருமை வாய்ந்தொழுகும் அந்நதியில் தன்

---

* நதம்.—கிழக்கிலிருந்து மேற்கிலோடும் ஆறு.

னமைச்சர்களோடு ஸ்நானம் பண்ணி, விஷத்தைக் கண்டத்தில் தரித்த பரமசிவத்தைப் பூசிக்க மணலால் ஒரு லிங்கம் ஸ்தாபித்து, வந்தனை வழிபாடுடன் பூசித்தான்.

அச்சமயம் கார்த்த வீரியார்ச்சுனன், கரிய கூந்தலையுடைய * தெரிவையருடன் நீர் விளையாடற் பொருட்டு ஜலந்தேங்க, அந்நதியின் பிரவாகத்தைத் தன் ஆயிரம் கரங்களாலும் கட்டித் தடுத்திருந்தான். அருச்சுனன் நீராடிக் கொண்டிருக்கையில் தன் கரங்களையெடுக்கத் தேங்கி நின்ற அந்நதிப்பெருக்கு, இருகரையும் புரளச் சென்று அரக்கர் குலாதிபன் செய்யும் பூசையைக் கலைத்தது. இலங்கேசன் அதுகண்டு மனந்திகைத்துக் கோபமிகுத்து, இவ்விதம் நிகழ்ந்ததற்குக் காரணமென்ன வென்றறிந்து வர, இரண்டு சாரணர்களை யனுப்பினன். அச்சாரணர்கள் சென்று, வீரிற் சிறந்த அருச்சுனன் தனது ஸ்திரீகளுடன் விளையாடுவதற்கு ஜலம் போதாமை கண்டு, ஆற்று நீரைத் தன்னுயிரங் கைகளாலும் அடைக்கத் தேங்கி நின்ற ஜலம் மறுபடியும் விடுபட்டு வந்து பூசையைச் சிதைத்த தென்று தென்னிலங்கை மன்னனுக்குச் செப்பினர்கள்.

அதைக்கேட்ட இராக்கதர் காவலன், தனது மந்திரியுடன் அருச்சுனன் நீராடுமிடத்திற்குச்சென்று, அவனது அமைச்சரைக் கண்டு, இப்போது உன்னுடன் போர்புரிய இராவணன் வந்திருக்கிறுனென்று உமது காவலனுக்கு உரைத்திடுங்களென்று கூறினன். மிகுத்த வலியுடைய அவ்வமைச்சர்கள், எமது அரசன் தனது தெரிவையர்களுடன் போராற்றி லிறங்கி நீர் விளையாடும்போது நீர் போர் புரிவதற்கழைப்பது முறையற்ற காரியமாகும், ஆகையால் நீர் நாளையதினம் வாருமென்று அறிவித்தார்கள்.

இராக்கதர் கோமான் மனம் பொறுதவனுகி, அத்தாதல மன்னன் அமைச்சர்கள்மேல் தாக்க, அவர்களும் அரக்கனுடன் போர்செய்யத் தொடங்கினர்கள். அதுகண்டு தசமுகன் அமைச்சர், அருச்சுனன் அமைச்சர்களுடன் போர்புரிய வந்தடுத்தார்கள். இருதிறத்து மந்திரிகளுக்கும் பெரிய யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் அருச்சுனன் மந்திரிகள் தோற்றுப்போக, அவர்கள் படைகள் தங்களிறைவனுகிய கார்த்தவீரியார்ச்சுனனிடம் சென்று தெரிவித்தார்கள். அதைக்கேட்டு தன்பால் நீர் விளையாடும் ஸ்திரீகள் நடுக்கமுற, அருச்சுனன் அம்மங்கையரைப் பயப்படாதீர்களென்றுரைத்து, நதியை

* தெரிவையர்—ஸ்திரீகள்.

விட்டுப் புறப்பட்டு, ஊழித் தீயெனக் கொதித்து, இலங்கைமன்னன் படைக்களத்துக்கு வந்து, பிரஹஸ்தன் என்ற அரக்கர் மந்திரியுடன் போர் புரிந்து, அவனைத் தரையிற் சாய்த்திட, பின்னுமெதிர்த்த மகோதரன் முதலிய மந்திரிகளும் அருச்சுனன் போருக்காற்று தொழிந்தார்கள்.

அதைக்கண்ட இராவணன், தண்டாயுதத்தைக் கையிற்பற்றி, ஆயிரந்திண்டோளுடைய கார்த்த வீரியார்ச்சுனனுடன் வந்து போர் புரிந்தான். எண்டிசைக்கரிகளிரண்டு மெதிர்த்துச் சமர்புரிந்ததை யொப்ப அரக்கனும், அருச்சுனனும் போர்செய்யுங்கால், இராக்கதர் மன்னன், காற்றெனமுடுகி, அருச்சுனன் மார்பிற் குத்த, அக்குத் தைத் தாங்கியும் கலங்காமனின்று அவ்வருச்சுனன், இராவணனது உரத்தில் குத்த, அக்குத்துக்காற்றாது அரக்கர்கோன் தரையிற் சாய்ந்தான்.

அப்போது, ஆயிரந்தோளையுடைய அருச்சுனன், தனது குத்துக் காற்றாது களைத்து வீழ்ந்த இருபது தோள்களையுடைய இராவண னைத் தோள்கள் நெருங்கக் கட்டிப் பிணைத்துத் தன்னகர் கொண்டு போய்ச் சிறையில் வைத்தான். எஞ்சி நின்ற அரக்கர்கோன் மந்திரி யாகிய மகோதரனாதி இராக்கதர்களையும், தன்னிலை குலைந்து வந்த வழி திரும்பி ஓட்டம் பிடிக்க அடித்தான். போரிற் றோற்றுப்புறங் கொடுத் தோடிவந்த அரக்கர்கள், விபீஷணனிடஞ் சென்று, இராவ ணன் ஹைஹய நகரஞ் சென்று, கார்த்த வீரியார்ச்சுனனிடம் போர் புரிந்து தோல்வியடைந்தது மல்லாமல், அந்நகரில் அருச்சுனனால் சிறைப்பட்டிருப்பதையுந் தெரிவித்து நின்றார்கள்.

உத்தம குணத்தில் தலைப்பட்டு நிற்கும் விபீஷணன் சித்தத் தில் பரிதாபமுற்றவனாகி, நொந்த சிந்தையனாய்ப் பிரமலோகஞ் சென்று, இரணியகருப்பன் திருவடியில் அடியற்றமரம் போல் சாஷ் டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து நின்று, எந்தையே! எனது பிராதா கார்த்தவீரியன் கையிலகப்பட்டு, அந்நகரிற் சிறைப்பட்டிருக்கிறான், தேவரீர் திருவுள மிரங்கி யச்சிறையினின்று மவனை விடுவிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தான்.

* அன்னவூர்தி, தன்னடியில் வந்து வணங்கித் தெரிவித்துக் கொண்ட விபீஷணனாது வேண்டுகோளுக்கிணங்கி, ஒரு முனி வடிவ

* அன்னவூர்தி—பிரமதேவர்

மாகி, நெடிய மதில்சூழ்ந்த ஹைஹய நாட்டுக்குச் சென்று, அந்நாட்டு மன்னனைக் கண்டார்.

கார்த்த வீரியன், தன்னிடம் வந்த முனிவரைக்கண்டு எழுந்து, அவர் திருவடியில் வணங்கி யர்ச்சனைசெய்து உபசரித்து, ஓர் திவ்வி யாசனத்தில் எழுந்தருளச்செய்து, ஐயனே! இங்குவந்த காரணம் யாதெனக் கேட்க, முனிவர் வேடம்பூண்ட சதுர்முகன், அருச்சுனனை நோக்கி, ஓ தராபதி! இந்திராதியரையும் வென்று கீர்த்தி பெற்ற இராவணன் உனது தலைக்கடையிற் சிறைப்பட்டுள்ளான். உன்னு டைய புகழ்ச்சி யாவராலு முரைப்பதற்கரியது. இன்னமும் உனக்கு வலியுண்டாகக்கடவது, நீயிப்போது அவ்விராவணன மேற்கொண்ட சீற்றத்தைத் தவிர்த்து, அவனைச் சிறையினின்று விடுவித்தனுப் பென்று செப்ப, அருச்சுனன் அதற்கிணங்கி, ஆரியமனத்தனுகி அரக்கர்கோனைச் சிறைவிடுத்து அனுப்பினான். முனிவடிவுற்ற திசை முகன் தசமுகனை விபீஷணனுடன் இலங்கைக்கனுப்பிவிட்டுத் தன் னுலகடைந்தார்.

இராவணன், தன்னகரடைந்து வாழும் நாளில் காலனை யொக்கும் சால்பினையுடைய வாலி வாழும் கிஷ்கிந்தை நகரம் சென்று, அங்கு வாலி யில்லாமையைக்கண்டு, இப்போது வாலி யிங் கில்லையோ, அவன் எங்குற்றான் என்று கெம்பீரத்துடன் கேட்டான். வாலியின் பத்தினியாகிய சீரிற் சிறந்த தாரை, நீர் இருள் காலத்தில் இங்குவந்த காரணம் என்ன வென்று வினவினாள். தசாநநன், நான் வாலியோடு போர்புரியக் கருதி வந்தனன் என்றான்.

அறிவிற்சிறந்த தாரை, இராவணன் கூறியதைக் கேட்டு, ஆ! மிகவும் நல்லதாயிற்று, வலுவில் மிகுந்த துந்துபி முதலியோர் எனது பத்தாவுடன் எதிர்த்துப் போர்புரிந்து, அவர் ஆற்றலுக்காற்றாதவ ராய் எமலோகஞ் சென்றார்கள். அவர்களெலும்புக்குவைகள் தான் இந்தமலைகள். இதனையறிந்துகொள். அவரோடு நீர் சமர் தொடுப் பீரானல், உமக்குச் சாவு நிச்சயம்; பதறவேண்டாமென்றாள்.

தாரை செப்பிய வார்த்தையைக் கேட்ட இராவணன், நீ செப் பிய வண்ணம் ஆகிறதாகட்டும், அத்தகைய வாலியை யிப்போதெங்கு காணலாமென்று பரபரப்புடன் கேட்டான்.

இரக்கமுற்ற தாரை அரக்கனுரைத்த வார்த்தையைக் கேட்டு, நீர் இவ்வளவு அவசரப்பட்டவரானல், அவர் சிவபூசைபுரிகின்றதம்

தென்றிசை சென்றிருக்கிறார். அத்திசை நோக்கிப்போனால் காணலாமென்று நவின்றாள்.

இலங்கேசன் அவ்வாறே தென் சமுத்திரக் கரை மேவி, அங்கு பத்மாசனத்தமர்ந்து, பஞ்சேந்திரியங்களையுஞ் ஜெயித்து, ஏகாக்ர சித்த மடைந்து, உள்ளமெனுங் கிழியில் பரசிவத்தின் திருவுருவத்தை நிர்மாணித்த, க்ஷணத்தால் பாத்தியம் கொடுத்து, ஞான தீர்த்தத்தா லபிஷேகித்து, சித்தமாகிய பாத்திரத்தில் அகங்காரத்தைத் தூபமாகவும், அபிமானத்தைத் தீபமாகவும் கொடுத்து, பிராணனை மஹா நைவேத்தியமாக நிவேதனித்து, நாதத்தை மந்திர புஷ்பமாக உபயோகித்து, பக்தியே ஸ்தோத்திரமாக ஸ்தோத்திரித்து, பரம்பொருளைப் பாவிப்பணிந்து அந்தரியாகபூஜை செய்கின்ற மேருவை யொத்த மேனியையும், சூரியனையொத்த திருமுகத்தையும், சுராசுரர்களுக்காகத் திருப்பாற்கடலை, அமுதெழக்கடைந்த வீரத்தையுமுடைய வாலி, புத்தியைப் புறத்தே செலுத்தாது, பரவசனாகி ஊனக்கண்ணை மூடியிருப்பதைக் கண்டான்.

கண்டதும், இந்திரன் முதலிய தேவர்களுக்கிடையூறு விளைவித்த வீரனாயினும், சிரேஷ்டபுத்தியை யிழந்து துர்ப்புத்தியை யடைந்து, இச்சமயமே வாலியைச் ஜெயிப்பதற்குள்ள காலமெனக் கருதினான். கிஷ்கிந்தை மன்னன் அவ்வேளை, கண்ணைத்திறந்து பார்த்தும் ஒன்றும் அறியாதவன்போல, மறுபடியுங் கண்மூடி யிருந்தான்.

உடனே அரக்கர் கோன், மெள்ளப்பதுங்கி வந்து, தன்னிருபது கரங்களாலும், விறல் மிகுத்த வாலியைக் கட்டிப் பிடித்தான். தாரை கொழுநன், மண்டோதரி மணாளனைத் தன் கரத்தால் நெருக்கிப் பிடித்து வாலினாற் சுற்றிக்கட்டி, நெற்றிக்கண் படைத்த கடவுளின் பூஜையை முடித்துக்கொண்டு, படத்தையுடைய அரவினைப் பற்றி ஆகாயத்திற் பறக்குங் கருடனை யொப்ப மேற்கடல் பாய்ந்தான்.

வாலிபாய்ந்த பாய்ச்சலின் விசையால், எதிர்ப்பட்ட மலையும், மரங்களுமுறிந்து கீழே விழுந்தன. இராவணனை மீட்கப் பின்றொடர்ந்த மகோதரன் முதலிய அரக்க வீரர்கள், வாலி செல்லும் விசையினாலுண்டாகும் காற்றினால் மொத்துண்டு முரணழிந்து கீழ் விழுந்தனர்.

வாலி யொரே பாய்ச்சலில் ஒன்பதினாயிரம் யோசனை கடந்து இமய மலையை யடைந்து, அங்கிருந்து பாய்ந்து ஒன்பதினாயிரம் யோசனை தூரத்துள்ள ஏமகூட மணைந்து, அதிலிருந்து உந்தி ஒன்பதினாயிரம் யோசனைக் கப்பாலுள்ள நிடதமலையைச்சார்ந்து, அதை யடுத்த மேற்புறக்கடலை யணுகினான்.

வாலி யவ்விடத்திலிருந்து, நீலகண்டனை விதிப்படிப் பூசித்து முடிந்த பிறகு, மேற்கடலை விட்டுக்கிளம்பி, வடக்கு நோக்கித் தாவி, ஒன்பதினாயிரம் யோசனை தாண்டி, நீலமால்வரையை மேவி, அதினின்று பதினோராயிரம் யோசனைக்கப்பாலுள்ள சுவேத மலைசென்று, அங்கு நின்று பாய்ந்து தனித்தனி பதினோராயிரம் யோசனை தூரமுள்ள குரவம், செருந்தி யென்னும் மலைகளைக்கடந்து, அப்பாலுள்ள வடகடலைக் குறுகி, அங்கு இடபவாகனத்தோனை, நியமப்படி பூசித்து, அவ்விடம் விட்டுக்கிளம்பி, மேலைச் சமுத்திர முதல் வட சமுத்திரம் வரையுள்ள யோசனை தூரங்கடந்து, கீழ்த்திசையுள்ள பாற்கடலை நண்ணி, அங்கிருந்து சுடலைபாடியை விதிப்படிப் பூசித்து, அவ்விடம் விட்டெழுந்து வடதிசை முதல் தென்திசை வரையிலுள்ள தூரத்தை ஒரே தடவைபிற்றாண்டி, மாடமாளிகை கூட கோபுரங்கள் நிலைபெற்று விளங்கா நின்ற கிஷ்கிந்தை நகரத்திற் புகுந்து, மணி மாடம் அமைந்தொளிரும் தனதாண்மனைக்குள் வாலினாற் கட்டித் தூக்கிய இராவணன் அந்நிலையிலேயே தொங்கப் பிரவேசித்தான்.

வாலிவரவைக்கண்டு அகங்குளிர்ந்த தாரை யவனடியில் வந்து வணங்கி நின்று, வாலிற்றொங்கும் அரக்கர் குலாதிபன் படுந்துன்பத்தைக்கண்டு, மனம் பொறாதவளாய், வீரக்கழலை யணிந்த வாலியை நோக்கி, ஐயனே தங்களது வாலிற்றொங்கு மிவன் யார், இனிமேலாவது இவனை விட்டு விடுங்களென்று வேண்டினாள்.

தாரை, பரிதாபத்தோடு கூறிய வார்த்தையைக் கேட்ட குரங்கினத்தலைவன், அரக்கர் கோனை வாலினின்று விடுவித்து, அவனை நோக்கி, ஓ இராக்கத மன்னனே! நான் கறை மிடற்றண்ணலைப் பூசிக்க வேண்டி, நாற்கடற்புறத்துஞ் செல்லும் வேளையில், நீ யென்னை வந்தணுகின காரியம் இன்னதென் றறிகிலேன். அதனை விரித்துரைக்க வேண்டுமெனக் கேட்டான். அரக்கர் மன்னவன் விருப்போடு வானரகுலாதிபனை நோக்கி, ஓ வீரரிற் சிறந்த தீரனே! நான் உன்னோடு போர்புரிய எண்ணங்கொண்டு வந்தடுத்தேன்; ஈதுண்மையென மொழிந்தான்.

வாலி, இராவணனைப் பார்த்து, ஏ மின்னொளிர் முடியாய், ஒருக்கால் வென்றவர் தோற்பார், ஒருக்கால் தோற்பவர் வெல்வார் ஈதுலகியற்கை. ஆகையால், நீ யென்னுடன் சமர்புரிய விரும்புவாயாகில், அமர்தொடங்கெனக் கூறினன். அரக்கர்கோன், வாலியை நோக்கி, கரைந்த மனத்துடன் ஒ குன்றனைய நெடுந்தோளாய்! இன்று நான் உனது வாலில் கட்டுண்டு பட்டது கிடக்க, இன்னமும் பொருதல் வேண்டுமோ, இன்று முதல் நான் உன்னுடைய தோழனுமையை விரும்புகிறேன் என்று கூறினன். கலக்கமில்லாமல் அரக்கர்கோனுரைத்த சிறப்பமர் மொழியை விலக்க மனமில்லாமல், வானோர் மாற்றலர் பக்கமிருந்து, திருப்பாற் கடல் தகழியாகவும், பொருப்பிற் சிறந்த மகமேரு மத்தாகவும், நெருப்பையொத்த விஷத்தையுடைய வாசுகி நாணாகவுங் கொண்டு, நரை, திரை மூப்பற்றுச் சிரஞ்சீவியாகவும், சுகசீவியாகவும் வாழும் வாழ்வை யளிக்கும் அமுதமெழக் கடைந்த வாலி, இலங்கைமன்னன் மீதுள்ள ஆராக்காதலினால், தன திருகரங்களாலும் அவனைக் கட்டித்தழுவி யன்பு பாராட்டி, அறுசுவையோடுங்கூடிய இனிய வமுதூட்டி, நயவசனமுரைத்து ஒரு மாதம் வரை தன்னருகில் வைத்திருந்து, நீ விரும்பியவாறே இந்நாள் முதல் என் பிராதா நீயென்று செப்பி இராக்கதர் மன்னனை விடுத்தான்.

அலைகள் புரண்டெழுந் திருப்பாற் கடல்மீது அரவணையிற் பள்ளி கொள்வதை நீத்து, பாதகண்டத்துக்குத் தலைநகரென்று விளங்கும் அயோத்திமாநகர் வந்தடுத்து, தசரதச்சக்கரவர்த்தி திருமகனுக வுருவெடுத்து, திசைமுழுதும் உமது கீர்த்தி விளங்கத் தசமுகனுதி இராக்கதர்களை வேரறுத்து, இப்பூமண்டலத்திலுள்ள ரிஷீஸ்வரர், முனீஸ்வரர் முதலானோர் பட்டதுன்பத்தை யடியோடு தொலைத்து, வேதவித்துக்களை யாகாதி, எக்ஞாதி சற்கருமங்களையும் யாதொரு விக்கின மின்றி நடத்த விடுத்து, உலகத்திலுள்ள சகல ஆன்மாக்களும் உமது லீலையைக் கூறும் அத்யாத்ம ராமாயணத்தில் அன்பு வைத்து, பக்தியோடு நித்தியம் பாராயணம்பண்ணுவதினாலும், கிரமப்படி பூசிப்பதினாலும், இம்மையில் சகல போகங்களையும் அனுபவித்து, மறுமையில் வைகுண்டாதி சொர்க்கபோகங்களையுந் துய்த்து நித்திய சூரியர்களாக விளங்கச்செய்த, ஓ கருணாநிதியே! யான், உமது கிருபைப்பிரபாவத்தை யென்னென்றெடுத்துக் கூறுவது; ஆயிரம் பணமுடிகளையுடைய ஆதிசேடனுங் கூறுவதற்கு அசாத்திய

மானது. இத்தகைய பெருமைவாய்ந்த நீர் என்னைப் பொருள்படுத்தி, இராவணனை விட உலகத்தில் மேம்பாடுற்றவர்களில்லையா வென்று கேட்டபடியால், அவ்விராவணனைக் கீழ்ப்படுத்திய கார்த்த வீரியன், வாலி யிவ்விருவர்களுடைய வீரச்செயலை யெடுத்துக்கூறினேன்," என்றுரைத்தார்.

இரகுநந்தனர் அவ்விரு திறலோனுடைய பராக்கிரமச் செய்கையைக்கேட்டு அகமகிழ்ந்து, அம்முனிவர்களுடன் இனிதாக வீற்றிருந்தார்.



## 3-வது சருக்கம்.

ஸ்ரீராமர், அகஸ்திய முனிவரை நோக்கி "ஓ தவத்திற் சிறந்த முனி சிரேஷ்டரே! கார்த்திய வீரியன், வாலி யிவ்விருவர்பால் இராவணன் கட்டுண்டதைக் கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்தேன். மேலும், வாலி, சுக்கிரீவன், அனுமான் இவர்களுடைய உற்பத்தியைக் கேட்க ஆவலுடையவனாக இருக்கிறேன். சூரியனும், இந்திரனும் வானரவடிவத்துடன் பூமியில் வந்தவதரித்திருந்தார்களென்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதன் விருத்தாந்தத்தைக் கேட்க விரும்புகிறேன்" என்று கூறினார்.

அதைக்கேட்ட குறுமுனிவர், இரகு குலாதிபனை நோக்கி, "ஓ ஜெய சீலரே! சுவர்ண மயமான மேருமலையின் சிகரத்தில் நூறு யோசனை யகலமுள்ளதும், கோடி சூரியப் பிரகாச முள்ளதும், தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவர் வசித்தற் குரியதுமாகிய ஓர் சபையிருக்கிறது. அந்தச் சபையில், சரஸ்வதி மணாளன் ஒரு சமயம் விரதத்துடன் யோக நிலை மேவியிருந்தார்.

அப்போது, அந்தப் பிரமதேவரின் கண்களினின்று ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. அந்த ஜலத்தைக் அவர் கையிலெடுத்து, ஸ்ரீ மஹா விஷ்ணு பூமியில் மானுடராக அவதரித்து, கொடிய துஷ்டர்களாகிய இராக்கதர்களை வதஞ் செய்கிறேன் என்று வாக்களித்ததை நினைத்து அப்பெருமாளுக்குத் தோழமை பூண்டு சாதகமாயிருப்பதை யுத்தேசித்துக் கீழே விடுத்தார். அதிலிருந்து ஒரு பெருத்த ரூபத்தையுடைய வானரன் தோன்றினன், பிரம தேவர் அந்த வானரனைப் பார்த்து, அவனுக்கு ரிக்ஷராஜஸ் என்று நாமமிட்டு அவனை நோக்கி, "நீ யிங்கு கொஞ்ச காலம் வரை வாசஞ்செய், பிறகு

உனக்கு மிகுந்த நன்மையுண்டாகும். இந்த ஸ்தலம் சகல மேன்மையையுந் தரக்கூடியது. இவ்விடம் எல்லா சுகங்களையும் அநுபவிக்கக்கூடியது," என்று கூறினர்.

அவ்வாறே அந்த வானர ரூபத்தோடு கூடிய ரிக்ஷராஜஸ் என்னும் பிரேஷ்டன் வெகு காலம் வரை அந்த மலைப்பிராந்தியங்களிலுள்ள கனி, கிழங்கு முதலியவைகளைப் புசித்துக்கொண்டு அந்த இடத்திலேயே வசித்து வந்தான்.

அப்போது ஒரு நாள் அந்தப் பிரதேசத்தில், மரகதம், பச்சை முதலியவைகளாற் படிபமைக்கப்பெற்றதும், அமுதினும் இனிய சுவையையுடைய ஜலம் நிறைந்ததுமாகிய வாவியைத் தாகவிடாயோடு கூடிய ரிக்ஷராஜஸ் கண்ணுற்று, தான் கொண்டிருந்த தாகந்தணியும் பொருட்டு நீர் அருந்த அத்தடாகத்தின் படிக்கட்டில் இறங்கினன். தடாகத்திலுள்ள நீரில் தனது பிம்பம் தோன்ற, அந்த நிழற்சாயலை ஓர் பெரிய வானரமெனமதித்து, இவன் நம்முடைய எதிரியெனப் பாவித்து, ஜலத்தில் தோன்றிய பிரதிபிம்பத்தின் மேற் கோபித்து, விராவேசத்துடன் அந்துடன் எதிர்க்க ஜலத்திற் குதித்லெனப்பாய்ந்தான். ஜலத்தில் அவன் கையில் ஒன்றும் அகப்படவில்லை; நீரில்முழுகி வெளிக்கிளம்பி வந்தவுடன், தனது சொரூபம் மாறி, ஒரு காந்தியுடைய மின்னற் கொடிபோன்ற அழகுவாய்ந்த பெண்ணுருவம் பெற்று நின்றான்.

ரிக்ஷராஜஸ், தனது ஆண்உருவத்தை விட்டுப் பெண்ணுருவம் பெற்றதைக்கண்டு, தனக்குள் ஆச்சரியமடைந்து, ஒன்றுந் தோன்ற முதவனைப் அங்கு அந்தப் பெண்ரூபத்தோடு சஞ்சரித்து வந்தான்.

அப்போது, தேவர்களுக்கரசனுகிய ஆயிரங் கண்ணுடைய இந்திரன், சிருஷ்டி கர்த்தாவாகிய *இரணிய கர்ப்பன் வசிக்கும் அச்சபைக்கு வந்து, அவரது திருவடியில் வணங்கி ஸ்தோத்திரித்துப் பூசை புரிந்து, ஓர் மத்தியான காலத்தில் தன்னகருக்கேகும்போது பேரிளம் பெண்ணாய் நடிக்கும் ரிக்ஷராஜஸைக் கண்டான். கண்டவுடன், அப்பெண்ணினது ஒய்யாரமான நடையிலும், மின்னற் கொடிபோன்ற இடையிலும், களங்கமற்ற சந்திரனைப் போன்ற முகத்திலும், அமுதத்தைப் பழித்த மொழியிலும், செவ்வரி படர்ந்து இருகடையுஞ் சிவந்து, கெண்டையைப்போல் புரளும் நேத்திரங்

* இரணியகருப்பன்.—பிரமதேவர்.

களின் பார்வையிலும் ஈடுபட்டவனாகி, கருப்புவில்லோன் தெறிக்கும் பாணத்துக் காற்றாதவனாய், பரவசனாகி மெய்தளர்ந்து தனது இந்திரியத்தை விடுத்தான்.

அவ்விந்திரியமானது அப்பெண்ணினுடைய கேசபாரத்தில் விழுந்தது. அதிலிருந்து இந்திரனுக்குச் சமானமான பராக்ரமத்தையுடைய வாலியுண்டானான். அண்டர்கோன், அக்குழந்தையைப் பார்த்து அகமகிழ்ந்து, ஸ்வர்ணமயமான மாலையொன்றை யதின் கழுத்திலணிந்து ஆசீர்வதித்துச் சென்றான்.

அந்த மாது தனக்கு நேரிட்டதை மனதில் நினைத்து மாறாத் துக்கத்தை யனுபவித்துப் பெருமூச்செறிந்து நிற்கும் சமயத்தில் *ஒற்றையாழித் தேரோனும் அவ்விடம் வர, ஆங்கு அவர் தனது தேஜஸே ஒரு பெண்வடிவுற்று வந்ததோ எனச்சந்தேகிக்கும் வண்ணம், அன்னநடையைப் பழித்த நடையும், மின்னற் கொடியை வென்ற சாயலும், உடுக்கையைப் புறகிட்ட இடையும், அன்று பூத்த தாமரை மலரை வென்ற திருமுகமுமுடைய நங்கை, யேதோ ஒரு காரணத்தால் சிணுங்கித் முகம் வாடினவளாய் நின்றபோதிலும், அவள் தேக காந்தியானது எட்டுத் திசையிலும் வீச, தோகையுடைய மயிலென நிற்பதைக் கண்டார்.

காணவே, †அண்டயோனி புண்டரீகத்தை ஜெயித்த வதனத்தையுடைய அம்மடந்தை யெழில் வலையிற் சிக்கி, அடங்காத காதல் மீறினவராகி, தனது சிறந்த வீரியத்தை மடங்கொண்டொழுகும் அப்பெண்ணின் கண்டத்தில் விடுத்தார்.

அந்த க்ஷணமே அதினின்று, பெருத்த சரீரமும் சிவந்த முகமும் நீண்டவாலுமுடைய வானர ரூபத்தைப் பெற்ற ஸுக்ரீவன் தோன்றினான். சூரியபகவான் அச்சிசுவைகண்டு ஆநந்தித்து, அதற்குச் சகல ஐஸ்வரியமும் மேன்மையும் பெருக்கக்கடவதென்று கூறிச் சென்றார்.

ரிக்ஷரஜஸ் ரூபமாறி மடமங்கை ரூபமடைந்த அந்தப்பெண், இரண்டு பிள்ளைகளையும் எடுத்துக்கொண்டு ஓரிடத்திற்சென்று நித்திரைசெய்தாள். மறுநாட்காலை துயில்விட்டெழும்வேளை அப்பெண் ரூபமாறி யதாப்பிரகாரம் வானர ரூபத்தைப்பெற்று நின்றாள்.

* ஒற்றையாழித் தேரோன்.—சூரியன்.
† அண்டயோனி—சூரியன்.

பெண்ரூபமற்று விளங்கிய ரிக்ஷராஜஸ், அந்த இரண்டு குமாரர்களையும் அழைத்துக்கொண்டு, கந்தமூல பலாதிகளுடன் பிரமதேவரிடம் சென்று, பலாதிகளை அவர் பாதத்திற் சமர்ப்பித்து, அடியற்ற மரம்போல் அவர் திருவடியிற் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்து கைகட்டி வாய்பொத்தி நின்று, "ஓ சதுர்முகக்கடவுளே! யான் ஓர் பெண்ரூபத்தை யடைந்து, அதினின்றும் இச்சிறுவர்களைப் பெற்றேன்; என் மனமானது அழலிலிட்ட மெழுகுபோலுருகுகிறதே! ஈதென்ன விபரீதமென்று" தெரிவித்துக்கொண்டான்.

* அன்னவூர்தி, ரிக்ஷராஜனை அன்புடனேநோக்கிச் சமாதானப்படுத்தி, இவையெல்லாம் தேவரகசியம், நீ யொன்றுக்கும் அஞ்சவேண்டாம் என்றுசெப்பி, அங்குள்ள ஓர் தேவதூதனை அழைத்து அவனை நோக்கி, "ஓ தூத! இந்த வானர சிரேஷ்டனான ரிக்ஷராஜனைக் கூட்டிக்கொண்டு விசுவ கர்மாவால் நிர்மாணிக்கப்பட்டதும், ஸௌபாக்கியம் யாவற்றாலும் நிறையப்பெற்றதும், தேவர் முதலிய யாவர்களாலும் கிட்ட வொண்ணாததும், எம் போலியர்களுக்கே யுரித்தானதுமாகிய கிஷ்கிந்தைமா நகரம்சென்று, அங்கு ஓர் அரியாசனத்தின் மீது இவனை வீற்றிருக்கச்செய்து, ஸப்த தீவுகளிலுமுள்ள ஸமஸ்த வீரர்களாய் விளங்கும் வானரர்கள் அனைவருக்கும் அரசனாகப் பட்டாபிஷேகம் செய்வித்து வைத்துவிட்டு, நீ இவ்விடம் வந்துசேர்" என்று ஆஞ்ஞாபித்து, அருகில் நிற்கும் வானர சிரேஷ்டனை நோக்கி, "ஓ வானராதிபனே! ஸ்திதிகர்த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணன், பூமி பாரந்தீர்ப்பதற்காகத் திருவுளங்கொண்டு, மானுட வடிவத்தோடு பூலோகத்தில் ஸ்ரீராமனாக அவதாரஞ்செய்து, கொடிய துஷ்டர்களாகிய அரக்கர்களை வதஞ்செய்பத் தண்டகாரண்யம் வரப்போகிறார், அப்போது உன்னை முன்னிட்டு வானரவீரர்களாகிய அனைவரும், அந்த இரகு நந்தனருக்குச் சகாயமாகத் தோழமைபெற்று, அவர் காரியத்தில் சிரத்தையோடு பாடுபட்டுக் கிருதார்த்தர்களாகி வாழக்கடவீர்க"ளென்று கூறி, நீ ஸமஸ்தமான மனத்துடன் செல்லெனக் கட்டளையிட்டார்.

அந்தத் தேவதூதன், ஸரஸ்வதிநாதன் தனக்கிட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு, ரிக்ஷராஜனை யழைத்துச்சென்று கிஷ்கிந்தா நகரத்தையணுகி, அங்கவனுக்கு வானரராஜனாகப் பட்டாபிஷேகம்

* அன்னவூர்தி—பிரமதேவர்.

செய்து வைத்துவிட்டுப் பிரமலோகஞ்சென்று, * பரமேஷ்டிக்குத் தெரிவித்துக்கொண்டான்.

அதுமுதல் கிஷ்கிந்தை நகரம் வானரமன்னர்களின் அரசாக்ஷித்குரியதாயிற்று, வாலி தனது தம்பி ஸுக்ரீவனுடன் அந்நகரில் வசித்துவந்தான்.

மேலும், விஸ்வரூபத்தில் மேருவிற் பெரியவனுகியும், ஸூக்ஷ்மரூபத்தில் அற்பமாகிய அணுவினுஞ் சிறியவனுகியும், விளங்கத் தருந்த அனுமான், பூலோகத்தில் யாவராலும் புகழ்ந்து பேசும்பெருமை வாய்ந்த அஞ்சனைவயிற்றில், வாயுபகவானுக்குப் பிறந்தான். மாருதி இளமைப்பருவத்தில் தன்னுடைய அன்னையைத்தொழுது, ஓ தாயே! எனக்கினிதான உணவுப்பொருள் யாதெனக் கேட்டான். அன்னையாகிய அஞ்சனை தனது அரும்பாலனை நோக்கி, ஓ மைந்த! வனமடைந்த சோலையிற் பருவத்திற்சிவந்த கனிகளெல்லாம் உனக்கருந்தக் கூடியனவென்று கூறினள். அதுகேட்ட அனுமான் ஒருநாள், தன்னைப் பசிநோய்வருத்த, தனக்கன்னை செப்பிய செங்கனி இதுவெனக் கருதி, வானத்தி லுதிக்கும் பருதிமேற் பாய்ந்தான். அப்பாலன் பாய்ந்ததை நோக்கிய வானவர், தானவர் முதலினோர் வியப்பெய்தி, இக்குழந்தைபால் வாயுவின் வேகமும், திடமும் பொருந்தியிருக்கவென்று ஆசீர்வதித்தார்கள்.

அச்சமயம், மாருதி தந்தையாகிய வாயுபகவான், வானத்திலுள்ள சூரியன்மேற்றுவும் என் மைந்தன்மீது, அவ்வெப்பவன் கிரணமானது, குளிர்ச்சி பொருந்திய வெண்ணிலாவை யொத்து சீதளமாயிருக்கவேண்டியதென்று கூறினன்.

மாருதி விரைவிற் சூரியனைப் பற்றினதைக் கண்ட இராகுக்கோள், இந்திரனிடம் சென்று "ஓ வானவர்கோனே! முன்னம் சூரியமண்டலம், சந்திர மண்டலம் இவைகளை விழுங்க என்னையும், கேதுவையும் ஏற்படுத்தியிருக்க, இப்போது முறைகேடாக அன்னியனுகிய மாருதி, சூரிய மண்டலத்தைக் கவ்வுதல் என்ன நியாயம்" என்று கேட்டான்.

பொன்னகர்க்கிறையான விண்ணவர் கோமான், சுவேதமலையை யொத்த ஐராவதத்தின் மீதேறி யாங்கு சென்று இராகுவை நோக்கி நீ யிப்போது சென்று சூரியனைப் பற்றென்று கூற, அன்ன

* பரமேஷ்டி, பிரமதேவர்.

வன் பிடிப்பதற்கு எழுந்து செல்ல, அது கண்டு மாருதி, சூரியனை விட்டு, அரவின்மேற் பாய்ந்தான். இராகு வெருவியோடி அமரர் கோனடியில் வீழ்ந்தான். அவனைத் தொடர்ந்த காற்றின் குமரன் இராகுவைவிட்டு, தனக்கெதிரில் தோன்றிய ஐராவதமும் ஓர் கனியெனநினைத்து அதன்மேற் பாய்ந்தான். அதன் மேலேறி நின்ற இந்திரன், தன் வாகனத்தின் மேற்பாயும் காற்றின் மைந்தன் மீது தனது குலிசாயுதத்தைப் பிரயோகித்தான். அதைப்பெற்ற அநுமான் தன் னிணைப்பொழிந்து பூமியிற் சாய்ந்தான்.

தன் மகன் வீழக்கண்ட வாயு பகவான் கோபமுற்றுத் தன் குழந்தையை யெடுத்துக்கொண்டு, இந்த மூவுலகத்தையும் இமைப் பொழுதில் நாசமாக்குகிறேன் என்று கூறித் தன்னியக்கத்தை யடக்கி யசைவற்றிருந்தான்.

அவ்வேளை புவனத்துள்ளோர் தங்களுடைய உடம்பினுள்ளே பிராணவாயுவாக நின்று ஆட்டுவிக்கும் செயலற்று, கயிறற்ற ஊசல் போலக் கீழே வீழ்ந்தனர்.

வையகமானது காப்போரின்றியும், வேத கோஷ மின்றியும், சந்தியா வந்தன முதலிய அநுஷ்டானங்களின்றியும், எக்கியாதி கிருத்தியங்களின்றியும் பாழடைந்தது.

பூலோக மாக்களுக்கு இமைக்கொட்டு நேரம் வாயுவின்றி யிருக்கமுடியுமா. ஜனங்கள் மூச்சடைபடத் தோற்றுப பெருத்து வீங்கி வாடினார்கள்.

அமரர், தானவர், சித்தர், விஞ்சையர் முதலிய தேவலோக வாசிகளும், மனோதாபங் கொண்டவர்கள் போலாகி, தங்களுக்கு நாயகனாகிய சதுர்முகப் பிரமதேவனிடஞ் சென்று, அடிபணிந்து "ஓ ஆதி நாயகனே! * வாதராயன் அமரர் கோன் குலிசத்தாலே தனது குமாரன் காலனுக்கிரையானதைக் கண்டு கோபிக்க, புவனவாசிகள் யாவரும் தங்கள் வயிறு பெருஞ்சாலை வீங்கிப் புரண்டனர்" என்று கூறி முறையிட்டனர்.

அது கேட்ட இரணிய கருப்பன் மனமிரங்கி "ஓ தேவர்களே! இன்று நானே வந்து உங்களுடைய துயரத்தைப் போக்குகிறேன்" என்று பகர்ந்து அத்தேவர்கள் சூழ, மாண்டு போன குழந்தையை

* வாதராயன்—வாயுபகவான்.

மடியில் வைத்துகொண்டு நொந்த சிந்தையனாய் விளங்கும் காற்றுக் கரசனிடம் வந்தார்.

இந்திரன் முதலிய தேவர்கள் சூழத் தன்னிடம் வந்த பிரம தேவரைக்கண்டு, வாயுவானவர் உருகிய மனத்தராய்த் தனது கையி லுள்ள சவத்தோடு அவரடியில் வந்து பணிய, சதுர் முகன் தனது கரத்தால் தன்னடியில் வீழ்ந்தான் மகவினைத் தயவோடு தடவினர். தடவினவுடன் வாடிய பயிரானது மழைபடத் தழைப்பதுபோல உயிர் வீடிய பாலன் தந்தையின் மனங்களிக்க, ஆவி கூடியெழுந் தான்; வாயுபகவான் தனது மகன் சீவனுற்றெழுந்ததைக்கண்டு பண்டுபோல் எங்கும் விளங்கினர்.

* சசிமணாளன், அஞ்சனை சிறுவனைநோக்கி "ஓ பால! எனது கூர் மைபொருந்திய குலிசப்புண் மாறப்பெற்றவர் யாவர்? உன்னுடைய † அநுவற்றிடலால் இன்று முதல் அநுமன் எனும்பெயர் உலகுள் ளவும் உனக்கு விளங்குக"வென்று சாற்றினர்.

அக்கினிபகவான், அநுமானைப்பார்த்து, உனக்கு எனது வலு வில் நூற்றிலொரு பங்குண்டாகுவதோடு எல்லா விஞ்சைகளும் நடத்தும் சக்தியுமடையக்கடவா யென்றார்.

வருணபகவான், இரணகளத்தில் யாராவது எனது அஸ்திர த்தைப் பிரயோகித்தால், அவ்வஸ்திர முன்னைக்கொல்லா தொழிக வென வரங்கொடுத்தார்.

எமதருமராசன், எனது தண்டம் உனதாவியைக் கவராதொழிக வென்று கூறினர்.

வேதன், எனது பிரமதண்டத்தா லுனக்குச்சாவில்லை. ஒரு நாளுஞ்சாவாவரமும் பெறுவாயெனச் சாற்றினன்.

வானோர் முதலாக வந்துநின்ற யாவரும் அநுமானுக்களவிலாத வரத்தை யளித்தார்கள்.

உலகைப்படைத்த கடவுள், வன்னிசகாயனை நோக்கி நினது மைந்தன் விண்ணுளோர்க்கும், மண்ணுளோர்க்கும் இன்னல் செய் யும் தசமுகனுடைய இலங்கை நகரை யெரிக்கிரையாக்கி சீதாராமன் மனங்களிக்கச்செய்து அவரது பெருங் கருணையால் பரமபதமும் பெறுவானென்று பகர்ந்து இந்திரன் முதலிய தேவர்கள் சூழப் பிரம லோகஞ் சென்றார்.

* சசிமணாளன்—இந்திரன்.
† அநு—வடு.

பின்பு அநுமான், மலரோன் முதல் இமையோர்வரை கொடுத்த வரச்செருக்கால், நன்மை தீமையென் றுணராமல், முனிவருறை விடமெலாஞ் சென்று, தயிர், பால், நெய் முதலியன குடித்தும், அவர்களுடைய மரவுரி கமண்டலம் முதலியவைகளைக் கவர்ந்தும், தபோதனர்க்குக் கோபம் மீறும்படியான துர்ச்செயல்களைப் புரிந்தும் வந்தான்.

அதுகண்டு முனிவர்கள், ஆர்ருதவர்களாகி யெங்களுக் கிடையூறு விளைவிக்கும் காற்றின் தனயன், கருத்தழிந்து உன்மத்தனாகித் தன் வலியைத் தானுணராது போகக்கடவன் என்று சாபமிட்டார்கள்.

தபோசீலர்களிட்ட சாபத்தையுணர்ந்த மாருதி கருத்தொழிந்து சாந்தனாகி மஹாதவத்தினர்களுக் கஞ்சி வைகும் நாளில், வானரர் குலத்தில் முதல் மன்னனான திறமை வாய்ந்த ரிக்ஷராஜனின் குமாரர்களில், மேவலர்காலனான வாலியும், காவலரிற் சிறந்த ஸுக்கிரீவனும், ஒருவருக்கொருவர் ஸுக்ரீவன் பத்தினியாகிய உருமையி னிமித்தம் போர்புரிந்து வாலியின் வலிமைக் காற்ருது களைத்து அவன்பாற் றனது பத்தினியை விடுத்து, செய்புஞ் செயலற்றவனாய் மதங்கமலை சார்ந்து வாழுஞ் சுக்கிரீவனுடன், அநுமான் சேர்ந்து சிந்தை ஒருமைப்பட்ட தோழனாகி யவ்விடத்திற் களிப்புடன் வாழ்ந்து வந்தான்.

அங்கு வசிக்கும் நாளிற்றன் மாருதி, ஸுக்கிரீவனுக்கு உம்முடைய தோழமையை யுண்டுபண்ணி, அவனோடு உமது காரியத்திற் புகுந்தான். அதன் பின்னர் அநுமான் ஸீதையைநாடி இலங்கை சென்றதும், அங்கெரியூட்டியதும், மஹாமேரு மலைப் பிரதேசஞ் சென்று சஞ்சீவி கொண்டுவந்ததும், தாம் பிரத்யட்சமாக உள்ளங்கை நெல்லிக்கனியென வுணர்ந்த விஷயங்களாகும். அவைகளைப்பற்றி யானிப்போது விரித்துரைப்பது அனுவசியமாகுமல்லவா !

ஓ ரகுவீர! நீர்தான் ஸர்வேசுவரன், பிரமதேவரின் பிரார்த்தனைப்படி, லீலையாக மானுடவடிவங்கொண்டு, பூமி பாரத்தைப் போக்கினீர். சகல பூதங்களின் உள்ளிருப்பவரும், சித்சொரூபரும் நித்திய முக்தருமர், அகண்டானந்த சொரூபமும், பரமாத்மாவுமாகிய உமக்கு இந்த பராக்கிரமச் செய்கை யெம்மாத்திரம்? ஸாதுக்கள் தங்கள் நன்மையைக் கோரி உம்முடைய லீலாகிதையை வர்ணிக்கிறார்

கள். அக்கிதையினின்று ஜனங்கள் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ளுகிறார்கள். ஸ்தா ஸுகத்தை யடைகிறார்கள்.

எந்த மானிடன், உமக்குத் தாசனாக விளங்கிய இந்த அனுமான், வாலி, ஸுக்ரீவன் இவர்களுடைய உற்பத்தி சரிதையைக் கேட்கிறானோ, அல்லது படிக்கிறானோ, அவன் தன்னால் இயற்றும் ஸகல பாவங்களினின்றும் விடுபடுகிறான். நித்தியானந்தத்தையு மடைகிறான்.

மேலும், ஓ ராமசந்திர! மற்றுமோர் விருத்தாந்தத்தைத் தங்களுக்கறிவிக்க விரும்புகிறேன். அச்சரிதையிலிருந்து இலங்கேசனாகிய தசாநநன், எதற்காக ஸீதாபிராட்டியை அபஹரித்தான் என்பது நன்கு விளங்கும்'' என்று தெரிவித்தார்.

தவமுனி அறிவித்த வார்த்தையைக் கேட்ட ரகுகுல நாதன், குறுமுனியை நோக்கி ''ஓ தபசிலரே! அப்படியானால் அச்சரித்திரத்தையும் கேட்க விரும்புகிறேன்'' என்று பகர்ந்தார்.

அகஸ்தியர், கௌசல்யா புத்ரனை நோக்கி, ''ஓ இராம! முன்னம் கிருத யுகத்தில் தசக்கிரீபன், மகா தேவரின் குமாரராகிய சனத்குமார முனிவரைக் கண்டு, அவர் திருவடியில் நமஸ்கரித்து ''ஓ முனிசிரேஷ்டரே! இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார கர்த்தாக்களாகிய மூவரில் எவர் சிறந்தவர்? தேவர், முனிவர், மானுடர் முதலினோர் எவரைப் பூசிக்கிறார்கள்? சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு மார்க்கத்தினரும் யாரைத் தியானிக்கிறார்கள்? ஓ அறிவிற் சிறந்த பெருமானே! இவைகளுக்கு விடை பகர்ந்தருளல் வேண்டும்'' எனக் கேட்டான்.

விஞ்ஞானமுடைய சனத்குமார முனிவர், இராவணனை நோக்கி ''ஓ தசமுக! எவர் சகலபுவனங்களையும் இரட்சித்துக் காக்குந்தன்மையுடையவரோ அவரே மும்மூர்த்திகளினும் சிறந்தவர், அவரையே தேவர்களும், அசுரர்களும், மானுடர்களும் பூசிக்கிறார்கள்; தியானிக்கிறார்கள், அந்தப்பரவாஸுதேவருடைய நாபிக்கமலத்தினின்று பிரம தேவருண்டாகி இப்பிரபஞ்சத்தை யுண்டு பண்ணுகிறார், அந்த நாராயணனை ஆச்ரயித்தே அவருதவியைப்பெற்று சத்துருக்களாகிய அசுரர்களைத் தேவர்கள் ஜெயிக்கிறார்கள்'' என்று கூறினார்.

இதைக் கேட்ட இராக்ஷஸமன்னனாகிய இராவணன் முனிசிரேஷ்டராகிய சனத்குமார முனிவரைப்பார்த்து ''ஓ தவநிதியே! மஹா

விஷ்ணுவினால் வதையுண்டவர்களும் தேவர்களால் மரணமடைந்தவர்களும் எந்தக்கதியை அடைகிறார்கள்" என்று கேட்டான். முனிவர், "தேவர்களால் மரணமடைந்தவர்கள் சுவர்க்கலோகஞ்சென்று அங்குள்ள போகங்களை யனுபவித்துப் பிறகு பூமியில் வந்து ஜனிக்கிறார்கள். விஷ்ணுவால் வதையுண்டவர்கள் அவருடைய ஸ்தானமாகிய வைகுண்டத்தையே யடைகிறார்கள்" என்று விடைபகர்ந்தார். இதைக்கேட்ட இராவணன் விஷ்ணுவுடன் யுத்தம்செய்து அவருலகத்தை யடையவேண்டும்" என்று கருதினன்.

தசக்கிரீவன் உள்ளக்கருத்தை யறிந்து, சனற்குமாரமுனிவர், "ஓ இராவண! உன்கோரிக்கை நிறைவேறப்போகிறது சந்தேகமில்லை; கொஞ்சகாலம் பொறுத்திரு, ஆனால் அந்த விஷ்ணுவை நீ நேரில் காண்பதரிது.

அவரோ, ஸ்தாவர ஜங்கமம் என்ற எல்லாப் பொருளினும் வசிப்பவர். ஓங்கார சொரூபமானவர். எல்லா வுலகங்களுக்கும் ஆதாரமாகிய அனந்தன் எனும் நாமத்தையுடையவர். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களின் சொரூபியானவர். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியனவும், இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனும் எண்மரும் அவர் அம்சமே. சகல புவனமும் அவர் நஷ்டியிலடங்கியிருக்கின்றன. அவர் நருநெய்தல் போன்ற சியாமளவர்ண முடையவர், மின்னலை போன்ற நிறமுடைய வஸ்திர முடுத்தவர், எப்போதும் தன்னைவிட்டுப் பிரியாதவளும், ஸ்வர்ண காந்தியுடையவளும், தேவியு மாகிய ஸ்ரீமஹா இலக்ஷ்மியைத் தனது மார்பில் தரித்தவர், தேவர், அசுரர், நாகலோகத்தார் முதலிய எவரும் அந்த முகுந்தனைப் பார்க்கமுடியாது, அவருடைய கிருபா விசேஷண்டம் பெற்றவர்களே அவரைத் தரிசிக்க முடியும். யாகம், தவம், தானம், முதலியன செய்வதினால் அவரைப் பார்க்க முடியாது. அவரிடம் வைத்தபக்தி யுடையவர்களே அவரைக் காணலாம்.

ஓ அரக்கர் காவல! நீ யவரைத் தரிசிக்க விரும்புவாயானால் அதற்கோர் மார்க்கம் சொல்லுகிறேன் கேள். அதாவது:— அந்த இலக்ஷ்மிகாந்தனான வாசுதேவன் பாரத கண்டத்திலுள்ள அயோத்தியா நகரில் அரசாக்ஷி புரிந்துவரும் இக்ஷ்வாகு குலதிலகரான தசரதசக்கரவர்த்தியின் திருமகனாக ஸ்ரீராமன் என்னும் நாமம்

படைத்து, அவதாரஞ் செய்து, தேவர்களுக் குண்டாகிய இடை யூறுகளைப் போக்கடிக்கவும், பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்பவும், தனது தம்பியுடனும், பத்தினியுடனும் தண்டகாரண்ய வாசம் செய்யப் போகிறார்.

அந்த இரகுநந்தனரோ தர்ம சொரூபி, அவர் மனைவி ஸீதா தேவி உலகங்களுக் கெல்லாந் தாயானவள். இந்த இரகசியத்தை யுனக்குக் கூறினேன். தண்ட காரண்யத்தில் ஸீதையுடன் வசிக் கும் ஸ்ரீராமச்சந்திரனைத் தரிசித்து, அவர்பால்உள்ளங்கசிந்தகொண் டுடன் பக்திசெய்வாயாக; அந்தப்பக்தியின் மூலமாக நீ இகலோக பரலோக சுகங்களையும் அடையலாம்" என்றுரைத்தார்

முனிவர் உரைத்த ஆப்தவாக்கியத்தை யுணர்ந்த தசாநநன், பூர்வஜென்ம வாசனையை யனுசரித்துப் பக்திபண்ணுவதைவிட விரோதியாவதே சிரேஷ்டமெனக்கருதி மனதிற் சந்தோஷமுடை யவனாகி யும்முடன் போர்புரிந்து மரணமடைவதே தகுதியெனத் தனக்குள் தீர்மானித்தான். அந்த நோக்கத்துடனே சதா சிந்தித்த மனதுடையவனாய்ச் சஞ்சரித்து வந்தான்.

ஓ அண்ணலே! நுண்ணிய அறிவும், திண்ணிய பலமு முடைய இராவணன், கண்ணியம்பொருந்திய உம்முடன் போர்புரி ந்து, எண்ணிய கருமம் முடிப்பதற்கே, கண்ணியணிந்து வண்ணம் நிறைந்து விளங்குகின்ற ஜானகியை அபஹரித்தான். பர்வதராஜன் புத்திரி மனந்திரியக் கயிலையைப் பேர்த்த தசக்கிரீவனுடைய அந்த ரங்க விஷயம் இது. இந்த விருத்தாந்தத்தைத் தேவனாயினும்,மானுட னாயினும், மற்றெவனாயினும், கனிந்த மனதுடன் சிரவணம் செய் தாலும் சிரவணம் செய்யச் செய்வித்தாலும், கல்வி, கீர்த்தி, வலிமை ஜெயம், பெருமை, அழகு, நன்மக்கள், பொன், பூமி, நெல், அறிவு இளமை, நோயின்மை, நல்வாழ், நுகர்ச்சி, வாழ்நாள், என்று கூறப் படும் பேறு பதினாறினையும் பெறுவான். நிச்சயம்! நிச்சயம்!!" என்றார்.

# 4 வது சருக்கம்.

---

ஸ்ரீராமனை யெப்போது காணுவோம், யுத்தத்தில் அவ ருக்கு விரோதியாவோம் என்கிற சிந்தனையுடனிருக்கும் இரா வணன், ஒருசமயம் திரிலோகவாசியாகிய நாரத மகாமுனிவர் தன் னிடம் வரக்கண்டு, அவருக்கு வந்தனை வழிபாடுசெய்து தோத் திரித்து, "ஓ முனிவரே! என்னுடன் யுத்தஞ்செய்பத் தகுந்த பராக் கிரமமுடைய வீரர் யாவர்? அவர் எங்குற்றார்? உரைப்பீராகில் அவ ரோடு போர்புரிய விரும்புகிறேன்" என்று கேட்டான். "

அமரிற்சிறந்த தீரனாகிய தசக்கிரீவன் தனக்கிருக்கும் வீரச்செரு க்கினால் கூறிய வார்த்தையைக் கேட்டு, முனிவரிற் பெரியவராகிய நாரதமுனிவர் சிறிது பொழுதாலோசித்து, "ஓ மஹா புத்திசாலி யாகிய தசக்கிரீவ! சுவேதத்வீபத்தில் வசிக்கும் யாவரும் மிகுந்த வலி யுடையவர்கள், பெருத்த சரீரமுடையவர்கள், கறுத்த நிறம் வாய்ந்த கொண்டலை நிகர்த்த திருமேனியையுடைய பரந்தாமனைப்பூசிக்கும் கிரியையில் மிகுந்த ஆவலுடையவர்களும், சங்கு, சக்கர தாரியாகியு வைகுண்ட நாதனால் சங்கரிக்கப்பட்டவர்களுமே அவ்விடத்தில் வசிக்கிறார்கள். அவர்களைத் தேவர்களாலும், தானவர்களாலும் வெல்லுவதற்கு முடியாது, நீ அங்குசென்று அவர்களுடன் யுத்தம் செய்பலாம்" என்றார்.

அவ்வார்த்தையைச் செவிக்கேற்ற இராவணன் தனது யுத்தவீரர் களுடனும், மந்திரிகளுடனும், புட்பக விமானத்திலேறிக்கொண்டு சுவேதத்வீபத்தில் வசிக்கும் மஹாவீரர்களுடன் அமர்புரியச் சென் றான். அப்பிரதேசத் தருகாமையிற் செல்லும்போது அதன் பிரகா சத்தினால் விமானம் நகரவில்லை, அதைக்கண்டு தசமுகன் விமா னத்தை விட்டிழிந்து தனிமாகத் தனது மந்திரியுடன் அந்தத்தீவுக் குட் சென்றபோது, ஆங்கெதிர்ப்பட்ட ஓர்மாது, தன்னிருகரத்தால் இருபது கரமுடையானைப்பிடித்து, நீ யார்? உன் பெயரென்ன? எங்கிருந்து வருகிறாய்? உன்னையிங்குவரும்படி யேவினவன் எவன்? இவைகளுக்கிப்போதே பதிலுரையென்றாள். இதற்குள் தற்செய லாய் அங்கு கூடிய ஸ்திரீகளிற் சிலர் ஒன்றுகூடி இலங்கேசனது பத்துத் தலைகளையும், இருபது தோள்களையும் பார்த்துச் சிரித்தார்

கள். தசானனன் தன்னைப்பற்றிய ஸ்திரீயினிடமிருந்து விடுபடுவது கபிலையினின்று விடுபட்டதுபோலாயிற்று. பிறகு அவ்விடம் விட்டு நீங்கிச் சற்று தூரம் பின்தாங்கிவந்து, இத்தீவில்வசிக்கும் பெண்களின் பலமே இவ்வாறானால், புருடர்களின் பராக்ரமத்தைப்பற்றி ஆலோசிப்பது மதியீனத் தன்மையாய் முடியும். நாரதர் உரைத்த வார்த்தையை யுற்று நோக்கில் அதில் ஓர் சூட்சி விளங்குகிறது. அதாவது தாமோதரனை எதிர்த்து அவர் பாணத்தால் மரணமடைந்தவர்கள் இத்தீவில் வந்து தோன்றினவர்களென்றால், அவர் கையாலடி படுவதினாலேயே இத்தகையவீரம் அவர்களுக் குண்டாயிற்றென்பதே. நல்லது, எத்தகைய வீரத்தன்மை பூண்டொழுகினும், திரிலோகத்தையும் வென்று மணிமுடி தரித்து அரசாக்ஷி புரிந்து நின்றாலும், இறுதியில் மாண்டுபிடி சாம்பலாவதைத் தவிரவேறொன்றையுங் காணவில்லை; ஆனதுபற்றி, சனத்குமார முனிவர் கூறியபடி, அப் பரமபதநாதனை ஸ்ரீராமனாகவும் அவர் சக்தியே ஸீதையாகவும் உருவமெடுத்து வந்திருப்பவர்களை யடுத்து, எவ்விதத்தில் அந்தப் பரமன் தனக்கு எதிரியாக வரக்கூடுமோ அவ்விதத்தைச் செய்து, அவருடன் யுத்தஞ்செய்து, அவர்பாணத்தால் மரணமடைந்து சாற்றுதற் கரிதாகியதும், மீளத் திரும்புவதற்கு வழியற்றதுமாகிய வைகுண்ட பதவியையே நானடைகிறேன், என்று தனக்குள் சிந்தனை செய்து முடித்து, உமக்குக் கோப முண்டாகும்படி உமது பத்தினியாகிய ஸீதையைத் தண்டகாரண்யத்தில் மாறுவேடம் பூண்டுவந்து அபஹரித்தான். உமது கரத்தால் மரண மடைவதைக் கருதியே * வைதேகியை மாதாவைப் போலெண்ணிப் பாதுகாத்து வந்தான்.

ஓ ரகுவீர! நீர் பரமேச்வரரானபடியால் யாவற்றையும் அறிவீர், நடந்தது, நடக்கிறது, நடக்கப்போவது முதலிய முக்காலத்தையும் உணர்ந்தவர்; எக்காலத்திற்கும் சாக்ஷியாயுள்ளவா, உலகத்திலுள்ள யாவராலும் பூசிக்கப்பட்டவர். ஆயினும் மானுடவடிவத்துடன் விளங்குகிறீர்" என்று ஸ்ரீராமனை நோக்கி அகஸ்தியர் கூறினார்.

ஜானகிமணாளர் கடத்திற்பிறந்த குறுமுனிவர்பா லன்பு பாராட்டிப் பூசித்து இனிய வசனங்கூறினார். அகஸ்தியர் அடங்காத மகிழ்ச்சியுடன் தம்முடன் வந்த ரிஷிகள் பின்தொடரத் தனது ஆச்சிரமம் சென்றார்.

---

* வைதேகி,—சீதை

இரகு சிரேஷ்டனும், பிராதாக்களுடனும், ஸீதையுடனும், இரஹஸ்தன்போலவே உலக விஷயங்களை நடத்திக்காட்டினர். அநுமான் முதலிய வானரவீரர்களும் சூழ்ந்திருந்தார்கள். ஸ்ரீராமன் ஓர் பற்றுதலற்றவராயினும் தனது பத்தினி ஸீதையுடன் விஷய ஸுகங்களையும் அநுபவித்து வந்தார். காலை, உச்சி, மாலை யிம்மூன்று காலங்களிலும் தான் செய்யும் நியமங்கள் தவருது செய்துவந்தார். இராஜ்ய பரிபாலனத்திலும் நீதிவழுவாது அறத்தின் வழியொழுகிச் செங்கோல் நடத்திவந்தார்.

அப்பொழுது குபேரனுடைய புட்பக விமானமானது இரகு நந்தனனுடைய திருவடியில் வந்துவணங்கி, “ஓ வீர! தனபதியென்னைநோக்கி முன்னம் கூறியது, இராவணன் ஸ்ரீராமனல் வதமாவது நிச்சயம். அப்போது தான் என் சிந்தைத்துயர் நீங்கும். அதன்பின் உன்னலானவுதவி யவர்பாலிருந்து புரியெனப் பணித்தார். இப்பொழுது தசக்கிரீவன முதலிய அரக்கர்கள் வதமாகி, உலகத்தைத் தாங்கும் ஆதிசேஷன் தலைப்பாரநீங்கிய செய்தி வான நாடெங்கும் பரவியது. ஆகையால் நான் வடதிசைக்கிறைவர்பாற் செல்ல விடைதரவேணுமென்று வேண்டிக்கொண்டது.

கோதண்டபாணி அவ்வேண்டுகோளுக்கிரங்கி, சந்தனம் புஷ்பம், தூபம் முதலியவைகொண்டு பூசித்து, அந்த விமானத்துக்கு மனவெழுச்சியுடன் விடைதந்தனுப்பினர். புஷ்பகவிமானமானது சிந்தை மகிழ்ந்து அந்தரத்தெழுந்து அளகேசன் திசைநோக்கிச் சென்றது.

இந்த அற்புதத்தைக்கண்ட யுவராஜனை பரதன், சுந்தரவில்லையுடைய தசரத மைந்தன் திருவடியில் வணங்கி, “எந்தையே! இந்த மாநிலத்தைக் காக்க நீ நினைந்த பிறகு நடந்த அற்புதங்கள் கணக்கற்றன. சிம்மம் யானையுடன் பகைக்கிறதில்லை; புலியும், பசுவும் ஒருதுறையில் நீரருந்துகிறது; ஒன்றுக்கொன்று மித்திரமாகச் சஞ்சரிக்கிறது; அக்கினியாலாவது, ஜலத்தினலாவது மரணமடைவோரில்லை; புத்திரர் மரணமடையப் பெற்றவர்களில்லை; நோயுற்று மருந்தருந்தி வருந்துவாரில்லை; விருத்தராயினும் காலபாசம் வருத்துகிறதில்லை. புருஷனை யிழந்து பரிதபிக்கும் ஸ்திரீகளில்லை; புத்தென்னும் நரகத்தை யடையாது காக்கும் ஆண் மக்களையே தெரிவையர் பெறுகிறர்கள்; இந்நகரமாக்கள் யாவரும் இராமனை இந்நாட்டை நீடூழி காலம் ஆளக் கடவுளைப் பிரார்த்திக்கிறர்கள் என்று” தெரிவித்தார்

இரகுவீரனும் அதைக்கேட்டு மனமகிழ்ச்சியுடன் வீற்றிருந்தார். இவருடைய இராஜ்ய பரிபாலன காலத்தில் பூமியானது இருவகைப் பலனிலும் (பூமிக்குள் உண்டாகும் கிழங்கு முதலியனவும், மேலுண்டாகும் தானியம் முதலியனவும்) குறையாது பலனளித்தது; மாதம் மும்மாரி பெய்தன; பிரஜைகள் யாவரும் தர்மவான்களாயிருந்தார்கள்; மானுடராயினோர் செய்வதற்கரிய அநேக காரியங்களை ஸ்ரீராமர் பிரஜைகளை முன்னிட்டுச் செய்து காட்டினார்.

இரகு நாதன் உலகத்திலுள்ள ஆன்மகோடிகள், தன்னுடைய காலத்திலும், தனக்குப் பிற்காலத்திலும், விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் வரை நான்கும் அரும்பு, மலர், காய், கனி யெனத் தேர்ந்து அனுஷ்டித்து, ஸாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியம் என்னும் பதவியை யடைவதற்கு முதற்படியாயுள்ள சரியைத் தொழிலை முன்னதாக நடத்தி சித்த சுத்தியைப் பெறுவதற்காக, கோடிக் கணக்கான சிவாலயங்களைக் கட்டி, சிவலிங்கப் பிரதிஷ்டைகளைச் செய்துவைத்தார்.

இரகு குல சிரேஷ்டன், இல்லறந் துறந்தவர்களுக்கும், துறவாதவர்களுக்கும், பிதுர்க்களுக்கும், இல்வாழ்க்கையுடையவனே சிறந்தவனென்றுணர்ந்து, அதைக் கடைப்பிடித்துய்யு மார்க்கம், உலகத்திலுள்ள யாவருக்குந் தெரிவிக்க வேண்டி, மடம், அச்சம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற் குணங்க ளமைந்து, கற்பென்னும் பெருமை நிறைந்து விளங்கிய தனது பத்னியாகிய ஸீதா தேவியுடன் கலந்து, சரஸ ஸல்லாபஞல்லாசங்கள் புரிந்தும், அறத்தின் வழி நிற்றல், ஆதுலர்க் கன்னமளித்தல், பிதுர் காரியம் வழுவற நடத்தல், நித்ய கருமம் தவறாது செய்தல், ஈஸ்வரனிடத்தும், அவனடியார்களிடத்தும் பக்தி பண்ணுதல் முதலிய நற்செய்கைகளை நடத்திக் காட்டியும் வந்தார். மேலும், அரசர்க்குரிய மந்திரி, புரோகிதர், சேனாதிபதி, தூதர், சாரணர் முதலியோரை யமைத்து, அறம், பொருள், இன்பம், வீடு என்று சாற்றும் நான்கையும் அடைவதற்குரிய வழியை நடாத்திக் காட்டி செங்கோல் முறை பிறழாது, பதினாயிரம் வருடம் வரையில் இராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார்.

ஸீதாதேவி, தன்பதியே தெய்வமெனக் கருதி அவர் பால் அன்பில் மிகுத்தவளாகி, அவருடைய அபிப்பிராயப்படி இல்லற தர்மத்தை நடத்திவரும் நாளில், செந்தாமரை மலர்போன்ற தனது சரீரம், பீர்க்கம் பூவினது நிறம்வாய்ந்து பசப்படைந்தும், அறுவகை

ருசியில் புளிப்பே தகுதியெனப் பிரியப்பட்டும், கரியதரை மண்ணைக் கிள்ளிப் பவளம்போன்ற வாயிற்போட்டுச் சுவையென மதித்தும், பொன்னுலாகிய குடத்தின் முகட்டிற்கருமணி யமைத்ததை யொப்பத் தனது குங்குமம் வாய்ந்த ஸ்தன்னியங்க ளிரண்டும் உச்சியிற் கறுத்தும், இடையெனும் உறுப்பு இல்லையோ வென்னும் சந்தேகத்தை நிவர்த்தித்தும் வைதேகி கருப்பச் சின்னத்தையடைந்து விளங்கினுள்.

கௌசலைகுமாரனாகிய ஸ்ரீராமன், ஜனககுமாரியாகிய வைதேகியோடு, புன்னை, சண்பகம், செருந்தி, குருந்து, பாடல் முதலியவெழில் நிறைந்த விருட்சங்களும்; முல்லை, மல்லிகை, ரோஜா, ஆம்பல், கமலம், செம்பங்கி, முதலிய பூஞ்செடிகளும் நிறைந்து, தேவேந்திரன் கற்பகச்சோலையே பூமியின்கண் வந்தடைந்ததெனு விளங்கும் ஓர் அழகிய உத்தியானவனம் சென்று, அங்குள்ள அத்தாணிமண்டபத்திற் றங்கி, அப்பூந்தோட்டத்தின் வனப்பெல்லாங்கண்டு மனமுவந்து, ஸீதையை நோக்கி சூரியனும் நுழைபாத இச்சோலையின் அழகைக் கண்ணாரப்பார்த்துக் களிப்படைவாய் என்றுகூறி ஓர் அரியாசனத்தின் மீது வீற்றிருந்தார்.

அக்காலை வாவியில் நீராடப்போந்த ஸீதாதேவியைத் தேவர்கள் கண்டு, மிகுந்த ஆனந்தத்துடன் அவள் திருவடியிற் பணிந்து "ஓ உலகமாதாவே! * சலசலோசனன், தம்மிருப்பிடமாகிய வைகுண்டத்தைவிட்டு தங்களுடன் இவ்விடம் வந்திருக்கிறார். நாங்கள் எங்கள் நாதனை யிழந்திருக்கிறோம். நீங்கள் முன்னதாக வைகுந்தம் வந்தால் ஸ்ரீமுகுந்தனும் அவ்விடம் வருவார். கிருபைசெய்யவேணு" மெனக் கேட்டுக்கொண்டார்கள்.

ஸீதாதேவி, தேவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி, கோதண்டபாணியிடம்வந்து, அவர் திருவடியிற்பணிந்தெழுந்து, "ஓ தேவதேவ! ஜெகன்னாத, பரமாத்மா, ஆதி மத்தி அந்தமில்லாதவரே! தேவர்கள் என்னிடம்வந்து தங்கள் நாதனை உங்களை யிழந்திருப்பதாகவும், தாங்கள் அவ்விடம் வருவதற்காக என்னை முன்னம் வைகுந்தத்து வரும்படி விருப்பொடு கேட்டுக்கொண்டார்கள். இவ்விஷயந் தங்களுக்கு அறிவித்தேன் என்று தெரிவித்து நின்றாள்.

ஸ்ரீராமர் அதைக்கேட்டு க்ஷணப்பொழுதுயோசித்து, "ஓதேவி! நான் யாவற்றையும் அறிவேன். ஆயினும் காலத்தை யெதிர்நோக்கி

*சலசலோசனன்—திருமால்.

யிருக்கிறேன். நீ கூறியதற்குத் தற்காலம் ஓர் உபாயங் கூறுகிறேன் கேள். அதாவது ஓ ஜானகி! உன்னைப்பற்றிய லோகாபவாதத்தை வியாஜமாக வைத்துக்கொண்டு, அவ்வபவாதத்துக்குப் பயந்தவன் போல உன்னை வனத்திற் கனுப்பிவிடுவதே.

மேலும் நீ வனத்திற் கனுப்பப்பட்டு அவ்வனத்திலுள்ள வான்மீகி முனிவரின் ஆச்சிரமத்தில் அவரால் போஷிக்கப்பெற்று அவ்விடத்திலேயே இரண்டு புத்திரர்களைப் பெறப்போகிறாய். (தற்காலம் நீயும் கருப்பவதிபோற் காணப்படுகிறாய்) மறுபடியும் நீ யப்புதல்வர்களோடு என்னிடம் வந்து, உலகத்தவர்கள் கூறிய அபவாதம் நீங்கும் பொருட்டு என் முன் ஆதரவுடன் சபதம்செய்து, அச்சபதம் நிறைவேறு முன்னிலையில் பூமிபிளக்க, அத்துவாரத்தின் வழியாக நீ வைகுண்டம் சேரப்போகிறாய். பிறகு நானும் வருகிறேன் தேவர் குறையும் நீங்கும். நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம்" என்று கூறினார்.

ஞான தீரனாகிய தசரதகுமாரன் மானின் விழியையொத்த ஜானகியுடன் பூஞ்சோலையைவிட்டுப் புறப்பட்டுத் தனதிருப்பிடம் வந்து சேர்ந்து, சாமம், தானம், பேதம், தண்டமென்னும் சதுர்வித உபாயத்திலுஞ் சிறந்த மந்திரிகளுடனும், அதிகோபத்துடன்வரும் பகைவரைச் ஜெயிக்கும் வல்லமையுடைய சேனாதிபதிகளுடனும், யுக்தி, புத்தி, நீதி யிவைகளிற் சிறந்த பல பிரமுகர்களுடனும் சபா மண்டபத்தில் வீற்றிருந்தார்.

அப்போது ஸதா நகைக்கத்தக்க கெம்பீரமான கதைகளை விஜயபத்திரன் முதலினோர் சொல்லக்கேட்ட ஸ்ரீராமன், கதை சொல்லுவதிற் பிரசித்த பெற்ற விஜயபத்திரனை நோக்கி, 'ஓ விஜய! இந்நாட்டிலுள்ளவர்களாவது, இந்நகரத்தி லுள்ளவர்களாவது என்னைப் பற்றியும், என் தாய்மார்களாகிய கௌஸல்யை, கைகேயி யிவர்களைப் பற்றியும், என் ப்ராதாக்களைப் பற்றியும், என் தேவி ஸீதையைப் பற்றியும் என்ன சொல்லுகிறார்கள். அவர்கள் கூறுவதை யொளியாமல் தெரியப்படுத்து; என்னிடம் பயப்படவேண்டாம் கூசாமற் கூறு" என்று சொல்லினார்.

இதைக்கேட்ட விஜயன், தசரத குமாரன் திருவடியில் வணங்கித் தோத்திரித்து, 'ஓ தேவ! புவனத்துள்ளோர் ஸ்ரீராமச்சந்திரன் செய்த காரியம் தேவர்களாலாவது மற்ற யாவர்களாலாவது செய்வதற்கரிதாகும். ஆயினும் துன்மார்க்க சிரேஷ்டனாகிய இராவணன்

எடுத்துச்சென்று பன்னிரண்டு மாதம் சிறைவைத்திருந்த ஸீதையை அக்கொடியோனை வதைசெய்து, அந்த ஸீதைபால் வைத்திருந்த காமசுக விருப்பத்தால் மறுபடியும் அம்மாதைக் கைப்பற்றித் தனதில்லிற் கொண்டுவந்து சேர்த்துக் கொண்டார். அப்பெருமான் குற்ற வகையைக் கவனித்தாரில்லை. அதினாலுண்டாகும் மானபங்கத்தை நினைக்கவுமில்லை. விதியை விலக்க யாரால் முடியும், ஆயினும் அவ்வாழ்க்கை யிழுக்கென்றே பேசுகிறார்கள்" என்று தெரிவித்தான்.

விஜயன் கூறிய வார்த்தை சிறிய பாணம் தனது மார்பிற் பாய்ந்ததை யொப்ப இரகுவீரன் காதிற்படவே, உளைந்தசிந்தையனாகி மனந்தளர்ந்து, அருகிலிருக்கும் தம்பியரை யழைத்துக்கொண்டு, தனிமையான வேறிடத்திற் சென்று தங்கி ஆங்கவர்களை நோக்கி, "ஓ பிராதாக்களே! நீங்கள் என்னுயிர்; நீங்கள் என் சத்தி; நீங்கள் என் புகழ்; நீங்கள் என்னரசியா; ஆகையினாலே, என்னுடைய புகழும் இழிவும் உங்களுடையதேயாகும்.

இப்பொழுது உலகத்தோர் வழங்கும் பழிச் சொற்களினால் யானடையும் மானபங்கம் மிகப்பெரிது. ஸீதை தசமுகன் சிறையினின்று மீட்கப்பட்டபோது, எவ்விதப் பொருளையுந் தன்மயமாக்குந் தீயிடை மூழ்கி யெழுந்து, வானவர்களுக்கும், மற்றவர்களுக்கும், எனக்கும் அவள் பரிசுத்தமுள்ளவளென்றே காணப்பட்டபோதினும் உலகமாக்கள் அதை யறிந்திலர். நகரவாசிகள் கூறும் பெரும் பழியைக்கேட்டு நாம் நோவதிற் பிரயோசனமென்ன? "உலையை மூட வாய்மூடி யுண்டு உலகைமூட வாய்மூடி யுண்டா!" உலகத்தோடொத்து வாழ்தல் வேண்டும். பூலோகத்தோர் இல்லதையுளதெனக் கூறினும் அவையுள்ளதே; உள்ளதை யில்லையெனக் கூறினும் அவையில்லாததே ஈதுலகியற்கை. ஆனதுபற்றி நான் ஸீதையைத் துறபபதே மிகச்சிறந்ததாகும். இதைவிட நாம் சிந்திக்கும் விஷயம் யாதொன்றையும் அறிகிலேன். இப்போதே அரிவைமாரிற் சிறந்த வைதேகியை இருந்தவத்தோர் வைகும் பெரிய கானகத்தடுத்த ஆச்சிரமத்தருகே கொண்டுபோய் விடுத்துவருவதே என்னுடைய துணிபு" எனக் கூறினர்.

இவ்வகை முடிவாகக்கூறிய இராமன் வார்த்தையைக் கேட்ட பிராதாக்கள், செய்வகை யொன்று மறியாதவர்களாகி, முன்பு கைகேயிசெய்த சூட்சியால் ஸீதையும்இராமனும் வனம்போகக்கண்ட

போது, தங்களுக்குள்ள அலக்கணிலும் பதின்மடங் கதிகமான துய ரில் மூழ்கினவராய், எவ்விதத்திலும் இதை விலக்குவதரிது என மதி த்து இடி விழுந்ததை யொப்பத்திகைத்து, ஒன்றும் உரைபகரா தொழிந்து ஏங்கிய மனத்தராய் முகம்வாடி நின்றனர்.

அதுகண்டு, தாசரதி மூன்றுலகையும் கலக்கெனச் சொன்னு லும், இமைப்பொழுதிற் சிதைக்கும் இலக்ஷ்மணனை நோக்கி, "யான் துணிந்து செய்யும்காரியத்தை யெவ்விதத்திலாவது விலக்கமுபலாமல் நீ சுமந்திரனுடன் சென்று, ஸீதையைத் தேர்மேலேற்றிக் கொண்டு போய், என்னுயிர்த்தோழனுகிய வான்மீகி முனிவர் வாழும் ஆச்சிர மத்துக் கருகில் விட்டு வருவாயாக" என்று கட்டளையிட்டார்.

இலக்ஷ்மணன் அவ்வுரையை தலை மேற்கொண்டு, கரை காணுத துயருடன் எழுந்து, கருணைக் கடலாகிய இராகவன் திருவடியிற் பணிந்து, வெளியிற் சென்று சுமந்திரனை யழைத்து, தேர்கொண்டு வரப்பணித்து, அவன் கொணர்ந்த தேருடன் ஸீதாதேவிமாளிகை வாயிலை யடுத்து, உட்சென்று துஷ்ட நிக்கிரகரான ஸ்ரீராமன் மனை வியைக் கண்டு, இஷ்டத்தோடு அவர்பாதாரவிந்தத்தில் நமஸ்கரித்து, "ஓ தாயே! நம்மிறைவர் தம்மையிட்டுக்கொண்டுபோய், * முனிவர் வாழ்பதியைப் பார்க்க விடும்படிக் கட்டளையிட்டார்" என்று தெரி வித்தார்.

இளையோன் விளம்பிய சொல்லைக்கேட்ட ஜானகி வேலையொன் றும் பாராமல், ஆடையாபரண முதலியன வணிந்து, நிர்ச்சந் தேகியாய்த் தேரின் மீதேறினுள். உடனே சுமந்திரன் தேரை நடத்தினுன். அப்போது வைதேகிக்கு வலக்கண் துடித்தது; வயி றெரிவுற்றது; தேகமும், மனமும் நடுக்க மெய்தியது. இத்தியாதி துர்ச்சகுனங்களைக் கண்ட ஸீதை இலக்ஷ்மணனை நோக்கி, "ஓ இளை யவரே! காணப்படும் துர்க்குறியை நோக்கில், விளையுந் தீமையின்ன தென நான் அறிகிலேன். விதியினுல் வருவதை விலக்குபவரும் உலகில் உளரோ? ஆதலால் இக்குறியால், என் நாதருக்கும், கொழுந் தன்மாருக்கும் மாமிமார்களுக்கும், சுற்றத்தார்களுக்கும், நகர வாசி களுக்கும் துன்பம் அணுகாமல் தெய்வம் காக்கவேண்டு" மென்று கூறினுள்.

---

* முனிவர் வாழ்பதியைப் பார்க்கவிடும்படி யென்பது—முனிவர் வசிக்கு மிடத்தைக் காணக் கொண்டுபோய் விடு—என்பது ஓர் அர்த்தம், மற்று மோர் அர்த்தம், முனிவர் வாழிடத்துக் கருகில் கொண்டுபோய் விடு என்பது.

தனக்கு நேரிடுந் துன்பத்தை யறியாமல், தன் நாதன் முதலினோரையும் ஜகத்தையும் விரும்பிக் கூறும் கற்பிற் சிறந்த ஸீதையின் நற்புத்தியை, இலக்ஷ்மணன் வியப்போடு நினைந்து, ஆருத்துன்பத்தி லாழ்ந்து, தேரைச் சடுதியிற் செலுத்தவிடுத்து, முனிவர்கள் வாழும் வனத்தை யடுத்தனர்.

அடுக்கவே இலக்ஷ்மணனுக்குத் தன்னையும் அறியாமல் துயரம் மேலிட, அதை யடக்கும் வழி தெரியாமல் தன இருகண்களிலும் நீர் அரும்பவிழ்த்துப் பொருமத் தொடங்கினன்.

அதனைக் கண்ணுற்ற ஜானகி, "ஓ இளையோய்! நீர் துயருற்று வருந்துங் காரணமென்ன" வென்று வினவினள்.

இலக்ஷ்மணன், தனது முன்னோன் தேவியை வலமுறவணங்கி, "ஓ உலகமாதாவே! நமது அண்ணலாகிய காகுஸ்தன் என்னை நோக்கி ஜெகத்துளோர் "உளதென்றுரைக்கிலுளதாம், இலதென்றுரைக்கில் இல்லையாம்." உலகத்தோர் உண்டென்பதை இல்லையென்று மறுதளிப்பவன் பேயனாகும். ஆகையால், ஸீதைபாற்கூறும் உலகத்தோர் வார்த்தையை நாம் புறக்கணிப்பதுபேதமை. நகரவாசிகள் ராவணன் ஹரித்துப்போன ஸீதையை ஸ்ரீராமன் மறுபடியுங் கொண்டு வந்து வைத்து வாழும்வாழ்வைப் பார்க்கிலும் சாதலே யழகெனச் சாற்றுகிறார்கள். ஆனதுபற்றி யவளை நான் விலக்கியிருக்கிறேன். நீ சுமந்திரனோடுசென்று ஸீதையைத் தேரேற்றிக் கொண்டுபோய், வால்மீகிமுனிவர் வாழும் பன்னகசாலைக் கருகாமையில் விட்டு வாவென்று பகர்ந்தாரென்று நாத்தடுமாறத் தெரிவித்தான்.

இலக்ஷ்மணன் கூறிய அச்சொல், அக்கினியிற் காய்ச்சிய நாராசமென்ன வைதேகி செவியிற் புகுதலோடும், கைசோர்ந்து, மெய் தளர்ந்து, உளம்நைந்து, தன்னை மறந்து பூமியிற்சாய்ந்தாள். சாய்ந்தவள் பின்னுமத்துயரம் பொறுக்கமாட்டாதெழுந்தாள்; திரியவும் விழுந்தாள்; தன்னிருகரங்களாலும் வயிற்றில் அறைந்து கொண்டாள்; துன்பசாகரத்தில் மூழ்கினள், வன்னெஞ்சராய் என்னைக்கானகத்தில் விடச்சொன்ன எனது நாயகரது நெஞ்சு, அதனைக்கேட்டு தடுக்காது கருப்பமுள்ள என்னைக்கொண்டுவந்து காட்டில் விடுத்த இளையவரது நெஞ்சு, பழிச் சொல்லுக்காற்றாது பதி நீக்கினளென்ற வார்த்தையைக் கேட்டும் இன்னும் சாகாதிருக்கும் என் நெஞ்சு, இம்மூன்றனுள், எந்த நெஞ்சு வலியதென ஓ தெய்வங்காள்! நீங்களே

தெரிந்து கொள்ளுங்கள். என்னெஞ்சைப் போன்ற நெஞ்சமுடையவர் இத்தரணியில் இல்லை. கடல்சூழ்ந்த இப்புவனத்தில் வாழும் மங்கையருள், யான் படும்பாடு பட்டவர் இல்லவேயில்லை. ஓ தெய்வமே! எனது பிராணநாதராகிய காகுஸ்தர் உலகப்பழிக்கஞ்சி யென்னைக் காட்டில் தனிமையிற் றுறவிடுத்தனர். சூரியகுலம் சிறக்கப் பிறந்த வீரியமுள்ள கார்நிற வள்ளலுக்கு இதுவோ மனுநெறி! இதுவோ அரசநீதி!! ஹா! ஈதென்ன ஆச்சரியம்!!! கைகேசி யம்மை மனங் கைப்பக் கற்பித்த கூனியைப்போல், எனது நாயகர் மனந் திரிய எவரேனும் கற்பித்தாரா? யான் ஏதும் அறிகிலேனே. என்னிடத்தில் அப்பிரபு ஒன்றும் கூறவில்லையே" என்றிவ்வாறு ஸீதை, கல்லுமுருகப் புல்லுமழக் கண்ணீர் உகுத்துப் புலம்பினாள்.

இளையகாளை, வளையல்சரிய மின்னற் கொடிபோன்று வீழ்ந்தலறும் ஜானகியின் துயரத்தைக் கண்ணுற்று, தனக்குள் ஒன்றுந் தோற்றாதவனாய்த் தேற்றுவாரின்றி, *இருதலைக் கொள்ளியி லகப்பட்ட எறும்புபோலப் பரிதபித்து ஓ தெய்வமேயென்று கதறினான்.

பிறகு ஒருவாறு இலக்ஷ்மணன் மனந்தேறி, சிறகற்ற பறவை போற் கதறும் உத்தமியாகிய ஸீதையை நோக்கி, வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலாய நூற்களிலும் மார்க்கமில்லை. விண்ணவர்களுக்கும் அரிதாகும்; மண்ணவர்களா விலக்கப் போகிறார்கள்? உலகெலாம் ஒரு குடைக் கீழாண்ட நளமகாராஜன், நிலை கெட்டுத் தன் மனைவியைக் காட்டகத்தே விட்டுத் தானும், மடைப்பள்ளித் தொழிலிற் பிரவேசிக்கவில்லையா? இன்னும் சத்திய வந்தனை அரிச்சந்திரன், தனது குமாரனையும், காதலியையும் பறையனிடம் விற்பனைசெய்து, தானும் பறையனுக் கடிமையாகிச் சுடலையைக் காக்கவில்லையா? இவையெல்லாம் ஊழ்வினைப் பயனே யல்லாது வேறல்ல தாயே! நீரும் முன் செய்த நல்வினைப் பயனால், மாயாப் புகழ்படைத்த இராகவரை மணவாளனாக அடைந்து தீவினைப்பயனால் கண்ணிழந்த மயிலைப்போல அன்னவரைப் பிரிந்தீர். இருவினைக்கீடாக வெடுத்த சரீரம் இதுவாகையால், அவ்வினைக்கீடாக வரும் ஸுகதுக்கத்தைக் கருதாது, மறுமைப் பலனை நோக்கித் தவஞ்செய்தலே தகுதியென மதித்து, இவ்வனத்தில் வைகும் தபோதனர்

* இருதலைக்கொள்ளியால் படுதல் என்றால்— உள் துவாரமுள்ள குழாயின் இருபுறத்திலும் தீப்பற்றி யெரிய, அதனுள் அகப்படுதல்.

களின் அடிபேணி, நல்ல விருதாதிகளை யனுஷ்டித்து, உம்முடைய காதலனும், பரமாத்மாவுமாகிய ஸ்ரீராமனை, சதாகாலமுந் தியானித்துக்கொண்டிரும்; இதுவே யுமக்கு மேன்மையைத்தரும் தவமாகும்" என்று கூறினன்.

அவ்வுபதேச வார்த்தையைக்கேட்ட ஜானகி, "ஓ இளைஞரே? உம்முடைய தமையனாரும் நானும், தன்னைவிட்டு நீங்காத நிழல்போல இம்மாதவர்கள் அடிநாடி வணங்கினோம். ஆனால் இச்செயல் தவத்தினர் தப்புமல்ல, தரணியோர் தப்புமல்ல, என் செயலென்றே என் பிராணநாதனுக்குச் சொல்லும். தீயிலிறங்கி என் பரிசுத்தத்தைக் காட்டியும், பூவினுள்ளோர் கூறும் பழிக்கஞ்சி யென்னைத் துறந்தது மாமாயையின் சம்பந்தமென்றும, உம்முடைய பிரிவு எனக்குச்சிறந்ததென்றும் அவர் பாற்சென்று கூறும், ஆயினும் இளையவரே! நான் ருதுஸ்நானம் பண்ணி நான்கு மாதங்களாயின; உலகவாயைமூட முடியாது; இனிவரும் காரியம் நானறியேன்; நீர் என் சரீர நிலைமையைக் கவனித்துப்பாரும்" என்று பகர்ந்தாள்.

கண்ணீர் சொரிந்துகொண்டு நின்ற இலக்ஷ்மணன்செவியிற் புண்ணிற் கோலிட்டதென வைதேகி வசனித்த சொல்லேற, அவர் "ஓ தாயே! உமது காதலர் உம்மை மணம்புரிந்த அன்றுமுதல் இன்றுவரை, உம்மடிபணிவதினால் உமது கமலபாதத்தை மட்டுந் தரிசித்தேனே யல்லாது, உமது தேகலாவண்யத்தைப் பார்த்தவனல்லன். இப்போதும் உண்மைநோக்க நான் வல்லவனுமல்லன். நாட்டிலிருந்து தோழிமாரால் நீர் கருப்பவதியானதை யறிந்து, இக்ஷ்வாகு வம்ஸந் தழைத்ததெனக் குதூகலித்திருப்பதைவிட்டு, பக்ஷமிழந்து உம்மை வெறுத்துக் காட்டில் விடுத்து நெஞ்சுழலுந்தருணம், உம் வாயாலேயே யச்செய்திகேட்டுக் கஷ்டப்படவிடுத்த என் ஊழ்வினையை நினைந்து நான் வருந்துகிறேன். "ஊழிற்பெருவலியாவுள" என்றுரைத்து, நைந்த சிந்தையனாய் அருந்ததிக் கொக்கும் ஸீதையை நீங்கி தன்தேயம் நோக்கிச்சென்றான்.

இளையவன் சென்றதைககண்ட ஜானகி, ஒருக்கால் மீளவுந் திரும்புவாரோ வென்றையமுற்றவளாய்ச் சற்றுநேரம் பார்த்தாள். அவளது கண்ணுக்குப் புலப்படாமல் அவன் தேர் மறைந்தது; ஜனகன்குமாரி நாமென்ன செய்கிறது! இலங்கையிற் சிறைபட்டுத் துயருழந்தது போதா! இக்காட்டிலும் தன்னந்தனியாக நின்று பரி

தபிக்கவும் வேண்டுமோ! மணந்தகணவன் சீறிக் கைவிடுவானுகில், புகுந்த மனைக்கண்ணுள்ளவரும் புறக்கணிப்பர்; பிறந்த மனையிலுள்ளவரும் பழிக்கஞ்சிப்போற்றார்; ஈது எனக்கே யுரித்தாயது. ஆ விதியே! அன்னியராவது என்துயர் தீரப் பார்க்கமாட்டார்களா?" என்றிவ்வாறு பலவாறு நினைந்து கோவென்று கதறினள்.

அந்த அழுகுரலைக்கேட்ட முனிசிரேஷ்டராகிய வான்மீகி மைந்தர்கள், ஓசையெழுந்த திசைநோக்கிவந்து, துணையொருவருமின்றித் தனிமையிற் கதறும் ஓர் பெண்ணைக்கண்டு, சடுதியிற் தந்தைபாற் சென்று, "ஐயா! ஓர் பெண் விண்ணுலகில் நின்றுதான் வீழ்ந்தாளோ, அல்லது மண்ணுலகிலுள்ளவள் தானே, சொல்லுதற்கரிய உருவமுடையவள், ஒருவருமற்ற காட்டில் தனியே நின்று கண்ணீர் விட்டழுகிறாள். அவள் துயரத்தை நீக்குவது தங்களது கடமையாகும்" என்றறிவித்தார்கள்.

தவத்திற்சிறந்த வான்மீகிமுனிவர் அவ்வுரைகேட்டலும், உடனே யவர்களோடு அவ்விடஞ் சென்று, ஜானகியைக் கண்டு தேற்றி, "நீயிங்கு தனிமையிலிருந்து வருந்துவதில் என்ன பிரயோசனம்? நான் உன்னை இராமன் தேவியென்றும், ஜனகன் குமாரியென்றும் ஞான திருஷ்டியாலறிந்தேன். உன்னை யவர் காட்டில் விட்டாரென்று நினையாதே. என்னை நம்பியே என்னாச்சிரமத்தருகில் கொண்டுபோய் விடச் சொன்னார். என் பன்னகசாலைக் கருகில் அநேகம் பெண்கள் தவம் புரிந்து வருகிறார்கள். அவர்களுன்னைக் கண்டால் உன் பால் நயம் பாராட்டுவார்கள். இப்போது என்னுடன் ஆச்சிரமம் வந்து சேர்" என்றழைத்தார். ஸீதை யம்முனிவர் அடிபணிந்து அவரோடு அவரில்லம் சென்றனள். ஸீதையைக் கண்ட தவமாதர்கள் அவள் வடிவழகைக்கண்டு இவள்யாரோ துயருறக் காரணமேதோ வென்றைய முற்றனராகி, தவசிரேஷ்டன் அடிபரவிக் கேட்க, முனிவர், மனுகுலம் விருத்திபடையப் பிறந்து, கருங்கடலிற் சேது கட்டி கொடிய இராவணனை வாட்டி, தேவர்கள் துன்பத்தை வீட்டி, தனது கோதண்டத்தின் வலியைக்காட்டி பூமண்டலத்துள்ளோர் ஜெனனமரணக் கடலைக்கடக்க வழிபைநாட்டி நின்ற ஸ்ரீராமன் தேவி, பாவராலும், புகழப்பட்ட ஜனகமகாராஜன் புதல்வி, ஸீதையென்னும் நாமதேயம் படைத்த புதல்வி, தனது கணவன் வெறுக்க இவ்விடம் வந்து சேர்ந்தனள் என்று விடை பகர்ந்தார்.

மாதவனுரைத்த கெம்பீர வார்த்தையைக் கேட்ட அருந்தவ மங்கையர் அனைவரும், ஸீதையை விருட்பொடு நடத்தி ஆதரித்து வந்தார்கள். ஸீதை வான்மீகி யாச்சிரமத்தில் வசித்துவந்தனள்.

இலக்குவன் சுமந்திரனோடு அயோத்திமேவி, தனது நாதனைப் பணிந்து ஸீதையைக் கொடுபோய் விடுத்துவந்த சேதியைப் பகர, கோசலைக் குமரன் மட்டற்ற துக்க சாகரத்தின் மூழ்கினன், அன்னது கண்டு இளையவன் 'ஓ அண்ணலே! நமது துன்பத்துக்குக் காரணமான பழி கூறு மூலமையாவது, அப்பழிகேட்டு அதனைத் திருத்தப் புகுந்த தங்கள் மதியையாவது, சகிக்கக் கூடாத் துயரத்தி லாழ்ந்து வருந்தும் ஜனகர் பாக்கியவதியையாவது நோவக்கூடாது. ஆனால், செப்புதற்கரிய குணத்தையும், ஒப்புதற்குரிய கற்பையும் பெற்று, தீயினும் சிறந்த பரிசுத்தமுடைய ஸீதையையும் உம்மையும் பிரித்த விதியையே நோவவேண்டும்" என்று கூறினன். அதுகேட்டு இராமன் மனதமைதர்ச்சி யடைந்து வைராக்கிய மடைந்து, முனிவரை யொப்ப வீற்றிருந்தார்.



## 5-வது சருக்கம்.

பின்பு தரணிபாரம் நீக்கின ஸ்ரீராமன் பிரியத்துடன் தனது பிராதாவை நோக்கி ஓ இளைஞனே! உலகத்துக்கு நன்மையுண்டாவதை நாடி நாடோறும் இராஜீய காரியத்தைக் கவனித்து, நடத்துவது இராஜதர்மம் நம்முன்னோர்கள் இதில் மிக்க கவலையுற்று நடத்திவந்தனர். நாமும் அம்மாதிரியே அரசநீதி பிறழாது இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்வதில் முயல்வோம்; கடிய சிந்தையனுகிப் பழியைத் தேடிக் கொடுங்கோல் நடத்தி ஆறில் ஒருகடமை வாங்குவதைவிட அதிகமான குடியிறை வாங்கியும், தண்டனைக்குட்படுபவரைத் தண்டியா தொழித்தும், தண்டனைக்குட்படாதாரைக் கண்டிததும் கோல்முறை நடத்தும் நராதிபன் எட்டுத்திசையும் பாவும் பழிபூண்டு இகலோக சாதகத்தையுமிழந்து, பின்னருந் தென்றிசைக் கோனுல் தண்டிக்கப்படுவான். கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டைவிடக் கடும்புலிவாழுங் காடு நன்மை பயக்கும். நாடோறும் தேச காரியம் விசாரியாது சோம்பலுறும் மன்னவன் நாசமடைவான். முற்காலத்தில் கோடிகோடியாகத் தானம்செய்வதிற் சிறந்த

நிருகன் என்னும் அரசன், ஒருக்கால் ஓர் பசுவை நற்றவமுடைய பிராமணனுக்குத் தானமாகக் கொடுத்தான். அப்பசு சிலநாட் சென்று முன்னிருந்த பழக்கத்தையொட்டி இறைவன் பசுத் தொழுவத்தில் வந்து சேர்ந்தது, அதையறியாமல் மற்றோர் பிராமணனுக்கு அப்பசுவைத் தானம் பண்ணினான். முன்புதானம் பெற்ற மறையோன் தன் பசுவைத் தேடி, எங்கும் காணாமல் பின்பு தானம் வாங்கினவன் மனையிலிருக்கக் கண்டு அப்பசு தன்னதெனை, இருவரும் வாதமிட்டு, அரசன் கோயிலையடைந்து, தங்கள் விவாதத்தை முறையிட அநேகநாள் காத்திருந்தும், மன்னன் வினவாதொழிந்தமையால், அவ்வேத பாரகர் நிருகராஜனை நோக்கி நீ கோம்பி (பச்சோந்தி) யாகக்கடவை யென்று சாபமிட்டு இச்சாபம்வருகின்ற துவாபரயுகத்தில் தோன்றும் சாரங்கபாணியின் கடைக்கண் பார்வையாற்றீரும் என்று கூறிச்சென்றனர். அவ்வாறே முனிவரிட்ட சாபத்தால் கோம்பியானான். அவ்வேதியரிருவரும் அப்பசுவை மற்றொரு முனிவருக்குக் கொடுத்துவிட்டுத் தத்தம் காரியத்திற் பிரவேசித்தனர். தனது தேசகாரியத்தைத்தினந்தோறும் கவனியாத திறல் மன்னன் கேடு இதுவாகும் என்றார்.

ஸ்ரீராமன் கூறிய கதையைக்கேட்ட இளையவன், தன்னாட்டில் நடந்ததெனக் கூறியதை நோக்கி மிக்க ஆச்சரியமடைந்து இது என்ன அற்புதமென்று கூற, முன்னவன் இன்ன அற்புதமாயுள்ள மற்றொருகதையும் கூறுகிறேன்கேள். மனுகுலம் விளங்கத்தோன்றி யிப்பூமண்டலத்தை நெடுங்கால மாண்ட நிமிச்சக்கரவர்த்தி, தாரணியைத்துறந்து ஆரண்யத்தை யடைந்து பாவந்தீரத் தவம்புரியுநாளில், தீர்க்கசத்திரயாகம் செய்யத்தொடங்கி, தவத்தின் மிக்க வசிஷ்டரை யாகத்தலைவராக வரிக்க விரும்பிக்கேட்க, அன்னவர் ஓ மன்னவனே என்னை முன்னமே வானோர் காவலன் ஓர் யாகஞ்செய்ய வரித்திருக்கிறார்; யான் அங்குசென்று அம்மகத்தை முடித்துப்பின்பு உம்மிடம் வருகிறேன் என்று கூறிச்சென்றனர். சக்கரவர்த்தி பிறகு ரிஷிசிரேஷ்டராகிய கௌதமரைக்கொண்டு அவ்வேள்வியைச் செய்ய ஆரம்பித்தார்; அமரர்கோன் மகத்தைமுடித்துத் திரும்பும் வசிஷ்டர் கௌதமர் செய்துவைக்கும் யாகத்தைப் பார்க்கக்கருதி யவ்விடம் சென்றனர். அச்சமயம் சக்கரவர்த்தி நித்திரையிலிருந்ததால் குருவாகிய வசிஷ்டரைவந்து காணவில்லை. அதுகண்டு முனிவர் கோபம் மீறி, இந்த சேமியாள்பவன் என்னை முன்னம்வரித்து நான் வருவ

தற்கு முன்பு ஓர் அன்னியனைக்கொண்டு செய்யும் யாகத்தைப் பார்க்க விரும்பி நானே வந்தேன். என்னை வந்து பார்க்காமல் அசட்டை செய்ததால், என்னை பிழந்து யாகஞ் செய்யும் அவன், தன்னுடலை யிழந்து தவிக்கக்கடவானெனச் சாபமிட்டார். மன்னவர்மன்னர் அச்சாபத்தை யறிந்து, அனலெனப் பொங்கி யவர் வரவறியேன், நித்திரை யுற்றேன்; அநியாயமாக வெனக்கிட்ட சாபம் அவரையும் பற்றுகவென்று தவத்தின் மிகுதியால் தானும் சபித்தார்.

இவ்விதம் இராஜ சிரேஷ்டரும், முனி சிரேஷ்டரும் அச்சாபத்தைப் பெற்றுவுடலைவிட்டுப் பிரிந்து ஆவி ரூபமாக வசிக்கும் நாளில், வசிஷ்டராவி சதுர்முகன்றன்பால் மேவி, இராஜரிஷியின் சாபத்தால் உடல்போயிற்று, மறுபடியும் அதை நான் பெறக் கிருபை புரிய வேண்டுமெனக் கேட்டது. பிரமன் அந்த ஆவியை நோக்கி "நீ, ஊர்வசி நிமித்தம் வருணன் விட்ட இந்திரியந்தங்கிய கும்பத்தை யடைந்து, அத்தெய்வ கும்பயோனிப் புத்திரனாக அவதரிப்பா" யென்று கூற, அதைக்கேட்டு முனிவராவி மறிகடலெய்தியது.

அப்பொழுது சூரியன் ஊர்வசியை யின்று நம்மிடம் வருக எனக்குறிப்பிட்டார். அன்னவள் அரம்பை முதலிய ஸ்திரீகளுடன் நீர்விளையாடினாள். அவளைக்கண்டு வருணன் மோகமடைந்து தன்னிடம் வரக்கூறினான். அவள் முன்னமே திவாகரன் என்னை வரித்திருப்பதால் முறையன்றென மறுத்தாள். வருணன் அனங்க பாணத்துக் காற்றுதவனாகி நைந்துருகி வீரியத்தை விடுத்து, அதை ஒரு கும்பத்தில் வைக்கிறேனென்று அவளிடம் கூறினான். இதனால் காலதாமதப்பட்டு ஊர்வசி *மித்திரன்பாற் சென்றாள். ஆங்கவர் கனலெனக்கொதித்து "ஓ பேதாய்! நான் முன்னமே யுன்னை வரித்திருக்க முறைப் பிசகாய், மற்றொருவனிடத் தன்பு பாராட்டி நின்று காலதாமதப்படுத்தி வந்தாய். உன்னை நாடுதற்குற்ற வீரியம்வெளிப்பட்டுவிட்டது. ஆனதால் நீ பூலோகஞ்சென்று அங்குவைகும், புதன் குமாரன் புரூரவன் என்னும் அரசனுக்கு மனைவியாகி நீண்டகாலம் வசிக்கக் கடவாயெனச் சபித்தார்.

அம்மித்திரன் விடுத்த வீரியத்தைத் தேவர்கள் ஒரு குடத்தில் விடுத்திருந்தனர். அதையறியாது வருணன் அக்குடத்திலேயே தன்னுடைய வீரியத்தையும் வைத்தான். அக்கும்பத்தினின்று முன்

* மித்திரன் :—சூரியன்.

னமே விடுத்த மித்திரன்வீரியத்தால் அகஸ்தியர் பிறந்தார். பிறகு வருணன் இந்திரியத்தால் வசிஷ்டர் தோன்றினார்.

நேமிச் சக்கரவர்த்தி முனிவர் சாபத்தால் தன்னுடலை விட்டுப் பிரிந்தவுடன், அச்சடலத்தை அவரைப் பின்பற்றினோர், ஆடையாபரணாதிகளால் அலங்கரித்து கெடாது சேமித்து வைத்திருந்து, ஐயாயிரவருடம் கௌதமனைக் கொண்டே முன் தொடங்கிய யாகத்தைச் செய்து முடித்தனர். அது கண்டு தேவர்கள் மனமுவந்து மேற்படி நிமியின் ஆவியைவரவழைத்து நாங்கள் சந்துஷ்டியையடைந்தோம்; உனக்கு வேண்டிய வரத்தைக்கேள் என்று கூறினார்கள். நிமியாவி, "தேவர்களே! நான்மாநிலத்தோர்கண்களில் நின்றியங்கும்படி வரந்தரவேண்டு" மென்று வேண்ட, வானுளோர் அவ்வாறே தந்தோமென்று கூறி விண்ணடைந்தனர். அது முதல் நிமிச்சக்கிரவர்த்தி ஆவி மானிடர் கண்களில் வசிக்கிறது.

கௌதம முனிவர் முதலினோர், தங்களால் சேமித்து வைக்கப்பட்டிருந்த அந்த நிமியுடலை, வலியுடைய திக்கடை கோலினாற்கடைய, அதினின்று தோன்றிய புருஷனை, சடத்திற்கடையச் ஜனித்ததினாலே,ஜனகன் என்று பேர்சாற்றி, தரணியை நீயேயாளெனச் சாற்றினார், ஜனகரும் அதுமுதல் இவ்வுலகையாண்டுவந்தார் என்று கூறினார்.

இதைக்கேட்ட இலக்ஷ்மணன், தமையனை யடிபணிந்து "அண்ணலே! உலகத்திலுள்ளவர்கள் அடக்கத்தக்குந்தது எது"வென்று கேட்க, புண்ணிய மூர்த்தியாகிய ஸ்ரீராமன், தம்பியை நோக்கி "ஓ! புத்திமிற்சிறந்தவனே! கோபத்தை யடக்காத வேந்தன் குருமொழியை நம்பாதசீடன், தாகத்தைத் தீர்க்காத தண்ணீர், தரித்திரத்தை யறியாத பெண்டிர் பாபத்தைத் தீராததீர்த்தம் இவைகளெல்லாம் பயன்படாதவைகளாகும். மூங்கிலிற் பிறந்த அக்கினியானது தன்து உற்பத்திக்கிடமாயிருந்த அம்மூங்கிலின் முதலறக்கெடுப்பதுபோல், முற்கூறிய கோபமானது ஒருவனிடத் துற்பத்தியாகி அவனையவன் சுற்றத்தோடு நாசமாக்கிவிடும். சிரேஷ்டமான தவத்திற் சிறந்தவனாயினும், கரைபற்றகல்வி பயின்றவனாயினும், மிகுந்த திரவிய வந்தனாயினும், உலகத்தை யாளப்பட்ட அரசனாயினும், *வெகுளியை யடக்கானாயில், அவன் பெற்றிருக்கும் சகல மேன்பாட்

* வெகுளி :—கோபம்.

டையு மிழந்து, துன்பக்கடலிலாழ்ந்து வருந்துவான். சினத்தினல் துயரடைந்தவர் கதையை யிப்போதுனக்குக் கூறுகிறேன்:—முற்காலத்தில் இந்த நாட்டையாண்டு நூறு அஸ்வமேத யாகஞ்செய்து இந்திர பதவியை யடைந்த நகுஷமஹாராஜன் குமாரராகிய யயாதி என்பவர், தந்தையைவிடச் சிறந்த கியாதி பெற்றுப் பல மன்னரும் தன்னடி பணிந்து போற்ற இந்த நாட்டையாண்டுவரும் நாளில் தைத்தியர் தலைவன் புத்திரியாகிய சன்மிஷ்டையையும், சுக்கிரன் குமாரியாகிய தெய்வயானையையும் மணந்து சன்மிஷ்டை வயிற்றிற் பூருவையும், தெய்வயானை வயிற்றிற் யதுவையும் புதல்வர்களாகப் பெற்றனர். அவ்விரு குமாரரும் விருத்தியடைந்து வாழும் நாளில், தைத்தியர் மாதிடத்தும் அவள் புதல்வனிடத்தும் அன்பு பாராட்டி சுக்கிரன் மாதிடத்தும் அவள் புதல்வனிடத்தும் வெறுப்படைந்து, ஒருநாள் சுக்கிரன் பேரனாகிய யதுவைக் கோபித்துக் கடிந்த வார்த்தை கூறினர். அக்குமாரன் தாயினிடம் சென்று, "ஓ தாயே! உலகத்தில் மானம் பெரிது, கவரிமானனது தனது மயிரிழப்பின் மானத்துக் கஞ்சி உயிரிழப்பது நீர் அறிந்தவிஷயம், ஆகையால் நாமிருவரும் நமக்கேற்பட்டிருக்கிற மானபங்கத்தை யடையாது உயிரிழப்பதே சாலவுஞ் நன்றெனக் கூறி யழுதான். பாலன் கூறிய வார்த்தையைக்கேட்ட தெய்வயானை, கோபமிகுந்தவளாகி, அங்கந்துடித்து அச்சேயுடன் தனது தந்தையிடஞ் சென்று, அவரடி பணிந்து பொருமி நின்றுருகி, "எந்தையே! உம் மருகர் சன்மிஷ்டையிடத்திலும, அவள் மைந்தன் பூருவிடத்திலும் ஆசைமிகுத்து என்னிடத்தும் என் பாலனிடத்தும் கோபம் வகித்துப் பாரபட்சமாக நடத்தி வருவதால், நாங்களிருவரும் எரியிடை மூழ்கித் துயரினை யொழித்து, அப்பாதகர்க்கு நான் மாலைசூட்டின பாபத்தைப் போக்கிக்கொள்கிறோம்" என்று கலங்கிய சிந்தையுடன் கூறினள். தன் மடந்தை கடந்து கூறியவார்த்தையைக் கேட்ட சுக்கிரன் மனமழிந்து கண்சிவந்து கோபம் பொங்கி, தன் மனைவியர் இருவரில்ஒருவருக்கின்பமும், மற்றொருவருக்குந் துன்பமும்விளைத்த அந்த யயாதி அவ ரைசயுற்ற அத்தேவி மனங் கைக்கத்தன்னிளமை நீங்கி வயோதிகப் பருவமடையக் கடவனென்று சபமிட்டார்.

யயாதி அச்சாபமேற்று, மெய்தளர்ந்து கூனடைந்து கண்பூளை சார்ந்து, பற்கள் நீண்டு, மயிர் வெளுத்து மூப்புப்பருவம் பெற்று, வருத்தமுற்று, தன் குமாரனாகிய யதுவைக்கண்டு, "ஓ அறிவிற் சிறந்

தவனே! ஆல விருட்சம் அடியற்றுப் போனபோதிலும், அதன் விழுது நான்குபுறத்திலும், ஊன்றிநின்று அம்மரஞ்சாயாது காக்கும். அதுபோல, சற்புத்திரனுவோன் தன் பிதாவை யருகாகில் வீழாமற் காப்பாற்றுவான். நீயும் அவ்வாறு இப்போது நானடைந்து வருந்தும் மூப்பைத் தீர்த்தல் வேண்டும்" என்று இரக்கத்துடன் கேட்டார். அது கேட்ட யது, "எந்தையே! நீர் சிந்தை மகிழ்ந்து காதலித்து வந்த மகன் அதற்குரியவனே யல்லது, யான் அதைத் தாங்க வல்லவன் அல்லன்" என்று மறுத்தான். யயாதி அவனைவிட்டு விலகி யடுத்த மகனுகிய பூருவைக் கண்டு "ஒ குற்றமற்ற குணத்தோய்! நீயாவது இக்கொடிய மூப்பைக் கைக்கொண்டு என்னிடும்பையைத் தீர்க்க வல்லனே" வென்று கூறினர். பூரு, தாதை கோரிய வண்ணம் பிதாவின் மூப்பைத்தான் பெற்றுக்கொண்டு தன்னிளமைப் பருவத்தைத் தன் தந்தைக் கீந்தான். யயாதி அதுகண்டு சந்தோஷித்து யதுவை நோக்கி நின்மைந்தரோடு வனம்செல்லக் கடவா யென்று சாபமிட்டு, பூருவுக்கு இராஜ்ய பட்டாபிஷேகஞ்சூட்டி யிராஜ்யத்தை யவனிடம் ஒப்புவித்துதான் அவனிடம்பெற்ற இளமையுங்கொடுத்து அவனிடமிருந்து திரும்பவுந் தன்வயோதிகத் தன்மையைப்பெற்று, தன்பாவந் தீரத் தவம்புரிய வனம்நோக்கிச் சென்றார். கோபத்தை யடக்காதவர்கள் இவ்விதங் கெடுதல் திண்ணம் என்று கூறினர்.

இலக்ஷ்மணர் விலக்குதற்குரிய சினத்தைப் படைத்தோர், அடைந்த அபகீர்த்தியை நினைத்து, இது நல்லகாரியம் என்று துதித்து, விஞ்ஞான சொரூபியாகிய ஸ்ரீராமமூர்த்தி திருவடியிற்பணிந்து, "ஓ அண்ணலே! உலகத்தில்மானுடர் முதல் தேவர்கள்வரை, தாம்தாம் செய்த புண்ணிய பாவத்துக்குத் தக்கபடி, சுவர்க்கம், நரகம் முதலிய ஸுகதுக்கத்தை யனுபவித்து, மீண்டும் ஜனனமெடுத்து அலைவாய்ப் பட்டதுரும்புபோலஏறியும்இறங்கியும்கஷ்டப்படுகிறார்களே யொழிய நித்திய ஸுகத்தை யடைவாரில்லை. ஆகையால் ஸம்சார பந்தமாகிய அஞ்ஞானம் நீங்கி ஞானமடைந்து நித்தியானந்தத்தை யடையுமார்க்கத்தை யெனக்கு உபதேசித் தருளவேண்டு"மென்று வேண்டினர். ஞான சொரூபியாகிய ஸ்ரீராமர், அறிவிற்சிறந்த இலக்ஷ்மணனை நோக்கி "ஓ இளைஞ! வேதம், ஆகமம் இரண்டும் சிறந்தநூல். வேத வாக்கியப்படி ஆத்மஞானம் உதயயானல், அஞ்ஞானம் நசிக்கும். அந்த ஆத்மஞானம் எதனுல் வருமென்றால், ஆத்மா—அனுத்மா [illegible] சோதனைபிலேயே வரவேண்டும். கன்மத்தினுல் ஆத்ம

ஞானம் வரமாட்டாது; விசாரஞானத்தினாலேயே ஆத்மஞானம் வரவேண்டும்.” கன்மத்தினால் ஞானம் வருமென்று சுருதியாதிகளிற் சொல்லியிருக்க அதற்கு விரோதமாய், கன்மத்தினால் ஞானம் வராதென்று எப்படிச் சொல்லலாமென்னில், “கருமமானது புண்ணியம், பாவம், மிசிரம் என மூன்றுவிதமாயிருக்கும். அவைகளில் பலனை அபேக்ஷியாது நிஷ்காமமாகச் செய்கிற புண்ணிய கன்மமே மிசிர கன்மமாகும்.” ஏகதேசமாகிய நிஷ்காம புண்ணியகன்மம் மட்டும் ஞானத்துக்குப் பரம்பராசாதனமாகும், ஏனைய கன்மம் சாதனமாகாது. ஆகையினால் கர்மத்தினால் ஞானம்வராதென்பது சித்தமாயிற்று. நிஷ்காம புண்ணிய கன்மத்தினால் தன்னை யின்னானென்று விசாரிக்க சித்தசுத்திவரும். அதனால், நித்திய அநித்திய வஸ்து விவேகமுண்டாகும், அதனால் இகபரங்களில் நிராசைவரும். அந்த நிராசையினால், சமாதிஷட்க சம்பத்துண்டாகும். அதனால் முமுட்சுத்வம் வரும். முமுட்சுத்வம் அடையப்பெறின், சற்குருவையடைந்து சிரவணம், மனனம், நிதித்தியாசனம் இவைகளைப் பெற்று, அதன் வழி ஆத்மஞானம் உண்டாகும். ஆகையினால் ஏகதேசமான கன்மம் ஞானத்துக்குப் பரம் பரா சாதனமென்றும், விசார ஞானமுண்டாவதே சாட்சாத் சாதன மென்றும் சொல்லப்படும்.” “ஒருவனுக்குப் பசியுண்டானால் அதைத்தீர்ப்பதற்கு ஒருவரிடம் சென்று தேகி பிக்ஷாம், என்று கேட்டு அன்னத்தைப் பெற்றுப் பசியைத் தீர்ப்பது சாட்சாத் சாதனம். நிலம்வாங்கி, அடிமையாள், ஏர், மாடு முதலியன சேகரித்து தானிய உற்பத்தி செய்து பசியைத் தீர்க்க முயல்வது பரம்பராசாதனம்.” இந்த இரண்டு சாதனத்தில் முக்கியமானது எதுவென்பதை நீயே தெரிந்து கொள்.

இந்த சாட்சாத் சாதனமுண்டாவதற்கு மதிவேண்டும். “கன்மமும் அநேக ஜென்மாந்திர அநுபவத்தால், சஞ்சிதம், பிராரத்வம், ஆகாமியம், என மூன்றுவகைப்படும். அவைகளில், சஞ்சிதம் சரீரத்தை மட்டும் கொடுக்கும். பிராரத்வம், சுகதுக்கத்தை யநுபவிக்கச் செய்யும். ஆகாமியம், பிராரத்வத்தை யநுபவிக்கும்போது அதனோடொத்து சிலபாகத்தை யநுபவிக்கச்செய்து, எஞ்சியது பிராரத்வமாகும்.” “அவையும், பந்தசஞ்சிதம், பந்தபிராரத்வம், பந்த ஆகாமியமெனவும், விடுதி சஞ்சிதம், விடுதி பிராரத்வம், விடுதியாகாமிய மெனவும் கூறப்படும்.” “பந்த ஆகாமியத்தாலுண்டாகும் சஞ்சித பிராரத்வம், ஜனன மரணத்துக்கேதுவாகித் துன்பத்தை வி[illegible]

விக்கும். விடுதியாகாமியத்தினு லுண்டாகும் சஞ்சித பிராரத்வம் ஜனன மரணத்தைப் போக்கி, நித்தியானந்த சுகத்தைக் கொடுப் பதற் கேதுவாகிக் சுகப்படுத்தும்" இந்த விடுதியாகாமியத்தை மதி யென்று சொல்லப்படும். பந்த ஆகாமியத்தை அசாஸ்திர முயற்சி யென்றும், விடுதியாகாமியத்தை சாஸ்திர முயற்சியென் றும், பந்த சஞ்சிதத்தை அசுபவாசனையென்றும், பந்த பிராரத் வத்தை விடயாநுபவமென்றும் விடுதி, சஞ்சிதத்தை சுபவாசனை யென்றும், விடுதி பிராரத்வத்தைத்தை சொரூபாநுபவ சாட்சாத் காரமென்றும் சொல்லப்படும் இந்த விடுதியாகாமியாகிய மதியைக் கொண்டு சுத்த வாசனையையடைந்து நித்தியானந்த சுகத்தைப்பெற லாம். சுத்தவாசனை தொடரில் பரிசுத்தமாகிய பரமஐக்கிய பதம் அடையலாம். சுத்தவாசனை யென்னும் பிரம்மவித்தையைப் பயில முயற்சித்தல் வேண்டும். அதற்கு மனமானது அசுத்தவாசனைகளிற் பிரவேசிக்காமல் தன் வசப்படுமாயின் அம்முயற்சிக்கு அது உதவி யாகும். "சுத்தவாசனையோடு கூடியமனம் (தத்பதத்தை) பிரம சொரூபத்தை யறியுமட்டும், வேதங்களிற் கூறிய பிரம்மோபதேசத் தையும், மஹாவாக்கியார்த்தத்தையும், போதிக்கின்ற சற்குருகூறும் மார்க்கத்தை யனுஷ்டித்தல் வேண்டும்." அதாவது—"சுபவாசனை யினுல் துக்கமில்லாத ஞேயமென்னும் ஆத்மபதத்தை யடைந்து, சாக்ஷாத்கார நிலைபொருந்தி சிறந்த "தத்வமஸி" என்றவாக்கியத் தின் "அது நீயாகுய்" என்னும் அருத்தத்தை முன்னிட்டு 'கூடஸ் தன் பிரமம்" என்னும் இவ்விரண்டையும் விசாரிக்கு மனதை, பிர மத்தில் ஐக்கியம்செய்து, கூடஸ்த பிரம ஐக்கிய நிரதிசயானந்த அநுபவசாக்ஷாத்காரர் தானேயென்று அறிந்து நிற்பது."

"தேகாதி பிரபஞ்சங்கள் உற்பத்தியாகி அழிந்துபோவதைநோ க்கி இந்தசரீரம் நீங்கினுல் எந்தசரீரம் வருமோவென்னும் பபத்தினுல் இந்த சுத்தவாசனை பொருந்திய மானுட தேகத்தன்றி மற்றதேகத் தினுல் முத்திபெறக்கூடாதென்று தெளிந்து இத்தேக மிருக்கும் போதே மதியைக்கொண்டு முத்தியடையவிரும்பி கருணைமூர்த்தி யாகிய சற்குருவை யடைந்து, அவரது திருவடியிற் சாஷ்டாங்கமாகப் பணிந்து சந்தேகமின்றி * உடல், பொருள், ஆவி முன்றையும் அவ

* உடலென்பது:—பிராரத்வகன்மம் அநுபவிக்க எடுத்த ஜடம்,
பொருளென்பது:—இந்த உடலையும், பிராணனையுந் தானென மதிக்கும் ஜீவனே சிற்றம்பலப் பொருளாகும்.
ஆவி என்பது:—பிராணனே ஆவியாகும்.

ருக்கேகொடுத்து, கைகூப்பி நின்று, "ஓ ஸ்வாமி, ஓ கிருபாநிதி! அடியேன் பந்தத்தில் நின்று நீங்கி இத்தேகத்திலே ஜனனம், மரண மற்ற மோட்ச சாதனத்தை அடையும்படி கிருபை செய்யவேண்டுமென்று வேண்ட, அதைக்கேட்ட அவ்வாசிரியரும், கிருபை கூர்ந்து அபயஸ்தங்கொடுத்து சிலகாலந் தமது சந்நிதானத்திலேயே யிருக்கும்படி செய்து சிஷ்யன் பருவமறிந்து, * அத்தியாரோப, அபவாத யுத்திகளையும், அத்துவாவிருத்திலட்சணை, தடஸ்த லட்சணை, சோரூப லட்சணை, இம்மூன்றுடன் † மஹாவாக்கியார்த்தத்தையும், கூடஸ்த பிரம்ம ஐக்கிய ஞானத்தையும் உபதேசித்து, தேகமே தானெனும் புத்தியைக்கெடுத்து நீயே பரப்பிரமமென்று, சொரூப ஞானத்தை தெரிவிக்கப்பெற்று சகல சந்தேகமும் அற்று அதன் வழி நிற்றல் வேண்டும்.

---

* அத்தியாரோபம் என்பது:—கிளிஞ்சில் இடத்தில் வெள்ளியும், பழுதை யிடத்திற்பாம்பும், கட்டை யிடத்திற் கள்ளனும், ஆரோபிப்பதுபோல, சத்ரூபப் பிரமத்தில் இல்லாததாயாப் பிரபஞ்சம் கற்பிப்பது.

அபவாதம்:—இது பாம்பல்ல, பழுதையே. இது வெள்ளியல்ல கிளிஞ்சல். இது கள்ளனல்ல கட்டையே யென்று அறிவிப்பது போலும். ஒரு ஆலமரத்தின் வித்தினின்றுண்டாகும் மரத்தைக்காட்டி யிம்மரத்திற்குரிய இலை, பூ, காய், பழம் கிளை முதலிய பேதங்களோடு காணப்பட்டாலும், வித்தினின்றே இம்மர முண்டான தென்று அறிவிருப்பது போலும், எதிரில் காணப்படுகிற பிரபஞ்சம் பிரபஞ்சமல்ல, பிரமமே இதற்கு ஆதாரமென்றறிவிப்பது.

அத்துவாவிருத்தி லட்சணை:—தேகாதி ஆத்ம சம்பந்த மில்லாதவைகளை நீக்கி, ஆத்மாவையறிவிப்பது.

தடஸ்தலட்சணை:—பூதாதி ஜெகத்காரணங்களைக்கொண்டு, ஆத்மாவையறிவிப்பது.

சொரூப இலட்சணை:—ஆத்மாவிற் குரிய சொரூபம் அறிவிப்பது.

† மஹாவாக்கியம் : —பிரஞ்ஞானம்பிரமம், அகம்பிரமாஸ்மி, தத்தொமஸி, அயமாத்மா பிரமம், என்னும் நான்கு வாக்கியங்களில், தத்தொமஸி வாக்கியத்தில் தத், தொம், அஸி யென்று மூன்று பதங்களுண்டு. தத் அந் தப்பிரமம், தொம்—நீ, அஸி-ஆகிறாய் என்பது அதன் அருத்தம்.

தத்பத பிரமமாவது:—மாயை, அதிஷ்டான சைதன்யம், அதிற் பிரதிபிம்பித்த ஈஸ்வரன்.

தொம்பதமாவது:—அவித்தை, அதிஷ்டான சைதன்யம், சரீரம், அதில் பிரதிபித்த சிதாபாசனாகிய சீவன்

அஸிபதமாவது :—கூடஸ்தனாகிய ஜீவனே பிரமம், பிரமமே கூடஸ்தனாகிய ஜீவன் என்று ஐக்யப்படுவதே.

கூடஸ்தபிரம்ம ஐக்கியமாவது :—தத்பத வாச்சியார்த்தமான மாயைக்கும், மாயைப் பிரதிவிம்பனான ஈஸ்வரனுடைய சர்வக்ஞத்வாதி குணங்களுக்

இவ்விதம் சற்குருவையடைந்து அவரால் உபதேசிக்கப்படும் மஹாவாக்யார்த்தத்தில் பிரியம்வைத்து, ஏகாந்த ஸ்தலத்திலேயே, ஹிருதயத்தில் வைராக்யம் பூண்டு, இந்திரியாதிகளைச் ஜெயித்து, மனதைப் புறம்பே போகவிடாமற்றடுத்து ஏகாக்ரசித்தனாயிருந்து நான் சாக்ஷி சொரூபனாகையினாலே யான் தேகாதிகளல்லன், பிரமமே யென்ற புத்தியும், பிரமாண்ட பிண்டங்களையும் ஸ்தூல பஞ்சபூதங்களிலொடுக்கி, அந்தப் பூதங்களை அபஞ்சீகிருத பூதங்களில் ஒடுக்கி, சத்தமாதி தன் மாத்திரைகளை மாயையிலொடுக்கி, அம் மாயையைப் பிரத்யேக ஆத்மாவிலொடுக்கி, அவ்வாத்மாவாகிய நானே பிரமம் என்னைவிட வேறேயில்லை யென்றறிவதும்," "பிரணவத்தை மூன்று வர்ணங்களாகப் பாவித்து, அம்மூன்றுவர்ணங்களையும் மூன்று அக்னியாகவும், மூன்று லோகமாகவும், மூன்று அவஸ்தையாகவும், மூன்று காலங்களாகவும் பாவித்து, அகாரத்தை உகாரத்திலொடுக்கி. உகாரத்தை மகாரத்திலொடுக்கி, மகாரத்தை நாதத்திலொடுக்கி, நாதத்தை மாயையிலொடுக்கி, மாயையைச் ஜீவனிலொடுக்கி, ஜீவனே பிரமம், பிரமமேநான் என்று பாவிப்பதும், பரம சமாதியாம்." இந்தசமாதியினால், ஞானசொரூபியாகிய நித்தியானந்தத்தை யடையலாம். இதுவே வேதத்தின் முடிவு,

ஆகமவாக்யப்படி:—இப்பிரபஞ்சம் * பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளையுடையது.

---

கும்; தொம்பத வாக்கியார்த்தமான அவித்தைக்கும், அவித்தையால் பிரதிவிம்பனான சிதாபாசனுடைய கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுக்கும், ஐக்யம் அங்கீகரித்தால் விரோதம் வரும் என்றெண்ணி, விரோதமான மாயா சர்வக்ஞத்வாதி குணங்களையும் அவித்தையா கிஞ்சிக்ஞத்வாதி குணங்களையும் தள்ளி, பிம்பத்தோற்ற ஒடுக்கம், பிம்பப் பிரதி விம்பத்தோற்ற ஒடுக்கம், அஞ்ஞானம், அஞ்ஞான காரியத்தோற்ற ஒடுக்கம் இவைகளை எடுத்துக்கூறி, லட்சியபூதமான சைதன்னியத்தைப்பற்றியே சச்சிதானந்த பிரமமே நீ, நீயேயந்த சச்சிதானந்த பிரமமென்று உபதேசிப்பது.

* பதியாவது:—"சிவமே, பசு, பாசம் இரண்டிற்கும் மேலாகிய ஒன்றாய் நிட்களா, சகளமற்றதாய், முக்குணங்களுமற்றதாய், ஓரடையாளமுமில்லாததாய், நின்மலமாய், ஏகமாய், எல்லா உயிர்களுக்கும் அறிவாய், சலனமற்றதாய், அகண்டிதமாய், (ஆனந்தஉருவு) அறிவுருவாலன்றிகிட்டுதற்கரிய பொருளாய், ஆனந்த உருவானற் சென்றடையப்படும் பேறாய், அணுவுக்கணுவாய், மகத்துக்கு மகத்தாய், விளங்குவது. அதுவே சிவம்" எனப்படும்.

பசு வென்பது.—"ஆணவமலம் ஒன்றேயுடைய விஞ்ஞான கலர் என்றும், ஆணவமலமும், கன்ம மலமுமுடைய பிரளயாகலர் என்றும், ஆணவ

மலம், மாயாமலம் கன்மமலம், என்னும் மூன்று மலமுடைய சகலர் என்றும் (பசுவர்க்கம்) ஆன்மவர்க்கம் மூன்று வகைப்பட்டிருக்கும்."

பாசமென்பது :—"ஆணவம், மாயை, கன்ம மெனும் மூன்று மலங்களை யுடையது. நெல்லின்கண்உமியும், செம்பின்கண் களிம்பும், இடையே வந்தனவல்ல அநாதியேயுள்ளன. அதுபோல மேற்கூறிய மும்மலங்களும் ஜீவனிடத்து அநாதியே யுள்ளனவாம். முன்னேயுண்டாயிருக்கிற தாமரைப் பூ அலர்தலும் கூம்புதலும் சூரியனாற் செய்யப்படுமாறு போல, அநாதியா யுள்ள மூன்று மலங்களும் தத்தங்காரியங்களைச் செய்தல் அம்முதல்வனாலேயாம்."

ஆணவமலத்தின் காரியம் :—"மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என ஏழுவகைப்படும். இவை முறையே மயக்கம், மதித்தல், ஆசைமிகுதி, கவலைப்படல், தபித்தல், வாடுதல், மற்றும் பலவிதத்தாறும் ஏதுவாதலுமாம்."

மாயையின் காரியம் :—"மாயை சுத்தமாயை, அசுத்தமாயை யென்றிரு வகைப்படும். சுத்தமாயையினின்று பஞ்சகலைகளும், நால்வகை வாக்கும் சிவதத்துவம் ஐந்தும், சுத்தகாலம் முதற் சுத்தநில மீறாகிய முப்பத்தொன்றும் தோன்றும். அசுத்த மாயையினின்று அசுத்தகாலம் முதல் அசுத்த நிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும். இந்த தத்துவங்களெல்லாம் பொது, சிறப்பு, பொதுச்சிறப்பு என்று தனித்தனி மூவகைப் பட்டு உயிர்கடோறும் வெவ்வேறுளவாம், புவனவடிவாகிய தத்துவங்கள் யாவருக்கும் பயந்தருதலின் பொது. சூக்கும தேகவடிவாகிய தத்துவங்கள் ஒருவன் போகம்நுகர்வதற் கேதுவாதலின் சிறப்பு. தூலதேக வடிவமாகிய தத்துவங்கள் ஒருவனுடைய போகநுகர்ச்சிக்கும், சந்தனம் பூமாலை போல மனைவி முதலிய பிறருக்கும் அநுபவிக்கப் படுதலினால் பொதுச் சிறப்பு." "மாயையே ஜடலமாகும். மாயையே அந்தக் கரணமாகும். சாயைபோலொத்த வாழ்வை மெய்யெனச் சந்தோஷிக்கச் செய்யும். தூய மெஞ்ஞான வாழ்வைப் பொய்யெனத் தூஷிக்கச்செய்யும் ஒருவனுடைய அறிவினைமூடி, தேகமே யான்மா மடவார்தம் போகமே மோட்சமென்னு மயக்கத்தை யுண்டாக்கும் யார் இதைக் கடக்கவல்லவர். ஆயினும் சோகம் பாவனையால் இதனைத் தொலைப்பவர் ஜீவன் முத்தர்."

கன்மத்தின்காரியம் :—"இவ்வினை யீட்டப்படுங்கால், மந்திரம் முதலிய அத்துவாக்களினிடமாக, மனம், வாக்கு, காயமென்னும் மூன்றினு லீட்டப் பட்டு, தூல கன்மமாய், ஆகாமியம் எனப்பேர்பெறறு, பின்னர் பக்குவப்படும் வரை, சூக்கும கன்மமாய், புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து, சாதி, ஆயு, போகமெனும் மூன்றினுக்கும் ஏதுவாய், முறையே சனகம், தாரகம், போக்கியம், என்ற மூவகைத்தாய், அபூருவம், சஞ்சிதம், புண்ணியபாவம், என்னும் பரியாயப் பெயர்பெற்று, பின்னர் பயன்படுங்கால், ஆதிதைவிகம், ஆதியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற்

பலன் இறப்பட்டு, பிராசத்வமெனப் பெயர்பெறும். ஆதிபௌதிகமாவது சடம்வாயிலாக வருவது. ஆதியான்மிகமாவது சடத்தோடு கூடிய சேதன வாயிலாக வருவது. ஆதிதைவிகமாவது ஒருவாயிலு மில்லாமல் தெய்வந் தானே காரணமாக வருவது."

இன்னும் இக்கன்மவினைகள் "உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய் முறையே நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளிலும் அடங்கி, அசுத்தம், மிச்சிரம், சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்கும்."

உலகவினை:- "கூவம் தண்ணீர்ப் பந்தலாதி அமைத்தல்; வைதிகவினை:- வேள்வியாதி செய்தல்; அத்தியான் மிகவினை:-சிவபூசையாதி செய்தல்; அதிமார்க்கவினை:—யோகஞ்செய்தல்; மாந்திரவினை:—மந்திரோச்சாடனம், ஞானநூலோதலாதி செய்தல்"

"விஞ்ஞானகலரிற் பக்குவமடைந்தோர்க்கு, அவர் பிராணனுகவே நின்று அவர்களைப் பிரகாசிக்கச் செய்தும், பிரளயாகலரிற் பக்குவமடைந்தோர்க்கு, திருமேனி உடனே தோன்றி அந்தத் தரிசனத்தால் இரட்சித்தும், சகலரிற் பக்குவமடைந்தோர்க்கு, அவர்களைப்போன்ற மானுடனுகவே திருமேனி கொண்டெழுந்தருளி வந்து, ஞானமார்க்கத்தை யுபதேசித்து அவர்களுடைய மலத்தைப்போக்கித் தன் வண்ணமாக்கி வாழ்விப்பன்."

சகலரிற் பக்குவமடைந்தோராவர்:—"சிவன் தான் முன்செய்த புண்ணிய விசேடத்தால், தனக்கு அந்தரியாமியாய் இதுவரையிலுந் தன்னுள் நின்று உணர்த்திவந்த பரம்பொருளே இப்பொழுது குருவடிவம் எடுத்து வந்து சாதார தீட்சைசெய்து, ஜீவனைநோக்கி நீ ஐம்பொறிகளாகிய வேடர்கள் வலையிலகப்பட்டு, உன்னுடைய மகிமையை யறியாது மயங்கி, ஸம்சாரக் கடலிலாழ்ந்து வருந்தினுய், உன்பெருமை யின்னதென்று அப்போது அறிவிக்க, அந்த க்ஷணமே அவ்வேடர்களை விட்டுநீங்கி முதல்வனது திருவடிகளை யடைபவர்."

"முற்பிறப்பில் செய்த சரியை, கிரியை, யோகம் ஆகிய இவைகள் அப்பிறப்பில் அத்தவங்களுக்குரிய பதவியையடைந்து, அது நீங்கியவிடத்து, மோட்ச வீடுபெறுவதற்கு சன்மார்க்கமாகிய ஞானத்தையடையும் மறு பிறவியைக்கொடுக்கும்.'

"அந்தப்பிறவியில் மலபரிபாகம், சத்திநிபாதம் பிறந்து தத்துவ ஞானத்தில் ஆசையுடைய உயிர்கட்கு, சிவமே அப்பருவமறிந்து, குருமூர்த்தியாய் எழுந்தருளிவந்து படர்க்கையில் தத்துவஞானத்தை யுபதேசிப்பான். இதற்குச் சாதாரமெனப்படும்."

"விஞ்ஞானகலர், பிரளயாகலர் இவர்களுக்குமுறையே தன்மை, முன்னிலையிற் செய்வது நிராதாரம் என்று கூறப்படும்."

"சிவன் ஜீவராசிகளை அறிபவன், ஜீவராசிகள் சிவனையறியா. சிவனில்லாதவிடமில்லை. ஜடசித்தெங்கும் சிவனில்லாத வரையில் ஜெகமில்லை. அவன் அசைந்திடில் அணுவும் அசையும். அவனசை யாவிடில் அணுவும் அசைந்திடாது."

'சிவன் சத்தி யொடு கூடில், ஜெகம் விரியும்; சிவன் தனித் திருக்கில் விரிந்த ஜெகம் ஒடுங்கும். இப்பிரபஞ்சமும் அதனுள் ளடங்கிய சரம் அசர முதலிய யாவும் சிவத்திடையுதித்து ஒடுங்கும்."

"ஒருவன் அணைபோட்டு தேக்கிய ஆற்று நீர், அவ்வணையாற் கட்டுண்டு நின்றதன்மைபோல, கருவிகளாலடுத்த பாசஞானம், தனது வியாபகத்தைத் தடை செய்யக் கட்டுப்பட்டு நின்ற உயிர் அவ்வணை முறிந்து கடலில் விழுந்து கடலீராகி மீட்டும் வாராத ஆற்றுநீர் போல தனது கருவிகளாலுண்டான பாசம், குருவால் விடுபட சிவபிரானது திருவடியிற் கூடிக் கலந்து, அதனிடை யடங்கி மீட்டும் திரும்பிவராது."

இருவினையொப்பு மலபரிபாக முடையவர்க்குப் பக்குவம் மந் தம், மந்தரம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும்.

"மேற்கூறிய பக்குவமடைந்த சகலருக்குப் பரமசிவன் திரு மேனி கொண்டெழுந்தருளிவந்து, சிவத்தியானம் பண்ணி விழித் துப் பார்க்கின்ற சட்சுதீட்சையாலும், தனது அஸ்தம் வைக்கிற பரிசதீட்சையாலும், மூலப்பிரமங்களைத் தான் உச்சரிக்கின்ற வாசகதீட்சையாலும், குண்டலமண்டலாதி முதலியன மனோ பாவத்தாற் கற்பித்துக் கொண்டு செய்கின்ற மானத தீட்சையா லும், விசேஷ சமயானந்தரம், காமிகம் முதலிய சித்தாந்த சாத்தி ரங்களை யுபதேசிக்கிற சாத்திர தீட்சையாலும், தாரணை முத லிய யோகங்களை யுபதேசிக்கிற யோகதீட்சையாலும், குண்டல மண்டலாதிகளால் வெளிப்படச் செய்கின்ற மூவகையான அவுத்திரி தீட்சையாலும் மும்மலங்களும் நாசமடையக் கிருபை செய்குவன்."

இவ்விதம் உபதேசம் பெற்ற சீடன், சிவனே ஜீவனுண் தன்மை யையறிந்து, பசுகரணங்களெல்லாம் கெட்டு, சிவ காரணங்களாக இந்திரியங்களெல்லாம் நானல்ல, அவைகள் தொழிற் படுவதும் என் னாலல்ல, நானே அரனுடைமை யென்று தெளிந்து, சிவனிடத்தில் பக்திவைத்து எல்லாம் அவன் செயலெனக் கண்டு, யான், எனதென் னும் இருச்சை யொழித்து, அச்சிவத்தின் அருளாலே, கடவுளை

வழிபடுசந்தானமாகிய, ஆத்ம சந்நிதானம், சிவனடியார், திருக்கோயி லுள்ளிருக்கும் சிவலிங்கம் இம் மூன்றனுள், ஆன்மக்களின் பக்கு வத்திற் கேற்றபடி, சிவலிங்கம் முதல் ஆத்மாவரையில் ஒன்றற் கொன்று விசேஷ மென்பதை யறிந்து தன் இதயபங்கயத்தில் பஞ் சாக்கரத்தாலமைந்த அவர் திருவுருவத்தில் க்ஷணத்தால் பாத்தியங் கொடுத்து, ஞான தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து, புத்தியைக் கெந்தமாகச் சாத்தி, பாவமாகிய மலரால் அர்ச்சித்து, சித்த பாத்தி ரத்தில் அகங்காரத்தை தூபமாகவும், அபிமானத்தைத் தீபமாகவுங் கொடுத்து, விந்துத்தான அமுதத்தை நிவேதனித்து, நாதத்தை மந்திர புட்பமாகச் சாத்தி, பத்தி வயிராக்கியத்தால் தோத்திரித்து, (அந்தரியாக) பூசைசெய்து; எழும்பாநின்ற பிராண வாயு இயங்கு கின்ற இடைகலை, பிங்கலை யெனும் இருகலைகளையும் மாற்றி, நடுநாடி யில் ஒடுப்படி செய்து, லலாட ஸ்தான மாகிய புருவ மத்தியில், தன் னுடைய மும்மலங்களையும் போக்கி தன்னையின்னதென்றறிவித்த அற்புத குருமூர்த்தியாகிய பரம்பொருளை, முச்சுடரு மொவ்வாத சுயம் பிரகாசமான சோதி சொரூபமாகப் பாவித்து, முத்திபஞ்சாக் கரத்தை விதிப்படி ஜெபித்து, அந்த அக்கரத்துள், சி. ய. வ. இம் மூன்று அக்கரங்களும், தப்பத தொம்பத அசிபதமென உணர்ந்து, பதியக்கரமாகிய சிகாரத்தில் சீவாக்கரமாகிய யகாரம் லயமாகும், சத்தியக்கரமாகிய வகாரம் சிகாரத்தில் ஒடுங்குமெனக்கண்டு, சிவோ கம் பாவனை செய்வானாகில், அப்பாவனையினால் அப்பரம் பொருள் ஜோதிசொரூபமாகச்சீடன் அகத்துள் தோன்றி, அப்பணைந்த உப்பை ப்போல அச்சீடனைத் தன் திருவடியிற் கலக்கச்செய்வன். ஆகைபால், பஞ்சாக்கர ஜெபமும், அந்தரியாக பூஜையும் சிவோகம் பாவனையும் சிறந்த சாதனமாகும். அப்பணைந்த உப்பைப்போலவென்பது, உப் பானது ஜலத்துடன் கலந்தால், அந்த ஜலமானது உப்பினுடைய குணம்முழுமையும்தான் கிரகித்துக்கொண்டு அதன் சொரூபத்தைக் கெடுத்து, அளவினுஞ் சாஸ்திகாட்டாமல் ஜலமட்டும் பிரகாசிப்பது போல், ஈசன் தன்னிடமடைந்த சீவனை சீவனின் மலங்களைப்போக்கி தான் வேறு சீவன் வேறு என்பதில்லாமல் ஏகமாய் முக்தியிற்சேர்ப் பது. இதுவே ஆகமத்தின் முடிவு.

ஓ சிறந்த விஞ்ஞானத்தையுடைய இலக்ஷ்மண! அறிவே பிர மம் என்ற வேதவாக்கும், அறிவிக்க அறியும் அறிவே சிவம் என்ற ஆகமவாக்கும் பேதமல்ல. "நான் அது" வெனச்சொல்லும்

வேதமும், "நீயது" வெனச்சொல்லும் ஆகமமும் பேதமல்ல. ஒன்றென்றே நீ யறிவாயாக என்று உபதேசித்தார்.

ஓ ஸௌமித்திரியே! இது இரகசியம். எவன் இதை அநுஷ்டிக்கிறானோ அவன் வெகு பாபங்களினின்று விடுபடுகிறான். ஓ! பிராதாவே! இதோ காணப்படுகிற பிரபஞ்சம் யாவும் மாயையே. ஆகையால் யாவற்றையும் மனதால் தியாகம் செய்து பரிசுத்தமான மனதுடன் என்னுடைய (பரப்பிரமத்தின்) தியானத்தால் ஆனந்த சொரூபனாய் வாழ்வாயாக.

வேதங்களாலும், ஆகமங்களாலும் கூறப்பட்ட மெய்ஞ்ஞான வழியை யெடுத்து என்னால் உபதேசித்த இந்த ஞான சாஸ்திரத்தை எவன் ஒருவன் அதிசிரத்தையுடன் சிரவணித்து அநுஷ்டிக்கிறானோ அவன் என் (பிரம) சொரூபத்தை யடைகிறான்.

## 6-வது சருக்கம்.

ஸ்ரீராமன் தனது பிராதாவாகிய இலக்ஷ்மணருக்கு வேதாகமங்களிற் கூறிய ஞானமார்க்கத்தை யுபதேசித்தபிறகு ஒரு நாள் ஆசாரியருடனும் தனது தம்பிமார்களுடனும் மந்திரி பிரதானிகளுடனும் சபையில் வீற்றிருக்கும் சமயத்தில், யமுனா நதிக்கரையில் தபோதனர்களாக வசிக்கும் பிராமணர்கள் யாவரும், பிருகு வமிசத்தி லுதித்தவரும், முனிவர்க்குட் சிறந்தவருமாகிய ச்யவன முனிவரை யழைத்துக்கொண்டு இரகுநந்தனனிடம் வந்து லவணாசுரனால் தாங்கள் படுங்கஷ்டத்தைத்தெரிவித்து, அக்கஷ்டத்தில்நின்று நீங்குவதற்கு உபாயத்தைத் தேடவிரும்பி அயோத்திமா நகரத்திலுள்ள ஸ்ரீராமபிரான் அரண்மனைவாசலுக்கு வந்து தாங்கள் வந்திருக்கும் செய்தியைத் தெரிவிக்கும்படி வாயல் காப்போருக் கறிவித்தார்கள். உடனே காவலாளிகள் கருணாநிதியாகிய ஸ்ரீராமனிடம் சென்று யமுனா நதிக்கரையிலுள்ள பிராமண முனிவர்கள் யாவரும் வந்திருக்கும் செய்தியை யறிவிக்க, இரகு வீரர் அவர்கள் யாவரையும் அழைத்துவரும்படிக் கட்டளையிட, அவ்வாறே சபைக்கழைத்துக்கொண்டுபோய் விடுத்தனர்.

தன்னிடம் வந்த முனிவர்களை அன்புடன் உபசரித்துப் பூசித்து, திவ்வியாசனத்தி லிருக்கச்செய்து, "ஓ முனிவர்காள்! நீங்

கள் எங்கள் குலதெய்வத்தைப் போன்றவர்கள், என்னை நாடிவந்த காரணம் யாது? அது எப்படிப்பட்டதாயினும் நான் முடித்து வைக்கிறேன். தங்களுடைய தவத்துக்கு யாதொரு விக்கினமுமில்லையே" யென்று கேட்டார்.

இதைக்கேட்ட ச்யவன முனிவரும் பிராமண முனிவர்களும் அடங்காமகிழ்ச்சிகொண்டு, "ஏ மன்னவர் மன்ன! முன் சென்ற கிருத யுகத்தில் மதுவெனும் அசுரன் ஒருவனிருந்தான். அவன் தேவர்களிடத்தும், பிராமணர்களிடத்தும் மிக்க விசுவாசமுள்ளவன். பரம சிவனிடத்தில் மிக்க பக்தியுடையவன். அவன் பக்திக்கு மகிழ்ந்து, முக்தியைக் கொடுக்கும் சிவன், வலிமையுடைய சூலாயுதம் ஒன்றை அவனுக்குச் கொடுத்தார். அச்சூலம் தன்கையிலிருப்பதைக்கொண்டு நீண்ட ஆயுளைப் பெற்று தர்ம சிந்தையுடன் எதிரியின்றி உலகத்தை யாண்டு வரும் நாளில், இலங்காபுரி மன்னனாகிய இராவணனது சகோதரியாகிய கும்பிநஸியை மணம்புரிந்து அவள் வயிற்றில், லவணன் என்ற குமாரனைப் பெற்றான். அவன் தந்தையிடமிருந்த சூலாயுதத்தைப்பெற்று, தந்தைக்குப் பிறகு தீய வழியிற்சென்று, தேவர்களையும் மற்றுமுள்ள முனிவர்களையும் ஹிம்சைப் படுத்தி, எங்களையும் துன்பக்கடலில் மூழ்கச்செய்து, எங்கள் தவத்துக்கும் இடையூறு புரிந்து வருகிறான். பரமசிவத்தால் கொடுத்த அச்சூலாயுதம் அவன் கையிலிருக்க அவனைச் ஜெயிக்கிறவர்கள் உலகத்திலில்லை. அவனால் நாங்கள் படுந்துயரம் செப்புதற்கரியது. தவமிழந்து தானமிழந்து அரிய துயரிலாழ்ந்தோம். ஓ அண்ணலே! நீயே கதியென அடைக்கலம் புகுந்தோம்' என்றார்கள்.

பிரம்மஞானோத்தமர்களான முனிவர்கள் அதிதாபத்துடன் கூறிய வார்த்தையைக் கேட்ட கருணை நிதியாகிய இரகுவீரன் "ஓ முனி ஸ்ரேஷ்டர்களே! துயரத்தை யொழியுங்கள். அந்த வீரனாகிய லவணாசுரனை வதம் செய்விக்கிறேன். நீங்கள் சென்று அஞ்சாமல் உங்களிருப்பிடத்தில் வசியுங்கள்" என்று அவர்களுக்கு அபயஸ்தம்கொடுத்து அனுப்பினார்.

பிறகு இரகுநந்தனன், அந்தக் கொடிய செய்கையுடைய அசுரனை வதம் செய்விக்க மனத்தெண்ணி, தனது பிராதாக்களை நோக்கி "ஓ ஸஹோதரர்களே! பூலோகத்துள்ள மானுடர்களையும், தேவ லோகத்துள்ள வானவர்களையுந் துன்பத்திலாழ்வித்து யமுனாநதிக்கரைவாசி

காரிய பிராமணர்களையும் அவர்கள் செய்யுந் தவத்துக்கிடையூறு புரிந்து வருந்தும்படி செய்யும் அக்கொடியோன் உயிரைவாங்கி, அப்பிராமணர்கள் சிரமம் நீங்கி மகிழ்ச்சி யடையச்செய்து யாவருங் கொண்டாடக் கூடிய புகழ்ச்சியைத்தாங்கி நிற்பவர்கள் உங்களில் யாவர்?" என்று கேட்டார். ||

இதைக் கேட்ட இலக்ஷ்மணன், திரிலோகங்களிலுமுள்ள வானவராதியாவரும் ஒருங்கேசேர்ந்து லவணனுக்காக என்னுடன் போர்புரிய வந்தாரேனும், எனக்குத்தங்கள் உத்தரவு கிடைக்குமாயின் அந்தலவணாசுரனை க்ஷணப்பொழுதில் எமலோகத்துக்கனுப்புவேன் என்று கூறினான்.

இவ்வார்த்தை செவியிற்படவே, பரதன் "ஓ அண்ணலே! அடியேன் செய்யும் விண்ணப்பம் ஒன்றுளது. அதாவது, இலக்ஷ்மணன் தங்களுடன் கானகத்தை யடுத்துவந்து பதினன்கு வருடம் ஆகாரம் நித்திரையின்றி பிராப்பகலாய்த் தங்களைக்காக்குந்தொழில் மேற்கொண்டு நின்றபோதிலும், இராவண ஸம்ஹாரத்தையொட்டி நடந்தயுத்தத்தில், பிரமதேவராலும் புகழப்பட்ட இந்திரஜித்து முதலிய மாயா தந்திர வீரர்களை ஜெயித்து அதனால் மெய்வருந்திய வருத்தத்தைத் தாங்கள் சிந்திக்கவேண்டும். ஆனதுபற்றி இலக்ஷ்மணனை நிறுத்தி யென்னை யேவும்பக்ஷத்தில் வலியால் மிகுத்த அந்தலவணனை நானே கொன்று அப்பிராமணர்களுடைய துயரைப் போக்குகிறேன்" என்றான்.

அவ்வுரையைக்கேட்ட சத்துருக்னன் ஸ்ரீராமன் திருவடியில் நமஸ்கரித்து எழுந்து கைகட்டிநின்று "ஓ பிரபுவே! பாதர்கூறிய மொழியைச் சிந்திக்கில் விந்தையினும் விந்தையாகும். இலக்ஷ்மணர் ஈரேழு வருடம் தங்களுடன் ஆரண்யத்துக்கு வந்து ஜடைமுடி தரித்து மரவுரிபூண்டு ஊண் உறக்கமின்றி வருந்தினவராயினும், அரக்கர்களுடன் போர்புரிந்து சரீரம் இளைத்தனர்! என்பது மெய்யே. இவரோ, தாங்கள் அரசாட்சி புரியும்படி வனிகைபோதிலும், பாதுகையைப் பெற்று வந்து அயோத்தியிலிருந்தால் பிரஜைகள் தன்னை நிந்திப்பார்களெனக் கருதி, நந்திக்கிராமம் சென்று, தங்களைப்போலவே ஜடைவளர்த்து, நார்ச்சீலை யுடுத்து, தங்கள் கானகம் சென்றிருந்த பதினன்கு வருஷமும் தென்திசை நோக்கித் தமையன் எப்போது வருவார் என்ற கவலையுடன் ஓயாத கண்ணீர்விட்டு இவர் காலங்கழித்து நின்ற

நிலைமையை எடுத்துரைப்பவர் யாவர்? இத்தகைய துக்கசாகரத்தில் மூழ்கி நின்றவரை யிப்போது யுத்தத்துக் கனுப்புவது தருமமும் ஆகுமா? அடியேனே இங்கு நடந்த காரியமனைத்தையும் கண்ணுரக்கண்டும் செய்யும் வழி புந்தியில் தோராது காலங்கழித்த என்னை லவும்பக்ஷத்தில், தங்களுடைய அநுக்கிரகத்தினால், அந்தலவணனைத் தென்புலத்துக்கனுப்பி, அப்பிராமண முனிவர்கள் இடரைத்தீர்த்து அவர்களுடைய தவத்துக்கு யாதொரு விக்னமு மில்லாமற் காப்பேன் என்று செப்பினன். எப்புவியிலுள்ளவருந் துதிக்கும் இரகுகுலாதிபனான ஸ்ரீராமன், தனது தம்பியரில் இளையோனான சத்துருக்னன் கூறிய அதிசாதுர்யமான வார்த்தையைக் கேட்டு அங்கம் பூரித்து அவனையெடுத்து மடிமீதிருத்தி "ஓ இளைஞ! முனைக்களத்தில் உனக்கெதிர் நிற்கும் திறலுடைய வீரர் இந்த மூவுலகத்தினும் உண்டோ? ஆகையால் நீயே சென்று, சினத்துடன் சீறி யாவரையும் ஹிம்ஸிக்கும் அந்த லவணனை வென்று பரிசுத்தம் பொருந்திய அம்முனிவரர் மனத்துயரைப் போக்கித் தருமத்தை நிலை நிறுத்தென்று கூறி, இலக்ஷ்மணனை யழைத்து இராஜ்ய பட்டாபிஷேகத்துக்குரிய பொருள்களைக் கொண்டுவரும்படி திட்டம்செய்து, சத்துருக்னனுக்கு மதுநகரப் பட்டாபிஷேகஞ் சூட்டி, ஓர் திவ்விய பாணத்தையுங் கொடுத்து, இந்த பாணத்தால் அந்த இலவணாசுரனை வதம் செய்யெனப் போதித்து, ஐயாயிரங் குதிரைகள், இரண்டாயிரத்தைநூறு இரதங்கள், அறுநூறு யானைகள், முப்பதினாயிரம் போர்வீரர்கள் அவனுடன் போகும்படிக் கட்டளையிட்டு, விலையுயர்ந்த ஆடையாபரணங்களையும் கொடுத்து, சத்துருக்னனை நோக்கி "ஓ குழந்தாய்! நீ சென்று அந்த அசுரனைஜெயித்து அந்த நகரத்தில் நான்கு வருணத்தாரையும் குடியேறச் செய்து என் கட்டளைப்படி அந்நகர பரிபாலனத்தையும் செய்யென்று ஆஞ்ஞாபித்து, ஆசீர்வதித்து அனுப்பினர்.

மஹாதீரனாகிய சத்துருக்னன், தனது சிரேஷ்ட பிராதாவாகிய ஸ்ரீராமனையும், இலக்ஷ்மணன், பரதன் இவர்களையும் நமஸ்கரித்து, குலகுருவாகிய வசிஷ்டரையும் பணிந்து விடை பெற்றுக்கொண்டு, தேரின்மேலேறி இரத கஜ துரக பதாதிகள் பின் தொடரப் புறப்பட்டு அயோத்தி நாடு கடந்து, கங்காநதிக்கரை யடைந்து அந்நதியில் ஸ்நானம் செய்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, முனி சிரேஷ்டராகிய வான்மீகி முனிவரர் ஆச்சிரமம் சென்றான்,

அம்முனிவர் சத்துருக்னன் வரவைக்கண்டு அகமகிழ்ந்து உபசரிக்கப்பெற்று, அவரது திருவடியில் நமஸ்கரித் தெழுந்து அந்த ஆச்சிரமத்தில் அன்று தங்கினன்.

அப்போது ஜனக மஹாராஜன் குமாரி ஸீதாதேவி அன்றிரவு நல்ல சுபமுகூர்த்தத்தில் இரண்டு குமாரரைப் பெற்றாள். அதைக் கேட்ட வான்மீகி முனிவர் ஸீதை பெற்ற இருகுமாரரையும் பார்த்து கார்போன்ற திருமேனியுடைய ஸ்ரீ இராமனுடைய ரூபலாவண்யத்தை யொத்திருப்பதை யுத்தேசித்து, பூத பிசாசுகள் அணுகா வண்ணம், குற்றமற்ற மந்திரங்கள் ஜெபித்து குசலவங்களால் அப்பிள்ளைகளைத் தடவி ஆசிர்வதித்து அப்புதல்வர்களை, குசலத்தைக் கொண்டு தடவின காரணத்தால், குசலவர்கள் என்ற திருநாமமுஞ் சாற்றினர்.

ஸீதைக்குக் குழந்தைகள் பிறந்த சங்கதி அம்முனிவர் சாற்றக் கேட்ட சத்துருக்னன், உளம் மகிழ்ந்தவனாயினும், வளம் பொருந்திய அயோத்தி மாநகரத்தில் பிறக்கப்பெற்றிலேனே, இக் கானகத்திற் ஜெனிக்கப் பெற்றேனே,என் நாட்டிற் பிறந்திருக்குமாயின், பிராமணோத்தமர்களுக்குப் பூதானம், கோதானம், விரைதானம் முதலிய தானங்கள் செய்து நானும் நம்நகர வாசிகளும் குதூகலித்திருப்போமே யென்று நினைத்து மனம்நைந்து தனக்குத்தானே ஒருவாறு தேறி யிருக்கும்போது பொழுது விடிந்தது.

சத்துருக்னன் அதிகாலையிலெழுந்து நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு முனிவரிடம் விடைபெற்று தனது சைனியங்களுடன் தேரேறி மேற்றிசை நோக்கி லவணபுரத்தை நாடிச்சென்று, வரையடர்ந்த கானகத்தின் வழியாக ஏழுநாட்சென்று, யமுனா நதிக் கரையை யடைந்து, அவ்வாற்றைக் கடந்து அக்கரையில் வசிக்கும், தபோதனர்களைக் கண்டு அவர்களால் செய்யப்பட்ட பூஜையை யேற்று, மனமகிழ்ச்சி யுடன் அங்கமர்ந்து, அவ்வந்தணர்களை வணங்கி "ஓ மறைவல்லோர்களே! உங்களை ஹிம்ஸிக்கும் லவணாசுரனுடைய வலிமையையும், அவன் கையிலிருக்கும் திரிபுர தகனனால் கொடுக்கப்பட்ட கூர்மைபொருந்திய சூலாயுதத்தின் கொடுந்தொழிலையும் கூறுங்கள்" என்று வினவினன். மாறுபட்ட மனத்தினராகிய அப்புங்கவர், "ஓ இராஜனே! முற்காலத்தில் மனுகுலத்துதித்து அரசாட்சி புரிந்த மாந்தாதா என்னும் மன்னவர் மன்னன் இக்கடல்

சூழ்ந்த அவனியெங்கும் ஒரு குடைக்கீழ் தனக்கு ஒருவரும் நிக ரில்லாமல் ஆண்டுவந்தான். அந்த மண்டலாதிபன் பூலோகத்தில் தனக்கெதிரி ஒருவருமில்லை யென்று கருதி தேவலோகத்தில் வசிக்கும் இந்திரனோடு போர்புரியச் சென்றனன். அதுகண்ட தேவராஜன், மாந்தாதாவின் கருத்தை யறிந்து ஓ மன்னவ ! மண் ணுலகத்தில் உன்னை ஜெயிக்குந்திறனுடைய லவணாசுரன் இருக்க, அவனோடு யுத்தம் செய்து உன்னுடைய வீரத்தன்மையைக் காட் டாமல், விண்ணுலகத்தை யடைந்து என்னோடு பொருது ஜெய மடைந்து இவ்வுலகைக்கைக்கொள்வது உனக்கழகல்லவேயென்றான். அவ்வுரை கேட்ட மாந்தாதா மனம் பதைத்துப் பூலோகத்துக்கு வந்து, தனது சேனையோடு மதுபுரம் சென்று இலவணனைக்கண்டு யுத்தத்துக்கு அழைக்க, அவ்வசுரனும் கோபமூண்டுவந்து மந்தாதா வுடன் போர்புரிய, இருவருந்தங்கள் வலிமையைக் காட்டி ஒருவரை ஒருவர் வெல்ல நினைத்து, கூர்மைபொருந்திய வாள், வேல்முதலிய அஸ்திரங்களைப் பிரயோகித்து அபாரமான யுத்தம் புரியுங்காலை, இலவணன் தன் கையிலிருந்த சிவனால் கொடுக்கப்பட்ட சூலாயு தத்தைப்பிரயோகிக்க அச்சூலம்,மாந்தாதாவின் சேனைகள் யாவற்றை யும் நாசப்படுத்தி, அவனையும் யமலோகத்துக்கனுப்பி, திரும்பவும் லவணன் கரத்தில் வந்தமர்ந்தது. அவ்வசுரனுடைய உரமும் அவன் கையிலுள்ள சூலத்தின் திறமும் இத்தகையது. அச்சூலாயுதம் அவன் கையிலிருக்கும் வரையில் அவனை ஜெயிப்பது அரிதாகும், அவ்வாயுதம் அவன் கையிலில்லாத காலத்து அவனை யெதிர்த்து அமர்தொடுத்தால் அவன் உம்முடைய கைப்பாணத்துக்கிரையாவது நிச்சயமெனக் கூறினார்கள்.

மறைமுனிவர் கூறிய வார்த்தையைக் கேட்ட சத்துருக்னன் நல்லது இருக்கட்டும் இப்போது, நாம் மதுபுரத்தை நோக்கிச் செல்வோம் என்று கூறி, சேனைகளுடன் அவ்விடம் சென்று லவ ணன் வசிக்கும் அரண்மனைவாயிலை யடுத்து, அவ்வாயில் காப்போ ரால் அந்த அசுரன் வனத்திற்கு மிருகவேட்டையாடச் சென் றிருக்கிறான் என்பதை யறிந்து, அவ்வரண்மனை மதில்புறத்தே சேனையோடு காத்திருந்தான்.

இலவணாசுரன் இச்செய்தி ஒற்றர்களாலறிந்து காட்டை விட்டு நாட்டையடைந்து, தன்னுயிர்க்குக் காலனாய் நின்ற சத்து ருக்னனைக் கண்டான்.

வில்லைக்கையிற் பிடித்து யுத்த சன்னத்தனாய் நகர்வாயிலில் அஞ்சாது தைரியத்துடன் நிற்கும் இளைஞனைப்பார்த்து வஞ்சகனாகிய அரக்கன், "நீ யார்? என்னுடைய நகரத்தை யடுத்து வந்தது என்ன காரணம்?" என்று கேட்டான்.

சத்துருக்னன், அவ்வசுரனைப்பார்த்து, "ஓ துராத்மாவே! நீ செய்யுந் துர்க்கிர்த்தியத்தை முன்னிட்டு உன்னை வதை செய்ய நினைத்து, உன்னுடன் போர்புரிய வேண்டிவந்தேன், நான் தசரதச் சக்ரவர்த்தியின் கனிஷ்ட குமாரன், ஸ்ரீராம மூர்த்தியின் சகோதரன் சத்துருக்னன் எனும் பெயர்பூண்டவன். இப்போதே என்னுடன் எதிர்க்காது நீ யிவ்விடம்விட்டு பிரிவது நடவாத காரியம்" என்று செப்பினான்.

இவ்வார்த்தையைக் கேட்ட அசுரன் கோபத்தால் முகங்கடுத்து, "ஓ சத்துருக்ன! என்னுடைய தாய் மாமனாகிய இராவணனைக் கொன்ற உன் தமயன் இராமனை நான் அறிய மாட்டேன். ஆயினும் என் குலப்பகை பூண்ட பழயபகைவனது தம்பியென்ற நீ யென்னிடம் வந்தகப்பட்டாய். உன்னையா நான் கொன்று பழிக்குப்பழி வாங்காது விடப்போகிறேன்" என்றான்.

அவ்வசுரன் வீரத்தோடு கூறிய வார்த்தை செவிக் கேறு முன்னம், சத்துருக்னன் வடவாக்னி யென்னக் கொதித்து, மண்ணதிர, விண்ணதிர எதிர் நின்ற அசுரனது நெஞ்சதிரத் தன்கையிலிருந்த வில்லை வளைத்து நாணேற்றினான்.

இளையவன் நாணேற்றிப் பாணப் பிரயோகஞ் செய்வதன் முன்னம், லவணாசுரன், மலைபை பொத்த ஓர் பெரிய மாமரத்தை வேரோடு பேர்த்து சத்துருக்னன் மேல்வீச, கையிற் சிலையை யுடைய வீரன் பாணப் பிரயோகஞ் செய்து அம்மரத்தைக் கண்டதுண்டமாக்கினான். அசுரன் பின்னும் ஒரு மரத்தைப் பிடுங்கி யிளையவன் மேல் வீசினான். இளையவன் அம்மரத்தையுந் துண்டாக்கி, அரக்கனது தோளிடத்தும், மார் பிடத்தும், கூரிய பாணத்தைப் பிரயோகித்து அவன் உடலத்தை சல்லடைக் கண்ணாக்கித் துளைத்தான். அதுகண்ட லவணன் பின்னும் அநேகம் பெருத்து நீண்ட மரங்களைப் பிடுங்கி ஓயாது விடுத்தான். இரகுவீரன் தம்பி அரக்கனால் வீசப்பட்டமரங்களை யெல்லாம் பொடிப் பொடியாகத் துண்டித்து வீழச்செய்து, அவன் பேரில் தெய்வக்கணை தொடுக்கச்

சிந்தித்து, ஓர் திவ்யாஸ்திரத்தை யெடுத்து, தூபதீபங் கொடுத்து, வில்லிற்றொடுத்துக் காதளவுமிழுத்து, இவ்வஞ்சக னுயிரைக் குடித்து மீண்டுமென்பால் வருகவெனவிடுத்தான். அப்பாணம் வில் லினின்று விடுபட்டு, ஊழித்தீயெனப் பரந்து, பெண்ணொரு பாக னிட பெற்ற சூலப்படையால், கருவமுற்று அதிபாதகச் செயலைச் செய் லவணாசுரன் மார்புருவி யோடி, மறித்தும்மீண்டு சத்துருக் னன் அம்புறாத் தூணியில் வந்தமர்ந்தது. இதுகண்டு விண்ணவர் கள் பூமாரி பொழிந்தார்கள். வேதியர்கள் ஆசிகள் கூறினார்கள். சத்துருக்னன், மதுகையென்னும் நகருக்குள் பிரவேசித்து அங் குள்ள மணிமாட மனைத்துங் கண்ணுற்று அதனுட்சென்று மறை முனிவர்கள் புடைசூழ தேவதுந்துபி முழங்க, விண்ணோர்கள் வாழ்த்த, மண்ணவர்கள் போற்ற, மணியமைத்து ஒளிவீசும் ஓர் அரிய ஸிம்மாதனத்தின் மீது வீற்றிருந்தான்.

பிறகு சத்துருக்னன், யமுனாநதிக்கரை வாசிகளாகிய பிரா மண சிலர்களை அவர்கள் தவத்துக் கிடையூறில்லாமல் வசிக்கச் செய்து, லவணனுண்ட நகரத்துக்கு மதுரையென்ற நாமமிட்டு, அந்த நகரத்துள், வேதமோதுசாலை, கல்வி பயில்சாலை, அறச் சாலை முதலியனவு மேற்படுத்தி, அததற்குரிய சிலர்களையும் நிய மித்து, நாட்டை நீர்வளம், நிலவளம் பெறவமைத்து, ஆனிரை காத் தலுக்கும், வேளாண்மைத் தொழில் செய்வதற்கும், வியாபாரத் தொழில் நடத்துவதற்கும், முறையே கோவைசியர், பூவைசியர், தனவைசியர் முதலிய குடிகளையும் குடியேறச்செய்து, வரி இறை முதலியன விதிப்பதற்கும், வசூலிப்பதற்கும் சட்டதிட்டங்களை யேற்படுத்தவும் நடத்தவும் சட்ட நிரூபண சபை முதலியனவும் ஸ்தாபித்து, மனுநீதி பிறழாது, செங்கோல் நடாத்தி இராஜ்ய பரி பாலனம் செய்து, பன்னிரண்டாண்டு அங்கு தங்கி, பிறகு தன்னுக் கிசைவகித்த பிரமுகர்களை அந்நகர காவலர்களாக அங்கிருத்திவிட்டு அதைவிட்டுப் புறப்பட்டு அயோத்தி வந்து இராகுநாதன் திருவடி யில் வணங்கி நடந்த விஷயங்களைத் தெரிவித்தான்.

இராகுநந்தனர், தனது தாளில் வந்து வணங்கின சத்துருக் னனைத் தோளாரத் தழுவி யெடுத்துக்கொண்டாடி தம்பியை நோக்கி "ஓ இளவலே! மதுரை நகரத்திலேற்பட்டிருக்கும் கணக்கற்ற நிதி யும், பெருந்தொகையுள்ள படையும் அங்கு வைத்துவிட்டு நீ இங் கிருப்பது தருமமல்ல. ஆகையால் என் கட்டளைப்படி யவ்விடம்

சென்று நீதி தவறாமல் செங்கோல் நடத்திவா வென்று" கட்டளை யிட்டார். அவ்வுரை தலைமேற்கொண்டு சத்துருக்னன், மற்றிரு தமையனாரையும் விதிப்படி பூசித்து வணங்கி விடை பெற்றுக் கொண்டு மதுரை நகரம் போய்ச் சேர்ந்து ராஜரீகம் ஒழுங்குபெற நடத்தி வந்தான்.

வான்மீகர், ஸீதையின் குமரர் குசன், லவன் என்ற இருவருக் கும் அக்ஷராப்பியாசம், செய்வித்து ஸம்ஸ்கிருத பாஷையில் பூரா வும் பாண்டித்ய முள்ளவர்களாக்கி, உபநயனமும் நடத்தி, வேதம், புராணம், இதிகாசம் முதலியவைகளும் கற்பித்து வைத்தார்.

பிறகு அம்முனிவர், அப்புத்திரர்களின் திறமையை யறிந்து வேதத்தின் முடிவு தெரிந்துகொள்வதற்காக 'அத்யாத்மிகம்' என் னும் இந்த இராமாயணத்திற் கூறிய ஞானபாகத்தையும் உபதேசித் தார்.

பின்னும், வேதம் ஓதுவதற்கும், கடவுளிடத்தில் பக்திபண்ணு வதற்கும் ஏதுவாகிய கானவித்தையையுங் கற்பித்து யாழ்வாசிப்ப தில் நாரதமுனிவரைப் பார்க்கிலும் விசேஷ பயிற்சியுள்ளவர்களாக குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசையோடும் இராம சரிதத்தைக் கானம் செய்யப் பயில்வித்தார். குசன், லவன், என்ற இருவரும் நான்குவேதம், ஆறு சாஸ்திரம் தநுசாஸ்திரம், யானையேற்றம், குதிரை யேற்றம் முதலிய சகலத்தி லும் நிபுணர்களாகி எங்கும் சென்று இராமாயண காவியத்தை யாழில் அமைத்துக் கானம் செய்தார்கள்.

இவர்களுடைய கானவல்லமையைக் கண்டு, முனிவார்களும், தேவர்களும் கந்தர்வர்களும், கின்னரர்களும், பூலோகத்திலோ, தேவலோகத்திலோ, மற்றெந்த வுலகத்திலோ இத்தகையயாழ்வல்ல வர்களைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை யென்று கொண்டாடினார் கள்.

வான்மீகி முனிவர் ஆச்சிரமத்தில் ஸீதா புத்திரர் இருவரும் வேத சாஸ்திரவித்தையிலும், கான வித்தையிலும் தங்களுக்கு நிகர் ஒருவருமில்லை யென்று செப்பத்தகுந்தவர்களாய், நல்லொழுக் கத்திலும், குணத்திலும், ஈஸ்வர பக்தியிலும் மிகச் சிறந்தவர்களென யாவராலும் மதிக்கப் பெற்றவர்களாய் வசித்து வந்தார்கள்.

அப்பாலவர்கள் இப்படி வாழும் நாளில் ஓர் நாள் குசன், முனி சிரேஷ்டராகிய வான்மீகி முனிவரையடிபணிந்து, "ஓ ஞான தேசி குரு மூர்த்தியே! நான் தங்களிடத்தில் ஆத்ம ஞான விஷயமாகச் சில சந்தேகந் தெளியவிரும்புகிறேன். அதாவது ஓர் மானுடனுக்கு ஸம்ஸார பந்தம் எப்படி யுண்டாகிறது? அவன் அப்பந்தத்தில் நின்று எவ்விதம் விடுபடுகிறான்? இவைகள் அடியேனுக்கு விளங் கும்படி கிருபை புரிய வேண்டு" மென்று வினவினான்.

முனீஸ்வரனாகிய வான்மீகி முனிவர், அக்குமாரனை நோக்கி "ஓ பால! நீ கேட்ட சங்கைக்குப் பதில் சுருக்கமாகவும் உனக்கு விளங் கும்படியாகவும் கூறுகிறேன், சாவதானமாகக் கேள்.

அசுத்தமாயையிலே கலை தோன்றும். அக்கலையிலே மூலப் பிர கிருதி தோன்றும். மூலப்பிரகிருதியில் முக்குணங்களுந் தோன்றாது நின்றவிடம் அவ்வியக்தமென்று பெயர் பெறும். இந்த அவ்வியக்தத் தில் புத்தியும், புத்தியில் அஹங்காரமுந் தோன்றும். அஹங்காரந் தான் அகந்தைக்குவித்தாகும். அந்த அஹங்காரத்தில் முக்குணங் களின் பேதத்தால் ஜீவன் சரீரமுடையவனாகி கருமங்களைச் செய்கி றான். அந்த ஜீவனுக்கு அஹங்காரம் மந்திரியாகிறது. அந்த அஹங் காரத்தால் ஸங்கல்பத்தையடைந்த மானுடன், ஸங்கல்பமாகிய விலங்கினால் தகையப்பட்டு எப்போதும் மனைவி, மக்கள், பொருள் இவைகளில இச்சையைச் செலுத்துகிறான். இது 'எனக்குண்டாக வேணு' மென்கிற ஆசையே ஸம்ஸாரபந்தம். இதனால் துன்பத்தை யடைகிறான். இந்த அஹங்கார சம்பந்தமுடைய மானுடனுக்கு ஸத் வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுண்டு.

ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோ னம், ஐம்பொறியடக்கல் இவை யெட்டும் ஸத்வகுண ஸங்கற்பம்.

மனவூக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி இவையெட்டும் ரஜோகுண ஸங்கற்பம்.

பேருண்டி, நெடுந்துயில், சோம்பு, நீதிவழு, ஒழுக்கவழு, வஞ் சம், மறதி, பொய், கோபம்,காமம், கொலை இவைகளே தமோகுண ஸங்கற்பம்.

இக்குணங்களில் தமோகுண ஸங்கற்பமேலிட்டால் மற்ற இரண்டு குணங்களுந் தாழ்வடையும். ஸத்வ ரஜோகுண ஸங்கற்பம் மேலிட்டால் தமோகுணம் கெடும்.

ஸத்வகுண ஸங்கற்ப முடையவன் மோக்ஷ ஸாம்ப்ராஜ்ய ஸுகத்தை யடைகிறான்.

ரஜோகுண ஸங்கற்பமுடையவன் லோக விவகாரங்களுடைய வனுகி, தேவலோக பூலோகவாசியாகி, இகலோக ஸுகத்தை யடைகிறான்.

தமோகுண ஸங்கற்பத்தால், பாபிஷ்டனுகி நரகத்தை யனுபவித்துப் பிறகு புழுவாதி தாழ்ந்த ஜென்மத்தை யடைகிறான். இம் முக்குண ஸங்கற்பத்தையும் விட்டவன் பிரமைக்கியத்தை யடைகிறான்.

ஓ மகா புத்திசாலியாகிய குச! இந்த ஸம்ஸார பந்தமாகிய துன்பத்தை நீக்குவதற்கு இச்சாத்தியாகம் வேண்டும். இம்முக்குண ஸங்கற்பத்தையும் விட்டு, வியாபகஞான பாவனையால், ஸங்கற்பங்களை நாசஞ்செய். ஆயிரம் வருஷம்வரையில் தவஞ்செய்தாலும், பாதாளத்திலிருந்தாலும், பூமியிலிருந்தாலும் ஸ்வர்க்கத்திலிருந்தாலும் ஸங்கற்ப நாசத்தைத் தவிர வேறு உபாயமில்லை. ஸங்கற்பமாகிய நூலில் விஷயங்களாகிய மணிகள் கோர்க்கப்பட்டிருக்கின்றன. அந் நூலை நறுக்கிவிட்டால், ஸங்கற்பரூப விஷயங்கள் நடைபெறு. நீ ஸங்கற்ப மற்றவனும் விகாரமில்லாதவனும் ஆகவேண்டும்.

மனோபாவமே ஸங்கற்பமாகும். மனத்தினது பாவனை யறுதலே சிவமாகும். ஞானபாவனையால் அதன் ஸங்கற்ப ரூபமாகிய விஷயங்கள் நீங்கில் ஸர்வம் பிரமமாய் விளங்குவாய். ஆகையால் நீ சித்தவிருத்தியை ஒடுக்கி, பரமே தானுய் விளங்கிய ஸுகபோதமான பிரமஞானத்தை யடைவாயாக" என்று கூறினார்.



## 7 வது சருக்கம்.

---

இரகுகுலசிரேஷ்டனான ஸ்ரீராமர், சத்துருக்னன் மதுரையம்பதிக்குச் சென்ற பிறகு, அயோத்தியில் மற்றிரு பிராதாக்களுடன் அரசாக்ஷி நடத்தி வந்தார். அக்காலை, விருத்தாப்பியனுகிய ஓர் வேதியன் தனது பத்தினியோடு மரித்துப்போன தனது குமாரனை மடியிலேந்தி வந்து, அரண்மனைவாயிலில் நின்று கதறினுன். அப்பறையாளன் மனைவி "ஆ என் கண்மணியே! நீ என்னை விட்டுப் பிரிந்தாயே; இப்பூமியிலுள்ளோர் புத்திரன் இறந்தும் இன்

னும் வுயிர் துறவாது நிற்கும் என்னைப்பழிப்பார்களே. உன்னைக் கொண்டுபோன எமன் என்னையுங் கொண்டுபோக வில்லையே. இக்கடல்சூழ்ந்த வுலகத்தையாளும் மன்னவர் மன்னனுவது என் துயரத்தைப் போக்கவுமில்லையே" என்று புலம்பினுள். அப்பிராமணன் தனது பாரி மனமுருகி நின்று தயங்குவதைப் பார்த்து "ஓ காவல! இத்தராதலத்தில் தந்தைக்கு முன் தனயன் இறந்ததை நான் பார்த்ததில்லை, புத்திர சோகத்தினுல் கதறும் இந்தப் பிராமணத்தியும் நானும் இனிப் பிழைத்திருக்க வழியில்லை. இவ்வுலகையாளும் உமக்கே பழியாக நாங்களிருவரு மிறக்கின்றோம் என்று கூறினுன்.

கமலக்கண்ணனுகிய இராகவர் தனது வாயிலில் வந்து ஓர் வேதியன் தனது பத்தினியுடன் கண்ணீர் சோர அழுது புலம்புவதையும் அவர்கள் தங்கள் அருமையான புதல்வனை யிழந்ததையும் அதனுல் அவர்கள் சொல்லும் வார்த்தைகளையும் கேட்டு மனம் பொறுதவனுகி அமைச்சர்களைக் கூவி, நம் வாயிலில் வந்து குறைகூறும் பிராமணன் பிராமணத்தி யிவர்களுக்கு பதில் கூற வகையறியாது மயங்கி நின்றேன். மறைப்பொருள் தெரிந்த ஆசிரியர் முதலினேரும் நீங்களும் இதற்கு வகை கூறுங்களென்று அறிவித்தார். அச்சமயம் நாரதமாமுனிவர் அச்சபைக்கு வந்தார். வந்த முனிவரைப் பணிந்து ஆசனத்திருத்தி "ஏ முனிவரே! இந்நகரில் ஓர் பிராமணன் தனது புதல்வன் இறந்து போக அது கண்டு அம்மறையாளன் நம் வாயிலில் வந்து நின்று பழிகூறுகிறுன். அதன் காரணம் யான் அறிகிலேன். இதை யறிந்து செப்ப வேணுமென்று கேட்க, நாரதர் மாசற்ற புகழுடைய காவல! அரச தருமம், ஆசிரிய தருமம், வருண தருமம், வருணுச்சிரம தருமமெனத் தருமம் பலவாறுகக் கூறப்பட்டிருக்கின்றன. அவைகளில் வருண தருமமென்பதில் பிராமணதருமம் :—யாகம்பண்ணுதல், பண்ணுவித்தல், மறையோதுதல், ஓதுவித்தல், தானங்கொடுத்தல், ஏற்றல் முதலியனவாம். அரசதருமம் :—ஓதல், யாகம் பண்ணுவித்தல், தானங்கொடுத்தல், அரசாளுதல், படைத்தொழில் கற்றல், யுத்தம் செய்தல் முதலியனவாம். வைசியதருமம் :—ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல், முதலியனவாம். சூத்திர தருமம் :—முதல் மூன்று வருணத்தாருக்கும் ஏவல் செய்தல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத்தொழில்

செய்தல், காருக வினைகளாக்குதல் முதலியனவாம். இந்த வருண தருமங்களை விட்டு ஒரு சூத்திரன் கானகத்தில் மேனித் தலைகீழாக வும், கால் மேலாகவும் நின்று தனக்கொவ்வாத தவத்தைப் புரிவானு கில் அக்குற்றத்தால் இச்சம்பவம் நேரிடும், இதை யறிந்துகொள். அருந்தவத்துக்குரியவ னல்லாத சூத்திரன் உக்கிர தவஞ் செய்தலே யிதற்குக் காரணமாகும். இதனாலே இம்மரணம் நேரிட்டது என்று விரித்துக் கூறினார்.

முனிவருரைத்த வாசகத்தைக் கேட்ட இரகுவீரர் இளைய வனை நோக்கி, "நீ போய் அப்பிராமணனைத் தேற்றி, இறந்துபோன அவன் மைந்தன் சவத்தைத் தயிலக் கொப்பரையில் போடும்படி செய்துவிட்டுவா" என்று கூறினார்.

இலக்ஷ்மணனும் அவ்வாறே செய்து வந்து தெரிவித்தான். பிறகு இரகுநந்தனர், தேரின் மீதேறி மேற்றிசை, வடதிசை, கீழ்த்திசை இத்திசைகளிற் சென்று தேடியுங் காணுமல், கடைசி யாகத் தென்றிசை நோக்கிச் செல்லுகையில், ஓர் திவ்விய தாமரைத் தடாகத்தருகில் தலை கீழாய் நின்று கொடிய தவஞ் செய்யும் ஒரு வனைக் கண்டார். கொண்டல் வண்ணன், அத்தவம் புரிவோனைக் கண்டு, அவன்பால் நெருங்கிச் சென்று "ஓ தவசிரேஷ்ட! நீ அந் தணனு, மன்னனு, வைசியனு, சூத்திரனு ஒளிக்காமலுள்ளதைக் கூறு" என்று கேட்டார். அதற்கவன், "வெற்றி மாலைதரித்த ஓவீர! நான் சூத்திர வருணத்திற் பிறந்தவன். என் பெயர் சம்புவன். இத் தூல சரீரத்தோடு தேவலோகம்போக உத்தேசித்து இவ்வரிய தவம் புரிகிறேன்" என்று கூறினன். உடனே துஷ்ட நிக்கிரக, சிஷ்ட பரிபாலனுன ஸ்ரீராமர் உடை வாளை யுருவி, அவன் தலையைச் சேதித்துப் பூமியில விழ விடுத்தார். இந்திரன் முதலிய தேவர் கள் பூமாரி பொழிந்து கொண்டு அவ்விடம் வந்தடுத்தார்கள். சம்புவன், காசாம்பூவண்ணனை நோக்கி, "யான் மண்ணுலகில் வருண தருமத்தின் வரம்பையழித்து உமதுகையால் மரண மடைந்தனன். புண்ணியஞ் செய்தோர் நண்ணும் பொன்னுலகம் போதலரிது. ஆயினும் என்பால் ஓர் வரம் நீர் பெற வேண்டும்" என்று இறைஞ்சினன். இரகுநந்தனர் பெருந்துயரத்தையு டைய அம்மறையவன் சேய்பிழைக்க வரந்தருவா யென்றார். அங்ஙன தவம் புரிந்த சம்புவன், அப்படியே அப்பிராமணப் புதல்வன் ஆவி பெறுக என வரமளித்தான். தேவேந்திரனுதி தேவர்களும், பூவேந்

தனுதிய ஸ்ரீராமனும், எழுகடலையுங் குடித்த குறுமுனிவாமும் ஆச்சிரமம் வந்து சேர்ந்தார்கள். தன்னாச்சிரமமடுத்துவந்த விண்ணவர் கோமான் முதலினோரை விதிப்படி பூஜைசெய்ய இந்திரன் முதலினோர் அது பெற்றுப் பொன்னகரமேவியபின்னர், அயோத்தி மன்னனைக் கொண்டாடி இனிய வார்த்தைபேச, மன்னவனும் குறுமுனியைத் தாழ்ந்து உபசரிக்க, இருவரும் குசலவார்த்தை பேசி யினிது வீற்றிருந்தார்கள். அப்போது குறு முனிவர், ஸ்ரீராகவனை நோக்கி "ஓ வீர! இம்மணிப்பூஷணமது, விண்ணவர்க்கன்றி மண்ணுலகத்தினர் தரிக்கத் தகாதது, ஆயினும் நினக்குரியது, பங்கயத்தோனுலகிலுள்ளது, ஓங்கிய ஒளி வீசத் தகுந்தது, ஒருவரால் கொடுக்கப் பட்டது, இவ்வாபரணத்தை நீ பெற்றுக்கொள்" என்று கொடுத்தார்.

அதைக்கண்ட கோதண்டபாணி "ஓ முனிசிரேஷ்ட! இது யாரால் தரப்பெற்றது, இதன் வரலாறு என்ன" வென்று கேட்டார். அகஸ்தியர், முன்பு நான் அருந்தவஞ் செய்தற்குரிய இடந்தேடும் போது, சிங்கம், புலி, கரடி முதலிய ஜெந்துக்கள் வந்து அணுகாததும், மானுடர்கள் நெருங்காததும், விரிந்த புஷ்பங்கள் நிறைந்த தருக்கள் சூழ்ந்ததும், ஆகிய ஓர் சோலையைக் கண்டேன். அச்சோலையையடைந்து பார்க்க அதன்நடுவில் அன்னப்பக்ஷி தன்பெடையோடு வசிக்கும் தாமரைப் பூக்கள் அடர்ந்ததும், குளிர்ந்த ஜலம் நிறைந்ததுமாகிய ஒரு வாவியும், அதனருகில் யாருமற்ற திவ்வியமான ஒரு ஆச்சிரமமும் காணப்பெற்றேன். அவ்வாச்சிரமத்தில் அன்றிரவு தங்கிப் பொழுது விடிந்தபின் அவ்விடத்தில் ஓர்சவம் கிடக்கப்பார்த்தேன். இது என்னவென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, அநேக மாதவர் சூழவும் தும்புரு நாரதர் பாடவும், அரம்பை முதலிய ஸ்திரீகள் ஆடவும், விமானத்தின் மீதிருந்து இறங்கி ஒரு மன்னவர், அந்த சவத்தைப்பிடுங்கி வயிறார வுண்டு, அப்பொய்கையிலுள்ள ஜலத்தை அள்ளிக்குடித்துச் செல்ல எத்தனித்தபோது, யான் அவரிடம்சென்று "ஓ தேவசொரூப! நீர் இச்சவத்தைத் தின்றகாரணம் யாது? உம்பெயராது? செப்பவேண்டும்" என்றேன். அம்மன்னர், "ஐயா! பண்டைய நாளில் அசுவேதனென்னும் ஒரு குறிஞ்சிநில மன்னவனுக்கு சுவேதையென்னும் நானும் எனக்குப்பின் பிறந்த சுவேதனென்னும் எனது தம்பியுமாக இருவர் பிறந்தோம். என் தந்தைகாலஞ்சென்றபின் ஆயிரவருஷம் இக்கடல் சூழ்ந்தஞாலத்தை யாண்டு உலகத்தின்மீது வெறுப்புற்று, எனது

பின்பிறந்த சுவேதனிடம் இராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டு இந்த வனத்துக்கு வந்து மூவாயிரமாண்டு சிந்தை ஒருங்கி மிக வருந்தி, அரியதவஞ் செய்தேன். அத்தவம்பேற்றினால் பிரமலோகஞ் சென்று அங்கு யாவரும் போற்ற வீற்றிருந்தேன். அப்பொழுது மிகுந்த தாகமும் பசியும் என்னை வருத்த, அது கண்டு மனம் சகியாதவனாகி, வாசுதேவன் உந்தியிலுதித்த கமலாசனனைக் கண்டு, அவர் தாளில்வணங்கி "ஓ தேவ! பெறுதற்கரிய இவ்வுலகை யானடைந்தும், தாகமும், பசியும் நானடைவதற்குக் காரணம் என்ன? அப்பசியுந் தாகமுந்தீர நானுண்ணும் வஸ்து யாது" எனக் கேட்டேன். அப்பிரமன், என்னை நோக்கி "ஓ காவல! நீ அரசு புரியுங்காலத்தில் சிக்கனத்தால், இரப்போருக்கிட்டுண்ணாமல், உனது வயிறு நிரம்புவதையே கண்ணாகப்பார்த்து வந்தாய். அப்பாவத்தினால் பசிநோயுன்னைப்பற்றியது. ஆயினும் தருக்கள் நிறைந்த அவ்வனத்திலிருக்கும் உன்சவமானது நின் பசிதீரப் புசிக்கப்புசிக்கக் கெடாது வளர்ந்து வரும். அப்பிணத்தையே தின்று அவ்வாவியிலுள்ள ஜலத்தையும் பருகி யுன்பசியையுந் தாகத்தையுந் தணித்து வா. அவ்விதம் வரும் நாளில், கடத்திற்பிறந்த குறுமுனியை நீ காணப்பெறில் உன் பசியுந் தாகமுந் தணியு"மெனக் கூறினார். அன்று முதல் தினந்தோறும் இங்குவந்து இச்சவத்தைத் தின்று தண்ணீர் குடித்து என் பசியையுந் தாகத்தையும் போக்கி வந்தேன். இன்று உம் பெருமையால் என் பசியும் தாகமுந் தொலைந்தது. நான் நன்று பிழைத்தேன்" என்று கூறி, இந்த நவரத்ன மிழைத்த ஆபரணங்களை யெனக்குக் கொடுத்து விமானத்தேறி விண்ணோர் சூழப் பிரமலோகஞ் சென்றார். இதுதான் இம்மணிப்பூண் என்னிடம் வந்த விபரம்" என்றார்.

இவ்வரலாற்றைக் கேட்ட இரகுநாதன் மற்றும் அம்முனிவனை நோக்கி, "ஓ ஸ்வாமின்! அவ்வனத்தில் மிருகம், பறவை, மானுடர் முதலினோர் வாராதொழிவதற்குக் காரணம் யாதெனவினவ, அம்முனிவர் அயோத்திநாடனை நோக்கி, "ஓ பூபால! மனுகுலத்துதித்த, தருமமுந்தயவுமற்றுவாழும் மிண்டனாகியதண்டன் என்னும் அரசன், அவன் குருவாகிய சுக்கிராசாரி தவஞ்செய்யும் இந்த வனத்தையடைந்து, அழகிய பூஞ்சோலையிடத்து மயிலென உலாவித் திரியும் அக்குருவின் மகளைக் கண்டு காமங்கொண்டு மன்மதபாணத்துக் காற்றாதவனாகி யவள்பாற் சென்று 'ஓ மின்னற்கொடிபோன்றபெண்

ணங்கே! நீ யார்? உன் பெயரென்ன' வென்று கேட்டான். அப்பெண்மணி பவளம்போன்ற தன் வாயைத் திறந்து, சுக்கிரனுடைய மகள் யான், என் பெயர் சுரையென்று சொல்லுவார்கள் என்று செப்பினள். அதைக்கேட்ட தண்டன் அம்மடமங்கை தனதாசிரியன் மகளெனத்தெரிந்திருந்தும், அத்துடி நேரிடையாளைத்தொழுதிறைஞ்சிப்புணரச் சென்றான். சுரை, அதுகண்டு மனமிசையாதவளாகி 'ஓ அரசனே! எந்தைக்குத் தெரிந்தால் நின் குலமேமுழும் நாசம் செய்வார். இமைப்பொழுதேனும் இவ்விடம் நில்லாதே செல்' லென்று கோபக்குறியுடன் சொன்னாள். தண்டன் அவள் தடுத்துங் கேளாது அநங்கன் சரத்தில் கட்டுண்டு தருமத்தை யழித்து அவள் கேசத்தைப் பற்றியிழுத்து வலிதிற்புணர்ந்து சென்றான். சுரை, அத்தீயோன் சென்றபின் தனது தந்தையிடஞ்சென்று தனக்கு நேரிட்ட மானக்கேட்டைப் புகன்று நெஞ்சந்துடித்தவளாய் நின்றாள். சுக்கிரன் தனது மகளை நோக்கி 'ஓ தாழ்குழலாய்! உன்னைத் தீங்குசெய்தவன் யார்' என்று கேட்க அவளும் நடந்ததைக் கூறினாள். தாதை யதை யுணர்ந்து சிந்தைநொந்து என்மகட்குத் தீராவிடும்பு செய்த அத்தண்டன் வளநாடும் அவன் தனையும் வெந்து சாம்பலாகி விழவெனச் சாபமிட்டார் தண்டன்நாடு உடனேவெந்து சாம்பலாகித் தண்டகம் என்னும் பேர்பூண்டு, நரி, மிருகம் இவைகளனுகாதிருக்கப்பெற்று, தவத்தைச்செய்யும் முனிவர்கள் வந்து வசிப்பதால் சன்மத்தானமென்றுகூறப்படும் வனமாகிவிளங்குகின்றது. இதுமுன்பு நிகழ்ந்தது'' என்று புகன்றார். இவ்வரலாற்றைக் கேட்ட இரகுநாதன் அன்றிரவு அங்கு தங்கி, பொழுது விடிந்தவுடன் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அகஸ்தியரிடம் விடை பெற்றுத் தேரேறி அயோத்திமா நகரம் வந்து சேர்ந்தார்.

பிறகு ஸ்ரீராமர் தன் வாயிலிற் காத்திருந்த பிராமணனை அவன் புதல்வனோடனுப்பிவிட்டு, தனது பிராதாக்களை யழைத்து, அன்புடன் அவர்களை நோக்கி, "ஓ தூய சிந்தையுடைய தம்பிமார்களே! இப்போதுங்களைக் கொண்டு இராஜசூயயாகம் செய்ய மனங்கொண்டேன்" என்று கூறவும், பதினன்கு வருஷம் அவருடன் சென்று காத்த இலக்ஷ்மணன் "ஓ அண்ணலே! யான் நன்னூற்கற்றிலனாயினும், பெற்ற தாய் தன்மக்கள் கூறும் மதலைச் சொல்லை யாழினுமினிதெனக் கொள்வள்; அதுபோல வென் சொல்லையும் நன்றெனக் கொள்ளல் வேண்டும். இளம்பிராயமுடைய குழந்தைகள் தன்னை

யீன்ற தாயையே நேசித்து நிற்குர். அதுபோல இம்மாநில மக்களெல்லாம் அவர்களுக் காசனுகிய உட்மையே கதியெனநோக்கி அன்போடு விசுவாசித்து வருகிருர்கள். அன்றியும் அரசரெல்லாம், நீருபிராகவும் தாங்களுடலாகவும் பாவித்து வருகிருர்கள். அத்தகைய மன்னர்களுடன் போர்புரிந்து வென்று அவர்களுடைய திரவியங்களைக் கவர்ந்து கொண்டுவந்து இராஜசூயயாகம் செய்வதைவிட, அசுவமேதயாகஞ் செய்வது மிகச் சிறப்புற்றதாகும். ஐம்புலனையும் வென்ற ததீசி மஹரிஷி விருத்திராசுரனைக் கொன்ற பாவம் இந்த அசுவமேத யாக பலத்தினுல் நீங்கிச் சுத்தனுனரென்று தாங்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆகையால் பிறரை வருத்தாது நம்முள்ளிருப்பதைக் கொண்டு அசுவமேதயாகஞ் செய்வதே தகுதியென நினைக்கிறேன்" என்று தெரிவித்தான்.

இரகுநாதர் தம்பி கூறும் அதர்மம் நீங்கிய வார்த்தையைக் கேட்டு உளமகிழ்ந்து, தரணியாளும் மன்னர்களை யெல்லாம் வாட்டிச்செய்யும் யாகத்தைத்தவிர்த்து, அசுவமேதயாகத்தையே செய்ய மனமுவந்து, அந்த யாகத்திற்குரிய ஸர்வ இலக்ஷணமும் பொருந்திய குதிரையை மந்திர வித்துக்களால் மந்திரித்து பூமிப் பிரதக்ஷணம் செய்ய விடுத்தார்.

பிறகு ஸ்ரீராமர் அந்தண ரெல்லாம்தனக்குத் தெய்வமாதலால், அகஸ்தியாதி முனிவர்களெல்லாம் யாகத்துக்கு வரும்படி சாரணர்களை யனுப்பித் தெரிவித்தார். அதன் பின் இலங்கை மன்னவனுன விபீஷணனுக்கும், தனது சிநேகிதனுன ஸுக்ரீவ அனுமான், குகன் முதலிேனுர்க்கும், தேச மன்னவர்களுக்கும் யாகம் நடக்குந் தேதியைக்குறித்து அத்தினந் தவருது வரும்படி திருமுக மனுப்பினுர். மதுரை நகரில் வசிக்கும் சத்துருக்னனுக்கும் யாகம நடக்கப் போகிற சங்கதி தெரிவிக்கத் தூதனை யனுப்பினுர். ஒற்றர்கள் ஆங்காங்கு சென்று அயோத்தியில் நடக்கும் அஸ்வமேதயாகத்தின் விபாம அறிவித்ததும், ஆரண்ய வாசியாகிய முனிவர்களும், தேவர்களும், சத்துருக்னனும், ஸுக்ரீவன், அனுமான், அங்கதன், விபீஷணன் முதலினேரும், அறுபத்துநான்கு தேசங்களிலுமுள்ள மன்னர்களும் அயோத்திமாநகரம் வந்து சேர்ந்தார்கள்.

கார்வண்ணன் இலக்ஷ்மணனை நோக்கி, யாகத்துக்கு வருவோரும், முனீஸ்வரர், பிராமணர், தேசமன்னர், விபீஷணன், ஸுக்

ரீவனுதி வானர வீரர்கள் யாவருக்கும் அவரவர்களுக்குத் தக்க விடுதி திட்டப்படுத்தி, போஜனத்துக்குரிய சாமான்களும், மற்று முள்ள வசதிகளும் ஏற்படுத்தவும், நகரமாக்களுக்கு யாகதினம் இன்னும் ஏழுநாளிருக்கிறதென்றும், நகரமுழுமையும் அலங்கரிக்கும்படி திட்டம் செய்யவும்,

கோமதி நதிக்கரையடுத்த நைமிசாரணியம் சென்று வேள்விச்சாலையேற்படுத்தி, யாகத்துக்குரிய சாமக்கிரிகைகள், ஸப்த கங்கா தீர்த்தங்கள் முதலியன சேகரிக்கவும் கட்டளையிட்டார்.

இலக்ஷ்மணன் அவ்வாறே சென்று சகல காரியமும் செய்து தமையனிடம் வந்து அவ்வாறே சகலமுந் திட்டம் செய்யப் பட்டனவென்று தெரிவித்தான்.

ஸ்ரீராமர், ஆயிரங் கோடாகோடி பொன்னும், ஆயிரங்கோடி பசுவும் ஆயிரங்கோடி பாரம் அரிசியும், அரிசிக்குவேண்டிய நெய் பருப்பு முதலிய சாமான்களும் யாக சாலைக்கனுப்பிவிட்டு, கங்கை நீராடிப் பட்டாடையுடுத்து சர்வாபரண பூஷிதனுகி, ஆசிரியருடனும், தம்பிகளுடனும், ஸுக்ரீவனுதி தோழர்களுடனும், விபீஷணனுதி தேசமன்னர்களுடனும், ரதாரூடராகி கோமதி நதிக்கரையிலமைத் திருந்த யாகசாலையை மேவி, மற்றவர்களுக்காக நியமித்திருக்கும் இடங்களில் அவர்களை யிருத்தி, தானும் தன் பிராதாக்களும், அனுமு, சுக்கிரீவ, விபீஷணர் முதலினேர் புடைசூழ, ஆசிரியராகிய வசிஷ்டர் ஒருபால் மேவ, ஒளிவீசும் வெள்ளியங்கிரியை யொத்து விளங்காநின்ற மண்டபத்தினிடையில், ஓர் திவ்விய ரத்னுசனத்தின் மீது வீற்றிருந்தார்.

அக்காலை, அகஸ்தியர், கண்ணுவர், பிருகு, விஸ்வாமித்திரர், முதலிய ரிஷிகளும், முனீஸ்வரரும், நான்குவேதம், ஆறுசாஸ்திரம் முதலியன கற்றுணர்ந்த வேதபிராமணர்களும் யாகசாலை வந்து சேர்ந்தனர்.

ஸ்ரீராமர், முனீஸ்வரர் முதலினேரைத் தொழுதும் தன்னை வணங்கினேரைத் தக்கபடி யுபசரித்தும், அவரவர்களுக்குரிய ஆசனத்தமர்த்தினர்.

பிறகு இலக்ஷ்மணர், முனிவரர்க்கும், முடிமன்னருக்கும், முத்தீ வளர்க்கும் பிராமணர்களுக்கும், மற்ற நகரமாக்களுக்கும் அறுசுவை யுண்டி சமைப்பித்து போஜன மருந்தச்செய்தார்.

பின்னர் ஸ்ரீராமர், தேசமன்னர், விபீஷணன், ஸுக்கிரீவன், அனுமான், குகன், முதலினோர்க்கு, ஆபரணமும், ஆடையும் ஈய்ந்து, வேதபிராமணர், வறியவர் முதலியயாவருக்கும் அவரவர்கள் வேண்டியதையுங் கொடுத்தார்.

அப்பொழுது வான்மீகி முனிவர், குசலவரைக் கூப்பிட்டு, நீங்கள்ஜானகி புத்திரர் என்பது தெரியாமல் மறைந்து, அயோத்தி மாநகரத்தை யாளும், இராமச்சந்திரன் செய்யும் வேள்விச் சாலையையடைந்து, அரசன் சபையில் இராம காவியத்தை, மாடகயாழ் கைக்கொண்டு மதுரமான வினிய இசையில் பாடுங்கள் என்றார். மன்மதனையொத்த அழகுவாய்ந்த ஸீதா குமாரர்களிருவரும் சடையிற் பூமுடித்து முப்புரிநூல் மார்பில் தரித்து முனிவர் தம் வடிவங்கொண்டு, யாழைக் கையிலேற்று முனிவரை வணங்கி விடைபெற்று, அன்னையிடம் சென்று திருவடியில் நமஸ்கரித்து முனிவர் கூறியதைச் செப்பி அனுமதிபெற்று, அவ்வனத்தை விட்டு நீங்கி கங்கையைக் கடந்து, வேள்விச் சாலையை யடைந்தார்கள். அந்த யாகசாலையிலிருந்த வேந்தரும் முனிவரும் மற்றுமுள்ளோரும், இந்தக் காளையரை நோக்கி, இவர்கள் கையில் மாடக யாழில்லாமல் வரிசிலையிருக்குமாயின், தாயின் வார்த்தை கடவாது கானகமடைந்து மீண்ட கண்ணபிரானையே நிகர்வார்களென்று செப்பினார்கள். அக்குமாரர்கள் அச்சாலையிலிருந்தோர் மனங்களிக்க, யாழை மீட்டி இராமகாதையை இனிய விசையோடு கந்தருவரும் நாணமடையப் பாடினார்கள். அவ்விசையைச் செவி மடுத்தவர்கள் மனமுருகி,யீது நாமிதற்கு முன் கேட்டதேயில்லையென்று செப்பி, இராகவனிடம் சென்று, "ஓ தேவ! இது காறும் கேட்டிராத ஓர் அற்புதமான கான வித்தையை,இரண்டு சிறுவர்களிடம் கேட்டானந்தித்தோம்" என்று கூறினார்கள். மன்னவர் மன்னனும் அப்படியானால் அத்தகைய சிறுவர்களை யிங்கு வரவழையுங்களென்று செப்ப, வாயில் காப்பாளரும் வந்து குமாரர் இருவரையும் சபைக்குக் கூட்டிச் சென்றனர்.

ஸீதை புதல்வர் சபையிற் சென்று, குரல் முதலியவேழு நரம்புகளுடன் கூடிய மாடகயாழைக்கையிலெடுத்துச்சுருதி கூட்டி,இராம சரித்திர காவியத்தை, இசையோடு, விண்ணவரும், மண்ணவரும் துதிக்க தும்புரு நாரதர் நாணமடையப் பாடினார்கள். ஸீதையின் புதல்வர்பாடிய இன்னிசையோடு கூடிய காவியம், தன்புகழ்ச்சியாகையால் தரணிமன்னவன், அம்மைந்தரை நோக்கி, "ஓ புதல்வர்காள்!

இக்காவியப்பனுவலை யிசையோடு பாட, உங்களுக்குப் புகட்டினவர் யார்? நீங்கள் யார்?" என்று கேட்டார். புதல்வர்கள், அரசனை நோக்கி, "தங்கள் புகழை வான்மீகி முனிவர் எங்களுக்கூட்டினர். அவருரையைத் தலை மேற்கொண்டோம். எங்கள் பெயர் குசன், லவன் என்று கூறினார்கள். அதுகேட்ட கௌசல்யா குமரன், தனக்கு நிகராக விளங்கும் அப்புதல்வர்கள் பாடிய பாட்டிற்காகத்தலைக்குப் பத்துகோடி பசும் பொன் கொடுக்கக் கட்டளை யிட்டார்.

பாவலராகிய குமரர்கள் "ஓ மஹாராஜனே! பொருளானது மன்னரையும் மதிக்கச் செய்யாது; உயிருக்குக் கேட்டை விளைவிக்கும்; திருடர்களாற் களவாடப்படும்; அவைகளை யிழப்பதில் துக்கத்தை யுண்டாக்கும்; நித்திரை செய்யவொட்டாது; மங்கையரை மோகிக்கச் செய்யும். இத்தகையபொருளை யீட்டுவதைவிட அதில்லாமலிருப்பதே மிகச் சிறந்ததாகு" மென்றார்கள்.

புரவலன், "பொருளை ஒருவன் அடையும்பக்ஷத்தில் அப்பொருள் அவனைவேந்தனுக்கும்; தாரணியை யாளச்செய்யும்; சிறந்த உணவை யுண்பிக்கும்; தேவலோகத்தையு மடையச்செய்யும்; காரியமனைத்தையுங் கைகூட்டும்; சிரிபது இதன்மேல் ஒன்றுமில்லை. ஆகையால் இப்பொருளைப் பெற்றுக்கொளளுங்கள்" என்று செப்பினர்.

புதல்வர்கள், "ஓ தேவே! கந்தமூலபலாதிகளை யுண்டு, ஆரண்யத்தில் வசிக்கும் முனிவருடன் கானகத்தில் இருக்கிறோம் ஆகலால் தாங்கள் அளிக்கும் திரவியம் காஞ்சிரங்காய்க்குச் சமமென்று நாங்கள் நினைக்கிறோம்" என்றார்கள்.

அரசர் கோமான், குசலவரை நோக்கி, இன்னமும் என்பால் வருவீர்கொல்லோவென்று கூற, அவர்கள் "ஓ ராஜனே! நாளைக்கும் வந்து பாடுவோம்" என்றுரைத்துச் சென்றார்கள்.

அதன்பிறகு பூமி பிரதக்ஷணத்துக்குச் சென்ற யாகப் பசுக்கள் (குதிரைகள்) உடன் சென்ற வீரர்கள், பிரதக்ஷணத்தை முடித்துக் கொண்டு ஓராண்டுகழித்து யாகசாலைக்கு வந்து சேர்ந்தார்கள்.

யாகத்துக்குரிய பசுக்கள் வந்தன வென்று தெரிந்தவுடன் அவைகளையும், பதியிலுள்ள பசுக்களையும், விதிமுறைப்படி கங்கை யாதி தீர்த்தமாட்டி, தூபதீப முதலியன செய்து யாகசாலைப் புறத்தில் இருத்தினார்கள்.

பிறகு ஸப்தநதிகளின் தீர்த்தங்களும், நாற்கடல் நீரும், நெய், சமித்து, பொரி, தருப்பை, சுருக்கு, சுராவம், மான் தோல், பொற்கலசம், பட்டுவஸ்திரம், முத்து, பவளம் முதலிய யாக சாமான்களும் வந்து நிறைந்தன. சுப முகூர்த்தத்தில் ஓமகுண்டம் ஏற்படுத்தி விக்நேனஸ்வர பூசை, நவக்கிரகபூசை முதலிய முடித்து, ஸ்ரீராமருக்கு ரக்ஷாபந்தனம் செய்து, ஸீதையில்லாத நிமித்தம் பொன்னினால் ஸீதை செய்து அருகில் வைத்து பதினாறு முனிவர்கள் ஓமகுண்டத்தில் அக்னிவளர்த்து ஓமம் செய்து, யாகசாலை மத்தியில் யூபம்நாட்டிப் பசுவைக் கட்டி வேத விதிப்படி மந்திரம் ஜெபித்து, வபைஸ்தானத்தை யெடுத்து ஓமகுண்டத்தில் அக்னி கொழுந்துவிட்டெரிய, குற்றமற்ற மந்திரத்தோடு ஆகுதி கொடுத்தனர்.

இவ்வாறாக காரியம் நடந்துகொண்டிருக்கும் நாளில் குசலவர் ஸ்ரீராமரிடம் வந்துயாழை மீட்டிக் கானம்பாட, அவர் ஜானகிபெற்ற பாலர்களென்று தெரிந்து அப்புதல்வர்களைத் தோளாரத்தழுவினார். பிறகு இரகுநாதர் யாவருக்கும் விடை கொடுத்துவிட்டு ஸீதையின் கற்புக்கு அருந்ததி கற்புதோற்கு மென்பது யானறிந்ததாயினும், லங்கையில் முன்பு அக்னியில் மூழ்கி யமரர் காண எழுந்ததைப் போலும் இந்நரர்கள் காணக் காட்டுவேனென்று கூறி, வான்மீகி முனிவருக்கு ஸீதையுடன் வரும்படி, தூதனை யனுப்பித் தனது கோயில் வந்து சேர்ந்தார்.

வான்மீகி முனிவர், ஸீதையை யழைத்துக்கொண்டு ஸ்ரீராமர் வாழிடம் வந்து தெரிவிக்க, அதை யுணர்ந்த வீரர் எதிர்கொண்டு வந்து முனிவரை யடிவணங்கி யுபசரித்து அழைத்துச் சென்று ஓர் ஆசனத்திருத்தித் தானும் அரியாசனத்தின் மீதிருந்தனர். ஸீதாதேவி வாடிய முகத்தோடு மற்றொன்றையும் பாராது பூமிதேவியை நோக்கி நின்றனள். அக்காலை முனிவர், இரகுநாதரைப் பார்த்து, "ஓ ராஜனே! ஸீதையின் கற்பு நானறிவேன். அவள்மீது மாசுகூறுவோர் நரகத்தை யடைவார்" என்று கூறினார். ஸ்ரீராமர், "ஓ தவநிதியே! தாம் கூறிய விஷயத்தை வானவரும், யானும் முன்னமே யறிவோம். ஆயினும், இந்நகரத்துள்ளோர் தெரிந்துகொள்ளல்வேண்டும்" என்று செப்பினார். இரகுநாதன் கூறிய மொழியைக்கேட்ட மைதிலி மனமுருகினவளாகி, "பலவாறு விரித்துக் கூறில். என்ன பிரயோஜனம்? வாயிலிட்ட நஞ்சு விழுங்காவிடி லுயிர்க்குக் கேட்டை விளைவிக்குமோ? எனது நாயகனே பழிகூறலாயினார். அச்சொல்

பிற்பட என் நெஞ்சினைப்பிளந்து காட்டுவேன்" என்று கடுமையாகக் கூறினள். அதைக்கேட்ட முனிவர் "ஸீதாய்! கோபியாதே; ஐய னுரைப்படி * யையந்தீர்" என்றுரைத்தார். உடனே ஜானகி கமண்ட லத்திலிருந்த ஜலத்தை யெடுத்து ஆசமனஞ்செய்து தரையிற்புரோட் சித்து பூமிதேவியைப் பார்த்து, ஓ என்னையீன்ற தாயே, அருந்ததி கற்பும் என்கற்பும் ஒன்றெனில், இந்நிலம் பிளக்க! என்றுரைத் தாள். பூமிதேவி யுடனே பூமியைப் பிளவுபடச்செய்து,அதினின்று ஓர் பெண்ணுருவாகி வந்து சீதையைக் கட்டித்தழுவிப் பாதாள லோகமுங் கிழிய வழைத்துச் சென்றனள். என்னிடம் யாதொரு குற்றமுமில்லை யென்று காட்டப் பூமியுள் மறைந்த ஜானகியின் செயல் இன்ன தென்று அறியாது மயங்க விடுத்துச் சென்ற கற்பிற் சிறந்தவள் போன வழியைக் காணாமல், கமலக்கண்ணன், பூதல மடந்தை மீது கோபமுற்று, இக்கடல் சூழ்ந்த வையகத்தை அக்கடல் சேறாகப்பாதலத்தழுத்துவேன் என்று சினத்தோடெழுந்தனன். அச் சமயம், செந்தாமரைப் புஷ்பத்தில்வசிக்கும் பிரமதேவன் ஆங்குவந்து தோன்றி ஸ்ரீராமரைக்கண்டு, செப்புதற்கரிய பெருந் தன்மைவாய்ந்த உமக்கு நான் சொல்லுவதென்னவிருக்கிறது. ஆயினும், உலகெலா மளித்துக் காக்கின்ற உமதுந்தியிற் பிறந்து, இப்பூமண்டலத்தை யான் சிருஷ்டித்து வருகிறேன். இதனை யில்வுலகம் உம்மிடமிருந்து வந்ததல்லவா? என்னாலாகப்பட்ட தென்று நினைக்கலாகுமா? முன்பு தேவர்கள், புலஸ்தியன் வழி வந்த இராவணனைக் கொல்லப் பிரார்த்தித்தார்கள். அதை முன்னிட்டு ஸ்ரீராமனாக மானுடவடிவ மெடுத்து, இவ்வயோத்தியிற் றோன்றினீர். உமக்கு உதவியாக இல க்ஷ்மியும் ஸீதையாக வந்து தோன்றினள். வந்த காரியம் முடிந்தது; அத்தேவி யிப்போது பூதலமார்க்கமாகத் தன்னிருப்பிடம் சென்றனள். மானுடவேடம் பூண்டதைக் கொண்டு பூமி தேவி யைக் கோபிப்பது தகுதியன்று என்று முன்னிகழ்ந்ததையெடுத்துக் கூறினர். பிரமனுரைத்த மொழியைக்கொண்டு, இரகுவீரன் சினமாறி ஜனகராஜன் பெற்ற ஸீதையால் பெறப்பட்ட புதல்வர்களாகிய குசல வர் இருவரையுந் தழுவி யழைத்துக் கொண்டு யாகசாலை சென்று விதிப்படி நூறு அஸ்வமேதயாகஞ் செய்து முடித்தனர்.

பிறகு, இளம்பிறையை யொத்த கோட்டினையுடைய யானையின் மீதேறி தம்பிகள், புதல்வர், விபீஷணாதி பூபாலர்,ஸுக்ரீவா, அனு

* ஐயம்—சந்தேகம்

மார் முதலினோர் சூழ, முனிவர்கள், அந்தணர்கள் ஆசிகூற, பல வாத்தியங்கள் முழங்க அயோத்திமாநகரம் வந்தெய்தினார். எப்போதும் சொரூபவிசாரணை செய்துகொண்டு தனிமையிலிருந்து எதிரிட்ட காரியங்களை நடத்திவந்தார்

இவ்விதம் சிலகாலங் கடந்தபின், ஒரு சமயம் இரகு வீரர் தனித்து தியானத்திலிருந் தெழுந்தபோது, உலகம் மூன்றையும் பெற்றவளைப் பிள்ளையாகப் பெற்ற கௌஸல்யை, தனது புதல்வனாகிய இராமர் பிரத்தியக்ஷ நாராயணன் என்றறிந்து, பக்தியுடன் அவரிடம் வந்து, "ஓ ராம! நீ உலகங்களுக்கு ஆதியானவன்; ஆதிமத்தி அந்தமில்லாதவன், பரமாத்மா, பூரணன், முன் செய்த புண்ணிய வசத்தினால்,என்னுடைய கருப்பத்தில் புத்திரனாக வந்தவதரித்தாய். ஓ இரகு சிரேஷ்ட! இப்போது எனக்கு அந்திய காலம் நேர்ந்திருக்கிறது. இன்னும், அஞ்ஞானத்தாலுண்டான ஸம்ஸாரபந்தம் நீங்கவில்லை. இப்பந்தம் நீங்க ஞானமுண்டாகும் மார்க்கத்தைச் சுருக்கமாக உபதேசம் செய்யவேண்டு" மென்று கேட்டாள்.

பந்தத்தில் நின்று நீங்கவேண்டு மென்ற கருத்துடன் கவலைப்படுகிற தாயைப்பார்த்து, ஸ்ரீராமர் "ஓ தாயே! மோக்ஷமடைய சாதனங்கள் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகமென மூன்றுவிதம். அவைகளில் பக்தியோகமே மிகச் சிறந்தது. என்னைப்பரமாத்மா வென்றறிந்து என்னிடம்—நிஷ்காமிய பலனைப் பக்தி பண்ணுகிறவன் மோக்ஷமடைகிறான். என்னுடைய நாம கீர்த்தனத்தாலும், கீர்த்தனம் செய்பவருடைய சேர்க்கையாலும், பக்தியோகம் விருத்தியாகும். வாயுவின் வழியே வாசனையானது எப்படி * கிராணேந்திரியத்தை யடைகிறதோ அதுபோல பக்திமார்க்கத்தால் என்னை வந்தடைகிறான். எல்லாப்பிராணிகளிடத்தும்நானே அந்தரியாமியாக வசிப்பவன். ஆகையால் எங்கும் வசிக்கும் என்னை விசுவாசிக்க வேண்டும். பக்தியோகத்தை நீ யனுஷ்டித்தால் பந்தம் நீங்கி மோக்ஷமடைவா" யென்று கூறினார்.

கௌஸல்யை ஸ்ரீராமனுடைய வார்த்தையைக் கேட்டு மனந்தெளிந்தவளாகி அவனையே மனதில் தியானித்துக் கொண்டிருந்து ஸ்தூல தேகத்தை விட்டு நீங்கிப் பரமபதத்தை யடைந்தாள்.

இரகு நந்தனர் தாய்க்குச் செய்யவேண்டிய கருமங்களை விதிப்

* கிராணம்— மூக்கு.

படி செய்து, பிண்டமும் போட்டு பூதானம் கோதான முதலிய தானங்களும் கொடுத்தார்.

சில நாட்கழிந்து, கைகேஸியும், அவ்வாறே ஸ்ரீராமனிடத்து பக்தி செலுத்தி ஸ்தூல தேகத்தை விடுத்து ஸ்வர்க்க லோகத்தை யடைந்தாள்.

இரகுநாதன் அத்தாய்க்கும் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்து முடித்தார்.

பிறகு ஸுமித்திரையும் ஸ்ரீராமனிடத்திலேயே மனதைச் செலுத்தின வளாகி, பூலோக வாழ்க்கையை நீத்து, ஸ்வர்க்க லோகத்தை யடைந்தாள்.

இரகுநந்தனர், அம்மாதாவுக்கும் செய்யவேண்டிய ஈமக்கிரிகைகளைச் செய்து முடித்து, யாகத்தை முன்னிட்டுவந்திருந்த, சத்துருக்னன், வீபிஷணன், ஸுக்ரீவன், அனுமார், குகன் முதலினோருக்கு ஆடை யாபரண முதலிய பரிசுகள் கொடுத்து விடை தந்தனுப்பிவிட்டு, மற்றிரு தம்பியருடனும், மந்திரி பிரதானிகளுடனும் அயோத்தியில் விற்றிருந்தார்.

## 8-வது சருக்கம்.

ஸ்ரீராமர், சத்துருக்னன் மதுரை நகரம் போனபின், இலக்ஷ்மணன், பரதனுடன் அயோத்தியில் வசித்துவரும் நாளில், பரதன் மாமனாகிய யுதாஜித்து மகாராஜன் குலகுருவான காசிபமுனிவர் இரகுவீரர் சபைக்கு வந்தார். அவர் அம்முனிவரைக் கண்டு விதிப்படி பூசித்து ஆசனத்திலிருத்தி, "ஓ முனீஸ்வரரே! தாங்கள் வந்த காரியம்" என்னவென்று விசாரித்தார். அம்முனிவர், "ஓ காகுஸ்த! உமது மாதுலன் வாழ்நாட்டைக் கந்தருவர் ஜெயித்து ஆண்டு வருகிறார்கள். அவர்களைத் தொலைத்து நீங்கள் ஆளவேண்டியது முறைமை யென்று தெரிவிக்க வந்தேன்" என்று கூறினார்.

அதைக்கேட்ட இரகுநாதர், பரதனை நோக்கி "ஓ இளவலே! நீயுனது குமாரர், புஷ்கரன், தக்ஷன் என்ற இருவரையும் அழைத்துக்கொண்டு சைனியங்களோடு கைகேய நாடு சென்று அந்நாட்டைக் கவர்ந்து வாழும் கந்தருவரை வதைத்து புஷ்கரன் தக்ஷன் என்ற இரு குமாரர்களுக்கும் அந்நாட்டைப்பிரித்துப் பட்டங்கட்டி

ஆண்டுவருபபடி திட்டஞ் செய்து வைத்து விட்டு உடனே யிவ் விடம் வா" என்று கட்டளை யிட்டார்.

அக்கட்டளை தலைமேற்கொண்டு பரதன் இரு குமாரர்களுட னும், ரத கஜ துரக பதாதிகளுடனும் சென்று, அங்கு வாழும் மூன்றுகோடி கந்தருவர்களையும் தனது வில்லினின்று புறப் படும் சரத்தினால், இடியுண்ட மரம்போல் வீழ்த்தி நாசப்படுத்தி, அந்நாட்டைத் தன்வசப்படுத்தி புஷ்கராவதி, தக்ஷசிலாச்சயம் என்னும் இரண்டு நகரங்களாக ஏற்படுத்தி புஷ்கராவதி நக ரத்தைப் புஷ்கரனுக்கும், தக்ஷசிலாசசய நகரத்தைத் தக்ஷனுக் கும் கொடுத்து, அவர்களுக்குப் பட்டாபிஷேகமும் செய்வித்து, சைனியங்களையும் பிரித்துக் கொடுத்து அரசாட்சி புரியும்படி யேற்பாடு செய்து, அக்குமரர்களிருவரையும் ஆங்கு வசிக்கும் படிச் செய்துவிட்டுத் திரும்பி அயோத்திவந்து, தமையன் திருவடி யில் நமஸ்கரித்து, கைகேயநாட்டுக்குச் சென்று, கந்தருவர்களை வதம் செய்து குமாரர் இருவருக்கும் அந்நாட்டைப் பிரித்துக் கொடுத்து ஆளும்படிச் செய்துவிட்டு வந்த சங்கதியைத் தெரி வித்தான்.

அதுகேட்டு இரகுநந்தனர், இலக்ஷ்மணனைப் பார்த்து ஆதர வுடன் "இலக்ஷ்மண! அங்கதன், சந்திரகேது என்ற உனது இரண்டு குமாரர்களையும் அழைத்துக்கொண்டு மேற்றிசை சென்று அங்குள்ள பொருள்களை அபகரிக்கும் துஷ்டர்களாகிய மல்லர்களை ஜெயித்து அந் நாட்டை யிரண்டாகப் பிரித்து, தாரகாபதியென்றும் சந்திரகாந்தை யென்றும் பெயர்பூண்ட இரண்டு நகரமாக்கி, அவைகளில் தாரகா பதியை அங்கதனுக்கும், சந்திரகாந்த நகரைச் சந்திரகேதுவுக்கும் கொடுத்து, பட்டாபிஷேகமும் செய்துவைத்து வாவென்று ஆஞ்ஞை செய்தார்.

அவ்வுரையைக் கேட்டு இலக்ஷ்மணன் தன்னிரு பிள்ளைகளுட னும் சைனியங்களுடனும் மேற்றிசை சென்று, அங்குள்ள கூட நடையுள்ளவர்களை வாட்டி, அந்நாட்டை தன்வசமாக்கி அதையிரண்டு பங்குபடுத்தி, தாரகாபதி, சந்திரகாந்தை யென்ற நாமமிட்டு, ஒவ் வொரு நகரிலும், கோட்டை, அரண்மனை, வீதிகள் முதலியன வேற் படுத்தி, தாரகாபதிக்கு அங்கதனையும், சந்திரகாந்தைக்குச் சந்திர கேதுவையும அரசனாக நியமித்துப் பட்டாபிஷேகஞ் சூட்டி, சைனி யங்களையும், மந்திரி முதலியவர்களையும் நிலைநாட்டி, இராஜரீகம்

நடத்தும் வழியையுங் காட்டி, நீதிதவறாது அரசுபுரிய வைத்து விட்டு, அயோத்திக்கு வந்து இரகுநாதனைக்கண்டு சாஷ்டாங்கமாகத் தண்டம் ஸமர்ப்பித்து இரண்டு குமாரர்களையும் பூமிபரிபாலனஞ் செய்ய நியமித்ததை விண்ணப்பம் செய்தனன்.

பிறகு ஸ்ரீராமர் பிராதாக்களான பரதன், இலக்ஷ்மணன் இவர்களுடன் அயோத்திமாநகரத்தில் நான்கு வருஷம் அரசாட்சி புரிந்து வந்தார். அதன் பின்னர் காலன் ரிஷிவேடம் பூண்டு தர்மசிந்தனையுடைய ஸ்ரீராமரைப்பார்ப்பதை முன்னிட்டு, இலக்ஷ்மணனிடம் வந்து, "ஓ ஸௌமித்திரியே! நான் ரிஷிசிரேஷ்டரின் தூதன், அவர் கூறிய சில அந்தரங்கமான விஷயத்தை புருஷோத்தமரான ஸ்ரீராமரிடத்தில் தெரிவிக்க வேண்டி யிவ்விடம் வந்திருக்கிறேன், இவ்விஷயத்தை அப்பிரபுவின்பால் தெரிவிக்க வேண்டும்" என்று கூறினன்.

அதை யுணர்ந்த இலக்ஷ்மணன் அவ்வாறே இரகுநந்தனரிடம் சென்று, ஒரு முனிவர் தங்களைப் பார்க்க விரும்பி வந்திருக்கிறார் என்று செப்ப, அண்ணலும் தடையின்றி யவரை வரவழையென்று கூற, இலக்ஷ்மணனும் நெய்யைக்கொண்டு ஹோமம் செய்யப்பட்ட அக்னி போன்ற தேஜஸ்ஸோடு பிரகாசிக்கும அம்முனி வேஷம் பூண்ட மஹானை யழைத்துச் சென்றான்.

அம்முனிவர் காந்தியோடு விளங்கும் இரகுநந்தனரிடம் வந்து, இனிய குரலினால் ஓ இராகவ விருத்தியடைய வேண்டுமென்றார்.

இராமர், அம்முனிவர்க்கு விதிப்படி பூஜைசெய்து உபசரித்து ஓர் திவ்வியாசனத்தருத்திய பின்னர், தானும் ஓர் ஆசனத்தமர்ந்து அம்முனிவரை நோக்கி என்னிடம் வந்த காரியம் யாதென வினவினார்.

அம்முனிவர், "ஓ புருஷோத்தம! நான் உத்தேசித்து வந்த விஷயம், மிக்க ரகசிய மானது, நாமிருவருந் தனிமையிலிருந்து வசனிக்கக் கூடியது. அச்சமயம் அங்கு ஒருவரும் பிரவேசிக்கக் கூடாது. அப்படி யாராவது ஒருவர் அவிடம் வந்தால், வந்தவர் எவ்வித தாட்சணியத்துக்கு உடன்பட்டவராயினும் யோசியாமல் அவரைத் தியாகம் செய்யவேண்டும். நான் வசனிக்கும் விஷயம், மற்றொருவருக்குச் சொல்லவுங் கூடாது. அவர்களாய் வந்து கேட்கவுங் கூடாது. இதில் எவ்வளவுந் தவறக்கூடாது" என்று கேட்டுக் கொண்டார்.

ஸ்ரீராமர், நான் அவ்விதஞ் செய்வதில் தடையில்லை யென்று பிரதிஞ்ஞை செய்துகொடுத்து, இலக்ஷ்மணனை நோக்கி, "ஓ இளைஞ! நீ வாசற்படியிலிரு. இங்கு ஒருவரும் வரக்கூடாது. என் கட்டளை மீறி யாராவது உள்ளே இம்முனிவருடன் பேசிக்கொண்டிருக்கும் போது வந்தால் அவர்கள் எப்படிப்பட்டவராயினும் மன்னிப்பின் றிக் கட்டாயம் என் சமுகம் விட்டு நீங்கும்படி கட்டளையிடுவேன். ஜாக்கிரதையாக இரு" என்று கூறி, முனிவரையழைத்து உள்ளே சென்று, "ஓ முனிவரே தாம் யார்? உம்மை யனுப்பினது எதற் காக? அனுப்பினவர் யாவர்? குறித்த காரியமென்ன" என்று கேட் டார்?

முனிவர் ஸ்ரீராமரை நோக்கி, "ஓ பிரபுவே! நான் சகல ஜீவ ராசியும் பாசத்தாற் கட்டிக்கொண்டு போகும் நமன். இவ்வுலக மனைத்தையும் படைக்கும் பிரமதேவர் என்னை யனுப்பினார். அவர் என்னை யழைத்து, மூவுலகத்துக்கும் நாதனாகிய இலக்ஷ்மி நாதன் தனது தேவியோடு, தேவர்கள் பட்ட அரிய துயரத்தைத் தீர்க் கிறேனென்று வாக்களித்து, திரிபுர தகனம் செய்த பரமசிவனிடத் தில் வரம்பெற்று, மூன்று உலகத்தையும் ஜெயித்து விண்ணவர் களுக்கும் மண்ணவர்களுக்கும் சகிக்க வொண்ணாத துன்பத்தை யுண்டாக்கின கொடிய மிண்டனாகிய தசகண்டனை வதைசெய்ய வேண்டி பூலோகவாசியாகிய இரகு வம்சத்தில் தவத்தால் மேன்மை பெற்ற தசரதச் சக்கரவர்த்தியின் திருமகனாக மானுடவேடம் பூண்டு திருவவதாரம் செய்திருக்கிற ஸ்ரீராமரிடத்திற்சென்று, இராவணன் முதலிய துஷ்ட நிக்கிரஹத்துக்கும், விபீஷணன், ஸுக்ரீவன், அனு மான் முதலிய சிஷ்டபரிபாலனத்துக்கும், பூலோகத்திற் சென்று பதினோராயிரம் வருடம் வசிப்பதாக வாக்களித்தபடி, அவர் கோரிச் சென்ற காரியமும் முடிவுபெற்று, அவர் குறித்த நாள் முடிந்த விப ரத்தையும் அவருக்குணர்த்தி இனி வைகுண்டம் சேர்ந்து நம்மையுந் தேவர்களையும் இரக்ஷிக்கவேண்டியது அவசியமென்று தெரிவித்துவர் என்று கூறினார். நான் அதைக்கேட்டு இவ்விடம் வந்து அவ்விஷயந் தெரிவிக்கலானேன்" என்று செப்பினான்.

காலன் கூறிய வார்த்தையை இராமன் கேட்டு மந்தஹாஸஞ் செய்து, சகல பிராணியையும் நாசம் செய்பவனைப்பார்த்து, "ஓ கால! நீ கூறியது எனக்கு மிகுந்த சந்துஷ்டியை யுண்டாக்கியது. என்

னுடைய அபிப்பிராயமும் பிரமதேவன் கூறியபடியே. நான் வைகுண்டம் போய்ச்சேருகிறேன்" என்றார்.

இவ்விதம் இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் தவவல்லமை பெற்ற அத்திரிமுனிவரின் குமாரரான துர்வாசமுனிவர் இலக்ஷ்மணரிடம் வந்து, "ஓ இலக்ஷ்மணா! இந்த க்ஷணமே ஸ்ரீராமரிடத்தில் அதி முக்கியமான விஷயம் ஒன்று நான் தெரிவிக்கவேண்டியிருக்கிறது. ஆகையால் தாமதமின்றி இரகுநாதனை நான் பார்க்கவேண்டும்" என்று கூறினார்.

அவ்வார்த்தையைக்கேட்ட இலக்ஷ்மணன் "ஓ முனிசிரேஷ்டரே! அப்பிரபு வேறு காரியமாக இருப்பதால் கொஞ்சகாலம் தாமசப்படும். தங்களுக்கு ஆகவேண்டியதைக் கூறினால், அதை நானே முடித்துத் தருகிறேன்" என்று செப்பினான்.

அம்முனிவர் அதைக்கேட்டு கோபங்கொண்டு "ஓ இலக்ஷ்மணா! நீ இப்பொழுதே இராமனை நான் பார்க்கும்படிச் செய்யாவிடில் அவனையும், அவன் குலத்தையும், தேசத்தையும் நாசமடையச் சாபமிடுவேன்" என்று கடுமையாகச் சொன்னார்.

இலக்ஷ்மணன் அம்முனிவர் கோபத்துடன் மொழிந்த வார்த்தையின் கருத்தை நினைத்து, நான் இராமரிடத்தில் சென்றால் நம்மோடு போகும். இல்லாவிடில் நம்முடைய பிராதாவாகிய கமலக் கண்ணன், அவர் வம்சத்தோடு நாசமடைகிறார். ஆகையால் நீர்மேற்குமிழி போன்ற என் காயத்தைப் போக்குவதே தகுதி யெனமதித்து கார்வண்ணனிடம் சென்று துர்வாச முனிவர் கூறியதைத் தெரிவித்தான்.

தாசரதி, சௌமித்திரி சொன்னதைக்கேட்டு, காலனை அனுப்பிவிட்டு விரைவில் வெளிவந்து அத்திரி முனிவரின் குமாரரைப்பார்த்து, நமஸ்கரித்து விதிப்படி பூசித்து உபசரித்து "ஓ முனி சிரேஷ்டரே! யான் செய்யவேண்டிய காரியம் யாது" என வினவினார்.

துர்வாஸ முனிவர், ஸ்ரீராமனை ஆசீர்வதித்து "ஓ இராம! நான் ஆயிரம் வருஷங்களாக ஆகாரமின்றி உபவாஸமிருந்து இன்றைய தினம் பவ்ரணை செய்யவேண்டிய காலமானதால், அதை யுத்தேசித்து இவ்விடம் வந்தேன்" என்று தெரிவித்தார்.

இரகுநாதன்உடனே மடைத்தொழிலோர்களைவரவழைத்து அறுசுவையோடும் கூடிய அமுது தயார் செய்து முனிவர்க்குப் படைக்

கும்படி திட்டம் செய்தார். துர்வாஸமுனிவர் அமுதம் போன்ற அன்னத்தையும், அறுசுவைபோடுங்கூடியகறிவர்க்கங்களையும்பக்ஷண வகைகளையும் மனங்களிக்கப் புசித்துப் பவரணை முடித்துத் தன்னாச் சிரமம் சென்றார். பிறகு ஸ்ரீராமன், மறலி கேட்டுக்கொண்டதையும், அதற்குத்தான் பிரதிஞ்ஞைசெய்து கொடுத்ததையும் அதற்கு இலக்காக இலக்ஷ்மணன் ஏற்பட்டதையும் நினைத்து மனமுருகி ஐம்புலனு மொடுங்கி மெய்தளர்ந்து நாவுலர்ந்து துக்கமடைந்து அறிவழிந்து யாதொன்றும் தோன்றாதவராய், ஸ்தம்பம்போ லசைவற்றிருந்து கொஞ்சநேரம் பொறுத்துத் தனக்குள் தானே நிதானித்து இலக்ஷ்மணன் நம் சமூகத்தைவிட்டு விலக்கப்படுவானாயின் வதமடைந்தானென்றே நிர்மானித்தவராகித் தலைகுனிந்து ஒன்றும் வசனியாமல் மௌனமாயிருந்தார்.

அப்போது ஸௌமித்திரி, துக்கத்தை யடைந்து மௌனமாக விருந்து ஆலோசனை செய்யும் ஸ்ரீராமரைப் பார்த்து, "ஓ ஸத்திய ஸந்தன! என் விஷயத்திலுண்டா யிருக்கும் மனக்குழப்பத்தை அடியோடு விட்டுவிட வேண்டும். முந்தியே காலகதி இவ்விதமென்று ஏற்பட்டிருக்கு மல்லவா? ஓ பிரபுவே! தாங்களோ பிரதிஞ்ஞையைத் தவறி நடந்தால் உலகம் பொறுக்காது. அபவாதம் மேலிடும். அதற்கு நானுட்படுவேனாகில் எனக்கு நிச்சயமாக நரக மேற்படும். ஓ அண்ணலே! என்னிடம் தங்களுக்கு விசுவாஸ மிருப்பது உண்மையானால் என்மேல் கிருபைகூர்ந்து பலவாறு யோசியாமல் என்னைத் தியாகம் செய்துவிடுங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

பக்தவத்ஸலனாகிய ஸ்ரீராமன் அன்புக்கினியானும், அருமைத் தோழனும், உரிமைத் தம்பியுமாகிய இலக்ஷ்மணன் பரிவுடன் கூறிய நெறி பிறழாத மொழியைக்கேட்டு, சலனமடைந்து, ஸமயோசிதமான புத்தி கூறும் அறிவிற் சிறந்த மந்திரி மார்களையும், நகரமாக்களையும், திரிகாலமு முணர்ந்த தனது குலகுருவாகிய வசிஷ்ட மஹாரிஷியையும் வரவழைத்து குருவைவிதிப்படி பூசித்து ஆசனங் கொடுத்து, அதின்மீது வீற்றிருக்கச்செய்து, அமைச்சரையும் இனிய மொழிகூறி யருகிருத்தி, நகரமாந்தர்களையும் அவரவர்கட்குத் தக்கவாறு இருக்கும்படி செய்து, அவர்களை நோக்கி, சடைமுடியைத் தரித்த ஓர் முனிவர் தன்பால் வந்து, இரகசியமான விஷயம் பேச வேண்டியதும், அச்சமயம் ஒருவரும் தன்பால் வரக்கூடாதென்று

வரங்கேட்டதும், அதற்குத் தானிசைந்து வாக்குறுதியளித்ததும், அம்முனிவர் பேசிக்கொண்டிருக்கும்போது துர்வாஸமுனிவர் அவ்விடம் மேவியதும் அதை யுணர்த்தத் தன்பால் இலக்ஷ்மணன் வந்ததும், ஆதியோடந்தமாகக் கூறி யதனால் விளைந்திருக்கும் கேட்டையும் புகன்றார்.

இவையனைத்துங் கேட்ட வசிஷ்டர், இரகுகுல சிரேஷ்டனை நோக்கி, "ஓ தருமமூர்த்தி! உம் தந்தையாகிய தசரதச்சக்கரவர்த்தி ஓர் சமயம் தன்னிடம் வந்த இந்த அத்திரிகுமாரனாகிய தூர்வாசரிஷியை யடிபணிந்தேத்தி தனக்குப் புத்திரனில்லை யென்ற கவலை வாதிக்கிறதே இதை நிவர்த்திக்க வழியில்லையா வென்று கேட்டார். அம்முனிவர் உமது தந்தையை நோக்கி, புத்திரகாமேஷ்டியாகம் புரிவாயானால், அதனின்று மேம்பாடுடைய நான்கு புத்திரர்களைப் பெறுவாய், அந்நால்வரில் ஒருவன் தன் னுருயிர்பிரிவானாகில், மற்ற மூவரும் முடிவுபெறுவார்களென்று கூறினார். அதை யானறிவேன். ஆகையால் ஆதியிலேற்பட்ட சங்கற்பத்தை மாற்றுவது முடியாத காரியமாகும். தாஸனிற்சிறந்த இலக்ஷ்மணனைப் பற்றி யிரங்கவேண்டாம். நீர் செய்த பிரதிஞ்ஞையைத் தவிர்த்து நடந்தால் தர்ம வரம்பு கெட்டுப்போகும். தர்மங் கெட்டால் மூன்றுலகங்களும் நாசமடையும். நீர் எல்லா வுலகங்களையுங் காத்தளிப்பவர். இலக்ஷ்மணன் ஒருவனை முன்னிட்டு உலகம் யாவற்றையும் கெடுக்க வேண்டாம். உலகங்களுக்குரிய தர்மபரிபாலனத்தை யுத்தேசித்து, இலக்ஷ்மணனைத் தியாகஞ் செய்வதே மிகச்சிறந்ததாகும்'' என்று கூறினார்.

இலக்ஷ்மணன், தமையனைப்பார்த்து, "ஓ பிரபுவே! நம் குலத்துக்குக் குருவாகிய வசிஷ்டர் பகர்ந்ததை யறிவீர்களானதால், அதை யநுசரித்து எனக்கு விடைதரவேணு" மென்று ஸ்ரீராமன் உபய சரணாரவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்து நின்றான்.

ஸ்ரீராமர், தனது அருமைத் தம்பியின் பிரிவினால், அம்புயக் கண்ணருவி பூமியிற் பாய, "ஓ இலக்ஷ்மணா! உன்னிஷ்டம் போறச் செல்லலாம். தருமத்திற்கு நாசமுண்டாகக் கூடாது" என்று கூறினார்.

இலக்ஷ்மணன் தனது பிராதாவின் கட்டளையைச் சிரமேல் வகித்து, இராமரையும் குருவையும் வணங்கி உடலைப் பிரிந்தேகும் உயிரை யொத்துத் தன்னாண்மனை நாடிச் சென்றான்.

இராமரும் தனது தந்தை கைகேயிக்குக் கொடுத்த வரத்தை நிலை நாட்டத் தான் காட்டுக்கேகும்போது அத்தந்தை யெத்தன்மை யடைந்தனரோ அத்தன்மையனாய் விளங்கினார்.

நகர மாக்களிற் சிலர் தம்பியுள்ளான் படைக்கஞ்சான் என்ற பழமொழிக் கேற்ப இராக்ஷசர் யுத்தத்தில் மனந்தளராது நிற்க இந்திரஜித்தை வதஞ்செய்த தம்பி சென்ற பின் நம்மரசன் உயிர் தரிப்பாரோ வென்று கதறினார்கள்.

பின்னும் சிலர், நம்தேசத்தை யாண்டுவந்த இரகு வமிசத்தரசர்கள், வரம் கொடுத்து முயிர் துறத்தல் அவர்கள் குலத்தினதியல்போ, மறவியும் இவர்களாயுளைக் கொள்ளை கொள்வாரோ, நாமும் இத்தகைய துன்பத்தினின்று எப்போதுதான் நீங்குவோமோ, இலக்ஷ்மணனை நீத்து இவ்விராஜ்யம் ஸுகமடையுமோ, இதற்காகத்தான் நா முடலெடுத்திருந்தோமோ வென்றும் இன்னும் பலவாறாகவுங் கூறி துக்க சாகரத்தில் மூழ்கினார்கள்.

அரண்மனைக்குச் சென்ற இலக்ஷ்மணன் அதைவிட்டுப் புறப்பட்டு, மாடமாளிகை கூடகோபுரம் நிறைந்த பட்டணத்தைக் கடந்து, நவரத்னங்களையும் வரன்றிச் செல்கின்ற சரயுநதிக்கரையை யடைந்து, மாசற்ற குணத்தினையுடைய அயோத்திமா நகரமாக்கள் துயருழக்கவும், தாசரதி தம் பின்னவன் பிரிவிற் காற்றாது வருந்தி மதியிழக்கவும், அந்நதியில் மூழ்கி, மும்மலத்தாற் கட்டுண்ட பிறவிக் கடலினின்று கரையேற, அவ்வாற்றின் கரையேறித் தலைதுவட்டி வஸ்திர முடுத்தி, ஆசமனமாதி காநியாச அங்கநியாச கிரிகைகள் முடித்து, நெற்றியிற் றிருமண் தரித்து, வடதிசை நோக்கிப் பத்மாஸனத் தமர்ந்து, தனக்கு ஞானோபதேசஞ் செய்த குருமூர்த்தியாகிய ஸ்ரீராமரைத் தியானித்து, ஐம்புலனையும் அகத்தடக்கி, மனதைப் * பன்னிரண்டு அக்ஷரத்தோடு கூடிய வாஸுதேவ மந்திரத்தை ஜெபிக்கும் நிலையில் நிறுத்தி, இடைகலை, பிங்கலை யென்னு மிரண்டு நாடிகளையும் அடைத்து, சுழிமுனை மார்க்கத்தில் விடுத்து, பிரம்மரந்திரம் வரை வாசியையேற்றி யொடுக்கி, புருவமத்தியிற் சோதி சொரூபமாய் விளங்கும் பரப்பிரம்ம சொரூபத்தைத் தானாகவே பாவித்துத் ததாத்கார நிலைமேவி யோகத்திலிருந்தான்.

அப்போது தேவர் கந்தருவர் முதலிய தேவலோக வாசிகள்

* பன்னிரண்டு அட்சரமாவது :—ஓம் நமோ பகவதே வாஸுதேவாய.

இலக்ஷ்மணன் மீது புஷ்பமாரி பொழிந்தார்கள்; தங்களுக்கு இடுக்கண் செய்த இந்திரஜித்தை வதைசெய்த ஸௌமித்திரியை மனதார வாழ்த்தினார்கள்.

தேவர்களுக்கெல்லாம் நாயகனாகிய ஆயிரங் கண்ணன், தனது பகைவை வேரறுத்துத் தன்னை அரசுபுரியும்படி நிலை நிறுத்திய ஸௌமித்திரை குமாரனாகிய இலக்ஷ்மணன், உலக வாழ்க்கையை வெறுத்து வைகுண்டமடையக் கருதி, ஜிதேந்திரியனாக விருந்து யோகம் புரிவதைக் கண்ணுற்று, தேவர்கள் புடைசூழக் கந்தருவர்கள் பாட, அரம்பை முதலிய தேவஸ்திரீகள் நிருத்தனமாட, ஜோதிமயமாய் விளங்கும் விமானத்தின் மீதேறி, இலக்ஷ்மணனிடம் வந்து, ஓ ஜெயவீர! எழுந்தருள வேண்டுமென்று முகமலர்ச்சியுடன் இனிய வார்த்தை கூறி, நிஷ்டையிலிருந்த இலக்ஷ்மணனை ஸ்தூலதேகத்துடன் விமானத்தின் மீதேற்றி சுவர்க்கலோகம் கொண்டுபோய்ச் சேர்த்தான்.

பிறகு தேவசிரேஷ்டர்கள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சத்தில் நாலில் ஒரு பாகமாகிய இலக்ஷ்மணன் வந்ததைப் பார்த்துப் புகழ்ந்தார்கள்.

பிரமதேவர் ஸித்தலோகவாசிகளுடன் ஆதிசேஷ சொரூபியாகிய இலக்ஷ்மணனைப் பார்க்க சொர்க்கலோகம் வந்து அவரைப் புகழ்ந்து ஆசீர்வதிக்கச் செய்தார்.



## 9 வது சருக்கம்.

இராமர், தனதாருயிர்போன்ற தம்பி இலக்ஷ்மணன் தன்னை விட்டுப் பிரிந்துபோனபிறகு சபையை நோக்கிப் பார்த்தார் தனக் கிளையவனைக் காணாது, பதைபதைத்து உள்ளம் மெலிவுற்று தேகமுழுமையும் வியர்த்து, "ஓ பிராதா! நீண்டகாலம் கண்ணிமை போலக் காத்த நீ யிப்போது என்னைக் கைவிட்டு எங்கு சென்றாய், மாயவித்தையிற் சிறந்த மேகநாதனை, காற்றிற் சுழலும் பஞ்செனச்சிதற வடித்து, ஓரம்பினால் அவன் உயிரையுண்டனையே. நானென்செய்வேன்" என்று வாய்விட்டுக் கதறினார். ஒருவாறு தேறினார். திரும்பவும் கலைத்தார். மற்றொரு தம்பியாகிய பரதனை நோக்கி, "என்னருமைத் துணைவனே! உலகத்தி லுயிர் போனபின்

உடல்தனித்திருப்பதுமுண்டோ? என்னுயிர்போன்ற இலக்ஷ்மணன் சென்றபின் நான் உயிர்தரித்திருப்பேனோ? இந்த இராஜ்ய பரிபாலனத்தை நீ ஒப்புக்கொள். ஓ குலகுருவாகிய வசிஷ்ட மஹரிஷியே! இப்போது பரதனுக்குப்பட்டாபிஷேகம் சூட்டுங்கள். நான் என்தம்பி இலக்ஷ்மணன் சென்ற இடத்துக்குப் போகிறேன்" என்று கரைந்த நெஞ்சுடையவராயும் மெலிந்த குரலுடையவராயும் மிகுந்த இரக்கத்துடனும் கூறினார்.

இரகுநந்தனர் கூறிய வார்த்தையைக் கேட்ட நகரமாக்கள், சரம்பட்ட மான் போலத் திகைத்து பூமியில் வீழ்ந்தார்கள்.

தர்மசொரூபனாகிய பரதன் தனக்கு முன்னோனை மும்முறை வலம்வந்து எழுந்து கைகூப்பி நின்று "ஓ அண்ணலே! தாங்கள் பரிபாலித்து வந்த இந்த இராஜ்யத்தை நானாள்வது. இப்பூமண்டலத்தைத் தாங்குகின்ற ஆதிசேடனை நீக்கி ஓர் மண்ணுளிப் பாம்பை நோக்கி இப்பூமியைத் தாங்கெனக் கூறுவதை ஒக்கும். மேலும் ஆமையானது மலையை நிமிர்க்குமா? மின் மினியானது சூரியகிரணத்தை ஒக்குமா? இது நிற்க, தாங்கள் அரிய தம்பியாகிய இலக்ஷ்மணனைப் பிரிந்து உயிர் தரித்திரேன், நீ புவனை பொறுப்புக் கொள்ளென்று கூறினீர்களே, நான்மட்டும் தங்களைப் பிரிந்து இம்மண்ணுலகையாள உயிர் தரிப்பேனோ? சத்துருக்னனும் இதற்கிசைவானோ? இது கலியுகமா? ஓ பிரபுவே நான் சத்தியமாகச் சொல்லுகிறேன். தங்களுடைய சேவையைத் தவிர, இப்பூமண்டலத்தை யாளுவதிலாவது, ஸ்வர்க்கத்திலிருப்பதிலாவது எனக்கு விருப்பமில்லை. தாங்கள் ஆண்ட பூமியை தங்களுக்கொத்த வீரர்களாகிய குசலவர்களே இராஜ்ய பரிபாலனஞ் செய்யவேண்டும். அவர்களே செய்யத் தக்கவர்கள். ஓ மன்னர் மன்னனே! தக்ஷிண கோசலத்தைக் குசனுக்கும், உத்தர கோசலத்தை லவனுக்குமாக முடிசூட்டி வையுங்கள். அவர்களே இந்நாட்டை யாண்டு வரவேண்டியது. சத்துருக்னனை யழைக்கத் தூதர்களை அனுப்புங்கள். நாம் ஸ்வர்க்கத்துக்குச் செல்லுவோம். இதுவே அரசநீதியாகும், தர்மமும் இதுவே யென்று தெரிவித்தான்.

பின்னவன் இரக்கத்தோடும் நீதியோடுங் கூடிய வார்த்தையை அயோத்தி மன்னவன் கேட்டு, அதற்கு மனமிசைந்து தக்ஷிண கோசலநாட்டிற் குசஸ்வதி யென்னோர் பட்டணமியற்றி, எண்ணாயிரம் ரதங்கள், ஆயிரம் யானைகள், அறுபதினாயிரம் குதிரைகள், லக்ஷம் பதாதிகள் கொடுத்து, கணக்கற்ற ரத்னங்களும், மிகுந்த

பொருள்களும் சேர்ப்பித்து நல்ல சுபமுகூர்த்தத்தில் அப்பட்டணத்துக்கு குசனை மன்னனாக நியமித்துப் பட்டாபிஷேகம் செய்தனுப்பினர். பிறகு உத்தர கோசலநாட்டிற் சிரப்பதி யென்னும் பட்டணமியற்றி மேற்குறித்தவாறே ரத கெஜ துரக பதாதிகளும், ரத்னம், பொன், ஆடை முதலிய பொருள்களும் சேர்ப்பித்து முகூர்த்தத்திலேயே அப்பட்டணத்துக்கு லவனை மன்னவனாக்கிப் படுத்திப் பட்டாபிஷேகம் செய்வித்தனுப்பினர். அவ்விரண்டு குமாரர்களும் ஸ்ரீராமன் பாதாரவிந்தங்களில் நமஸ்கரித்து விடைபெற்று மங்களகரமாகத் தேவதுந்துமி முழங்கப் பல வாத்திய கோஷமியங்கச் சந்துஷ்டியுடன் அந்நகரத்தை யாளச் சென்றார்கள்

அதன் பின்னர் அயோத்திமாநகர வாசிகள் குசலவர்கள் பட்டமாளச்சென்றதை நோக்கி தங்களுக்கும் ஒருக்கால் இராமனுடைய பிரிவுவருமோ வென்று பயந்து மூர்ச்சித்துக் கீழே விழுந்தார்கள்.

அதுகண்ட வசிஷ்ட பகவான் ஸ்ரீராமனை நோக்கி, "அப்பனே! பூமியில் தன்னை மறந்து கிடக்கும் இப்பிரஜைகளைப் பார். இவர்களது பக்தியையும், திடபுத்தியையும் அநுசரித்து, இவர்களுடைய அபிப்பிராயத்தைப் பூர்த்தி செய்வது உன்னுடைய கருணைக்கு உகந்தது" என்று கூறினர்.

இரகுநாதன் குருவினது அபிப்பிராயத்தை யறிந்து அப்பிரஜைகளை நோக்கி, நீங்கள் விரும்பியது யாதெனக் கேட்டார்?

நகர வாசிகள் தசரத குமாரன் வினவிய வார்த்தையாகிய அமுதத்தை யுண்டு களை நீங்கி யெழுந்து, தாசரதியின் இரண்டு திவ்விய சரணாரவிந்தங்களில் அடியற்ற மரம் போல் விழுந்து சேவித்து, எழுந்து கைகூப்பி நின்று, கனிந்த பக்தியுடன் இரகு சிரேஷ்டனைப் பார்த்து, "ஓ கிருபா மூர்த்தி! தங்களிடம் வைத்த பக்தியைத் தவிர நாங்கள் யாதொரு காரியமுஞ் செய்தவர்களல்ல; தங்களை விட்டுப் பிரிந்திருக்க எங்கள் மனமிசைபவில்லை. ஆகையால் தாங்கள் செல்லும் இடம் வனமானாலும், நகரமானாலும், ஸ்வர்க்கமானாலும் அங்கு எங்கள் புத்திரமித்திர களத்திராதிகளுடன் வருகிறோம் எங்களுக்கு முக்கியமான பிரீதி. இது தங்களுக்கு அநுகூலமா மம். ஆகையால் எங்கள் மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்வது தங்களுடைய கருணைக்கு மேன்மையாகும்" என்று தெரிவித்துக்கொண்டார்கள்.

அவ்வார்த்தையைக் கேட்டு இரகு குல நாதன், அவர்களுடைய பக்தியை நோக்கிச் சந்தோஷித்து, விபீஷணனைப் பார்த்து, ஆதரவுடன் "ஓ விபீஷண! உன்னை யிப்பூமியுள்ளவும் இராஜ்ய பரிபாலனம் செய்யும்படி முன்னமே வரமளித்திருக்கிறேன். நீயும் அதற்குடன்பட்டிருக்கிறாய். ஆகையால் உன்னகரத்திலேயே யிருந்து ஆளவேண்டியது என்றுரைத்து விட்டு, அனுமானை நோக்கி, "ஓ ஆஞ்சனேய! நீ யென்றுஞ் சிரஞ்சீவி யென்று வரமளித்தோம். ஆகையால் நீயும் உனக்கிச்சையான விடத்திலிருக்கலாம்" என்று விட்டனை யிட்டார்.

பிறகு ஜாம்பவானைப்பார்த்து, "ஓ கரடி ராஜனே! நீ நம் இங்கேயேயிரும். துவாபரயுகத்தில் ஒரு காரணத்தை முன்னிட்டு, உமக்கும் நமக்கும் ஓர் யுத்தம் நேரப் போகிறது. அப்போது நீர் ஸ்வர்க்கத்தை யடையப் போகிறீர். ஆனதுபற்றி நீரும் அதுவரையில் இங்குதானே யிரும்" என்று கூறிவிட்டு,மற்றைய நகரவாசிகள் யாவரையும் பார்த்து, நீங்கள் எல்லோரும் என்னுடன்கூட வாருங்களென்றுகட்டளை யிட்டார்.

காருண்யம் பொருந்திய நேத்திரங்களையுடைய ஸ்ரீராமன், வசிஷ்டரைநோக்கி "ஓ குருவே! அக்னி ஹோத்ரங்கள் என்முன் செல்லட்டும்" என்றார். வசிஷ்டமுனிவர் விதிப்படி யாத்திராதானம் முதலிய கிரியைகளைச் செய்தார்.

மிகுந்த காந்தியுடையவரும் வெண்பட்டாடை யுடுத்தினவரும், தர்ப்பையாற் செய்த பவித்திரத்தை தரித்தவரும், மஹா ப்ரயாணத்துக்கு நிச்சயங் கொண்டவருமாகிய ஸ்ரீராமர், நகரத்தினின்று பிரயாணமானார். ரிஷீஸ்வரர்கள், முனீஸ்வரர்கள், வானரர், இராக்கதர், அயோத்திமா நகரவாசிகள் இவர்கள் மத்தியிற் ஸ்ரீராமன் பூரண தேஜஸ்ஸோடு பிரகாசித்தார். அவருடைய வலது பக்கத்தில் பத்மத்தைக் கையிலுடைய ஸ்ரீதேவி வந்தாள். இடது பக்கத்தில் செந்தாமரை மலரைக் கையிற் பிடித்துக் கொண்டு பூதேவியும் வந்தாள். தனுசு, அஸ்திரங்கள், சஸ்த்ரங்கள் இவைகளும் சரீரமெடுத்துக் கொண்டு கோசல நாடனுடன் சென்றன. வேதங்களுக்குத் தாயாகிய காயத்ரீ, வியாஹ்ருதிகளுடனும், பிரணவத்துடனும் ஹரியாகிய ஸ்ரீராமனைக் குறிப்பிட்டுச் சென்றாள்.

அந்தப்புரவாசிகளாகிய பத்னிகளுடனும், சத்துருக்னனுடனும் பரதன் சென்றான். சிறந்த மந்திரிகளும் சென்றார்கள். பிராமணாதி நான்கு வருணத்தவர்களும் சந்தோஷத்துடன் கரகோஷஞ் செய்துகொண்டு பின் தொடர்ந்தார்கள். கண்ணுக்குப் புலப்படாத பூத பிசாசங்கள், ஸ்தாவரங்கள், ஜங்கமங்கள் யாவும் முக்தியடையும் திவ்விய தேகங்களைப் பெற்று, அனந்தசக்தியும், பரமாத்மாவும், ஒருவனுமாகிய பரமேஸ்வரனை யநுசரித்தன. அயோத்திமா நகரத்தில் ஸ்தாவர ஜங்கமங்கள் கூடத் தரிக்கவில்லை. அந்நகரமானது சூன்யமாயிற்று.

பிறகு புருஷோத்தமன் அயோத்தியிலிருந்து கொஞ்ச தூரம் சென்று, நாராயண மூர்த்தியின் நேத்திரத்திலிருந் துண்டான சரயு நதியை யடைந்தார். ஸ்மரணம் செய்தாலே பரிசுத்தி செய்யும் அந்நதியைப்பார்த்து சந்தோஷித்தார். இப்பிரபஞ்சம் யாவற்றையும் பார்த்தார்.

அப்போது பிரமதேவர், வானவர், கந்தருவர், ஸித்தர், வித்தியாதரர் முதலிய தேவ கணங்கள் புடைசூழ, ஆகாய மார்க்கத்தில் விமானங்களின் மீதேறிக் கொண்டுவந்தார். ஆகாசம் ஜோதிர் மயமாக விளங்கிற்று. சிறந்த மஹா புண்ணியவான்களால் சூழப் பெற்றது. தேவர்கள துந்துமி முதலிய வாத்திய முழங்கப் புஷ்பமாரி பொழிந்தார்கள். கந்தருவர்கள் வீணாகானம் செய்தார்கள்.

ஸ்ரீராமன் தன் பாதங்களால் ஸரயு நதியின் ஜலத்தைத் தொட்டுத திரும்பினார். அப்போது சதுர்முகப் பிரமதேவர் அஞ்சலியஸ்தனாய் நின்று கொண்டு ஸ்ரீராம மூர்த்தியைப் பார்த்து, "ஓ பரமாத்மவே! நீ பரமேஸ்வரர், ஸ்ரீ விஷ்ணு பக்தர்களிடம் அன்புள்ளவர், ஆனபடியால் என் கோரிக்கைக் கிணங்கி, தேவர்கள் படுந் துயரத்தைப் போக்க மானுட வடிவங் கொண்டு இராவணன் முதலிய துஷ்டர்களை யொழித்து, பூமிபாரத்தை நிவர்த்தி செய்தீர்.

இப்போது தாங்கள் தங்கள் பிராதாக்களுடன், முன்புண்டான விடமாகிய ஸ்ரீவிஷ்ணுவின் அமிசத்தை யடைந்து என்னையுந் தேவர்களையும் பரிபாலனம் செய்யவேண்டும். தாங்கள் தேவர்களுக்கதிபதியாகிய ஸ்ரீமஹா விஷ்ணுவின் அமிசம். ஆயிரந் தடவை யுங்களுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்! என்று கூறினார்.

ஸ்ரீராமர், பிரமதேவரின் கோரிக்கைப்படி, முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத் தெண்ணாயிரம் ரிஷிகள், கின்னரர், கந்தருவர், வித்யாதரர் முதலினோர் பார்த்திருக்க வலது கையிற் சக்கரமும், இடது கையிற் சங்கமும் பிரகாசிக்க, நான்கு புஜங்களையுடைய ஸாக்ஷாத் விஷ்ணுவாகி விளங்கினர். தேவலோகத்திலிருந்த இலக்ஷ்மணர், மிகவு மாச்சரியமான படங்களோடு, வைகுண்டவாசிக்குப் படுக்கையான ஆதிசேஷனாக ஆனார். பரதனும், சத்துருக்னனும் முறையே சக்கரமாகவும், சங்கமாகவும் ஆனார்கள். ஸீதாதேவி இலக்ஷ்மியாயினள். இவ்விதமாக இவர்கள் திவ்ய தேஜோமய மாகிய விஷ்ணுமூர்த்தி யானார்கள்.

விஷ்ணு சொரூபத்தைக் கண்ட பிரமதேவர், தேவர்கள், ஸித்தர்கள், முனிவர்கள், யக்ஷர்கள் யாவரும் ஸ்தோத்திரம் செய்து நன்று பூஜித்து, ஆனந்தாதீதர்க ளாகினார்கள்.

விஷ்ணுமூர்த்தி பிரமதேவரைப் பார்த்து, ஓ நான்முகனே இதோ நிற்பவர்கள் என்னுடைய பக்தர்கள். ஸ்வர்க்கத்திற்குச்செல்ல என்னுடன் வந்தவர்கள், வைகுண்டத்துக்குச் சமமான சிறந்த ஸ்தானத்தை யிவர்களடையும்படி செய்யவேண்டு மென்றார்.

நான்முகன், விஷ்ணுவைநோக்கி ஐயனே இந்த பக்தர்கள், பிரமலோகத்துக்கும் மேலாகப்பிரகாஸிக்கும் விசித்திரமான போகங்களை யுடைய ஸாந்தானிக லோகத்தை யடையட்டும். மேலும் எந்த மானிடர்களாவது அஞ்ஞானத்துடன் கூடினவர்களாயினும் நிரியாண காலத்திலேனும், உம்முடைய பரிசுத்தமான ராம என்னும் திருநாமத்தை ஜெபிப்பார்களாயின் அவர்களும் யோகாப்பியாசிகள் அடையக் கூடிய அந்த ஸாந்தானிக லோகத்தையே யடையட்டும் என்று கூறினர். அவர்களும் அவ்வாறே சரயுநதியில் முழ்கி ஸ்தூல தேகத்தை யிழந்து திவ்விய தேகத்தைப் பெற்று ஸாந்தானிக லோகத்தை யடைந்தார்கள்.

பிறகு, வானரர்களும், இராக்ஷசர்களும் சரயுநதியில் ஸ்நானம் பண்ணி ஆசமனம் செய்து தாங்களடைந்திருந்த சரீரத்தை விட்டு பூர்வகாலத்தில் அவர்கள் எந்த சொரூபத்திலிருந்து உண்டானார்களோ, அந்த சொரூபத்தையே அடைந்தார்கள். ஸுக்ரீவன் சூரியனுடைய வீரியத்திலிருந் துண்டானவனான படியால், சூரியனிடம் லயமானான்.

ஸ்ரீராமர் விஷ்ணுமூர்த்தியாகி, ஆதிசேஷ, சங்கு, சக்கர, இலக்ஷ்மி சகிதராய் வைகுண்டம் போய்ச்சேர்ந்தார்.

ஓ தேவி இவைதான் ஸ்ரீராமனுடைய சரித்திரமென்று கூறினார். உமாதேவியும் பரமசிவன் சொன்ன ஸ்ரீராம காதையைக்கேட்டு சந்தோஷமானாள்.

பரமசிவன் இவ்விதம் ஸ்ரீராமச்சந்திரனுடைய கதைகளின் விசேஷத்தை ப்ரத்யக்ஷமாகக் கூறினார். இந்தச் சரித்திரத்தில் ஒரு பாகமேனும் பாராயணம் செய்பவன் ஆயிரம் ஜென்மங்களிற் செய்த பாபங்களினின்று விடுபடுகிறான். தினந்தோறும் அதிபாதகத்தைச் செய்யும் மானுடனாகிலும் பக்தியுடன் ஒரு ஸ்லோகத்தைப் படித்தால், எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறான். பரமசிவத்தால் கூறப்பட்ட இந்த ராமசரித்திரத்தை சிரவணம் செய்வதில் ஸ்ரீராமர் ஸந்தோஷமடைகிறார். சங்கரன் பார்வதிக்குக் கூறிய இந்த அத்யாத்ம ராமாயணம் என்னும் காவ்யம் கணக்கற்ற புண்ணியத்தை கொடுக்கக்கூடியது. இதை பக்தியுடன் படிப்பவன், கேட்பவன், படிக்கும்படி செய்பவன் அநேக ஜன்மங்களிலுண்டான பாபங்களினின்று விடுபடுகிறான்.

இந்த இராமாயணத்தை யெப்போதும் பக்தியுடன் பாராயணம் செய்பவன், சிரவணம் செய்பவன், எழுதுகிறவன் இவர்களுக்கு ஸ்ரீராமன் ஸீதையுடன் பிரஸன்னராகி அவர்களினருகிலிருந்து பொருளை விருத்தி செய்கிறார். இந்த இராமாயணம் ஜனங்களுக்கு மனோஞ்ஞமானது, ஆதியிலுண்டான காவ்யம், பிரம தேவர் முதலிய தேவசிரேஷ்டர்களாலும் கொண்டாடப்பட்டது. எவன் சிரத்தையுடன் பாராயணமும் சிரவணமும் செய்கிறானோ அவன் இகத்தில், இகலோகசாதகமான பொருளை யடைவதுடன் மறுமையில் பரிசுத்தமான சரீரமுடையவனாகி விஷ்ணுலோகமடைகிறான்.

உத்தரகாண்டம் முற்றிற்று.

அத்யாத்ம ராமாயணம் முற்றிற்று.



PRINTED AT THE SWADESAMITRAN PRESS, MADRAS.